# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## எட்டாம் மடலம் – முதல் பாகம்

## ய – வ

## Vol. VIII - Part - I


து.இராசேந்திரன் இ.ஆ.ப

அரசு செயலாளர்

தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## எட்டாம் மடலம் - முதல் பாகம்

## (ய, வ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VIII-PART I


து. இராசேந்திரன், இ.ஆ.ப.

அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்

செய்தித் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 22

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VIII, Part - I



விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

### VOL. VIII- PART I

எட்டாம் மடலம் - முதல் பாகம்

(ய, வ)

பதிப்புக் குழு


து. இராசேந்திரன், இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

புலவர். இறைக்குருவனார்

திரு.க.கணேசன்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

மு. கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.4.2007

# அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ளின்" போன்றவர்கள் தமிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)

தமிழ்நாடு அரசு

து. இராசேந்திரன், இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

## பதிப்புரை

இலக்கணம் மொழி நூலின் அடிப்படையாக விளங்குவது போன்று சொல் வரலாறு மொழி வரலாற்றின் திறவுகோலாகத் திகழ்கின்றது. தமிழின் ஈடிணையில்லா, இயற்கையான, இலக்கண வரம்பினை, இயம்பவந்த, திருவிளையாடல் புராண ஆசிரியர் பரஞ்சோதியார்,

> "கண்ணுதற் பெருங்கடவுளுங் கழகமோ டமர்ந்து
> பண்ணுறத் தெரிந்தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
> மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
> எண்ணிடைப்பல கிடந்ததா எண்ணவும் படுமோ!"

என்று அழகாக எடுத்துரைக்கின்றார்.

செந்தமிழ் வேழம் பாவாணரின் அறிவார்ந்த அடிச்சுவட்டில், அரைக்கலைக்களஞ்சிய அமைப்பில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எட்டாவது மடலம், முதற்பகுதியாகிய யகரவகர வரிசைப் பகுதி வெளிவருகிறது. இப்பகுதியிலமைந்துள்ள சொற்கள் பண்டுதொட்டு, இன்று வரையுள்ள தமிழர்தம் பண்பாடு, நாகரிகம், வரலாறு முதலானவற்றைக் காட்டும், கலங்கரை விளக்கங்களாகத் திகழ்கின்றன. காலத்தாற் சிதையாது, ஞாலத்தில் எஞ்ஞான்றும் நிலைத்து நிற்கும் பைந்தமிழின் புகழைப் பறைசாற்றும் பெட்டகங்களாக மிளிர்கின்றன.

பாவாணரின் வேர்ச்சொல் நெறிமுறையினை அடிப்படையாகக் கொண்டு, வகரப் பகுதியிலுள்ள சொற்கள் விளக்கப்பட்டுள்ளன.

(எ.கா.) பகு → வகு
முல் → மல் → வல் → வல்லம் = வட்டமான ஓலைக்கூடை.

இளமை, புதுமையைக் குறிக்கும். 'மழ' என்னும் முதனிலையும், 'முல்' என்னும் மூலத்தினின்று முகிழ்த்ததே யாகும்.

(எ.கா.) முல் → முள் → மள் → மழ → வழ → வழை → வழைச்சு.

"வல்[1]" – என்னும் வளைவுக்கருத்து வேர்மூலச் சொற்களே வகரப் பகுதியில், மிகுதியாக இடம் பெற்றுள்ளன. சான்றுகள் வருமாறு:–

(எ.கா.)
வல் → வல்லி = வளைந்த கொடி. "வல்லி யணையாள்" (பு.வெ.பெண்பாற்.13, உரை).
முல் → மல் → மலார் → வலார் = வளைந்த இடம்போத்து (twig.)
வலார் → வளார் = வளைந்த புளியங்கொம்பு.
வல் → வள் → வள்ளி = வளைந்த கொடி.
வல் → வலை = உயிரிகளைச் சூழ்ந்து அகப்படுத்தி, வளைக்குந் தன்மையுள்ள கயிற்றுக் கருவி.

வல் → வல → வலத்தால் = வளைதல், வளைத்தல், சூழ்தல்.
வல் → வள் → வள → வளவு = வளைந்தமைந்த வீட்டுச் சுற்றுப் பரப்பு
வல் → வள் → வள்ளம் = வட்டமான உண்கலம்.
வல் → வள் → வள → வளர் → வளரி = பிறைபோல் வளைந்த வளரித்தடி (boomeking).
வள் → வள → வளா = சுற்றுப்பரப்பு; வளர் → வணர் = யாழ்க்கோட்டின் வளைந்த பகுதி.
வள் → வளி = வளைந்து வீசும் காற்று.
வல் → வள் → வளர் → வளரி = வளைதடி.

சொல்லின் பொருண்மையினை அடிப்படையாகக்கொண்டே, ஒரு மொழியை ஆய்வு செய்ய வேண்டுமென்பார் மொழிஞாயிறு. இக்கருத்தினையே தொல்காப்பியர் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்று குறித்துள்ளார். மேலும் யாழ், யானை, வள்ளுவன் முதலான சொற்கள் அரைக்கலைக்களஞ்சிய அமைப்பில் திறம்பட விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக யகரப் பகுதியில் இடம் பெற்ற யானை என்னுஞ் சொல்லினைக் காணலாம்.

(எ.கா.) அல் → எல் → என் → ஏன் → ஏனை → யானை

யானை என்னுமிச் சொல் "அல்" என்னும் கருமைக் கருத்துப் பொருண்மையை அடிப்படையாகக் கொண்டது. மொழிஞாயிறு தமது சொல்லாராய்ச்சிக் கட்டுரையில் 20 பெயர்களை, யானையின் மறு வடிவங்களாகக் குறித்துள்ளார். இச் சொல் விளக்கம் பக்கம் 48– முதல் 53 வரை இடம்பெற்றுள்ளது.

கழக இலக்கியங்களில் யானை, கன்னங்கரிய வண்ணத்தில் பென்னம் பெரிய உருவத்தில், காண்பவர்தம் கருத்திலும், நெஞ்சிலும் நீக்கமற நிறைந்து, தமிழ் மண்ணின் மரபுச் சொத்துகளுள் ஒன்றாக, 38 இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. பெரும்பான்மையான திரவிட மொழியில் உள்ள கருமைக் கருத்துச் சொற்கள் குறிக்கப்பெற்றுள்ளன.

வள்ளுவன் என்னும் சொல், பாவாணரின் சொற்பிறப்பு நெறிமுறையினை அடியொற்றி விளக்கப்பட்டுள்ளது. இச்சொல்லின் விளத்தத்தினை பக். 483–இல் காணலாம்.

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியில் வடசொல்லாகக் குறிக்கப்பட்ட பல சொற்கள், பாவாணரின் அடிச்சுவட்டில் செந்தமிழ்ச் சொற்களாக இப்பகுதியில் குறிக்கப்பட்டுள்ளன. சில எடுத்துக்காட்டுகள் பின்வருமாறு:–

1. வக்கா = யானை, கொக்கு போன்ற நீர்ப்பறவை
   த. வக்கா → **Skt.** baka.
   [வட்கு → வக்கு → வக்கா] வகரப்பகுதி. பக்.76.

2. வக்கிரம், வக்கிரப்புத்தி போன்றவை – பாவாணரின் நெறிமுறையையொட்டித் தமிழ்ச் சொல்லாக நிறுவப்பட்டுள்ளது (பக்.78–79).

3. வஞ்சி = ஏமாற்றுதல்.

த. வஞ்சி → **Skt.** *vañc* (வஞ்ச்) (பக்.116–117)

4. வட்டம் = சுற்று. த. வட்டம் → **Skt.** வ்ருத்த (பக்.134–135)

5. வரணம் = எழுத்து, பூச்சு, நிறம், வகை, அழகு.

[வள் → வர் → வரி + அணம்] த.வரணம் → (பக்.280–281)

6. வயிரம் = திண்மை.

வல் → வள் → வய் → வை → வயிர் → வயிரம்.

த. வயிரம் → **Skt.** vajva. (பக்.247–248)

மேலும் இப் பகுதியில் மறைந்து போன *வரணம், வரணித்தல், வரணிப்பு* முதலான சொற்கள் விளக்கப்பெற்றுள்ளன. மறைந்து போன இசைக் கருவியான யாழ் பற்றிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன. சிற்றூர்களிலிருந்த தற்போது மறைந்து போன வட்டச்சில்லி, வட்டப்பேந்தா, வண்ணான்தாழி முதலான விளையாட்டுகள் விளக்கப்பட்டுள்ளன. மேலும் மறைந்து போன பண்பாட்டுக் கூறுகள், மருத்துவம் பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டு நல்ல முறையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

கி.பி.3 ஆம் நூற்றாண்டு முதல் 13–ஆம் நூற்றாண்டு வரை, தமிழ்மொழியை எழுதப் பயன்பட்ட வட்டெழுத்துப் பற்றிய வரலாற்றுச் செய்திகள் சீரியமுறையில் கொடுக்கப்பட்டுள்ளன (பக்.145–147). தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளிலிருந்து ஏராளமான கல்வெட்டுச் சொற்கள் தொகுக்கப்பட்டு, விளக்கப்பட்டுள்ளன.

தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நம் *மாண்புமிகு முதலமைச்சர்* அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பகுதி வெளிவருவதில் அயராது பாடுபட்ட பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர், தொகுப்பாளர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

7/3/2007

து. இராசேந்திரன்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# ய்

ய் *y*, **1.** தமிழ் நெடுங்கணக்கில் பதினோராவது இடையின மெய்யெழுத்து; the eleventh medial consonant of the Tamil alphabet. **2.** அடியண்ண ஒலி; voiced palatal. **3.** மூவின மெய்யெழுத்துப் பிரிவுகளுள், வல்லினத்துக்கும், மெல்லினத்துக்கும், இடைப்பட்ட நிலையில் ஒலிக்கும் எழுத்து; the six medial consonants of the *Tamil* (tripartite) system. *வல்லெழுத்துத் தோன்றும் மார்புக்கும், மெல்லெழுத்துத் தோன்றும் மூக்குக்கும் இடைப்பட்ட இடமான அடியண்ணத்தில் தோன்றும், ஒலிப்புடை ஒலியாகும்.*

ய *ya*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'அ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'a' to the consonant 'y'.

*[ய் + அ → ய]*

இடையெழுத்து :- (இடையினம்)

தமிழ் நெடுங்கணக்கில் 'க' கர முதலாக வரும் உயிர்மெய்யெழுத்துகளில், பதினோராம் எழுத்து. இடையெழுத்து(ய,ர,ல,வ,ழ,ள)களு ளொன்று. வல்லெழுத்துப்போல் வன்மையுமாகாமல் மெல் லெழுத்துப்போல் மென்மையுமாகாமல், இடை நிகரனவாய் நிற்பதால், இடையினம் அல்லது இடையெழுத்தென்று, இலக்கணப் புலவர் இயம்புவர்.

அரையுயிர் **(Semi-vowels):-**

உயிரெழுத்திற்கும் மற்றைய மெய் யெழுத்திற்கும் இடைநிகரனவாய், நிற்பன என்று கொண்டு, மேனாட்டார், 'ய'கர 'வ'கரத்தை அரை உயிர்கள் என்று வழங்குவர். ஆனால், இவற்றைப் பிறப்பு வகையாலோ, செவியுணர் ஒலி வகையாலோ, ஓரினமாகக் கொண்டு ஆராய்வதே சாலச் சிறந்ததென்று, இந்நாளைய பேச்சொலியியல் (phonetics) அறிஞர்கள் கருதுவர்.

பிறப்பிடம் :-

நாவின் மேற்புறம் தட்டையாக நிற்குங்கால், அண்ணத்திற்கும், நாவிற்கும் இடையேயுள்ள இடைவெளி மிகமிகச் சிறியதாய்ப் பரந்து தோன்றும். அவ்விடைவெளி வழியாக மூச்சானது உரசிக்கொண்டே வெளிவருங்கால் தோன்றும் ஒலிப்புடை ஒலியே யகரம். இஃது இடையண்ணத்திற் பிறப்பது. இவ்வொலியின் பிறப்பிடம் பற்றித் தொல்காப்பியர்,

*"அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை*
*கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்"*
*(தொல்.99)* என்று கூறியுள்ளது காண்க.

'மிடற்றெழு வளியிசை' என்பதால், யகரம் ஒலிப்புடை ஒலி எனக் கொள்ளலாம். 'அண்ணம் சேர்ந்த' என்பதனால், அது வல்லண்ண ஒலி என்பது தெளிவு. 'கண்ணுற்றடைய' என்பது, இஃது உரசொலி என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். "உரலாணியிட்டாற் போலச் செறிய" என்று நச்சினார்க்கினியரும், உவமைகாட்டிப் பொருள் கூறியுள்ளது அறிக.

இடையெழுத்து :-

யகரம் மொழிக்கு முதலில் வாரா. யகரம், இகரத்திற்கொத்த இடையெழுத்து எனலாம். உரசொலியின் கண்ணே இகரம் யகரமாதல் இயல்பு. அலகு பெறும் உயிரொலி, ஈற்றில் படுத்துச் சொல்லப் பெறும் போது, 'இ'கரம் யகரமாகும்.

ஆஇ→ஆய். (எ.கா.) போஇ→போய்

'இகர யகரம் இறுதி விரவும்' என்பது தொல்காப்பியம். இகரத்தின் பிறப்பிடமே யகரத்தின் பிறப்பிடமாகும். ஆனால் நாவானது இகரத்திற்கு எழவேண்டியதற்கு மேலும் சிறிது உயரத்தில் அண்ணத்தை நோக்கி எழுங்கால், யகரம் பிறக்கும். நாவானது இகர, யகரத்தை ஒலிக்குங்கால், அண்ணத்திற்கும் நாவிற்கும் இடையே சிறிது இடைவெளி தோன்றும். அஃதாவது உயர வேற்றுமை உருவாகுமென்று மொழியியலார் கருதுவர். மற்றொரு பிரிவினர், "இஃது உயர வேற்றுமை அன்று; யகர ஒலிப்பு எழுங்கால், உள் நாவின் பின்புறத்தே நிகழும் ஒத்தொலிப்பின் (resonance) வேற்றுமையே என்பர். அகர ஆகாரத்தின் முன்போ, உகர ஊகாரத்தின் முன்போ, யகரம் வருங்கால், நாவினியக்கம், பெரிதளவில் வேற்றுமையை ஏற்படுத்தும்.

(எ.கா.) மரயானை; வரையூடு.

கூட்டொலி :-

யகரத்தை மொழியியலார் கூட்டொலி என்றும் கூறுவர். ஒரு முழு உயிரை அடுத்து, உடம்படுமெய் போன்ற நெகிழுயிர், முன்னோ பின்னோ அமைந்து வருவதே கூட்டொலியென்பார், சுவீட்டு (sweet) என்ற மொழியியல் அறிஞர். ஆனால் தமிழில் யகரம் உயிரும், மெய்யும் மயங்கும், மயக்கத்தினிடை வெளிப்படும் நெகிழொலி என்பதே பொருந்தும்.

நிலைமொழியை ஒட்டியே யகர உடம்படுமெய், பிற்காலத்தே பெருவழக்காகப் பயின்று வந்துள்ளது. பவணந்தியார் வருமொழியின் உறுப்பினையொட்டியே, யகர உடம்படுமெய் வழக்கிலிருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

(எ.கா.) மாயிரு, மணியழகிது. கோயில், ஆயிடை. தீயெழுந்தது.

உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி குறித்து, பவணந்தியார் பகர்வது வருமாறு :-

*இஈஐவழி யவ்வும் ஏனை*
*உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் விருமையும்*
*உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்*
*(நன். 162.)*

மொழியியலார், யகரத்தை நெகிழொலி என்றும், இலக்கண நூலார் உடம்படுமெய் என்றும் கூறியுள்ளனர். ஆனால் மொழிக்கோ, மொழி யுறுப்பிற்கோ, ஈற்றில் பயின்றுவரும் யகரம் நெகிழொலி யாகாது. மொழியீற்று யகரத்தை "இ" கரத்தின் திரிபென்றுரைத்தலே பொருந்தும்.

(எ.கா.) போஇ → போய்.
ஆஇ → ஆய்.

மேற்குறித்த எடுத்துக்காட்டுகள் தொல்காப்பியர் காலத்தில், "ய"கரம் உடம்படுமெய்யாக வருவது கட்டாயமில்லை என்பதைப் புலப்படுத்துகின்றன. பழந்தமிழில் உயிர்களும் ஒன்றோடொன்று மயங்குந் தன்மையினைத் தெளிவுறுத்துகின்றன எனலாம்.

பழந்தமிழில், தொல்காப்பியத்தில் கூறியவாறு, யகரம் ஆகாரத்துடன்தான், மொழிக்கு முதலில் வரும்.

(எ.கா.) : யானை → ஆனை, யாடு → ஆடு, யாறு → ஆறு, யாமை→ஆமை.

தொல்காப்பியர் காலத்தில், உயிரோடு உயிர் மயங்கும் மயக்கம் இயல்பாகவே வழக்கூன்றி யிருந்தது. 'யா' என்பது எகரமாகக் குறுகும்.

(எ.கா.): யான் → என், யாது → எது, யாம்→எம்.

கல்லாதார் வழங்கும் சொற்களில் யகரம் சகரமாக ஒலிக்கும்.

(எ.கா.) : உயிர் → உசிர், மயிர் → மசிர், பயல் → பசல், மயல் → மசல், அயல் → அசல்.

யகரம் வருமொழி முதலாக வரும்போது

நிலைமொழியீற்றுக் குற்றியலுகரம், குற்றிய லிகரமாகத் திரியும். பிற்காலத்தே மொழியின் ஈற்றில் வரக்கூடிய மெல்லெழுத்தும், இடை யெழுத்தும், உகரச்சாரியை பெற்று வருவது இயல்பாயிற்று.

(எ.கா.) : நாடு + யாது–நாடியாது, மண்ணு + யாது–மண்ணியாது, சொல்லு + யாது–சொல்லியாது. யகரம் மூக்கொலி பெற்றால், ஞகரம் போன்றே ஒலிக்கும். இவ்வாறு யகரம் ஞகரமாகத் திரிவதைத் தொல்காப்பியரும் குறித்துள்ளார். மண், பொன் போன்று மெல்லெழுத்தில் முடியும் சொற்களின் பின்னே, யாத்தல் என்ற வினைச்சொல்லடியாகப் பிறந்த சொற்கள் வருமானால், யகரமும் மெல்லொலிச்சாயல் பெற்று ஞகரமாகும்.

(எ.கா.) : மண்யாத்த→மண்ஞாத்த.

தமிழில், யகரம் மொழிக்கு முதலில் வாரா நிலையிலும், பிறமொழிச் சொற்களில், ஆ வல்லாத பிற உயிர்களோடு சேர்ந்து, மொழிக்கு முதலில் வரும் நிலை பிற்காலத்தே ஏற்பட்டது. இந்நிலையில், தமிழின் இயல்பிற்கு ஏற்ற வண்ணம் மாறியே ஒலிக்கும்.

(எ.கா.) : யந்திரம்→இயந்திரம், யக்ஷன்→இயக்கன், யுத்தம்→உயுத்தம்.

யகரத்தை முதலெழுத்தாகக் கொண்டு வரும் பிறமொழிச் சொற்கள், தமிழ் மொழிக்கு முதலில் வரும் போது யகரம் எகரமாகத் திரியும்.

(எ.கா.) : யமன் → எமன், யந்திரம் → எந்திரம்.

காலந்தோறும் கல்வெட்டுகளிற் காணப்படும் யகரத்தின் வரிவடிவ வளர்ச்சி :–

ஒரு பிறை போன்ற வடிவத்தின் நடுவில் நிற்கும் செங்குத்துக் கோடாக, கி.மு.3–ஆம் நூற்றாண்டில் அசோகர் காலக் கல்வெட்டுகளில் – (அசோகன் பிராமி.) காணப்படும் வரிவடிவம்.

தமிழகக் குகைக் கல்வெட்டுகளில், தமிழியெழுத்தாகச், சூலத்தின் முத்தலை வடிவம் போன்று கி.மு.3–ஆம் நூற்றாண்டில் காணப்படும் வரிவடிவம்.

கி.பி.2–ஆம் நூற்றாண்டில் இவ்வெழுத்தின் உயரம் குறைந்து, நடுக்கோட்டில் அழகுப் புள்ளியுடனும், இடப்பகுதியில் ஒரு வளைவும் கொண்டு வளர்ச்சியுற்ற வரிவடிவம்.

கி.பி.3,4,5–ஆம் நூற்றாண்டுகளில் பல்லவர் காலத்தில் வளர்ச்சியுற்ற வரிவடிவம்

கி.பி.6,7–ஆம் நூற்றாண்டுகளில் பல்லவர் காலக் கல்வெட்டுகளிற் காணப்படும் வளர்ச்சி பெற்ற வரிவடிவம்.

கி.பி.8–ஆம் நூற்றாண்டுகளில் கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவ வளர்ச்சி.

கி.பி.9–ஆம் நூற்றாண்டில் வரிவடிவ வளர்ச்சி

கி.பி.10,11–ஆம் நூற்றாண்டுகளில் சோழர் காலத்து வரிவடிவ வளர்ச்சி

கி.பி.12,13–ஆம் நூற்றாண்டுகளில் பாண்டியர் காலத்து வரிவடிவ வளர்ச்சி.

கி.பி.14,15–ஆம் நூற்றாண்டுகளில் விசயநகர மன்னர் காலத்து வரிவடிவம்

**யா**[1] *yā*, compound of ய் and ஆ. 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஆ' என்ற நெட்டுயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the long vowel 'ā' to the consonant `y'.

காலந்தோறும் கல்வெட்டுக்களிற் காணப்படும் யகர ஆகாரத்தின் வரிவடிவ வளர்ச்சி :-

கி.மு.2,3–ஆம் நூற்றாண்டுகளில் அசோகர் காலத்து தமிழ் பிராமிக் கல்வெட்டுகளிற் காணப்படும் வரி வடிவம்

கி.மு.2,3–ஆம் நூற்றாண்டுகளில் குகைகளில் காணப்படும் தமிழி யெழுத்துக் கல்வெட்டில் காணப்படும் வரிவடிவம்

கி.பி.5,6,7–ஆம் நூற்றாண்டுகளில் பல்லவர் கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம்.

கி.பி.8–ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் காணப்படும் வரி வடிவம்

கி.பி.9–ஆம் நூற்றாண்டுக் கல் வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம்

கி.பி.10,11–ஆம் நூற்றாண்டுகளில் சோழர் காலக் கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம்

கி.பி.11,12–ஆம் நூற்றாண்டுகளில் பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம்

கி.பி.14,15–ஆம் நூற்றாண்டுகளில் விசயநகர மன்னர் கல்வெட்டுகளில் காணப்படும் வரிவடிவம்

கி.பி.18,19–ஆம் நூற்றாண்டில் யகர ஆகாரம் இன்றைய வரிவடிவத்தை எய்தியது எனலாம்

கி.பி.20–இல் தற்கால வரிவடிவம். யா

யா[2] *yā*, பெ.(n.) யாவை; what or which things. *"பெண்ணிற் பெருந்தக்க யாவுள"* *(குறள், 54).*

யா[3] *yā*, பெ.(n.) **1.** அஃறிணைப்படர்க்கைப் பன்மை வினா; third person inferior beings plural question. **2.** அசைச்சொல்; a rhythmic word (யா பன்னிருவர்). **3.** ஒரெழுத்து; a letter of Tamil alphabet. **4.** ஐயம்; doubt, apprehension. **5.** இல்லை; nothing.

யா[4] *yā*, பெ.(n.) **1.** கருமைப் பொருண்மை யினைக் குறிக்கும் ஒரெழுத்து ஒருமொழி; a monosyllabic unique word describing the blackish nature of the subject. **2.** கரிய மரம்; a black tree. *"உம்பல் அகைத்த ஒள்முறி யாவும்" (மலைபடு. 429).* **3.** ஓர் மரம்; ebony-tree; Ceylon ebony - *Diospyros ebenaster*. **4.** மரவகை (தொல். எழுத்து.229); a tree. *"யானை யொடித்துண்டெஞ்சிய யா" (குறுந். 232).* **5.** அகலம் (நாமதீப. 778); breadth, width.

த. யா → **Skt.** *syāva* = dark, dark-brown. *kohistāni* = *šā* = black.

த. யா → **Skt.** *syāva* → *syāviyā*, *syāvyā* = darkness.

"யா" என்னும் ஓரசைச்சொல் கருமைக் கருத்தினை முதன்மையாக அல்லது அடிப்படையாகக் கொண்டது; அதே போழ்தில், கரிய, பருத்த அடிப்பகுதியினைக் கொண்ட யாமரத்தையும் குறிக்குந் தன்மைத்து. மூலச் சொல்லின் முதனிலையாகிய வேர்ப்பகுதியிலேயே, கருமைப் பொருள் பொதிந்துள்ளது, உளங்கொளத் தக்கதொன்றாகும். இக் கருமைக் கருத்து மூலவேர் பற்றிச் சொல்லாய்வாளர் ப.அருளியார் கூறுவது :

"கருமை என்னும் நிறக்கருத்து அடிப்படையில் மரவகையினுள் ஒன்று, "யா"–என்றவாறே, பண்டைய நம் தமிழ் மாந்தர்களால் சுட்டப்பெற்றது ஈராயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே, தமிழகம் முழுமைக்கும் மிகப் பரவலாகவும் தெளிவாகவும் இனந்தெரிந்திருந்த இம் மரம். இன்றைக்கு மிகப்பெரிய நிலைத்திணை (தாவர)வியல் அறிஞர்களாலேயே எம்மரம் என்று, கண்டறிய முடியவில்லை என்றவாறு, கலக்கத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் மறைதிறத்ததாகும்!

**யா[5]–த்தல்** *yā-*, 4 செ.கு.வி.(v.i.) 1. பிணித்தல்; lure, decoy. 2. ஒன்றோ டொன்று பொருத்துதல், கட்டுதல்; to tie up. *"யானையால் யானையாத் தற்று" (குறள், 678).* 3. நீர் முதலியன அணைத்தல்; to dam up, to confine. *"பெருக யாத்தநீர்" (காஞ்சிப்பு.நாட்.75).* 4. விட்டு நீங்காதிருத்தல்; to be inseparable from. *"பெருக யாத்தநீர்" (காஞ்சிப்பு. நாட். 75). "மற்றவனை யாக்குமவர் யாக்கு மணைந்து" (ஏலா.8).* 5. அணிதல், கட்டிக் கொள்ளுதல்; to adorn. *"மிடற்றமை மரபின அரைக்கு யாக்குநரும்" (புறநா.378:77).* 6. செய்யுள் முதலியன அமைத்தல்; to compose, as a poem. *"மொழி பெயர்த்ததர்ப்பட யாத்தல்" (தொல். பொருள். 652).* 7. சொல்லுதல்; to tell, utter, say. *"சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்" (தொல். பொருள். 655).* 8. தொடர்பு கொள்ளுதல்; to contact. *"குன்றா இனனும் அறிந்தியாக்க நட்பு" (குறள், 793).*

*[யா→யாத்தல் = ஒன்றோடொன்று பொருந்துதல், கட்டுதல், பிணித்தல்.]*

"யா" என்னும் பொருந்துதற் கருத்து வேர்மூலத்தினின்று தோன்றிய சொல்.

யா → யாக்கு → யாக்கை=பல்வகைத் தாதுக்களாலும், நரம்பு, நார், தசை, எலும்பு போன்றவற்றால் பொருத்திக் கட்டப்பெற்ற உடல்.

யா→யாப்பு = கட்டு, கட்டுவடம், பிணிப்பு – கட்டுத்துணி.

யா→யாத்தல்=ஒன்றோடொன்று பொருந்துதல், சுட்டுதல், பிணித்தல், அணிதல், கட்டிக் கொள்ளுதல், தொடர்பு கொள்ளுதல், விட்டு நீங்காதிருத்தல், செய்யுள் முதலியன கட்டுதல் போன்ற பொருண்மைகளில், தொல்காப்பியம் முதல், அனைத்துக் கழக இலக்கியங்களிலும், வழக்கூன்றி யுள்ளது.

"யா" என்னும் இப்பொருந்துதற் கருத்து மூலவேர், "இய்" என்னும் விதைச் சொல்லினின்று தோன்றியது. இது பற்றிய விளத்தம் வருமாறு :

இய்→ இய→இயா→யா.

(எ.டு.) இய்→இயை = பொருந்து, சேர்.

1. இய்→இயை→இயைதல் = 1. பொருந்துதல், சேர்தல், அணுகுதல், நேர்தல் போன்ற பொருட்பாங்கினில், "இய்" என்னும் மூல வேரினின்று முகிழ்த்த "இயைதல்" என்னும் சொல், பயின்று வந்துள்ளமைக்கான எடுத்துக்காட்டு:–

*"என்போ டியைந்த வமிழ்து" (நாலடி, 210).*

இணங்குதல், உடன்படுதல், மனம் இசைதல் அல்லது பொருந்துதல்.

புணர்தல், கூடுதல்.

ஒத்தல், போலுதல்.

2. இயை + (த்) + தல் – இயைத்தல் = பொருத்துதல், சேர்த்தல்.

இயைய = ஓர் உவமவுருபு.

இயை + வு – இயைவு = சேர்க்கை.

மேற்குறித்த பொருட்பொருத்தப்பாட்டுடன் இயைந்ததும், இலக்கியச் சான்றுகளுடன் கூடியதுமான அடிப்படைத் தரவுகளின் வாயிலாக, "யா" என்னும் பொருந்துதல் கருத்துக் கிளைவேர், "இய்" என்னும் மூலமுதல் வேரினின்று முகிழ்த்தது எனலாம். கீழ்க்காணும் சான்றுகளும் பொருந்துதல் கருத்துத் தோற்றத்தினை நிலைநிறுத்தும் வண்ணம் அமைந்துள்ளன.

(எ.டு.) இயைவு → இயைபு = பொருத்தம், புணர்ச்சி, இணக்கம்.

இசைவு = பொருத்தம், தகுதி.

யகர சகரத்திரிபு = இயை → இசை = பொருத்து.

3. இசை + தல் – இசைதல் = பொருந்துதல். ஒத்துச் சேர்தல், கலத்தல், உடன்படுதல்.

இசை + (த்) + தல் – இசைத்தல் = பொருந்துதல், கட்டல், ஒத்தல்.

யகர ழகரத்திரிபு = இயை→இழை = பொருந்து.

இழை + தல் – இழைதல் = கூடுதல், பிணைதல்.

மனம் பொருந்துதல், நெருங்கிப் பழகுதல்.

இழை + (த்) + தல் – இழைத்தல் = பொருத்துதல், பதித்தல், செய்தல்.

இத்தகைய பொருண்மைகளைத் தன்னகத்தே கொண்ட, பொருந்துதற் கருத்து வேர்மூலம் பற்றி விளக்க வந்த சொல்லாய்வறிஞர் அருளியார்,

"மிகப் பலவாகிய பொருட்செறிவு சான்ற

இனச் சொற்களைத் தமிழில் வளர்வுறச் செய்வதற்கு அடிப்படை மூலக்கருவாக இருந்த "இய்" என்னும் மூலவேரே,

இய்→இய→இயா→யா என்றவாறு வளர்ந்து, எளிய நெட்டொலியாக நின்று, அப்பொருந்துதற் கருத்தையே அடிப்படையாகக் கொண்ட கிளைவேராக வளர்ந்து, நூற்றுக்கும் மேற்பட்ட சொல்வடிவங்களைத் தோற்றுவிக்கக் காரணக் கருவாயிற்று" ("யா"–பக்.211). என்று குறிப்பிட்டுள்ளது, ஈங்கு கருதத்தக்கது.

தொல்காப்பியந் தொட்டு, அனைத்துக் கழக இலக்கியங்களிலும், யாத்தல் என்னுமிச்சொல், ஒன்றோடொன்று பொருந்துதல், கட்டுதல், பிணித்தல், கட்டிக் கொள்ளுதல், அணிதல், செய்யுள் முதலியன கட்டுதல் போன்ற பொருண்மைகளில் ஆளப்பட்டுள்ளது.

ஒன்றோடொன்று பொருந்துதல், கட்டுதல் என்னும் பொருளில்,

*"காஞ்சியி னகத்துக் கரும்பருத்தி யாக்குந்*

*தீம்புனல் ஊர" (அகநா. 156:6:7).*

2. பிணித்தல் என்னும் பொருளில் *"யானையால் யானையாத் தற்று" (குறள், 678).*

3. செய்யுள் முதலியன கட்டுதல் என்னும் பொருட்பாங்கில்,

*"மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்" (தொல். பொருள்.652).*

4. அணிந்து கொள்ளுதல், கட்டிக் கொள்ளுதல் என்னும் பொருண்மையில்,

*"அரைக்கு அமைமரபின மிடற்றுயாக்குநரும்*

*மிடற்றமை மரபின அரைக்கு யாக்குநரும்" (புறநா.378:16,17).*

மேற்குறித்த இலக்கிய வழக்குகள் அனைத்தும், பொருந்துதல் பொருண்மையினை அடிப்படையாகக் கொண்டவையே. இப் பொருந்துதல் கருத்தின் மூலவேர், "இய்" என்பதே யாகும்.

**யாஅ** *yāa,* பெ.(n.) 1. செய்யுளில் மட்டும் பயின்றுவரும், "யா" என்பதன் அளபெடை; lengthening of sound in yā in poetry. *"யாஅ ஒண்டளிர்" (அகநா. 331,1).* 2. யாஅம் பார்க்க; see *yāam.*

*[யா → யாஅ]*

கழகக்காலப் புலவர்கள், "யா" எனும் நெடிலை செய்யுளில் ஓசை நிறைத்தற்பொருட்டு, "யாஅ" என்று அளபெடையாகக் குறித்துள்ளனர். (எ.டு) *"யாஅ வரிநிழல்" (குறுந்.232:4–5), "நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்" (அகநா.263, 8).*

**யாஅம்[1]** *yāam,* பெ.(n.) யாமரம் பார்க்க; see *yāmaram. "நெடுநிலை யாஅம்" (அகநா. 659:8). "மென்சினை யாஅம் பொளிக்கும்" (குறுந். 37 : 2).*

*[யா→ யாஅ→யாஅம்]*

**யாஅம்[2]** *yāam,* பெ.(n.) செய்யுளில் மட்டும் காணப்பெறும், "யாஅ" என்பதன் அளபெடை; lengthening of sound *yāa*, in poetry. *"பிடிபசி களைஇய பெருங்கை வேழம் மென்சினை யாஅம் பொளிக்கும்" (குறுந். 37, 2–7).*

*[யா → யாஅ → யாஅம்]*

"யாஅ" என்னும் வடிவே, யாமரம் என்னும் பொருண்மையில், அளபெடுத்த வடிவமாக "யாஅம்" என்று கழகக்காலப் புலவர்களால் குறிக்கப்பட்டுள்ளது. (எ.கா.) *"நெடுநிலை யாஅம்" (அகநா.659,9).*

**யாக்குதல்[1]** *yākkudal,* பெ.(n.) கட்டுதல்; to build, to construct.

**யாக்கு–தல்[2]** *yākku-,* 5 செ.கு.வி.(v.i.) யாத்தல்; to compose, to create afrsh.

**யாக்குவி–த்தல்** *yākkuvi-,* 4 செ.கு.வி.(v.i.) பழக்குவித்தல்; to tame, to accustom.

**யாக்கெரு** *yākkeru,* பெ.(n.) கொன்றை; cassia.



**யாக்கை** *yākkai,* பெ.(n.) 1. கட்டுகை; tie, bond. 2. உடம்பு; body. *"யாக்கை யகத்துறுப் பன்பி லவர்க்கு" (குறள், 79), "காக்கைக்கும் கழுகுக்கும் இரையாகும் இந்த யாக்கை", "நீரில் எழுத்தாகும் யாக்கை.........." (அறநெறிச்.) க.வா. குமரகுருபர்.*

*[யா + கு – யாகு→யாக்கு + ஐ – யாக்கை.]*

"யா" என்னும் பொருந்தற் கருத்து மூலத்தினின்று முகிழ்த்த சொல் நரம்பு–நார்–எலும்பு–தசை–அரத்தம் முதலியவற்றால் கட்டுறப் பெற்றதாகிய உடம்பு, உடல், யாக்கை.

(எ.கா.) *"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு" (குறள், 948).*

*"நீர்இன்று அமையா யாக்கைக்கு" (புறநா. 18:18)*

இச்சொல்லின் பொருட்பொருத்தப்பாடு பற்றிச் சொல்லாய்வாளர் ப. அருளியார் கூறுவது :

"யா → யாத்தல் = பொருத்துதல், கட்டுதல் (யாழ்.அக.). "யா" என்னும் பொருந்துதல் கருத்துக் கிளைவேர் நூற்றுக்கு மேற்பட்ட சொல்

வடிவங்களைத் தோற்றுவித்துள்ளது" கட்டுதல், பிணித்தல், பொருத்துதல் போன்ற பொருட் பொருத்தப்பாட்டில் யாக்கை என்னும் இச்சொல் கழகவிலக்கியங்களில் ஏராளமாக வழக்கூன்றி யுள்ளது.

யாக்கை என்னும் பெயர்குறித்து மொழிஞாயிறு மொழிவது :-யாக்கை என்பது ஆகுபெயர். எழுவகைத் தாதுக்களால் யாக்கப்பட்டது. யாத்தல் = கட்டுதல் (தேவ.12, பக்.205).

**யாக்கைக்குற்றம்** *yākkai-k-kuṟṟam,* பெ. (n.) 1. கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவிழல் என்பனவாகிய உடலில் உண்டாம் ஐந்து வகைக் குற்றங்கள் (பிங்.); ill mannered bodily action, of which there are five kinds, viz: *koṭṭāvi, neṭṭai, kuṟu-kuṟuppu, kūṉ-kiḍai, naṭṭu-viḻal.* 2. நிலைநின்ற குற்றம் (தோஷம்); permanent defect. *"என் செய்வினையா மெய்க்குற்ற நீக்கி" (திவ். இராமாநுச. 26).* 3. பதினெண்குற்றம் (பிங்.); the eighteen kinds of defects of the human body.

**யாக்கைக்குறுகுற்றம்** *yākkai-k-kuṟu-kuṟṟam,* பெ. (n.) யாக்கைக்குற்றம், 2 (சது.) பார்க்க; see *yākkai-k-kuṟṟam.*

*[யாக்கை + கு + உறு + குற்றம்]*

**யாக்கைசித்தியாக்கி** *yākkai-citti yākki,* பெ. (n.) எருமைக் கனைச்சான்; seperation of body after attainment or final liberation.

**யாக்கையன்** *yākkaiyaṉ,* பெ. (n.) தசை, எலும்பு, நார், அரத்தம், கொழுப்பு போன்ற தாதுக்களாற் கட்டப்பெற்றவன்; man bind or made of flesh, bone, nerves, blood and fat. *"வடிந்த யாக்கையன்" (புறம், 180:6).*

*[யாக்கை + அன்.]*

"அன்" ஆண்பாலீறு. மானுடயாக்கையானது, தசை, எலும்பு, நரம்பு முதலான, பல்வகைப் பொருட்களால் கட்டப்பெற்றது. இவ்வாறு பொருத்திய உடம்பினையுடைய மாந்தன் உடம்பினன், உடலினன் என்னும் பொருட் பொருத்தம், விளங்கித் தோன்றும் வண்ணம் "யாக்கையன்" என்று குறிக்கப் பெற்றான்.

**யாகப்பப்பிள்ளை** *yāgappa-p-piḷḷai,* பெ. (n.) தூது பனுவர், வானவன் விடு தூது போன்ற நூல்களை எழுதியவர், இவர் 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவார்; *yāgappa piḷḷai* wrote treatiss like *Tūdu-paṉuvar, vāṉavaṉ-viḍu-tūdu,* 19th C.

**யாகவுப்பு** *yāga-v-uppu,* பெ. (n.) மருந்துப்பு; a kind of medicinal salt.

*[யாக + உப்பு]*

**யாகவேதி** *yāga-vēdi,* பெ. (n.) வல்லமை யுள்ள மூலிகை 23ல் ஒன்று; one of the 23 strong drugs.

*[யாக + வேதி]*

**யாகாட்டம்** *yāgāṭṭam,* பெ. (n.) வெள்ளை நாயுருவி; ordinary species of Indian burr.

*[யாகம் + ஆட்டம்]*

**யாங்கண்** *yā-ṅ-kaṇ,* வி.எ. (adv.) எவ்விடம்; where.

*[யா + கண்]*

**யாங்கணும்** *yāṅgaṇum,* பெ. (n.) எங்கும்; every-where. *"எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கு மெளிது" (குறள், 864).*

*[யாங்கண் + உம்]*

யாங்கர் *yāṅgar,* பெ.(n.) அரக்கர் (அக.நி); *Rāksasas,* devil spirited persons demon, giant.

யாங்கள் *yāṅgaḷ,* பெ.(n.) தன்மைப் பன்மைப் பெயர்; we.

*[ஏம்→ யாம் + கள் – யாங்கள்.]*

ஒ.நோ. நாம் + கள் – நாங்கள், எம் + கள் – எங்கள். "கள்" பன்மையீறு.

தனித்தன்மைப் பன்மைப் பெயர் வழக்கற்றுப் போனதினால், இன்று அதன் இடத்தில் 'நாங்கள்' என்னும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப்பெயர் தன் உளப்பாட்டுப் பொருளையிழந்து வழங்குகின்றது.

யாங்கனம் *yā-ṅ-gaṉam,* பெ.(n.) எவ்வாறு; how, in what manner, of what nature. *"யாங்கனம் தாங்குவென்" (நற்.381:6), "யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்" (புறநா. 8).*

*[யாங்கு + அனம் → யாங்கனம். "அனம்" = சொல்லாக்க ஈறு.]*

(ஒ.நோ.) அங்ஙனம், இங்ஙனம், எங்ஙனம்.

யாங்கு[1] *yāṅgu,* வி.எ.(adv.) 1. எவ்விடம், எங்கு; where. *"கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ" (குறள், 1070).* 2. எவ்வாறு; how, in what manner, of what nature. *"யாங்கு வல்லுநையோ" (ஐங்குறு. 231).*

க. ஹேகெ.

*[யா + அங்கு → யாஅங்கு → யாங்கு]*

ஆங்கு→அங்கு = அவ்விடம் (கலித்.145:6)

யாங்கு[2] *yāṅgu,* பெ.(n.) ஐயப்பொருளை யுணர்த்துஞ் சொல்; doubtful word.

*[யாஅங்கு → யாங்கு]*

யாங்கும் *yāṅgum,* பெ.(n.) எவ்விடத்தும்; everywhere. *"யாங்குமுளன் யாங்கு மிலன்....... எம்மான்" (குற்ற. தல. தக்கன் வேள்.5).*

*[யாங்கு → யாங்கும்]*

யாங்ஙனம் *yā-ṅ-ṅaṉam,* பெ.(n.) 1. எவ்விடம்; where. *"கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ" (குறள், 1070).* 2. எவ்வாறு; how, in what manner, of what nature. *"யாங்கு வல்லுநையோ" (ஐங்குறு.231).*

*[யாங்கனம் → யாங்ஙனம்.]*

யாசசர்க்கரை *yāśa-śarkkarai,* பெ.(n.) பூனைக்காலிச் செடியின் சாற்றினின் றெடுக்கும் சருக்கரை; salt, extracted from juices of *pūṉai-k-kāli* plant.

யாசுசிதறாணி *yāśu-śidaṟāṇi,* பெ.(n.) கற்பூரம்; camphor.

*[யாசு + சிதறாணி]*

யாசுமிர்த்தம் *yāśu-mirttam,* பெ.(n.) புளி நரளைக் கிழங்கு; tubeus root of virtus cornosa alais, v.s setosa.

*[யாசு + அமிர்த்தம்]*

யாட்டை *yāṭṭai,* பெ.(n.) ஓராண்டுக்காலம்; annual, yearly.

*[ஆண்டு→ஆண்டை→ஆட்டை→யாட்டை.]*

யாடம் *yāḍam,* பெ.(n.) சிறுகாஞ்சொறி (தைலவ.தைல); small climbing nettle.

யாடலாயமூலி *yāḍalāya-mūli,* பெ.(n.) கறிப்புடலை; snake gourd, useful as vegetable.

**யாடவச்சாரம்** *yāḍava-c-cāram,* பெ.(n.) சத்திசாரம்; a kind of prepared salt.

*[யாடவம் + சாரம்]*

**யாடு** *yāḍu,* பெ.(n.) ஆடு; goat. *"யாடுங் குதிரையும் நவ்வியும் உழையும்" (தொல். பொருள். 567).*



க. ஆடு, ஆண்டு; தெ. ஆடு, யேட, ஏடிக; ம. ஆடு; து. ஏடு; குட. ஆடி; கூ. ஒட; குரு. ஏடா; மா. ஏட; பிரா. கேட்; குரும். ஆடு; கோண். யேடி; துட. ஒடு; ஈரு.,எரு. ஆடு; பட. ஆடு.

த. யாடு; **Skt.** eḍa, ēḍak.

**Skt.** ēdaka = ஆண்யாடு, ēdi = பெண்யாடு; **Pkt.** ēḍayā = பெண்யாடு, eḍakka = ஆண்யாடு. வட இந்திய மொழிகளில் யாடு, திரிந்து வழங்கிய பாங்கு வருமாறு :-

**Pashai**. ēṟā; yeṟō; **shumashti**. yēre; **Gawar-bati**. erayē; **Savi**. = yeṟo; **Pahlvi** = yiṟo; **Shina** = ēri.

*[ஏழகம் → ஏடகம் → ஏடு → யாடு (வே.க.4, பக்.47).]*

(ஒ.நோ.) மா + டு → மாடு.

ஒருகா. யா = கருமைக் கருத்தினைக் குறிக்கும் மூலவேர். யா → ஆ. ஒருகா. யாடு → ஆடு. 'டு' சொல்லாக்க ஈறு.

மக்கள் வழக்கிலும் இலக்கிய வழக்கிலும், வழக்கூன்றிய "ஆடு" என்னும் கரிய விலங்கின் பண்டைய வடிவம் யாடு என்பதாகும். கருமை என்னும் பொருண்மையில் யாடு என்னும் பெயர், பண்டைக் காலத்தே கழக இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. கருமையின்றி வெண்மைநிறத்தில் உள்ள ஆடு, வெள்ளாடு எனப்பட்டது. வெள்ளாட்டிலும், கருமைநிறம் மிகுதியாக உண்டு. யாடு என்னுமிச் சொல் கருமைக் கருத்தின் அடிப்படையிலேயே, இலக்கியத்திலும், மக்களிடையேயும் வழக்கூன்றியுள்ளது. தொல் காப்பியத்திலும், அகநானூற்றிலும் "யாடு" என்றே இடம் பெற்றுள்ளது.

*"யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்" (தொல்.பொருள்.567), "மோத்தையும் தகரும் உதளும் அப்பரும் யாத்த என்ப யாட்டின் கண்ணே" (தொல்.பொருள்.1547), "காடுறை இடையன் யாடுதலைப் பெயர்க்கும்" (அகநா.394:13).*

"யா" என்னும் இக் கருமைப் பொருண்மை முதனிலையே காலப்போக்கில் "ஆ" என்று, மக்கள் வழக்கிலும், இலக்கிய வழக்கிலும், திராவிட மொழிகளிலும் வழங்கலாயிற்று.

**யாண்** *yāṉ,* பெ.(n.) அழகு; beauty, handsome. *"ஞானமாக்கழல் யாணுற வீக்குநர்" (ஞானா. 37).*

*[ஏ → ஏண் → யாண்]*

யாண் = கவின், அழகு என்னும் பொருட் பொருத்தப்பாட்டில், இச்சொல் பயிலுந் தன்மைத்து. கலித்தொகை 50-ஆம் பாடலில், இச்சொல், கவின், அழகு என்னும் பொருண்மையில் வழக்கூன்றி யுள்ளது.

(எ.கா.) *"யாணது பசலை என்றனன்" (கலி. 50:7).*

**யாண்டு**[1] *yāṇḍu,* பெ.(n.) 1. எங்கு, எவ்விடம்; where, what place. *"தண்னென்னும் தீயாண்டுப் பெற்றா ளிவள்" (குறள், 1104).* 2. எப்பொழுது; when ever. *"யாண்டும் இடும்பை இல" (குறள், 4). "யாண்டுச்சென் றியாண்டு முள ராகார்" (குறள், 895).*

*[யா + அண்டு – யாஅண்டு→ யாண்டு]*

அண் = இடப் பொருள் உருபு. அண் + து – அண்டு = இடைத்தையுடையது, இடம்.

யா = வினாப் பொருண்மையினைக் குறிக்கும் சொல். தமிழ் மொழியில் முதற்கண் மாந்தன் விளைத்த எவ்வகை வினாக் கேட்புக்குமாக வழங்கிய வினாமொழி.

**யாண்டு**[2] *yāṇḍu,* பெ.(n.) ஆண்டு; year. *"யாண்டு தலைப்பெயர வேண்டு புலத் திறுத்து" (பதிற்றுப். 15).*

தெ., க. ஏடு; ம. ஆண்டு.

யாண்டு என்றது மாசித் திங்களில் தோன்றிய பங்குனிப் பிறை முதலாக மேல் வருகின்ற மாசியில் பங்குனிப் பிறையளவும் பன்னிரு மதியமாதல் (நச்.சிவ.489).

**யாண்டு**[3] *yāṇḍu,* பெ.(n.) பருவம்; term, period.

*[யா → யாண் → யாண்டு]*

பன்னீராண்டும், பதினாறியாண்டுமே பெண்மையும், ஆண்மையும் பிறக்கும் பருவ மென்பது (தொல்.பொருள்.273, பேரா).

**யாண்டும்** *yāṇḍum,* வி.எ.(adv.) 1. எப்பொழுதும்; always, under all circumstances for ever. *"யாண்டு மிடும்பை யில" (குறள், 4).* 2. எவ்விடத்தும்; in all places, every where, wheresoever. *"யாண்டுச்சென்றி யாண்டு முளராகார்" (குறள், 895).*

*[யாண்டு + உம்]*

**யாண்டை** *yāṇḍai,* பெ.அ.(in. pn.) எவ்விடம்; which place. *"யாண்டையது கானென விசைத்தது மிசைப்பாய்" (கம்பரா. உருக்காட்டு. 61).*

தெ. ஏட.

*[யாண்டு → யாண்டை]*

**யாணம்**[1] *yāṇam,* பெ.(n.) 1. அன்பு, விருப்பம், உள்ளக்கட்டு; love, affection, friendship. 2. பற்றுக்கோடு; support. *"தேவரை யாணமென் றடைந்து" (திவ்.திருச்சந்.69).*

*[யா→யாஅண்→யாண் + அம் – யாணம்.]*

"இய்" – என்பது பொருந்துதற் கருத்து மூலவேர். இய்→இயை→இயைதல் = அன்பால் இணைதல், நட்பால் பொருந்துதல். இரண்டு உள்ளமும் இயைதல். ஆரா அன்பால் இணைந்து கலத்தல். இய்→இய→இயா→யா.

யா = பொருந்துதற் கருத்துக் கிளைவேர்.

கருத்தொருமித்த காதலர் இருவர்தம் உள்ளக்கட்டின், விருப்பின் விளைவாகத் தோன்றும் நெஞ்சகப் பிணைப்பே காதலேயாகும்.

**யாணம்**[2] *yāṇam,* பெ.(n.) கட்டு; bind, tie. *"உடைதாரமும் ஒட்டியாணமும்" (மீனாட்சி. பிள்.ஊசல்.10).*

*[யா→யாஅண்→யாண் + அம் – யாணம்.]*

(ஒ.நோ.) கலி + யாணம் – கலியாணம் = ஆரவாரத்தோடு கூடிய புதிய மணமக்களைக் கட்டுவிக்கும் மங்கல நிகழ்வு விழா.

(எ.கா.) ஒட்டு + யாணம் – ஒட்டியாணம் = இடையை உள்ளொடுங்குமாறு ஒட்டிக்கட்டும் அரைவளை, அரையணி. ஒட்டியாணம், கலியாணம் இவ்விருசொற்களிலும், "யாணம்" என்னும் சொல், பின்னொட்டாகக் கட்டு, பொருத்து என்னும் பொருளில் பயின்று வருவது காண்க.

கன்னடம், தெலுங்கு, துளு முதலான திராவிடமொழிகளிலும், கட்டு, பொருத்து என்னும் பொருளில், இச்சொல் இன்றளவும் ஆளப்பட்டு வருதல் கண்கூடு.

(எ.கா.) ஒட்டியாணம் kannada: oḍyāṇa, oḍḍiyāṇa, oḍḍavāṇa.

oḍvāvā=belt of gold or silver chiefly worn by women.

**Tu.**: oḍyaṇe, oḍyāṇe.

Te. : oḍḍāṇamu.

த. ஒட்டியாணம் > **Skt.** uḍḍiyāna.

யாணம்[3] *yāṇam*, பெ.(n.) 1. அழகு; beauty. *"யாணஞ்சான்ற அறிவர், கண்டோர்" (தொல்.பொருள்.1446).* 2. புதுவருவாய்; new income.

*[யாஅண்→யாண் + அம் – யாணம்.]*

கலியாணம் என்னும் கூட்டுச்சொல்லில் பின்னொட்டாகப் பிணைக்கப்பட்டுள்ள யாணம் என்னும் சொல், அழகு என்னும் பொருளில் தொல்காப்பியர் காலத்தே ஆளப்பட்டது.

கலியாணம் என்பது ஆடவர்க்கு எழிலார்ந்த இல்லத்தரசி கொணர்ந்த புதுவருவாய் என்னும் பொருண்மையில், இக்காலத்தும் ஆளப்படுகிறது. இதுகுறித்து மொழிஞாயிறு கூறுவது :– " கலி என்னும் சொல் இசைக்கருவி முழக்கத்தையும், யாணம் என்னும் சொல் பந்தற்சுவடிப்பும், மணமக்கள் கோலமுமாகிய அழகையும், வரிசை வைத்தலும், மொய் யெழுதுதலும், சீர் செய்தலுமாகிய புது வருவாயையும் குறிப்பது கவனிக்கத்தக்கது" (வ.வ.278, 279).

யாணர்[1] *yāṇar*, பெ.(n.) 1. புத்தம் புதிது; freshness, newness. *"புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி" (தொல்.சொல். 379).* 2. புதிய வருவாய்; new income. *"அறாஅ யாண ரகன்கட் செறுவின்" (பதிற்றுப். 71).* 3. வளப்பம்; fertility. *"யாணர்க் கோங்கின் குவிமுகை" (ஞானா. 60).* 4. செல்வம்; wealth. *"வெல்போர் வீயா யாணர்" (பதிற்றுப். 35, 10).* 5. நன்மை (பிங்.); goodness. 6. முறைமை; nature, regularity. *"மாணுற விலகா யாணர்த்து" (ஞானா 54, 8).*

*[ஏ→ஏண்→யாண்→யாணம்→யாணர்.]*

யாணர்[2] *yāṇar*, பெ.(n.) அழகு (பிங்.); beauty, charm.

*[யாண் + அர் – யாணர். 'அர்' சொல்லாக்க ஈறு.]*

யாண் = கவின், அழகு.

யாண் + அர் – யாணர். அழகும் கவினும் எழிலுற வாய்க்கப் பெற்றவர்.

"யாண்" என்னும் முன்னொட்டு அழகு, கவின் என்னும் பொருட் பொருத்தப்பாட்டில், கழக விலக்கியங்களில் பரவலாகப் பதிவூன்றியுள்ளது.

(எ.கா.) *"யாணது பசலை என்றனன்" (கலித். 507).*

*"யாணர்த் தண்பணை உறும் என" (அகநா. 220:19).*

*"யாணர்த் தம் சிறுகுடி யானே" (அகநா. 228:13).*

*"காரணி யாணர்த் தூம்பகம்*
*பழுனிய தீம்பிழி மாந்தி" (பதிற்றுப்.80:20, 21).*

இவ்வழகுப் பொருண்மை குறித்துச் சொல்லாய்வறிஞர் அருளியார் பகர்வது "அழகுடைய ஒன்று–புதியதாகத் தோன்றியதாகவும் – புதுமையோடு அமைந்திருப்பதாகவும் இருத்தல் இயல்பாதலின் – புதுமை – புதிது ஆகிய கருத்துப் பொருள் விரிவாக்கங்கள் நிகழ்ந்தன."

**யாணர்[3]** *yāṇar,* பெ.(n.) 1. கல் தச்சர் (அக.நி.); stone-cutters. 2. மரவேலை செய்யும் தச்சர்; carpenters.

*[யாஅண் → யாண் + அர் → யாணர்]*



**யாணர்நகர்** *yāṇar-nagar,* பெ.(n.) விஞ்சையருலகு (பிங்.); world of the *vidyādharas.*

**யாணன்** *yāṇaṉ,* பெ.(n.) அழகுள்ளவன்; beautiful or handsome person. *"யாணர்க்குள் யாண" (அரிச். பு. சூழ்வினை. 19).*

*[யாண் + அன் – யாணன்]*

யாண் = கவின், அழகு.

யாணன் = அழகும், கவினும் இயல்பாக வாய்க்கப் பெற்றவன்.

**யாணு** *yāṇu,* பெ.(n.) அழகு; beauty. *"ஞானமாக்கழல் யாணுற வீக்குநர்" (ஞானா.33), "யாணுக் கவினாகும்" (தொல். சொல்.381).*

*[யாண் → யாணு = கவின், அழகு.]*

**யாத்தழாகம்** *yā-t-taḻāgam,* பெ.(n.) மூதண்டம் என்னும் மூலிகை; a kind of herbal medicine.

*[யா + தழாகம்]*

**யாத்திரை[1]** *yāttirai,* பெ.(n.) செலவு; journey, voyage. *"நிசிவேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்".*

*[ஏய் → ஏ → யா + திரை = தொழிற்பெயர் விகுதி.]*

(எ.டு.) தகடூர் யாத்திரை.

த. யாத்திரை – **Skt.** yātrā> யாத்ரா.

ஒ.நோ. மா → மாத்திரை.

'ய'கரம் ஜகரமாவது இந்தி ஆரியமொழி இயல்பு.

(எ.டு.) இந்தி. யுவன் > வ. ஜவான்.

த. யாத்திரை → வ. யாத்ரா → இந்தி. ஜாத்ரா (தலைமை.தமி.பக்.17).

யாத்திரை என்பது பாவாணரின் வேர்ச்சொல் பகுப்பின் வழி தூய தென்சொல் என்பது புலனாகும். இதுகாறும் இச்சொல் பிறமொழிச் சொல்லென மயங்கி வந்த நிலையினை விட்டொழிக.

**யாத்திரை[2]** *yāttirai,* பெ.(n.) திருக் கோவில்களைக் காணும் பொருட்டு செலவு மேற்கொள்கை; pilgrimage, to sacred places. *'இராமேச்சுரம் வரை யாத்திரை மேற்கொண்டார்'.*

*[ஏய் → ஏ → யா → யாத்திரை = வழிச்செலவு.]*

யாத்திரைநாடி *yāttirai-nāḍi,* பெ.(n.) கோழை மேற் கோழை கூடிச்சேர்ந்தால் உடலிருக்க உயிர் பிறிந்து போகும், இறத்தலைக்குறிக்கும் நாடி; pulse indicating death, due to phlegmatic humour reactin.

*[யாத்திரை + நாடி]*

யாத்திரைபோதல்[1] *yāttirai-pōdal,* பெ.(n.) மணமகன் திருமண நிகழ்வின் முன்பு பயணமாகச் செல்லுதல் (இ.வ.); a custom of ceremonial setting out of the bridegroom as a pilgrim, just before the celebration of the marriage. *"காசி யாத்திரை" (இ.வ.).*

*[யாத்திரை + போதல்]*

யாத்திரைபோதல்[2] *yāttirai-pōdal,* பெ.(n.) 1. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்; setting by the bridegroom for earing wealth. 2. திருக்கோயில்களுக்கு நலங்கருதி செலவு மேற்கொள்ளுதல்; setting out of pilgrimage.

மறுவ. பரதேசம் போ–தல்.

*[ஏ→ யா + திரை + போ–. ஏ = செல், திரை = ஒரு தொழிற்பெயரீறு)]*

யாத்திரை என்னுஞ் சொல்லை வட சொல்லென்று மயங்கி யாத்திரை போதல் என்னும் வழக்கம் ஆரியத் திருமண நிகழ்வில் காணப்படுவதால் வடவருக்கே யுரியதென்பர். பாவாணரின் வேர்ச்சொல் பகுப்பின் வழி தூய தென்சொல் என்பது புலனாகும்.

பழந்தமிழரிடத்தே யாத்திரை போதல் என்னும் வழக்கத்திற்கு இணையாக, 'பரதேசம் போதல்' என்னும் நிகழ்வு, வழக்கூன்றி வந்துள்ளது. தமிழரிடையே பழைய முறையில் நிகழ்த்தப் பெறும், பெரும்பாலான திருமணங்களில், 'பரதேசம் போதல்' என்று ஒரு சடங்கு முற்காலத்தே உண்டு. "வினையே ஆடவர்க்கு உயிரே" என்னும் பழந்தமிழர் தம் மணவினை முடித்தற்கு முன்பே, பொருள் தேடச் செல்லுதல் சிறப்பெனக் கருதப்பட்டதால், "பரதேசம் போதல்" என்னும் சடங்கு திருமண நிகழ்வில் இடம்பெற்றதெனலாம். பரதேசம் என்பது வெளிநாடு மணப்பிள்ளை குதிரையில் பரதேசம் போய் வருவார், வந்தவுடன் மணமகளுக்குத் தாலிகட்டுதல் நடைபெறும். இந்நிகழ்வு தொன்றுதொட்டு நிகழ்ந்துவரும் தமிழர்தம் திருமண நிகழ்வாகும். இந்நிகழ்வு பண்டைய இலக்கண இலக்கியங்களில் "வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல்" என்னும் அகப்பொருள் துறையைச் சார்ந்தது ஆகும்.

இந்நிகழ்வு பழைய வழக்கத்தின் அடையாளமாக, பொருள் வளம் மிக்காரிடையே காணப்படுகிறது. பொருளாதார நெருக்கடியின் விளைவாக இந்நிகழ்வு அருகி வருவது யாவரும் அறிந்தவொன்றாகும்.

வாழ்வியலில் அனைத்து இல்லக் கடமைகளையும் முடித்த முதுபெருங்குரவர், நற்பேறு கருதி திருக்கோயில்களுக்குச் செல்லுதலும் யாத்திரை போதலேயாகும்.

யாதகம் *yādagam,*பெ.(n.) அகத்தி, a tree- *Sesbania-gradiflora.*

யாதயாமம் *yādayāmam,*பெ.(n.) அருந்தியது அறுதல்; digestion, assimilation.

யாதரு *yātaru,*பெ.(n.) பலகறை; cowry- *Cypracamoneta.*

யாதவசமூலி *yādavaša-mūli,* பெ.(n.) மருளூமத்தை; a species of datura.

*[யாதவசம் + மூலி. மூலிகை என்பதன் கடைக்குறை மூலி.]*

**யாதானும்** *yādāṉum,* பெ.எ.(adj.) எதுவாயினும்; which thing, what thing. *"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்" (குறள், 397).*

*[யாது + ஆன் + உம்]*

**யாதிகம்** *yādigam,* பெ.(n.) மல்லிகை வகையுளொன்று; a kind of jasmine - *Jasminim Auriculatum.*

*[யாது + ஆன் + உம்]*

**யாதினிக்குல்லி** *yādiṉi-k-kulli,* பெ.(n.) சாராயம் (சித்.அக.); arrack.

*[யாதினி + குல்லி]*

**யாது[1]** *yādu,* பெ.அ.(in.pron.) 1. எது; what, which. *"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்" (குறள், 254), "யாது யா.............. என்னும் பெயரும்" (தொல்.சொல். பெயரி.13:5).* 2. வினா; question, interrogation, query. *'காரணம் யாதாக இருப்பினும் அதைத் தெரிவிக்க வேண்டும்'.*

*[யாவது → யாது.]*

"யாது" என்பது சிறிதும் அறியப்படாத பொருள்பற்றி வினாவாக வரும். கா. குதிரைவாலி யாது?

**யாது[2]** *yādu,* பெ.(n.) அரக்கன்; wil-doer, *rāksasa. "வைதனர் யாதுதானர்" (கம்பரா. கும்ப. 174).*

*யா → யாது = கரியநிறத்தன்.*

**யாது[3]** *yādu,* பெ.(n.) கள் (சது.); toddy.

**யாது[4]** *yādu,* பெ.(n.) நினைவு; memory, remembrance. *"எனக்கு யாது இல்லை".*

*[யா → யாது]*

**யாதுகம்** *yādugam,* பெ.(n.) வாலுளுவை யரிசி; seeds of intellect plant.

**யாதுடையான்பூடு** *yāduḍaiyāṉ-pūḍu,* பெ. (n.) செவ்வாமணக்கு; red variety of castor.

**யாதும்** *yādum,* பெ.(n.) எதுவும்; anything and everything, anything. *"யாது மூரே யாவருங் கேளிர்" (புறநா.192).*

*[யாது + உம்.]*

ஒருகா. யாவதும்→யாதும் என்றுமாம்

**யாதொரு** *yādoru,* பெ.அ.(adj.) எந்த ஒரு; any what so ever. *"யாதொரு தெய்வங் கண்டீர் அத்தெய்வமாகி அங்கே" (அப்பர். தேவாரம்.), 'எனக்கும், இதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை'.*

*[யாது + ஒரு]*

**யாதோ** *yādō,* பெ.(n.) ஐயச்சொல்; interrogative or doubtfull word.

*[யாது → யாதோ]*

**யாதோவருமாசி** *yādō-varumāśi,* பெ.(n.) பெருந்துளசி; a large species of ocimun sanitum, holy basil.

**யாதோனிவாசம்** *yādōṉi-vāšam,* பெ.(n.) தண்ணீர்; water.

**யாந்தலந்தகம்** *yān-talandagam,* பெ.(n.) செங்கத்தரி; red variety of brinjal.

**யாந்துடனாதி** *yān-duḍaṉādi,* பெ.(n.) கருந்துளசி;black variety of ocimum sanction, a species of holy basil family.

*[யா + துழநாதி → துடனாதி]*

**யாப்பண்டம்** *yā-p-paṇḍam,* பெ.(n.) கருக்கொண்டவள் விரும்பும் திண்பண்டம்; an eatable desired by a pregnant woman.

மறுவ. காயமருந்து.

**யாப்பதிகாரம்**[1] *yāppadigāram,* பெ.(n.) செய்யுளிலக்கணம் கூறும் நூற்பகுதி (தொல். பொருள்.313, பேரா); section on prosody.

மறுவ. யாப்பிலக்கணம்.

*[யாப்பு + அதிகாரம். அதிகாரம் = நூற்பெரும் பிரிவு.]*

**யாப்பதிகாரம்**[2] *yāppadigāram,* பெ.(n.) செய்யுளிலக்கணம் பற்றி புலவர் குழந்தை எழுதிய நூல்; a treatise on Tamil prosody by *pulavar Kuḻandai.*

**யாப்பம்** *yāppam,* பெ.(n.) புணர்ச்சி (சங். அக.); coition.

மறுவ. கலவி.

*[யாப்பு + அம் – யாப்பம்.]*

த. யாப்பம் > **Skt.** Yābha (யாப) = sexual intercourse.

**யாப்பருங்கலக்காரிகை** *yāpparuṅgala-k-kārigai,* பெ.(n.) பதினோராம் நூற்றாண்டில் அமிதசாகரர் கட்டளைக் கலித்துறையால் இயற்றிய செய்யுளிலக்கண நூல்; a treatise on Tamil prosody in *kaṭṭaḷai-kali-t-tuṟai* metre by *Amidašāgarar,* 11th,C.

மறுவ. காரிகை.

*[யாப்பருங்கலம் + காரிகை]*

கரு → கார் → காரிகை = அழகிய பெண். யாப்பருங்கலக் காரிகையென்பது அழகிய பெண்ணை விளித்துப் பாடும் பாவகையில் அமைந்தது.

**யாப்பருங்கலம்** *yāpparuṅgalam,* பெ.(n.) பதினோராம் நூற்றாண்டில் அமிதசாகரர் நூற்பாவால் இயற்றிய செய்யுளிலக்கண நூல்; a grammatical treatise on prosody in *šūttira-p-pa,* by *Amidašāgarar.*

**யாப்பறை** *yāppaṟai,* பெ.(n.) கற்பில்லாதவள்; abandoned woman. *"யாப்பறை யென்றே யெண்ணின னாகி" (மணிமே. 22, 42).*

*[யாப்பு + அறு → அறை – யாப்பறை = யாப்பு அறுபட்டவள். கட்டு நெகிழ்ந்தவள்.]*

**யாப்பானந்தம்** *yāppāṉandam,* பெ.(n.) பாட்டில் தலைவன் பெயர்க்கு முன்னும் பின்னும் சிறப்புடை மொழியினைப் புணர்த்து இடர்ப்படப் பாடும் ஆனந்தக் குற்றம் (யாப். வி. 96, பக். 522); a defect in composition in which the name of the hero of a poem is clumsily set in the midst of attributes. *முன் தொடுக்கப்பட்ட சிறப்புடை மொழியின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர் நிறீஇ, அதன் பின்னே சிறப்புடை மொழி நிறீஇச், சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறு இடர்ப்படப் பாடுவது (யாப்.96).*

*[யாப்பு + **Skt.** ānanda → த. ஆனந்தம்]*

**யாப்பியம்** *yāppiyam,* பெ.(n.) 1. பொழுது போக்கு (யாழ்.அக.); hobby. 2. காலவரை யறை யுள்ளது; time-bound that which has a time limit or frame. 3. வளி முதலாய நோய் மூன்றனுள் பெரும்பான்மை தீர்க்கத் தக்கதும் சிறுபான்மை தீர்க்க முடியாததுமான நாட்பட்ட நோய் (குறள், 949, கீழ்க் குறிப்பு);

chronic disease as not completely curable, one of three *nōy.* 4. இழிவானது (யாழ்.அக.); that which is contemptible or mean, pully-mindedness. 5. நாஞ்சில் நாட்டு மருமக்கத்தாய குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன் குடும்பத்திலிருந்து விலகும் போது அக்குடும்பத்தில் அவனுக்குள்ள பங்குக்கு ஈடாகக் கொடுத்து, ஒதுக்குஞ் சொத்து; the property given to a male member of the *Nāñjilnāḍu marumakkatāyam* family in lieu of his interest in the family property. *'அவனுக்கு இந்நிலத்தை யாப்பியமாகக் கொடுத்து ஒதுக்கிவிட்டார்கள்'.*

*[யாப்பு→யாப்பியம்]*

**யாப்பியயானம்** *yāppiya-yāṉam,* பெ.(n.) கோயில் திருமேனியை நெடுந்தூரம் கொண்டு செல்லுதற்கு உதவும் தண்டிகை; ornamental palanquin for carrying an idol for long distances.

*[யாப்பியம் + யானம்]*

**யாப்பியரோகம்** *yāppiya-rōgam,* பெ.(n.) நோய் மூன்றனுள் பெரும்பான்மை தீர்க்கத் தக்கதும் சிறுபான்மை தீர்க்க முடியாததுமான நாட்பட்ட நோய் (குறள், 949 கீழ்க் குறிப்பு); chronic disease, as not completely curable, one of three *nōy.*

*[யாப்பியம் + **Skt.** ரோகம். யாப்பியம் = உடம்பு.]*

**Skt.** rōga> த. ரோகம்.

**யாப்பியவுகந்துடைமை** *yāppiya-v-ugan dudaimai,* பெ.(n.) நாஞ்சில் நாட்டிலுள்ள குழந்தைகளுக்குத் தகப்பனாருடைய யாப்பியச் சொத்திலுள்ள உரிமை; the reversionary interest of the children of a *Nāñji-nāḍu* family in the *yāppiyam* property of their father.

*[யாப்பியம் + உகந்துடைமை]*

**யாப்பிலக்கணம்** *yāppilakkaṇam,* பெ.(n.) செய்யுளிலக்கணம்; prosody.

*[யாப்பு + இலக்கணம்]*

**யாப்பு[1]** *yāppu,* பெ.(n.) 1. கட்டுகை; binding, tying. *"கழல்யாப்புக் காரிகை நீர்த்து" (குறள், 777).* 2. பிணிப்பு (நற், 21:2) கட்டு, கட்டுவடம் (கலி.54:3); tie. *"யாப்புடை யாழ்" (சீவக. 2011).* 3. கட்டப்பெற்ற பாட்டு, செய்யுள் (பிங்.); poetry. 4. யாழ்ப் பத்தரிற் குறுக்கே வலிவுறச் செய்யுங் கட்டு; ligature stretched across the pot like portion of *yāḷ.* *"புதுவது புனைந்த வெண்கை யாப்பமைத்து" (மலை. 28).* 5. சிறப்புப் பாயிரவிலக்கணம் பதினொன்றனுள் இன்ன நூல் கேட்டபின் இன்னது கேட்கத்தக்க தென்னும் முறை (நன். 49); graduated serial order of treatises to be studied one of order of *sirappu-p-pāyiram..* 6. அன்பு, அன்புத் தொடர்பு; affection, as binding persons together love that was springing up between them. *"நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள் யாப்பினு ளட்டிய நீர்" (குறள், 1093).* 7. உறுதி; resolution, steadiness, firmness, conviction. *"யாப்புறு மாதவத்து" (மணிமே. பதி. 57), "யாப்பிலோரை" (முது. காஞ்சி. 21).* 8. சூழ்ச்சி (பிங்.); counsel, guile. 9. பொருத்தம்; fitness, matching. *"அதற்கு யாப்புடைமையின்" (தொல். சொல். 77).* 10. கவசம் (நற்.265:4); armour. 11. பாம்பு (அக.நி.); snake. 12. மெய்ப்பை (பரி, திரட்டு : 12: 19); *சொற்களைப் பாவாக இசைத்தல் (தேவ.2). அடிதோறும், பொருள் பெறச்செய்வதொரு செய்கை (பேரா.தொல். பொருள். 313)*

தெ. ஆபு

*[யா → யாப்பு]*

யாப்பு எனினும், பாட்டு எனினும், தூக்கு எனினும், செய்யுள் எனினும், தொடர்பு எனினும் ஒக்கும் (யாப்.பாயி.).

யாப்பு[2] *yāppu*, பெ.(n.) வல்லிகை என்னும் குதிரைக்குரிய கழுத்தணி (கலி.96:10); valligai, tied tinkling bells put around the neck of horse.

*[யா → யாப்பு = குதிரையின் கழுத்தில் பிணைத்துள்ள அணிவகை.]*

யாப்பு[3] *yāppu*, பெ.(n.) முலைக்கச்சு; bodice, stays for the breast.

*[யா → யாப்பு = கட்டுத்துணி.]*

(ஒ.நோ.) மார் + யாப்பு → மாராப்பு. 1. மார்பகத்தின் மேலிட்டுக் கட்டும் சீலைப் பகுதி. 2. முதுகை வளைய வந்து மார்பருகில் இணைத்து முட்டை கட்டும் கச்சை (சீதக்.36).

யாப்புண்டல் *yāppuṇḍal*, பெ.(n.) கட்டுப்படுதல்; subject to, bounden.

*[யாப்பு + உண்டல்.]*

யாப்புவகை *yāppu-vagai*, பெ.(n.) நான்கு பிரிவாகவுள்ள நூலமைப்பு; treatise which has four sections.

*[யாப்பு + வகை]*

நூல்யாக்குமிடத்து நான்கு பிரிவாக நூல் அமைக்கப்படும். அவையாவன :- 1. தொகுத்தமைத்தல், 2. விரித்துக் கூறும் பான்மையில் அமைத்தல், 3. தொகை விரியாகக் கூறுதல், 4. மொழிபெயர்த்தல்.

யாப்புவழு *yāppu-vaḻu*, பெ.(n.) செய்யுட் குற்றங்களுளொன்று (யாப்.வி.பக். 525); a defect in poetic composition.

*[யாப்பு + வழு]*

*"யாப்பதிகாரத்தோடு மாறு கொள்வது" (யாப். 95.)*

யாப்புறவு *yāppuṟavu*, பெ.(n.) 1. தள்ளத் தகாத மரபொழுங்கு; inviolable rule. *"ஒன்றற்கே இவையாறும் வரவேண்டு மென்னும் யாப்புறவில்லை" (நன்.132, மயிலை).* 2. தகுதி; fitness, suitability. *"கோப்பெருந்தேவிக் கல்லதை யிச்சிலம் பியாப்புறவில்லை" (சிலப். பதி. 24).*

*[யாப்பு + உறவு – யாப்புறவு.]*

யாப்புறு[1]-தல் *yāppuṟu-*, 20 செ.கு.வி.(v.i.) பொருள் நிரம்பியிருத்தல்; to be pregnant with meaning. *"யாப்புற வந்த" (தொல். பொருள்.254).*

*[யாப்பு + உறு-.]*

யாப்புறு[2]-தல் *yāppuṟu-*, 17 செ.கு.வி. (v.i.) ஏற்புடையதாதல், சம்மதித்தல்; to be appropriate, to earn, gather. *"வருந்தி யாப்புற்ற" (ஞானா. 20).*

*[யாப்பு + உறு-.]*

யாப்புறு[3]-த்தல் *yāppuṟu-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. வலியுறுத்துதல்; to enforce. *"பெயர்த்துரை அதனை யாப்புறுத்தற் பொருட்டு" (குறள், 944, உரை).* 2. கட்டுப்படுத்தல்; to bound.

*[யாப்பு + உறு-.]*

யாப்புறுப்பார் *yāppuṟuppār*, பெ.(n.) உறுதிப்படுத்துவார்; one who confirms.

*[யாப்புறு → யாப்புறுப்பார்.]*

**யாபதம்** *yāpadam*, பெ.(n.) வாலுளுவை; a plant-*Celastrus paniculata.*

[யா + பதம்]

**யாபம்** *yābam*, பெ.(n.) யாப்பம் பார்க்க; see *yāppam.*

**யாபி[1]-த்தல்** *yābi-*, 4 செ.கு.வி.(v.i.) **1.** பொழுது போக்குதல்; to while away one's time. 2. துய்த்தல்; to enjoy. *"சுசிக்குச் சுசிந்தை சொல்லுக்குத் தேருர், இருக்கப் பறக்கை, யாபிக்கக் கோட்டாறு" (நாஞ்.).*

[யா→யாபி-.]

**யாபி[2]-த்தல்** *yāpi-*, 4 செ.கு.வி.(v.i.) உரிமையில்லையாகவும் எடுத்தாளுதல்; to obtain unlawful possession of; to encroach upon.

**யாபேரும்** *yāpērum*, மா.பெ.(pron.) எல்லாரும் (இ.வ.); one and all.

[யா + பேரும்.]

**யாம்** *yām*, பெ.(n.) தன்மைப்பன்மைப் பெயர் (தொல்.சொல். 164); we. *"யாஅம் துணை புணர்ந்துறைதும்" (ஐங்குறு.333). "யாம் கண்ணிற்காண நகுப" (குறள், 1140).*

க. ஆம்

[யா + அம் – யாஅம்→ யாம். அம் = தன்மைப் பன்மை ஈறு.]

**யாம்பல்கண்டாள்** *yāmbal-kaṇḍāḷ*, பெ.(n.) மணித்தக்காளி; a medicinal plant used as vegetable, black night-shade-*Solanum tubenosum.*

**யாமக்காலம்** *yāma-k-kālam*, பெ.(n.) நள்ளிரவு; mid-night.

மறுவ. நடு இரவு நடுநாள்.

[யாமம் + காலம்]

**யாமக்காவலர்** *yāma-k-kāvalar*, பெ.(n.) யாமங்கொள்பவர் பார்க்க; see *yāmaṅ-koḷpavar.*

[ஏமம்→யாமம் + காவலர்]

**யாமக்கிழங்கு** *yāma-k-kiḻaṅgu*, பெ.(n.) ஒருவகைக் கிழங்கு; a variety of corm.

[யாமம் + கிழங்கு]

**யாமக்கோட்டம்** *yāma-k-kōṭṭam*, பெ.(n.) உவளகம்; harem. *"யாமக் கோட்டத் தருஞ்சிறைக் கோடல்" (பெருங். இலாவாண. 11, 25).*

[யாமம் + கோட்டம்]

**யாமகோடம்** *yāma-kōḍam*, பெ.(n.) 1. சேவல்; cock. 2. நாழிகை வட்டில் (யாழ். அக.); hour glass.

**யாமங்கொள்பவர்[1]** *yāmaṅ-koḷpavar*, பெ.(n.) **1.** இடையாமத்து ஊர்க்காவல் செய்பவர்; night watchman. *"யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉம்" (புறநா. 37).* 2. நாழிகைக் கணக்கர்; those who announce the time of the day to the king. *"குறுநீர்க் கன்னலின் யாமங் கொள்பவர்" (மணிமே.7:65).*

**யாமங்கொள்பவர்[2]** *yāmaṅ-koḷpavar*, பெ.(n.) யாமந்தோறும் காவல் செய்தலை மேற்கொள்ளும் காவலர்; mid-night watchman. *"காப்புடை வாயில் போற்றோ என்னும் யாமங் கொள்பவர்" (நற்.132:8–9).*

[ஏமம்→யாமம் + கொள்பவர்]

இரவுப் பொழுதில் ஒவ்வொரு யாமத்தும் காவல் மேற்கொள்பவர்.

யாமசரிதன் *yāma-šaridaṉ,* பெ.(n.) அரக்கன்; *Rāksasaṉ*, as roaming about at night. *"யாமசரிதனை மூளையுக வுடல் கீளுமே" (பாரத.வேத்திரகீய. 45).*

யாமசிக்கிழங்கு *yāmaši-k-kilaṅgu,* பெ.(n.) தண்டுக்கிழங்கு வகையு ளொன்று; a variety of corm. *சமையலுக்குப் பயன்படும் கருப்புத் தோலுடன் கூடிய கிழங்கு.*

யாமபதி *yāma-padi,* பெ.(n.) திங்கள் (சந்திரன்) (யாழ்.அக.); moon.

*[யாமம் + பதி]*

யாமபேரி *yāma-pēri,* பெ.(n.) இரவில் ஒவ்வொரு சாமத்தின் தொடக்கத்திலும் கொட்டும் பேரிகை; drum beaten with stick at the commencement of each of the three watches or segment of the mid night. *"யாம பேரி யிசைத்தலால் (கம்பரா. கைகேசிசூழ். 57).*

*[யாமம் + பேரி. பேரி = முரசு. பேரிகை என்பதன் கடைக்குறை பேரி.]*

யாமம்[1] *yāmam,* பெ.(n.) 1. 7 1/2 நாழிகை கொண்ட காலவளவை (பிங்.); a watch of 7 1/2 *nāḻigai* = 3 hours, period of three hours. 2. நள்ளிரவு; midnight, the middle watch of the night. *"கூதிர் யாம மென்மனார் புலவர்" (தொல். பொருள். 6).* 3. இரவு; night. *"யாமக்கடலை நீந்துவேன்" (சீவக. 1663).* 4. இடக்கையாற் கொட்டும் ஒரு தோற்கருவி (சிலப்.3,27,உரை); small drum beaten by the left hand. 5. ஒரு நாளில் 40 நாழிகைக்குமேல் 50 நாழிகை வரையுள்ள பொழுது (நாமதீப.559); the period between the fortieth and the fiftieth *nāḻigai* of a day. 6. பொழுது (அக.நி.); time. 7. அகலம் (நாமதீப.778); breadth.

த. யாமம் → **Skt.** *yāma* = night watch of three hours.

மறுவ. நள்ளிரவு, நடு இரவு, நடுநாள், நடுச்சாமம்.

*[ஏம் → ஏமம் → யாமம்]*

யாமம் என்னுஞ் சொல், "யா" என்னும் கருமைக்கருத்து மூல வேரடியினின்று கிளைத்தது. அங்கிங்கெனாதவாறு, யாங்கணும் இருள் கவ்வித் திகழும், நடு இரவுக் காலமே யாமம். இச்சொல், இரவுக்காலம் என்னும் பொதுப் பொருளில், முதற்கண் வழங்கியது. காலப்போக்கில் அவ்விருள் செறிந்து திகழும் நடுப்பகுதி நேரமாகிய நள்ளிரவுப் பொருண்மையில், சிறப்பாக மக்களிடையே, வழக்கூன்றியது. நள்ளென்னும் இடையறாத் தொடரோசை எங்கும் கேட்கும், இராப்பொழுதின் நடுக்கூறே யாமம் என்று கழகக்கால இலக்கியங்கள் இயம்பும்.

எ.கா.வருமாறு:-

1. *"நள்ளென் யாமத்து" (குறுந்.160:4)*
2. *"நள்ளென யாமத்து மழை பொழிந்தாங்கே" (நற். 22 : 11).*
3. *"கடல் மீன் துஞ்சு நள்ளென் யாமத்து" (அகம். 142 : 20).*
4. *"நள்ளென் யாமத்து உயவுத் துணையாக" (அகம். 103 : 12).*
5. *"யாம இரவின் நெடுங்கடை நின்று"(அகம்.208:1).*

நடுஇரவு, நள்ளிரவு என்னும் பொருண்மையில் தொல்காப்பியம் முதலான கழகக்காலப் பனுவல்களில் பரந்துபட்ட இலக்கியப் பதிவுகள் காணப்படுகின்றன. அவற்றுட் சில வருமாறு :-

1. "குறிஞ்சி, கூதிர், யாமம் என்மனார் புலவர்"
(தொல்.பொருள்.1 : 7)
2. "புலம்புகொள் யாமத்து" (குறுந். 279 : 3)
"...................... உறை செறிந்து"
3. "ஊதை தூற்றும் கூதிர் யாமத்து"
(குறுந்.86:3:4)

4. "நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்"

(புறநா.189:3).

"யாமம்" என்னும் சொல்பற்றி ஆய்வாளர் ப.அருளி கூறுவது வருமாறு :– பொதுப்பட இரவைக் குறித்துத் தோற்றிய யாமம் என்னுஞ் சொல், கருத்துக் கூர்ப்பு எய்தி, நள்ளிரவாகிய நடு இரவையே காலப்போக்கில், சிறக்கக் குறித்து வழங்கத் தலைப்பட்டது.

( Pali ) *yāma*
( Prakrit ) *yāma*
( Sindhi ) *yam-a*

"ய" கரம் "ஜ" கரமாவது வடவிந்திய ஆரிய மொழி இயல்பு.

(எ.கா). த. யாத்திரை → **Skt.** *yātra*. **Hindi.** *jātra*.

"யாமம்" என்னும் கருமைக்கருத்து அடிப்படைச் சொல்லினின்று (சகரமெய் முற்பேறுற்றுத்) திரிபெய்திவாறு பயில்வு கொண்டுள்ள இந்திய–ஆரிய மொழிச் சொற்களாவன :

யாமம் > [Sanskrit] *syāma* = black, swarthy, dark-blue
[Prakrit] *šāma* = black, dark-blue
[Pali] : *šāma* = black, dark
[Pashai] : *šāmak, šamec* = black
Kachur - i sala
dialect of pashai : *šamek* = black
*Nirlāmi* dialect of pashai : *sāmek* = black
Wegali dialect of pashai : *sāmek* = black.
*Kurańgali* dialect of pashai : samak
Kashmiri : somu = dark-blue, dark brown;
Nepali : *sāu* = dark coloured
Assamese : *xāu, xāo* = swarthy, lightish dark
Gujarati : *sām* = black, dark
Sindhi : sam - van = black colour

அடுத்த திரிபு வளர்ச்சி :
யாமம் > [Sanskrit] *syāma* > *šyāmala* = dark - coloured
Prakrit : samala = dark coloured
Sindhi : *sāvilo* = dark-blue
*Panjābi* : *sāvla, saulā, sāvlā, sāulā*
saula = black, dark-complexioned
Nepali : *sāulo* = swarthy
Oriya : *sāula, sāmala*

ஒரு ஒப்பு நோக்குக்கு :
[Sanskrit] *šyāma - sāstri* [சியாமா சாஸ்திரி = கருப்பாசிரியன்]
[கருப்பாசிரியப் பார்ப்பான்]
யா = கருமை
யா > [Sanskrit] *syāva* = dark, dark-brown
*Kohistāni* : *šā* = black
யா > [Sanskrit] *syāva* > *syāviya, syāvyā* = darkness

யாமங் கொள்பவர் = இடையாமத்து ஊர் காப்பவர்

[1] "யாமங் கொள்பவர் சுடர்நிழற் கதூஉம்
கடுமுரண் முதலைய நெடுநீ ரிலஞ்சி"
[புறம் : 37 : 9–10]

**யாமம்[2]** *yāmam-*,பெ.(n.) தெற்கு (சூடா.); south.

**யாமயாழ்** *yāma-yāḻ*,பெ.(n.) நடுச் சாமத்தில் இசைக்கும் யாழ்; lute played at midnight. "யாமயாழ் மழலையாள்" (கம்பரா. நாடவிட்.34).

[யாமம் + யாழ்]

நள்ளிரவில் இசைக்கப்பெறும் யாழ்; ஒவ்வொரு யாமத்திலும், அதற்குரிய பண்முறையோடு இசைக்கப்பெறும் யாழ்.

யாமர் *yāmar,* பெ.(n.) 1. இயக்கர் பன்னிருவர்; twelve sons of *iyakkiyan,* a deity. 2. தேவதை; a deity.

யாமரம் *yāmaram,* பெ.(n.) 1. கரிய பருத்த அடிப்பகுதியை யுடைய மரம்; the blackish trunk of a tree. *"யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்" (தொல்.எழுத்து.229).* 2. ஆச்சா மரம் (அக.நி.); hard wickia binata tree.

க்ன். ஆசு, ஆச, ஆர்ச.

மறுவ. கருந்தாளி மரம், மையாளி மரம், நெடுந்தாளி, அஞ்சன மரம், காட்டடகு, சாலமரம்.

*[யா + மரம் – யாமரம்]*

கரிய பருத்த தாள்பகுதியை உடைய நெடிய மரம். இம்மரம் பாலை நிலத்தில் பரவலாகக் காணப்பெறும். இம்மரத்தின் நிலைத்திணைப் பெயரை, (தாவரப் பெயரை) இதுகாறும், யாரும் தெளிவாக வரையறுக்கவில்லை. "யா" என்னும் ஓரசைச் சொல், சொல்லமைப்பிலேயே, கருமைப் பொருண்மையை பெயராகப் பெற்றுள்ளது. கருமைக் கருத்து மூலச்சொல்லான, "யா" என்னும் விதைச்சொல்லே [ seed - word ] யாமரத்தினைக் குறிக்கும். கழக இலக்கியத்தின் தலைமைப் பனுவலான தொல்காப்பியத்திலும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களிலும், 'யா', 'யாஅ', 'யாஅம்', 'யாமரம்' என்னும் வடிவங்கள் பதிவு பெற்றுள்ளன. (எ.கா.) "யா":– "யாவுயர் நனந்தலை" (அகநா.65:13). "யாஅ":– "யாஅ வரிநிழல்" (குறுந். 232 : 5).

*"யாஅம்", "நெடுநிலை யாஅம்" (அகநா. 659, 9), "யாமரம்" "யாமரக் கிளவியும்" (தொல். எழுத்து. 229).*

யாமரம் கரிய நெடுந்தாள்களைத் தன்னகத்தே கொண்டது. இப் பருத்த நெடுந்தாள்களினின்று கிளைத்த கவடுபட்ட கொம்புகளில், பொன்போற் சிவந்த இளந்தளிர்கள், மிக்கு ஒளியுடன் மிளிரும். இம் மரத்தின் கவடுபட்ட கொம்புகளில் விளங்கித் தோன்றம் பிளவுபட்ட இலைகள் எல்லாம், இலையுதிர்காலத்தே வீழ்ந்துபடுந் தன்மைத்து. இலைகள் உதிர்ந்த நிலையில், யாமரத்தின் மீது விழும் சூரியக் கற்றைகள், பாலைநில வழிப் போக்கர்களுக்கு வரிநிழலை வழங்குந் தன்மையன. பொன் போல் ஒளிரும், பிளவுபட்ட யாமரத்தின் இலைகள், காண்போர்க்கு மனையுறைக் கோழியின், செக்கச்சிவந்த அலைதாடியின் தோற்றத்தினை நினைவூட்டுத் தன்மையன. சேவலின் சிவந்த அலைதாடியின் அமைப்பானது, யாமரத்தில் நெருப்புக்கனல் ஒளிர்வது போன்றிருக்கும். இக் காட்சியினைக் கீழ்க்காணும் பாடல்வரிகள் தெளிவுறுத்துகின்றன.

(எ.கா.)

*"நெருப்பவிர் கனலி யுருப்புச் சினந் தணியக் கருங்கால் யாத்து வரிநிழ விரீஇ" (ஐங்குறு. 388:1–2).*

*"மனையுறை கோழி அணல் தாழ்பு அன்ன கவையொண் தளிர கருங்கால் யாஅத்து"*

*(அகநா. 187, 14–15)*

கன்னங்கரிய நெடியதாள்களையுடைய இம் மரத்தினைக் கழக இலக்கியப் பாடல்கள் "கருங்கால் யாத்து" என்று கூறுவது போன்று, சாம்பசிவ மருத்துவ அகரமுதலியும், "கருந்தாளிமரம்" என்று பெயரிட்டு அழைப்பது, இங்கு குறிப்பிடத்தக்கது.

இம்மரம் நீண்ட நெடிய தோற்றமுடையது. ஏணி சார்த்தி ஏறவேண்டிய அளவிற்குத் தாள்பகுதி நெடுமையும், சுற்றுப்பகுதி பருமையுங் கொண்டது. பின்வரும் அகநானூற்றுப் பாடல்வரிகள், யாமரத்தின் தோற்றத்தினை நன்கு புலப்படுத்துகின்றன.

*"நெடுந்தாளி யாத்து" (அகநா : 2)*

*"குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாத்து"*

*(அகநா.193 : 7).*

இம்மரம் ஆறலைக் கள்வரின் அடாவடிச் செயலைத் தவிர்ப்பதற்கும், அருந்துணை புரிந்தது. வழிச் செல்வோர், கள்வர் திரியாத நல்வழியைத் தெரிவு செய்யப் பயன்படும், பொன்போன்ற கவைத்த தளிர்களையுடைய யாமரம் – என்னும் பொருண்மையைக் கீழ்க்காணும் அகநானூற்றுப் பாடல் வரிகள் தெளிவுறுத்தும் பான்மை வருமாறு:– (எ–டு)

*"கள்வர் பகைமிகு கவலைச் சென்னெறி*
*காண்மார்*
*மிசைமரஞ் சேர்த்திய கவைமுறி யாத்து"*
*(அகநா. 257 : 13–14).*

அச்சந்தரும் அருஞ்சுரத்தில், ஆறலைத் துண்ணும் கொடுந்தொழில் எயினர், பெரும் பொருள் தேடுதற்கு உறுதுணை புரியும், நெடுநிலை மரம். கவைமுறி பொன்தளிர் வீழ்ந்த ஞான்று, வழிப்போக்கர்தம் வருகையை அறிதற்கு, வாட்டமான வரிநிழலைத் தோற்றுவிக்கும், நெடுந்தாள் மரம். கொடுவில் எயினர், செந்நிலை யாமரத்தின், மரமோடு மரமாக ஒன்றியிருந்து, வழிக்கண் வரும் வம்பலரைக் காண்பர். இந் நிலையினைக், கீழ்க்காணும் அகநானூற்றுப் பாடல் வரிகள், நெஞ்சில் நிலைநிறுத்தும் பாங்கு வருமாறு :– "வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார் வில்வல் ஆடவர் மேலான் ஒற்றி
நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்" (அகநா.263).

ஒளி பொருந்திய செங்குத்தான தோற்றத்தினையுடைய இம்மரத்தின் இலைகள் வீழ்ந்து படுந்தன்மையன. இலைகள் இலவாகி மிக ஓங்கித் திகழும், யாமரத்தின் அடிப்பகுதி, நண்பகல் ஞாயிற்றின் கதிர்வீச்சில் – வரிவரியான நிழல் தோற்றத்தினை, வழிப்போக்கர்க்கு வாரிவழங்கும் தன்மையை,

*"ஒல்கு நிலை யாஅத்து ஓங்குசினை பயந்த*
*அல்குறு வரிநிழல்" .......... (அகநா.287:11).*

*"கருங்கால் யாத்து வரிநிழ லிரீஇ"*
*(ஐங்குறு:388:2).*

யாமரத்தின் தாள்பகுதி, உரித்தற்கேற்றவாறு அமைந்த பட்டைகளையுடையது.

*"அத்த யாஅத்துப் பொரியரை முழுமுதல்"*
*(குறுந்.255 : 1–2).*

இம்மரத்தின் பட்டைகளை யானை உரித்து, மிக விருப்புடன் உண்ணும்.

*"பிடிபசி களைஇய பெருங்கை வேழம்*
*மென்சினை யாஅம் பொளிக்கும்"*
*(குறுந். 37 : 2–3).*

*யாமரத்தின் பட்டையை, உரித்தால் நீர் கசியும்.*
*"நாரரை மருங்கின் நீர்வரப் பொளித்து"*
*(அகநா. 254 : 15).*

இன்றைய ஆச்சா மரமே; அன்றைய யாமரம்:– "யா"–என்னும் இம்மரப்பெயர்க்குப் பொருள் புகல வந்த அறிஞர் பெருமக்கள் அனைவரும், கழகக்கால இலக்கியங்களில் பயின்ற பான்மையினை சற்றும் உற்று நோக்காது, பொத்தாம் பொதுவாக, "ஒருவகை மரம்" என்றே குறித்துள்ளனர்.

1. சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி.
   யா = ஒரு மரவகை; a kind of tree.
2. சென்னைப் பல்கலைக்கழக அகாமுதலி.
   யா = மரவகை; a tree (பக்.3396).
3. மரஇனப் பெயர்த்தொகுதி – II
   யா = மரவகை; a kind of tree (பக். 221).

"யா"–மரம் இன்றைய வழக்கில், "ஆச்சா"– என வழங்கப் பெறுகின்றது.யா→ ஆ, என்று மாறும்.

(ஒ.நோ.) யாடு → ஆடு
யானை → ஆனை.
யா → ஆ + சு → ஆசு.
ஆசு + ஆ → ஆசா = யாமரம்.

யாமரத்தைக் குறித்து வழங்கிய பண்டைய இத் தமிழ் வடிவங்கள், இன்றும் கன்னட மொழியில்

"ஆசு", "ஆச", "ஆர்ச" போன்ற வடிவங்களைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

ஆசா → ஆச்சா = வலித்தல் திரிபு.

ஆச்சா = ஆச்சாமரம் = பண்டைய யாமரம்.

[Hard wickia binata]

'ஆமணக்கு விதைத்தால் ஆச்சா முளைக்குமா?' என்ற நாட்டுப்புற பழமொழியும், ஆச்சாவைச் சுட்டுவதறிக.

முடிவாக, கழகக் காலத்தில் யாமரம் என்றும், கன்னடத்திலும், மக்கள் வழக்கிலும் ஆச்சாமரம் என்றும், இம்மரம் மக்களிடையே வழக்கூன்றி இருந்தது. மலைபடுகடாத்து வரிகளிடையில் வரும் "யாஅம்" என்ற சொல்லுக்கு, "யாம் பூவும்" – (அதாவது, யாமரத்தின் பூவும்) – என்று நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளதாகப் பதிப்பித்துள்ளமைக்கு, – உ.வே.சாமிநாத ஐயர் அவர்கள் அடிக்குறிப்பாகத் தந்துள்ள பாட வேறுபாடு, "ஆச்சாவிற் பூவும்" என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வடிக் குறிப்பு – அன்றைய யாமரமே – இன்றைய, ஆச்சாமரம் என்பதை உறுதிப்படுத்துகிறது எனலாம் (காண்க. பத்துப்பாட்டு. மலைபடு. நச்.பக்.648).

**யாமவதி** *yāmavadi*, பெ.(n.) இராப்பொழுது (யாழ்.அக.); night, as divided into watches.

*[யாமம் + வதி → யாமவதி]*

இராப்பொழுதின் முப்பிரிவுகளுள் ஒன்றான இடையாமம். பத்திலிருந்து இரண்டு மணி வரையிலான காலம்.

**யாமவருணம்** *yāma-varuṇam*, பெ.(n.) வாகை மரம்; a tree, the indian walnut.

**யாமளசாத்திரம்** *yāmaḷa-cāttiram*, பெ.(n.) சத்தி பூசையைப் பற்றிக் கூறும் தந்திர சாத்திர நூல் (தக்கயாகப். 136, உரை); a tantric work on Sakti worship.

*[யாமளம் + **Skt.** சாத்திரம்]*

**யாமளபுராதனர்** *yāmaḷa-purādaṉar*, பெ.(n.) காளியின் படைவீரர்; the warriors of *kāli's* army. *"வருவார் புவனநாயகி தன் யாமள புராதனர்களே" (தக்கயாகப். 432).*

*[யாமளம் + **Skt.** புராதனர்]*

**யாமளம்**[1] *yāmaḷam*, பெ.(n.) 1. சத்தி பூசையைப் பற்றிக் கூறும் ஒரு தந்திர நூல் (தக்கயாகப், 136, உரை); a tantric work on sakti worship. 2. யாமளத்தின்படி பகடாதியாக வேண்டிய பலிக ளீந்து (பாரத. களப்.8); a vedic section on witch-craff. *"யாமள முதலிய வேத மந்திரம்" (பாரத. நச்சுப். 14).* 3. சோடு (யாழ்.அக.); pair, brace, couple.

**யாமளம்**[2] *yāmaḷam*, பெ.(n.) 1. பச்சை (யாழ்.அக.); green. 2. இளமை; youth, adolescence.

**யாமளவிக்கல்** *yāmaḷa-vikkal*, பெ.(n.) இரட்டை இரட்டையாக வரும் விக்கல்; hiccups which occurs in double strokes.

**யாமளாக்கினி** *yāmaḷākkiṉi*, பெ.(n.) மாகாளியினுடைய பெருந்தீ (தக்கயாகப். 666, உரை); the fire of *Mahākāḷi.*

**யாமளாகமம்** *yāma-ḷāgamam*, பெ.(n.) சத்தி பூசையைப்பற்றிக் கூறும் ஒரு தந்திர நூல் (தக்கயாகப். 136, உரை); a tantric work on Sakti worship.

**யாமளேந்திரர்** *yāmaḷēndirar*, பெ.(n.) இசைத்தமிழ் நூலாசிரியருள் ஒருவர் (சிலப். உரைப்பாயி); one of the author of a treatise on *iśai-t-tamil.*

யாமளை *yāmaḷai,* பெ.(n.) 1. மலைமகள்; Parvadi. *"யாமளையை வரையரசளித்த பச்சை மா மணியை" (பிரமோத். 18, 29).* 2. (கொற்றவை) காளி (பிங்.); Durga.

யாமன் *yāmaṉ,* பெ.(n.) இறப்புக் கடவுள்; *yāmaṉ* in his office as judge of souls.

மறுவ. இயமன்

*[ஏமம்→யாமம்→யாமன்.]*

உடல் வேறு உயிர் வேறாக இருவேறுபடுத்தும் கூற்றுவன்.

யாமி *yāmi,* பெ.(n.) 1. இரவு (யாழ்.அக.); night. 2. இயமன்தேவி (அபி.சிந்.); wife of yama. 3. தெற்கு (யாழ்.அக.); south. 4. கற்புடையாள் (யாழ்.அக.); chaste or continent woman. 5. உடன்பிறந்தாள் (யாழ்.அக.); sister. 6. மகள் (யாழ்.அக.); daughter. 7. மருமகள் (யாழ்.அக.); daughter-in-law.

*[யாமம்→யாமி.]*

யாமிகன் *yāmigaṉ,* பெ.(n.) இரவுப் பொழுதில் நகர்நோட்டஞ் செய்யும் காவற்காரன் (சுக்கிர நீதி, 32) ; night watchman, one who patrols a city at night.

*[யாமி→யாமிகன்.]*

யாமிகை *yāmigai,* பெ.(n.) இரவு; night.

*[யாமி→யாமிகை.]*

யாமியம்[1] *yāmiyam,* பெ.(n.) 1. இந்து விதிமுறைகளின் தொகுப்பு (யாழ்.அக.); a code of Hindu law. 2. தவம் (யாழ்.அக.); penance, Tapas. 3. சந்தனம்; sandal.

யாமியம்[2] *yāmiyam,* பெ.(n.) தெற்கு (பிங்.); south. *"யாமியந்தனி லெய்திய தூதுவர்" (குற்றா. தல. மந்தமா.85).*

யாமியம்[3] *yāmiyam,* பெ.(n.) பொறுப்பு; security, responsibility.

யாமியன் *yāmiyaṉ,* பெ.(n.) அகத்தியன் (யாழ்.அக.); Agastya.

யாமியாயனம் *yāmiyāyaṉam,* பெ.(n.) தென்திசைச் செலவு (தட்சிணாயனம்) (யாழ்.அக.); sun's progress towards the south.

*[யாமி + **Skt.** அயனம்]*

யாமியை *yāmiyai,* பெ.(n.) இரவு (யாழ்.அக.); night.

*[யாமி→யாமியை.]*

யாமிரீபதி *yāmirīpadi,* பெ.(n.) கருப்பூரம்; camphor.

யாமினி *yāmiṉi,* பெ.(n.) (முதல் இடை கடையெனும் மூன்று யாமங்களை யுடைய) இரவு; night, as consisting of three watches of four hours duration each. *"யாமினியி லெவ்வுயிர்க்கு மேற்ற துயில்" (பாரத. பதினேழாம். 169).*

யாமினியம் *yāmiṉiyam,* பெ.(n.) தெற்கு (பிங்.); south. *"யாமியந்தனி லெய்திய தூதுவர்" (குற்றா. தல. மந்தமா.85).*

யாமினீபதி *yāmiṉī-padi,* பெ.(n.) 1. திங்கள் (சங்.அக.); moon. 2. எரிக்குங் கருப்பூரம்; camphor.

யாமீரன் *yāmīraṉ,* பெ.(n.) திங்கள் (யாழ்.அக.); moon.

மறுவ. நிலவன்.

யாமீரை *yāmīrai,* பெ.(n.) இரவு; night.

யாமுகம் *yāmugam,* பெ.(n.) மனக்கவலை (யாழ்.அக.); mental worry, agony.

யாமுனம் *yāmuṉam,* பெ.(n.) அஞ்சனக்கல் (யாழ்.அக.); black bismuth.

யாமுனர் *yāmuṉar,* பெ.(n.) யமுனைத் துறைவருக்கு நாதமுனி கட்டளையால் மணக்கால் நம்பி இட்டபெயர் (அபிதாந சிந்.); based on the orders of Natamuni, Manakkal Nambi named Yamunai shrine as Yamunar.

யாமுனாசாரியர் *yāmuṉācāriyar,* பெ.(n.) ஆளவந்தார் என்னும் மாலிய ஆசிரியர்; *Aḷavandār*, a *vaisṇava acārya.*

யாமுனேட்டகம் *yāmuṉēṭṭagam,* பெ.(n.) ஈயம் (யாழ்.அக.); lead.

யாமை[1] *yāmai,* பெ.(n.) பாதுகாப்பான ஓடுள்ள ஒருயிரி–ஆமை; tortoise. *"யாமை யெடுத்து நிறுத்தற்றால்" (கலித். 94).*

க. ஆமெ.

*[ஏம் → ஏமை → யாமை (ஏம் = பாதுகாப்பு) (சு.வி.பக்.54).]*

யாமை[2] *yāmai,* பெ.(n.) இரவு (யாழ்.அக.); night.

யாமை[3] *yāmai,* பெ.(n.) செவ்வழிப்பண்; a secondary melody-type of the *cevvaḻi* class. *"செவ்வழி யாழ்த் திறத் தொன்று" (பிங்.).*

யாமை[4] *yāmai,* பெ.(n.) 1. தெற்கு (யாழ்.அக.); south. 2. இரண்டாம் நாண்மீன்; the second naksatra, part of aries. *"பரணிநாட் பிறந்தான்" (சீவக. 1813).* 3. போர்முகத்தில் ஆயிரம் யானைகளை அழித்து வென்ற வீரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட சிற்றிலக்கியவகை (இலக். வி. 839); a poem about a hero who destroyed 1000 elephants in war front. 4. இரவின் பதினைந்து முழுத்தங்களுள் ஆறாவதான இராக்கதம் (விதான.குணா.குண.73, உரை); the sixth of the 15 divisions of the night. 5. அடுப்பு (தைலவ. தைல); oven, fireplace. 6. செப்பு; jewel casket, small box. 7. சாடி; a kind of jar. 8. சிலந்திக்கூடு (ஈடு. 7, 5, 10); a spider's web. 9. ஏரிமதகு (வின்.); a sluice of a tank. 10. கூத்து (சது.); dance. 11. காவல் மேடை; watch tower. 12. மேற்றட்டு; race over a fireplace, loft under the roof of a house.

யாமை[5] *yāmai,* பெ.(n.) இல்பொருள் குறிக்கும் ஓர் வாய்பாடு (இலக். வி. 160, உரை); a term denoting that which is non-exixting, as a blanket made of turtle's hair, a mare's nest.

யாமைப்பலகை *yāmai-p-palagai,* பெ.(n.) ஓகவிருக்கைகளுக்குப் பயன் படுத்துவதும், ஆமையின் வடிவம் அமைந்ததுமான ஓகவிருக்கை வகை; a kind of wooden seat in the form of a tortoise, used for sitting in meditation. *"வில்வாதியினாற் செய்க....... கூர்மாதனம்" (சைவ. பொது. 57) (தொல். பொருள். 625).*

*[யாமை + பலகை]*

யாமைமணை *yāmai-maṇai,* பெ.(n.) சம்மணம் அல்லது கால்மேற் கால்போட்டு உட்காருகை; a yogic posture with folded legs. *"வில்வாதி யினாற் செய்க....... கூர்மாதனம்" (சைவச. பொது.57).*

மறுவ. கூர்மாதனம்.

*[யாமை + மணை]*

**யாய்** *yāy*, பெ.(n.) தாய்; mother. *"முன்றிற் போகா முதிர்வினள் யாயும்" (புறநா. 159). "தொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே" (புறநா. 83, 3). "யாயும் ஞாயும்" (குறுந்.).*

*[எம் + ஆய் – எம்மாய்→ யாய். சொற்சிதைவாகி வந்தது.]*



**யாயாரியம்** *yāyāriyam*, பெ.(n.) புங்கமரம்; a tree-Indian beech, cypness.

**யாயாவரர்** *yāyāvarar*, பெ.(n.) வழிபடுதற்குரிய மூதாதையர்; manes.

மறுவ. தென்புலத்தார், முந்தையர்.

**யார்**[1] *yār*, பெ.வி.(inter. pron.) யாவர், எவர்; who. *"நலக்குரியார் யாரெனின்" (குறள், 149).*

தெ. யவும்; க. யாரு.

*[ஏ→யா→யாவர்→யார்]*

யாவர் என்னுஞ் சொல்லின் தொகு வடிவமே யார். "வ"கரம் இடைக்குறை. இது குறித்துத் தொல்காப்பியர் கூறுவது.

*"பலரறி சொல்முன் யாவர் என்னும் பெயரிடை வகரம் கெடுதலும்........." (தொல்.எழுத்து.172).*

**யார்**[2] *yār*, பெ.(n.) செடிவகை (மலை.); bristly button weed.

**யார்**[3] *yār*, பெ.(n.) 3 அடி; one yard.

**யார்**[4] *yār*, பெ.(n.) உயர்திணைப் பன்மை அல்லது உயர்வு ஒருமை வினாச்சொல்; plural or honorfic singular pronoun of *uyartiṉai* (higher caste). *"யாஅ ரென்னும் வினாவின் கிளவி" (தொல்.சொல். 695). 'இந்தியத் தலைமை அறமன்றத் தலைவர் (நீதிபதி) யார்?"*

*[ஏ→யா→யார்]*

'ஏ'காரத்தின் திரிபே 'யா'வென்பது. உயர்திணை முப்பாலையுங் குறிக்கும். 'யார்' என்பது, உலகவழக்கில் 'ஆர்' என்று மருவும்.

உயர்திணையில் வரும் இவ்வினாச்சொல், அகநானூறு 50வது பாடல், 8வது வரியிலும்; பரிபாடல் (17:8) ஆம் பாடலிலும், நாலடியார் (119: 1) ஆவது பாடலிலும் எடுத்தாளப் பெற்றுள்ளது.

**யார்**[5] *yār*, பெ.(n.) புகழ்பெற்றவர்களின் அல்லது குறிப்பிட்ட துறையில் உள்ளவர்களின் வாழ்க்கைக் குறிப்பு, முகவரி முதலிய விளத்தங்கள் அடங்கிய நூல்; a book of men of fame or persons serving in a particular department containing biography, address the details.

**யார்பதம்** *yār-padam*, பெ.(n.) வாலுளுவை (மலை.); black-oil tree.

**யாரஞ்சம்** *yārañjam*, பெ.(n.) ஆடாதோடை; a medicinal shrub -*Adhathoda vesica.*

**யாரம்** *yāram*, பெ.(n.) துண்டிப்பூடு; a kind of medicinal herb.

**யாரள்** *yāraḷ*, வி.பெ.(inter. pron.) யாவள் பார்க்க; see *yāvaḷ*. *"பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே" (குறுந். 19).*

*[யார் + அள் = பெண்பாற் பெயரீறு.]*

யாரி[1] *yāri,* பெ.(n.) அத்தி; fig tree.

யாரி[2] *yāri,* பெ.(n.) 1. எதிரி; opponent, respondant. 2. கதவு; door. 3. கள்ளக் காதலர் (சோரநாயகர்); paramour.

யாரியாத்தி *yāri-yātti,* பெ.(n.) வானம்; sky.

யாருந்தின்னாமூலி *yāruntinnā-mūli,* பெ.(n.) 1. அங்கப்பிச்சு; the bile in the body. 2. ஒரு வகை மூலிகை; a kind of herb.

*[யாரும் + தின்னா + மூலி]*

யாரும் *yārum,* பெ.(n.) எவரும்; anybody or everybody. *"யாரு மறிவர் புகைநுட்பம்" (நாலடி, 282).*

*[யார் + உம்]*

யாரை *yārai,* பெ.(n.) இதில் 'ஐ' சாரியை; whom.

யாரோ *yārō,* பெ.(n.) இன்னார் என்று பெயர் குறிப்பிடப்பட முடியாதவர்; someone who cannot be identified. *இது யாரோ ஒருவர் பாடிய பாட்டு.*

யால்லம் *yāllam,* பெ.(n.) வானம்; sky.

யாலம்[1] *yālam,* பெ.(n.) சாலமரம்; sal, shorea robusta. *"ஆமணக்கு நட்டு ஆச்சாவாக்கலாகாது" (சீவக. 2613, உரை).*

யாலம்[2] *yālam,* பெ.(n.) 1. ஆச்சாமரம் (அக.நி.); hard wickia binata tree. 2. ஓர் மரம்; ebony tree; Ceylon ebony - Diospyros ebenaster.

மறுவ. காட்டடகு, சாலமரம்.

த. யாலம் > **Skt.** sāla; **Eng.** sal.

*[யா → யாஅல் → யால் + அம் → யாலம்]*

யாலம் என்னும் இச்சொல், "யா"–என்னும் கருமைக் கருத்து முதனிலையினின்று முகிழ்த்தது.

யா → ஆ.

ஆ + சு → ஆசு; ஆசு + ஆ → ஆசா.

வலித்தல் திரிபாக ஆசா → ஆச்சா – என்று மாறும். ஆச்சா = ஆச்சாமரம். கழக இலக்கியங்களில், யாலம் (ஆச்சாமரம்) யாமரம் எனும் பெயரில் பதிவு பெற்றுள்ளது. "யாமரக் கிளவி" (தொல்.எழுத்து.229) தொல் காப்பியத்தில் யாலம் எனப்படும் ஆச்சமரம், "யாமரம்" என்று இடம் பெற்றுள்ளது.

யாலம்[3] *yālam,* பெ.(n.) இரவு (அக.நி.); night.

*[யாமம் → யாலம்]*

யாலாவாருதம் *yālā-vārudam,* பெ.(n.) ஆதொண்டை; a thorny creeper.

யாவகம் *yāvagam,* பெ.(n.) 1. பருத்தி வகை (சங்.அக.); brazil cotton. 2. காராமணி; chowlee-bean. *"அரிகாற் பெரும்பயறு நிறைக்கு மூர" (ஐங்குறு. 47).*

யாவச்சீவம்[1] *yāvaccīvam,* வி.எ.(adv.) வாழ்நாளுள்ளவரை; as long as one's life lasts, life long till one's last breath. *"அவனுடைய யாவச்சீவமு மறிவேன்".*

யாவச்சீவம்[2] *yāvaccīvam,* வி.எ.(adv.) ஒருவரைப் பற்றிய வாணாள் வரலாறு; every thing about one's life history, everything about a person. *"யாவச்சீவம் பிறருக்குழைத்தான்"*

*[யாவம் + **Skt.** jiva → த. சீவம்]*

யாவசூகம் *yāvaśūgam,* பெ.(n.) வாற் கோதுமையின் வைக்கோலை நீற்றிச் செய்த உப்புவகை (மூ.அ); alkaline salt prepared from the ashes of burnt barley straw.

**யாவண்** *yāvaṇ*, வி.பெ.(inter.pron.) எவ்விடம்; where. *"இருள் யாவணதோ நின்னிழல் வாழ்வோர்க்கே" (புறநா.102).*

*[யா + (வ்) + அண் → யாவண்]*

"யா" – என்னும் வினாக்கேட்பு மொழியினை அடிப்படையாகக் கொண்டு முகிழ்த்த சொல்.

**யாவணது** *yāvaṇadu*, பெ.(n.) எவ் விடத்துள்ளது (புறநா.); where is it?

*[யாவண் + அது → யாவணது]*

யாவண் என்னும் வினாமொழியினின்று தோன்றிய சொல்.

**யாவத்தும்** *yāvattum*, வி.எ.(adv.) 1. சிறிதும்; even a little. *"யாவது மனங்கவல் பின்றி" (பொருந. 94).* 2. எல்லாம் (சூடா.); all, wholly, entirely. *"யானைவெண் மருப்பினாலியற்றி யாவதும்" (சீவக. 1201), "அவள் சொத்து யாவத்தும் போயிற்று".*

**யாவது** *yāvadu*, வி.பெ.(inter. pron.) 1. எது; which. *"காரியம் யாவதும் கழறுவீர்" (கந்தபு. தக்கன்மக. 6).* 2. எவ்விதம்; how. *"கொணரும் வகை யாவதென" (கம்பரா. திருவவ. 38).*

*[யா + (வ்) + அது → யாவது]*

"அது" = அஃறிணை ஒருமைச்சுட்டுப்பெயர். யாவது என்னுஞ் சொல் கழகவிலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வந்துள்ளது. அவற்றுட் சில வருமாறு:–

1) *"நினக்கியான் மறைத்தல் யாவது" (நற்.72:5)*
2) *"ஆயிடை உடன்றோர் உய்தல் யாவது" (புறம்.97:17)*
3) *"இலம்பாடு அகற்றல் யாவது" (புறம்.281:15)*

சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியில், இச்சொல்லிற்குரிய கழகவிலக்கியச் சான்றுகள் குறிக்கப்படவில்லை.

**யாவதும்** *yāvadum*, வி.எ.(adv.) 1. சிறிதும்; even a little. *"யாவது மனங்கவல் பின்றி" (பொருந. 94).* 2. எல்லாம் (சூடா.); wholly. *"யானைவெண் மருப்பினாலியற்றி யாவதும்" (சீவக. 1201).*

*[யாவது → யாவதும்]*

**யாவநாலம்** *yāva-nālam*, பெ.(n.) ஒரு வகைத் தவசம் (பதார்த்த. 1399); maize, great, millet.

**யாவநாளம்** *yāva-nāḷam*, பெ.(n.) யாவநாலம் பார்க்க; see *yāva-nālam*.

**யாவம்[1]** *yāvam*, பெ.(n.) 1. அரக்கு (இ.வ.); lac. 2. பருத்தி வகை (சங்.அக.); brazil cotton.

**யாவம்[2]** *yāvam*, பெ.(n.) யாவத்தீவம் (வின்.); the island of java.

**யாவம்[3]** *yāvam*, பெ.(n.) ஆச்சாமரம்; hard wickia binata tree.

*[யா → யாவம்.]*

**யாவர்[1]** *yāvar*, வி.பெ.(inter.pron.) 1. உயர்திணைப் பன்மையில் வரும் வினாச்சொல்; interro gative plural pronoun for higher category of names of men and gods. *'இந்த இலக்கண நூலின் உரை யாசிரியர்கள் யாவர்?'* 2. அனைவர்; me and all, everyone. *'நேர்ச்சியில் இறந்தவர்களின் குடும்பத்தினர் கதறியழுத காட்சி யாவர் உள்ளத்தையும் உருக்கியது'.*

*[யா + (வ்) + அர் → யாவர்]*

'அர்' – பலர்பாலீறு.

யாவர்[2] *yāvar,* வி.பெ.(inter. pron.) எவர்; who, what persons. *"........... யாவர் என்னும் ஆவயின் மூன்றொடு" (தொல்.சொல்.647), "யாவர்வாய் திறக்க வல்லார்" (கம்பரா. பூக்கொய். 6), "பலரறி சொல்முன் யாவர் என்னும் பெயரிடை" (தொல்.எழுத்து.172).*

தெ. எவரு; க. யார்; ம. யாவர்.

*[ஏ → யா + அர் – யாவர்]*

"அர்" = பலர்பாலீறு. உயர்திணைப் பெயருள் ஒன்றாகத் தொல்காப்பியர் கூறியுள்ளார். *"யாவர்.............. என்னும் ஆவயின் மூன்றொடு ....... பாலறி வந்த உயர்திணைப் பெயரே" (தொல்.647).*

யாவரும் *yāvarum,* பெ.(n.) எவரும்; each and every person, all persons. *"யாவருமறிவரியாய் எமக்கெளியாய்" (திருவாச. 20 : 3).*

*[யாவர் + உம். 'உம்' முற்றும்மை.]*

யாவள் *yāvaḷ,* வி.பெ.(inter. pron.) எவள்; who, which woman. *"யாவளோ வெம் மறையாதீமே" (ஐங்குறு.370), "யாவள்....... என்னும் ஆவயின் மூன்றொடு" (தொல். 647).*

க. யாவளு.

*[ஏ→யா. "அள்" = பெண்பாற் பெயரீறு.]*

யாவன் *yāvaṉ,* வி.பெ.(inter. pron.) எவன்; who, which man. *"யாவனோ வொருவ னென்றாள்" (கம்பரா.உலாவியற். 11).*

க. யாவநு

*[ஏ→யா + அன்]*

"அன்" = ஆண்பாற் பெயரீறு. தொல்காப்பியர் யாவன் என்னுமிச் சொல்லைப் பாலினைப் புலப்படுத்தும் உயர்திணைப் பெயருள் ஒன்றாகக் குறித்துள்ளார். *"யாவன்............ என்னும் ஆவயின் மூன்றொடு ......... அப்பதினைந்தும் பால்அறி வந்த உயர்திணைப் பெயரே" (தொல்.647).*

யாவனம் *yāvaṉam,* பெ.(n.) நிலவரிகை; a land cess or tax.

*[யவனம் → யாவனம்]*

யாவும் *yāvum,* பெ.(n.) எல்லாம் (சூடா.); all, wholeness, entirely, each and everything.

க. யாவவு.

*[யா + உம்]*

யாவை *yāvai,* வி.பெ.(inter. pron.) எவை; which things, what. *"யாதுயா யாவை என்னும் பெயரும்" (தொல்.சொல். 652), "புகழுந் தலைவன் யார் நூற்பொருள் யாவை" (மணிமே.27:168).*

*[யா + அவை → யாஅவை → யாவை]*

"யா" என்னும் வினாவடி அஃறிணைப் பன்மை வினாப் பெயராக செய்யுளில் வழங்கும். "அவை" = அஃறிணைப் படர்க்கைப் பன்மைச் சுட்டுப்பெயர் (தொல்.சொல்.167.சேனா, உரை).

யாவையும் *yāvai-y-um,* பெ.(n.) எல்லாம் (சூடா.); all, wholeness, entirely. *"யாவையும் பாடிக் கோவையைப் பாடு" (பழ.).*

*[யாவை + உம். "உம்" = முற்றும்மை.]*

யாழ் *yāḻ,* பெ.(n.) 1. பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டி யாழ் என்ற நால்வகை வீணைக்கருவி (சிலப். 3, 26) (பிங்.); stringed musical instruments, which are four kinds viz., *pēri-yāḻ, cagōḍa-yāḻ,*

*magara-yāḻ, ceṅkōṭṭi-yāḻ*. 2. ஆடவை (மிதுன) ராசி (பிங்.); gemini of the zodiac. 3. அசுவதி (பிங்.), ஒரு நட்சத்திரம் (திவா); name of the first nakstra, part of aries. 4. மூதிரை (திருவாதிரை) (சூடா.); the 6th naksatra, part of orion. 5. பண் (இறை. 1, உரை); (mus.) melody-type. 6. ஆந்தை (அரு.நி.); owl.

பண்டைத் தமிழர், தமிழகத்தில் தெரிந்தெடுத்து அமைத்த இன்னியங்களுள், நரம்புக் கருவியாகிய யாழ் மிகவும் சிறப்புடையது. இசை நுணுக்கங்களையும், பல்வகைப் பண்ணமைதிகளையும் ஓர்ந்துணர்ந்தோர் யாழ் என்னும் பொருண்மையில், நரம்பமைதிகட்கு ஏற்றவாறு, அமைத்துள்ள மறுவடிவங்கள் வருமாறு :–

மறுவ. நரம்பு, நரம்பின்மறை, மறை, நரம்புக் கருவி.

*[ஏ→ஏழ்→யாழ் (சு.வி.பக்.53)]*

மேலே குறித்துள்ள பெயர்களனைத்தும் யாழைக் குறிக்கும் பொதுப்பெயர்களாகும். மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரால், "பாணர் கைவழி மதிப்புரை (மறுப்பு)" என்னும் கட்டுரையில் எடுத்தாளப் பெற்றவை.

கழகத்தமிழ்ப் பனுவல்களிலும், அதற்கு முன்னர் இயற்றப்பட்ட பாடல்கள் பலவற்றிலும் இடம்பெற்றுள்ள, மூவகை யாழ் பற்றிய குறிப்புகள் வருமாறு :– 1. வில்யாழ், 2. சீறியாழ், 3. பேரியாழ்.

வரலாற்றிற்கு எட்டாத தொன்முது காலத்தே அமைக்கப்பெற்ற நரம்புக்கருவியே வில்யாழாகும். வில்லின் நரம்பினை (நாணினை) நெருடுங்கால் விளைந்த இன்னிசையொலியே பல்வகை யாழ்க்கருவிகளின் வளர்ச்சிக்கு அடிகோலின என்று இசை வல்லுநர் இயம்புவர். இது பற்றி மொழிஞாயிறு மொழிவது :–

"நரப்புக்கருவி வில்நாண் ஒலியிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டதாகத் தெரிதலால், வில்யாழே முதன்முதல் தோன்றிய யாழ்வகையாக இருத்தல் வேண்டும்"(மறுப்புரை மாண்பு.பக்.121).

முற்காலத்தில் வாழ்ந்த இசைப்புலவர்கள், துறைக்கருவியாகிய வேய்ங்குழலையும், நரம்புக்கருவியாகிய யாழையும் துணைக்கொண்டே குரல் முதலிய ஏழிசைகளையும், குற்றமற ஆராய்ந்து, பெரும்பண்களை அமைத்துள்ளனர். இப்பண்களின் வழிப்பிறக்கும் திறங்களை ஓர்ந்துணர்ந்து இசை நுணுக்கங்களை இனிமை பொருந்துமாறு இசைத்து வகைப்படுத்தியுள்ளனர்.

குழல், யாழ் என்னுமிக் கருவிகள், கேட்பவர் பிணிக்குந் தன்மையன. அனைவர்தம் மனத்திற்கும் மட்டற்ற மகிழ்வூட்டுவன; சிந்தைக்கும், செவிப்புலனுக்கும் சீரிய இசைத்திறத்தை வாரி வழங்குவதால்தான் வள்ளுவப் பெருந்தகையார்,

*"குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர்"* என்று யாழிசையோடு, குழலிசையின் சிறப்பினையும் சேர்த்துக் கூறியுள்ளார்.

முற்காலத்தில், யாழ்க் கருவியை நிலைக்களனாகக் கொண்டே பெரும்பண்களும், அவற்றின் திறங்களும் தெள்ளிதிற் தெரிந்து வகைப்படுத்தப்பட்டன. யாழ் நரம்பின் துணைகொண்டு, நுணுகி ஆராய்ந்து கண்ட பண் வகைகளைத் தொல்காப்பியர், "யாழின் பகுதி" (தொல்.அகம்.15) என்றும், அப் பண்களின் பாங்கினையும், இயல்புகளையும் திறம்படத் தெரிவிக்கும் இசை நூலை, "நரம்பின் மறை" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மாந்தரிடையே இன்று பயன்பாட்டிலுள்ள அனைத்து நரம்புக் கருவிகளுக்கும் பிறப்பிடம், யாழே யாகும். முதல் மூலநரப்புக் கருவியாகிய

யாழனின்றே, நரம்பிசைக் கருவிகள் அனைத்தும்தோன்றின என்பது பாவாணர்தம் கருத்தாகும். அதனால்தான் மொழிஞாயிறு "யாழ் என்னும் தமிழ்ப்பெயர், பண்டைக்காலந் தொட்டு, தமிழ் நாட்டில் மட்டுமின்றி, ஞாலமெங்கனும், முக்காலும் வழங்கும், நரப்புக் கருவி கட்கெல்லாம் பொதுப்பெயர்" என்று குறித்துள்ளார். மேலும் அவர் கூறுங்கால், "ஒரு நரம்புள்ள சுரையாழ் முதல் ஆயிரம் நரம்புள்ள, ஆதியாழ் வரை எல்லா நரப்புக் கருவிகளும், கழக இலக்கியப் பனுவல்களிலும், அதற்கு முன்னர் இயற்றப்பட்ட பாடல்கள் பலவற்றிலும் யாழ் என்றே குறிக்கப்பட்டுள்ளன. யாழ் என்னுஞ் சொல்லைச் சிறப்புப் பெயராகக் கொண்ட எந்தவொரு தனிக்கருவியும் கடைச் சங்க காலத்திருந்ததில்லை. அன்றிருந்த பல்வகை யாழிற் தலைசிறந்தது, செங்கோட்டு யாழேயாகும். வீணை என்பது, செங்கோட்டியாழையே குறித்து வழங்கிற்று.

யாழைக் குறித்து வழங்கிய பல்வகைப் பெயர்களுள், வீணையும் ஒன்று. யாழ் வேறு, வீணை வேறு என்பது, இருவகையில் தவறான திரிபுக் கொள்கை என்றும் அறிந்து கொள்க". யாழ் என்னும் தென்சொல், பிற்காலத்து வழக்கற்றதினாலேயே, முற்காலத்தில் சுரையாழ் என வழங்கியது.

யாழ், வீணை என்னும் இரு சொற்களும் ஒருபொருட் கிளவியாய், ஒரே கருவியையே குறிக்கும். இசை நுணுக்கமறியாதோரே யாழ்வேறு, வீணை வேறு என்பர்.

பண்ணிசைத்தற்குரிய பண்டை யாழ் வகைகளுள், செங்கோட்டியாழ் ஒன்றே, இன்று சிறிது, உருக்கரந்தும், பெயர் மாறியும் வழங்கி வருகின்றது. நரம்பு அல்லது கம்பி கொண்ட இசைக் கருவிகளெல்லாம், தமிழில் யாழ் என்றே பெயர் பெறுதற்குரியன (மறுப்புரை, மாண்பு. பக்.122).

யாழ் என்பது, ஒரு தனிப்பட்ட கருவியின் சிறப்புப் பெயராகாது. அது தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி என்னும், நால்வகைக் கருவியுள், நரப்புக் கருவியை யெல்லாம், பொதுப்படக் குறிக்கும் பொதுப் பெயராகும். இப்பாகுபாட்டின்படி இற்றை வீணையும் ஒருவகை யாழாயிருக்க அதை மட்டும், எங்ஙனம் வேறு பிரித்துக் கூற முடியும்.

பண்ணைக் குறித்த யாழ் என்னும் சொல் 'ஏழ்' என்பதின் திரிபு. யாழ் என்னும் நரம்புக் கருவி. தோன்று முன்னமே குறிஞ்சியாழ், பாலையாழ் எனப் பண்ணின் பெயராக யாழ் என்னும் சொல் வழங்கியது.

கருவியிலாயினும் தொண்டையிலாயினும் இசையை எழுப்புதல், எழூஉதல் எனப்படும். எழுவது அல்லது எழுப்பப்படுவது ஏழ். ஏழ் = இசை. இசைச் சுரங்கள் ஏழு. 'ஏழிசைச் சூழல்', 'ஏழிசை வல்லபி' என்னும் வழக்குகளை நோக்குக. 'ஏழ்' என்னும் இசையின் பெயர் அதன் சுரத்தொகையான ஏழாம் எண்ணைக் குறிக்கக் கொள்ளப்பட்டது.

நரம்புகளாற் கட்டப்பெற்றதும், மரம் (தந்தம்) மருப்பு, தோல் போன்றவற்றால் நன்கு பொருத்தப் பெற்றதுமான இசைக்கருவி.

அடியார்க்கு நல்லார் யாழ்பற்றிக் கூறுவது :– யாழ் நால்வகைப்படும்; அவை பேரியாழ், மகரயாழ், சகோட யாழ், செங்கோட்டி யாழ் என்பன. இந்நால்வகை யாழிற்கும் நரம்பு கொள்ளுமிடத்துப் பேரியாழிற்கு இருபத்தொன்றும், மகரயாழிற்குப் பத்தொன்பதும் சகோட யாழிற்குப் பதினாறும், செங்கோட்டி யாழிற்கு ஏழும் கொள்ளப்படும் (அடியார்க்கு நல்லார். சிலம்பு.3:26).

**வில்யாழும் – சிறப்புகளும் :–** பண்டைத் தமிழ் மாந்தர்களால் மிகப் பழங்காலத்தில் அமைக்கப்பெற்ற நரப்புக் கருவியே, வில்யாழாகும்.

யாழுருவங்கள் அனைத்திற்கும் வில்யாழே மூலமாகும். தேவநேயர்தம் கருத்தும் இஃதேயாகும்.

இதனையடியொற்றியே சீறியாழ், பேரியாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் முதலாக ஆயிரம் நரம்புடைய பெருங்கலம் என்னும் யாழ் ஈறாக, எத்தனையோ யாழமைப்புகள் நரம்பிசை வல்லுநர்களால் நன்கு இசையறிவிற் தேர்ந்து தெளிந்துணர்ந்து வடிவமைக்கப்பட்டன. இடையனொருவன், உள்ளே துளையுடைய குமிழ மரக்கொம்புகளை வில்லாக வளைத்து, மரல்நார்க் கயிற்றினை நரம்பாகக் கட்டித் தானே செய்து கொண்ட வில்யாழில், குறிஞ்சிப்பண்ணை இசைத்து இன்புற்ற நிகழ்வினைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார், தாம் பாடிய பெரும்பாணாற்றுப் படையில் பேசுவது வருமாறு:-

*ஞெலிகோற் கொண்ட பெருவிரல் ஞெகிழிச்*
*செந்தீத் தோட்ட கிருந்துளைக் குழலின்*
*இன்றீம் பாலை முனையிற் குமிழின்*
*புழற் கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பு*
*வில்யா ழிசைக்கும் விரலொறி குறிஞ்சி*
*(பெரும்பாண்.178-182).*

வில்யாழின் இசையானது, வண்டுகளின் இன்னொலியை ஒத்தது. அண்மையிலுள்ளோர் செவிக்கே புலப்படும் தன்மைத்து. வில்லாக வளைக்கப் பெற்ற குமிழங் கொம்பும், அக்கொம்பினுள்ளே அமைக்கப்பட்ட சிறுதுளையும், நரம்பின் ஒலியை, ஒரு குறிப்பிட்ட அளவே பெருகச் செய்தன.

**யாழ் அமைப்பு :-** வில்யாழின் இன்னிசைப் பெருக்கினை இனிதுணர்ந்த இசைவல்லுநரும், இசைக் கருவியாளரும், பின்வருமாறு வில்யாழினை வடிவமைத்தனர். முதற்கண் நல்ல விளை நிலத்தில் விளைந்து நன்கு பருத்து முற்றியதும், மாசுமருவற்றதும், வண்டுகள் துளைக்காத தன்மையுள்ளதுமான குமிழ மரத்தைத் தெரிவு செய்தனர். பின்னர் அம்மரத்தினை வேண்டிய அளவுக்குத் துண்டாக அறுத்தனர். அதன்பின் அறுத்த மரத்தினொரு பகுதியை, உள்ளே குடைந்து வெற்றிடமாக்கினர். மரத்துண்டின் மேற்பரப்பினைத் தோலினால் மூடினர். குமிழ மரத்தில் தோல் நன்கு இறுகிப் பொருந்தும்படி ஓரங்களில் சிறிய அணிகளை முடுக்கிப் பத்தர் என்னும் யாழுறுப்பினை அமைத்தனர். பின்பு, பத்தரிலும் கோட்டிலும் நன்கு பொருந்தும்படி, நீளத்தாற் சிறியனவும், பெரியனவும் அகிய நரம்புகளை அளவறிந்து இணைத்துக் கட்டி, யாழினை வடிவமைத்தனர். இவ்வாறு வடிவமைத்த யாழில், முதறக்கண் பண்டைக்காலத்தே, மாட்டின் நரம்புகளைத் தெரிவு செய்து, இசை நரம்புகளாக அமைத்தனர்.

காலப்போக்கில் மாட்டின் நரம்புகள் மழையாலும், வெயிலாலும், நெகிழ்ந்தும், இறுகியும், அடிக்கடி குரலோசையை (சுருதியை) வேறுபடுத்திக் காட்டியதால், குழலோசையின் துணையுடன், யாழ் நரம்பிற்கு இசைகூட்டி, மகிழ்ந்தனர்.



**யாழ்இலக்கணம்** *yāḻ-ilakkaṇam,* பெ.(n.) யாழ் செய்யும் அல்லது யாழினை இசைக்கும் முறையினைக் கூறும் நூல்; a treatise on making *yāḻ*..

*[யாழ் + இலக்கணம்]*

**யாழ்க்கரணம்** *yāḻ-k-karaṇam,* பெ.(n.) யாழ்வாசிப்பிற்குரிய செய்கை; movements of the hands in playing the lute. *"பண்ணியாழ்க் கரணமும்" (மணிமே. 2, 20).*

*[யாழ் + கரு→கரணம் (செய்கை)]*

த. கரணம் > **Skt.** karaṇa.

**யாழ்க்குமிழ்** *yāḻ-k-kumiḻ,*பெ.(n.) வில்யாழ் உருவாக்கத்திற்குப் பயன்படும் குமிழமரம்; *"kumiḻa"* tree used for making *vil-yāḻ.*

*[யாழ் + குமிழ்]*

**யாழ்செய்–தல்** *yāḻ-šey-,*1 செ.கு.வி.(v.i.) பாடுதல்; to sing, to tune music. *"தேனின மலங்கலுண் டியாழ் செயும்" (சீவக. 1012).*

*[யாழ் + செய்–,]*

**யாழ்த்தண்டு** *yāḻ-t-taṇḍu,*பெ.(n.) வீணா தண்டம்; neck of the lute.

*[யாழ் + தண்டு]*

**யாழ்த்திறம்** *yāḻ-t-tiṟam,* பெ.(n.) 1. ஐந்து சுரமுள்ள இசை (சிலப்.4, 106, உரை); a secondary melody-type, pentatonic. 2. பண் (பிங்.); (mus.) primary melody-type.

*[யாழ் + திறம்]*

திறம் = ஐந்து சுரங்களைக் கொண்ட பண்வகை.

**யாழ்தரித்தாள்** *yāḻ-tarittāḷ,* பெ.(n.) மலை மகள் (நாமதீப.22); *pārvadi.*

*[யாழ் + **Skt.** தரித்தாள்]*

**யாழ்நரம்பு** *yāḻ-narambu,* பெ.(n.) தந்திரி; a string of lute.

மறுவ. யாழ்நார்

*[யாழ் + நரம்பு]*

யாழ் உறுப்புகளில் மிகவும் இன்றியமையாத மூலவுறுப்பு. யாழிசை மிகநுட்பமாக வெளிப்படுதற்கு, யாழ் நரம்பினை மிகத் திட்பமாக முறுக்கேற்ற வேண்டும். நன்கு முறுக்கேற்றிய, பிசிறற்ற மிக மெல்லிய நரம்பினால்தான் கேட்பவர் உளங்கொளத் தக்கவாறு பண்களை மிக நுணுக்கமாக இசைக்க இயலுமென்று இசை வல்லுநர் கூறுவர்.



**யாழ்நார்** *yāḻ-nār,*பெ.(n.) யாழ்நரம்பு பார்க்க; see *yāḻ-narambu.*

*[யாழ் + நார்]*

**யாழ்ப்பத்தர்** *yāḻ-p-pattar,*பெ.(n.) யாழ் உறுப்புகளுள் ஒன்று; a component of the lute.

**யாழ்ப்பாணநாயனார்** *yāḻppāṇa-nāyaṉār,* பெ.(n.) ஈழத்தரசனிடமிருந்து யாழ்ப்பாண நாட்டைப் பெற்றுத் தமிழர்களைக் குடியேற்றியவராகச் சொல்லப்படுபவரும் கட்புலனிழந்தவருமான சோழநாட்டு இசைப் புலவர்; a blind minstrel of the *Chōḻa* country, who is said to have been favoured by a singhalese king and obtaining possession of Jaffna, settled a colony of Tamil people.

**யாழ்ப்பாணம்** *yāḻppāṇam,* பெ.(n.) இலங்கையின் வடபாலுள்ளதும், தமிழராற் குடியேற்றம் பெற்றதுமான நாடு; Jaffna, a province north of ceylon, inhabited by a colony of Tamils.

தமிழர் மிகுதியாயுள்ள இவ்விடம் இலங்கையின் வட பாற்கண் அமைந்துள்ளது. இங்கு காங்கேசன் துறை, ஊர்க்காவற்றுறை எனும் இருதுறைமுகங்கள் காணப்படுகின்றன. யாழ்ப்பாணம் நாகதீவம், எருமை முல்லைத் தீவு என்ற இரு தீவுகளாக இருந்து பின் தீவகற்பமாக மாறியது. புவியியல் மாற்றத்தால் இப்பகுதிகள் சேர்ந்து யாழ்ப்பாணம் உண்டாயிற்று. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் நாகர்கள் வாழ்ந்தனர். நாகமன்னன் இதை ஆண்டான். மணிமேகலையில் சொல்லப்படும் மணிபல்லவமும் நாகதீவமும் ஒன்றே எனக் கருதுவாருமுளர்.

தென்னிந்திய மக்களுடன் இனத்தாலும் பண்பாட்டாலும் தொடர்புள்ள மக்கள் வாழ்ந்தமையை புவியியல், மானிடவியல், வரலாறு, இலக்கியம், மொழி முதலியன சான்று பகர்கின்றன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழ் அங்குப் பேச்சு மொழியாக வழக்கூன்றியிருந்தது.

சேர நாட்டின் குருடனான பாணனொருவன் யாழுடன் சென்று இலங்கை அரசனைப் போற்றிப் பாடினமையால் அவ்வரசன் மகிழ்ந்து, இலங்கையின் வடபகுதியைப் பரிசாகத் தந்ததன் நினைவாக 'யாழ்ப்பாணம்' என்ற பெயரிடப்பட்டதாகவொரு கருத்துமுண்டு.

ஐரோப்பியரின் வருகைக்குப்பின் 'ஜாப்னா' (jaffna) என மருவிற்று. யாழ்ப்பாணம் கி.மு.145லிருந்து தமிழ் மன்னரின் ஆட்சியின் கீழிருந்தது. இக்காலத்தில் தமிழர்களும் நாகர்களும் கலப்புமணம் கொண்டனர். கி.பி.431இல் சீனப் பயணி பாகியான், இலங்கை வந்து சில குறிப்புகளெடுத்துக் கொண்டார்.

9, 10-ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாணத்தை ஆண்ட மன்னர்களுக்கு சிங்கை ஆரிய மன்னர்களென்று பெயர்.

டச்சுக்காரர் 1658-இல் போர்ச்சுக்கீசியரை வென்று 1795 வரை ஆண்டனர். டச்சு மொழி யாழ்ப்பாணப் பேச்சுத் தமிழில் கலந்தது. சான்றாக கதிரை (நாற்காலி), அலவாங்கு (கடப்பாரை), கந்தோர் (அலுவலகம்), வெந்தீசு (ஏலவிற்பனை) முதலிய சொற்கள் இன்றும் வழங்கப்படுகின்றன.

1795ஆம் ஆண்டு, யாழ்ப்பாணம் ஆங்கிலேயரின் ஆளுகைக்குட்பட்டு, 1948ம் ஆண்டு இலங்கை முழுவதும் விடுதலை அடைந்தது.

**யாழ்ப்பாணர்** *yāḻ-p-pāṇar,* பெ.(n.) யாழ்வாசினையில் வல்ல பாணர் வகையார் (பு.வெ.9, 19, கொளு); an ancient caste of lute-players of excellence.

*[யாழ் + பாணர்]*

**யாழ்ப்பாணி** *yāḻppāṇi,* பெ.(n.) யாழ்ப்பாண நாட்டான்; citizen native of jaffna.

*[யாழ்ப்பாணம்→யாழ்ப்பாணி]*

**யாழ்பதங்காளி** *yāḻ-padaṅgāḷi,* பெ.(n.) செவ்வழியாழ்த் திறத்தொன்று (பிங்.); a secondary melody-type of the *cevvaḻi* class.

*[யாழ் + பதங்காளி]*

**யாழ்முரி** *yāḻ-muri,* பெ.(n.) அருட்டொண்டர் திருஞான சம்பந்தரால் யாழில் அடங்காத இசையை யுடையதாகப் பாடப்பட்ட பண்வகை; a tune sung by saint *Tiru-ñāṉa-šambandar,* as one which could not be played on the *yāḻ* or lute.

*[யாழ் + முரி]*

திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வேண்டுகோளை யேற்றுத் திருஞான சம்பந்தப் பெருமானால் பாடப்பட்ட பண்.

யாழ்முரிப் பண்ணிலமைந்த பாடல் வருமாறு:-

*மாதர்மடப்பிடியும் மடஅன்னமும் அன்னதோர்*
*நடையுடைம் மலைமகள் துணையென மகிழ்வர்*
*பூதஇனப்படை நின்றிசை பாடவும் ஆடுவர்*
*அவர்படர் சடைந் நெடு முடியதோர் புனலர்*
*வேதமொடு ஏழிசைபாடுவ ராழ்கடல் வெண்டிரை*
*யிரைந் நுனிரகரை பொருதுவிம்மி நின்றயவே*
*தாதவிழ்புன்னை தயங்கு மலர்ச்சிறை வண்டறை*
*எழில்பொழில் குயில்பயில் தருமபுரம் பதியே*
*(திருஞானசம்பந்தர்.தேவாரம்)*

மிடற்றில் இசைக்கவியலாவாறு, இறைவனின் இறும்பூதுச் செயலாக யாழ்முரிப்பண் திகழ்ந்த தன்மையினைச் சேக்கிழார் வழிநின்று மொழிஞாயிறு கூறுவது:-

திருநீலகண்ட யாழ்ப்பாணர், 'யாழ்முரிப் பண்ணை'த் தம் யாழிலிட்டுக் காட்ட முடியாமைக்கு, அதாவது, அவரது அளவிறந்த சிவபக்தியே காரணம். தருமபுரத்திலுள்ள அவருடைய உறவினர், அவர் திருஞானசம்பந்தரின் திருப்பதிக இசையை யாழ்ப்படுத்தி வந்த திறனைப் புகழ்ந்தபோது, அவர் அதற்கு மிக வருந்தி, யாழிலிட்டுக் காட்ட முடியாதவாற திருப்பதிகம் பாடும்படி தாமே திருஞானசம்பந்தரை வேண்டினார். இதனால், யாழிலிட்டுக் காட்ட முடியாத பெருமை, திருப்பதிக இசைக்கிருத்தல் வேண்டுமென்று அவர் பேரவாக் கொண்டமை புலனாகும். இத்தகைப் பக்தி நோக்குடையவர் எங்ஙனம் தம் திறமையை அன்று காட்டியிருக்க முடியும்? அவர் காட்ட முயன்றிருப்பினும், அவரது அச்ச மனப்பான்மை எங்ஙனம் இடந்தந்திருக்கும்?

இரண்டாவது, யாழில் மட்டுமின்றி வேறெவர் மிடற்றிலும் இசைக்க முடியாதவாறு, இறைவனருளால் இறும்பூதுச் செயலாக யாழ்முரிப் பண்ணைத் திருஞானசம்பந்தர் பாடினாரென்று, சேக்கிழார் மிகத் தெளிவாகக் கூறுகின்றார். வேறெவர் மிடற்றிற்கும் இயலாத இசை யாழுக்கு மட்டும் எங்ஙனம் இயன்றிருக்கும்? இதனால் யாழ்முரிப் பண்ணைப் பாணர் யாழிலிட்டுக் காட்ட முடியாமை அவர் யாழ் வில்யா ழொத்தது என்னும் போலி யூகிப்பிற்கேதுவாகாமை பெறப்படும்.

மேற்காட்டிய காரணங்களின் உண்மையைப் படிப்போர் அறிதற்கு, அந்நிகழ்ச்சியைக் கூறும் பெரிய புராணச் செய்யுள்களை ஈண்டுக் காட்டுகின்றேன்:-

*"தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமாம்*
*அதனாற் சார*
*வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண்*
*டடிவணங்கி வாழ்த்தக் கண்டு*
*பெருமையுடைப் பெரும்பாணர் அவர்க்குரைப்பார்*
*பிள்ளையார் அருளிச் செய்த*
*அருமையுடைப் பதிகந்தாம் யாழினாற் பயிற்றும்பே*
*றருளிச் செய்தார்"*

*"கிளைஞருமற் றதுகேட்டுக் கெழுவுதிருப் பதிகத்திற்*
*கிளர்ந்த ஓசை*
*அளவுபெறக் கருவியில்நீர் அமைத்தியற்று*
*மதனாலே அகில மெல்லாம்*
*வளரஇசை நிகழ்வதென விளம்புதலும் வளம்புகலி*
*மன்னர் பாதம்*
*உளம்நடுங்கிப் பணிந்துதிரு நீலகண்டப்*
*பெரும்பாணர் உணர்த்து கின்றார்"*

*"அலகில்திருப் பதிகஇசை அளவுபடா*
*வகைஇவர்கள்*
*உலகிலுளோ ருந்தெளிந்தங் குண்மையினை*
*அறிந்துய்ய உணர்த்தும் பண்பால்*

*மலர்புகழுந் திருப்பதிகம் பாடியரு ளப்பெற்றால்*
*பண்பு நீடி*
*இலகுமிசை யாழின்கண் அடங்காமை*
*யான்காட்டப் பெறுவன் என்றார்"*

*"வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன்*
*தொழுதுதிருப் பதிகத் துண்மை*
*பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும்*
*நிலத்துநூல் புகன்ற பேத*
*நாதஇசை முயற்சிகளால் அடங்காத வகைகாட்ட*
*நாட்டு கின்றார்*
*மாதர்மடப் பிடிபாடி வணங்கினார் வானவரும்*
*வணங்கி ஏத்த"*

*"வண்புகலி வேதியனார் மாதர்மடப் பிடிஎடுத்து*
*வனப்பிற் பாடிப்*
*பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த*
*அணைந்துபெரும் பாண னார்தாம்*
*நண்புடையாழ்க் கருவியினால் முன்புபோல்*
*கைக்கொண்டு நடத்தப் புக்கார்க்*
*கெண்பெருகும் அப்பதிகத் திசைநரம்பில்*
*இடஅடங்கிற் றில்லை யன்றே"*

திருஞானசம்பந்தரினும் முதியரான திருநாவுக்கரசர், 'மாசில் வீணையும்' என்று பாடியிருத்தலானும், திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ்முரிப் பண்ணை இசைத்தற் கியலாமை பற்றித் தம் யாழை உடைத்தற் கெழுந்தபோது, அதைத் தடுத்த சம்பந்தர் 'யாழை விட்டுவிட்டு வீணையை மேற்கொள்ளும்' என்னாது, 'திருப்பதிக இசையை இயன்றவரை இயக்கும்' என்றமையானும்; பாணரும் வேறொரு நரப்புக் கருவியை மேற்கொள்ளாமை யானும் அவர் கையாண்டது வீணையொத்த கருவியே யன்றி வேறென்று என்பது துணியப்படும் (மறுப்புரை மாண்பு.பக்.120) பாணர்கைவழி மதிப்புரை (மறுப்பு)).

**யாழ்முரிநாதர்** *yāḻ-muri-nādar,* பெ.(n.) தருமபுரத்தில் எழுந்தருளிய இறைவன் திருப்பெயர் (அபிதாநகோ.); name of a god shrined at Dharuma-puram.

*[யாழ்முரி + **Skt.** நாதர்]*

**யாழ்முரிநாதேசுவரர்** *yaḻmuri nādēśu varar,* பெ.(n.) திருத்தருமபுரத்திலே கோயில் கொண்டிருக்கும் இறைவன் பெயர்; the god shrined at Tiru-t-taruma-puram.

**யாழ்முனி** *yāḻ-muṉi,* பெ.(n.) மூவுலகுலாவி (நாரதர்); sage *Nāradar,* who is personefied always with lute playing.

*[யாழ் + முனி]*

**யாழ்முனிவன்** *yāḻ-muṉivaṉ,* பெ.(n.) மூவுலகுலாவி (நாரதர்); a sage, *Nāradar.* *"பாடல் யாழ் முனிவன்" (பாகவத. 10, ஸ்ரீ நாரதர். 7).*

*[யாழ் + முனிவன்]*

**யாழ்வகை** *yāḻ-vagai,* பெ.(n.) 1. ஐந்து நிலத்திற்குரிய யாழ் எனும் இசைக் கருவி; a turning lute intended for all 5 classification or categories of lands. 2. பண்டைக்காலத்தில் வழக்கிலிருந்த ஏழுவகை யாழ்களான வில்யாழ், பேரியாழ் (பெருங்கலம்), சீறியாழ், செங்கோட்டியாழ், ஆதியாழ் (பெருங்களம்), மகரயாழ், சகோட யாழ்; the seven kinds of lute (*yāḻ*) in ancient days viz., *vil-yāḻ, pēriyāḻ (peruṅgaḷam), śīṟiyāḻ, śeṅgōṭṭi-yāḻ, ādi-yāḻ (peruṅgalam), magara - yāḻ, śagōḍa-yāḻ.*

*[யாழ் + வகை]*

யாழ்வகைகளாவன:-

1. வில்யாழ்:- வில்யாழின் அமைப்பும் சிறப்பும் யாழ் என்னும் சொல் விளக்கத்திற் காண்க.

2. பேரியாழின் (பெருங்கலம்) அமைப்பும் சிறப்பும்:-

முற்கால மக்கள் உருவத்திலும் பெரியவரா யிருந்ததனால், அவர் கையாண்ட கருவிகளெல்லாம் பெரியனவாகவேயிருந்தன. மக்கள் உருவம் வரவரச் சிறுத்து வருவதனால், அவர்கள் கையாளும் பலவகைக் கருவிகளும் சிறுத்து வருகின்றன. பேரியாழ் மிகப் பழையதாதலின், அது முது பழங்கால மக்கட்கேற்றபடி மிகப் பெரியதாயிருந்திருக்கின்றது. அது நால்வகை யாழில் முதற் குறிக்கப் பெறுவதற்கு அதன் பழைமையே காரணம். கடைச் சங்க காலத்திலும் அது வழங்கினதாகக் கூறப்படினும், அது உருவத்திற் பெரியவர்க்கே உரியதாய் அருகின வழக்காகவே வழங்கினதாகத் தெரிகின்றது.

அதிர்வு நரம்புகளால் இசையைப் பெருக்கலாம் என்ற எண்ணம் உண்டானபின், பெருங்கலம் என்னும்பேரியாழில் முதன்முதலாக அதிர்வு நரம்புகள் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆகவே, அவ் யாழில் பெரும் பத்தர் முந்தினதும் அதிர்வு நரம்பு பிந்தியதுமாகும். தலைச்சங்க காலத்து மக்கள் தம் உடற் பருமனுக்கேற்றபடி இயல்பாகவே பெரும் பத்தர் அமைத்திருத்தல் வேண்டும். பிற்காலத்துச் சிற்றுருவ மக்களின் சீரியாழ்களோடு ஒப்பு நோக்கிய பின்னரே, அதற்குப் பெருங்கலம் அல்லது பேரியாழ் என்று பெருமைச் சொல் அடைகொடுத்துப் பின்னோர் பெயரிட்டதாகத் தெரிகின்றது. முதற்காலத்தில் அது அளவான கருவியாகவே கருதப்பட்டிருக்கலாம். பழங்காலத்தில் பெரு வழக்காக வழங்கியதாக நூல்களிற் கூறப்படும் மத்தளம், அதன் பருமை காரணமாக இன்று பயன்படுத்தப்படாமல் சில சிற்றூர்களிற் பதுங்கிக் கிடக்கின்றது. அது சிறுவடிவான மதங்கம் (மிருதங்கம்) இன்று பெருவழக்காயுள்ளது. இங்ஙனமே, பேரியாழ், சீறியாழ் நிலைமைகளும் கடைச்சங்க காலத்தில் இருந்திருத்தல் வேண்டும்.

பேரியாழினும் பேரியாழான ஆதியாழ் (பெருங்கலம்) வேறு; நாரதப் பேரியாழ் என்பது வேறு.

"பெருங்கலமாவது பேரியாழ்; அது கோட்டினதளவு பன்னிரு சாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிரு சாணும், இப் பெற்றிக்கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும் பெற்று, ஆயிரங்கோல் கொடுத்தியல்வது; என்னை?"

*"ஆயிர நரம்பிற் றாதியா ழாகும்*
*ஏனையுறுப்பு மொப்பன கொளலே*
*பத்தரளவுங் கோட்டின தளவும்*
*ஒத்த வென்ப இருமூன் றிரட்டி*
*வணர்சா ணொழித்தென வைத்தனர் புலவர்"*

என்பது அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரம். நாரதப் பேரியாழ் வில்யாழ் வகையாகும்.

இருபத்தொரு நரம்பினால் தொடுக்கப்படுவது பேரியாழ் எனப் புறநானூற்றுரையாசிரியர் குறிப்பிடுவதால் பேரியாழுக்குரிய நரம்பின் தொகை 21 என்பது புலனாகும். பெரும்பாணாற்றுப் படையில், 'இடனுடைப் பேரியாழ்' என இது குறிக்கப்படுதலால் வடிவிற் பெரியதாயிருந்ததெனத் தெரிகிறது. இதனைக் கவைபோல் அமைந்து, பின்னிருந்து தாங்குதற்கு அமைந்தது கவைக்கடை என்ற உறுப்பாகும். 'பிறைபிறந்தன்ன பின்னேந்து கவைக்கடை' எனவரும் பெரும்பாணாற்றுப்படைத் தொடர் இதன் அமைப்பினை நன்கு விளக்குவதாகும். பேரியாழில் குரல் முதலிய ஏழிசைக்குரிய நரம்புகள் ஏழும், மெலிவு, சமன், வலிவு என்னும் மூன்று தானங்களிலும் தனித்தனி அமைந்து நிற்றலால் மொத்த நரம்புகள் இருபத்தொன்றாயின.

**3. சீறியாழ் அமைப்பும் சிறப்பும்:-** "வணர் கோட்டுச் சீறியாழ்" என நடுகற் காதையிலும், "செந்நிறம் புரிந்த செங்கோட்டியாழ்" எனப் புறஞ் சேரியிறுத்த காதையிலும் இளங்கோவடிகள் குறிப்பிடுதலால் சீறியாழும், செங்கோட்டியாழும் இருவேறு கருவிகள் என்பது நன்கு விளங்கும். இவற்றுள் சீறியாழ் என்பது பத்தர், கோடு, திவவு, போர்வைத்தோல், நரம்பு என்னும் ஐந்துறுப்புடையதாகும்.

**4. செங்கோட்டுயாழ் அமைப்பும் சிறப்பும்:-** நாவலந்தேயத்தில் (இந்தியாவில்) வழக்கிலிருந்த நால்வகை நரப்புக் கருவிகளுள், தலைசிறந்தது செங்கோட்டியாழ் என்பது, பாவாணர்தம் கொண்முடிபு. இச்செங்கோட்டி யாழே, சிலமாற்றம் பெற்று யாழின் மறுபெயர்களுள் ஒன்றான வீணை என்னும் பெயரில், இன்று வழங்கி வருகிறது.

கி.பி.8ஆம் நூற்றாண்டிற்கும், கி.பி.13ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில், இன்றைய வீணையைப் போன்று, வளைவின்றி நேராய் அமைந்திருத்தலால், செங்கோட்டி யாழ் என்றழைக்கப்பட்டது.

செம்மை + கோடு = நேராய் அமைந்த கோடு. 'செம்மை' என்னுஞ் சொல், இங்கு வளைவின்மையைச் சுட்டியது.

செங்கோட்டியாழ், யாழின் இன்னிசைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. செங்கோட்டியாழ் பற்றி, மொழிஞாயிறு வழங்கும் சிறப்புக் குறிப்புகள்:-

1. நால்வகை யாழுள், செங்கோட்டி யாழே மிகச் சிறந்தது. 2000 ஆண்டுகட்கு முன்பு வடிவமைக்கப்பட்டது. இதைவிடச் சிறந்த இசைக்கருவி, ஞாலமெங்கினும் இல்லை. இக்காலத்து வீணையையொத்த வடிவில் செங்கோட்டியாழ் அமைந்திருந்ததாலேயே, அதற்கு வீணை என்னும் பெயரும், சிறுபான்மை வழங்கிற்று. இச்செங்கோட்டி யாழில் நரம்பிற்குப் பதிலாய்க் கம்பியும், வார்த்திவவிற்குப் பதிலாய் வெண்கல மெட்டும், தோற் போர்வைக்குப் பதிலாய், மரப்பலகையும், வறுவாய்க்குப் பதிலாய் நுண்துளைத் தகடும் கொண்டிருத்தலே, இற்றை வீணையின் வேறுபாடாம். குடவடிவிற் சிறிது மாறுதல், கோல் எனப்படும். மெட்டுத் தொகையிற் கூடுதல், ஆகியவற்றையும் வேறுபாடாகச் சேர்த்துக் கொள்ளலாம்.

ஈராயிரமாண்டுகட்கு முன்பு வடிவமைக்கப்பட்ட செங்கோட்டி யாழே, கால வளர்ச்சியில், மேற்குறித்த வேறுபாடுகளுடன் வீணை என்னும் பெயரில், இன்று மக்களிடையே உலா வருகின்றது என்பார், மொழிஞாயிறு.

நால்வகை யாழ் குறித்த, கடைக்கழகப் பாடலுள், செங்கோட்டி யாழே சீர்பொலியுஞ் சிறப்பினது என்பதைக் குறிக்கும் பாடல் :

*"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்*
*சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார் -*
*தார்பொலிந்து*
*மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே*
*பின்னு முகாவே பிற"*

என்பதனால், கடைச்சங்க காலத்தில் பலவகை யாழ்கள் சிறந்தன என்பதும், அவற்றுள்ளும் செங்கோட்டியாழ் தலைசிறந்தது என்பதும் அறியப்படும். காலமுறைப்படி நோக்கின், இசைவல்லார் கையாளும் கருவிகளுள் பிந்தினது சிறந்திருக்கு மேயன்றி, முந்தினது சிறந்திருக்காது. நால்வகை யாழுள் இறுதியது செங்கோட்டி யாழாதலின், அது ஏனையவற்றினும் சிறந்ததாயிருத்தல் வேண்டும்.

செங்கோட்டி யாழில் அமைந்துள்ள உறுப்புகள் :- செங்கோட்டியாழில் 18 உறுப்புகள் உள்ளன. உறுப்புகளின் வரணனையைப்

படங்களுடன் திரு.வரகுண பாண்டியனார், சீவகசிந்தாமணி வாயிலாகவும், நூற்பாக்களின் துணைக்கொண்டும் விளக்கியுள்ளார்.

நூற்பாக்கள் வருமாறு :-

*"கோடே பத்த ராணி நரம்பே*
*மாடக மெனவரும் வகையின வாகும்"*
*"மாட்டிய பத்தரின் வகையு மாடகமுந்*
*தந்திரி யமைதியுஞ் சாற்றிய பிறவு*
*முந்திய நூலின் முடிந்த வகையே"*

திருத்தக்க தேவர் கூறுவது :-

*"மணிகடை மருப்பின் வாளார் மாடக வயிரத் தீந்தேன்*
*அணிபெற வொழுகி யன்ன அமிழ்துறழ் நரம்பின் நல்யாழ்" (சீவக.722).*

மறைத்திரு. விபுலானந்த அடிகள் தமது யாழ்நூலுள் வரைந்து காட்டியுள்ள படத்தில் செங்கோட்டியாழின் உறுப்புகள் முழுமையாகச் சுட்டப் பெறவில்லை. இலக்கியங்களில் காணப்படுவதும், பழைய நூற்பாக்களில் குறித்துள்ளவையும் விடப்பட்டுள்ளன. இது குறித்து மொழிஞாயிறு கூறுவது :

"செங்கோட்டி யாழைப்பற்றி அடிகள் வரைந்து காட்டியுள்ள படமே, உண்மையானதாயின் வறுவாய், கவைக்கடை, உந்தி, ஒற்றுறுப்பு, தந்திரிகரம், மாடகம், தகைப்பு, வணர் முதலிய உறுப்புகளெல்லாம் எங்கே? அவற்றைக் கூறியுள்ள இளங்கோவடிகளும், அடியார்க்கு நல்லாரும் பித்தரோ? அன்றிப் பொய்யரோ?"

5. ஆதியாழ்:- முதலூழியிலே அரக்கர்கள் நரம்புக் கருவியை அமைத்து வாசிப்பதில் வல்லவர்களாக இருந்தனரென்றும், அவர்களது தருக்கினை நீக்குங் கருத்துடன் நல்லறிவுடைய புலமைச் செல்வர்கள் ஆயிர நரம்புடைய யாழினை அமைத்து, நுண்ணிய இசை நலன்கள் பலவற்றையும் வெளிப்படுத்தினார்க ளென்றும் பெருங்கதையிற் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு ஆயிரம் நரம்புடையதாய் அமைக்கப் பெற்ற யாழானது ஆதியாழ் எனவும், பெருங்களம் எனவும் வழங்கப் பெற்றது. இக்கருவியில் பத்தர் பன்னிருசாண் நீளமும், கோடு வளைவொழித்துப் பன்னிருசாண் நீளமும் உடையனவாக அமைக்கப்படுவன என்றும் யாழுக்குரிய ஏனையவுறுப்புக்களும் மேற்கூறிய அளவுக்குத்தக அமைக்கப்படுவன என்றும் அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டுள்ளார். இசைச் சுருதிகளை நுட்பமாக ஆராயுமிடத்து அச்சுருதிகளின் எல்லை இருநூறு என்பது திட்டமாகத் தெரியுமென்றும் அவ்விரு நூறு சுருதிகளையும் மெலிவிற்கு மெலிவு, சமன் வலிவு, வலிவிற்கு வலிவு என்னும் ஐந்து தானங்களிலும் வைக்க நரம்புகளின் தொகை ஆயிரமாம் என்றும், இத்தகைய நுண்ணிய சுருதிகளை வாசித்தற்குப் பயன்படும் முறையில் தமிழ் மக்களால் அமைத்துக் கொள்ளப்பட்ட யாழ்க் கருவியே ஆயிர நரம்புடைய யாழ் என்பர்.

6. மகரயாழ்:- மணிமேகலை, பெருங்கதை, சீவகசிந்தாமணி என்னும் நூல்களிலே 'மகரயாழ்' எனவும் 'மகரவீணை' எனவும் கூறப்படும் இசைக் கருவி சங்கச் செய்யுட்களிலே குறிக்கப்படவில்லை. *'யவனக் கைவினை மகரவீணை'* எனப் பெருங்கதையிற் கூறப் பெற்றிருத்தலால் இக்கருவி யவனபுரம் எனப்படும். கிரேக்க நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டதென எண்ணுவதற்கு இடமுண்டு. யவனர்களால் மகரமீன் வடிவில் வனப்புற அமைக்கப்பட்ட இவ்விசைக் கருவியானது அரச குமரர், பரத குமரர் முதலிய பெருஞ்செல்வர் வீடுகளிலே வாசிக்கப் பெற்றதெனத் தெரிகிறது.

7. சகோடயாழ்:- 'ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி' எனவும், 'பிழையா மரபின் ஈரேழ்கோவை'

எனவும், சிலப்பதிகாரத்திற் சிறப்பித்துப் போற்றப் பெறும் யாழ்க் கருவி பதினான்கு நரம்புடைய சகோட யாழாகும். இதன்கண், உழைமுதல், கைக்களை யீறாகப் பதினான்கு நரம்பு கட்டப்பெற்றன. அவற்றுள் முதல் நான்கு மெலிவுத் தானத்திலும், இடையேழு சமன் தானத்திலும், இறுதி மூன்று வலிவுத் தானத்திலும் அமைந்து நின்றன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வழங்கிய யாழ்க் கருவியாகிய இதன் உருவச் சாயல் அமராவதிச் சிற்பத்திலே கிடைத்திருக்கிறது. கி.பி.ஏழாம் நூற்றாண்டிலே வாழ்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்பார், திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாடிய தேவாரப் பதிகங்களைச் சகோட யாழில் வாசித்தார் என்பது வரலாறு. இங்ஙனம் சகோட யாழை வாசித்தமையால் அவரைச் 'சகோட யாழ்த்தலைவர்' எனச் சேக்கிழார் பாராட்டிப் போற்றியுள்ளார். தாராசுரம் திருக்கோயிலில் யாழேந்திய நிலையில் அமைக்கப்பட்ட திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருவுருவத்தில் அவர் வாசித்த பழைய சகோட யாழின் உருவச்சாயலை இன்றும் காணலாம். கேள்வியென்பது யாழுக்கு ஒரு பெயர். இன்னிசை புலனாதற்குரிய சிறந்த முறையில் அமைக்கப் பெற்றமையால் இது 'செம்முறைக் கேள்வி' எனப் பெயரெய்தியது. இத்தமிழ்ப் பெயரே பிற்காலத்தில் 'சகோஷம்' என வடமொழியில் மொழி பெயர்த்து வழங்கப்பெற்றது.

**யாழும் வீணையும் ஒன்றே :-** யாழ் வேறு; வீணை வேறு என்று, இரண்டையும் வேறுபடுத்திப் பாவாணர் காலத்திலேயே சிலர் பேசி வந்தனர். ஆனால், இரண்டும் ஒன்றே என்று "பாணர் கைவழி" மதிப்புரை (மறுப்பு) சனவரி, (செந்தமிழ்ச் செல்வி 1951) என்னும் கட்டுரையில், தொல்காப்பியம், கழக காலப் பாடல்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, தேவாரம், பிங்கலம் போன்ற நூல்களின் துணையுடன் நிறுவியுள்ளார்.

அனைத்து நரப்புக் கருவிகளுக்கும் யாழ் என்பது பொதுப்பெயராகும். வீணை என்பது யாழைக் குறித்து வழங்கிய பெயர்களுள் ஒன்று. அன்றையச் செங்கோட்டியாழே, இன்றைய வீணை என்பார் மொழிஞாயிறு.

வீணை என்னும் பெயர் தனித்து வரும்போது, செங்கோட்டி யாழையே அல்லது பிற யாழையே குறிக்கும்.

(எ.கா.) *"மங்கல மிழப்ப வீணை மண்மிசை"* என்று இளங்கோவடிகளும்,

*"மாசில் வீணையும் மாலை மதியமும்"* என்று திருநாவுக்கரசரும்,

*"குழலி னோசை வீணை மொந்தை கொட்ட முழ வதிர"* என்று திருஞானசம் பந்தரும், கூறுதல் காண்க.

சீவகசிந்தாமணியில், கந்தருவதத்தையா ரிலம்பகத்தில், யாழ் என்னும் பெயரும், வீணை என்னும் பெயரும், ஒரு பொருட்கிளவியாய், ஒன்றுக்கொன்று பதிலாக வருகின்றன. தேவாரத்தில் யாழ் என்னும் பெயர் வருமிடத்தில் வீணையும் வீணை என்னும் பெயர் வருமிடத்தில் யாழ் என்னும் பெயரும் விலக்கப்பட்டன. நாரதயாழ், நாரதவீணை என ஒரே கருவி குறித்து இருபெயர் வழக்கமுள்ளது.

வீணை என்னும் பெயர், யாழ் என்னும் பெயரோடுகூடி வருமிடத்தில் மட்டும், தனி மிடற்றிசையையோ யாழிசையோடு கூடிய மிடற்றிசையையோ குறிக்கும். யாழ் என்னும் சொல்லும், பொதுப்பட்ட இசையையும், இசைப்பகுதியான பண்ணையும் இசைக் கருவியான யாழையும், இடத்திற்கேற்ப குறிக்கும்.

(எ.கா.) *"செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ"* *(தொல்.அகத்.18).*

*"துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே" (தொல்.களவு.1)* என்று தொல்காப்பியரும்,

*"யாழோர் மணவினைக் கொத்தனள் என்றே" (மணிமே.22:86)* என்று சீத்தலைச் சாத்தனாரும், சொல்லை இசையென்னும் பொருளில் ஆண்டனர்.

*"பாலை குறிஞ்சி மருதஞ் செவ் வழியென*

*நால்வகை யாழா நாற்பெரும்பண்ணே"* என்று பிங்கல முனிவர் அச்சொல்லைப் பண் என்னும் பொருளில் ஆண்டனர். யாழ் என்பது ஒரு தனிப்பட்ட கருவியின் சிறப்புப் பெயராகாது. அது தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, கஞ்சக்கருவி என்னும் நால்வகைக் கருவியுள் நரப்புக் கருவியை யெல்லாம் பொதுப்படக் குறிக்கும் பொதுப் பெயராகும். இப் பாகுபாட்டின்படி இற்றை வீணையும், ஒருவகை யாழாயிருக்க அதை மட்டும் எங்ஙனம் வேறு பிரித்துக் கூற முடியும்?

யாழும் வீணையும் வெவ்வேறு கருவி யாயிருப்பின், நாரதயாழ் நாரதவீணை எனச் சிலப்பதிகாரத்தும், மகரயாழ் மகரவீணை எனச் சிந்தாமணியிலும், ஒரே கருவி ஏன் இரு பெயராலும் அழைக்கப் பெறல் வேண்டும்? ஆதி (பெரு), மகர, சகோட, செங்கோட்டு, முண்டக, சிறு முதலிய அடையடுத்தாலன்றி, யாழ் என்னும் பெயர் ஒரு சிறப்பு வகை நரப்புக் கருவியைக் குறிக்காது. ஆயினும், சுருக்கம் பற்றி, துப்பாக்கியிற் பலவகையிருப்பினும் அவற்றுட் சிறந்ததும் துப்பாக்கியென்றே அழைக்கப் பெறுதல் போல, யாழுட் பலவகையிருப்பினும் அவற்றுட் சிறந்ததும் யாழ் என்றே அழைக்கப்பெறும்.

யாழ் பற்றிய இலக்கியச் சான்றுகள் :– பத்துப் பாட்டில் அமைந்த சிறுபாணாற்றுப்படை, பெரும்பா ணாற்றுப்படை, பொருநராற்றுப்படை முதலான கழகக்காலப் பனுவல்களில், இற்றைக்கு 2000ஆம் ஆண்டுகட்கு முன்பு பாணர் இசைத்த, யாழ்க் கருவியின் தோற்றமும், யாழுறுப்புகளின் வண்ணமும் வடிவமும், செயல்வகையும், பயனும், பல்வேறு உவமைகளின் வாயிலாக விளக்கப்பெற்றுள்ளன.

இதுகாறும் கிடைத்துள்ள கழகத் தமிழ்ப் பனுவல்களில், யாழ் குறித்து வரும் பாடல்கள் பற்றிய பதிவெண்களின் விளத்தம் வருமாறு:–

அகநானூறு: 0.15, 14:15, 56:11, 82:6, 88:11, 109:1, 186:10, 212:6, 214:13, 266:10, 279:11, 314:12, 331:10, 332:8, 346:13, 374:8, 396:3.

ஐங்குறுநூறு: 410.5, 472:1, 475:3, 478:5.

கலித்தொகை: 2.27, 9:19, 29:17, 32:9, 34:16, 70:22, 118:15, 123:4, 131:9, 143:10, 38.

குறிஞ்சிப்பாட்டு: 110.

சிறுபாணாற்றுப்படை: 35.

திருமுருகாற்றுப்படை: 141.

நற்றிணை: 30:2, 139:4, 176:8, 186:6, 189:3, 335:9, 380:7.

நெடுநல்வாடை: 70.

பட்டினப்பாலை: 156.

பதிற்றுப்பத்து: 41.2.

பரிபாடல்: 3.86, 7:78, 8:2, 10:56, 11:125, 20:57, 21:35.

புறநானூறு: 64:1, 65:1, 69:1, 109:15, 136:1, 152:14, 170:13, 242:2.

பெரும்பாணாற்றுப்படை: 182, 462.

பொருநராற்றுப்படை: 109, 168, 211.

மதுரைக்காஞ்சி: 559, 584, 605.

மலைபடுகடாம்: 37, 381, 450, 469, 534.

முல்லைப்பாட்டு: 8.

1. 'செவ்வழி நல்யா ழிசையினென் பையென' (அகம்.14:15).

2. 'புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி யாழின்' (அகம்.56:11).

3. 'நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி' (புறம்.64:1).

4. 'மண்முழா மறப்பப் பண்யாழ் மறப்ப' (புறம்.65:1).

5. 'வணரமை நல்யா ழிளையர் பொறுப்ப' (பதிற்றுப்.41:2).

**யாழ்வல்லோர்** *yāl-vallōr,* பெ.(n.) 1. வீணை வல்லோர்; talented experts in playing on the lute. 2. கந்தருவர் (சூடா.); Gandharvas, the heavenly choristers.

*[யாழ் + வல்→ வல்லார்→வல்லோர்.]*

*"ஆவோ வாகும் பெயருமா ருளவே" (தொல்.680).*

**யாழ்வல்லோன்** *yāl-vallōn,* பெ.(n.) மூவுலகு உலாவி (நாரதன்); *Nāradan,* a celestial sage said to be expert in lute playing.

*[யாழ் + வல்→ வல்லான்→வல்லோன்]*

**யாழ்வாசித்தல்** *yāl-vāšittal,* பெ.(n.) மகளிர்க்குரிய குசல வித்தை ஐந்தனுள் ஒன்றான யாழ்வாசித்தல்; playing the lute, a women's accomplishment, one of five *kušala-vittai.*

*[யாழ் + வாசித்தல்]*

**யாழ்வாசினை** *yāl-vāšinai,* பெ.(n.) வீணை வாசிக்கை (சீவக.660, உரை); playing the lute.

*[யாழ் + வாசி→வாசினை]*

**யாழ** *yāla,* இடை.(part.) ஒரு முன்னிலை அசைச்சொல்; expletive of the second person. *"யாழ நின் மைந்துடை மார்பிற் சுணங்கு நினைத்துக் காண்" (கலித். 18).*

*[யாழ் → யாழ]*

'யாழ யுடையாய்' என்னும் பொருளுடைய செய்யுளில் 'யாழ' என்னுஞ் சொல், நாளடைவில் அசைச்சொல் அளவில் நின்றது.

**யாழல்** *yālal,* பெ.(n.) கறையான் (யாழ்.அக.); white ant.

மறுவ. சிதல்

**யாழவடிப்படிரம்** *yāla-v-adi-p-padiram,* பெ.(n.) சந்தனம்; sandal.

**யாழாசிரியன்** *yāl-āširiyan,* பெ.(n.) யாழிசை கற்பிப்பவன்; instructor or trainer in lute-playing.

*[யாழ் + ஆசிரியன்]*

**யாழின்மென்மொழிநாயகி** *yālinmen molināyagi,* பெ.(n.) திருமணஞ் சேரியில் எழுந்தருளியிருக்கும் தேவியின் பெயர்; the deity enshrined at *Tirumaṇañcēri.*

*[யாழ் → யாழின் + மென்மொழி + நாயகி]*

'இன்' ஒப்புப்பொருள் குறித்த ஐந்தாம் வேற்றுமை உருபு.

**யாழினுமென்மொழியம்மை** *yālinumen moli-y-ammai,* பெ.(n.) திருவிளமரிலே கோயில் கொண்டிருக்கும் தேவியின் பெயர்; a deity enshrined at *Tiruvilamar.*

*[யாழினும் + மென்மொழி + அம்மை]*

யாழுறுப்பு *yāḻuṟuppu,* பெ.(n.) யாழில் அமைந்துள்ள சிறப்புறுப்புகள்; the special components of the lute viz., *pattar, yāppu, undi, maruppu, tivavu.*

*[யாழ் + உறுப்பு]*

1. பத்தர் :– பத்தர் என்பது, இக்காலத்தில் வீணையென்ற இசைக் கருவியில் உள்ள குடம் என்ற உறுப்பினை ஒத்து அமைந்ததாகும். பத்தர் என்ற இவ்வுறுப்பினை முன்னோர்கள் குமிழ், முருக்கு, தணக்கு என்ற மரங்களால் அமைத்தார்கள். யாழ்ப் பத்தராகிய இதன் மேற்புறம் முழுவதும் குடைந்தெடுக்கப்பட்டுத் தோலால் மூடப்பெறும். இனி, பத்தரின் மேற்புறத்தில் ஒரு பாதி மரமே வறுவாயாகத் திறக்கப்பட்டிருக்க, அத்திறப்பின் வழியாக மற்றைப் பாதி மரத்தினையும் உள்ளே குடைந்தெடுத்து, வறுவாய்ப்பகுதியை மட்டும் போர்வைத் தோலால் மூடுதலும் உண்டு. பத்தர் என்ற உறுப்பானது, இவ்வாறு இரு வகையாகவும் அமைக்கப்படும். இதன்கண் எட்டாம் நாள் திங்களைப் போன்று அரைவட்ட வடிவில் வறுவாய் அமைத்த பொழுது அதன் வழியாகக் குடைந்தமைக்கப் பெற்ற பத்தரின் உள்ளிடம் இருள் செறிந்ததாய் இருக்கும். பத்தரில் வறுவாயாகத் தோன்றும் மேற்பரப்பினை மூடுதற்கு அமைந்த போர்வைத் தோல் நன்றாகப் பாடஞ் செய்து துவரூட்டப்பட்டுச் செந்நிறமுடையதாய் தோன்றும். இத் தோலைப் பொருத்தி மூடுவதற்குப் பத்தரின் ஓரத்தைச் சுற்றிலும் முடுக்கப்பட்ட சிறிய ஆணிகளின் தலைகள் நண்டின் கண்களைப் போன்று தோன்றும். போர்வைத் தோலின் நடுப்பகுதி பத்தரின் உள்ளே நரம்புகள் செல்லுதற்கு ஏற்ற வண்ணம் இரு கூறாகப் பிரிந்து இணைத்துத் தைக்கப்பெற்றிருக்கும். இங்ஙனம், போர்வைத் தோலினை நடுவே இணைத்ததைப் பதனம் என்றும், பொல்லம் பொத்துதல் என்றும் வழங்குவர்.

2. யாப்பு :– யாப்பு என்பது பத்தரின் குறுக்களவே நீளமாகச் சிறுவிரற் பருமனாக யானைத் தந்தத்தினாற் செய்யப்பட்டு, நரம்புகளைத் தொடுத்தற்கு இடமாகவும் நரம்பின் அசைவினைப் பத்தரிலே தாக்கி ஒலிமையப் பெருக்குதற்குரிய கருவியாகவும் அமைக்கப்பட்டதோர் உறுப்பாகும். இவ்வுறுப்பு பத்தரின் உள்ளிடத்தே செறிக்கப் பெறுவதாகும்.

3. உந்தி :– உந்தி என்பது, பத்தரின் மேல் மூடப்பெற்ற போர்வைத் தோலிற்கும், பத்தரினுள்ளே செறிக்கப்பட்ட யாப்புறுப்பிற்கும் நடுவே அமைந்த உறுப்பாகும். இது வளைந்து உயர்ந்து போர்வைத் தோலின் நடுவிடத்தைத் தாங்கி நிற்பதாகும். இதன் அடியில் அமைந்த யாப்புறுப்பில், தொடுக்கப்பட்ட இசை நரம்புகள், அதன் மேல் உள்ள உந்தியென்னும் இதன் வழியாக, வெளியே செல்ல வேண்டியிருத்தலால் உந்தியென்னும் இவ்வுறுப்பின் நுனிப்பகுதி இரு பிளவாகப் படுக்கப்பட்டிருக்கும். ‘உந்தி’ என்னும் சொல் ‘உந்து’ என்னும் வினையடியாகப் பிறந்ததாகும். வளைந்து உயர்ந்து உந்தி நிற்றலால் ‘உந்தி’ என்னும் பெயருடையதாயிற்று.

4. மருப்பு :– மருப்பு என்பது, யாழிலுள்ள கோடு என்ற உறுப்பாகும். இது பாம்பு மேல் நோக்கிப் படமெடுத்தது போன்று மேல்நோக்கி வளைந்த வடிவுடையதாகும். கோடுதல்–வளைதல், வளைந்த வடிவுடையதாதலின் கோடு என வழங்கப்பெற்றது. இது கருங்காலி, கொன்றை முதலிய மரத்தினாற் செய்யப்பட்டுக் கருநிறமுடைய தாயிருக்கும். முற்கூறிய வண்ணம் பத்தரினுள்ளிடத்தே யாப்புறுப்பில் தொடுக்கப்பட்ட இசை நரம்புகள் பத்தரின் நடுவே, இரு கூறாகப் பொருத்தித் தைக்கப்பெற்ற போர்வைத்தோலின் ஊடாக, வெளியே இழுக்கப்பட்டுக் கோடு என்ற இவ்வுறுப்பிலே வாரினால் வலித்துக் கட்டப் பெறுவனவாகும்.

5. திவவு :– இசை நரம்புகளைக் கோட்டில் துவக்குதற்கு அமைந்த வார்க்கட்டினைத் திவவு என வழங்குவர். யாழ் நரம்புகளைக் கோட்டின் மேலும் கீழும் உயர்த்தியும் தாழ்த்தியும் உச்சு சுரமாக்குதற்கும், மந்த சுரமாக்குதற்கும் பயன்பட்டது திவவு என்னும் வார்க் கட்டேயாகும். காலம் செல்லச் செல்ல இத் திவவுக்குப் பதிலாக நரம்புகளை, வலித்தற்கும் மெலித்தற்கும் உரிய வகையில் அமைத்துக் கொண்ட உறுப்பு, மாடக;ம் என்பதாகும். இது, நால்விரல் அளவான மாலிகை வடிவில் கருவிள மரத்தினாற் கடைந்து செய்யப்பட்டு, நரம்புகளை இழுத்து முறுக்குதற்கும், வேண்டுமளவு தளர்த்தற்கும், தகவாகக் கோட்டின் கண்ணே அமைக்கப்படுவதாகும். மாடமாகிய இவ் வுறுப்பினை இக்காலத்தார் முறுக்காணி என வழங்குவர்.

**யாழையங்கினி** *yāḻai-yaṅgiṉi,* பெ.(n.) தழுதாழை; shrub in the edges, aloe.

**யாழோர்** *yāḻōr,* பெ.(n.) 1. யாழிசை வல்லோர்; skilful or expert players on the lute. 2. கந்தருவர் (சூடா.); Gandharvas, the heavenly choristers.

*[யாழ் → யாழோர்]*

**யாழோர்கூட்டம்** *yāḻōr-kūṭṭam,* பெ.(n.) காதலர் தம்முள் மனமொத்துக் கூடுங் கூட்டம் (தொல்.பொருள்.92, உரை); a form of marriage which results entirely from love and which has no ritual whatsoever, as common among Gandharvas.

*[யாழோர் + கூடு → கூட்டம். (கூட்டம் = கூடுகை)]*

**யாழோர்மணவினை** *yāḻōr-maṇa-viṉai,* பெ.(n.) காதலர் தம்முள் மனமொத்துக் கூடுங் கூட்டம் (தொல்.பொருள்.92,உரை). a form of marriage which results entirely from love and which has no ritual whatsoever, as common among Gandharvas. *"யாழோர் மணவினைக் கொத்தனளென்றே" (மணிமே.22,86).*

*[யாழோர் + மணவினை]*

**யாளவரி** *yāḷa-vari,* பெ.(n.) யாளியுருவங்கள் வரிசையாக அமைக்கப் பெற்ற கோயிற் கட்டடப் பகுதி; the portion of a temple-structure where the figures of *yāḷi* are set in row.

*[யாள + வரிசை → வரி (வரிசை = நிரையொழுங்கு)]*

**யாளி** *yāḷi,* பெ.(n.) 1. கரிமாவின் மருப்பும் தும்பிக்கையும் அரிமாவின் முகமுடையதாகக் கருதப்படும் விலங்கு; a mythological lion-faced animal with elephantine proboscis and tusks. *"உழுவையும் யாளியு முளியமும்" (குறிஞ்சிப். 252).* 2. அரிமா (அக.நி.); lion. 3. மடங்கலோரை (சிங்கராசி) (சூடா.); leo of the zodiac. 4. இறை கூடைவகை (வின்.); a shallow vessel for throwing water to wet the sail of a craft or for ladling out bilge water. 5. யானை (அக.நி.); elephant.

க. யாளி

**யாளிக்கால்** *yāḷi-k-kāl,* பெ.(n.) யாளி வடிவிற் செய்த பாதம் (S.I.I.ii,5); leg of stand etc., shaped like a *yāḷi.*

*[யாளி + கால்]*

யாளிக்கூடை *yāḷi-k-kūḍai,* பெ.(n.) இறை கூடைவகை; a shallow vessel for throwing water to wet the sail of a craft or for ladling out bilge-water.

*[யாளி + கூடை]*



யாளிதத்தன்[1] *yāḷi-tattaṉ,* பெ.(n.) ஔவைக்குத் தந்தை; father of Avvai. *"யாளிகூவற்றூண்டு" – எனும் ஞானாமிர்த செய்யுளால் அறியலாம்.*

மறுவ. பகவன்

*[யாளி + தத்தன்]*

யாளிதத்தன்[2] *yāḷi-tattaṉ,* பெ.(n.) ஒரு முனி (ஞானாமி); a saint or sage.

*[யாளி + தத்தன்]*

யாளிப்பட்டை *yāḷi-p-paṭṭai,* பெ.(n.) யாளிக் கூடை பார்க்க; see *yāḷi-k-kūḍai.*

*[யாளி + பட்டை]*

யாளிபலம் *yāḷi-palam,* பெ.(n.) அரிமாவினையு மிஞ்சும் ஆற்றலைக் குறிக்கும் உவமைச் சொல்; extra ordinary strength, comparable to the strenght of a lion.

*[யாளி +* **Skt.** *Bala > த. பலம்]*

யாளிமுகம் *yāḷi-mugam,* பெ.(n.) யாளியின் முகம்போல அணிகளில் அமைக்கப்பட்ட முகப்பு முதலியன; ornamental pendant or clasp of jewels, shaped like the face of a *yāḷi.*

*[யாளி + முகம்]*

யாளியானை *yāḷi-yāṉai,* பெ.(n.) யானையின் மருப்பும் துதிக்கையும் அரிமாவின் முக முடையதாகக் கருதப்படும் விலங்கு; a mythological lion-faced animal with elephantine probosics and tusks.

*[யாளி + யானை]*

யாளியூர்தி *yāḷi-y-ūrdi,* பெ.(n.) காளி (அரிச். 4. பாயி.9) (பிங்.) (யாளியை ஊர்தியாக வுடையவள்); *kāḷi,* as riding on a *yāḷi.*

*[யாளி + ஊர்தி]*

யாளிலலாடம் *yāḷi-lalāḍam,* பெ.(n.) யாளி யுருவமைந்த தூணின் நெற்றி; the capital of a pillar, shaped like a *yāḷi.*

யாளிவிரை *yāḷi-virai,* பெ.(n.) சிறு சணல் வித்து (பதார்த்த. 780); lin-seed, flaxseed, linususitatissi mum.

*[யாளி + விரை]*

யாற்றுநீர் *yāṟṟu-nīr,* பெ.(n.) எண்வகைப் பொருள்கோளில் சொற்களை முன்பின்னாக மாற்றாமல் நேராகவே பொருள் கொள்ளு முறை (நன். உரை. 412); a mode of construing a verse in which the words are taken in their order without any transposition to yield the intended meaning, one of the eight *poruḷ-kōḷ.*

**யாற்றுநீர்ப்பொருள்கோள்** *yāṟṟu-nīr-p-poruḷ-kōḷ,*பெ.(n.) பொருள்கோள் எட்டு வகைகளுள் ஒன்று, செய்யுளில் ஆற்று நீர் போன்று பொருள் கொள்வதாகும்; knowing meaning of a poem like pouring of river water, one of eight *poruḷ-kōḷ.*

*[யாற்றுநீர் + பொருள்கோள்]*

**யாறகம்** *yāṟagam,*பெ.(n.) வான்வெளியிற் பறந்தலையுங் கருடன்; sky root - a climber.

**யாற்றொழுக்கு** *yāṟṟoḻukku,*பெ.(n.) கருதிய பொருளைக் குறைவுபடாது, நூற்பாவில் அமைத்துக் கூறுகை; composing *nūṟpā* flawless.

*[யாற்று + ஒழுகு→ஒழுக்கு]*

யாற்றொழுக்கு பற்றி இளம்பூரணர் இயம்புவது "கருதிய பொருளை வழுவாமற் சூத்திரம் ஒருங்குபடக் கிளத்தல்" (தொல்.பொருள்.656, இளம்.).

**யாறாம்பை** *yāṟāmbai,*பெ.(n.) கவுதும்பை; a species of tumbai, dead nettle.

**யாறு** *yāṟu,*பெ.(n.) மரஞ்செடி கொடியடர்ந்த அடவியை யூடறுத்துச் செல்லும் நீர்ப்பெருக்கு; river. *"அகழிழிந் தன்ன கான்யாற்று நடவை" (மலைபடு. 214).*

தெ. ஏரு; க., ம. ஆரு.

*[அர் → அறு → ஆறு → யாறு]*

நிலமெங்கும் ஒரே சோலையாயிருந்த காலத்தில், இடையிடையோடும் ஆறுகளே, ஊடுநீந்தியும் ஓரமாக நடந்து செல்லும் வழிகளாயிருந்தமையின், வழி ஆறு எனப்பட்டது (சொல்.ஆ.க.பக்.17). மலையை அறுத்து வழிந்தோடும் நீரை அருவி என்றாதல் போன்று நிலத்தை ஊடறுத்து ஓடும் நீர்ப்பெருக்கு யாறானவாறாம்.

**யான்**[1] *yāṉ,*பெ.(n.) செய்யான்; a kind of centepede.

**யான்**[2] *yāṉ,* சு.பெ.(n.) நான்; first person, I. *"யான்நோக்குங் காலை நிலன்நோக்கும்" (குறள்,1093), "யான் எனும் ஆசு இல் ஆதவனே" (சிவ.திரு.1:49)*

*[ஏ→ஏன்→யான் (ஏ = உயர்வு).]*

'நான்' என்னும் செருக்கு (அகங்காரம்) மாந்தனுக்கு இயல்பாக வுண்மையால், முந்தியல் தமிழன் தற்பெருமையும் தன்னலமும் பற்றி 'ஏ'காரச் சுட்டால் தன்னைக் குறித்தான் (சு.வி.பக்.58).

"யா"–என்னும் தன்மைச்சுட்டு மூலத்தினின்று முகிழ்த்த சொல். "நான்" என்றவாறு, தன்னையே குறிப்பிட்டுச் சொல்லிக் கொள்ளுவதற்கு முதன்முதல் மாந்தன் பயன்படுத்திய மூல வொலியீடு.

**யான்**[3] *yāṉ,* பெ.அ.(pron.) தன்மை யொருமைப் பெயர் (தொல். சொல். 162); first person singular noun.

தெ. ஏநு; ம. ஏந; க. ஊந்.

*[ஏ→யான். ஏகாரம் 'யா'வாகத் திரிதலை ஏமம்→யாமம், ஏமை→யாமை→ஏது→யாது முதலிய சொற்றிரிபுகளானறிக.]*

**யான்மை** *yāṉmai,* பெ.(n.) செருக்கு, தன்னலம் மற்றும் தன்முனைப்புணர்வு; egoism; arrogancy; self-consciousness. *"யான்மை தீர்புகழ் வியாதன்" (சேதுபு. விதூர.1).*

*[ஏ→ஏன்→யான் → யான்மை]*

யானஞ்செய்-தல் *yāṉañ-cey-*,13 செ.கு.வி. (v.i.) செல்லுதல்; to go, to move. *"பத்தியால்.......... யானஞ் செய" (இரகு. நாட்டுப்.41).*

யானபாத்திரம் *yāṉa-pāttiram-*, பெ.(n.) மரக்கலம் (யாழ்.அக.); boat or catamaran.

*[ஏனம் → யானம்+பாத்திரம் (யானம் = மரக்கலம்).]*

யானம் *yāṉam*, பெ.(n.) 1. கட்டப்பெற்ற ஊர்தி வகை; conveyance, vehicle, carriage. *"சிலம்பறீ ரிந்திரன் யானம்" (இரகு. திக்குவி.10).* 2. சிவிகை; palanquin, litter. *"வாகன யானங் கண்மிசைக் கொண்டார்" (பெரியபு. தடுத்தாட். 20) (சூடா.).* 3. மரக்கலம் (சூடா.); vessel, ship, raft, catamaran. *"யானமே மரக்கலத்தோ டெழிலூர்தி" (சூடா.11:15:2).* 4. அரசரது குணங்களுள் ஒன்றான போர்ச் செலவு; march against an enemy, one of *araśar-aṟu-guṇam*. *"சிந்தை கொள்யான மேற்செல்லல்" (இரகு. திக்குவி. 21).* 5. அறை வீடு (யாழ்.அக.); room, chamber. 6. கள் (சது.); toddy.

*[ஏல் → ஏனம் → யானம்]*

"யா"-என்னும் பொருந்துதற் கருத்து வேரினின்று முகிழ்த்த சொல். யாத்தல் = கட்டுதல், இணைத்தல். யானம் = கட்டப்பெற்ற ஊர்தி வகை. நில நீர்வழிச் செலவிற்கு முறையே பல்லக்கு, மரக்கலம் போன்றவற்றை உருவாக்குவதற்கு மரத்துண்டு, பலகை, இரும்புச் சட்டம் முதலான பொருட்களை ஒன்றோடொன்று பொருத்தி, இணைத்துச் செய்வதால் ஏற்பட்ட பெயர் என்றறிக.

யானமுகம் *yāṉa-mugam*, பெ.(n.) வண்டியினேர்க்கால் முனைப்பகுதி; a sturdy plank used in bullock-cart thill.

*[யானைமுகம் → யானமுகம்]*

யானாதருயா *yāṉā-taruyā*, பெ.(n.) பலகரை; cowry.

மறுவ. சோழி.

யானெனதெனல் *yāṉeṉadeṉal*, பெ.(n.) தானல்லாத உடம்பை யானென்றும் தனக்குப் புறம்பான பொருளை எனதென்றும் கருதி அவற்றின்மேற் பற்றுவைத்தல் (அகங்காரம மகாரங்கள்); the sense of I and mine. *"யானென தென்னுஞ் செருக்கறுப்பான்" (குறள், 346).*

*[ஏ→ஏன்→யான் + என் + அது – எனது + எனல், ஏ = உயர்வு.]*

'தன்னுடம்பைத் தானாக மயங்கி யானென்பதால் அகப்பற்று 'யான்' என்னும் சொல்லாலும், தனக்குச் சொந்தமான பிறபொருள் அல்லது உடைமைகளையெல்லாம் தனித்தனி எனது என்று சொல்வதால் புறப்பற்று 'எனது' என்னும் சொல்லாலும் குறிக்கப்படும்' (குறள், 346, தமிழ் மரபுரை)

யானை[1] *yāṉai*, பெ.(n.) துதிக்கையுடைய விலங்கு; elephant - *Elephas indicus*. *"யானையுங் குதிரையும்" (தொல். பொருள். 570), யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்' (பழ.), 'யானைக் கட்டக் கயிறு தானே எடுத்துக் கொடுக்கும்' (பழ.), 'யானை மேல் போகிறவனைச் சுண்ணாம்பு கேட்பது போல' (பழ.). 'யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்' (பழ.).*

*[அல் → எல் → என் → ஏன் → ஏனை → யானை]*

*[ஒருகா. யா + அன் → யாஅன் → யான் + ஐ → யானை = கரிய விலங்கு]*

தெ. ஏனுக (*ēnuga, ēnika, ēniga, ēnige,*

*ēnuga)*, க. அனெ (ane), *yāne*, ம. அன (*āna*), **kota**. a.n., **Toda** = a.n., **Kodagu** = a-ne, **Tuly**. *āne*, **Kolami** = *enāgi*, *ēngi*, *Naiki* = *ēnagi*, **Gondi**. *yēni*, **Konda** = *ēngu*.

மறுவ. 1. உம்பல் = உயர்ந்தது; 2. உவா = திரண்டது; 3. ஓங்கல் = மலை போன்றது; 4. கரி = கரியது; 5. கள்வன் = கரியது; 6. களிறு = கரிய ஆண்யானை; 7. கறையடி = உரல் போன்ற பாதத்தினை யுடையது; 8. குஞ்சரம் = திரண்டது; 9. கைம்மா = துதிக்கையை யுடைய விலங்கு; 10. கைம்மலை = கையையுடைய மலைபோன்றது; 11. நால்வாய் = தொங்குகின்ற வாயையுடையது; 12. புகர்முகம் = முகத்தில் புள்ளியுள்ளது (ஒருவகை); 13. புழைக்கை (பூட்கை) = துளையுள்ள கையை யுடையது; 14. பெருமா = பெரியவிலங்கு; 15. பொங்கடி = பெரிய பாதத்தையுடையது;16. யானை (ஏனை) = கரியது; 17. வழுவை = உருண்டு திரண்டது; 18. வாரணம் = சங்கு போன்ற தலையையுடையது அல்லது புல்லை வாரிப் போடுவது; 19. தும்பி = துளையுள்ள கையையுடையது; 20. வேழம் = வெள்ளை யானை (சொல்.ஆ.க.பக்.16).

மேற்குறித்த மறுவடிவப் பெயர்கள் ஒவ்வொன்றும், நுண்ணிய பொருட் பொருத்தப்பாட்டுடன், கழகக்கால இலக்கியங்களில் ஆளப்பெற்றவையாகும்.

கருமை நிலையிலும், பருமை நிலையிலும் காணப்படும் பெருமைசான்ற முப்பத்தெட்டுப் பெயர்களில் கழக இலக்கியங்களில் இவ்விலங்கு உலா வருகின்றது என்று, சொல்லாய் வறிஞர் ப.அருளியார் குறித்துள்ளதும், ஈங்கு எண்ணத்தக்க வொன்றாகும்.

கன்னங்கரிய வண்ணத்தில், பென்னம் பெரிய தோற்றத்துடன், காண்பவர்தம் கருத்திலும், நெஞ்சிலும் நீக்கமற நிறைந்து, பெருமைமிகு உருவுடன் உலாவரும், இவ்விலங்கு, தமிழ்மண்ணிற்குரிய மரபுச்சொத்துகளுள் ஒன்று. மங்கல அடையாளமாகக் கருதப்பெறும் ஓம் என்னும் மூலமந்திரத்தை உலகுக்கு உணர்த்தும் பான்மையில் அமைந்துள்ளது. தமிழர்தம் வாழ்வியலில் பின்னிப் பிணைந்தது. கழகப் பனுவல்களில் ஐந்நூற்றிற்கும் அதிகமான இடங்களில், யானையின் கருமைசான்ற கவினுறு காட்சி எழுத்தோவியமாக்கப்பட்டுள்ளது, கண்கூடு. யானை என்னும் சொல்லாட்சி, சங்கப்பாடல்களில் நானூறுக்கும் மேற்பட்ட இடங்களில் மிகநுண்ணிய பொருண்மையுடன் பல்வேறு நிலைகளில் பதிவு பெற்றுள்ளது.

"யானை" என்னும் கருமைவண்ண விலங்கிற்கு விதைச்சொல்லாக "அல்" என்னும் மூலத்தைத் தமது வேர்ச்சொற் கட்டுரை பகுதி 1–இல் பாவாணர் குறித்துள்ளார்.

"அல்" = கருமைக் கருத்துவேர்

அல் → அலவன் = 1. கரியவிருள் அகலும் வண்ணம் தண்ணொளி பாய்சும் நிலவன்.

2. கும்மிருட்டில் பளிச்சென்று பார்வைத் துலக்கமுறுமாறு, பளிங்குக் கண்களுடன் அமைந்த பூனை. அல் → எல் = இரவு.

எ.கா:– "எல்லிற் கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப் போல்" (நாலடி, 8).

எல் → எல்லி → எல்லிருள் = இராவிருள். "அல்" என்னும் கருமைக் கருத்து மூலத்திலிருந்து முகிழ்த்த, எல், எல்லி, எல்லிருள் போன்ற சொற்கள் கழக இலக்கியங்களிலும், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் போன்ற காப்பியப்பனுவல்களிலும் பரவலாகக் காணப்படுகின்றன.

இந்த "எல்" என்னும் கருமைக்கருத்து வேரடியினின்று பிறந்த சொல்லே யானை என்பது, மொழிப்பகலவன் பாவாணர் கருத்தாகும்.

எல் → என் → ஏன் → ஏனை → யானை.

இக் கருமைக்கருத்து வேர்மூலத்தை விளக்கவந்த பாவாணர், யானையை, ஏனை என்று வழங்கும் நெல்லை வழக்கையும் (வே.க., 1.பக்.159) எடுத்துக் காட்டியுள்ளார்.

கருமைக் கருத்து வேரடியான "எல்" என்பதிலிருந்தே, பன்றியைக் குறிக்கும் ஏனம் என்ற சொல் தோன்றியது.

எல் → என் → ஏன் → ஏனம் = பன்றி; ஏன் = கரிய விலங்கான பன்றி.

*"ஏனொருவன் எயிற்றில் தாங்கியதும்" (திவ். இயற். நான்.70)*

பன்றியைக் குறிக்க வந்த தொல்காப்பியர்,

*"இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்"*
*(தொல்.பொருள்.623)*

"இருள்நிறப்பன்றி" என்னுங்குறிப்பு, கருமைக் கருத்தினைக் குறிப்பது. வெண் மருப்பினையுடைய பன்றிக்கும் ஆண்யானைக்கும், ஏனம் என்னும் சொல் பொதுப்பெயராகும். ஏனம், களிறு, யானை போன்ற சொற்கள் கருமைத் தோற்றத்தினை குறிப்பன.

யானைக்குரிய பெயர்களும் – அவற்றிற்குரிய காரணங்களும் :-

துளையுடைமை :-

1. தும்பி : துளையமைந்த கையினை உடைய விலங்கு.

2.புழைக்கை : புழையமைந்த–அஃதாவது, துளை பொருந்திய கையினை உடைய விலங்கு.

3. பூட்கை : புழைக்கையினை உடைய விலங்கு. புழை + கை > பூழ்க்கை > பூட்கை (கொள்கை பூணுகையாகிய பூண்கை என்பதன் திரிபாக வரும் "பூட்கை" என்பது, – இதனினும் வேறுபுடையில் மலர்ந்த வேறொரு சொல்! திரிபின் காரணமாக இவ்வண்ணம் ஒரு வடிவு கொள்ளுவது – போலி வகையதாகும்).

கை போன்ற உறுப்பமைவு :

4. கைம்மா : கையினை உடைய விலங்கு.

5. கைம்மலை : கையினையும் மலை போன்ற தோற்றத்தையும் உடைய விலங்கு.

தொங்குகை :

6. குஞ்சரம் : தொங்கும் கையினையுடைய விலங்கு. குஞ்சுதல் = தொங்குதல்
குஞ்சி = தொங்கும் ஆண்குறி
குஞ்சு + அரம் > குஞ்சரம் ("அரம்– ஓர் ஈறு)

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை"
(தொல்.பொருள்.மரபி : 19)

7. தூங்கல் : தும்பிக்கை தூங்கும் விலங்கு. தூங்குதல் = தொங்குதல்.
தூங்கு > தூங்கு = தொங்குகை
(ஒ.நோ. : தூக்கு + அணம் > தூக்கணம்
தூக்கணம் + குருவி – தூக்கணங்குருவி)

8. நால்வாய் : தொங்கும் வாய்போன்ற – தும்பிக்கையை உடைய விலங்கு
(நாலுதல் = தொங்குதல்)

பருத்த அடியினை உடமை :

9. கறையடி : உரல் போன்ற கால்களை உடைய விலங்கு "கறையடி யானை" (பெரும்பாண் : 351 நச்.உரை) : உரல் போன்ற அடியினையுடைய யானை.....)
(குறுதல் = குத்துதல். "தினைகுறு மகளிர்" (மலைபடு : 342) குறு + ஐ > குறை தவசங் குத்துதற்குரிய உரல். குறை > கறை = உரல்)

10.பொங்கடி : பருத்து வீங்கிய தோற்றத்தையுடைய – அடியினையுடைய விலங்கு.

முகத்திற் புள்ளிகளையுடைமை :

**11.** புகர்முகம் : புள்ளிகள் பொருந்திய முகத்தினையுடைய விலங்கு. *"பொறிவரிப் புகர்முகந் தாக்கிய வயமான்" (பெரும்பாண்:448)*

மதநீர் ஒழுக்குடைமை :

**12.** வழுவை : மதநீர் வழுவுதலையுடைய (ஒழுகுதலையுடைய) விலங்கு.

வண்டுகள் மொய்ப்புடைமை :

**13.** மொய் : வண்டுகள் மொய்த்தலையுடைய விலங்கு

வண்டுகளைக் கடிந்தோட்டுதலுடைமை :

**14.** கடிவை : (வண்டு) ஞிமிறு முதலியவற்றைக் கடிந்து ஓட்டுவதற்கு எப்போதும் காதுகளை அசைவித்துக் கொண்டிருக்கும் விலங்கு. (கடிதல் = விலக்குதல்) *"கொடிது கடிந்து கோறிருத்தி" (புறம்:17:5).*

கடி = நீக்கம் (பிங்.)
கடிவை = யானை (திவா.)

மந்தமுடைமை :

**15.** மந்தமா : சுறுசுறுப்பின்றி பெரும்பாலும் அமைதியாக இயங்கும் விலங்கு.

மதமுடைமை :

**16.** களிறு : மதத்தையுடைய விலங்கு (கள் > கள் + இர் > களிர் > களிரு > களிறு) *"களிறு மதயானை" (பிங். 2413)*

**17.** மதக்கயம் : மதத்தையுடைய கரியநிற விலங்கு

**18.** மதமா : மதத்தையுடைய விலங்கு

மருட்சி நோக்குடைமை :

**19.** மருண்மா : மருண்டு நோக்கும் நோக்கத்தினையுடைய விலங்கு

பெருந்தோற்றமுடைமை :

**20.** பகடு : பெரிய உருத் தோற்றத்தையுடைய விலங்கு (பகம் = பெருமை).

**21.** எறும்பி : பெரு விலங்கு (இறு > இறும்பு > எறும்பு > எறும்பி

**22.** பெருமா : பெரிய விலங்கு

**23.** பெருவிலங்கு : பெருந் தோற்றத்தையுடைய விலங்கு ("பெண்டாட்டி பெருவிலங்கு (யானை), பிள்ளையிரண்டும் கள்ளாணி!" என்பதொரு பழமொழி)

உயரமுடைமை :

**24.** உம்பல் : உயரமான தோற்றத்தையுடைய விலங்கு

**25.** உவா : உயரமுடைய விலங்கு

வலிமையுடைமை :

**26.** வல்விலங்கு : வலிமை பொருந்திய விலங்கு

**27.** வயமா : வலிமை மிக்க விலங்கு. *"வய வலியாகும்" (தொல்.சொல்.உரி : 70)*

கட்டுப் பேறுடைமை :

**28.** கம்பமா : கம்பத்தில் பிணிக்கப் பெறுதலை -யுடைய விலங்கு; தறியில் கட்டப் பெறுதலையுடைய விலங்கு "கம்பமா என்றேன்!" (தனிப்பா.)

சங்கொலிப்புடைமை :

**29.** வாரணம் : பெருஞ்சங்குப் போன்ற ஒலியையெழுப்பும் விலங்கு *"புகர்முக வாரணம்" (மணிமே.7 : 115).*

ஊதுலைத் துருத்தியுருவுடைமை :

**30.** தோல் : துருத்தியைப் போன்ற தோற்றமுடைய விலங்கு. தோல் = துருத்தி. *"மென்றோன் மிதியுலைக் கொல்லன்" (பெரும்பாண்.206).*

தோல் = யானை.

*"புரைத்தோல் வரைப்பின்"*

*(மலைபடு.88)*

மூங்கில் முளையுண்ணல் விழைவுடைமை:

31. வேழம் : மூங்கில் மூளையினை விரும்பியுண்ணும் விலங்கு. வய் = துளை. வய் + இர்>வயிர் =

துளையினையுடைய ஊதுகொம்பு. *"திண்காழ் வயிரெழுந்திசைப்ப" (திருமுரு : 120)*

வயிர் = துளையினையுடையதாகிய மூங்கில்

*"முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரி"*

*(ஐங்குறு : 395).*

வயிர் + இயர் > வயிரியர் = ஊதுகொம்பு ஊதுபவர்கள்; பாடகர் "வயிரிய மாக்கள் பண்ணமைத் தெரீஇ" (பதிற்றுப்.: 29)

வய்→வெய்→வேய் = 1. மூங்கில். *"வேய்ப்பெயல் விளையுட் டேக்கட்டேறல்" (மலைபடு.171).*

2. உட்டுளைப் பொருள் (பிங்.)

வேய்க்கண் = மூங்கிற் கணு (நாமதீப : 297), வேய்ங்குழல் = புல்லாங்குழல் (திவ். திருப்பள்ளியெழுச்சி. 4), வேய்ம்பரப்பு = மூங்கிற்பாய் (நாஞ்சில் நாட்டு வழக்கு),

வேயரிசி = மூங்கிலரிசி (திவா.)

வேய்த்தோள் = மூங்கில் போன்ற தோள்.

காண்க : *"முறிமேனி முத்தம் முறுவல் வெறி நாற்றம் வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு" (குறள்,1113).*

வேய் + அம் > வேயம் > வேழம் = மூங்கில்

வேழம் = மூங்கில் முளையினை விரும்பியுண்ணுவதாகிய யானை.

ஒ.நோ.: வேழம் > வேழம் + பு > வேழம்பு + அர் > வேழம்பர் = கழைக் கூத்தர் (பிங்.).

கருநிறத் தோற்றமுடைமை :

32. கயம் : கரிய நிறத் தோற்றத்தையுடைய விலங்கு (கய் = கருமைக் கருத்து மூலவேர்களுள் ஒன்று)

கய் + அம் > கயம் = யானை

கயமுனி = யானைக் கன்று

*"பொய்பொரு கயமுனி முயங்குகை கடுப்ப"*

*(மலைபடு : 107).*

முனி = யானைக் கன்று

*"முனியுடைக் கவளம் போல" (நற் : 360 : 9).*

கயம் > (Prakrit) gaya

(யகர ஜகரத் திரிபின் வழி) gaya > (Sanskrit) gaja = elephant (Pali) gaja = elephant.

33. நாகம் : கரிய நிறத்தையுடைய விலங்கு

*"ஏந்தெழில் வரிநுதல் பொருதொழி நாகம்"*

*(நெடுநல் : 116–117).*

(யானையைச் சுட்டும் நாகம் எனும் சொல்லுக்குரிய விளக்கத்தை "நாகம்" எனும் கட்டுரையில் காண்க.)

34. ஆம்பல் : கரிய நிறமுடைய விலங்கு (இதற்குரிய வேர்வழி விளக்கத்தை "ஆம்பி" என்னும் கட்டுரையுள் காண்க.)

35. கள்வன் : கரிய நிறத் தோற்றத்தையுடைய விலங்கு (கள் : கருமைக் கருத்துப் பக்கவேர்)

கள் > கள் + வு > கள்வு + அன் > கள்வன் = கரியவன் (பிங்.).

கள்வன் = (கரிய நிறத்ததாகிய) யானை (பிங்)

36. களவன் : கரிய நிறத்தையுடைய விலங்கு

கள் > கள் + அவு > களவு + அம் > களவம் யானை (வின்.)

களவம் களபம் (வகர பகரத் திரிபு) = யானை (ஒ.நோ: கலவுதல் = கலத்தல், தொகுதல். கலவு + அம் > கலவம் = தொகை, தோகை. (தொகு = ஒன்றுசேர், கல. தொகு + ஐ > தொகை > தோகை)

கலவம்→கலாவம். கலாபம் = தோகை, தோகையையுடையதாகிய மயில்

*"மணிவயிற் கலாபம்"*

*(சிறுபாண்.15).*

**37. கரி : கரியநிற விலங்கு**

கரு + இ – கரி. *"கொடுங்கரிக் குன்றுரித்து"*

*(திருவாச : 6, 19)*

கரி > (Sanskrit) kari = elephant

**மேலும் காண்க :**

Kari-kumbha = the frontal globe of an elephant

Kari-garjit = the roaring of the elephant

Kari-carman = an elephant's hide

Karija = a young elephant

Kari-danta = elephant's tusk

Kari-nāsa = the trunk of the elephant

Kari-pa = the keeper of an elephant

Kari-patha = the way of an elephant

Kari-pota = a young elephant

Kari-bandha = the post to which an elephant is tied

Kari-mācala = destroyer of elephants

Kari-mukha = elephant faced

Kari-yādas = a water elephant (hippopotamus = நீர்யானை)

Kari-vara = an excellent elephant

Kari-skandha = a herd of elephants

Karika = an elephant

Karini = a female elephant

(Page : 254 A Sanskrit - English Dictionary - Sir Monier Monier Williams)

மேலே குறிக்கப்பெற்ற 38 பெயர்களுள், யானை, கயம், நாகம், ஆம்பல், கள்வன், கரி, களபம் முதலான சொற்கள், கருமை நிறத் தோற்றத்தைத் தெள்ளத் தெளிவுறக் காட்டுவன.

மிகக் கருமையாகவும், பருமையாகவும் பெரியவுருவில் திகழும், இவ்விலங்கினை, விலங்கியலார் பாலூட்டி வகையுள் அடக்குவர். இம் மன்பதையுள் குழந்தைகள் முதல் முதியோர் வரை அனைவரும் காண விரும்பும் விலங்கு யானையே எனில் மிகையன்று. கழகக்காலம் முதல், இன்றளவும், இவ்விலங்கு தமிழர்தம் வாழ்வியலில் பிரிக்கமுடியாதது.

விலங்குக் காட்சியகங்களிலும் (zoo), வட்டரங்குகளிலும் (circus), திருக்கோவில்களிலும், திருமண நிகழ்வுகளிலும், பகட்டாரவார வரவேற்பு விழாக்களிலும் யானையின் பங்கு இன்றியமையாதது. நந்தமிழ் நாட்டில் யானையைப் பற்றியப் பழமொழிகள், வழக்குகள், கல்லாதார் நாவில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

தமிழகத்தில், முதுமலையில் யானைகள் சிறப்பாகப் பாதுகாத்து வளர்க்கப் பெறுகின்றன. இங்குள்ள யானைகள் எலிபாசுமாக்சிமசு இண்டிக்கசு (எலிபாஸ்மாக்ஸிமஸ் இண்டிக்கஸ்) வகையைச் சார்ந்தவை.

இந்தியாவில் இமயமலையின் தாழ்வான பகுதிகளிலும், நாவலந்தேயத்தின் வடபாகத்திலும், அசாம், கிழக்கு வங்காளம் போன்ற இடங்களிலுள்ள அடர்ந்த காடுகளிலும், நீலமலை, மேற்குத் தொடர்ச்சி மலையிலும், குடகு, எருமையூர் (மைசூர்), திருவிதாங்கூர் போன்ற இடங்களிலும், யானைகள் கூட்டங்கூட்டமாகக் காணப்படுகின்றன.



யானை[2] *yāṉai,* பெ.(n.) பெரியது என்னும் பொருளில் ஆளப்பெறும் பெயரெச்சம்; noun used as adj. in the sense of big, large, tall, great, etc.

*[ஏனை→யானை.]*

யானைக்கச்சை *yāṉai-k-kaccai,* பெ.(n.) யானைக் கழுத்தணிக் கயிறு (பிங்.); cord tied round elephant's neck.

*[யானை + கச்சு→கச்சை.]*

யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை[1] *yāṉaikkaṭcēy-māndarañ-cēral irum-poṟai,* பெ.(n.) ஒரு சேர அரசன், இவன் அரசனும் புலவனும் வள்ளலுமாக இருந்தவன்.ஐங்குறு நூறு தொகுப்பித்தோன் என்பர். இவன் இளஞ் சேரலிரும் பொறைக்கு உறவினன்; a cera king, also as king, poet as well as liberal donor, He is said have composed *Aiṅguṟu-nūṟu,* related to harm *Cēralirumboṟai.*

யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை[2] *yāṉai-k-kaṭšēy-māndarañ-cēral-irum-poṟai,* பெ.(n.) பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனால் கட்டுண்டவன். இவனைப் பாடிய புலவர் குறுங்கோழியூர் கிழார்; one who was subdued by *Pāṇḍiyaṉ Talaiyalaṅgānattu* victories king *Neḍuñceḷiyaṉ,* poet *kuṟuṅkōḻiyūr-kiḻār* composed songs in praise of him.

யானைக்கடைப்பல் *yāṉai-k-kaḍai-p-pal,* பெ.(n.) யானையின் கடைவாய்ப்பல்; the last interior tooth in the elephant's mouth.

*[யானை + கடை + பல்]*

யானைக்கண் *yāṉai-k-kaṇ,* பெ.(n.) 1. சிறு கண்; small eye in disproportion to the size of the body, as those of an elephant. *"யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல்" (புறநா. 20).* 2. இலை, காய் முதலியவற்றில் புள்ளி விழும் நோய் வகை (யாழ்.அக.); a disease that causes spots or dots on leaves and fruits.

*[யானை + கண்]*

யானைக்கண்சட்டி *yāṉai-k-kaṇ-caṭṭi,* பெ. (n.) அஞ்சனத்திற்காக மை படியும் படியாகப் பயன்படுத்தும் ஓர் வகைச் சட்டி; an earthern ware to arrest the smoke to prepare collyrium.

*[யானை + கண் + சட்டி]*

யானைக்கண்தாட்டுப்பத்திரி *yāṉai-k-kaṇ-tāṭṭu-p-pattiri,* பெ.(n.) சேலை வகை; a kind of saree.

*[யானைக்கண் + தாட்டு + **Skt.** பத்திரி]*

யானைக்கணையம் *yāṉai-k-kaṇaiyam,* பெ.(n.) 1. யானை கட்டுந்தறி; post or deeply earthed ensure to which elephants are chained. 2. யானைக் கூடத்தில் யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடா வண்ணம் அவற்றைப் பிரிக்கிற குறுக்கு மரம்; wooden bar set up between elephants in a stable to prevent their fighting with one another.

*[யானை + கணையம். கணையம் = யானைக் கட்டுத்தறி]*

யானைக்கத்தலை *yāṉai-k-kattalai,* பெ.(n.) கத்தலை மீன் வகை (வின்.); a species of kattalai fish.

*[ஆனைக்கத்தலை→யானைக்கத்தலை]*

**யானைக்கதி** *yāṉai-k-kadi,* பெ.(n.) நடனம், வேகம், மந்தம், ஓட்டம் என்ற நான்கு வகைப்பட்ட யானை நடை; paces of an elephant, of four kinds viz., *naḍaṉam* or dancing, *turidam* or hurrying, *mandam* or slow, *ōṭṭam* or running.

*[யானை + கது→கதி (கதி = நடை).]*

**யானைக்கம்பம்** *yāṉai-k-kambam,* பெ.(n.) யானை கட்டுந்தறி; post for typing elephants.

*[யானை + கொம்பு→கம்பு → கம்பம். கம்பம் = பெருமரத்தூண்]*

**யானைக்கரணம்** *yāṉai-k-karaṇam,* பெ.(n.) கரசைக்கரணம்; the *karaṇam* known as *karaśai.* *சோமவாரமும் திரிதி நாமயோகமும் யானைக் கரணமும் பெற்ற திருவோண நக்ஷத்ரத்து"* [T.A.S.V, 122].

*[யானை + கரணம்]*

**யானைக்கருப்பம்** *yāṉai-k-karuppam,* பெ.(n.) 1. வெகுகாலந்தங்குங் கருப்பம்; long period of gestation, as of an elephant which is 18 months for a female calf and 22 months for a male calf. 2. நீடித்த கால முயற்சி; a tediously long period of endeavour before functification. *"இதைப் பற்றிய பிரயத்தினம் கசகர்ப்பம்".*

*[யானை + கருப்பம்]*

**யானைக்கல்** *yāṉai-k-kal,* பெ.(n.) மதுரையில் வைகைக் கரையிலுள்ள வரலாற்றுச் சிறப்பு மிகு இடங்களுளொன்று; a famous historical place located in the river bank of vaigai at Madurai.

**யானைக்கவடு** *yāṉai-k-kavaḍu,* பெ.(n.) யானைபோல் மனத்துள் மறைத்து வைத்திருக்கும் காழ்ப்புணர்வு – நீங்கா வெறுப்பு; concealed grudge or ill-will or resentment, as of an elephant.

*[யானை + கவடு]*

**யானைக்கள்ளிமுனையாள்** *yāṉai-k-kaḷḷi-muṉaiyāḷ,* பெ.(n.) ஒரு பூண்டு (வின்.); spurge sprout, boucerosia umbellata.

**யானைக்கற்றாழை** *yāṉai-k-kaṟṟāḻai,* பெ.(n.) கற்றாழை வகை (L); century plant.

மறுவ. காட்டுக்கற்றாழை.

*[யானை + கற்றாழை]*

**யானைக்கன்று** *yāṉai-k-kaṉṟu,* பெ.(n.) யானைக்குட்டி (பிங்.); young one or calf of an elephant. *"யானைக் கன்றும் வளநாடும் பெற்றவர்".*

*[யானை + கன்று. கன்று = யானையின் இளமைப்பெயர்]*

**யானைக்காதல்** *yāṉai-k-kādal,* பெ.(n.) முகைதீன் இபின் சின்ன இபுராகிம் என்பவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட காதல் பனுவல்; a treatise titled 'Kādal paṉuval' written by Mohideen ibin chinna Ibrahim, 19C.

*[யானை + காதல்]*

**யானைக்கால்** *yāṉai-k-kāl,* பெ.(n.) 1. யானைக்கால்நோய் பார்க்க; see *yāṉai-k-kāl-nōy.* 2. பெரிய நீர்த்தூம்பு (வின்.); large tube fixed on the walls or roofs for draining rain water.

மறுவ. பெருங்கால், மோத்திக்கால்.

**Skt.** சீலிபதம்

*[ஏன் → ஏனை → யானை + கால்]*

குல் → கல் → கால் = தோன்றல், வளர்தல். கால் = "குல்" என்னும் தோன்றற் கருத்து வேரிலிருந்து, முகிழ்த்த சொல்.

முழங்காலுக்குக் கீழ் பெருமளவில் வீங்கிப் பருக்கச் செய்யும் ஒரு வகை நோய்.

**யானைக்கால்சுரம்** *yāṉai-k-kāl-šuram*, பெ.(n.) யானைக்கால் நோயின் அறிகுறியாக ஏற்படும் காய்ச்சல்; a kind of fever preceeding the attack of elephantasis.

*[யானைக்கால் + சுரம்.]*

**யானைக்கால்நோய்** *yāṉai-k-kāl-nōy*, பெ.(n.) பெருங்கால் நோய்; elephantiasis - *Filariasis.*

*[யானைக்கால் + நோய்]*

யானையின் கால் வீங்கிப் பருத்துள்ளது போன்று, மனிதர்களின் காலினையும் வீங்கிப் பருக்கச் செய்யும் நோய்.

இந்நோய், மிகநுண்ணிய உயிரியினால் (Wuchereia Bancrofti) உருவாகிறது. ஆடவர்களிடம் அதிகம் காணப்படுகிறது. குளம் குட்டைகளிற் காணப்படும் கொசுக்களின் மூலம் இந்நோய் பரவுகிறது. அமெரிக்கா, இசுபெயின், ஆத்திரேலியா, சீனா, இந்தியா, வடமேற்கு ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் இந்நோய் பரவியுள்ளது.

**யானைக்கால்மூலி** *yāṉai-k-kāl-mūli*, பெ. (n.) யானையடியிலை என்னும் பெயர் கொண்ட மருந்துச் செடி; plant with leaf as big as elephants foot mark.

*[யானைக்கால் + மூலி.]*

யானையின் அடிச்சுவட்டினைப் போன்று வட்ட வடிவிலான இலைகளைக் கொண்ட மருந்துக் கொடி.



**யானைக்கால்வணக்கிப்பூடு** *yāṉai-k-kāl-vaṇakki-p-pūḍu*, பெ.(n.) சிறு நெருஞ்சில் (மூ.அ.); cows thorn, land caltrops- *Tribulus terrestrs.*

*[யானை + கால் + வணக்கு + பூடு]*

**யானைக்கால்வணங்கி** *yāṉai-k-kāl-vaṇaṅgi*, பெ.(n.) யானைக்கால்வணங்கிப் பூடு பார்க்க; see *yāṉai-k-kāl-vaṇaṅgi-p-pūḍu.*

*[யானைக்கால் + வணங்கி.]*

**யானைக்கால்வீக்கம்** *yāṉai-k-kāl-vīkkam*, பெ.(n.) காலில், தோல், சவ்வு, தசை, எலும்பு முதலானவற்றில் நீர் சேர்வதனால் ஏற்படும் வீக்கம்; a swelling caused in the leg by the accumulation fluid and morbid growth flesh.

*[யானைக்கால் + வீக்கம்.]*

இரண்டு கால்களிலும், கெட்டநீர் சேர்ந்து, யானைக்கால் போன்று பெருத்து வீக்கத்துடன் தேவையற்ற சதை வளர்ச்சியை உண்டாக்கும் நோய்.

**யானைக்காலை** *yāṉai-k-kālai,* பெ.(n.) யானைகள் கட்டுமிடம் (வின்.); Elephant-stable.

*[யானை + காலி→காலை. காலி = மாடுகள் காலி.]*

**யானைக்காற்சுவடி** *yāṉai-k-kāṟ-šuvaḍi,* பெ.(n.) யானைக்கால்மூலி பார்க்க; see *yāṉai-k-kāl-mūli.*

*[யானைக்கால் + சுவடி.]*

**யானைக்காற்புழு** *yāṉai-k-kāṟ-puḻu,* பெ.(n.) யானைக்கால் நோயினை யுண்டாக்கும் புழு; a kind of worm developing elephantiasis.

*[யானைக்கால் + புழு.]*

**யானைக்காற்பூடு** *yāṉai-k-kāṟ-pūḍu,* பெ.(n.) யானைக்காற்சுவடி பார்க்க; see *yāṉai-k-kāṟ-šuvaḍi.*

*[யானைக்கால் + பூடு.]*

**யானைக்கிட்டி** *yāṉai-k-kiṭṭi,* பெ.(n.) வாட்கோரை; a kind of grass.

*[யானை + கிட்டி = பெருங்கோரை வகை.]*

**யானைக்கிளிஞ்சில்** *yāṉai-k-kiḷiñjil,* பெ.(n.) கிளிஞ்சில் வகையுளொன்று; a kind of oyster or shell. *கடற்கரையில் ஒதுங்கிக் கிடக்கும் யானைக்கிளிஞ்சில்கள் மேலை நாடுகளில் தரமிக்க உணவாகப் பயன்படுகின்றன (உ.வ.).*

மறுவ. படகுக்காலி.

*[யானை + கிளிஞ்சில் = கடல்வாழ் உயிரி வகை.]*

கிள்→கிளி→கிளிஞ்சில் (தொல்.பொருள். 584, உரை).

இக் கிளிஞ்சில்கள் யானைக்கொம்பின் வடிவத்தைப் போன்றவை. கடற்கரையின் மணற்படுகையில் பரவலாகக் காணப்படுபவை. எல்லாக் கடற்கரைகளிலும் மடிந்த நிலையில் ஒதுங்கிக் கிடக்குந் தன்மையன.

(எ.டு.) டென்டேலியம் ஆக்டகோணம்.

**யானைக்குட்டம்** *yāṉai-k-kuṭṭam,* பெ.(n.) பெருநோய் வகை; a kind of leprosy.

*[யானை + குட்டம்.]*

யானைத்தோல் போல், சொறசொறவென்று தடித்துக் கறுத்து, மரத்துக் காணப்படும் நோய்.

**யானைக்குப்பு** *yāṉai-k-kuppu,* பெ.(n.) சதுரங்கம்; chess. *"யானைக்குப்பு ஆடுவாரைப் போலே" (திவ். திருப்பா. 26, வ்யா.).*

*[யானை + குப்பு]*

**யானைக்குரு** *yāṉai-k-kuru,* பெ.(n.) மர வகை; species of cinnamon.

*[யானை + குரு]*

**யானைக்குருகு** *yāṉai-k-kurugu,* பெ.(n.) சக்கரவாகம், 1 (சூடா.); cakra bird.

*[யானையுண்குருகு → யானைக்குருகு]*

**யானைக்குறுந்தோட்டி** *yāṉai-k-kuṟun tōṭṭi,* பெ.(n.) குறுந்தோட்டிப் பூடுவகை; queensland hemp.

*[யானை + குறுந்தோட்டி]*

**யானைக்குறும்பு** *yāṉai-k-kuṟumbu,* பெ.(n.) யானைக்கவடு (இ.வ.) பார்க்க; see *yāṉai-k-kavaḍu.*

*[யானை + குறும்பு]*

யானைக்கூடம் *yāṉai-k-kūḍam*, பெ.(n.) யானைகள் கட்டுமிடம் (வின்.); elephant stable.

*[யானை + கூடு→கூடம்.(கூடம் = யானைச் சாலை)]*

யானைக்கை *yāṉai-k-kai*, பெ.(n.) 1. தும்பிக்கை; elephant's trunk. 2. கை வீக்கங் காணும் நோய்வகை; a filarial disease in which the hand gets swollen.

*[யானை + கை]*

யானைக்கைக்கோள் *yāṉaikkaikkōḷ*, பெ.(n.) பகைவரை பெறிந்து அவர்தம் கரிமாவையும் காவலையும் கைக் கொண்டதைக் கூறும் புறத்துறை (பு.வெ.6, 24) (புறப்.); theme of destroying one's enemy and capturing his elephants and fortress.

*[யானை + கைக்கொள் → கைக்கோள்.]*

யானைக்கொசுகு *yāṉai-k-kośugu*, பெ.(n.) பெரிய கொசுகு; large musquito.

*[யானை + கொசுகு.]*

யானைக்கொந்தி *yāṉai-k-kondi*, பெ.(n.) பெரிய மருந்திலை வகையு ளொன்று; a kind of large medicinal leaves.

*[யானை + கொந்தி.]*

யானைக்கொப்பம் *yāṉai-k-koppam*, பெ.(n.) யானையை அகப்படுத்துங் குழி (சூடா.); kheda, pit for entrapping elephants.

*[யானை + கொப்பம்]*

யானைக்கொம்பன் *yāṉai-k-kombaṉ*, பெ.(n.) 1. கன்னி (புரட்டாசி)யில் விதைத்து ஆறு மாதத்தில் விளையும் ஒருவகை நெல்; (G.Tn.D.153) a species of paddy sown generally in *puraṭṭāśi* and reaped in six months and having long, thin, white grains. 2. வாழை வகை (வின்.); species of plantain.

*[யானை + கொம்பன்]*

யானைக்கொம்பு *yāṉai-k-kombu*, பெ.(n.) 1. யானையின் கொம்பு; elephant's tusk. 2. யானையின் எலும்பு; elephant's bone. 3. நெற்பயிரில் விழும் ஒருவகை நோய்; a disease of paddy crops.

*[யானை + கொம்பு]*

யானைச்சச்சாரம் *yāṉai-c-caccāram*, பெ.(n.) யானைகள் கட்டுமிடம்; elephant stable.

*[யானை + சச்சாரம்]*

யானைச்சப்பரம் *yāṉai-c-capparam*, பெ.(n.) யானை மீது மேல்விதானமுள்ள இருக்கை (அம்பாரி) (யாழ்.அக.); howdah.

*[யானை + சப்பரம்]*



யானைச்சார்வு *yāṉai-c-cārvu*, பெ.(n.) யானைகள் கட்டுமிடம் (வின்.); elephant-stable.

*[யானை + சார்வு]*

யானைச்சாலை *yāṉai-c-cālai,* பெ.(n.) யானைகள் கட்டுமிடம் (வின்.); elephant-stable.

மறுவ. யானைக்கூடம்.

*[யானை + சாலை]*

யானைச்சீரகம் *yāṉai-c-cīragam,* பெ. (n.) பெருஞ்சீரகம், 2 (மலை.); chinese anise.

*[யானை + சீரகம்]*

யானைச்சுண்டை *yāṉai-c-cuṇḍai,* பெ.(n.) காட்டுச் சுண்டை; solanum ferox.

*[யானை + சுண்டை]*

யானைச்சொறி[1] *yāṉai-c-coṟi,* பெ.(n.) பெருந்தினவு நோய் (M.L.); dry tetter, a scaly eruption, psoriasis.

*[யானை + சொறி]*

யானைச்சொறி[2] *yāṉai-c-coṟi,* பெ.(n.) சாம்பல் நிறத்திலோ, சிவப்பு நிறத்திலோ தடிப்புகளையும், வெள்ளை நிறச் செதில்களையும் ஏற்படுத்தும் ஒரு வகை தோல் நோய்; psoriasis.

*[யானை + சொறி]*

யானைத்தடிக்கால் *yāṉai-t-taḍikkāl,* பெ.(n.) யானைத்தடிச்சல் பார்க்க; see *yāṉai-t-taḍiccal.*

*[யானை + தடிக்கால்]*

யானைத்தடிச்சல் *yāṉai-t-taḍiccal,* பெ. (n.) 1. படர்கொடி வகை (L.); smooth-leaved fish-bone climber. 2. புளிநறளை (மூ.அக.); bristly trifoliate vine. 3. புளி அரணைப் பூண்டு; a kind of plant.

*[யானை + தடிச்சல்]*

யானைத்தடிப்பு *yāṉai-t-taḍippu,* பெ.(n.) யானைத்தடிச்சல் பார்க்க; see *yāṉai-t-taḍiccal.*

*[யானை + தடிப்பு.]*

யானைத்தண்டம் *yāṉai-t-taṇḍam,* பெ.(n.) யானை செல்லும் வழி (யாழ்.அக.); elephant's track.

மறுவ. யானையடி.

*[யானை + தண்டம்]*

யானைத்தண்டு *yāṉai-t-taṇḍu,* பெ.(n.) ஒருவகைக் கீரைத்தண்டு; large sized amaranth stem.

*[யானை + தண்டு]*

யானைத்தந்தம் *yāṉai-t-tandam,* பெ.(n.) 1. யானையின் கொம்பு; elephant's tusk. 2. யானையின் எலும்பு; elephant's bone.

*[யானை + தந்தம்]*



யானைத்தம்பம் *yāṉai-t-tambam,* பெ.(n.) யானை கட்டுந் தறி; post to which elephants are chained.

*[யானை + Skt. stamba > த. தம்பம்]*

யானைத்தலை *yāṉai-t-talai,* பெ.(n.) அத்தியிலை; the leaf of fig tree.

யானைத்தலைவன் *yāṉai-t-talaivaṉ,* பெ.(n.) யானைக் கூட்டத்துள் தலைமை ஏற்கும் யானை (மலைபடு. 297, உரை); leading prominent elephnat in a herd.

*[யானை + தலைவன்]*

யானைத்தறி *yāṉai-t-taṟi,* பெ.(n.) 1. யானை கட்டுந்தறி; post to which elephants are chained. 2. யானைக் கூடத்தில் யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடா வண்ணம் அவற்றை பிரிக்கிற குறுக்குமரம்; wooden bar set up between elephants in a stable to prevent their fighting with one another.

*[யானை + தறி]*

யானைத்திசை *yāṉai-t-tišai,* பெ.(n.) வடக்கு (யாழ்.அக.); north direction.

*[யானை + திசை]*

பெருந்திசையாகக் கருதப்படும் வடதிசை.

யானைத்திப்பிலி *yāṉai-t-tippili,* பெ.(n.) பெருந்திப்பிலி கொடிவகை; elephant-pepper climber, long pepper.

*[யானை + திப்பிலி]*

யானைத்தீ[1] *yāṉai-t-tī,* பெ.(n.) தணியாத பசியை விளைக்கும் நோய்; a disease that causes insatiable hunger. *"யானைத் தீ நோயரும்பசி கெடுத்த" (மணிமே. 19, 153).*

*[யானை + தீ]*

யானைத்தீ[2] *yāṉai-t-tī,* பெ.(n.) தணியாப் பசியை விளைக்கும் ஒரு நோய். இதனால் காய சண்டிகை மிகத் துன்புற்றுப் பின்மணிமேகலையிட்ட உணவால் பசி யொழிந்தனள் (மணிமேகலை.); a disease of insatiable hungry affecting by this, kayasandigai suffered a lot and satiated with the food offered by *Manimēgalai.*

*[யானை + தீ]*

யானைத்தும்மல் *yāṉai-t-tummal,* பெ.(n.) யானைத்தும்மயிலை விழும், இது குளிசமாடவுதவும்; an unknown leaf.

*[யானை + தும்மல்]*

யானைத்தூண் *yāṉai-t-tūṇ,* பெ.(n.) 1. யானை கட்டுந்தறி; post to which elephants are chained. 2. யானைக் கூடத்தில் யானைகள் ஒன்றோடொன்று போரெதிர்தலைப் பிரிக்கிற குறுக்கு மரம்; wooden bar set up between elephants in a stable to prevent their fighting with one another.

*[யானை + தூண்]*

யானைத்தெல்லு *yāṉai-t-tellu,* பெ.(n.) பெருந்தெல்லு என்னும் கொடிவகை; a creeper.

*[யானை + தெல்லு]*

யானைத்தொழு *yāṉai-t-toḻu,* பெ.(n.) யானைகள் கட்டுமிடம்; elephant stable.

*[யானை + தொழு]*

யானைநகம் *yāṉai-nagam,* பெ.(n.) யானையின் குளம்பு; elephant's nail.

*[யானை + நகம்]*

**யானைநாரத்தை** *yāṉai-nārattai,* பெ.(n.) கடார நாரத்தை; a big variety of citrus fruit, sevila orange.

*[யானை + நாரத்தை]*

**யானைநெருஞ்சி** *yāṉai-neruñji,* பெ.(n.) பெருநெருஞ்சி; a large thirstle - *Tribulus longinosus; Bedalium meria* (சா.அக.).

*[யானை + நெருஞ்சி]*

**யானைநெருஞ்சில்** *yāṉai-neruñjil,* பெ.(n.) பெருநெருஞ்சில் (இங்.வை.111); a stout-stemmed herb.

*[யானை + நெருஞ்சில்]*

கருத்த முட்களையுடைய பெரு நெருஞ்சில்.



**யானைப்பட்டம்** *yāṉai-p-paṭṭam,* பெ.(n.) யானையின் முகவோடை (உரி.நி.); ornamental plate tied to an elephant's fore head.

*[யானை + பட்டம்]*

**யானைப்படுகுழி** *yāṉai-p-paḍukuḻi,* பெ.(n.) யானையை அகப்படுத்துங் குழி (சூடா.); kheda, pit for entrapping elephants.

*[யானை + படுகுழி. (படுகுழி = பெருங்குழி)]*

**யானைப்படை** *yāṉai-p-padaḍai,* பெ.(n.) அரசர்க்குரிய நால்வகைப் படையுளொன்று; one of the four kinds of king's army. *'யானையுடை படைகாண்டல் மிகவினிதே' என்றார் பூதஞ்சேந்தனாரும்.*

*[யானை + படை]*

அடிக்கடி யானைப்படையை அரசன் அணிவகுப்பித்துக் கண்டுகளிப்பான். யானைப் படை அக்காலத்துச் சிறந்த படையாகக் கருதப்பட்டது.

**யானைப்பதி** *yāṉai-p-padi,* பெ.(n.) யானை நகம்; elephant's nail.

*[யானை + நகம்.]*

**யானைப்பந்து** *yāṉai-p-pandu,* பெ.(n.) விளையாட்டு வகை (தஞ். சர. i, 529); a game.

மறுவ. பிள்ளையார் பந்து.

*[யானை + பந்து]*

யானைப்பந்து என்னும் இந்த ஆட்டம் பிள்ளையார் பந்து என்னும் விளையாட்டென மொழிஞாயிறு குறித்துள்ளார்; ஊரகப் பகுதிகளில் இந்த விளையாட்டு இன்றும் ஆடப்படுகிறது. இவ்விளையாட்டு பற்றிப் பாவாணர் கூறுவது :

ஆட்டத்தின் பெயர் பிள்ளையாரைக் குறிக்கும் ஒரு கல்லின்மேற் பந்தை எறிந்தாடும் ஆட்டு, பிள்ளையார் பந்து. இது திருச்சிராப்பள்ளி வட்டாரத்திற் பிள்ளையார் விளையாட்டென வழங்கும்.

ஆடுவார் தொகை: பொதுவாக, எண்மர்க்குக் குறையாத பலர் இதை ஆடுவர்.

ஆடு கருவி: ஏறத்தாழ ஆறங்குல நீளமுள்ள ஒரு கல்லும், ஒரு பந்தும், இதற்குரிய ஆடு கருவிகளாம்.

ஆடிடம்: சுவரடியும் அதையடுத்த வெளிநிலமும் ஆடுகளமாம்.

ஆடுமுறை : ஆடுவோரெல்லாரும் சமத் தொகையினரான இரு கன்னையாகப் பிரிந்து கொள்வர். ஒரு செங்கல்லை அல்லது சிறு கல்லைப் பிள்ளையாராக கோடித்து நட்டு, ஒரு கன்னையார் சற்றொப்ப பதினாறடித் தொலைவில் எதிர்நின்று ஒவ்வொருவராய் ஒவ்வொரு தடவை நிரனிரை ஒருவர்பின் ஒருவராய்ப் ஒருமுறை மட்டுமே பிள்ளையாரைப் படுகிடையாகச் சாய்த்தற்குப் பந்தாலடிக்க, இன்னொரு கன்னையார் இரு பக்கத்திலும் பிள்ளையார்க்கும் அவருக்கும் இடையில் வரிசையாக நின்று கொண்டு, எறியப்பட்ட பந்தைப் பிடிக்க முயல்வர். பிள்ளையாரைப் படுகிடையாய்ச் சாய்த்த பந்தை மேலெழும்பொழுது பிடித்து விடினும், எறிந்த பந்து பிள்ளையாற்மேற் படாவிடினும், பட்டும் அதைப் படுகிடையாய்ச் சாய்க்காவிடினும், எறியுங் கன்னையாள் மாறிக்கொண்டேயிருந்து அனைவருந் தீர்ந்தபின், எதிர்க்கன்னை அடிக்குங் கன்னையாராகவும் மாறல் வேண்டும்.

பிள்ளையாரைப் படுகிடையாய்ச் சாய்த்த பந்து பிடிக்கப்படாவிடின், பிடிக்க நின்ற கன்னையர் அனைவரும் சற்றுத் தொலைவில் இடையிட்டு நிற்பர். அடித்த கன்னையாளரனைவரும் நெருக்கமாகக் கூடி நின்று, அவருள் ஒருவன் பந்தைத் தன் அடி வயிற்றின் மேல் வைத்து அது வெளிக்குத் தெரியாமல் இரு கையாலும் பொத்திக்கொண்டும், பிறரும் தாம் பந்து வைத்திருப்பதாக எதிர்க் கன்னையாருக்குத் தோன்றுமாறு தனித்தனி நடித்துக்கொண்டும், அவரிடையே பிரிந்து செல்வர். எதிர்க்கட்சியாருள் யாரேனும் ஒருவன், உண்மையாய்ப் பந்து வைத்திருப்பவனை ஐயுறாது அவனுக்குப் பக்கமாக நிற்பின், பந்து வைத்திருப்பவன் திடுமென்று அவன்மேல் எறிந்து விடுவான்; அத்துடன் ஓராட்டை நிறைவுற்றதாகக் கருதப்பெறும். அடுத்த ஆட்டை ஆடுவது ஆடுவார் விருப்பத்தைப் பொறுத்தது.

ஆட்டுத் தோற்றம் : ஒருகால், பிறமதப் பகைமைபற்றியும் கொள்ளையடித்தற் பொருட்டும், இடைக் காலத்திற் சில அரசரும் கொள்ளைத் தலைவரும் தெய்வச்சிலைகளை (விக்கிரகங்களை) உடைத்ததும் கவர்ந்ததும், இவ் விளையாட்டுத் தோற்றத்திற்குக் காரணமாயிருந்திருக்கலாம். கசினி மகமது, மாலிக்காபூர், திருமங்கையாழ்வார் முதலியோர் செயல்கள், இங்குக் கவனிக்கத்தக்கன.

**யானைப்பல்** *yāṉai-p-pal,* பெ.(n.) யானையின் கொம்பு; elephant's tooth, tusk. *"யானைப் பல்லை உரைத்துத் தடவினால் மண்டையிடி போகும்".*

மறுவ. யானைத்தந்தம்

*[யானை + பல்]*



**யானைப்பல்லாதி** *yāṉai-p-pallādi,* பெ.(n.) கண்ணில் பூவிழும் நோய்க்கான மருந்து மாத்திரை; an ayurvedic medicinal tablet for opacity of the lens.

**யானைப்பாகன்** *yāṉai-p-pāgaṉ,* பெ.(n.) யானை நடத்துவோன் (பிங்.); elephant driver, mahout.

மறுவ. மாவுத்தர்

*[யானை + பாகன்]*

**யானைப்பிச்சான்** *yāṉai-p-piccāṉ,* பெ.(n.) கொடிவகை (மலை.); bristly trifoliate vine.

மறுவ. புளிநறளை.

*[யானை + பிய் → பிய்ச்சான்]*

**யானைப்பிஞ்சு** *yāṉai-p-piñju,* பெ.(n.) அத்திப் பிஞ்சு; very tender big fruit.

*[யானை + பிஞ்சு]*

ஈங்கு பிஞ்சு என்பது காய்நிலைகள் நான்கனுள் தோன்றிய நிலையினைக் குறிக்கும் என்பார் மொழிஞாயிறு.

புள் → (பிள்) → பீள் = இளங்கதிர். இளமைப்பூட்டை = இளங்கதிர். பூட்டை → பீட்டை (மு.தா.39). புள் → பிள் → பின் → பின்சு → பிஞ்சு. யானை என்பது பெருமைப் பொருள் முன்னொட்டு.

**யானைப்பிரண்டை** *yāṉai-p-piraṇḍai,* பெ.(n.) பெரிய வடிவிலமைந்த பிரண்டை; large species of square stalked vine vitis quadrangularis.

*[யானை + பிரண்டை]*

புரண்டை → பிரண்டை = புரண்டிருக்கும் அல்லது முறுக்குண்டிருக்கும் கொடி (மு.தா.242). முறுக்குண்ட நீள்பெருங் கொடியே யானைப் பிரண்டை. யானை என்பது ஈங்கு பெருமைப் பொருள் குறித்த முன்னொட்டு.

**யானைப்பீசன்** *yāṉai-p-pīšaṉ,* பெ.(n.) புதுவகைக் கொன்றை; a variety of cassia tree.

*[யானை + பீசன்]*

**யானைப்புச்சான்** *yāṉai-p-puccāṉ,* பெ.(n.) புளிநறளை; a hairy climbing plant.

*[யானை + புச்சான்]*

**யானைப்புடுக்கு** *yāṉai-p-puḍukku,* பெ.(n.) சதை வளர்ந்து பருத்த புடுக்கு; elephantoid scrotum.

*[யானை + புடுக்கு – புடை → புடம் → புட்டம் = புடைத்த குண்டி. புட்டம் → புட்டா → புட்டை = பெருத்த விதை (அண்டம்) (வே.க.3–77) புடம் → புட → புடுக்கு. 'கு' = சொல்லாக்க ஈறு]*

**யானைப்புளி** *yāṉai-p-puḷi,* பெ.(n.) பெரிய மரவகை (மலை.); baobab.

*[யானை + புள் → புளி]*

யானைப் புளி என்னுஞ்சொல், கருமையான பருத்த பெரியமரத்தைக் குறிக்கும். புளிப்புச் சுவை மிக்க சற்றுப் பெரிய பழங்களைத் தரும் புளியமரம்.

**யானைப்புளியமரம்** *yāṉai-p-puḷiya maram,* பெ.(n.) பப்பரப்புளி, பொந்தம் புளி மரம், பூரி மரம்; a big tamarind tree, a stout stemmed tamarind tree.

*[யானை + புளிமரம் → புளியமரம்]*

**யானைப்புளுகன்** *yāṉai-p-puḷugaṉ,* பெ. (n.) பெரும் பொய்யன் (இ.வ.); great liar.

*[யானை + புளுகன் = பெரும்புளுகன். புள் → புளு → புளுகு = பொய் : (வே.க.3.101). புளு + புளுகு → புளுகன். யானை = உருவிற்பெரியதைக் குறிக்கும் அடை.]*

ஒ.நோ. யானைக்கால். யானைப்புடுக்கு, யானை நெருஞ்சில், யானைக்காது.

**யானைப்பெருங்காயம்** *yāṉai-p-peru-ṅ-kāyam,* பெ.(n.) 1. ஒருவகைப் பெருங்காயக் கலவை (வின்.); a medicinal preparation of asafoetida for elephants. 2. பெருங்காய வகை (சங்.அக.); a kind of asafoetida.

*[யானை + பெருங்காயம்]*

மருந்துச் சரக்காகப் பயன்படும் பெருங்காயம். ஈங்கு யானை என்னும் அடை, கருமையும், பருமையுங் குறித்ததென்க.

**யானைப்போர்** *yāṉai-p-pōr*, பெ.(n.) யானைகள் ஒன்றோடொன்று பொரும் போர்; elephant-fight with each other. *"குன்றேறி யானைப் போர் கண்டற்றால்" (குறள், 758).*

*[யானை + போர்]*

**யானைபதி** *yāṉai-pati*, பெ.(n.) நகம்; nail.

மறுவ. யானையுகிர்.

*[யானை + பதி]*

**யானைபாய்ச்சு-தல்** *yāṉai-pāyccu-*, 5 செ.கு.வி.(v.i.) யானையை மதம்படுமாறு செய்தல்; to make an elephant go must or musth. *"மறைந்தி யானை பாய்ச்சி விடல்" (பழ. 62).*

*[யானை + பாய்ச்சு-]*

**யானைபிடி-த்தல்** *yāṉai-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) காட்டில் வாழும் யானையைக் குழிவெட்டிப் பிடித்தல்; to catch a wild elephant by the way of digging pit.

*[யானை + பிடி-. புள் → பிள் → பிண்டி → பிடி-.]*

யானைபிடி-த்தல் = யானையைக் கைப்பற்றுதல், அகப்படுத்துதல், கட்டுதல். யானை பிடித்தல் நால்வகைப்படும்.

1. பெண்யானையின் மூலம் பிடித்தல்; பெண்யானையின் இனப்பெருக்கம் பருவகாலத்தில் - காட்டுக்குள் அனுப்பி - ஆண் யானையைப் பிடித்தல்.

2. தாரூ முறையில் மதம் பிடித்த இரண்டு யானைகளை யானைக் கூட்டமுள்ள காட்டுப் பகுதியில் போகச் செய்து பிற யானைகளைப் பிடித்தல். இமயமலைச் சாரலில் கூர்க்கரினத்தார் இம்முறையினை இன்றும் கையாளுகின்றனர்.

3. குழிவெட்டிப் பிடித்தல். குழிவெட்டிப் பிடிக்கும் முறை பற்றிய குறிப்பு புறநானூற்றிலும் (புறம்.7:4:19). சிலப்பதிகாரத்திலும் (25:3) காணப்படுகிறது. இம்முறை 'பயம்பு' என்று குறிக்கப்பட்டுள்ளது.

இம்முறையில் குறிப்பிட்ட அளவு ஆழத்திற்கு குழிகளைவெட்டி, அதன்மேற்பரப்பினை மூங்கில், இலை, தழைகளால் மூடிப் பிடிப்பர்.

4. நான்காவது வகை, கெடா (Kheda) முறையைச் சார்ந்தது. இதுபற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை.

**யானைமஞ்சள்** *yāṉai-mañjal*, பெ.(n.) பெருத்த கிழங்குகளையுடைய மஞ்சள் வகை (மலை.); a large species of turmeric.

*[யானை + மஞ்சள்]*

**யானைமட்டம்** *yāṉai-maṭṭam*, பெ.(n.) இள யானை (யாழ்.அக.); young elephant.

*[யானை + மட்டம்]*

**யானைமணி** *yāṉai-maṇi*, பெ.(n.) யானையின் இருமருங்குந் தூங்கும் மணி; bells suspended on either side of an elephant. *"யானைவரும் பின்னே, மணி யோசைவரும் முன்னே" (பழ.).*

*[யானை + மணி]*

**யானைமதம்** *yāṉai-madam*, பெ.(n.) யானையின் தலைப்பக்கம் இரண்டு, கண் இரண்டு, கைத்துளை இரண்டு குறி ஒன்று என ஏழிடங்களின்று பாய்வதாகக் கருதப்படும் மதநீர்; must exudation of an elephant, said to issue from seven places, the two temples, the two eyes, the two nostrils and the testes.

*[யானை + மதம். மதம் = மதநீர்]*

**யானைமயக்கி** *yāṉai-mayakki,* பெ.(n.) ஒரு செடி; a plant.

*[யானை + மயக்கி]*

**யானைமலை** *yāṉai-malai,* பெ.(n.) 1. மதுரைக்கு வடக்கிலுள்ள ஒரு குன்று (தேவா. 858, 1); a long, bare, elephant-shaped rock near Madurai. 2. கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள ஒரு மலைத் தொடர்; Anaimalais, a range of mountains in the southern part of the Coimbatore district. *"ஊனெழு குன்றை யானைமலையென" (திருவாலவா. 26, 28).*

*[ஏனை→யானை + மலை]*

**யானைமறம்** *yāṉai-maṟam,* பெ.(n.) அரசனது யானையின் போர் வீரத்தைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 6); theme praising the heroic deeds of the king's elephant in battle.

*[யானை + மறம்]*

**யானைமறவர்** *yāṉai-maṟavar,* பெ.(n.) யானை வீரன்; elephant trooper.

மறுவ. ஆணையாள், குஞ்சரமல்லர், அத்தி மல்லர்.

*[யானை + மறவர்]*

**யானைமால்** *yāṉai-māl,* பெ.(n.) யானைகள் கட்டுமிடம் (வின்.); elephant-stable.

*[யானை + மால். மால் = யானை கட்டுந் தொழுவம்.]*

**யானைமாவுத்தன்** *yāṉai-māvuttaṉ,* பெ.(n.) யானைப்பாகன்; mahout.

*[யானை + மாவுத்தன்]*

**யானைமீக்குவம்** *yāṉai-mīkkuvam,* பெ.(n.) கறுப்பு மருதுவகை; leathery-winged myrobalan.

*[யானை + மீக்குவம்]*

**யானைமீன்** *yāṉai-mīṉ,* பெ.(n.) 1. பெருமீன் வகை (பிங்.); a very large fish. 2. திமிங்கில வகை (தக்கயாகப். 384, உரை); a kind of whale.

*[யானை + மீன்]*

**யானைமுகபடாம்** *yāṉai-muga-paḍām,* பெ.(n.) யானையின் கும்பத்தலத்திலிடும் ஒப்பனைச் சீலை (பிங்.); ornamental cloth covering the fore head of an elephant.

*[யானை + முகபடாம்]*

**யானைமுகவற்கிளையோன்** *yāṉai-mugavaṟkiḷaiyōṉ,* பெ.(n.) 1. முருகக் கடவுள் (பிங்.); Skanda. 2. வீரபத்திரக் கடவுள் (சூடா.); *Vīrabhadra.*

**யானைமுகவன்** *yāṉai-mugavaṉ,* பெ.(n.) பிள்ளையார் கடவுள் (திவா.); Ganēśa.

*[யானை + முகவன்]*

**யானைமுகவோடம்** *yāṉai-muka-v-ōḍam,* பெ.(n.) யானையுருவமான முகப்புள்ள தோணி (சிலப். 13, 176, உரை); boat with an elephant-shaped prow.

மறுவ. கரிமுகவம்பி (சிலப்.13,179)

*[யானை + முகம் + ஓடம்]*

**யானைமுள்** *yāṉai-muḷ,* பெ.(n.) 1. நீருடைய மரம்; buffalo thorn cutch. 2. குடைவேல் மரம்; umbrella thorn babul.

*[ஏனை→யானை + முள்]*

யானைமுள்ளிச்சங்கு *yāṉai-muḷḷi-c-caṅgu,* பெ.(n.) சங்குவகை, பெரிய யானை போன்ற அமைப்புடையதும், வெளிப்புறம் முட்கள் நிறைந்ததுமான சங்கு; an elephant-shaped thorny conch.

யானைமூத்திரம் *yāṉai-mūttiram,* பெ.(n.) யானையின் சிறுநீர்; elephant's urine.

*[யானை + மூத்திரம்]*

இது மருந்துக்கு பயன்படும்.

யானையங்குருகு *yāṉai-y-aṅ-kurugu,* பெ.(n.) குருகு வகை; a kind of heron. *"யானையங் குருகின் சேவலோடு" (மதுரைக். 674).*

யானையடி *yāṉai-y-aḍi,* பெ.(n.) 1. சதுரங்க ஆட்டத்தில் யானை செல்லும் நெறி; the course of the elephant or the rook in a game of chess. 2. நேர்வழி; straight path or course. 3. ஐயனார் கோயில் முன்றிலில் யானையுரு நிறுத்தியிருக்குமிடம்; place where an elephant's figure is set in front of an *Aiyaṉār* temple. 4. பெரிய வட்டமாயுள்ளது; anything large and round like the foot of an elephant. *"யானையடி யப்பளம்".* 5. செடிவகை (இ.வ.); a plant.

*[யானை + அடி. அண் → அடி. இனி, அடு → அடி என்றுமாம்.]*

யானை நிறுத்தியிருக்கும் அல்லது கட்டியிருக்கும் பெரிய வட்டமான இடமே, "யானையடி" எனப்படும்.

யானையடிக்கல் *yāṉaiyaḍi-k-kal,* பெ.(n.) தளம்போட உதவும் பெரிய சதுரச் செங்கல் (இ.வ.); large sized square brick, used in flooring or roofing.

*[யானையடி + கல்]*

யானையடியிலை *yāṉaiyaḍi-y-ilai,* பெ.(n.) யானைக்கால்மூலி பார்க்க; see *yāṉai-k-kāl-mūli.*

*[யானையடி + இலை.]*

யானைத்தடம் போன்று அமைப்புள்ள மூலிகையிலை.

யானையணைதறி *yāṉai-y-aṇai-taṟi,* பெ.(n.) 1. யானை கட்டுந்தறி; post to which elephants are chained. 2. யானைக் கூடத்தில் யானைகள் ஒன்றோடொன்று சண்டையிடா வண்ணம் அவற்றைப் பிரிக்கிற குறுக்குமரம்; wooden bar set up between elephants in a stable to prevent their fighting with one another.

*[யானை + அள் → அண் → அண → அணை + தறி. (அணைதறி = கரி, பரி முதலியவற்றைக் கட்டும் கம்பம் அல்லது குறுந்தறி)]*

யானையறுகு *yāṉai-y-aṟugu,* பெ.(n.) பெரிய அருகம்புல்; large sized dubgrass or harialli grass.

*[யானை + அறு + அறுகு]*

மாந்தர்தமை வருத்தும் பெரிய நோய்களை அறுப்பது யானையறுகு. பயிர் பச்சைகளைக் களைகளாக வேரூன்றி அழிப்பதனாலும், இப்பெயர் வந்ததெனலாம்.

யானையாள் *yāṉai-y-āḷ,* பெ.(n.) யானை வீரன்; elephant trooper.

*[யானை + ஆள்.]*

யானையாளி *yāṉai-yāḷi,* பெ.(n.) யாளி (சூடா.) பார்க்க; see *yāḷi.*

*[யானை + யாளி]*

**யானையுண்குருகு** *yāṉai-y-uṇ-kurugu,* பெ.(n.) 1. யானையைக் கொன்று தின்பதாகக் கருதப்படும் ஒரு பெரும் பறவை (வின்.); a labulous bird, reputed to be able to devour an elephant. 2. இரவில் இணை பிரிந்து வருந்துவதாகக் கூறும் பறவை வகை; a kind of bird that anguishes for sepearation of its pair in night. *சக்கரவாகச் செழும்பெடை காண்"* *(தணிகைப்பு. களவு.347).*

*[யானை + உண் + குருகு]*

**யானையுரித்தோன்** *yāṉai-y-urittōṉ,* பெ.(n.) சிவபிரான்; *Śivaṉ,* as having flayed an elephant.

*[யானை + உரித்தோன்]*

**யானையெலுமிச்சை** *yāṉai-y-elumiccai,* பெ.(n.) பெரிய எலுமிச்சை; large sized species of lime.

*[யானை + எலுமிச்சை]*

**யானையேற்றம்** *yāṉai-y-ēṟṟam,* பெ.(n.) யானை மீதேறி அதனையடக்கி நடத்தும் வித்தை (பதார்த்த. 1451, தலைப்பு); art of riding an elephant bringing it under his control.

*[யானை + ஏறு→ஏற்று→ஏற்றம்]*

அரசர்க்குரியனவாகச் சொல்லப்பெறும் அடையாளப்பொருள் இருபத்தொன்றனுள் வலிமை, பெருமை முதலிய சிறப்புக்களைக் குறிக்கும் யானை.

அரசப் பதவி காணவிழைவார் கற்கவேண்டும் வித்தைகளுள் யானையேற்றமு மொன்று.

**யானையைவிழுங்குமீன்** *yāṉaiyai-viḻuṅgu-mīṉ,* பெ.(n.) திமிங்கிலம் (சா.அக.); whale.

*[யானை + ஐ + விழுங்கு + மீன்]*

யானை விழுங்குமீன் என்னும் பெயருள்ள திமிங்கிலம் கடலில் வாழ்வது; பாலூட்டி யினத்தைச் சார்ந்தது. மீனையொத்த தோற்றமுடைய பெரிய விலங்கு.



**யானைவணக்கி** *yāṉai-vaṇakki,* பெ.(n.) யானைத்தோட்டி (பிங்.); elephant goad.

*[யானை + வணக்கு → வணக்கி]*

**யானைவணங்கி**[1] *yāṉai-vaṇaṅgi,* பெ.(n.) 1. தேட் கொடுக்கிச் செடி; a plant. 2. நெருஞ்சி; a prostrate plant with thorny fruits, land caltrops-*Tribulus terrestris.*

*[யானை + வணங்கி]*

**யானைவணங்கி**[2] *yāṉai-vaṇaṅgi,* பெ.(n.) 1. சிறுசெடிவகை; turnsole. 2. ஒரு வகைச் செடி; a stout-stemmed herb with spiny fruits and slimy leaves.

*[யானை + வணங்கு → வணங்கி]*

**யானைவாரி** *yāṉai-vāri,* பெ.(n.) 1. யானை பிடிக்குமிடம்; place where elephants are caught or happed. 2. யானைகள் கட்டுமிடம் (வின்.); elephant-stable.

*[யானை + வாரி. வாரி - யானை யகப்படுத்துமிடம்]*

யானைவாழை *yāṉai-vāḻai,* பெ.(n.) 1. பெரிய வாழைவகை; a large species of plantain. 2. நீண்ட குலை கொண்ட ஒருவித வாழை; stunted plantain not more than four feet hight and having its bunch of fruits hanging down like a elephant's trunk.

*[யானை + வாழை]*

யானைவிச்சுளி *yāṉai-viccuḷi,* பெ.(n.) கழுகு வகை (வின்.); a species of osprey.

*[யானை + விச்சுளி]*



யானைவிழுங்குமீன் *yāṉai-viḻuṅgu-mīṉ,* பெ.(n.) யானையைவிழுங்குமீன் பார்க்க; see *yāṉaiyai-viḻuṅgu-mīṉ.*

*[யானை + ஐ + விழுங்கு + மீன்]*

யானைவீரர் *yāṉai-vīrar,* பெ.(n.) எண் பெருந் துணைவருள் யானை மேலிருந்து போர்புரியும் வீரர் (திவா.); warriors riding on elephants, one of *eṉ-perun-tuṉaivar.* *"யானை வீரருமிவுளித் தலைவரும்" (சிலப். 26, 76).*

மறுவ. யானை மறவர், குஞ்சரமல்லர்.

*[யானை + வீரர்]*

யானைவென்றி *yāṉai-veṉṟi,* பெ.(n.) ஒரு யானை பிறிதொன்றோடு பொருது வெற்றி பெறுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. ஒழிபு.8); theme describing the victory of an elephant fighting with another.

*[யானை + வெல்→வென்→வென்றி]*

யானைவேட்டுவன் *yāṉai-vēṭṭuvaṉ,* பெ.(n.) யானை வேட்டையாடுவோன்; one who hunts elephants. *"யானை வேட்டுவன் யானையும் பெறுமே" (புறநா.214).*

*[யானை + வேடு→வேட்டு→வேட்டுவன்.]*

யி *yi,* 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'இ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'i' to the consonant 'y'.

*[ய் + இ → யி]*

யீ *yī,* 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஈ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'ī' to the consonant 'y'.

*[ய் + ஈ → யீ]*

யு *yu,* 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'உ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'u' to the consonant 'y'.

*[ய் + உ → யு]*

யூ *yū,* 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஊ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'ū' to the consonant 'y'.

*[ய் + ஊ → யூ]*

யெ *ye*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'எ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'e' to the consonant 'y'.

*[ய் + எ → யெ]*

யே *yē*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஏ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'ē' to the consonant 'y'.

*[ய் + ஏ → யே]*

யை *yai*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஐ' என்ற நெட்டுயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'ai' to the consonant 'y'.

*[ய் + ஐ → யை]*

யொ *yo*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஒ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'o' to the consonant 'y'.

*[ய் + ஒ → யொ]*

யோ *yō*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஓ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'ō' to the consonant 'y'.

*[ய் + ஓ → யோ]*

யௌ *yau*, 'ய்' என்ற மெய்யெழுத்தும், 'ஔ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the syllable formed by adding the short vowel 'au' to the consonant 'y'.

*[ய் + ஔ → யௌ]*

# வ்

வ் *v*, தமிழ் நெடுங்கணக்கில் பதினான்காம் மெய்யாகப் பல்லிதழில் ஒலிக்கப்பெறும் இடையினவெழுத்து, இவ்வெழுத்து சில விடத்தே அரையுயிராகவும், உடம்படு மெய்யாகவும் ஒலிக்கும் தன்மைத்து; the fourteenth letter of medial consonant in *Tamil* alphabet. It functions as dental labial and glide.

தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களில் இயம்பியவாறும் மாந்தர்தம் நாவில் நன்கு பலுக்கும் பான்மையிலும், மேற்பல்லும், கீழிதழும் ஒன்றிப் பொருந்துங்கால், ஒலிப்பொடு மூச்சு வெளிவரும் போது, பிறக்கும் மெய்யொலி.

மொழியியலார், இம்மெய்யொலியின் பிறப்பிடம் நோக்கி, இதழ்ப் பல்லொலி (labio-dental) என்றும், ஈரிதழ்த் திறப்பொலி (bio-labial) என்றும், அரையுயிர் (semi-vowel) என்றும், ஒழுகொலி (continuant) என்றும், பலவாறு பகுத்துக் கூறுவர்.

தொல்காப்பியர் அவ், இவ், உவ், தெவ் என்னும் நான்கு மொழிகளில், இம் மெய்யொலி ஈறாக வரும் என்று வரையறுத்துள்ளார். இந்நூற்பா வருமாறு:-

*"வகரக் கிளவி, நான்மொழி ஈற்றது" (தொல். எழுத்து.81).*

ஆனால், காலப்போக்கில், இம் மெய்யீற்றிற்குப் பின்னும் உகரச் சாரியை பெற்று, உகர ஈறாக வழங்குவது வழக்கமாகிவிட்டது.

(எ.கா.) அவ் → அவ்வு → கவ்வு → வவ்வு

அவ்(வு)தல் – ஒன்றைக் கவ்வுதலை யொத்த வாய்ச் செய்கை நிலை "அவ்" என்னும் ஒலியைத் தோற்றுவிக்கும்.

கவ்(வு)தல்–மேல்வாய்ப்பல் கீழுதட்டோடு பொருந்துதலே கவ்வும் நிலையாகும். இந்நிலை வகர மெய்யொலிப்பிற்கே ஏற்கும். இதனை நன்னூலார், "மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே" (நன்.85) என்று குறித்துள்ளது காண்க.

வவ்(வு)தல் – என்னுஞ் சொல்லிற் பயிலும் வகர மெய், ஒன்றைக் கையினாற் பற்றுதல் என்னும் பொருண்மையைக் குறிக்கும்.

அ(வ்+ஐ) – அவை

அவ் + ஐ – அவ்வை→அவை. தனிக்குறில் முன் ஒற்று உயிர்வரின் இரட்டும், என்ற நன்னூலாரின் கூற்றினுக்கு ஏற்றவண்ணம் "அவ்வை" என்னும் சொல்லில், மெய்யொலி பயின்று வந்த ஞான்றும், புணர்ச்சியின் கண்ணே, "ஐ"காரம் வரும்போதும், இம் முதனிலையில் உள்ள (அவ்), "வ"கர உடம்படுமெய் கெடும்.

இதனைக் கீழ்காணும் நூற்பாவால் அறியலாம்.

*"அகரத் திம்பர் வகரப் புள்ளியும் ஔ வென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"* இந் நூற்பாவினைத் தொல்காப்பியர், எழுத்ததிகாரத்தில் 56–வது நூற்பாவினுக்கு அடுத்திருக்க வேண்டும் என்பது, ஆய்வாளர் கருத்தாகும்.

வ[1] *va*, தமிழ் வண்ணமாலையில் 'வ்' என்ற மெய்யெழுத்து 'அ' என்ற உயிரெழுத்து முன்னும் பின்னுமாயிணைந்த உயிர்மெய் (அசை) யெழுத்து; the medial syllable formed by adding the short vowel `a', to the consonant `v'.

*[வ் + அ – வ.]*

வகரம் தமிழ் நெடுங்கணக்கில், பதினான்காவது உயிர்மெய்யெழுத்தாகும். மொழியியலாருள் ஒரு பிரிவினர், வகரத்தை உரசொலி யென்பர். மற்றொரு சாரார், "மேற்பல்லும், கீழிதழும் சேருங்கால், ஒலிப்பொடு மூச்சு வெளிவரும் பொழுது, கேட்கின்ற ஒலியாதலால், உரசொலி என்று உரைப்பதைக் காட்டிலும், ஒழுகொலி (Continuant) என்பதே பொருத்தப்பாடுடைத்து" என்பர். வகரத்தின் பிறப்பிடம் பற்றிப் பகருங்கால், *"பல்லித ழியைய வகாரம் பிறக்கும்"* (தொல்.எழுத்து.98) என்று தொல்காப்பியரும், *"மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே"* (நன்.85) யென நன்னூலாரும் குறித்துள்ளமை, இங்கு நினைவு கூரத்தக்கது.

இவ்வாறு, இதழ்ப் பல்லின் (labio-dental) ஒலியாக வகரம் இருந்தாலும், அது ஆங்கிலத்தில் "w" என்பது போல, ஈரிதழ்த் திறப்பொலியாகவும் (Bio-labial) ஒலிக்கின்றது என்றும் மொழியியலாருள் ஒரு பிரிவினர் கருதுவர்.

(எ.கா.) ஔ, அவ்.

*"அகர உகரம் ஔகார மாகும்"* என்பர் தொல்காப்பியர். பின்வந்தோர், *"அகர வகரமும் ஔவாகும்"* என்பர். 'ஔ' என்பதை, கழகக்காலச் செய்யுட்களில், 'அவ்' என்றே பன்மை ஈறாக, "அவ்வே" (புறம்.9:5), *"இவ்வே பீலியணிந்து"* (புறம்.9:5).நம் புலவர் பெருமக்கள் குறித்துள்ளனர். இந்த (உ→வ) உகர வகர மாற்றமே. வகரம் ஈரிதழ்த் திறப்பொலி என்னும் மொழியியல் கொள்கையின் அடிப்படையுண்மையை விளக்கும் வண்ணம் அமைந்துள்ளது என்பது மொழியியலார் கருத்தாகும். இந்த வகரம் சில திராவிட மொழிகளில் ஒலிப்புடைப் பகரமாகவும் (b) வழங்குகிறது.

(எ.கா.) த. வடுகு → க. படகு

த. வலை → க. பலெ

த. வண்டி→ தெ., க. பண்டி *(banḍi)*

வரகு → பரகு

வரட்டி→பரட்டி

வரவு→பரவு

தமிழிலும், சில திராவிட மொழிகளிலும், "ம"கரம், தம் மூக்கொலியை இழந்து 'வ'கரமாக மாறுகின்றது.

(எ.கா.) நீம் + இர் – நீமிர்→நீவிர்.

உடம்படுமெய்:– இ, ஈ, எ, ஏ, ஐ முதலான எழுத்துகளின் சார்பில்லாத பிற இடங்களில் இரண்டுயிர்கள் அடுத்தடுத்து வருங்கால், இந்த வகரமே உடம்படுமெய்யாக வருகிறது. இவ்வகர வுடம்படுமெய் முற்காலத்தே வருமொழியின் முதலொலிக்கு இனமாயும், பிற்காலத்தில் நிலைமொழியின் ஈற்றிற்கு இனமாயும், வருமெனக் கூறலாம். "கவவகத் திடுமே" (தொல். உரி.59).

(எ.கா.) "நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கண்" (புறம்.164). "நாடிமட வன்னத்தை" (நள.).

தொல்காப்பியர் 'வ'கரம், அவ், இவ், உவ், தெவ் என்ற நான்கு மொழிகளில்தான் ஈறாகப் பயின்று வரும் என்று வரையறுத்த ஞான்றும், வல்லெழுத்திற்குப் பின்னால் வருங்கால், ஆய்தமாகும் என்றுங் கூறியுள்ளார். (எ.கா.) கஃபு, வெஃகா, கஃசு.

'அவ்' போன்ற சொற்களில் பன்மைப் பொருளை, மக்கள் மறந்த ஞான்று "து" என்னும் ஒருமை விகுதியைச் சேர்த்து (அவ்+து) அஃது என்று வழங்கத் தலைப்பட்டனர்.

இவ்வாறு, ஓரிடைச் சொல் தன் பொருளை இழந்தபோது, அவ்விடத்தே வேறு இடைச்சொல்லைச் சேர்த்து வழங்குதல், திராவிட மொழிகளின் பொதுவியல்பாகும். ஆனால் ஒட்டுநிலை மொழியாம் நந்தமிழ்மொழி, பொருளிழந்த இடைச்சொற்களைச் சாரியையெனப் பெயர்சூட்டி, வழங்கி வருகிறது. தொன்றுதொட்டு வகர மெய்யீறு மொழியின் இறுதியில் வழங்கி வந்தாலும், இடைக்காலத்திலிருந்தே இவ் வீற்றுக்குப் பின்னும், உகரச்சாரியை பெற்று வழங்குவது வழக்கமாகிவிட்டது..

(எ.கா.) வவ்வு, கவ்வு, தெவ்வு உயிர்மெய்ம் மயக்கத்தில் மெய்யெழுத்தில் தொடங்கி வரும் தனிக்குறிலின் பின் உள்ள வகரம், வருமொழியில் உயிர்வரின் இரட்டும்.

(எ.கா.) அவ்+இடை – அவ்விடை. பிற இடங்களில் வரும் உயிர், வகரத்தின் மேலேறி உயிர்மெய்யாகும்.

பிற்காலத்தில் வகர மெய்யீறு உகரச் சாரியை பெற்ற போதும், வருமொழியில் யகரம் வருங்கால், அவ்வுகரம், இகரமாக மாறும்.

(எ.கா.) தெவ் + யாது → தெவ்வியாது

அவ் + யாது → அவ்வியாது

இலக்கணத்தில் வரும் எடுத்துக்காட்டுகளில் மட்டுமே, பிற்காலத்தல் இம்மயக்கத்தைக் காணலாம்.

வருமொழியில் வல்லெழுத்து வந்தால், நிலை மொழியில் உள்ள வகரமெய், ஆய்தவெழுத்தாக மாறும்.

(எ.கா.) அவ் + கடிய – அஃகடிய.

வருமொழியில் மெல்லெழுத்து வந்தால், நிலைமொழியில் உள்ள வகரமெய், மெல்லெழுத்தாக மாறும்.

(எ.கா.) அவ் + நாழி – அந்நாழி. மொழியிடை வரும் தனி வகரமும் இரட்டை வகரமும், பொருள் வேறுபாடுடையன.

(எ.கா.) அவை, அவ்வை.

கவை, கவ்வை.

மேற்கூறிய எடுத்துக்காட்டின் வாயிலாக இரட்டை வகரம் மொழியிடையில் மட்டுமே பயின்று வரும் என்பது நன்கு போதரும்.

காலந்தோறும் கல்வெட்டுகளிற் காணப்படும் வகர உயிர் மெய்யின் வரி வடிவ வளர்ச்சி

கீழே ஒரு வட்டமும், அதன் மேலே நிற்கும் செங்குத்துக் கோடுமாகக் கொம்பிலிருந்து தொங்கும் உண்டையான பழம் போன்று, அசோகர் காலக் கல்வெட்டுகளிலும், (அசோகன்-பிராமி) கி.மு.4-ஆம் நூற்றாண்டில் தமிழர்தம் குகைக் கல்வெட்டு-களிலும், தமிழி யெழுத்தாக எழுதப்பட்ட வரிவடிவம்.

பட்டிப்புரோலுக் கல்வெட்டில், கி.மு.2, 3-ஆம் நூற்றாண்டுகளில், ஒரு குடுவை போல உச்சியில் சிறு படுக்கைக் கோட்டுடன் காணப்படும் வரிவடிவம்.

கி.பி.2, 3-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் இவ்வரிவடிவம் ஒரு முக் கோணத்தின் உச்சியிலுள்ள சிறு அழகுப் புள்ளியுடன் காணப் படுகிறது.

கி.பி.6, 7-ஆம் நூற்றாண்டு களில் பல்லவர் காலத்து வரிவடிவ வளர்ச்சி.

கி.பி.8-ஆம் நூற்றாண்டில் பல்லவர் கல்வெட்டுகளிற் காணப்படும் வரிவடிவம்.

கி.பி.9, 10 மற்றும் 11-ஆம் நூற்றாண்டுகளில் சோழர் காலக் கல்வெட்டுகளிற் காணப்படும் வரி வடிவம்.

கி.பி.12, 13-ஆம் நூற்றாண்டு களில் பாண்டியர் காலத்துக் கல்வெட்டுகளிற் காணப்படும் வரி வடிவம்.

கி.பி.14, 15-ஆம் நூற்றாண்டு களில் விசயநகர மன்னர் காலத்துக் கல்வெட்டுகளிற் காணப்படும் வரி வடிவம்.

கி.பி.16, 17, 18-ஆம் நூற்றாண்டு காலக் கல்வெட்டுகளிற் காணப்படும் வரிவடிவம்.

கி.பி.19, 20-ஆம் நூற்றாண்டு காலக் கல்வெட்டுகளில் ஏறத்தாழ இற்றை வரிவடிவ நிலையை எய்தியது எனலாம்.

வ[2] *va,* கால் என்ற பின்ன வெண்ணின் குறியீடு; symbol of the fraction 1/4. *'எட்டேகால் லெட்சணமே', 'அவ' 8 1/4.*

வ[3] *va,* இடை.(part) பலவின்பால் ஈறுகளுள் ஒன்று (தொல்.சொல். 9); an ending indicative of neut. pl.

வஃகான் *va-k-āṉ,* பெ.(n.) வ என்னும் எழுத்து; the letter "va". *"வஃகான் மெய்கெட" (தொல். எழுத்து. 122).*

*[வ + கான் - வஃகான். கான் = பழந்தமிழ் எழுத்துச் சாரியை. இது புணருங்கால் இடையே ஆய்தந் தோன்றியது (நன்.எழுத்து.17).]*

வக்கசிப்பி *vakka-šippi,* பெ.(n.) சிப்பிமுத்து; pearl oxyster.

*[வக்கம் + சிப்பி.]*

**வக்கட்டை**[1] *vakkaṭṭai*, பெ.(n.) மெலிந்த உயிரினம்; lean animal.

*[வட்கு→வக்கு→வக்கட்டை. வட்கு = மெலிவு.]*

**வக்கட்டை**[2] *vakkaṭṭai*, பெ.(n.) 1. அளவுக் கதிகமான தண்ணீர் வெளியே செல்லுவதற் குரிய வழி; outlet for surplus water. 2. செய்வரப்பில் கழிவுநீர் செல்லுதற்கு வெட்டப்பட்ட நீர்மடை (யாழ்ப்.); Channel cut through the ridge of a paddy field, to let the surplus water pass away, or for allowing water to run on to the adjoining field.

*[வாய் + கடை→ கட்டை →வாய்க்கட்டை → வக்கட்டை.]*

**வக்கடை** *vakkaḍai*, பெ.(n.) நீர் பாய்வதற்காக, வயல்வரப்பில் வெட்டி விடப்படும் ஓடை; streamlet in between the ridges of paddy field.

மறுவ. வாய்மடை

*[வாய்க்கடை →வக்கடை.]*

யாழ்ப்பாணத்தமிழர் "வக்கடை" என்று, இன்றும் வழங்கிவருதல் காண்க.

**வக்கணத்தி** *vakkaṇatti*, பெ.(n.) மாகணத்தி; a kind of tree.

**வக்கணப்பட்டை** *vakkaṇa-p-paṭṭai*, பெ.(n.) வக்கணத்தி; a kind of medicinal plant.

**வக்கணம்**[1] *vakkaṇam*, பெ.(n.) 1. வக்கணை 1, 2 (யாழ்.அக.) பார்க்க; see *vakkaṇai*. 2. பட்டப் பெயர் (யாழ்.அக.); title. 3. விற்பன்னம் (யாழ்.அக.); learning, scholarship. 4. நாகரிகம் (யாழ்.அக.); civilization. 5. பண்பாடு; culture. 6. செம்மை; refinement. 7. ஒழுங்கு; order. 8. வக்கணை[1], 3 பார்க்க; see *vakkaṇai*. 9. பழித்துரை; taunt, accusation. *வக்கணப் பேச்சு (யாழ்ப்.).*

தெ. வக்கண; க. ஒக்கணெ.

Pkt. vaggaṇa.

*[வகு→வக்கு + அணம். அணம் = ஓரீறு.]*

**வக்கணம்**[2] *vakkaṇam*, பெ.(n.) மார்பு (யாழ். அக.); breast.

**வக்கணாத்தன்** *vakkaṇāttaṉ*, பெ.(n.) மர வகை (L.); heart-leaved mottled ebony.

**வக்கணாத்தி** *vakkaṇātti*, பெ.(n.) கொடி வகையிலொன்று (L.); a species of star-vervain climber.

**வக்கணாத்திப்பட்டை** *vakkaṇātti-p-paṭṭai*, பெ.(n.) வக்கணாத்தி; bark.

*[வக்கணாத்தி + பட்டை]*

**வக்கணாமரம்** *vakkaṇā-maram*, பெ.(n.) வக்கணைமரம் பார்க்க; see *vakkaṇai-maram*.

**வக்கணி**[1]**–த்தல்** *vakkaṇi-*, 4 செ.குன்றாவி. (v.t.) விளக்கமாயுரைத்தல்; to expound in detail. *"புராணஞ் சுருதிப்பொருள் வக்கணிப்பவன்". (மேருமந்.244).*

*[வகு→வக்கு + அணம் – வக்கணம் → வக்கணி-.]*

தெ.வக்கணிஞ்சு; க.வக்கணிசு.

**வக்கணி**[2]**–த்தல்** *vakkaṇi-*, 4 செ.கு.வி.(v.i.) மனங்கோணியிருத்தல் சார்ந்திருத்தல்

(இ.வ.); to be at variance. *'வக்கணித்து வழக்குரைத்தவன் வழிமுறையின்றி அழிந்து போவான்'.*

*[வங்கு →வக்கு →வக்கணி-.]*

**வக்கணை**[1] *vakkaṇai,* பெ.(n.) 1. கடிதம், ஆவணம் முதலியவற்றின் முகப்புச்சொல் அல்லது முதல் தொடர்மொழி (நாமதீப. 654); formal portion of a letter or other document; honorific superscription in a letter. 2. முகமன்மொழி; words of courtesy. *"வக்கணையாலின்பம் வருமோ" (தாயு. பராபர.213).* 3. அழகு மிளிரும் வண்ணணை அல்லது கருத்துரை; flowery or rhetorical speech or statement. *"வக்கணைப் பேச்சல்ல" (இராமநா.உயுத். 30).* 4. அறிவாற்றல், ஒழுங்கு, வரிசை, முறைவைப்பு; scholarship, order. 5. திறமைமிக்க பேச்சு (இ.வ.); skilful talk. 6. வக்கணம்[1], 2, 3, 4, 5, 7 (யாழ்.அக.) பார்க்க see *vakkaṇam. வக்கணைப் பேச்செல்லாம் வாசல்வரைதான் நிற்கும் (இ.வ.).*

க. வக்கணெ.

**வக்கணை**[2] *vakkaṇai,* பெ.(n.) திறமை; adeptness, skilfulness, smartness, expertise. *சமைத்த உணவு விரும்பி உண்ணும் வகையில் உள்ளது (இ.வ.). படித்த பெண், அதுதான் வக்கணையாகப் பேசுகிறாள்.*

**வக்கணை**[3] *vakkaṇai,* பெ.(n.) 1. நீண்ட மரவகை; wight's indian nettle. 2. மரவகை; mottled ebony. 3. மஞ்சள் நிறமுள்ள மர வகை; yellow wood ebony.

**வக்கணை**[4] *vakkaṇai,* பெ.(n.) மார்பு (யாழ். அக.); breast.

**வக்கணைப்பேச்சு** *vakkaṇai-p-pēccu,* பெ.(n.) தனித்திறனை வெளிப்படுத்தும் ஆற்றல் மிக்க பேச்சு; flowery or skilful talk. *வக்கணைப் பேச்சு மட்டும் வாழ்க்கைக்கு உதவாது (உ.வ.).*

*[வகு → வக்கு + அணம் - வக்கணம்→ வக்கணை + பேச்சு. அணம் = சொல்லாக்க ஈறு.]*

**வக்கணைமரம்** *vakkaṇai-maram,* பெ.(n.) 1. ஒரு மரவகை; a kind of tree. 2. இம்மரம் மேடான, காய்ந்த நிலப்பகுதியில் வளரும் தன்மைத்து இதன் பழங்கள் உணவாகவும் பயன்படும்; a small tree, common in plans and about the foot of mountains in dry localaties, fruit pulp is edible.

**வக்கம்** *vakkam,* பெ.(n.) நத்தைச்சூரி; a plant- *Spemaciea gusoouda.*

**வக்கம்பிடி-த்தல்** *vakkam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சுள்ளென்று வெப்பம்பட ஒற்றடமிடுதல்; to foment.

*[வக்கு →வக்கம் + பிடி-.]*

**வக்கரஞ்சபயறு** *vakkarañja-payaṟu,* பெ.(n.) கடலை; gram.

**வக்கரபுத்தி** *vakkara-putti,* பெ.(n.) வக்கிரபுத்தி பார்க்க; see *vakkira-putti.*

**வக்கரம்** *vakkaram,* பெ. (n.) வக்கிரம் பார்க்க; see *vakkiram.*

*[வட்கு →வக்கு →வக்கரம்.]*

**வக்கரன்** *vakkaraṉ,* பெ.(n.) 1. மாறுபாடுள்ளவன்; perverse, cross-grained person. *"வக்கரனைக் கொன்றான் வடிவு" (திவ். இயற். மூன்றாந், 21, 3).* 2. திருமாலால் அழிக்கப்பட்ட அரக்கன்; an asura slain by

vishnu. "*வக்கரனை வடிவழித்த மாயவா*" (*பெருந்தொ. 865*). "*வக்கரன்*" *பாக்கமுடையான் கொஞ்கராயன். இடைவெழுவள்ளல்களுள் ஒருவன் ஆயந்தனூர் ஏரி மதகு கல்வெட்டு.*

**வக்கரனை** *vakkaraṉai,* பெ.(n.) அனைத்துப் பண்களும் குழலின் ஆறு துளைகளில் உண்டாகும் வண்ணம், விரல்களில் சமஞ்செய்து தெரிவுசெய்கை (இசை.); mainpulating the flute so as to produce all melody-types on its six stops. "*வைத்த துளை யாராய்ச்சி வக்கரனைவழிபோக்கி யொத்த நிலை யுணர்ந்ததற்பின்*" (*பெரியபு. ஆனாய.24*). (*செந்.vi.215*).

**வக்கரி**[1] *vakkari,* வி.(v.) 1. வக்கிரம்; perverse. 2. கோணுகை, நெறி பிறழ்கை; distortion, contortion. 3. மாறுபாடான சிந்தனையோடு இருத்தல்; have perverseness, act perversely. *அவருடைய வக்கரித்துப் போன ஆசைகள் இவை: குடும்பத்தில் ஒவ்வொருவரும் வக்கரித்துக் கொண்டு நிற்கிறார்கள்.*

**வக்கரி**[2]**-த்தல்** *vakkari-,* 4 செ.கு.வி.(v.i.) கோணியிருத்தல், முரண்பாடாயிருத்தல்; to be crooked, to be contradictory. "*வக்கரித்தால் நீ வாரா வண்மையென்ன*" (*கொண்டல்விடு. 8.*). *வக்கர காளியம்மன் கோயில்.* 2. வளைந்திருத்தல், மடங்குதல்; to be bent. 3. மடங்கித் திரும்புதல்; to turn back. 4. ஆலத்தி செய்தல்; to wave, as of camphor, etc. in front of an idol etc.

*[வக்கு→வக்கரம் →வக்கரி-.]*

**வக்கரிப்பு** *vakkarippu,* பெ.(n.) 1. சிடுசிடுப்பு; frown. 2. நெறிபிறழ்வு; perversion.

*[வக்கரி→வக்கரிப்பு.]*

**வக்கரை**[1] *vakkarai,* பெ.(n.) 1. வரிந்து கட்டும் முகட்டுக்கட்டை; wooden ridge-piece to hold the ropes that tie down the thatch; tie -piece. 2. சேணம், துணிப்பை; saddle, cotton-bag.

*[வக்கரி→வக்கரை.]*

**வக்கரை**[2] *vakkarai,* பெ.(n.) பற்கறை (வின்.); artifical blackness of the teeth.

**வக்கலாட்டி** *vakkalāṭṭi,* பெ.(n.) ஒருவகைக் கூட்டு மருந்துச் சரக்கு; a compound of a catechu formed with the juice of tender coconuts, arecanuts and other spices.

மறுவ. காசுக்கட்டி.

**வக்கவசப்பூடு** *vakka-vaša-p-pūḍu,* பெ.(n.) அங்கப்பிச்சு; bile of the body.

**வக்களி-த்தல்** *vakkaḷi-,* 4 செ.கு.வி.(v.i.) வளைந்தது; to become crooked.

*[வங்கு →வக்கு →வக்களி-.]*

**வக்கற்றவள்** *vakkaṟṟavaḷ,* பெ.(n.) 1. வாழ்க்கைக்குரிய செல்வம், பொருள் முதலியன இல்லாதவள்; woman lacking wealth materials, etc. "*வக்கற்றவள் வானவேடிக்கை பார்க்கலாமா?*" (*உ.வ.*). 2. பிழைக்கத் தெரியாதவள்; woman who has no knack of living. 3. வகையற்றவள் பார்க்க; see *vagai-y-aṟṟavaḷ.*

*[வக்கு + அற்றவள்.]*

**வக்கனஞ்சம்** *vakkaṉañjam,* பெ.(n.) பாக்கு; areca-nut.

**வக்கா**[1] *vakkā,* பெ.(n.) கொக்கினத்து ளொன்று; a kind of a white-stork. *"வக்காவு நாரையுங் கொக்கும் படுக்கவே" (குற்றா. குற. 93.2.).*

த. வக்கா > **Skt.** baka.

*[வட்கு → வக்கு → வக்கா = கொக்குவகை (வ.வ.2, பக்.75).]*

(ஒ.நோ.) கொள் → கொள்கு → கொட்கு → கொக்கு = வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவை. வளைதல் கருத்து வேரிலிருந்து கிளைத்த சொல். வளைந்த கழுத்தினை யுடைய நாரை, கொக்கு போன்ற நீர்ப் பறவை வகை (வே.க.4, பக்.100).

இப்பறவை "ஆர்டியா" இனத்தைச் சார்ந்தது. வைக்கோலால் கூடுகட்டி வாழுந் தன்மைத்து: 3 முதல் 5 வரையிலான எண்ணிக்கையில் முட்டையிடும். உச்சந்தலை, பிடரி, முதுகின் மேற்பகுதி, தோள்பகுதி கறுத்தும், பச்சை வண்ணத்திலும் காணப்படும்.

இப்பறவையின் கழுத்தும், மேற்பகுதியும் பழுப்பு நிறத்தில் காணப்படும்.



**வக்கா**[2] *vakkā,* பெ.(n.) சிப்பி வகை; a kind of cockle-shell. *"வக்காவின் மணிபூண்டு" (குற்றா. குற.79).*

*[வக்கு → வக்கா. வளைந்த சிப்பி.]*

**வக்கா**[3] *vakkā,* பெ.(n.) 1. தேவாங்கு; sloth. 2. ஓர் வகை நாரை; a kind of stork.

*[வக்கு → வக்கா.]*

**வக்காசீதம்** *vakkā-śīdam,* பெ.(n.) எல்லாப் பொருள்களையும் கரைக்கும் ஆற்றலுடைய பொது நீர்மம்; universal acid or universal solvent.

**வக்காணம்** *vakkāṇam,* பெ.(n.) வாய்ப்பாட்டின் வாயிலாகப் பண்ணினை விரிவாக வெளிப்படுத்தும் ஆற்றல்; the free rendering of a pan in such a way as to bring out its form without reference to talam or words. *"மீத்திறம் படாமை வக்காணம் வகுத்து" (சிலப். 3, 148).*

க. வக்காண.

**வக்காணி**[1]**-த்தல்** *vakkāṇi-,* 4 செ. குன்றாவி.(v.t.) விளக்கமாயுரைத்தல்; to expound in detail. *"நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்காணித்தறிவான்" (சோழவமி. 53).*

தெ. வக்கணின்சு.

**வக்காணி**[2]**-த்தல்** *vakkāṇi-,* 4 செ.கு.வி. (v.i.) சொற்போர்புரிதல்; to carry on disputations.

*[வக்கணித்தல் → வக்காணி-த்தல்.]*

**வக்காணிக்குமண்டபம்** *vakkāṇikku-maṇḍabam,* பெ.(n.) மறைகள் குறித்து சொற்போர் நிகழும் பட்டி மண்டபம்; the hall where disputations on the vedas are held.

*[வக்காணிக்கு + மண்டகம் → மண்டபம்]*

**வக்காப்புல்** *vakkā-p-pul,* பெ.(n.) 1. களை வகை (தஞ்.); a kind of weed. 2. புல் வகை; a kind of grass.

*[வக்கா + புல்]*

**வக்காமணி** *vakkā-maṇi,* பெ.(n.) சிப்பிமணி வகை; bead of a kind of cockle-shell. *"வக்காமணிக்கு வழியில்லாதவன் வானவூர்தியில் வலம்வர முடியுமா?*

**வக்காமணிச்செட்டிகள்** *vakkāmaṇi-c-cettigaḷ,* பெ.(n.) வக்காமணி செய்யும் செட்டி மரபினர் (வின்.); traders dealing in *vakkāmaṇi,* who belongs to *cheṭṭiyār* - caste.

*[வக்காமணி + செட்டிகள்]*

**வக்காளி-த்தல்** *vakkāḷi-,* 4 செ.கு.வி. (v.i.) வானம் வெளிவாங்குதல் (தஞ்.வழ.); to clear up, as the sky.

*[வெக்காளி-, →வக்காளி-,]*

**வக்கிணி-த்தல்** *vakkiṇi-,* 4 செ.கு.வி.(v.i.) மனங்கோணியிருத்தல்; to be at variance. *வக்கிணித்த வீடு வாழாது (உ.வ.).*

**வக்கிரக்கச்சு** *vakkira-k-kaccu,* பெ.(n.) 1. கருடன்; brahmini kite. 2. கிளி; parrot. 3. வலியான்; a small black bird.

**வக்கிரக்கண்** *vakkira-k-kaṇ,* பெ.(n.) மாறுகண் (கொ.வ.); squinting eye.

*[வக்கிரம் + கண்]*

**வக்கிரகண்டகம்** *vakkira-kaṇḍagam,* பெ.(n.) வளைந்த முள்ளுடைய இலந்தை (சங்.அக.); jujube-tree, as having curved thorns.

*[வட்கு → வக்கு → வக்கரம் → வக்கிரம் + கண்டகம். கண்டகம் = முள். வட்கு = வளைவு]*

**வக்கிரகண்டம்** *vakkira-kaṇḍam,* பெ.(n.) குழந்தை; child.

*[வக்கிரம் + கண்டம்.]*

**வக்கிரகண்டி** *vakkira-kaṇḍi,* பெ.(n.) செய்நீர் (திராவகம்) வடிக்க உதவும் நீண்ட கழுத்துள்ள பாத்திரம்; vessel with a long neck, used in distilling; still.

**வக்கிரகதி** *vakkira-kadi,* பெ.(n.) 1. நேர்மையற்ற செலவு (அக.நி.); irregular course. 2. பிற்போக்குத் தன்மையுள்ள கோள்நிலை; retrograde motion of a planet.

*[வக்கிரம் + கதி]*

**வக்கிரகந்தம்** *vakkira-kandam,* பெ.(n.) திருகுகள்ளி; twisting milk hedge - *Euphorbia tirucalli.*

*[வக்கிரம் + கந்தம்]*

**வக்கிரசச்சு** *vakkira-šaccu,* பெ.(n.) 1. ஒரு வகைப் பறவை; white headed kite. 2. கிளி; parrot. 3. வலியான்; king crow.

*[வக்கிரம் + சஞ்சு → சச்சு]*

**வக்கிரசஞ்சு** *vakkira-šañju,* பெ.(n.) வக்கிர சச்சு பார்க்க; see *vakkira-šaccu.*

**வக்கிரசந்திரன்** *vakkira-šandiraṉ,* பெ.(n.) இளம்பிறை (யாழ்.அக.); crescent moon.

**வக்கிரசாரம்** *vakkira-šāram,* பெ.(n.) மாறுபட்ட கோள்நிலை; retrograde motion of a planet.

*[வக்கிரம் + சாரம்]*

**வக்கிரசுரம்** *vakkira-šuram,* பெ.(n.) நேர்மையற்றியைந்த இசைச்சுரம்; irregular succession of notes.

*[வக்கிரம் + சுரம்]*

வக்கிரதந்தம்[1] *vakkira-tandam,* பெ.(n.) 1. வளைந்த பல் (வின்.); curved tooth. 2. கூரிய நச்சுப்பல், எந்திரக் கருவியின் பல்; fang.

*[வக்கிரம் + தந்தம்]*

வக்கிரதந்தம்[2] *vakkira-tandam,* பெ.(n.) 1. சிங்கப்பல்; eye tooth. 2. தின்பீர்க்கு; ribbed gourd. 3. நாய்ப்பல்; dog tooth.

வக்கிரதந்தன் *vakkira-dandan,* பெ.(n.) இயமன் (நாமதீப.87.); *yaman.*

*[வக்கிரம் + தந்தன்]*

வக்கிரநஞ்சு *vakkira-nañju,* பெ.(n.) கிளி; parrot.

வக்கிரப்பண் *vakkira-p-pan,* பெ.(n.) நேராக ஏறியிறங்காமல் இடையில் மாறி வரும் பண் (இசை.); melody-type in which the ascent of the notes in the scale is interrupted by the descenmting notes and the descent by the ascending notes.

*[வக்கிரம் + பண்]*

வக்கிரப்பாதன் *vakkira-p-pādan,* பெ.(n.) அறநெறிக்கு மாறுபட்டவன்; unethical person, cruel person. *"இதற்கு வக்கிரப்பாதன் சந்திராதித்ய ருள்ள தனையும் நரகத்தினிற்பானாகவும்" (தெ.கல். தொ.12, பகு.1. கல்.34).*

*[வக்கிரம் + Skt.பாதன்]*

வக்கிரப்பார்வை *vakkira-p-pārvai,* பெ.(n.) 1. பொறாமையுடன் கூடிய தீய பார்வை; jealousy and evil look. 2. கடுஞ்சினப் பார்வை; fury look. *ஆளையே விழுங்குவது போல் வக்கிரப் பார்வை பார்க்கிறான் (இ.வ.).* 3. பேராசையுடன் கூடிய வஞ்சகப் பார்வை; greedy and hypocritic look. 4. நெறி பிறழ்ந்த ஏக்கப் பார்வை; yearning look. 5. குறுகிய விருப்பு வெறுப்புகளுடன் கூடிய கொடுமைப் பார்வை; parachial and cruel look.

*[வள்→வட்கு→வக்கு→வக்கரம்→வக்கிரம் + பார்→பார்வை.]*

வக்கிரம் + பார்வை = பிறர்தம் ஆக்கமும், வளர்ச்சியும் கண்டு பொறாமையுடன் நோக்கும் பார்வை. சிறிது கற்றவர், கற்றுத்துறைபோய ஒருவரைக் கண்டு, மனங்குமுறுதலும், வக்கிரப் பார்வையாகும்.

சிறிது செல்வமுடையவர், பெருந் தனக்காரரைக் கண்டு, காழ்ப்புடன் நோக்குதலும் வக்கிரப் பார்வையே.

போட்டியும், பொறாமையும் மலிந்த, இம் மன்பதையில் வக்கிரவெண்ணத்துடன் இயைந்த வக்கிரப் பார்வை நிறைந்துள்ளமை கண்கூடு.

வக்கிரப்புத்தி *vakkira-p-putti,* பெ.(n.) குமுகாய நெறி, ஒழுங்கு, நேர்மை முதலியவற்றிலிருந்து மாறுபட்டு நோக்கு, மனம்; perverted mind. *"வக்கிரப்புத்திக் காரனுக்கு வாழ்வு மட்டந்தான்" (உ.வ.).*

மறுவ. கோணல்புத்தி

*[வட்கு→வக்கு→வக்கரம்→வக்கிரம் + புத்தி.]*

புல்→புலம் = பொருளொடு பொருந்தும் அறிவு. அறிவுறுப்பு. அறிவுநூல். புலம்→புலன். புலன் = பொருளொடு பொருந்தும் அறிவு. அறிவுநூல் (சு.வி.36). புல்→புன்→புந்தி→புத்தி = அறிவு. நல்வழி, வழிவகை.

பிறர்தம் பொருளை, உடைமையை, நெறி முறையற்ற வழியில், எய்த எண்ணும் மனப்பாங்கே வக்கிரபுத்தி.

**வக்கிரம்**[1] *vakkiram,* பெ.(n.) குமுகாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒழுங்கு, முறைமை, ஒழுங்கு முதலியவற்றிலிருந்து திரிந்த நிலை, விகாரம்; perversity.

பள்ளிப்படிப்பால் குழந்தைகள் கெட்டுப் போகிறார்கள் என்பது வக்கிரமான சிந்தனை, வக்கிரமான பாலுறவு ஆசைகள்.

**வக்கிரம்**[2] *vakkiram,* பெ.(n.) 1. வளைவு; curve, bend, winding. *"வக்கிர சாபமழை பொழிந்து" (பாரத. இரண்டா.12).* 2. வட்டம் (பிங்.); circle. 3. சென்ற வழி மீள்கை (பிங்.); retracing one's steps. 4. நேர்மையற்ற செலவு (அக.நி.); irregular course. 5. கொடுமை (பிங்.); cruelty, malignancy, as of a planet. 6. பொய் (திவா.); lie. 7. வஞ்சனை (வின்.); fraud, dishonesty. 8. கோணல் வழி (இ.வ.); indirectness, crookedness. 9. பொறாமை (பிங்.); envy. 10. கலக்கம் (வின்.); confusion.

*[வள்கு → வட்கு → வக்கு → வக்கரம் → வக்கிரம்.]*

**வக்கிரன்** *vakkiraṉ,* பெ.(n.) 1.மாறுபாடுள்ளவன்; perverse, cross-grained person. 2. கொடுமையானவன்; cruel man. 3. காரி (சனி) (இலக். அக.); saturn. 4. செவ்வாய் (பிங்.); mars. 5. திருமாலாற் கொல்லப்பட்ட அசுரன்; an asura slain by *Visṇu.* *"வக்கிரனை வடிவழித்த மாயவனா" (பெருந்தொ.865).*

**வக்கிராங்கி** *vakkirāṅgi,* பெ.(n.) 1. கடுகு ரோகணி; a purgative drug. 2. கூனி; one having crooked back. 3. நீர் முள்ளி; a throny plant - *Barleria longifolia.*

**வக்கிராசம்** *vakkirāšam,* பெ.(n.) கற்கடக சிங்கி; galls of pistacia integerrima.

**வக்கிராந்தம்** *vakkirāndam,* பெ.(n.) மறு துடரி; a plant.

**வக்கிரி**[1]**-த்தல்** *vakkiri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கோள்நிலை, மடங்கித் திரும்புதல் (யாழ். அக.); to retrograde, as a planet. 2. வளைந்திடுதல்; to be crooked. 3. மனங் கோணியிருத்தல்; to be at variance.

*[வட்கு → வக்கு → வக்கரி → வக்கிரி-. வட்கு = வளைவு.]*

**வக்கிரி**[2]**-த்தல்** *vakkiri-,* 4 செ.கு.வி.(v.i.) வாய்ப்பாட்டின் வாயிலாகப் பண்ணினை விரிவாகப் பயிற்சி செய்தல்; to elaborate tune or melody type. *"இசையோன் வக்கிரித் திட்டத்தை யுணர்ந்து" (சிலப். 3, 41).*

**வக்கு**[1]**-தல்** *vakku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வதக்குதல்; singe, to roast. *"கொழுப்பரிந்து... வக்குவன வக்குவித்து" (பெரியபு.கண்ணப்.145).* 2. தீய்த்தல், பொசுக்குதல்; to burn.

*[வதக்கு → வக்கு.]*

**வக்கு**[2] *vakku-,* பெ.(n.) 1. வேகுகை, தீய்க்கை; being singed or burnt. 2. வதக்குகை; being roasted. *"நெருப்புச் சிந்தலின்வக்கிலாத் திசைகளுமில்லை" (கம்பரா. இராவணன் வதை. 65).*

*[வட்கு → வக்கு. (ஒ.நோ.) மட்கு → மக்கு]*

வக்கு³ *vakku,*பெ.(n.) 1. தோல் (யாழ். அக.); skin. 2. ஊமைக்காயம்; contused wound. வக்குண்ட காயம் (இ.வ.). 3. நீர்த் தொட்டி (யாழ். அக.); water-trough.

வக்கு⁴ *vakku,*பெ.(n.) 1. வழி; means, resources. *அவனுக்குக் கடன் கொடுக்க வக்கில்லை* (C.G.). 2. இடம்; place.

*[வகு→வக்கு (மொ.க.பக்.39).]*

வக்கு⁵ *vakku,*பெ.(n.) 1. மூத்திரக்குண்டிக் காய்; kidney. 2. விதைக் கொட்டை (அண்ட விதை); testicle. *உன்னை வக்கிலே உதைத்துச் சரியான வழி பண்ணுகிறேன் (இ.வ.) வக்கிலே அடிபட்டால் வாழ்வது எளிது இல்லை (உ.வ.).*

*[வட்கு→வக்கு]*

வக்குத்திரிகரணம் *vakku-t-tiri karaṇam,*பெ.(n.) படுக்கை (வின்.); bed.

வக்குநார் *vakkunār,*பெ.(n.) 1. மரவகை; woolly ordure tree. 2. சணல் நார்; hemp fibre. 3. அணி நார்; sterculia villosa.

*[வக்கு + நார்.]*

வக்குரி-த்தல் *vakkuri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வேதல்; to scorch. 2. எரிதல்; to burn. *"வாயாற் சொல்லில் வாய் வக்குரிக்கும்படி" (ஈடு. 9, 9, 2).*

*[வக்கு→வக்குரி.]*

வக்குவக்கெனல் *vakku-vakkeṉal,* பெ.(n.) 1. களைப்பு மேலிட ஓடும் ஒலிக் குறிப்பு (வின்.); Onom. expr. of a running to exhaustion. 2. கடுமையாய் இருமற் குறிப்பு (வின்.); coughing hard. 3. கடுமையாய் இடித்தற் குறிப்பு; pounding hard or ramming.

வக்கி *vakki,* பெ.(n.) 1. எருது; bull. 2. காற்று; wind.

வகச்சல் *vagaccal,* பெ.(n.) மாலை வகை; a kind of garland. *"திருமாலை வகச்சல் வளையம்" (கோயிலொ. 59).*

*[வகைச்சல்→வகச்சல்.]*

வகத்திரம் *vagattiram,* பெ.(n.) வாகை (சங்.அக.); siris.

வகதி *vagadi,* பெ.(n.) 1. எருது (யாழ்.அக.); bull. 2. காற்று; wind. 3. நண்பன்; friend.

வகந்தம் *vagandam,* பெ.(n.) 1. காற்று (யாழ்.அக.); wind. 2. குழந்தை; child.

வகம் *vagam,* பெ.(n.) 1. காற்று (யாழ்.அக.); wind. 2. வழி (யாழ்.அக.); path. 3. குதிரை (இலக்.அக.); horse. 4. ஊர்தி (யாழ்.அக.); vehicle.

வகரக்கிளவி *vagara-k-kiḷavi,* பெ.(n.) மொழிக்கு முதலாகத் தொடங்கும் 'வ'வெனுஞ் சொல்; the word begining with the letter of medial vagaram. *"வகரக்கிளவி நான்மொழி ஈற்றது" (தொல். எழுத்து.81).*

*[வ + கரம் – வகரம் + கிள் →கிள→கிளவி. (கரம் = எழுத்துச் சாரியை). (கிளவி = சொல்).]*

வகரம் *vagaram,* பெ.(n.) 'வ' என்னும் எழுத்து; the letter, va. *பல்லிதழிற் பிறப்பது வகரம்.*

*[வ + கரம் = வகரம். கரம் = எழுத்துச் சாரியை. 'வ' பார்க்க; see va¹. தொல்காப்பியர் எழுத்ததி காரத்திலுள்ள 137–வது நூற்பாவில், "கரம்" என்பது குற்றெழுத்துச் சாரியைகளுள் ஒன்றென்று குறிப்பிட்டுள்ளார்.]*

**வகலியம்** *vagaliyam,* பெ.(n.) மரம்; a kind of tree.

**வகன்** *vagaṉ,* பெ.(n.) 1. குபேரன் (யாழ்.அக.); *kubēraṉ.* 2. பகன் என்னும் அரக்கன்; *Bagaṉ,* an *aśura* or demon.

**வகா** *vagā,* பெ.(n.) அகத்தி; a kind of tree-*Sesbania grandiflora.*

**வகாதரம்** *vagādaram,* பெ.(n.) வெம்புனல்; hot spring.

**வகாரசூத்திரம்** *vagāra-šūttiram,* பெ.(n.) அகத்தியர், அகப்பேய்சித்தர், உரோமர் செய்த ஓர் தமிழ் பொன்னாக்க நூல்; hermetic philosophy which is known under the name of alchemy, Agastiar, Agapey cittar, and Roma risi, each has written the book separately.

*['வ'காரம் + சூத்திரம்]*

**வகாரத்தலைவன்** *vagāra-t-talaivaṉ,* பெ.(n.) பூரம்; impure subchloride of mercury.

**வகாரத்திரவியவித்தை** *vagāra-t-tiraviya-vittai,* பெ.(n.) திருவைந் தெழுத்து வித்தைகளுள் மூன்று வித்தை; three magical arts of the five relating to five mystic letters.

மறுவ. மூலமந்திரம் (ஓம்).

**வகாரம்**[1] *vagāram,* பெ.(n.) வகரவெழுத்து; the letter va. *"வகார மிசையும் மகாரம் குறுகும்" (தொல். எழுத்து. 330). "பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்" (தொல். எழுத்து.98).*

*[வ + காரம்.]*

காரம் = எழுத்துச் சாரியை. பழந்தமிழ் எழுத்துச் சாரியைகளுள் ஒன்று. கரம், காரம், கான் இம்மூன்றும் குற்றெழுத்துச் சாரியைகளாய் (தொல்.எழுத்து.137) வரும். கரம் குற்றெழுத்திற்கும், காரம் நெட்டெழுத்திற்கும் சொல்லும் வழக்கு அச் சாரியைகளில் அமைந்துள்ள குறில் நெடில் வடிவங்களால் ஏற்பட்டதென்க.

**வகாரம்**[2] *vagāram,* பெ.(n.) 1. வெண்மையுஞ் செம்மையும் கலந்த பருந்தினம்; a mythical bird. 2. தரங்குறைந்த மாழையினைப் பொன்னாக்கும் முயற்சி; alchemy. 3. செயற்கை வெள்ளியினைப் பொன்னாக்கும் கலை; alchemical process of making artificial silver.

**வகாரவித்தை** *vagāra-vittai,* பெ.(n.) 1. பொன்னாக்கக் கலை; alchemy. 2. திருவைந்தெழுத்துக் கலை; magical art relating to the five mystic letters.

**வகாரவுப்பு** *vagāra-v-uppu,* பெ.(n.) கல்லுப்பு (மூ.அ.); rock - salt.

**வகாரவேலை** *vagāra-vēlai,* பெ.(n.) இரும்பு, செம்பு போலும் தரம் தாழ்ந்த மாழைகளைப் பொன்னாக்கஞ் செய்வது; transmulation of base metals-iron. copper etc, into gold.

**வகிடெடு-த்தல்** *vagiḍeḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வாகெடுத்தல்; to make partition of hair. 2. வகிரெடு-த்தல் பார்க்க; see *vagireḍu-.*

*[வகிடு + எடு-.]*

**வகிடு** *vagiḍu,* பெ.(n.) வகிர்ந்த முன்தலை மயிரின் இடைவெளி யொழுங்கு; parting in woman's hair from the crown to the forehead.

*[வகு→வகிர்→வகிரு→வகிடு. (வகிர் = வகிர்ந்த உச்சி, உச்சிக்கோடு) (மு.தா.பக்.265)]*

**வகிர்¹–தல்** *vagir-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. துண்டாக அறுத்தல் (சது.); to slice; to cut in slips. 2. பிளத்தல் (சது.); to split. 3. கீறுதல்; to cleave. *"பகிர்ந்தான் சில வகிர்ந்தான் சில" (கம்பரா.அதிகாய.160).* 4. கிழித்துத் திறத்தல்; to tear open. 5. பிரித்தெடுத்தல்; to rip up. *வாழைமரத்தை வகிர்ந்து தண்டினைப் பிரித்தெடுத்தனர் (உ.வ.).*

*[வகு →வகிர்–.]*

**வகிர்²** *vagir,* பெ.(n.) 1. பிளவு; tearing. 2. கீறு (வின்.); scratch. 3. பிளந்த துண்டு; slice. *"மாவின் வடுவகி ரன்ன கண்ணீர்" (திருவாச.9, 2).* 4. வகிடு; வகிர்ந்த முன்தலை மயிரின் இடைவெளியொழுங்கு; parting in woman's hair from the crown to the forehead. 5. வார்க்கச்சு (வின்.); leather girdle. 6. தோல் வார் (யாழ்.அக.); leather strap. 7. நரம்பு (யாழ்.அக.); tendon. 8. வழி (பிங்); way. 9. சாலை; road.

*[வகு →வகிர்–.]*

**வகிரு–தல்** *vagiru-*, 2 செ.கு.வி.(v.i.) 1. அறுத்தல்; cutting. 2. பங்கு செய்தல்; slicing.

*[வகிர் →வகிரு–.]*

**வகிரெடு–த்தல்** *vagir-eḍu-*, 4 செ. குன்றாவி.(v.t.) உச்சியினின்றும் நெற்றியின் நடுப்பகுதி வரை மயிரை ஒழுங்குபடப் பிரித்தல்; to part the hair from the crown to the forehead.

*[வகு →வகிர் + எடு–.]*

**வகிரேந்திரியம்** *vagirēndiriyam,* பெ.(n.) அறிகருவியாகிய புலன் (யாழ்.அக.); organ of sense.

Skt. இந்திரிய

*[பகு →பகிர் →வகிர் + இந்திரியம்.]*

**வகு¹–த்தல்** *vagu-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. கூறுபடுத்துதல்; to separate, to divide. 2. பகிர்ந்து கொடுத்தல்; to apportion. *"பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து" (நெடுநல்.78).* 3. இனம்பற்றிப் பிரித்தல்; to classify. 4. தலைப்புவாரியாக ஒதுக்கீடு செய்தல்; to allot under different heads. 5. அமர்த்துதல்; to assign, appoint. *"வகுத்தான் வகுத்த வகையல்லால்" (குறள், 377).* 6. பகுத்துக் கணக்கிடுதல் (கணக்.); to divide. 7. வகைப்படுத்திச் சொல்லுதல்; to narrate categorically. அவன் கதை வகுப்பாய் (பாகவத.1 ஸ்ரீ. நாரதர். 5). 8. முறையோடு செலவிடுதல்; to expend methodically. *"காத்த வகுத்தலும்" (குறள், 385.).* 9. படைத்தல்; to create, as for a special purpose. *"என்னை வகுத்திலையே லிடும்பைக் கிடம் யாது சொல்லே" (தேவா. 643, 2).* 10. பூசுதல்; to daub. *"அஞ்சனம் வகுத்து" (பெருங். உஞ்சைக். 34, 15).*

ஒ.நோ. L., facio, to make, do, E. manufacture.

*[பகு →வகு–.]*

**வகு²–தல்** *vagu-*, 2 செ.குன்றாவி.(v.t.) பிளத்தல்; to split. *"மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு" (புறநா. 264).*

*[பகு →வகு–.]*

**வகு³** *vagu,* வி.(v.) 1. ஏற்படுத்துதல்; frame. 2 உருவாக்குதல்; to set up. 3. அமைத்தல்; to institute. *மக்களுக்காக வகுக்கப்படும் சட்டங்களை மக்கள் மதித்து நடக்க வேண்டும். முன்னோர் வகுத்த முறை இது: அவர் தனக்கென்று ஒரு புது வழியினை வகுத்துக் கொண்டார்.*

*[பகு →வகு–.]*

**வகு⁴** *vagu,* வி.(v.) 1. வகைப்படுத்துதல்; classify, seperate, analyse. *செய்தியைத் தொகுத்தும், வகுத்தும் பார்க்கும்போது சில முடிவுகள் கிடைக்கும்.* 2. கணித்தல்; divide. *ஒரு எண்ணில் மற்றோர் எண் எத்தனை மடங்கு உள்ளது என்று கணக்கிடுதல்.*

*[பகு→வகு-.]*

**வகுஞ்சம்** *vaguñjam,* பெ.(n.) இரவு (மலை); night.

**வகுண்டகி** *vaguṇḍagi,* பெ.(n.) மருதோன்றி; nail dye-*Lawsonia alba.*

**வகுண்டம்** *vaguṇḍam,* பெ.(n.) கவிழ்ந்து பூக்கும் தும்பை வகை (மலை); a low annual plant flourishing in dry localities.

மறுவ. கவிழ்தும்பை



**வகுண்டிகா** *vaguṇḍigā,* பெ.(n.) வாலுளுவை அரிசி; seeds of intellect plant - *Celastrus paniculata.*

**வகுண்டிகை** *vaguṇḍigai,* பெ.(n.) கஞ்சாங் கோரை (மலை.); white basil.

மறுவ. நாய்த்துளசி

**வகுண்டிமடம்** *vaguṇḍi-maḍam,* பெ.(n.) வாலுளுவை (சங்.அக.); black oil tree.

*[வகுந்து→வகுண்டி+மடம்]*

**வகுணி** *vaguṇi,* பெ.(n.) ஒலி (சூடா.); sound.

*[வகுளி→வகுணி]*

**வகுத்தல்** *vaguttal,* பெ.(n.) 1. பிரித்தற் கணக்கு (கணக்.); division. 2. வடிவமைப்பு; design.

*[வகு¹→வகு-த்தல்]*

**வகுத்தாலம்** *vagu-t-tālam,* பெ.(n.) கொடிப் பாசி; moss creeper-*Hydrilla verticillata.*

**வகுத்தான்** *vaguttāṉ,* பெ.(n.) ஊழ்; fate, as the great dispenser. *"வகுத்தான் வகுத்த வகையல்லால்" (குறள், 377).*

**வகுத்திரம்** *vaguttiram,* பெ.(n.) தெப்பம் (யாழ்.அக.); raft.

**வகுத்திராபிகாரம்** *vaguttirāpigāram,* பெ.(n.) மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி; five sense organs- body, mouth, eye, nose, ear.

**வகுத்துக்காட்டல்** *vaguttu-k-kāṭṭal,* பெ.(n.) உத்தி முப்பத்திரண்டனுள், முன் தொகுத்துக் கூறியதைப் பின்னர் முறையே விரித்துக் கூறுவது (நன். 14); detailed exposition of what has been briefly summorised earlier stated, one of 32 utti.

*[வகுத்து + காட்டல்.]*

**வகுதரவு** *vagu-taravu,* பெ.(n.) வகை தெரிவு (நாஞ்.); discrimination.

**வகுதி** *vagudi,* பெ.(n.) 1. பிரிவு; division. 2. வகுப்பு; class. *"வகுதியின் வசத்தன" (கம்பரா. இரணியன். 69).*

*[பகு→வகு→வகுதி (மு.தா.265)]*

ஒருகா. பகுதி→வகுதி என்றுமாம்.

வகுந்து *vagundu*, பெ.(n.) 1. வழி; way. *"வகுந்து செல் வருத்தத்து" (சிலப். 11.167).* 2. சாலை; road.

*[வகு[1]→வகுந்து.]*

வகுந்துமடம் *vagundu-madam*, பெ.(n.) வாலுளுவை (மூ.அ.); black oil tree.

*[வகுண்டிமடம்→வகுந்துமடம்]*

வகுப்பு[1] *vaguppu*, பெ.(n.) 1. பள்ளியில் மாணவருக்கு கற்றுக் கொடுக்கப்படும் பாடவேளை அல்லது நேரம்; period of instruction. 2. தர அடிப்படையிலும், வசதி அடிப்படையிலும் பகுக்கப்பட்டிருக்கும் பிரிவு; grade based on amenities. *'முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றான்'.* 3. பொருளாதார அடிப்படையில் பிரிக்கப்படும் பிரிவு; class based on economic status. *'நடுத்தர வகுப்பைச் சார்ந்தவர்'.*

*[வகு→வகுப்பு.]*

ஒ.நோ. பகு →பகுப்பு

வகுப்பு[2] *vaguppu*, பெ.(n.) பள்ளியில் மாணவர்களைப் பிரித்துப் பாடஞ்சொல்லும் பிரிவு; class. *"ஒரே வகுப்பிலாங்குக் கலைபயின்றோ மல்லவா" (பஞ்ச. திருமுக. 432).*

*[வகு→வகுப்பு.]*

வகுப்பு[3] *vaguppu*, பெ.(n.) 1. கூறுபடுத்துகை; dividing. 2. இன வாரியாகப் பிரிக்கை; classifying. *"வகுப்பமைந்த....... அப்பங்கள்" (மதுரைக் 626. உரை.).* 3. பிரிவு; section, division. *இளஞ்சிறார்களின் மனங் கொள்ளுமாறு இறங்கிச் சென்று பாடஞ் சொல்லுபவரே திறமையான ஆசிரியர் (உ.வ.).* 4. பத்தி; paragraph. 5. இனம், குழு; clan, caste. *மக்களிடையே முதற்கண் கிளைத்த தொழில் வகுப்பே (craft class) நாளடைவில் பல்வேறு இனவகுப்புகளைத் தோற்றுவித்தது.* 6. தரம், தன்மை; class, standard, rank. 7. தடுக்கப்பட்ட அறை; compartment, as in a railway carriage. *வகுப்புக்குப் பயணிகள் எண்மர் (உ.வ.).* 8. வகிடெடுத்த முன்தலை மயிரின் இடைவெளி யொழுங்கு; parting in woman's hair from the crown to the forehead. *"சீவி வகுப்பெடுத்துச் சேர்த்துக் குழன்முடித்து" (கூளப்ப.131.).* 9. சந்தம், ஒத்தி தன்மையாய் இசைக்கும் வரி; uniform rhythmic flow of a stanza. *"மங்கல வள்ளை வகுப்பொடு வெண்பாவால்......... இசை (வச்சணந். செய்யு. 132).* 10. அழகு (சது.); beauty. 11. பொலிவு (யாழ்.அக.); splendour.

*[வகு→வகுப்பு.]*

வகுப்புவாதம் *vaguppu-vādam*, பெ.(n.) இனம், மத அடிப்படையில் மக்களைப் பிரிக்க எண்ணுகின்ற போக்கு; sectarianism, communalism. *'வகுப்பு வாதத்தினால் நாட்டின் ஒற்றுமை சீர்குலைகிறது'.*

*[வகுப்பு + **Skt.** vāda> த. வாதம்.]*

வகுப்புவாரி[1] *vaguppu-vāri*, பெ.(n.adj.) 1. இனப் பாகுபாடு; communal division. *இனப் பாகுபாடு அறநெறிக்கு ஒவ்வாதது.* 2. பிரிவுவாரிப் பகுப்பு; sectional division. 3. கிளைவாரித் தேர்வு; divisional election.

*[வகுப்பு + வாரி]*

வகுப்புவாரி[2] *vaguppu-vāri*, வி.எ.(adv.) 1. வகுப்பு வாரியாக; communally. *வகுப்பு வாரியாகத் தலைவரைத் தெரிவு செய்வது*

*தற்கால நடைமுறையாகிவிட்டது (உ.வ.).* 2. பிரிவுவாரியாக; sectionally. 3. கிளை வாரியாக; divisionally.

*[வகுப்பு + வாரி]*

வகுமை *vagumai,* பெ.(n.) 1. களிப்பு, இன்பம்; joy. 2. மகிழ்ச்சி (அக.நி.); happiness.

வகுலி *vaguli,* பெ.(n.) மீன்; fish. *"பயமிலாது திரியுஞ்சில் வகுலி போன்று" (வரத. பாகவத. நரசிங்க.234) (நாமதீப.269).*

வகுவை *vaguvai,* பெ.(n.) ஓர் கட்டி; an abscess.

வகுள்[1] *vagul,* பெ.(n.) 1. சமுத்திராப்பச்சை; a kind of plant - *Argyreia speciosa.* 2. மகிழ மரம்; a tree - *Mimusops elengi.*

வகுள்[2] *vagul,* பெ.(n.) சமுத்திரப்பாலை (மலை); elephant creeper.

வகுளப்பிகம் *vagulappigam,* பெ.(n.) வஞ்சிக்கொடி (சங்.அக.); a creeper.

வகுளம் *vagulam,* பெ.(n.) மகிழம்பூ; pointed, leaved ape flower. *"பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா" (குறிஞ்சிப். 70.).*

வகுளம்பூ *vagulam-pū,* பெ.(n.) மகிழம்பூ; flower of mimusops elengi. It is very fragrant but not beautiful.

வகுளாபரணம் *vagulāparanam,* பெ.(n.) மேளகர்த்தாக்களுளொன்று; a primary *rāga..*

வகுளி[1] *vaguli,* பெ.(n.) ஒலி (யாழ்.அக.); sound.

*[வகுணி→வகுளி]*

வகுளி[2] *vaguli,* பெ.(n.) 1. எவட்சாரம்; a prepared salt. 2. மலைமாமரம்; mountain mango tree.

வகுளிநாதர் *vaguli-nādar,* பெ.(n.) நவநாத சித்தருள் ஒருவர் (பொருட்.நிக.9.); *śiddhā,* one of *navanāda-cittar.*

வகை[1] *vagai,* பெ.(n.) 1. கூறுபாடு; division, section. *"அவ்வகை யொன்பதும் வினை யெஞ்சு கிளவி" (தொல். சொல். 146).* 2. கிளை, பிரிவு; section, branch. 3. சாதியினம், வகுப்பினம் (G.Tn.D.1.145.); caste. 4. பிரிவு, இனம்; kind, class, sort. *இது எவ்வகையைச் சேர்ந்தது?* 5. முறை; manner, method. *"பாயினார் மாயும் வகையால்" (பு.வெ.5, 2)* . 6. வழி, சூழ்ச்சி; ways, means. *"மாயும் வகையறியேன்" (திவ். திருவாய். 5, 4, 4). "வகைமடிப்பிலே மாட்டிக் கொண்டது" (பழ.).* 7. காரணம் (நாமதீப. 640.); cause. 8. தந்திரம்; artfulness. *"வகையால் மதியாது மண்கொண்டாய்" (திவ்.இயற். நான்முகன். 25.).* 9. திறமை, ஆற்றல், வலிமை; skill, ability. *"வகைகொண்டு வந்தேன்" (கம்பரா.பாசப். 36.).* 10. இயல்பு, தன்மை; nature, quality. *"வளமங்கையர் வகையுரைத்தன்று" (பு.வெ. 9.50, கொளு.).* 11. வணிக முதல் (வின்.); the principal stock in trade. 12. இடம் (பிங்.); place. 13. உறுப்பு; limb. *"வகை நலமுடைய காளை" (சீவக. 695.).* 14. வாழ்க்கைக்குரிய செல்வம், பொருள் முதலியன (வின்.); goods; property; means of livelihood. 15. குறுந்தெரு; short or narrow street. *"மூதா ரிடவகை யெல்லை யெல்லாம்" (சீவக.462).* 16. மனையின் பகுப்பு; apartments of a house. *"வகைமாணல்லில்" (புறநா. 398).* 17. விளக்கம் (இ.வ.); details. 18. கூட்டப்படும் எண்கள் (வின்.); parts of the some total in addition.

தெ., ம. வக; க., து. வகெ.

*[வகு¹→வகை]*

**வகை²–தல்** *vagai-*, 2 செ.கு.வி.(v.i.) பிரிவு படுதல்; to be divided, sub-divide.

*[வகு¹→வகை–, (மொ.க.பக்.39)]*

**வகை³–தல்** *vagai-*, 3 செ.குன்றாவி.(v.t.) 1. வகைப்படுத்துதல்; to arrange a subject. *"மந்தரை பின்னரும் வகைந்து கூறுவாள்" (கம்பரா. மந்தரை.60.).* 2. வகிர்தல், பிளத்தல்; to divide; to cut. *"வாளை யீர்ந்தடி வல்லிதின் வகைஇ" (நற்.129.).* 3. ஆராய்தல்; to consider, weigh. *"நகர்நீ தவிர்வாயெனவும் வகையாது தொடர்ந்து (கம்பரா.பிராட்டி.16.).*

*[வகு¹→வகை–,]*

**வகை⁴** *vagai-*, பெ.(n.) 1. பொதுவான கூறுகளைக் கொண்டு ஏற்படுத்திக் கொள்ளும் பிரிவு; classification or compart one utilisation based on theme. or category. *இங்கு அனைத்து வகையான பொருட்களும் கிடைக்கும்.* 2. பிரிவு; variety. *எத்தனையோ வகையான மனிதர்கள்.* 3. முறை; manner. *'ஆறுதல் அளிக்கும் வகையில் பேசினார்'. ஒரு வகையில் நீ சொல்வது சரி.*

*[வகு→வகை]*

**வகை⁵–தல்** *vagai-*, பெ.(n.) குறுகலான சந்து; narrow lane.

*[வகு¹→வகை–, வகை = குறுந்தெரு (சீவ.நச். 462).]*

**வகைக்கு** *vagaikku*, பெ.(n.) பிரிவு தோறும்; each item. *வகைக்கு பத்து உருபா செலவாயிற்று.*

**வகைகணக்குமன்றம்** *vagai-kaṇakku-maṉṟam*, பெ.(n.) நஞ்சை யறுதிக் களநடை, மிகுதி விளைச்சல் மகமை, மானியக் கொடை முதலியவற்றின் கணக்குகளை மேற்பார்வை செய்யும் கணக்கு மன்றம்; revenue collecting body in a joint meeting, once in a year, verifying the classified accounts of wet lands, fixed land income groups and donated lands.

*[வகை + கணக்கு + மன்றம்]*

**வகைகாரன்** *vagai-kāraṉ*, பெ.(n.) கெட்டிக்காரன்; clever man. *"நீயாடும் வித்தை வெகுமாய வித்தை கண்டாய் வகைகாரா" (நெல்விடு.240.).*

*[வகு→வகை + காரன் = வினைமுதல் குறித்த ஆண்பாலீறு]*

**வகைகூறு–தல்** *vagai-kūṟu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒரு சொல்லிற்குரிய பொருளை பலவாறு வகைப்படுத்திக் கூறுதல்; to convey the meaning of a word, in various classsifications.

*[வகை + கூறு–.]*

வகைகூறுதல் என்பது, ஒன்றற்குரிய விளக்கத்தைக் கூறுமுகத்தான், அதன் இயல்புகளை வெளிப்படுத்த வேண்டி, அதனுடைய வகைகளைக் கூறுதலாகும். "நகையென்பது சிரிப்பு; அது முறுவலித்து நகுதலும், அளவே சிரித்தலும், பெருகச் சிரித்தலு மென மூன்றென்ப" (தொல். பொருள்.251, பேரா.) எனப் பேராசிரியர் கூறும் சிரிப்பு வகை, வகை கூறுதலில் அடங்கும்.

வேட்கை பிறவாப் பருவத்தாரும், பிறக்கின்ற பருவத்தாரும், பிறந்த பருவத்தாரும் என

மூவகையார் (சீவ.2529, நச்.) எனப் பெண்கள் வகைப்படுத்தப்படுதல் குறிப்பிடத் தக்கதாகும்.

**வகைகெட்டவன்** *vagai-keṭṭavaṉ,* பெ.(n.) 1. ஒழுக்கங் கெட்டவன்; a man lacking discipline. 2. தரமறியாதவன்; the man who does not the know the dignity of value.

*[வகு→வகை + கெட்டவன்.]*

**வகைச்சல்** *vagaiccal,* பெ.(n.) மாலை வகை; a kind of garland. *"திருமாலை வகச்சல் வளையம்" (கோயிலொ. 59).*

*[வகை →வகைச்சல்]*

**வகைசமாபந்தி** *vagai-šamāpandi,* பெ.(n.) வகைகணக்குமன்றம் பார்க்க; see *vagaikaṇakku -maṉṟam.*

*[வகை + U. சமாபந்தி]*

**வகைசெய்-தல்** *vagai-šey-,* 1 செ.கு.வி. (v.i.) 1. ஏற்பாடு செய்தல்; to make arrangements. 2. ஆயத்தப் படுத்துதல்; to prepare. 3. கணக்கிற் பதிவு செய்தல்; to make entries in an account. 4. வழி செய்தல் (இ.வ.); to find a way out. 5. நிலங்களுக்குத் தீர்வை யொழுங்கு செய்தல் (S.I.I. i, 64.); to make a revenue settlement.

*[வகை + செய்-.]*

**வகைசெய்கின்றவர்** *vagai-šey giṉṟavar,* பெ.(n.) நிலத்தின் அளவு முதலியவற்றை ஒழுங்குபடுத்தும் அதிகாரி (I.M.P.Cg.720); settlement officer.

*[வகை + செய்கின்றவர்]*

**வகைசொல்(லு)-தல்** *vagai-šol(lu)-,* 1 செ.கு.வி.(v.i.) 1. விளக்கஞ் சொல்லுதல்; to give details. 2. கணக்குக் காட்டுதல்; to render account.

**வகைத்தார்** *vagai-t-tār,* பெ.(n.) வகை மாலை பார்க்க; see *vagai-mālai. "வகைத்தார் மார்பன்" (பெருங். வத்தவ.4, 8).*

*[வகை + தார்]*

**வகைதப்பு** *vagai-tappu,* பெ.(n.) 1. நேர் வழியினின்றும் பிறழுகை; swerving from the right path. 2. தவறுகை; mistake. 3. ஆய்ந் தறியாமை; thoughtlessness. *"வகைதப்பா மோசம் வராதோ" (விறலிவிடு. 983.).*

*[வகை + தப்பு.]*

**வகைதிரிவு** *vagai-tirivu,* பெ.(n.) வகை தெரிவு (நாஞ்.) பார்க்க; see *vagai-terivu.*

*[வகை + திரிவு]*

**வகைதெரி-தல்** *vagai-teri-,* 2 செ.கு.வி. (v.i.) ஒன்றன் தனிச் சிறப்பினைத் தெரிந்து செயல்படுதல்; to do a thing after considering its special features.

*[வகை + தெரி-.]*

**வகைதெரிவு** *vagai-terivu,* பெ.(n.) ஒன்றைக் கூர்ந்து நோக்கி, பிற பொருள்களினின்று வேறுபடுத்தும் திறன்; discrimination. *அவன் வகை தெரிவு இல்லாதவன்.*

*[வகு→வகை + தெரிவு]*

**வகைதொகை** *vagai-togai,* பெ.(n.) விளக்கம்; details. *மேற்கொண்ட செலவினத்தின் வகைதொகை சொல்லியாதல் வேண்டும்.*

தெ. வகதொக.

*[வகை + தொகை]*

வகைநிலைக்கொச்சகம் *vagai-nilai-k-koccagam,* பெ.(n.) கொச்சக வகை (சீவக. 2514, உரை.); a kind of koccagam verse.

*[வகைநிலை + கொச்சகம்.]*

வகைநூற்பா *vagai-nūṟpā,* பெ.(n.) தொகுத்துச் சொல்லப்பட்டதனை வேறு வேறாக வகுத்துரைக்கும் நூற்பா (நன். 20); *nūṟpā,* giving detailed exposition of that which has already been briefly stated.

*[வகை + நூற்பா.]*

வகைப்படுத்து-தல் *vagai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. பங்கிடுதல் (சங்.அக.); to divide. 2. வகையாகப் பிரித்தல்; to classify and arrange.

*[வகு→வகை + படு →படுத்து-.]*

வகைப்பாடு *vagai-p-pāḍu,* பெ.(n.) பிரித்தல்; division, classification. *நோயின் அறிகுறிகள், வகைப்பாடு முதலியன அறிந்து பண்டுவமளிக்க வேண்டும்.*

*[வகை + பாடு.]*

வகைப்பேறு *vagai-p-pēṟu,* பெ.(n.) வரி வகையுளொன்று; a tax.

*[வகை + பேறு. பேறு = வரிவகை.]*

வகைபண்ணு-தல் *vagai-paṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) வகைசெய்-, 1, 2, 3 (யாழ். அக.) பார்க்க; see *vagai-šey-.*

*[வகை + பண்ணு-.]*

வகைபுனை-தல் *vagai-puṉai-,* 2 செ.குன்றாவி.(v.t.) வகைசெய்-, 1, 2, 3 (யாழ்.அக.) பார்க்க; see *vagai-šey-.*

*[வகை + புனை-.]*

வகைபெறக்காட்டல் *vagai-peṟa-k-kāṭṭal,* பெ.(n.) தொகுத்துரைத்ததை விரித்துக் கூறும் உத்திவகை (மாறனலங். பாயி. 25.); a literary device which consists in the detailed treatment of which has already been briefly stated.

வகைபெறு-தல் *vagai-peṟu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. முட்டுப்பாடுகள் விலகுதல், தடைகள் அகலுதல்; to be cleared of difficulties. 2. முறைப்படி அமைதல்; to be in proper order.

*[வகை + பெறு-.]*

வகைமடிப்பு *vagai-maḍippu,* பெ.(n.) உதவியற்ற நிலை; helpless condition.

*[வகை + மடிப்பு.]*

வகைமாலை *vagai-mālai,* பெ.(n.) தளிரும் பூவும் விரவத்தொடுத்த மாலை; a kind of garland in which tender leaves and flowers are alternately strung together. *"வகைமாலையினையும் இழையினையு முடைய மகளிரை" (சீவக. 483, உரை).*

*[வகை + மாலை]*

வகைமுதலடுக்கணி *vagai-mudalaḍuk kaṇi,* பெ.(n.) பல வகையான முதற் பொருள்களை அடைசினை புணராது செய்யுள் முழுவதும் அடுக்கிக் கூறுவதாகிய அணி (மாறனலங். 179.); a figure of speech in which a whole stanza consists merely of the names of several objects strung together without any adjunct.

வகைமோசம் *vagai-mōšam,* பெ.(n.) 1. இக்கட்டான, சிக்கல் நிலை; complicated. 2. உதவியற்ற நிலை; helpless condition.

3. நம்பிக்கைக் கேடு; betrayal or breach of trust.

*[வகை + மோசம்]*

**வகையரா** *vagaiyarā,* பெ.(n.) முதலியன (வின்.); etcetera.

*[வகை→வகையரா.]*

**வகையற்றவள்** *vagai-y-aṟṟavaḷ,* பெ.(n.) 1. வாழும் வழி தெரியாதவள்; a woman who does not know, how to live. 2. நெறி பிறழ்ந்தவள்; woman gone astray. 3. கொள்கைப் பிடிப்பின்றி வாழ்பவள்; woman lacking principles in life.

*[வகை + அற்றவள்.]*

**வகையறா** *vagaiyaṟā,* பெ.(n.) ஒன்றோடு தொடர்புடைய மற்றொன்று; and the rest, etcetera hails from a family. *'வயலின் தம்பூரா வகையறாக்களுடன் வந்து இறங்கினார்'.*

**வகையறி-தல்** *vagai-y-aṟi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. செய்யும் முறை தெரிதல்; to know the way, to follow the proper course of action. 2. கூறுபாடறிதல்; to understand the bearings. *"சொல்லின் வகையறியார்" (குறள், 713.).*

*[வகு →வகை + அறி-,]*

**வகையறு[1]-த்தல்** *vagai-y-aṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) வழக்குத் தீர்த்தல்; to settle, as a dispute. *'எங்களில் நாங்கள் பொருந்தி வகையறுத்துக் கொண்டோம்' (S.I.I.viii. 156).*

*[வகை + அறு-.]*

**வகையறு[2]-த்தல்** *vagai-y-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தெளிவாகப் பகுத்தறிதல்; to discern. 2. நுணுக்கத்தை வேறுபடுத்தி விளக்குதல்; to distinguish. 3. மறைக் குறியீடுகளைத் தெளிவுறுத்தல்; to decipher. 4. சிக்கலறுத்தல், முடிச்சவிழ்த்தல்; to unravel.

**வகையறு[3]-தல்** *vagai-y-aṟu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. அடிப்படைப் பொருளை இழத்தல்; to lose the wherewithal. 2. ஆதரவற்றுப் போதல்; to become helpless.

**வகையாக** *vagai-y-āga,* பெ.அ.(adj.) வசமாக; inescapably, strongly. *'பொய் சொல்லி அவரிடம் வகையாக மாட்டிக் கொண்டான்.*

*[வகை + ஆக.]*

**வகையார்** *vagaiyār,* பெ.(n.) இனத்தார், பிரிவினர்; persons of same class or sect.

*[வகு→வகை→வகையார்.]*

**வகையிடு-தல்** *vagai-y-iḍu-,* 18 செ. குன்றாவி.(v.t.) வகைப்படுத்து (யாழ்.அக.) பார்க்க; see *vagai-p-paḍuttu.*

*[வகு→வகை + இடு-.]*

**வகையுளி** *vagai-y-uḷi-,* பெ.(n.) அசை முதலுறுப்புகளைச் சொல் நோக்காது இசை நோக்கி வண்ணமறுக்கை (யாப். வி. 375.) (தண்டி. 111.); scansion in disregard of speech rhythm.

'வேண்டுதல் 'வேண்டாமை' என்ற குறளில் வகையுளி பயின்று வருதல் குறித்து யாப்பருங்கலக் காரிகையாரும், இளம்பூரணரும் வரையறுத்துள்ளது வருமாறு:

முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புகள் நிற்புழி அறிந்து குற்றப்படாமல் வண்ணம் அறுத்தல் (யாப்.95).

'பொருளொடு சொல்லை அறுத்தவழித் தளையும், சீரும் சிதையின், அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழிச் சேர்த்துக' (தொல்.செய்யுள்.10, இளம்.).

**வகைவை-த்தல்** *vagai-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. பொருட்டாகக் கொள்ளுதல்; to pay attention to. 2. கணக்கிலெடுத்துக் கொள்ளுதல்; to take into account. *இவன் நான் சொல்வதை வகை வைக்காமல் மனம் போனபோக்கில் நடக்கிறான் (நாஞ்.).* 3. கணக்கில் வரவு வைத்தல்; to credit to an account.

**வகோரகண்டன்** *vagōra-kaṇḍaṉ,* பெ.(n.) கொட்டைக் கரந்தை; a kind of plant.

**வங்கக்கடம்** *vaṅga-k-kaḍam,* பெ.(n.) வெங்காரம்; borax.

**வங்கக்கல்[1]** *vaṅga-k-kal,* பெ.(n.) சுக்கான் கல் (யாழ்.அக.); kunkur.

*[வங்கம் + கல்.]*

**வங்கக்கல்[2]** *vaṅga-k-kal,* பெ.(n.) சிலா வங்கக்கல்; a kind of lead stone.

*[வங்கம் + கல்.]*

**வங்கக்களங்கம்** *vaṅga-k-kaḷaṅgam,* பெ.(n.) மருந்துவகை (தஞ்.சர.iii, 79.); a medicinal preparation.

**வங்கக்களிம்பு** *vaṅga-k-kaḷimbu,* பெ.(n.) சிவப்புக் களிமம்; an ointment prepared with red oxide of lead.

*[வங்கம் + களிம்பு.]*

**வங்கக்காந்தசத்து** *vaṅga-k-kānda-šattu,* பெ.(n.) 1. ஒரு வகை மூலி; a kind of herbal. 2. சிறியாணங்கை, நத்தைச் சூரி, அழுகண்ணி, தொழுகண்ணி, கள்ளி; herbs containing lead and load stone.

**வங்கக்குடு** *vaṅga-k-kuḍu,* பெ.(n.) குடவம் (பித்தளை); brass.

**வங்கக்குவடு** *vaṅga-k-kuvaḍu,* பெ.(n.) வங்கமலை; mountain containing lead ore.

*[வங்கம் + குவடு.]*

**வங்கக்கூட்டு** *vaṅga-k-kūṭṭu,* பெ.(n.) வங்கம் சேர்ந்த மருந்து; medicine containing lead.

*[வங்கம் + கூட்டு.]*

**வங்கக்கோளாறு** *vaṅga-k-kōḷāṟu,* பெ.(n.) ஈயத்தின் சிதைந்த படிவு; saturnine cachexia.

**வங்கச்சுண்ணம்** *vaṅga-c-cuṇṇam,* பெ.(n.) வங்கத்தாற் செய்த மருந்துப் பொடி வகை; a kind of medicinal powder, prepared from purified lead.

*[வங்கம் + சுண்ணம்.]*

**வங்கச்செடி** *vaṅga-c-ceḍi,* பெ.(n.) இண்டஞ்செடி; a throny shurb - *Caesalpinia sepiaria.*

*[வங்கம் + செடி.]*

**வங்கசத்துமூலிகை** *vaṅga-šattu-mūligai,* பெ.(n.) சிவகரந்தை, வெள்ளறுகு, ஆடாதோடை, மணித்தக்காளி, துத்தி, பொன்னாங்கண்ணி, அறுகம்வேர், இலந்தை, செங்கத்தாழை அடங்கிய மூலிகைகள்; herbs containing lead.

**வங்கசம்** *vaṅgašam,* பெ.(n.) ஓர்வகை வெள்ளி; a kind of silver.

*[வங்கம் → வங்கசம்.]*

**வங்கசிந்தூரம்** *vaṅga-šindūram,* பெ.(n.) ஈயத்தின் சிந்தூரம் (பதார்த்த.1208); red lead.

*[வங்கம் + சிந்தூரம்.]*

**வங்கசிலை** *vaṅga-šilai,* பெ.(n.) தமிழ்ச் சித்தர் கூறும் 120 வகை இயற்கை மருந்துகளுள் ஒன்று; one of the 120 kinds of natural bodies as classified in Tamil Siddar's science.

**வங்கசெஞ்சாந்து** *vaṅga-šeñcāndu,* பெ.(n.) செவ்வீயம்; red lead.

**வங்கசேனகம்** *vaṅga-šēṉagam,* பெ.(n.) வெள்ளகத்தி (மூ.அ.); west Indian pea - tree.

**வங்கடபாரை** *vaṅgaḍa-pārai,* பெ.(n.) மீன்வகையுளொன்று; a kind of fish-caranx crumenoph thalmus.



**வங்கடம்** *vaṅgaḍam,* பெ.(n.) இனம், குடும்பம்; race, family.

**வங்கடை** *vaṅgaḍai,* பெ.(n.) மீன்வகை; a kind of fish.

**வங்கணக்காரன்** *vaṅgaṇa-k-kāraṉ,* பெ.(n.) 1. உயிர் நண்பன் (வின்.); intimate friend. 2. கள்ளக் காதலன்; paramour.

*[வங்கணம் + காரன்]*

**வங்கணக்காரி** *vaṅgaṇa-k-kāri,* பெ.(n.) வங்கணத்தி பார்க்க; see *vaṅgaṇatti.*

*[வங்கணக்காரன் (ஆ.பா.) →வங்கணக்காரி (பெ.பா.)]*

**வங்கணத்தி** *vaṅgaṇatti,* பெ.(n.) 1. உற்ற தோழி; intimate woman friend. 2. காமக் கிழத்தி, கள்ளக்காதலி (வின்.); concubine.

*[வங்கணம் + அத்தி (அத்தி : ஒரு பெண்பாலீறு)]*

**வங்கணப்பேச்சு** *vaṅgaṇa-p-pēccu,* பெ.(n.) பொய்க்குற்றச்சாட்டு; slander.

*[வங்கணம் + பேச்சு]*

**வங்கணம்[1]** *vaṅgaṇam,* பெ.(n.) 1. நட்பு; friendship. *"நேசமிலா வங்கணத்தி னன்று வலிய பகை" (தனிப்பா. i, 104, 35).* 2. காதல்; love. 3. கள்ளக் காதல்; amour. *"என் வங்கணச் சிங்கியைக் காணேனே" (குற்றா.குற.136).*

**வங்கணம்[2]** *vaṅgaṇam,* பெ.(n.) 1. கத்தரிக்காய் வகை (அரு.நி.); brinjal variety. 2. செங்கத்தரி (சங்.அக.); orbicular leaved caper. 3. சேம்பு (சங்.அக.); Indian kales.

**வங்கணம்[3]** *vaṅgaṇam,* பெ.(n.) தகுதி; propriety. *"எனை ஆதரித்தல் வங்கணமே" (சர்வசமய. பக். 67).*

வங்கணன் *vaṅgaṇaṉ*, பெ.(n.) வங்கணக்காரன் (யாழ்.அக.) பார்க்க; see *vaṅgaṇa-k-kāraṉ*.

[வங்கணம்→வங்கணன்.]

வங்கத்துக்குவா – தல் (வங்கத்துக்கு வருதல்) *vaṅgattukku-vā-*, 18 செ.கு.வி. (v.i.) 1. தெரிவு செய்தல்; to be put to the test. 2. பயனுள்ளதாதல்; to be effective.

வங்கதாளேசுவரபற்பம் *vaṅga-tāḷē šuvara-paṟpam*, பெ.(n.) இதளியம், தாம்பிரத்தூள், அரிதாரம், கந்தகம், சம எடை கொண்டு அரைத்துப் புடமிட்ட பற்பம். இதனால் கிரந்தி சூலை நீங்கும்; a calcined white powder prepared from mercury, copper, orpiment, or sulphur, it is prescribed for ulcers, rheumatic pains and gunmam.

வங்கதூசம் *vaṅga-tūšam*, பெ.(n.) பவளம்; coral.

வங்கதோசம் *vaṅga-tōšam*, பெ.(n.) ஈயத்தினா லுடம்பிலேற்பட்ட நஞ்சு; lead poison-*Plumbism*.

வங்கநடம் *vaṅga-naḍam*, பெ.(n.) வெண் காரம் (மூ.அ.); borax.

வங்கநாடு *vaṅga-nāḍu*, பெ.(n.) வங்கம்[1], 5 பார்க்க; see *vaṅgam*.

[வங்கம் + நாடு.]

வங்கநாளம் *vaṅga-nāḷam*, பெ.(n.) ஈயத்தால் செய்த குழாய், இது வளி முறையில் அடுப்பூதுவதற்காக பயன்படும்; a lead tube to blow the over.

வங்கநீர் *vaṅga-nīr*, பெ.(n.) கடல்; sea. *"வங்கநீர் வரைப்பெலாம்" (சூளா.இரத. 104).*

வங்கநீறு *vaṅga-nīṟu*, பெ.(n.) ஈயமணல் (மூ.அ.); lead ore.

வங்கப்பற்று *vaṅga-p-paṟṟu*, பெ.(n.) இருவேறு மாழைகளை ஒன்றிணைக்க உதவும் பற்று; solder for metals.

*[வங்கம் + பற்று. பற்று = இணைக்கும் மாழைத்தூள்.]*

வங்கப்பாண்டி *vaṅga-p-pāṇḍi*, பெ.(n.) பள்ளியோடம் போன்ற வண்டி; a boat - like cart. *"வங்கப் பாண்டியிற் றிண்டே ரூரவும்" (பரிபா. 20, 16).*

[வங்கம் + பாண்டி.]

வங்கப்பாத்திரம் *vaṅga-p-pāttiram*, பெ. (n.) அடுகலங்களிலொன்று; domestic vessels prepared with white lead.

[வங்கம் + பாத்திரம்.]

வங்கப்பாவை *vaṅga-p-pāvai*, பெ.(n.) மருந்துச்சரக்கு வகை; a drug. *"வங்கப் பாவையோ டின்ன மருத்துறுப் பெல்லாம்" (பெருங். மகத. 17, 150).*

வங்கபற்பம் *vaṅga-paṟpam*, பெ.(n.) ஈயத்தின் தூள் (பற்பம்) (யாழ்.அக.); carbonate of lead.

[வங்கம் + பற்பம்.]

வங்க்பேதி *vaṅgapēdi*, பெ.(n.) சூத நஞ்சு; a kind of arsenic prepared from mercury or mercurial compound.

[வங்கம் + பேதி.]

வங்கம்[1] *vańgam*, பெ.(n.) 1. தூய்மைப் படுத்திய ஈயம் (நாமதீப. 378.); purified lead. *"வங்கம் இறுகினால் மகாராசனாகலாம்" (பழ.). "வங்கத்திற் செம்பொனுந் தெரிப்பாம்" (கந்தபு.மார்க்.123).* 2. தகரம்; tin. 3. துத்தநாகத் தூள் (யாழ்.அக.); zinc. 4. வெள்ளி (பிங்.); silver. *"வங்கம்குத்தத் தங்கம் தேயுமா?" (பழ.).* 5. ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று (இரகு. திக்குவி. 56); Bengal, one of 56 tēšam. 6. பதினெண் மொழியுளொன்றான வங்கநாட்டு மொழி; the Bengali language, one of *padinen-moli*. 7. மரவகை; Indian calosanthes. 8. சிறு மரவகை; tender wild jack. 9. கத்தரி (பிங்.); brinjal. 10. வழுதுணங்காய்; a kind of brinjal.

வங்கம்[2] *vańgam*, பெ.(n.) அலை; wave.

வங்கம்[3] *vańgam*, பெ.(n.) 1. ஆற்று வளைவு (யாழ்.அக.); bend of a river. 2. வளைவு; curve. 3. கருத்து (அக.நி.); idea.

வங்கம்[4] *vańgam*, பெ.(n.) 1. மரக்கலம்; ship, as moving swiftly. *"வாலிதை யெடுத்த வளிதரு வங்கம்" (மதுரைக்.536).* 2. வண்டி வகையு ளொன்று; a kind of vehicle. *"திண்டேர்ப் புரவி வங்கம் பூட்டவும்" (பரிபா. 20, 16).*

*[வங்கு →வங்கம்.]*

வளைந்த அல்லது வட்ட வடிவான மரக்கலம் (வே.க.4 : 99).

வங்கம்[5] *vańgam*, பெ.(n.) வறுமை; poverty.

*[வெங்கம் →வங்கம்]*

வங்கம்நீற்றி *vańgam-nīṟṟi*, பெ.(n.) மலை முருங்கை; mountain moringa tree.

வங்கம்விளையுங்கல் *vańgam-viḷaiyuń-kal*, பெ.(n.) வெள்ளைச் சுக்கான் கல் (யாழ். அக.); white kunker.

*[வங்கம் + விளை + உம் + கல்]*

வங்கமணல்[1] *vańga-maṇal*, பெ.(n.) ஒரு வகைச் சரக்கு; one of the 120 kinds of natural substances.

*[வங்கம் + மணல்]*

வங்கமணல்[2] *vańga maṇal*, பெ.(n.) வங்கநீறு (யாழ்.அக.) பார்க்க; see *vańga -nīṟu*.

*[வங்கம் + மணல்]*

வங்கமலை *vańga-malai*, பெ.(n.) ஈயமலை; mountain containing lead ore.

வங்கமாரணம் *vańgamāraṇam*, பெ.(n.) வங்க பற்பம்; calcined lead.

வங்கமுதலவ்வை *vańgamudalavvai*, பெ.(n.) இலவங்கம்; cloves.

வங்கமூலி *vańga-mūli*, பெ.(n.) பிரமியிலை; lead of brahmi.

வங்கர்[1] *vańgar*, பெ.(n.) வங்கதேயத்தார்; people of Bengal. *"வங்கர் மாளவர்" (கம்பரா. உலாவி. 47).*

வங்கர்[2] *vańgar*, பெ.(n.) நெய்தனிலமாக்கள்; mariners.

*[வங்கம் →வங்கர்.]*

வங்கராங்கீரை *vańgarāń-kīrai*, பெ.(n.) கடற்கரையோர நெய்தல் நில நிலைத்திணை; a herb seen in coastal region.

*[வங்கர் + ஆம் + கீரை]*

வங்கராசன் vaṅga-rāšaṉ, பெ.(n.) ஈயம்; lead.

*[வங்கம் + ராசன்]*

வங்கரை vaṅgarai, பெ.(n.) வளைகை; கோணுகை; bent, crook. *"வங்கரை கொங்கரையாய் மாட்டிக் கொண்டான்" (பழ.).*

*[வங்கு →வங்கரை. வங்கு = வளைவு.]*

வங்கல் vaṅgal, பெ.(n.) மூலிகை வகையு ளொன்று; amoora rohita.

வங்கவணம் vaṅgavaṇam, பெ.(n.) உப்பு; salt.

வங்கவலி vaṅgavali, பெ.(n.) உப்பு வகையு ளொன்று; colico pictonum.

வங்கவிடம் vaṅga-viḍam, பெ.(n.) 1. ஈய நஞ்சூட்டு; plumbism. 2. வங்கதோசம் பார்க்க; see vaṅga-tōšam.

*[வங்கம் + விடம்]*

வங்கவுப்பு vaṅga-v-uppu, பெ.(n.) உப்பு வகை (இங்.வை.); sugar of lead.

*[வங்கம்' + உப்பு]*

வங்கவுப்புசெயநீர் vaṅga-v-uppu-šeya nir, பெ.(n.) ஓர் வகை ஈயம் சேர்ந்த செய்நீர்; a pungent liquid extracted from lead salts.

வங்கன்[1] vaṅgaṉ, பெ.(n.) இழிசினன் (சூடா.); outcaste.

மறுவ. கீழ் (கள்)

வங்கன்[2] vaṅgaṉ, பெ.(n.) வறுமையாளன் (கொ.வ.); poor-man *"வங்கம்பயலுக்கு வாய்ப் பேச்சில் குறைவில்லை" (உ.வ.).*

*[வெங்கம்→வெங்கன்→வங்கன்.]*

வங்கனம் vaṅgaṉam, பெ.(n.) சேம்பு (மலை.); Indian kales.

வங்கனி vaṅgaṉi, பெ.(n.) செங்கத்தரி; red brinjal.

வங்கா[1] vaṅgā, பெ.(n.) பறவை வகை; a kind of bird. *"வங்காக் கடந்த செங்காற் பேடை" (குறுந். 151) (தொல்.எழுத்து.225, உரை).*

*[வங்கு→வங்கா (வே.க.4 : 99).]*

வளைந்த கழுத்துள்ள நாரை.

ஒருகா. வக்கா →வங்கா = பறவை வகை. வங்கு, வங்கம் = வளைவு. வளைவுப் பொருண்மை குறித்த சொல்.

வங்கா[2] vaṅgā, பெ.(n.) ஊதுகொம்பு வகை, நீண்டு வளைந்த ஊது குழல் (வின்.); a long winding trumpet, ram's horn.

*[வங்கு→வங்கா (வே.க.4 : 99).]*

வங்கு = வளைவு. வளைத்து நீண்ட வடிவில் அமைக்கப்பட்ட ஊதுகுழல்.

வங்காரக்கண்டி vaṅgāra-k-kaṇḍi, பெ.(n.) சேலை வகையு ளொன்று; a kind of saree.

*[வங்காரம்+கண்டி]*

வங்காரம் vaṅgāram, பெ.(n.) 1. பொன்; gold. *"வங்கார மார்பிலணி தார்" (திருப்பு. 748).* 2. மாழைக் கட்டி (பிங்.); ingot, mass of metallic ore. 3. செப்பம் (யாழ்.அக.); good condition.

தெ; பங்காரமு; க. பங்கார.

வங்காரவச்சி vaṅgāra-vacci, பெ.(n.) மேற்கிந்தியாவிலுள்ள ஏழை மக்கள் பயன்படுத்தும் கீரை வகை; west Indian samphire purslane, a herb eaten by poor

people. *"தாயுந் தகப்பனுந் தள்ளிவிட்ட காலத்தே வாவென்றழைத்த வங்காரவச்சி" (வின்.).*

வங்காரவள்ளைக்கீரை *vaṅgāra-vaḷḷai-k-kīrai,* பெ.(n.) ஓர் வகைக் கீரை, இது மழைக் காலத்தில் முளைக்கும்; a kind of vegetable greens used in culinary.

வங்காரவாசி *vaṅgāra-vāśi,* பெ.(n.) வங்காரவச்சி (சங்.அக.) பார்க்க; see *vaṅgāra-vacci.*

வங்காளக்கிழங்கன் *vaṅgāḷa-k-kiḻaṅgaṉ,* பெ.(n.) மருந்திற்குப் பயன்படும் கிழங்கு வகைகளுளொன்று; bengal whiting scialnoides pama.

வங்காளகுடாக்கடல் *vaṅgāḷa-k-kuḍā-k-kaḍal,* பெ.(n.) நாவலந்தேயம் (இந்தியா) உள்ளிட்ட நிலஞ்சூழ்ந்த கடல்; the bay of *Beṅgāl.*

*[வங்காளம் + குடாக்கடல்.]*

நாவலந் தேயத்தை (இந்தியாவை) மூன்று பக்கஞ் சூழவமைந்த கடல் (குடாக்கடல் = மூன்று பக்கம் நிலஞ்சூழ்ந்த கடல், குடைவுள்ள கடல்).

வங்காளச்சர்க்கரை *vaṅgaḷa-c-carkkarai,* பெ.(n.) சருக்கரை வகையு ளொன்று; a kind of sugar; Bengal sugar.

வங்காளச்சீனி *vaṅgāḷa-c-cīṉi,* பெ.(n.) வங்காளச்சர்க்கரை பார்க்க; see *vaṅgāḷa-c-carkkarai.*

வங்காளத்தாறு *vaṅgāḷattāṟu,* பெ.(n.) இலிங்கம், பச்சைக் கருப்பூரம், குங்குமப்பூ, படிகாரம், சாரம், சுக்கு முதலியன. இவைகள் ஆறும் வங்காளத்திலிருந்து வருகின்றன; the six drugs from *Beṅgāl.*

வங்காளத்திப்பிலி *vaṅgāḷa-t-tippili,* பெ.(n.) திப்பிலி வகை (மூ.அ.); a species of long pepper, as from *Beṅgāḷ.*

வங்காளத்தேவி *vaṅgāḷa-t-tēvi,* பெ.(n.) 1. பரதவர் வழிபடும் கடவுள்; god worshipped by fisherman tribe. 2. திருமகள்; *Tirumagaḷ. "தேவி தேவண்ணா ஏலேலோ வங்காளத் தேவி ஏலேலோ மலையாளத்தில் ஏலேலோ மலையாள தேவி ஏலேலோ" (நாட்டார் பாடல்).*

வங்காளப்பச்சை *vaṅgāḷa-p-paccai,* பெ.(n.) 1. செம்பிலிருந்து உண்டாக்கப்படும் ஒருவகை வண்ணம்; verdigris - *Sub acetis cupris.* 2. பூடுவகை (யாழ்.அக.); a herb.

வங்காளம்[1] *vaṅgāḷam,* பெ.(n.) வங்கம்[1] 5, 6 பார்க்க; see *vaṅgam. "தங்காத சாரல் வங்காள தேசமும்" (S.I.I. i, 98).*

*[வங்கம்→வங்காளம்.]*

வங்காளம்[2] *vaṅgāḷam,* பெ.(n.) பண்வகை (சது.); (mus.) a melody-type.

வங்காளமஞ்சள் *vaṅgāḷa-mañjaḷ,* பெ.(n.) மகளிர் பூசிக்குளிக்கும் மஞ்சள் வகை; a kind of turmeric, used by women when bathing.

*[வங்காளம் + மஞ்சள்]*

வங்காளவாத்து *vaṅgāḷa-vāttu,* பெ.(n.) வாத்து வகை (சென்.வழ.); a kind of goose.

வங்காளவேலம் *vaṅgāḷa-vēlam,* பெ.(n.) ஓர் வேல மரம்; bengal landanam-*Morung elachi.*

வங்காளி *vaṅgāḷi,* பெ.(n.) 1. வங்காள நாட்டான்; *Beṅgāḷi.* 2. வங்கம்[1], 6 பார்க்க; see *vaṅgam.* 3. வாழை; plantation.

**வங்கான்** *vaṅgāṉ,* பெ.(n.) சிறு அணிகலன்; sundry jewellery. *"வங்கானுந் தொங்கானுமாட்டிக் கிளுகிளுத்து" (ஆதி யூரவதானி. 64).*

**வங்கி**[1] *vaṅgi,* பெ.(n.) வேலிப்பருத்தி கொடி வகை; a variety of cotton creeper.

**வங்கி**[2] *vaṅgi,* பெ.(n.) கரைப்பேட்டு வகையுள் ஒன்று, கோடு போன்று வளைந்து செல்லும் முறையில் கரையில் விளிம்படுத்துச் செய்யப்படும் வேலைப்பாடு; decorative works on the margin of a cloth, a kind of margin pattern.

**வங்கி**[3] *vaṅgi,* பெ.(n.) 1. தோளணியுளொன்று (வின்.); a kind of armlet, as having a peculiar curve. 2. வளைந்த இரும்புக்கருவி; a kind of iron hook or curved instrument. 3. வளைந்த கத்தி (பிச்சுவா); நெளிவாள்; a kind of curved sword.

தெ., க., வங்கி (ink.); து. வக்கி (gg.).

*[வாங்கு → வங்கு → வங்கி. வங்கி = நெளி வளையல் (வே.க.4 : 99).]*

நெளிவளையல், நெளி மோதிரம் முதலானவை வளைதற் கருத்தினைக் குறிக்கும் அணிகலன்களாகும்.

**வங்கி**[4] *vaṅgi,* பெ.(n.) சித்திரைத் திங்களில் விதைக்கப் பெற்று, ஐந்து திங்களுக்குள் விளையும் மட்டமான சம்பா நெல் வகை; bengal paddy, an inferior kind of *cambā,* sown in cittirai and maturing in five months.

**வங்கி**[5] *vaṅgi,* பெ.(n.) கொடுவேலி (சங். அக.); Ceylon lead-wort.

**வங்கிக்காரை** *vaṅgi-k-kārai,* பெ.(n.) கழுத்தணிவகை (இ.வ.); a necklet.

*[வங்கி +காரை]*



**வங்கிசன்** *vaṅgišaṉ,* பெ.(n.) 1. வழித்தோன்றல்; scion. 2. உறவினன் (வின்.); kinsman.

**வங்கிநெளிவு** *vaṅgi-neḷivu,* பெ.(n.) விரலணி வகை (இ.வ.); a kind of ring, as having a peculiar curve.

*[வங்கு → வங்கி + நெளிவு = நெளிவாக வளைந்தமைந்த விரலணிவகை.]*

**வங்கியம்**[1] *vaṅgiyam,* பெ.(n.) 1. மூங்கில் (மலை); bamboo. 2. இசைக்குழல் (சூடா.); reed pipe. *"வங்கியம் பலதேன் விளம்பின" (கம்பரா. கைகே.60).*

*[வங்கு →வங்கி →வங்கியம்.]*

வங்கு = வளைவு. பெருவங்கியம் = வளைவாக அமைந்த இசைக் குழல்.

**வங்கியம்**[2] *vaṅgiyam,* பெ.(n.) இனம், பிரிவு, குடும்பம், கொடிவழி; race, family, lineage.

**வங்கிலம்** *vaṅgilam,* பெ.(n.) முள்; thorn.

*[வங்கி →வங்கியம்.]*

**வங்கிவளையல்** *vaṅgi-vaḷaiyal,* பெ.(n.) வளையல் வகை (வின்.); a kind of bangle.

*[வங்கு→வங்கி + வளையல் = நெளிவளையல் (மு.தா.பக்.70).]*



**வங்கினி** *vangini,* பெ.(n.) 1. மை; black paste. 2. பொட்டு; mark made in the forehead with black paste. 3. கருமை; black. *"நாணவே வங்கினியை வழித்தெடுத்து, நாலுதினம் பூமிக்குள் வைத்திடாயே" (கருவூ-குருநூல்).*

**வங்கீபுரத்தாய்ச்சி** *vangipura-t-tāycci,* பெ.(n.) நூற்றெட்டுத் திருப்பதிகக்கோவை, நூற்றெட்டுத் திருப்பதித் தோத்திரம் ஆகிய நூல்களை இயற்றிய புலவர்; author of *nūṟṟeṭṭu-t-tiruppadiga-k-kōvai, nūṟṟeṭṭu-t-tiruppadi-t-tōttiram.*

**வங்கு**[1] *vangu,* பெ.(n.) காய்ந்து வறண்ட செதில்களைப் போல, மேல் தோலை மாறச்செய்து வெடிப்பு ஏற்படுத்தும் தோல் நோய்; a kind of skin disease marked by dryness of the skin and cuts or cracks.

க. பங்கு (banku)

மறுவ. நாய்ச்சொறி.

*[மங்கு→வங்கு = மேனியில் மங்கல் நிறமாகப் படரும் ஒருவகைப் படை நோய் (வே.க. 4 : 59).]*

குளித்தபின் துவர்த்தாத மேனியிற் காணும் படை போன்ற தோற்றம்.

**வங்கு**[2] *vangu,* பெ.(n.) மரக்கலத்தறி; a kind of wooden loom.

**வங்கு**[3] *vangu,* பெ.(n.) 1. கல் முதலியவற்றின் உட்டுளை; orifice, hole, hollow, as in a stone. *"தான் கிடக்கிற வங்குகளினுடைய வாசலிலே முத்துக்களை யீன்றன" (திவ். பெரியதி. 3,4, 2, வ்யா.).* 2. எலி, பாம்பு முதலியவற்றின் வளை (சது.); rat-hole, snake-hole. 3. மலைக் குகை; உட்டுளை (பிங்.); cave, cavern, hollow. *"வங்குகளிலே நிறைத்துள்ள தேனிலே தோய்த்து" (திவ். பெரியதி. 1, 2, 5, வ்யா.).* 4. மரப்பொந்து; hollow in a tree. *"வங்கினைப் பற்றிப்போகா வல்லுடும் பென்ன" (பெரியபு. கண்ணப்ப. 116.).* 5. தோணியின் விலாச் சட்டங்களுக்கு நடுவிலுள்ள இடம் (வின்.); space between the beams or ribs of a boat. 6. பாய்மரக் குழி (வின்.); socket for a mast. 7. கப்பலின் விலாச்சட்டங்கள் (பரவ.); wooden ribs of a ship. 8. தோல் நோய் வகையுளொன்று (இ.வ.); spreading spots on the skin, a disease. 9. நாய்ச்சொறி (இ.வ.); blotches on a mangy dog. 10. கழுதைப்புலி (சங். அக.); hyena, as spotted. 11. தாழம்பூவின் மகரந்தம் (இ.வ.); pollen of the screwpine.

க., ம. பங்கு, வங்கு.

*[வணங்கு→வங்கு (வே.க. 4 : 99).]*

வல்[1] என்னும் வளைதற் கருத்து வேரடியிலிருந்து கிளைத்த சொல்; உள் வளைந்து தோன்றும் படகு, தோணி, கப்பல் போன்றவற்றின் விலாச் சட்டங்கள்.

**வங்குக்கட்டை** *vangu-k-kaṭṭai,* பெ.(n.) வங்குக்கால் பார்க்க; see *vangu-k-kāl.*

*[வங்கு + கட்டை]*

**வங்குக்கால்** *vangu-k-kāl,* பெ.(n.) கப்பலின் விலாப்பலகைகளைத் தைக்கும் அடிப்படைச் சட்டம் (வின்.); the keel of a vessel, the timber to which the side - planks are nailed.

*[வங்கு+ கால்]*

வங்குசம் *vaṅguśam,* பெ.(n.) கூகை நீறு (சங்.அக.); flour of arrow-root.

ஒருகா. கூகைக்கிழங்குசாறு.

வங்குசகோசனம் *vaṅguśa-kōśaṉam,* பெ.(n.) குங்குமப்பூ; European saffron.

வங்குபடர்தல் *vaṅgu-paḍardal,* பெ.(n.) வங்கு[1] பார்க்க; see *vaṅgu.*

வங்குமாசம் *vaṅgumāśam,* பெ.(n.) புளிங்காடி; vinegar.

வங்குமாறல் *vaṅgu-māṟal,* பெ.(n.) வங்கு; resolving of the black spots.

வங்குல் *vaṅgul,* பெ.(n.) மரவகை (L.); spleen tree.

*[வங்கு → வங்குல் = வளைந்து வளர்ந்த மரம்.]*

வங்குவாசல் *vaṅgu-vāśal,* பெ.(n.) கருப்பையிலிருந்து பெண்குறிக்குள்ளடங்கி நீண்டு வந்திருக்கும் பூ; carvix.

வங்குளம்[1] *vaṅguḷam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. ஊதை; windy.

வங்குளம்[2] *vaṅguḷam,* பெ.(n.) வங்கூழ்,1 (சங்.அக.) பார்க்க; see *vaṅgūḻ.*

*[வங்கூழ் → வங்குள் → வங்குளம்]*

வங்கூழ் *vaṅguḷ,* பெ.(n.) 1. காற்று; wind. *"வங்கூ ழாட்டிய வங்குழை வேங்கை "(அகநா. 328).* 2. நோய் செய்யும் வளி (வாதக்.) முதலாய குறைபாடு (தைலவ.); *vādam,* one of the three humours of the body.

வங்கேசுவரம் *vaṅgēśuvaram,* பெ.(n.) 1. வங்க பற்பம், சங்கு பற்பம், ரசபற்பம், தாளகபற்பம், இவைகளைக் கலுவத்திலிட்டு அரைத்து, புளித்த காடியில் உலர்த்திய ஒரு வகை மருந்து; a kind of medicine. 2. இலங்கேசுவரம் (ஈழத்தீசுவரர்); a Šiva shrine in *Srilaṅga.*

வங்கேசுவரரசம் *vaṅgēśuvara-raśam,* பெ.(n.) வங்கேசுவரம் பார்க்க; see *vaṅgēśuvaram.*

வங்கை[1] *vaṅgai,* பெ.(n.) குறும்பு; mischief. *'சங்கையில்லாமலே வங்கைகள் செய்தாரே' (கனம். கிருட். கீர்த். 40).*

வங்கை[2] *vaṅgai,* பெ.(n.) பகை (யாழ்.அக.); enmity. *"வங்கை வைத்தால் தன்குடிக்குப் பகை" (உ.வ.).*

*[வகு → வங்கு → வங்கை.]*

வங்கொலையாயிரு-த்தல் *vaṅkolai-y-āy-iru-,* 4 செ.கு.வி.(v.i.) கொடிய பசியுடன் இருத்தல்; to be in intense or severe hungry.

வச்சஆள் *vacca-āḷ,* பெ.(n.) பணிக்கு அமர்த்திய வேலையாள்; engaged servant.

*[வைத்த → வச்ச + ஆள்.]*

வச்சகத்தண்டுகம் *vaccaga-t-taṇḍugam,* பெ. (n.) வெட்பாலையரிசி; the seed of a tree, - *Herium antidysentricum.*

வச்சகம்[1] *vaccagam,* பெ.(n.) 1. காட்டு மல்லி வகை, நீண்ட மரமல்லி; Indian cork. 2. வெட்பாலை (தைலவ. தைல.); conessi bark.

வச்சகம்[2] *vaccagam,* பெ.(n.) மரமல்லிகை; a tree-Milingtonia hortenair, it is also known as malai malligai.

**வச்சதாகம்** *vacca-tāgam,* பெ.(n.) கருங் கொள்ளு; black horse gram.

**வச்சநாகம்** *vacca-nāgam,* பெ.(n.) பாம்பு வகையுளொன்று; a kind of snake.



**வச்சநாபி** *vacca-nābi,* பெ.(n.) நச்சுப்பூடு வகை (யாழ்.அக.); hepal aconite.

**வச்சநாவி** *vacca-nāvi,* பெ.(n.) வச்சநாபி பார்க்க; see *vacca-nābi.*

**வச்சநி** *vaccani,* பெ.(n.) மஞ்சள்; turmeric.

**வச்சநீர்** *vacca-nīr,* பெ.(n.) வச்சநி பார்க்க; see *vaccani.*

**வச்சரங்கம்** *vacca-rāṅgam,* பெ.(n.) வீரம், இரசம் இவைகளை விளக்கெண்ணையில் அரைத்து, பதங்கித்து மேகப்புண்களுக்காக கொடுக்கும் மருந்து வகை; a medicine prepared with mercury and perchloride of mercury and prescribed for syphilitic sores.

**வச்சரி** *vaccari,* பெ.(n.) வேம்பு (சங்.அக.); neem tree.

**வச்சனி**[1] *vaccaṉi,* பெ.(n.) மஞ்சள்; turmeric.

**வச்சனி**[2] *vaccaṉi,* பெ.(n.) காற்சேம்பு; a kind of plant.

**வச்சாகம்** *vaccāgam,* பெ.(n.) காட்டாடு; wild goat.

**வச்சாதனி** *vaccādaṉi,* பெ.(n.) சீந்தில்; moon creeper-*Tinospracordifolia* alias *Menispermum cordifolium.*

**வச்சி** *vacci,* பெ.(n.) செடி வகை; oblong cordate-leaved tree bilberry.

**வச்சிதண்ணீர்** *vacci-taṇṇīr,* பெ.(n.) அரத்தம்; blood.

**வச்சிரஅப்பிரகம்** *vaccira-appiragam,* பெ.(n.) காக்கைப் பொன்; a variety of mica.

**வச்சிரக்காரை** *vaccira-k-kārai,* பெ.(n.) பனஞ்சாறு, முட்டை, சுண்ணாம்புக் கலவை முதலியவற்றின் கலவை; a mixture of sweet totaly or juice extracted form palmra, egg and calcium or lime.

**வச்சிரக்கியாழம்** *vaccira-k-kiyāḻam,* பெ.(n.) மகப் பெற்ற மகளிர்க்கு, அரத்தப் போக்கு நிற்க கொடுக்கின்ற மூங்கிலைக் கருக்கு நீர்; a decoction of bamboo leaves given to woman after delivery of child, to arrest oozing or wasting of blood.

[வச்சிரம் + கியாழம்]

**வச்சிரக்குகை** *vaccira-k-kugai,* பெ.(n.) புற்றுமண், கூழாங்கல், கழுதை லத்தி, சுட்ட உமி, பழங்கந்தை முதலியவற்றை புளிக்க வைத்து, அரைத்துச் செய்கின்ற ஓர் கெட்டியான மூசை; a strong crucible, the method of its preparation is given.

உருக்குவதற்கும், நீறு செந்தூரம் சுண்ணம் உருவாக்க வேண்டியும் அதிகச் சூடு வேண்டியிருந்தால் இம் (மூசை) மட்குகையைப் பயன்படுத்துவதுண்டு.

வச்சிரக்குருந்து *vaccira-k-kurundu,* பெ.(n.) பொதிகை மலையில் விளையும் ஒருவகைக் குருந்து; a plant growth in the podigai mountain.

வச்சிரக்குளிகை *vaccira-k-kuḷigai,* பெ.(n.) ஒரு வகை மருந்து; a kind of medicine.

வச்சிரகண்டம் *vaccira-kaṇḍam,* பெ.(n.) இலந்தை; a jujube tree-*Zizyphus jujube.*

வச்சிரகண்டா *vaccira-kaṇḍā,* பெ.(n.) அரையாப்புக்குக் கொடுக்கும் மருந்து; a pill prescribed for bubo.

வச்சிரகந்தம் *vaccira-kandam,* பெ.(n.) தாளகச் செய்நஞ்சு (சங்.அக.); yellow orpiment.

வச்சிரகந்தரசம் *vaccira-kandarašam,* பெ.(n.) ஏலம்; a plant bearing fragrant capsules-Cardamum.

வச்சிரகம் *vacciragam,* பெ.(n.) தாமரைக் காய் (சது.); pericarp of the lotus.

வச்சிரகாயம்¹ *vaccira-kāyam,* பெ.(n.) உரமிகு உடம்பு; a strong robust body.

வச்சிரகாயம்² *vaccira-kāyam,* பெ.(n.) மருந்து வகை; a medicine. *"தயிராற் குடிப்பதொரு மருந்துண்டு, வச்சிர காயம் என்பது" (தக்கயாகப். 547. உரை).*

வச்சிரங்கம் *vacciraṅgam,* பெ.(n.) 1. சதுரக்கள்ளி; a square spurge. 2. வச்சிரம் பார்க்க; see *vacciram.*

வச்சிரசலம் *vaccira-šalam,* பெ.(n.) கோரைக்கிழங்கு; fragrant root tuber of a grass or sedge cyperus rotundus.

வச்சிரசீதம் *vaccira-šīdam,* பெ.(n.) பேய்ச் சீந்தில்; a creeper.

வச்சிரசுவாலை *vaccira-šuvālai,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish (சா.அக.).

வச்சிரத்தலைச்சி¹ *vaccira-t-talaicci,* பெ.(n.) கதண்டுக்கல்; a kind of mineral stone (சா.அக.).

வச்சிரத்தலைச்சி² *vaccira-ttalaicci,* பெ.(n.) கருவண்டு (யாழ்.அக.); black beetle.

மறுவ. கதண்டு

வச்சிரத்துரு *vaccira-t-turu,* பெ.(n.) சதுரக் கள்ளி (இலக்.அக.); square spurge.

வச்சிரத்துருவம் *vaccira-t-turuvam,* பெ.(n.) நாட்டு அதிமதுரம் அல்லது குன்றிமணி வேர்; Indian liquorice - *Abrus precatrious (Root of)* (சா.அக.).

வச்சிரத்தைத்தோயமாக்கி *vaccirattai-t-tōyamākki,* பெ.(n.) அத்திபேதி; a drug that resolves hardness of the bone (சா.அக.).

வச்சிரத்தைப்பற்பமாக்கி *vaccirattai-p-paṟpamākki-,* பெ.(n.) பிரண்டை; medicinal climber-vitis quadrangularis (சா.அக.).

வச்சிரத்தோகை *vaccira-t-tōgai,* பெ.(n.) செங்கத்தாரி; a medicinal shrub-*Niebuhria linearis* (சா.அக.).

வச்சிரதந்தி¹ *vaccira-tandi,* பெ.(n.) ஒரு வகைப் பூடு; a kind of herb (சா.அக.).

வச்சிரதந்தி² *vaccira-tandi,* பெ.(n.) ஒரு வகைப் புழு; a kind of worm. *"வச்சிரதந்தி யெனப்படு முந்துகீடம்" (கந்தபு. மகாசாத். 42).*

**வச்சிரதந்திவேர்** *vaccira-tandi-vēr,* பெ. (n.) ஒருவகை வேர்; a kind of root (சா.அக.).

**வச்சிரதரு** *vaccira-taru,* பெ.(n.) கஞ்சா; Indian hemp-cannabis sativa (சா.அக.).

**வச்சிரநாடு** *vaccira-nāḍu,* பெ.(n.) பாண்டி நாட்டிலிருந்ததொரு பெயர் பெற்ற கடற்கரை நாடு; the coastal region in the *Pāṇḍiyaṉ* country. *"வச்சிரநாடன்ன வாணுதல்" (களவியற்.47).*

**வச்சிரநிணம்** *vaccira-niṇam,* பெ.(n.) 1. மலைவேம்பு; a species of mountain or hill margosa. 2. கருவேம்பு; black species of margosa-*Garuga pinnata* (சா.அக.).

**வச்சிரப்பால்** *vaccira-p-pāl,* பெ.(n.) சதுரக்கள்ளிப்பால்; milk of square spurge-*Euphorbia quadratus* (சா.அக.).

**வச்சிரபுட்பம்** *vaccira-puṭpam,* பெ.(n.) எள்ளுப் பூ (மூ.அ.); blossom of sesamum.

**வச்சிரமூசை** *vaccira-mūšai,* பெ.(n.) 1. சாம்பல், புற்றுமண், இரும்பு கிட்டம், வெள்ளைக்கல் சூரணம், தலைமயிர் இவற்றை ஆட்டுப்பாலில் வேகவைத்து அரைத்து ரசம், மற்ற மாழைகளை உருக்க வேண்டி பயன்படுத்தும் ஒரு வகை மூசை; crucible for melting metals, the method of preparing it is given. 2. வச்சிரக்குகை பார்க்க; see *vaccira-k-kugai.*

*[வச்சிரம் + மூசை]*

**வச்சிரமூலி** *vaccira-mūli,* பெ.(n.) 1. பிரண்டை; medicinal climber, square-stalked vine, vitis quadrangularis. 2. எருக்கு; madar shrub, calotrophis gigantia. 3. சதுரக்கள்ளி; square spurge-*Euphorbia quadrata.*

**வச்சிரரூபகவாதம்** *vaccira-rūbaga-vādam,* பெ.(n.) கழுத்து பிடரியில் வலி, விழிகள் அசைவின்மை, கொறுக்கை தலைநோய், நடுக்கல், குதிகால் நரம்புகளில் நோவுடன் திமிர், கழிமாசுக் குறைவு ஆகியவிக்குணங்களைக் காட்டுகின்ற ஊதை வகை; a vada disease marked by cramps, pain in the nape, immobility of the eyes, head ache tremors pain in heels etc (சா.அக.).

**வச்சிரவரிகை** *vaccira-varigai,* பெ.(n.) பெண் மகப்பேறடைவதைக் குறிப்பதாகக் கருதப்படும் உள்ளங்கை வரிகை வகை (சிவக். பிரபந். சரபேந்திர. குற. 51, 1); a kind of distinctive mark in the palm of the hand, believed to indicate female issue.

**வச்சிரவல்லி** *vaccira-valli,* பெ.(n.) 1. பிரண்டை (சங்.அக.); square-stalked vine. 2. சூரிய காந்தி; sun - flower.

**வச்சிரவல்லிலேகியம்** *vaccira-valli-lēgiyam,* பெ.(n.) மருந்து வகை; a kind of medicine.

**வச்சிரவல்லிவேர்** *vaccira-valli-vēr,* பெ.(n.) பிரண்டை வேர்; root of vitis quadrangularis (சா.அக.).

**வச்சிரவிதளியம்** *vaccira-v-idaḷiyam,* பெ.(n.) தூய்மையாக்கப்பட்ட இதளியம் (சங். அக.); purified mercury.

**வச்சிராங்கம்** *vaccirāṅgam,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge.

**வச்சிராங்கி[1]** *vaccirāṅgi,* பெ.(n.) மூக்குத்திக் காய்; a (creeping) plant (சா.அக.).

வச்சிராங்கி[2] *vaccirāṅgi,* பெ.(n.) 1. உறுதியான கவசம் (சூடா.); invulnerable armour. 2. வைரம் பதித்த கவசம்; armour or cloak set with diamonds.

வச்சிராஞ்சி *vaccirāñji,* பெ.(n.) பிரண்டை; vitis quadrangularis (சா.அக.).

வச்சிரி *vacciri,* பெ.(n.) சதுரக்கள்ளி; square spurge.

வச்சை *vaccai,* பெ.(n.) பழிப்பு; disgrace, contempt. *"வச்சையா மெனும் பயமனத் துண்டு" (கம்பரா. கரன்வதை. 142).*

*[வை → வசை → வச்சை.]*

வச்சைமாக்கள் *vaccai-mākkaḷ,* பெ.(n.) இவறன்; misers, stingy persons. *"வச்சைமாக்க ளேன்றமா நிதியம் வேட்ட விரவலர்" (கம்பரா. உண்டாட். 19).*

*[வசை → வச்சை + மாக்கள் (மாக்கள் = கயவரான பொல்லா மாந்தர். ]*

வச்சையம் *vaccaiyam,* பெ.(n.) கலைமான்; stag-roe buck-*Capreolus dorcus.*

வச்சையன் *vaccaiyaṉ,* பெ.(n.) இவறன் மாலையன்; miser. *"வச்சையன்போலொர் மன்னன்" (கம்பரா. பூக்கொய். 19.).*

*[வச்சை → வச்சையன்]*

வசக்கட்டு *vaša-k-kaṭṭu,* பெ.(n.) 1. வணிகக் கூட்டாளி மூலமாகக் கொடுத்த தொகை; payment made to a partner. 2. ஒப்படைத்த பொருள்; goods or monies left in charge of a person. 3. இன்னதற் கென்று நியமித்து வைத்த தொகை; sum ear - marked for a particular purpose. 4. செலவுக்கென்று முன்னதாகக் கொடுத்த பணம்; imprest. 5. ஆட்சி (வின்.); possession.

வசக்கட்டுக்கணக்கு *vaša-k-kaṭṭu-k-kaṇakku,* பெ.(n.) கணக்கர் அல்லது நிருவாகப் பணியாளரிடம் நிருவாகச் செலவுக்காகக் கொடுத்து வைக்கப்பட்ட பணத்தின் கணக்கு (C.G.); account in respect of monies left in charge of a accountant or an agent.

*[வசக்கட்டு + கணக்கு.]*

வசக்கி *vašakki,* பெ.(n.) காடும், மேடுமாய்க் கிடந்த நிலத்தைச் சீர் செய்கை; reclamation of lands from irregular shape. *"ஊரின் மேலூர் புற்றும் தெற்றியுமாய்க் கிடந்த பாழ் நிலத்தை வசக்கி வயலும் குளமுமாக்கி".*

*[வயக்கி → வசக்கி]*

வசக்கு[1]-தல் *vasakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வயப்படுத்துதல், பழக்குதல்; to break in, tame, train, subdue. *மாட்டை உழவுக்கு வசக்கவேணும்.* 2. வளையப் பண்ணுதல் (யாழ்.அக.); to bend.

வசக்கு[2]-தல் *vašakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) நிலத்தைப் பண்படுத்துதல்; to reclaim or improve land. *'கட்டை பறிச்சு வசக்கி' (S.I.I.V.307).*

*[வயக்கு → வசக்கு]*

வசக்கு[3]-தல் *vašakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) வாட்டுதல்; to roast.

*[வதக்கு → வசக்கு]*

வசக்கேடு *vaša-k-kēḍu,* பெ.(n.) 1. உடல் நலமின்மை (வின்.); loss of health or unwell. 2. மயக்கம் (வின்.); delirium.

3. தன்னிலை கெடல்; untowardness. 4. இடர்ப்பாட்டு நிலை; awkward predicament. 5. தவற்று நிலை; wrong. 6. ஆறுதல் அளிக்கவியலாத நிலை; uncomfortable position.

*[வசம் + கேடு.]*

வசங்கண்டவன் *vaśaṅkaṇḍavaṉ,* பெ.(n.) 1. உண்மையறிந்தவன் (வின்.); one who is aware of the state of things. 2. முற்பழக்க முள்ளவன்; man of experience. 3. ஏதாவ தொரு பழக்கத்திற்கு அடிமை யானவன்; man addicted to a habit. *அவன் ஊரார் பணத்தில் உடம்பு வளர்த்து வசங்கண்டவன் (உ.வ.).*

*[வசம் + காண்→கண்டவன்.]*

வசங்கம் *vaśaṅgam,* பெ.(n.) வசகம் பார்க்க; see *vaśagam.*

வசங்களி-த்தல் *vaśaṅ-kaḷi-,* 4 செ.கு.வி. (v.i.) கட்டு மீறுதல் (யாழ்.அக.); to get out of control, to be uncontrolable.

*[வசம் + கழி-,→களி-,]*

வசங்கெட்டவன் *vaśaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) 1. செயலற்றவன், ஆண்மையற்றவன் (வின்.); impotent man. 2. உடல் நலமற்றவன் (வின்.); unhealthy man (one who is not in health). 3. நிலைமை கெட்டவன் (வின்.); man in reduced circumstances. 4. மனமின்றி வேலை செய்பவன்; unwilling or involuntary worker. 5. நட்பாங் கிழமையிலான் (யாழ்.அக.); unfriendly man. 6. கட்டினின்று விடுபட்டவன்; one who has freed himself from bonds. 7. ஒழுங்கீனன், ஒழுக்கக்கேடன்; one who has gone astray.

வசஞ்செய்-தல் *vaśañ-cey-,* 1 செ.குன்றாவி.(v.t.) 1. வயப்படுத்துதல்; to entice, allure. *"வாய் தரத் தக்கசொல்லி யென்னையுன் வசஞ்செய்வாயேல்" (கம்பரா. அங்கதன்றூது. 29);* 2. (முற்றிலும் ஆளுகைக்கு உட்படுத்துதல்) அடக்குதல்; to overcome, subdue. 3. கைப்பற்றுதல்; to take possession of.

*[வயம்→வசம் + செய்-,]*

வசட்டி *vaśaṭṭi,* பெ.(n.) வயிரமண் (யாழ்.அக.); diamond dust.

வசத்திற்சோதினி *vaśattiṟ-śōdiṉi,* பெ.(n.) எலுமிச்சை; sour lime.

வசதி[1] *vaśadi,* பெ.(n.) 1. வீடு (பிங்.); house, residence. 2. நல்லிடம் (சூடா.); commodious and comfortable place. 3. சமணர் கோவில் (இ.வ.); jain temple. 4. மருத நிலத்து ஊர் (பிங்.); village in an agricultural tract. 5. தகை நலம்; convenience. 5. வாய்ப்பு நலம்; comfort. *"முன்றிலிடை யுலவவே வசதி பெறு போதும்" (தாயு. சச்சிதா.11).* 6. இரவு (யாழ்.அக.); night.

வசதி[2] *vaśadi,* பெ.(n.) செல்வமும் பொருளும் ஏற்படுத்தித் தரும் வாய்ப்பான நிலை; means, amenity. *'அலுவலக நேரத்தை அவரவர் வசதிக்கேற்ப மாற்றிக் கொள்ளக் கூடாது'.*

வசதிக்கேடு *vaśadi-k-kēḍu,* பெ.(n.) உடம்பின் மெலிவு; physical weakness.

வசதிகம் *vaśadigam,* பெ.(n.) அடிவயிற்றைச் சுற்றியிருக்கும் எலும்பு; bone round the lower abdomen, pelvis.

வசந்தங்கங்கரு *vaśandaṅ-kaṅgaru,* பெ.(n.) சித்தரத்தை; lesser galangul-*Alpina officinarum.*

வசந்தப்பு-தல் *vašan-tappu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. முறை கேடாதல் (வின்.); to be on the wrong side, to be in the wrong place. *இது வசந்தப்பிச் சேர்த்திருக்கிறது.* 2. அறிவு மயங்குதல்; to lose conciousness. *அவன் வசந்தப்பி உளறுகிறான் (உ.வ.).*

*[வசம் + தப்பு-,]*

வசநீக்கம் *vaša-nikkam*, பெ.(n.) கைவச மிருந்ததை நீக்குகை; dispossession.

*[வயம்→ வசம் +நீக்கம்.]*

வசப்படு-தல் *vaša-p-padu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. கட்டுப்படுதல்; to submit, to be brought into subjugation. 2. ஆளுமைக்கு உட்படுதல்; to bring into one's possession. 3. தந்திரமாய் வசமாதல் (இ.வ.); to be enticed.

*[வயம்→ வசம் + படு-.]*

வசப்படுத்து-தல் *vašappaduttu-*, 5 செ. குன்றாவி.(v.t.) 1. கட்டுப்படுத்துதல்; to submit, to subjugate. 2. ஆளுமைக்கு உட்படுத்துதல்; to bring into one's possession. 3. தந்திரமாய் வசமாக்குதல்; to entice.

*[வயப்படு→ வசப்படு →வசப்படுத்து-,]*

வசப்பந்தேறு *vašappan-tēru*, பெ.(n.) வசம்பு வேர்த் துண்டு (வின்.); a piece of the root of sweet flag.

*[வசம்பு + தேறு.]*

வசப்பிழை *vaša-p-pilai*, பெ.(n.) வசக்கேடு (வின்.) பார்க்க; see *vaša-k-kēdu*.

*[வசம்¹ + பிழை]*

வசப்படு *vaša-p-padu*, வி.(v.) 1. ஆட்படுதல்; to be in the grip of (5th), to entrap. 2. உள்ளாதல்; be possessed by, subjected to. *காதல் வசப்பட்டுத் தூக்கத்தில் கூட உளற ஆரம்பித்துவிட்டான்.*

வசப்படுத்து-தல் *vaša-p-paduttu-*, 5 செ.கு.வி. (v.i.) வயப்படுத்து-தல் பார்க்க; see *vaya-p-paduttu-*. *'வெள்ளையனே வெளியேறு, என்னும் காந்தியடிகளின் கொள்கை இளைஞர்களை வசப்படுத்தியது'.*

*[வயப்படுத்து→வசப்படுத்து-தல்.]*

வசம்¹ *vašam*, பெ.(n.) 1. பொறுப்பு; under one's custody. 2. இருப்பு; under one is one's possession. 3. உள்ளான நிலை; being under the control or fluence, as a consequence or result. *'எல்லாம் விதியின் வசம்'.*

*[வயம் →வசம்]*

ஒநோ. தேயம் → தேசம்

நேயம் → நேசம்

வசம்² *vašam*, பெ.(n.) 1. உடைமை; possession. 2. பொறுப்பு, அக்கறை; charge, care. *"மாயப்பிறவி யுன்வசமே வைத்திட்டிருக்கும்" (திருவாச. 33, 8).* 3. ஆட்சி (யாழ்.அக.); power. 4. அடக்கி வைக்கை; control. 5. கீழ்ப்படிகை (வின்.), பணிகை, சார்ந்திருக்கை; subordination, subjection, dependence. 6. நேர் (இ.வ.); directness, straightness. 7. ஒழுங்கு (வின்.); order, regularity. 8. நிலைமை; real state or condition. *"அவன் அங்கே வசமறியாமற் போனான்".* 9. இயலுகை; ability, possibility. *"பொய்த்துயில்*

*கொள்வான்றனை யெழுப்ப வசமோ" (தாயு. ஆனந்தமான.7).* **10.** பக்கம் (வின்.); side. *'சப்பட்டை வசமாய்வை'.* **11.** எழுதும் தாள் (நாஞ்.); copying paper, folio. **12.** பிறப்பு (யாழ்.அக.); birth.

வசம்[3] *vašam*, இடை.(part.) மூலமாக; through. *அவர்வசம் பாவாணர் பொத்தகங்களை அனுப்பி யிருக்கிறேன்.*

வசம்[4] *vašam*, பெ.(n.) வசம்பு (நாமதீப. 335.) பார்க்க; see *vašambu*.

வசம்[5] *vašam*, பெ.(n.) இடம்; place. *"தானத்தார் வசம் குடுத்து".*

வசம்பிருந்தை *vašambirundai*, பெ.(n.) வசம்பு சுட்டகரி; charreel sweet flag.

வசம்பு[1] *vašambu*, பெ.(n.) **1.** பெருவேம்பு; a big species of margosa. **2.** தாமரை இலை; lotus leaf. **3.** மிளகு; peper, pipper nigrum. **4.** ஆசியா, ஐரோப்பா, அமெரிக்கா ஆகிய நாடுகளிற் பயிராகும் ஓர் விதப் பூண்டின் வேர்த்தண்டு; under ground stem of a plant, sweet flag, the root gives a very strong pungent odour, the leaf when wounded gives the smell. it is used for the following diseases, snake bite, enlarged spleen, gunmam, diarrhoea etc.

**Skt.** உக்கிரந்தம்.

இது பாம்பு நஞ்சு குன்மம் அரத்தபித்தம், சூலை சன்னிபாதம், பீலிகம், யானைக்கால், செரியாமையானேற்படும் வயிற்று நோய் கழிமாசுக்கட்டிற் காண்புழு ஆகியவற்றை நீக்குகின்ற ஓர் மருந்தாகும்.

வசம்பு[2] *vašambu*, பெ.(n.) மருந்தாகப் பயன்படும் ஒரு பூண்டின் வழுவழுப்பான வேர்; white sweet flag, used as a medicine. *'குழந்தைக்கு வயிற்று வலி வந்தால், வசம்பு குழைத்துத் தடவுவதுண்டு'.*

வசம்பு[3] *vašambu*, பெ.(n.) செடிவகை; sweet flag. *"வால்வெள் வசம்பும்" (பெருங். உஞ்சைக். 50, 28).*

வசம்புகா *vašambukā*, பெ.(n.) மலைவள்ளிக் கொடி; mountain sweet potato - creeper.

வசம்புசுட்டகரி *vašambu-šutta-kari*, பெ.(n.) கரிய, நீண்ட சொரசொரப்பான இலையைக் கொண்ட செடிவகை; charred sweet flag.

வசம்புவாசா *vašambu-vāšā*, பெ.(n.) மிளகு; pepper.

வசமாக *vašamāga*, பெ.அ.(adj.) **1.** வகையாக; inescapably. *திருடன் காவலர்களிடம் வசமாக மாட்டிக் கொண்டான்.* **2.** தப்பிக்க முடியாமல்; to under miscontrol or to grip.

*[வயம்→வசம்+ஆக]*

(ஒ.நோ.) தேயம் → தேசம்
கயம் → கசம்

வசமொழிக்கை *vašamolikkai*, பெ.(n.) வசநீக்கம் பார்க்க; see *vaša-nikkam*.

வசலிகா *vašaligā*, பெ.(n.) மல்லிகை; jasmine.

வசலை *vašalai*, பெ.(n.) பசளைக் கொடி; a kind of creeper. *"வசலை மென்கொடி வாடிய தன்ன" (கந்தபு. இரணியன். புத். 56).*

தெ. பட்சட்சலி

வசலைக்கீரை *vaśalai-k-kīrai*, பெ.(n.) பசலைக்கீரை; greens of a climber-*Spinach creeper*.

வசலோமி *vaśalōmi*, பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை; a species of eclipta progstata.

வசவல்லி *vaśavalli*, பெ.(n.) மரவகை; a kind of tree of the species.

வசவன் *vaśavaṉ*, பெ.(n.) காளைக் கன்று; male calf, steer. *"வசவனொடு புலி முலையுண" (திருப்பு. 51.).*

க. பசவ

*[வயம்→வபவன்→வசவன்]*

வசவி *vaśavi*, பெ.(n.) 1. கோயிலிலுள்ள நாட்டிய மகளிர்; dancing girl attached to a temple. 2. நடத்தை கெட்டவள் (யாழ்.அக.); faithless - woman.

*[வபம்→வயவி. 'இ' பெண்பாலீறு.]*

வசவு *vaśavu*, பெ.(n.) வசை, இழிமொழி, சுடுசொல்; foul, abusive language. *"கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்" (திவ். திருவாய். 7, 5, 3).*

*[வசை→வசவு]*

வசளை *vaśaḷai*, பெ.(n.) வசலை (வின்.) பார்க்க; see *vaśalai*.

வசன் *vaśaṉ*, பெ.(n.) 1. எல்லை (யாழ்.அக.); limit. 2. நேர்; directness, straightness.

வசன்கட்டு *vaśaṉ-kaṭṭu*, பெ.(n.) எல்லை வரம்பு (யாழ்.அக.); boundary-line.

மறுவ. எல்லைக்கோடு

*[வசன் + கட்டு.]*

வசனாண்டி *vaśaṉāṇḍi*, பெ.(n.) பொன் ஊமத்தை; yellow flowered dhatura, thorn apple (சா.அக.).

வசனாபி *vaśaṉābi*, பெ.(n.) பனிமலைச் சாரலில் விளைவதும், 2–3 விரலம் நீளமுள்ளதும், தோல் சுருங்கி இருப்பதுமான ஒரு வகை நஞ்சு; Indian aconite root found grown in the regions of Himalayas and gold in the bazzars-*Aconitum Ferox*. It is one of the nine kinds of virulent poisonous most of which are the species of aconite. The root resembles the navel of children and leaves are like those of Notchi (Vitex). It is said that no plant grows near it. The tuber contains a white strach like poisonous substance.

வசனித்தாய் *vaśaṉittāy*, பெ.(n.) சிறு துவரை; small red gram (சா.அக.).

வசா[1] *vaśā*, பெ.(n.) 1. குருதியின்மேல் வடியும் நீர்; serum of the blood. 2. கொழுப்பு; fat. 3. சதைப்பாகம்; flesh. 4. வசம்பு பார்க்க; see *vaśambu* (சா.அக.).

மறுவ. ஊனீர்

வசா[2] *vaśā*, பெ.(n.) 1. சதைப் பகுதியிலிருக்கின்ற கொழுப்பு; oily fat substance in the flesh. 2. அத்திமேகம் என்னும் நோய் வகை; a disease, excess of calcium in the urine.

வசாக்கிரம் *vaśākkiram*, பெ.(n.) பிரம்பு; a climber-common rattan-*Calamus Rotang* (சா.அக.).

வசாக்கோட்டி *vaśā-k-kōṭṭi*, பெ.(n.) கருப்பக் காலத்துண்டாம் மசக்கை முதலியன;

morning sickness and morbid longings of a pregnant woman.

*[வயா→வசா + கோட்டி.]*

கருப்பமுற்றவளுக்கு மயக்கம் முதலியவற்றை யுண்டாக்குவது.

வசாசலம் *vašā-šalam*, பெ.(n.) குருதியின் மேல் வடியும் ஊனீர்; serum (சா.அக.).

வசாசில்லி *vašā-šilli*, பெ.(n.) குடலைச் சூழ்ந்திருக்கும் ஊனம், ஊறுஞ்சவ்வு; (serus) industrial membrane (சா.அக.).

வசாதிகணம் *vašādiganam*. பெ.(n.) வசம்பு, சுக்கு, கடுக்காய், அதிவிடயம் ஆகியவைகளின் தொகுப்பு; species of drugs in the group of sweet flag, dry ginger, gallnut and Indian atee (சா.அக.).

வசாபூயம் *vašā-pūyam*, பெ.(n.) சீழு மூனீரும் சேர்ந்தவை; seropurulent (சா.அக.).

வசாமேகம் *vašā-mēgam*. பெ.(n.) ஒரு வகை நோய்; a kind of disease, fat in the urine (சா.அக.).

வசாலியம் *vašāliyam*, பெ.(n.) செவ்வியம்; pepper creeper (சா.அக.).

வசானியம்[1] *vašāniyam*, பெ.(n.) மிளகு (சங்.அக.); black-pepper.

வசானியம்[2] *vašāniyam*. பெ.(n.) வசாலியம் பார்க்க; see *vašāliyam*.

வசி[1]–தல் *vaši-*, 2 செ.குன்றாவி.(v.t.) 1. பிளத்தல்; to split, to cut. 2. வெட்டுதல்; to cut. *"வசிந்து வாங்கு நிமிர்தோள்" (திருமுரு. 106).*

வசி[2]–தல் *vaši-*, 2 செ.கு.வி.(v.i.) 1. வடுப் படுதல்; to be dented or notched. 2. வளைதல் (பிங்.); (திருமுரு. 106. உரை.); to bend.

வசி[3] *vaši-*, பெ.(n.) 1. பிளவு; cleft. *"கொழுநர் மார்பி னெடுவசி விழுப்புண்" (மலைபடு. 303).* 2. நுனி, கூர்மை (பிங்.); point. 3. முனை; edge. *"வசிகெழு சூலம்" (கந்தபு. மகாகாள.19).* 4. நுனி கூர்மையான கோல்; pointed stake. *"நாலு வசி நாட்டி நடுக்குதிக்கும் நன்னகரும்" (விறலிவிடு. 131).* 5. கழுக்கோல் (வின்.); impaling stake. 6. அடையாளம், குறி; mark. 7. தழும்பு; scar, cicatrice. *"வெள்ளூசி நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்" (பதிற்றுப் 42, 4) (பிங்.).* 8. வாள் (பிங்.); sword. *"இராவணனே கலந்தருள் பெற்றது மாவசியே" (தேவா. 151, 10).* 9. சூலம் (வின்.); trident.

*[வள்→வய்→வயி→வசி. வசி = கூர்மை. (ஒ.நோ.)மய்→மயி→மசி.]*

வசி[4]–த்தல் *vaši-*, 4 செ.குன்றாவி.(v.t.) பிளத்தல்; to split, to cut. *"இறைவன் கண்டமாக வசித்ததாகிய வசிதடியை" (பரிபா. 5, 39, உரை).*

வசி[5]–த்தல் *vaši-*, 4 செ.கு.வி.(v.i.) தங்குதல் (சூடா.), வதிதல், வாழ்தல்; to dwell, live, abide, reside.

வசி[6] *vaši-*, பெ.(n.) இருப்பிடம் (யாழ்.அக.); residence.

வசி[7]–த்தல் *vaši-*, 4 செ.குன்றாவி.(v.t.) வசியஞ் செய்தல், கிளர்ச்சியுறச் செய்தல், கவர்தல் (இ.வ.); to cajole, wheedle, inveigle, gain one's affections, entice. *"வசிந்து வாங்கு நுசுப்பின்" (புறநா. 383, 12, அடிக்குறிப்பு).*

வசி[8] *vaši*, பெ.(n.) 1. வசியம் (திவா.); fascination. *"வசி செய்யுன் றாமரைக் கண்ணும்" (திவ். திருவாய். 10, 3, 8).* 2. தன் வசஞ் செய்வது; that which fascinates. *"காழி யரனடிமா வசியே" (தேவா. 151, 10).* 3. தாழ்ச்சி; பணிகை (அக.நி.); subjugation, submission. 4. நம்பிக்கை, உறுதியளிக்கை, தேற்றுகை (அக.நி.); convincing, assuring. 5. வசிய வித்தைக்குரிய சொல்; magic word. *"மாதர் மனைதொறும்.... வசிபேசு மரனார்" (தேவா. 1008, 2).* 6. எண் வகை சித்தியுள், அனைத்தையும் தன் வயமாக்குகை (திருவிளை.அட்டமா. 27); the supernatural power of subduing all to one's own will, one of *astamā-šitti*. *"மணமலர் போ லெவரானும் வாஞ்சிக்கப்படுகை வசி" (சிவதரு. சிவஞானயோ. 90).*

வசி[9] *vaši*, பெ.(n.) 1. மழை; rain. *"வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி" (சிலப்.5, 73).* 2. நீர் (பிங்.); water.

வசி[10] *vaši*, பெ.(n.) குற்றம் (அக.நி.); fault, defect.

வசி[11] *vaši*, பெ.(n.) வெள்வெண்காயம் (சங்.அக.); garlic.

வசிக்கல் *vašikkal*, பெ.(n.) மாடுகளைக் கயிற்றால் கட்டப் பயன்படும் ஓர் கல்; a stone to bind the cattle.

வசிகம் *vašigam*, பெ.(n.) மிளகு (மலை.); black pepper.

வசிகரணத்தந்திரம் *vaši-karana-t-tandiram*, பெ.(n.) மக்களிடையே உண்டாக்கும் நோய்களைக் குறிக்கும் ஓர் நூல்; a science on treating of disease of the sexual organs.

வசிகரணம்[1] *vašikaranam*, பெ.(n.) 1. வயப்படுத்துகை; subjugation. 2. புணர்ச்சிக்கு இணங்குகை (யாழ். அக.); yielding to sexual advances. 3. அழகு; beauty.

வசிகரணம்[2] *vašikaranam*, பெ.(n.) வாள் (யாழ்.அக.); sword.

வசிகரத்தி *vaši-karatti*, பெ.(n.) கம்மாறு வெற்றிலை; a strong pungent betel leaf which is dark green in colour-piper betel.

வசிகரமருந்து *vašikara-marundu*, பெ.(n.) உண்டோரைப் பயன்படுத்தச் செய்தவர் வயமாக்கும் மருந்து (கொக்கோ.1, 26); a drug that charms and neslaves the person to whom it is administered.

வசிகரி[1] *vašikari*, பெ.(n.) 1. காரெள்; a black species of gingeli seed. 2. தொழுகண்ணி; a kind of plant. 3. வசியம் செய்தல்; influencing, mesmerising, entresing (சா.அக.).

வசிகரி[2]-த்தல் *vašikari-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. தன்வயப்படுத்துதல், கவர்ந்திழுத்தல்; to charm, captivate fascinate, to subjugate. *"உயிரை வசிகரிக்கு மந்திரமொன்று" (கந்தபு.அசுரர்யா.23). "பசையி னெஞ்சர் தமையெல்லாம் பத்தாவாக வசிகரித்தும்" (உத்தரரா.இராவணன் பிறப்.19).* 2. வேண்டுதல் (யாழ்.அக.); to request.

வசிதடி *vaši-tadi*, பெ.(n.) துணித்த துண்டம்; piece cut off. *"வசிதடி சமைப்பின்" (பரிபா.5, 39).*

வசிதம் *vašidam*, பெ.(n.) 1. ஆணைத் திப்பிலி; a large sized long pepper. 2. மிளகு; pepper-*Piper higrum* (சா.அக.).

வசிநி *vaśini*, பெ.(n.) வன்னிமரம்; sama tree-*Prosopis spicigera*, Indian mesquit tree (சா.அக.).

வசிப்பிடம் *vaśippiḍam*, பெ.(n.) குடியிருக்கின்ற அல்லது தங்கியிருக்கின்ற இடம்; abode, residence, dwelling place. *'வசிப்பிடத்திற்கு அருகிலேயே அலுவலகம்'.*

*[வதி→வசி→வசிப்பு + இடம்.]*

வசிமாறத்தி *vaśimāṟatti*, பெ.(n.) எட்டி மரம்; a tree bearing bitter poisonous fruit- *Nux vomica* (சா.அக.).

வசிமூலி *vaśi-mūli*, பெ.(n.) வசியமூலி பார்க்க; see *vaśiya-mūli*.

*[வசி + மூலி = மூலிகை என்பதன் கடைக் குறை.]*

வசியக்கனி *vaśiya-k-kaṉi*, பெ.(n.) ஆதொண்டை; a prickly creeper-*Capparis horrida*.

வசியகரன் *vaśiya-karaṉ*, பெ.(n.) வசியம் செய்வோன்; one who is influencing or mesmerising, a person by magical enchantments, mugician.

*[வசிய + **Skt.** மயசய > த. கரன்.]*

வசியகுளிகை *vaśiya-kuḷigai*, பெ.(n.) தன்னை வைத்திருப்பவனுக்குப் பிறரை வசமாகச் செய்விக்கும் மாயமாத்திரை; magic pill which brings other persons under the influence of its possessor. *"யாவரும் வசிய குளிகை . . . மாதருக் கதிரூபவின்பம்" (திருவேங்.சத.89).*

*[வசியம்' + குளி→குளிகை. குளிகை = மந்திர வலிமையுள்ள மாத்திரை.]*

வசியநூல் *vaśiya-nūl*, பெ.(n.) ஒருவர் மனத்தை வசப்படுத்திக் கொள்ளும் முறையை விரிக்கும் சாத்திரம்; treatise dealing with the art of bewitching a person.

*[வசியம் + நூல்.]*

வசியப்பொருத்தம் *vaśiya-p-poruttam*, பெ.(n.) திருமணப் பொருத்தம் பத்தனு ளொன்று (விதான. கடிமண.4, உரை); a correspondence between the horoscopes of the propspective bride and bridegroom, one of ten *tiru-maṇa-poruttam*.

*[வசியம் + பொருத்தம்.]*

வசியப்போக்கு *vaśiya-p-pōkku*, பெ. (n.) வசியக் கலை; following the magic art (சா.அக.).

வசியம்[1] *vaśiyam*, பெ.(n.) 1. வசப்படுகை; being docile or subjugated. 2. நெருங்கிய நேயம்; great attachment. 3. மாசற்ற காதல்; devoted love. *"ஒய்வறு வசியமுண்டாய்" (கொக்கோ.1, 28).* 4. தன்வயமாக்குகை; subjugation. 5. எண்வகைக் கருமங்களுள் மக்கள், தேவர், கோள்கள் முதலானவற்றைத் தன்வயப்படுத்தும் வித்தை (வேதா.சூ.16, உரை); magic art of bringing under control a person, spirit or deity, one of *asṭa-karmam*. 6. கைவசம் (வின்.); actual possession.

*[வயின்→வயம்→வசம்→வசி→வசியம்.]*

மகளிரையும் பிறரையும் மந்திரத்தாலும் மனப்பயிற்சியாலும் வயப்படுத்துதல்.

வசியம்[2] *vaśiyam,*பெ.(n.) கிராம்பு (மலை); cloves.

வசியம்செய்–தல் *vaśiyam-śey-,*1 செ.கு.வி. (v.i.) வசியம்பண்ணல் பார்க்க; see *vaśiyam-paṇṇal.*

*[வசி→வசியம் + செய்.]*

வசியம்பண்ணல் *vaśiyam-paṇṇal,*தொ. பெ.(vbl.n.)மருந்திட்டு, மாய வலையிலகப்படச் செய்தல்; philter.

*[வசியம் + பண்ணு→பண்ணல்.]*

வசியமதாசி *vaśiyamatāśi,*பெ.(n.) பெருந் தும்பை; a large species of tumbai flower, dead nettle.

வசியமருந்து *vaśiya-marundu,* பெ.(n.) உண்டோரைப் பயன்படுத்தச் செய்தவர்தம் வயமாக்கும் மருந்து (கொக்கோ.1, 26); a drug that charms and enslaves the person to whom it is administered.

*[வசியம்' + மருந்து]*

வசியமூலி *vaśiya-mūli,* பெ.(n.) கரும் பசளை, செங்கொடி வேலி, சிறியாணங்கை; enchanting plants.

*[வசியம் + மூலி = மூலிகை என்பதன் கடைக்குறை.]*

வசியமை *vaśiyamai,*பெ.(n.) வசியப்படுத்து வதற்காக அழிஞ்சி விதைக் கொண்டு செய்யும் ஒரு வகை மை; a magical black point having psychic or magical properties of influencing the person desired for (சா.அக.).

*[வசியம் + மை.]*

வசியயீரு *vaśiya-yīru,* பெ.(n.) மருந்தீடு; a love philter.

வசியர் *vaśiyar,*பெ.(n.)வணிகர் (சூடா.); members of the *vaiśya* caste. *"அன்பார் வசியர்க்கேயாம்" (சைவச. பொது. 95).*

வசியவாடை *vaśiya-vāḍai,*பெ.(n.)வசியம் செய்வதற்காக தூவும் ஓர் பொடி; a powder blown for alluring a person.

வசியை *vaśiyai,* பெ.(n.) 1. தம் வயப்படுத்தும் அன்புமிக்க மனைவி (யாழ். அக.); beloved wife. 2. கற்புடைய பெண்; chast woman.

*[வசி + ஐயை – வசியை.]*

வசிவாசி *vaśivāśi,*பெ.(n.) மீனைப்பூ; a kind of tree.

வசிவு *vaśivu,* பெ.(n.) 1. பிளத்தலால் உண்டாம் வடு; scar, cicatrice. *"வானமின்னு வசிவு பொழிய" (மலைபடு. 97).* 2. வளைவு (பிங்.); curvature;bend. 3. கவிகை மோடு போன்ற வளைவு (வின்.); arch, vault.

வசு *vaśu,*பெ.(n.) வெள்ளைப் பூண்டு (மலை.); garlic.

வசுகூபம் *vaśu-kūbam,* பெ.(n.)அமுரி; urine or urinary salt (சா.அக.).

வசுநரை *vaśunarai,*பெ.(n.) புளி (சங்.அக.); tamarind.

வசூரி *vaśūri,*பெ.(n.) அம்மைநோய் (இ.வ.); small-pox.

*[வைசூரி + வசூரி.]*

வசூரை *vaśūrai,*பெ.(n.) வேசை (யாழ்.அக.); harlot.

**வசூரிகைப்புண்** *vaśūrigai-p-puṇ,* பெ.(n.) அம்மைப்புண்; small pox-ulcer (சா.அக.).

*[வைசூரி →வசூரிகை + புண்.]*

**வசை[1]-தல்** *vaśai-,* 2 செ.கு.வி.(v.i.) வசைகூறுதல், பழித்துரைத்தல், பொய்க் குற்றஞ்சாட்டுதல்; to censire, blame, calumniate. *"வசையுநர்க் கறுத்த பகைவர்" (பதிற்றுப்.32.15).*

**வசை[2]** *vaśai,* பெ.(n.) 1. பழிப்பு, குற்றம், திட்டுகை, பொய்க்குற்றச் சாட்டு; reproach, censure, blame, stigma, calumny. *"அடிசில் வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை" (புறநா.10).* 2. வசைகவி (தொல்.பொருள்.437); satire poem. 3. குற்றம், பிழை; defect. *"வசை தீர்ந்த வென்னலம்" (கலித்.26,14).* 4. அகப்பை (யாழ்.அக.); ladle.

*[வை →வசை.]*

வசையும் இரண்டு வகைப்படும். மெய் வசையும் இருபுற வசையும் என (யாப்.95; யாப்.கா.58). வெளிப்படக் கூறக் கேட்டார்க்குந் தனக்கும் இன்பம் பயத்தலிற் குறிப்பினாதற் கூற வேண்டுவது வசையென்று கொள்ளப்படும் (தொல்.செய்யுள்.172, இளம்.). புகழ் போன்று வசையாதலும், வசைபோன்று புகழாதலும் படவரும் (தொல்.செய்யுள்.நச்.124).

**வசை[3]** *vaśai,* பெ.(n.) 1. வறட்டாமா (வறட்டுப்பசு) (சூடா.), வறட்டுப்பசு; sterile cow. 2. ஆமா (பசு) (யாழ். அக.); cow. 3. பெண் யானை (யாழ். அக.); female elephant. 4. கணவன் தமக்கை (யாழ். அக.); husband's sister. 5. பெண் (யாழ்.அக.); woman. 6. மகள் (யாழ்.அக.); daughter. 7. மனைவி (யாழ்.அக.); wife.

**வசை[4]** *vaśai,* பெ.(n.) கொழுப்பு, தசை; marrow, fat. *"வசை கீசகமென் றிருவகையாய்த் துன்னும் புலவால்" (சேதுபு. வேதா.30).*

**வசை[5]-தல்** *vaśai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வளைதல், கோடுதல்; to bend, incline, to make crooked. 2. சூழப்படுதல்; வேலி போடுதல்; to be environed, to be encompassed; to be enclosed.

தெ. வஞ்சு.

**வசை[6]-த்தல்** *vaśai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. வளைத்தல்; to bend, incline to make crooked. 2. சூழ்தல், வளைத்தல்; to surround, encompass, encircle.

*[வசை →வசைத்தல்.]*

**வசை[7]** *vaśai,* பெ.(n.) 1. இழிவுபடுத்துதல்; to abuse, to humiliation. 2. குறைகூறும் வகையில் பேசுதல்; to talk slanderously, klemished saying. *'அவன் வாயைத் திறந்தால் வசைதான்'.*

**வசைக்கடம்** *vaśai-k-kaḍam,* பெ.(n.) செம் பொருளங்கதம் பற்றிக் கலிப்பாக்களால் அமைந்த ஒரு பழையநூல் (தொல். பொருள். 437, உரை); an ancient poem in kali verse, dealing with satire.

**வசைக்கவி** *vaśai-k-kavi,* பெ.(n.) வசைகவி (வின்.) பார்க்க; see *vaśai-kavi.*

*[வசை + Skt. கவி.]*

**வசைக்கூத்து** *vaśai-k-kūttu,* பெ.(n.) நகைதிறச் சுவைபற்றி நிகழும் நையாண்டிக் (கேலிக்) கூத்து (சிலப்.3:13, உரை); a dance caricaturing persons and holding them upto ridicule.

*[வசை + கூத்து.]*

**வசைகவி** *vašai-kavi,* பெ.(n.) வசைகூறும் அங்கதப் பாடல் (வின்.); satiric poem; lampoon. 2. வசைபாடுவோன், பழித்துரைப்போன்; satirist.

[*வசை* + **Skt.** *கவி.*]

**வசைகவியாண்டான்** *vašai-kaviyāṇḍāṉ,* பெ.(n.) காளிமடல் என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet who composed *kāli maḍal.*

**வசைகூறு-தல்** *vašai-kūṟu,* 5 செ. குன்றாவி.(v.t.) பழி சுமத்துதல்; to blame or censure.

[*வசை+கூறு-. குல்→கூல்→கூறு=பொருத்தமாகப் பழிகூறுதலே வசைகூறுதலாகும்.*]

**வசைச்சொல்** *vašai-c-col,* பெ.(n.) பழிச்சொல் (இ.வ.); abusive language.

[*வசை* + *சொல்.*]

**வசைநீங்கு-தல்** *vašai-nīṅgu-,*5 செ. குன்றாவி. (v.t.) கண்டனம் அல்லது குற்றத்திலிருந்து விலகுதல்; to leave censure or blame.

[*வசை* + *நீங்கு-.*]

**வசைப்பாட்டு** *vašai-p-pāṭṭu,* பெ.(n.) அங்கதப்பாட்டு, வசைகூறும் பாடல்; satiric poem.

மறுவ. அங்கதச் செய்யுள்.

[*வசை* + *பாட்டு*]

**வசைபாடு-தல்** *vašai-pāḍu-,* 5 செ. குன்றாவி.(v.t.)1. திட்டுதல்; to abuse, to scold. *'நீங்கள் ஒருவர் மீது ஒருவர் வசைபாடுவதை நிறுத்த வேண்டும்'. சிலர் வசைபாடுதலையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர் (உ.வ.).* 2. தரம் தாழ்த்திப் பேசுதல்; to degrade. *"அவர் வசைபாடுவதில் வல்லவர்" (உ.வ.).*

[*வசை* + *பாடு-.*]

இழிவுபடுத்தும் அல்லது குறைகூறும் வகையில் பழித்தும் பேசுதல். பிறர்மீது குற்றஞ்சாட்டுதலும், பிறரை வீண்வம்பிற்கிழுத்துச் சண்டையிடுதலும் இதனுள் அடங்கும்.

**வசையம்** *vašaiyam,* பெ.(n.) கருநிறமுள்ள மான்வகை (நாமதீப.224.); black deer.

**வசையழி-த்தல்** *vašai-y-aḻi-,* 4 செ. குன்றாவி.(v.t.) குற்றம் அல்லது பழியினை முழுதும் போக்குதல்; to destroy or ruin.

[*வசை* + *அழி-.*]

**வசையுநர்** *vašaiyunar,* பெ.(n.) 1. வசைகூறுவோர், பழித்துரைப்போர், குற்றஞ் சுமத்துவோர்(பதிற்றுப். 32, 15, உரை); those who blame or censure; calumniators. 2. பகைவர்; enemies, as revilers. *"வசையுநர்க்கறுத்த பகைவர்" (பதிற்றுப்.32, 15).*

மறுவ. அங்கதர்

[*வசை →வசையுநர்.*]

**வசையொழி-த்தல்** *vašai-y-oḻi-,* 4 செ. குன்றாவி.(v.t.) பழியினை முற்றும் துடைத்தல் அல்லது போக்குதல்; to exonerate. *"வசையொழித்த வாழ்வே வளமான வாழ்வு" (உ.வ.).*

[*வசை* + *ஒழி-.*]

**வசைவக்கணம்** *vašai-vakkaṇam,* பெ.(n.) பழிப்பு (யாழ்ப்.); reproach. *"வசை வக்கணம் பேசுகிறான்".*

[*வசை* + *வக்கணம்.*]

**வசைவினை** *vašaivinai,* பெ.(n.) நன்றல்லா நடத்தை (வின்.); balme-worthy conduct or act.

*[வசை + வினை.]*

**வசைவு**[1] *vašaivu,* பெ.(n.) குற்றம் (திவ். பெரியாழ். 3, 4, 2 வ்யா. பக். 594); fault; blemish

*[வசை → வசைவு.]*

**வசைவு**[2] *vašaivu,* பெ.(n.) வசை, 1 பார்க்க; see *vašai. "செவிசுடு கீழ்மை வசைவுகளே வையும்" (திவ். திருவாய்.7, 5, 3).*

*[வை→வசை → வசைவு.]*

**வஞ்சகச்சொல்** *vañjaga-c-col,* பெ.(n.) ஏமாற்றும் பேச்சு; deceitful talk or speech.

த. வஞ்சம் → **Skt.** vañc.

*[வங்கு → வஞ்சு →வஞ்சம் →வஞ்சகம் + சொல்]*

வங்கு : வளைவு, கோணல். பிறரை ஏமாற்றும் தன்மையுள்ள மனக் கோணலான பேச்சு.

**வஞ்சகம்** *vañjagam,* பெ.(n.) 1. சூழ்ச்சி, தந்திரம்; artfulness, cunning. 2. ஏமாற்றம், ஏய்ப்பு; fraud, deceit. *"வஞ்சகப் பெரும் புலையனேனையும்' (திருவாச.5, 96).* 3. மறைவு (யாழ். அக.); hiding. 4. நரி (யாழ்.அக.); jackal.

**Skt.** வஞ்சக.

*[வங்கு→ வஞ்சு →வஞ்சம் →வஞ்சகம்.]*

**வஞ்சகமூடி** *vañjaga-mūḍi,* பெ.(n.) ஆமை (யாழ்.அக.); tortoise.

*[வஞ்சகம் + மூடி.]*



**வஞ்சகன்** *vañjagaṉ,* பெ.(n.) 1. சூழ்ச்சிக்காரன், தந்திரக்காரன் (சூடா.); artful, cunning man. *"இருணிறவஞ்சகர்" (கம்பரா.படைத் தலைவர்வதை.10).* 2. ஏமாற்றுபவன்; deceiver, impostor, cheat. *"இந்த வஞ்சகனை யாள நினையாய்" (தாயு.மௌன.6).* 3. கயவன் (யாழ்.அக.); rogue. 4. நரி (யாழ்,அக.); jackal.

*[வஞ்சகம்→ வஞ்சகன்.]*

**வஞ்சகி** *vañjagi,* பெ.(n.) 1. தந்திரக்காரி, சூழ்ச்சிக்காரி; artful, cunning woman. 2. ஏமாற்றுபவள்; deceitful woman. *"என்சகிமார் வஞ்சகிமா ரென்றால்" (தனிப்பா. 1, 321, 15).*

*[வஞ்சகன்(ஆ.பா.)→ வஞ்சகி (பெ.பா.).]*

**வஞ்சகுனி** *vañjakuṉi,* பெ.(n.) வெள்ளி லோத்திரம்; the bark of wood apple tree.

**வஞ்சத்தன்மை** *vañja-t-taṉmai,* பெ.(n.) சூழ்ச்சித்திறம்; deceitfulness.

*[வஞ்சம் + தன்மை.]*

**வஞ்சந்தீர்-தல்** *vañjan-tir-,* 4 செ.கு.வி.(v.i.) பழிவாங்குதல் (யாழ். அக.); to be take revenge, to be revenged.

*[வஞ்சம் + தீர்-.]*

வஞ்சநவிற்சி *vañja-naviṟci,* பெ.(n.) ஏதேனும் ஒரு காரணத்தால் நிகழ்ந்த மெய்ப்பாடு முதலியவற்றை மற்றொரு காரணத்தால் நிகழ்ந்தனவாகக் கூறும் அணி (அணியி.86); a figure of speech in which the effect of one cause is ascribed to another or a feeling is dissembled by being attributed to a cause other than the real.

மறுவ. வஞ்சப்புகழ்ச்சி

*[வஞ்சம் + நவில்→நவிற்சி.]*

வஞ்சப்பழிப்பு *vañja-p-paḻippu,* பெ.(n.) ஒன்றன் பழிப்பினால், மற்றொன்றன் பழிப்புத் தோன்றக் கூறும் அணிவகை (அணியி.31); apparent censure of an object, artfully suggesting the censure of another object, a figure of speech.

*[வஞ்சம் + பழிப்பு.]*

வஞ்சப்புகழ்ச்சி[1] *vañja-p-pugaḻcci,* பெ.(n.) புகழ்வதைப் போன்று இகழ்வது, இகழ்வதைப் போன்று புகழ்வது; apparent praise of censure suggesting the opposite, irony.

*[வஞ்சம் + புகழ்ச்சி]*

வஞ்சப்புகழ்ச்சி[2] *vañja-p-pugaḻcci,* பெ.(n.) ஒன்றன் பழிப்பினால் அதன் புகழ்ச்சியேனும் மற்றொன்றன் புகழ்ச்சி யேனும், ஒன்றன் புகழ்ச்சியால் அதன் பழிப்பேனும் மற்றொன்றன் பழிப்பேனுந் தோன்றக் கூறும் அணிவகை (அணியி. 30); apparent praise or censure of an object, artfully suggesting the censure or praise either of the same object or another, an irony.

*[வஞ்சம் + புகழ்ச்சி]*

பழிப்பது போன்று புகழ்ந்துரைக்கும் கபிலர் பாடிய வஞ்சப்புகழ்ச்சிப் பாடல் வருமாறு:-

*"பாரி பாரி யென்று பலவேத்தி*
*ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி ஒருவனு மல்லன்*
*மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே"*

*(புறநா.107).*

உலகு புரத்தற்கு மாரியு முண்டாயிருக்கப் பாரியொருவனையே புகழ்வர், செந்நாப் புலவரெனப் பழித்தது போலப் புகழ்ந்தவாறு என்னை? யெனின்,

"நாட்டிற் புலவர் பலரும்," "பாரி பாரி"யெனப் பாரியொருவனையே புகழ்கின்றனர். இவ் வுலகுயிர்களைப் புரத்தற்கண் பாரியொருவனே யன்றி மாரியும் உண்டே. இஃதென்ன வியப்பு" என்று கபிலர் உரைத்துள்ளது, ஓர்ந்துணரத் தக்கது.

மழை மிகுதியாகப் பெய்தால், பேரிழப்பே மிஞ்சும். வேளாண் பயிர்கள் அழியும்; மாந்தவுயிர்கள் காட்டாற்று வெள்ளத்தில் மடியும்; ஆனால், பாரியின் வள்ளண்மையால், புலவர் பெருமக்கள் வாழ்வாங்கு வாழ்ந்த குறிப்பும் பெறப்பட்டதறிக.

புகழ்வது போல இகழ்ந்துரைக்கும், திருக்குறளில் அமைந்துள்ள பாடல் வருமாறு,

*"பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்*
*பீழை தருவதொன் றில்" (குறள், 839).*

பேதையர் அல்லது அறிவற்றவர்களிடம் கொள்ளும் நட்பு, எஞ்ஞான்றும், துன்பம் தாராது. ஏனெனில், நட்புசெய்து பிரியுங்காலத்தே துயரொன்றும் நேராது.

அறிவற்றவர்தம் நட்பினைப் புகழ்ந்துரைத்தல் போல், இகழ்ந்துரைக்கும் பாங்கு, உணர்த்தப்பட்ட தெனலாம்.

**வஞ்சப்புகழ்ச்சியணி** *vañja-p-pugaḻcci-y-aṇi,* பெ.(n.) வஞ்சப்புகழ்ச்சி[2] பார்க்க; see *vañja-p-pugaḻcci.*

*[வஞ்சப்புகழ்ச்சி + அணி.]*

**வஞ்சப்பெண்** *vañja-p-peṇ,* பெ.(n.) 1. கொற்றவையின் ஏவற்பெண்; a female servant of *koṟṟavai.* 2. சூழ்ச்சிக்காரி; artful, cunning woman, a woman of deceitful nature, sly woman. *"வஞ்சப் பெண்ணஞ்சுண்ட வண்ணல்" (திவ். பெரியதி. 2, 6, 7).*

*[வஞ்சம் + பெண்]*

**வஞ்சபாவம்** *vañja-pāvam,* பெ.(n.) வஞ்சத் தன்மை பார்க்க; see *vañja-t-taṉmai. "வஞ்ச பாவம் வரும்வழி மாற்றி" (உத்தரரா. அரக்கர். 226).*

**வஞ்சம்** *vañjam,* பெ.(n.) 1. ஏய்ப்பு, ஏமாற்றுகை, சூழ்ச்சி; fraud, deceit, craftiness. *"போற்றுமின் வஞ்சம்" (நாலடி. 172).* 2. பொய்; lie, falsity. *"வருந்த னின் வஞ்ச முரைத்து"* (கலித்.89). 3. கொடுமை, வன்முறை; cruelty, violence. *"வஞ்சக் கருங்கட னஞ்சுண்டார் போலும்" (தேவா.519, 4).* 4. வாள் (பிங்.); sword. 5. வஞ்சினம் (அரு.நி.); oath, asseveration. 6. பழிக்குப் பழி; revenge. 7. மாயம்; illusion. 8. சிறுமை (திவா.); smallness, littleness. 9. அழிவு, சிதைவு; destruction, ruin. *"நஞ்சினி தருத்தினு நல்வினை மாட்சி வஞ்ச மில்லோர்க் கமிழ்தா கற்றே" (ஞானா. 32, 2).*

*[வஞ்சி→வஞ்சம்.]*

**வஞ்சமகள்** *vañja-magaḷ,* பெ.(n.) வஞ்சப் பெண், 2 பார்க்க; see *vañja-p-peṇ.*

*[வஞ்சம் + மகள்]*

**வஞ்சம்வை-த்தல்** *vañjam-vai-,*4 செ. கு.வி. (v.i.) பழி வாங்கப் பார்த்தல் (வின்.); to harbour malicious thoughts and be on the watch for revenge.

**வஞ்சரம்** *vañjaram,* பெ.(n.) வஞ்சிரம் பார்க்க; see *vañjiram.*

தெ. வஞ்சரமு

**வஞ்சலம்** *vañjalam,* பெ.(n.) பாம்பு (சங்.அக.); serpent.

**வஞ்சவம்** *vañjavam,* பெ.(n.) வஞ்சலம் (சது.) பார்க்க; see *vañjalam.*

**வஞ்சவிளங்கம்** *vañja-viḷaṅgam,* பெ.(n.) வஞ்சகாரம் பார்க்க; see *vañja-kāram.*

**வஞ்சவிறுதி** *vañja-v-iṟudi,* பெ.(n.) பொய்ச்சாக்காடு; pretended death. *"வஞ்சவிறுதி நெஞ்சுணத் தேற்றி" (பெருங். இலாவாண. 9, 39).*

*[வஞ்சம் + இறு→இறுதி.]*

**வஞ்சன்** *vañjaṉ,* பெ.(n.) 1. சூழ்ச்சித் திறமுடையவன்; deceitful person. *"வஞ்சனே னடியே னெஞ்சினிற் பிரியா வானவா" (திவ்.பெரியதி.1, 6, 7).* 2. வஞ்சகன் 1, 3 பார்க்க; see *vañjagaṉ.*

*[வஞ்சம்→வஞ்சன்.]*

**வஞ்சனம்** *vañjaṉam,* பெ.(n.) 1. சூழ்ச்சி, ஏய்ப்பு, வஞ்சகம்; craftiness, fraud, deceit. *"தலைவன் கண் நிகழ்ந்த வஞ்சனம்" (கலித். 4, உரை).* 2. வஞ்சர மீன் வகை (யாழ்.அக.); a kind of seer fish.

*[வஞ்சி→வஞ்சனம். அனம் - ஒரு தொழிற் பெயரீறு.]*

**வஞ்சனவளி** *vañjaṉavaḷi,* பெ.(n.) வளியின் விளைவாலேற்பட்ட குடலிறக்கம்; inguinal hernia.

வஞ்சனி *vañjaṉi,* பெ.(n.) 1. காளியின் ஏவற்பெண் இடாகினி (பிங்.); *Iḍāgiṉi,* a female servant of *kāḷi.* 2. மலைமகள் (நாமதீப. 23); *pārvadi.* 3. மாயையென்னும் பெண் தெய்வம்; the goddess *māyā* or illusion. *"வஞ்சனி தன்படை யாண்டு போந்துழி" (கந்தபு. யுத்தகாண். நகர்புகு. 45).* 4. பெண் (சது.); woman. 5. வஞ்சமகள் (இலக்.அக.); cunning woman. 6. ஆணை (யாழ்.அக.); asseveration, solem or declaration.

*[வஞ்சம்→வஞ்சனி]*

வஞ்சனை[1] *vañjaṉai,* பெ.(n.) ஒரு வகை நோய்; a kind of disease (சா.அக.).

வஞ்சனை[2] *vañjaṉai,* பெ.(n.) 1. வஞ்சகம், 1, 2 பார்க்க; see *vañjagam. "புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய" (திருவாச., 1, 55).* 2. மாயை (பிங்.); illusion. *"வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி" (கம்பரா. உருக்காட்.17).* 3. வஞ்சனைப்புணர்ப்பு பார்க்க; see *vañjaṉai-p-puṇarppu. "சித்திரவஞ்சனை புல்லியவறிந்து" (சிலப்.3, 56).* 4. பொய் (பிங்.); lie, falsity. 5. போலித்தன்மை; falsehood, duplicity. 6. சூளுரை (வின்.); oath, pledge. 7. ஆணையிட்டுக் கூறுதல்; asseveration. 8. தெய்வப் பெண் (பிங்.); Goddess. 9. பெண் (பிங்.); woman.

*[வஞ்சம்→வஞ்சனை]*

வஞ்சனைப்புணர்ப்பு *vañjaṉai-p-puṇarppu,* பெ.(n.) இசைகொள்ளா எழுத்துகளின் மேலே வல்லொற்று வந்த போது, மெல்லொற்றுப் போல நெகிழ்த்துப் புணர்க்கை (சிலப். 3, 56, அரும்.); a method of composition, in which the letters of the *vaṉkaṇam,* sound like those of the *meṉ-kaṇam* the stress not falling on them.

*[வஞ்சனை + புணர்ப்பு]*

வஞ்சனையாளன் *vañjaṉai-y-āḷaṉ,* பெ.(n.) ஏமாற்றுவோன், வஞ்சிப்போன் (பிங்.); deceiver, guileful person, cheat.

*[வஞ்சனை →வஞ்சனையாளன்]*

வஞ்சி[1]–த்தல் *vañji-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஏமாற்றுதல், மோசடி செய்தல், சூழ்ச்சி செய்தல்; to deceive, defraud, cheat. *"வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்" (குறள், 276).*

*[வங்கு →வஞ்சு →வஞ்சி–.]*

த. வஞ்சி > **Skt.** vañc (வஞ்ச்).

(ஒ.நோ.) அங்கு → அஞ்சு; பொங்கு → பொஞ்சு. தமிழிலும், வடமொழியிலும், வஞ்சித்தல், வஞ்சம், வஞ்சகம் போன்ற சொற்களுக்கு "வங்கு" என்பதே மூலம். 'வங்கு' என்னும் சொல், 'வள்' என்னும் மூலவேரினின்று கிளைத்தது. 'வள்' என்ற வேரடி, வளைதற் கருத்தினை அடிப்படைப் பொருண்மையாகக் கொண்டது. வளைதற் கருத்திலிருந்து, ஏமாற்றுக் கருத்துப் பிறந்தது என்பார் மொழிஞாயிறு. ஏமாற்றுக் கருத்தில் பிறந்த சொற்கள், உலக வழக்கிலும், இலக்கிய வழக்கிலும், பேராளமாக, அஃதாவது வரையிறந்து மக்களிடையே வழக்கூன்றியுள்ளன.

மக்கள் வழக்கு:–

(எ.கா.) வங்கு, வஞ்சு, வஞ்சி, வஞ்சம், வஞ்சகம், வஞ்சனம், வஞ்சனை.

கூட்டுச்சொற்களுள் சில :-

வஞ்சகப்பேர்வழி : வஞ்சனையாளன்

வஞ்சகக்காரன் : வஞ்சகக்காரி

வஞ்சனைசெய்தல்.

இச்சொல்லின் வரலாறு பற்றி மொழிஞாயிறு மொழிவது: இருமொழியிலும் வங்கு என்பதே மூலம். ஆயின், வடவர், வக்கு (வக்) என்னும் வலித்தல் வடிவிற் காட்டுவர். இதினின்றே வக்ர, வக்ரீகரண முதலிய வடசொற்கள் பிறக்கும்.

ஒருவனை ஏமாற்றுவது, வட்டஞ்சுற்றி அவனை வளைவது போலிருத்தலால், வளைதற் கருத்தில், ஏமாற்றுக் கருத்துப் பிறந்தது. circumvent என்னும் ஆங்கிலச் சொல்லையும் நோக்குக.

இலக்கிய வழக்கு :

1. "வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்" (குறள், 276).

2. "வஞ்சே வல்லரே" (தேவா. 828:3).

3. "வஞ்சகப் பெரும்புலைய னேனையும்" (திருவாச.5:6).

4. "இருணிற வஞ்சகர்" (கம்பரா. படைத்தலைவர்வதை.10).

5. "போற்றுமின் வஞ்சம்" (நாலடி, 172).

வஞ்சி[2] *vañji,* பெ.(n.) 1. வஞ்சிப்பா பார்க்க; see *vañji-p-pā. "வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்" (தொல். பொருள்.357).* 2. மருத யாழ்த்திறத்து ளொன்று (பிங்.); a secondary melody-type of marudam class.

வஞ்சி[3] *vañji,* பெ.(n.) 1. வஞ்சிக்கொடி பார்க்க; see *vañji-k-koḍi. "கரிக்குன்றுரித் தஞ்சுவித்தாய் வஞ்சிக் கொம்பினையே" (திருவாச. 6, 19).* 2. மரவகை (L.); glabrous mahua of the Malabar coast. 3. மரவகை (L.); four seeded willow. 4. சீந்தில் படர்கொடி (மூ.அக.); gulancha. 5. கூகைநீறு (நாமதீப.398); arrow-root flour. 6. குடை (பிங்.); umbrella.

வஞ்சி[4] *vañji,* பெ.(n.) 1. புறத்திணையுள் மண்கொள்ளப் பகைவர் மேற்செல்வதைக் கூறுவது (தொல்.பொருள். 62); major theme describing the advance of a kind against his enemies with a view to annexing their territories, one of *puṟattiṇai.* 2. அரசன் வஞ்சிமலரைத் தலையிற் சூடிப் பகைவர் நாட்டைக் கொள்ளுமாறு அவர் மேற்செல்லக் கருதியதைக் கூறும் புறத்துறை (பு.வெ.3, 1); theme describing the decision of a king to wear the vañji flowers on his head and to advance against his enemies, with a view to annexing their territories.

வஞ்சிப்போர் பற்றி நச்சினார்க்கினியர் கூறுவது:-

வஞ்சி யென்றது ஒருவர் மேல் ஒருவர் சேரல் (தொல்.பொருள்.61, நச்.).

வஞ்சி[5] *vañji,* பெ.(n.) 1. பெண் (பிங்.); woman. 2. அறத்தேவி (யாழ். அக.); Goddess of virtue.

வஞ்சி[6] *vañji,* பெ.(n.) 1. சேரர் தலைநகரான கருவூர்; *karūr,* capital of the *cēra* country. *"வாடாவஞ்சி வாட்டும்" (புறநா.39, 17).* 2. கொடுங்கோளூர்; *koḍuṅgōḷūr. "வஞ்சி மணிவா யிலையணைந்தார்" (பெரியபு. வெள்ளானைச். 22).* 3. சேரநாடு (மனோன். ii, 3, 75); the *cēra* country.

**வஞ்சி**[7] *vañji,* பெ.(n.) 1. படகு; canoe. 2. கோயிலிற் காணிக்கை செலுத்தும் உண்டிப் பெட்டி; hundi chest or box kept in a temple for voluntary contributions to satisfy a row. *இவன் வஞ்சி முறித்த கள்வன் (இ.வ.).*

ம. வஞ்சி

**வஞ்சி**[8] *vañji,* பெ.(n.) 1. நம்பச்செய்து கைவிடுதல்; betray. 2. கொடுமையாக ஏமாற்றுதல்; cheat cruelly, deceive, desert. *'கணவனால் வஞ்சிக்கப்பட்ட பெண்'.*

**வஞ்சிக்களம்** *vañji-k-kaḷam,* பெ.(n.) வஞ்ச[3] 9, 10 பார்க்க; see *vañja. "எழில் வஞ்சிக் களத்திற்றோன்றி" (தேசிகப். பிரபந்தஸாரம். 8).*

*[வஞ்சி[3] +களம்]*

**வஞ்சிக்கொடி**[1] *vañji-k-koḍi,* பெ.(n.) 1. தொப்புள் கொடி; umbilical cord. 2. நஞ்சுக் கொடி; placental cord (சா.அக.).

**வஞ்சிக்கொடி**[2] *vañji-k-koḍi,* பெ.(n.) கொடி வகை (L.); common rattan of South India.

*[வஞ்சி[3] + கொடி]*

**வஞ்சிக்கொடிச்சுண்ணம்** *vañji-k-koḍi-c-cuṇṇam,* பெ.(n.) குடற்சுண்ணம்; a kind of medicine prepared from the umbilical cord (சா.அக.).

**வஞ்சிக்கொடிச்செயநீர்** *vañji-k-koḍi-c-ceya-nīr,* பெ.(n.) சாகா உப்பு செயநீர்; a kind of pungent liquid preparation.

**வஞ்சிச்சீர்** *vañji-c-cīr,* பெ.(n.) வஞ்சியுரிச்சீர் (தொல்.பொருள். 332) பார்க்க; see *vañji-y-uri-c-cīr.*

*[வஞ்சி[1] + சீர்]*

**வஞ்சித்தாழிசை** *vañji-t-tāḻiśai,* பெ.(n.) இருசீரடி நான்காய், ஒரு பொருண்மேல் மூன்று செய்யுள் அடுக்கிவரும் வஞ்சிப்பாவினம் (காரிகை, செய்.14); a poem of three stanzas of four lines each, each line having two material feet and the whole poem dealing with the single theme.

*[வஞ்சி[2] + தாழிசை]*

தாழிசை = தாழம்பட்ட ஓசையால் அளவொத்து ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருவது.

இரண்டு சீர்களால் ஆக்கப்பெற்ற நான்கடிகளைக் கொண்டு வரும். ஒரு பொருள்மேல் மூன்று செய்யுட்கள் கோவையாக அடுக்கி வரும் வஞ்சித்தாழிசைப் பாடல் வருமாறு :

1. *"பிணியென்று பெயராமே*
   *துணிநின்று தவஞ்செய்வீர்*
   *அணிமன்ற லுமைபாகன்*
   *மணிமன்று பணியீரே"*

2. *"என்னென்று பெயராமே*
   *கன்னின்று தவஞ்செய்வீர்*
   *நன்மன்ற லுமைபாகன்*
   *பொன்மன்று பணியீரே"*

3. *"அதிதென்று பெயராமே*
   *வரைநின்று தவஞ்செய்வீர்*
   *உருமன்ற லுமைபாகன்*
   *திருமன்று பணியீரே"*

மேற்குறித்த வஞ்சித்தாழிசை மன்று பணிதல் வேண்டும் என்ற பொருண்மேல், மூன்று செய்யுட்களும் அடுக்கி வந்தன. ஒவ்வொரு செய்யுளும் நான்கடிகள் கொண்டுள்ளமையையும் ஒவ்வோரடியும், இரண்டுசீர்களால் ஆக்கப் பெற்றமையையும் காண்க.

வஞ்சித்தாழிசை பற்றி யாப்பருங்கலக்காரிகை நுவல்வது : *"ஒருபொருண்மேல் மூன்றடுக்கி யல்லது வாரா" (யாப்.கா.46)..*

இளம்பூரணர், வஞ்சித்தாழிசை பற்றிப் பகர்வது:– *"குறளடி நான்கினால் ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வரும்" (தொல்.செய்யுள்.175, இளம்.).*

**வஞ்சித்திணை** *vañji-t-tiṇai,* பெ.(n.) வஞ்சி[4], 1 (பு.வெ.3, உரை) பார்க்க; see *vañji.*

*[வஞ்சி[4]+திணை.]*

**வஞ்சித்துறை[1]** *vañji-t-tuṟai,* பெ.(n.) இருசீரடி நான்காய், ஒரு பொருள்மேல் ஒரு செய்யுள் வருவதாகிய வஞ்சிப்பாவினம் (காரிகை, செய். 14); a stanza of four lines of two metrical feet each, dealing with the single theme.

*[வஞ்சி[2] + துறை]*

ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வராது, தனிச் செய்யுளாய் வரும். அச்செய்யுள் இரண்டு சீர்களைக் கொண்ட நான்கு அடிகளை உடையது.

(எ.டு)

*"மைசிறந்தன மணிவரை*
*கைசிறந்தன காந்தளும்*
*பொய்சிறந்தனர் காதலர்*
*மெய்சிறந்திலர் விளங்கிழாய்"*

மேற்குறித்த பாடலின் கண்ணே முதற்சீர் கூவிளங்கனியாயும், மற்றச்சீர் விளச்சீராயும் வந்துள்ளமை காண்க.

**வஞ்சித்துறை[2]** *vañji-t-tuṟai,* பெ.(n.) வஞ்சி[4], 2 பார்க்க; see *vañji.* *"வஞ்சியும் வஞ்சித் துறையுமாகும்" (பு.வெ.3).*

*[வஞ்சி[2] + துறை]*

**வஞ்சித்தூக்கு** *vañji-t-tūkku,* பெ.(n.) பரிபாடலில் வஞ்சியடிகளால் வரும் பகுதி (தொல்.பொருள்.433, உரை); the lines of *vañji* metre, mainly occuring in *pari-pāḍal.*

*[வஞ்சி[2] + தூக்கு.]*

**வஞ்சிநாடு** *vañji-nāḍu,* பெ.(n.) 1. சேரநாடு (மனோன்.ii, 3, 75); the *cērā* country. 2. திருவிதாங்கூர் மாநிலம்; the (erstwhile) Travancore state.

*[வஞ்சி[2] + நாடு]*

**வஞ்சிநெடும்பாட்டு** *vañji-neḍum-pāṭṭu,* பெ.(n.) பத்துப்பாட்டுள் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பாட்டு; a poem on the *Cōḻa* king *Karikāṟ-peruvaḷattāṉ* by *Kaḍiyalūr-uruttiraṅkaṇṇaṉār* one of the *pattu-pāṭṭu.*

*[வஞ்சி + நெடு(மை) + பாட்டு]*

**வஞ்சிப்பனிநீர்** *vañji-p-paṉi-nīr,* பெ.(n.) பனிக்குடத்து நீர்; liquor amni (சா.அக.).

**வஞ்சிப்பா** *vañji-p-pā,* பெ.(n.) நால்வகைப் பாவினுளொன்று; one of the four chief kinds of metre.

*[வஞ்சி[2] + பா[4]]*

வஞ்சி : வஞ்சமுடையது. அளவடி முதலிய அடிகளையும் புறநிலை வாழ்த்து முதலிய பொருள்களையும், அமைந்து வரவிடாது, வஞ்சம் பொருந்தி நிற்றலால் வஞ்சிப்பா எனப்பட்டது.

1. இரண்டு சீர்களைக் கொண்ட அடியாலேனும், மூன்று சீர்களைக் கொண்ட அடியாலேனும் வரும். அளவடி முதலிய மற்றைய

அடிகள் வரப்பெறா; 2. பெரும்பான்மையுந் தன்தளையும் சிறுபான்மை பிறதளையும் தழுவிவரும்; 3. தூங்கலோசை யுடையதாய் வரும்; 4. தனிச்சொற் பெற்று அகவற் சுரிதகத்தால் முடிவு பெறும். வெள்ளைச் சுரிதகம் வரப்பெறாது.

தூங்கலோசை :– 1. ஏந்திசைத் தூங்கல்; 2. அகவற்றூங்கல்; 3. பிரிந்திசைத் தூங்கல் என மூவகைப்படும்.

1. ஏந்திசைத் தூங்கல் : ஒன்றிய வஞ்சித்தளை (கனி முன் நிரையும், நிழல் முன் நிரையுமாம்)யால் வருவது. (எ.டு) *"வளவயலிடைக் களவயின்மகிழ்"*.

2. அகவற்றூங்கல் : ஒன்றாத வஞ்சித் தளை (கனி முன் நேரும், நிழல் முன் நேரும்)யான் வருவது. (எ–டு) *"தேம்புனலிடை மீன்றிரிதரும்"*.

3. பிரிந்திசைத் தூங்கல் : ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை, பிறதளைகள் என்பன கலந்து வருவது. (எ–டு) *"துணையில்லாத் துறவுநெறி" (பிற தளையாகிய கலித்தளை வந்தது).*

குறளடி வஞ்சிப்பா

*பூந்தாமரைப் போதலமரத்*
*தேம்புனலிடை மீன்றிரிதரும்*
*வளவயலிடைக் களவயின்மகிழ்*
*வினைக்கம்பலை மனைச்சிலம்பவு*
*மனைச்சிலம்பிய மணமுரசொலி*
*வபறகம்பலைக் கயலார்ப்பவும்*
*மகிழும் மகிழ்தூங் கூரன்*
*நாளும்*
*புகழ்த லானாப் பெருவண் மையனே.*

இச்செய்யுள் குறளடியால் வரப்பெற்று "நாளும்" என்னுந் தனிச்சொற் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்தது.

சிந்தடி வஞ்சிப்பா

(எ–டு)

*'எறிவெண்டிரைக் கடல்சூழ்புவி யெளிதெய்தினும்*
*இறவந்துடைப் பொழுதுய்ந்திட லுளதென்னினும்*
*அறிவின்றிறத் துயர்ந்தோர்படி றிசைக்கின்றிலர்*
*அதனால் முன்வரு மின்பினு முறைப்பட நாடிற்*
*பின்வரு மிடர்மிகப் பெரிதா மெனவே'*

இச்செய்யுள் சிந்தடியால் வந்து "அதனால்" என்னும் தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்தது. (வஞ்சி – வஞ்சமுடையது. அளவடி முதலிய அடிகளையும், புறநிலை வாழ்த்து முதலிய பொருள்களையும் அமைந்து வர விடாது வஞ்சம் பொருந்தி நிற்றலால் வஞ்சிப்பா எனப்பட்டது).

வஞ்சிப்பாவின் இனம் :–

1. வஞ்சித் தாழிசை; 2. வஞ்சித் துறை; 3. வஞ்சி விருத்தம் என்பன வஞ்சிப் பாவின் இனங்கள் ஆகும்.

பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பட்டினப்பாலை, பெரும்பாலும் வஞ்சி அடிகளான் அமைந்து, ஆசிரிய அடிகளால் முடிவதனால், அதனை வஞ்சி நெடும்பாட்டெனவும் கூறுவர். புறநானூற்றுச் செய்யுட்களிற் சில வஞ்சியடிகளைப் பெரும்பான்மையாகக் கொண்டுள்ளன.

வஞ்சிப்பா குறித்து இளம்பூரணர் இயம்புவது:– வஞ்சியுரிச் சீரானும், ஏனைச் சீரானும் இருசீரடியானும், முச்சீரடியானும், தூங்க லோசையானும் வந்து, தனிச்சொல் பெற்று, ஆசிரியச் சுரிதகத்தான் இறுவது. இப்பா இருசீரடி வஞ்சிப்பா, முச்சீரடி வஞ்சிப்பா என இருவகைப்படும். ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற இருசீரடி வஞ்சிப்பா தனிச்சொற் பெறுதலுண்டு (தொல்.செய்யுள்.113, இளம்.).

யாப்பருங்கலக்காரிகை கூறுவது :- வஞ்சிப்பா ஆசிரியச் சுரிதகத்தால் இறுவதல்லது வெள்ளைச் சுரிதகத்தால் இறப்பெறாது (யாப். கா.47).

வஞ்சிப்பாட்டு[1] *vañji-p-pāṭṭu,* பெ.(n.) பழைய நாடக நூல்களுளொன்று (தொல்.பொருள். 492, உரை); an ancint dramatic poem.

*[வஞ்சி[2] + பாட்டு]*

வஞ்சிப்பாட்டு[2] *vañji-p-pāṭṭu,* பெ.(n.) ஓடப்பாட்டு (நாஞ்.); boatman's song.

*[வஞ்சி[7] + பாட்டு]*

வஞ்சிப்பால் *vañji-p-pāl,* பெ.(n.) முலைப் பால்; breast milk (சா.அக.).

வஞ்சிப்பு *vañjippu,* பெ.(n.) ஏமாற்றுகை (இலக்.அக.); deceit, cheating, guile.

*[வஞ்சி[1] → வஞ்சிப்பு]*

வஞ்சிமாலிதழி *vañjimalidaḻi,* பெ.(n.) கொத்தான்; a twiggy plant-*Cassytha filiformis* (சா.அக.).

வஞ்சியர்காட்சி *vañjiyar-kāṭci,* பெ.(n.) கண்ணாடி (யாழ்.அக.); mirror.

*[வஞ்சி[5] → வஞ்சியர் + காட்சி]*

வஞ்சியர்மயக்கி *vañjiyar-mayakki,* பெ. (n.) 1. பெருந்தும்பை; a big species of dead nettle flower. 2. இருமல், கோழை முதலியவற்றை நீக்கும் மருந்துக் குணமுள்ள தும்பை; a kind of of herbal medicine 'Tumbai'. *இது பதினேழு வகை தும்பை வகைகளுள் ஒன்றென சா.அக. மருத்துவ அகரமுதலி கூறும்.*

வஞ்சியரவம் *vañji-y-aravam,* பெ.(n.) வீர முரசுடனே யானை பிளிறப் பகைவர்மீது சேனை மிகுசினத்துடன் கிளர்ந்தெழுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ.3, 2); theme describing the furious advance of an army, against the enemy, with drums beating and elephant's roaring.

*[வஞ்சி[4] + அரவம்]*

வஞ்சியன் *vañjiyaṉ,* பெ.(n.) வஞ்சியான் (மனோன்.) பார்க்க; see *vañjiyāṉ.*

*[வஞ்சி[1] → வஞ்சியன்]*

வஞ்சியான் *vañjiyāṉ,* பெ.(n.) 1. சேர மன்னன்; the *cēra* king. 2. சேர நாட்டான்; native of the *cēra* king. *"வஞ்சியான் வஞ்சியான்" (முத்தொள்.616).*

வஞ்சியுரிச்சீர் *vañji-y-uri-c-cīr,* பெ.(n.) தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என்று நான்குவகைப்பட்ட, நிரையசையீற்றிலமைந்த மூவசைச் சீர்கள்; metrical foot of three *asai* or syllables, chiefly found in *vañji-p-pā,* of four varieties, viz. *tēmāṅkaṉi, puḷimāṅkaṉi, kūviḷaṅkaṉi, karuviḷaṅkaṉi.*

*[வஞ்சி + உரிச்சீர்]*

நிரையீற்று வஞ்சியுரிச்சீர் முதலசையோ டொன்றுவனவும், ஒன்றாதனவும் என இரு வகைப்படும். அவற்றுள் ஒன்றி வருவது நிரைபு முதலாகிய சீரொடு உறழ ஐந்து வகைப்படும். ஒன்றாதது, நேர்பு, நேர் முதலாகிய சீரொடு உறழ ஐந்து வகைப்படும்.

உரியசையீற்று வஞ்சியடியும், அவ்வாறே உறழ ஐந்து வகைப்படும் (தொல்.செய்யுள்.48, இளம்.).

**வஞ்சியெரு** *vañji-y-eru,* பெ.(n.) ஓர் வகை மருந்துப்பு; a rare salty preparation acting as king of medicine (சா.அக.).

**வஞ்சிரம்** *vañjiram,* பெ.(n.) 1. நீலநிறமும் ஆறடி வளர்ச்சியுமுடைய கடல்மீன் வகை; sea-fish, bluish, attaining 6 feet in length. 2. நீல நிறமும், மூன்றடி வளர்ச்சியுமுடைய கடல்மீன் வகை; seer, bluish, attaining 3 feet in length.

*[வன்–மை + சிரம்.]*



பாப்பிளாக்சை மாவுலசி என்னும் இனத்தது. எலும்புச் சட்டகமுள்ள கடல் மீன்கள் சிபியம் (Cybium), சகாம்பொரோமோரசு (Scombero -mours) என்னும் குலங் (சாதி)களைச் சேர்ந்தவை. 4, 5 அடி நீளம் வளரக்கூடியவை; இவற்றின் செதில்கள் மிகச் சிறியவை. சில சமயங்களில் செதில்கள் இருப்பதில்லை. முதுகின் நடுக்கோட்டிலே இருக்குப் இரண்டாவது முதுகு துடுப்புக்குப் பின்னால் ஏழு அல்லது இன்னும் மிகுதியான சிறு துடுப்புகள் உண்டு. அவ்வாறே மலவாயில் துடுப்புக்குப் பின்னாலும் சிறு துடுப்புகள் இருக்கும். வாலின் இரு பக்கங்களிலும் நெடுக்கில் செல்லும் புடைப்புக்கள் பக்கத்திற்கு நன்றாக இருக்கும். வால் நன்றாக இரண்டு பிரிவுள்ளதாக இருக்கும். நிறம் உடம்பின் மேற்பாகம் எஃகு போன்ற நீலநிறமுள்ளது. அடிவயிற்றுப் பாகம் வெள்ளி போன்று வெண்மையாக இருக்கும். உடம்பின் பின் பக்கங்களிலே தெளிவில்லாத பட்டைகள் அல்லது புள்ளிகள் உண்டு.

வஞ்சிரம் மிக விரைவாக நீந்திச் செல்லும். பொதுவாக இது மேற்பரப்பும் ஆழமும் இல்லாத நடுப்பரப்பு நீரில் திரியும். அடிக்கடி உயரக் காற்றில் துள்ளும். இது கூட்டமாகச் செல்லும் சிறு மீன்கள், இறால் முதலியவற்றைப் பின் தொடர்ந்து சென்று பிடித்து விழுங்கும்.

இதைத் தூண்டில் கயிறு எறிந்து பிடிப்பது சிறந்த வேட்டையாகும். வஞ்சிரம் மிக நல்ல உணவு மீன்.

**வஞ்சிரா** *vañjirā,* பெ.(n.) கொடிவேலி; a plant lead wort, plumbage zeylanica (சா.அக.).

**வஞ்சிரி** *vañjiri,* பெ.(n.) விருசு; a kind of tree (சா.அக.).

**வஞ்சிவிருத்தம்** *vañji-viruttam,* பெ. (n.) முச்சீரடி நான்காய் வரும் வஞ்சிப்பாவினம் (காரிகை, செய்.14); a stanza of four lines of three metrical feet each.

*[வஞ்சி² + **Skt.** விருத்தம்]*

விருத்தமென்பது தமிழில் மண்டில மெனப்படும். பிற்றைத் தமிழ் யாப்பில் விருத்தமே பெருவழக்கானமையான் மண்டிலமென்னும் பெயர் மறைந்து விருத்தமென்னும் பெயர் வேறூன்றிய தென்க.

இருசீரடி, பெறாது, முச்சீரடியாய்த் தனித்து வரும் வஞ்சிவிருத்தப்பா வருமாறு :–

*"ஒன்றி னம்பர லோகமே*
*யொன்றி னம்பர லோகமே*
*சென்று மேவருந் தில்லையே*
*சென்று மேவருந் தில்லையே"*

வஞ்சிவிருத்தம் பற்றி இளம்பூரணர் கூறுவது :- *"முச்சீரடி நான்காகி வரும்" (தொல். செய்யுள்.48, இளம்.).*

**வஞ்சிவேந்தன்[1]** *vañji-vēndaṉ,* பெ.(n.) சேரர்கள் கொண்டிருந்த பட்டப் பெயர்களுள் ஒன்று; one of the title of *cērās* kings.

*[வஞ்சி +வேந்தன்]*

'வஞ்சி வேந்தன்' என்ற பெயருக்கு 'வஞ்சி'யை தலை நகராக கொண்டிருந்தவன் என்ற பொருளும் உண்டு.

**வஞ்சிவேந்தன்[2]** *vañji-vēndaṉ,* பெ.(n.) 1. மண்வேட்கையால் மேற்சென்றேனும் எதிர்த்தேனும் போர் செய்யும் அரசன் (தொல். பொருள்.62, உரை); king who makes constant war, impelled by land-hunger. 2. சேரன் (பிங்.); *cēra* king. 3. வஞ்சி நகர்த் தலைவன்; *cēra* king, as ruler of *vañji.*

*[வஞ்சி [6] + வேந்தன்]*

**வஞ்சீசன்** *vañjišaṉ,* பெ.(n.) திருவிதாங்கூர் மன்னன்; the king of Travancore. *'வஞ்சீச மங்களம்'.*

*[வஞ்சி [6] + **Skt.** ஈசன்]*

**வஞ்சு** *vañju,* பெ.(n.) வஞ்சகம் பார்க்க; see *vañjagam. "வஞ்சே வல்லரே" (தேவா.828, 3).*

*[வங்கு → வஞ்சு = ஒருவனை ஏமாற்றுகை, ஏய்க்கை (வ.வ.பக்.75)]*

**வஞ்சுலோவு** *vañju-lōvu,* பெ.(n.) வஞ்சி பார்க்க; see *vañji* (சா.அக.).

**வஞ்சுளம்[1]** *vañjuḷam,* பெ.(n.) 1. அசோகு, 1 (மலை.); *Ašōgā* tree. 2. வேங்கை மரம் (மலை.); East Indian kino. 3. வஞ்சிக்கொடி (நாமதீப.311) பார்க்க; see *vañji-k-koḍi.*

**வஞ்சுளம்[2]** *vañjuḷam,* பெ.(n.) வஞ்சுளன் (அரு.நி.) பார்க்க; see *vañjuḷaṉ.*

**வஞ்சுளன்** *vañjuḷaṉ,* பெ.(n.) காரிப்புள் (பிங்.); a species of king crow.

மறுவ. கரிக்குருவி

**வஞ்சூரன்** *vañjūraṉ,* பெ.(n.) மீன் வகை (வின்.); a kind of fish.

**வஞ்சூலிகம்** *vañjūligam,* பெ.(n.) சூரத் தாவரை; a plant, senna from surat- *Cassia angustifolia of Surat* (சா.அக.).

**வஞ்சை** *vañjai,* பெ.(n.) வஞ்சி[6] 1, 2 பார்க்க; see *vañji. "வஞ்சையப்பர்க் கறிவிப்பதே" (தேவா.1167, 10).*

*[வஞ்சி [6] → வஞ்சை]*

**வஞ்சைக்களம்** *vañjai-k-kaḷam,* பெ.(n.) வஞ்சி[6] 1, 2 (மனோன்.) பார்க்க; see *vañji.*

*[வஞ்சி [6] →வஞ்சை + களம்]*

**வட்கர்[1]** *vaṭkar,* பெ.(n.) 1. குற்றம் (புறநா. 100, உரை); fault. 2. இடைமுரிவு (சிலப்.25, 146.அரும்.); cut or injury in the middle, as on a palmyra stem. *"வட்கர் குற்றமெனினும் அமையும்" (பழைய.புறநா.100).*

*[வள் →வட்கு →வட்கர்.]*

**வட்கர்[2]** *vaṭkar,* பெ.(n.) வட்கார் பார்க்க; see *vaṭkār. "வட்கர் போகிய வளரிளம் போந்தை" (புறநா.100).*

*[வட்கார் →வட்கர்.]*

வட்கார் *vaṭkār,* பெ.(n.) பகைவர்; enemies. *"வட்கார் நிரையன் றழலெழ வெய்து நின்றோன்" (திருக்கோ.152). "வட்கார் மேற்செல்லுவது வஞ்சியாம்" (பு.வெ.மா.).*

வட்காரம் *vaṭkāram,* பெ.(n.) வெடிகாரம் (சங்.அக.); kind of salt.

வட்கிலான் *vaṭkilāṉ,* பெ.(n.) பகைவன் (இலக்.அக.); enemy, foe.

வட்கு[1] -தல் *vaṭku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வெட்குதல்; to be ashamed. *"வட்கின வெனப் பெரி தடைத்தகுயில் வாய்கள்" (பாகவத.10, வேய்ங்குழ.6).* 2. கூசுதல்; to be shy, bashful. *"அரன்குன்றென்றே வட்கி" (திருக்கோ.116).* 3. கெடுதல்; to be destroyed. *"அதகங்கண்ட பையணனாகம் போல வட்க" (சீவக.403).* 4. தாழ்தல்; to humble, to lower oneself. *"வாடிய காலத்தும் வட்குபவோ" (பழமொ. 204).* 5. ஒளி மழுங்குதல் (சூடா.); to be dim, to be lit faintly.

*[வெட்கு →வட்கு-.]*

வட்கு[2]-தல் *vaṭku-,* 5 செ.கு.வி. (v.i.) வளம் பெறுதல், பகட்டாயிருத்தல்; to thrive well, prosper, to flourish, to be luxuriant, as a plant. *"முட்கொணச்சுமரம்.... வட்சி நீண்டதற் பின் மழுவுந் தெறும்"(சூளா. சீய.72).*

வட்கு[3] *vaṭku,* பெ.(n.) 1. வெட்கம்; shame. 2. நாணம்; bashfulness, shyness, modesty. *"வட்கில ளிறையும்" (திவ். திருவாய். 7, 2, 3).* 3. கேடு; injury, ruin. *"வட்கிலானைக் கவான்மிசை வைத்து" (காஞ்சிப்பு.நாரசிங்.6).*

*[வள்கு →வட்கு.]*

இஃதும் வளைதற் கருத்து மூலமாகும். வெட்கத்தினால் தலை சாய்கை.

வட்கு[4]-தல் *vaṭku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வணங்குதல், வழிபடுதல்; to worship. 2. வளைதல்; to bend.

*[வள் →வள்கு →வட்கு.]*

வட்கார் = வணங்கார். வளைதற்கருத்து வேரடியினின்று கிளைத்த சொல். வட்கு என்னும் வடிவம், வடமொழியில் இல்லை (வ.வ.2 : 76).

வட்சத்தலம் *vaṭca-t-talam,* பெ.(n.) மார்பு; chest (சா.அக.).

வட்சாத்திரி *vaṭcāttiri,* பெ.(n.) நெஞ்செலும்பு; sternum (சா.அக.).

வட்டக்கட்டில் *vaṭṭa-k-kaṭṭil,* பெ.(n.) வட்ட வடிவில் செய்த சுழற் கட்டில் வகை; a circular revolving cot. *"மூட்டுவாய் மாட்சிமைப்பட்ட வட்டக்கட்டில்" (நெடுநல்.123, உரை).*

*[வல் →வள் →வட்டு →வட்டம்.வட்டம் + கட்டில். கட்டு +இல் = கட்டில். "இல்" சொல்லாக்க ஈறு. சுற்றி வருந்தன்மையில் வட்ட வடிவிற் செய்த கட்டில்.]*

வட்டக்கச்சைக்கட்டில் *vaṭṭa-k-kaccai-k-kaṭṭil,* பெ.(n.)வட்ட வடிவாயமைந்த கட்டில் வகை; a kind of round shaped cot.

*[வட்டக்கச்சை + கட்டில்.]*

வளமனைகளிலும், அரசர் மாளிகைகளிலும் உள்ள கட்டில்.

வட்டக்கண்ணி *vaṭṭa-k-kaṇṇi,* பெ.(n.) வட்டிக்கண்ணி (இ.வ.) பார்க்க; see *vaṭṭi-k-kaṇṇi.*

*[வட்டம் + கண்ணி. கள் →கண் →கண்ணி. வட்டமாக முளைத்த செடி அல்லது மரம்.]*

வட்டக்கணக்கன் *vatta-k-kaṇakkaṉ,* பெ.(n.) ஒரு வட்டத்தைச் சேர்ந்த பலவூர்களுக்குரிய கணக்கன் (இ.வ.); accountant of a circle *(vattam)* or group of villages.

*[வட்டம் + கணக்கன். வட்டம் = நிலப்பரப்பு, சிலவூர்களைக் கொண்ட நாட்டுப்பகுதி. (கணக்கன் = ஊர்க்கணக்கெழுதுவோன்)]*

வட்டக்கப்பல் *vattakkappal,* பெ.(n.) புகையிலை வகை (இ.வ.); a variety of tobacco.

வட்டக்கருக்கு *vatta-k-karukku,* பெ.(n.) ஒரு வட்டத்தினுள் இலை, கொடி ஆகியவை செறிந்த கருக்கு; an artful work with thick leave, creeper in a circle.

*[வள் →வட்டு→வட்டம் + கருக்கு. கருக்கு = சிற்பவேலை.]*

மேலே சொல்லப்பட்ட கருக்கு வேலைகள் பரிமா, அரிமா ஆகியவற்றின் தொடைகளிலும், கோயிற் தூண்களிலும் வரையப்படும்.

வட்டக்காய் *vattakkāy,* பெ.(n.) அண்ட விதை (கொ.வ.); testicle.

தெ. வட்டகாய

*[வட்டம் + காய்]*

வட்டக்காரன் *vatta-k-kāraṉ,* பெ.(n.) வட்டத்துக்குப் பணமாற்றுவோன் (C.G.); money ex-changer.

*[வட்டம்² + காரன். வட்டம் = நாணயமாற்றின் வட்டம்.]*

வட்டக்காரர் *vatta-k-kārar,* பெ.(n.) சம்மாட்டியார் மூலமாக மீன்பிடி தொழிலில் பண முதலீடு செய்பவர்; a person who invest money in fishing through a middle man called *Śammāttiyār.*

*[வட்டம் + காரர்.]*

சம்மாட்டியார் அன்றாடம் கிடைக்கும் மீன்பாட்டினை ஏலம் விட்டு அத்தொகையில் நூற்றுக்கு ஒரு வட்டம் வீதம் (விழுக்காடு) கொடுப்பார். வட்டக்காரர் தமது முதலுக்கு வட்டத் தொகையை வட்டிப் போலப் பெற்றுக் கொள்கிறார். 1 வட்டம் – ரூ–6–25.

வட்டக்கிணறு *vatta-k-kiṇaru,* பெ.(n.) வட்ட வடிவமாக அமைந்த சிறுகிணறு; small, circular shallow well.

*[வட்டம்¹ + கிணறு]*

வட்டக்கிருமி *vatta-k-kirumi,* பெ.(n.) ஒரு வகை குடற் பூச்சி; a variety of intestinal parasite-*Ascaris* (சா.அக.).

*[வட்டம் + Skt.கிருமி.]*

வட்டக்கிலுகிலுப்பை *vatta-k-kilukiluppai,* பெ.(n.) செடிவகை (பதார்த்த.253); rattle-wort, blue-flowered.

*[வட்டம் ¹ + கிலுகிலுப்பை]*

வட்டத்தோற்றத்தினைக் குறிக்கும் இருபதிற்கு மேற்பட்ட காட்சிப் பொருளைக் குறிக்கும் இச்சொல் தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வழங்கிவரும் நூற்றுக்கணக்கான நிலைத்திணைப் பெயர்களு ளொன்றாம்.

வட்டக்கிளா *vatta-k-kiḷā,* பெ.(n.) களா; a plant-*Carandus spinaram* (சா.அக.).

வட்டக்குடில் *vatta-k-kudil,* பெ.(n.) பெருங் குடிசை (யாழ்.அக.); big hut.

*[வட்டம்¹ + குடி →குடில்¹]*

வட்டக்குடை *vaṭṭa-k-kuḍai,* பெ.(n.) அரசர்க்குரிய குடை (சீவக.860, உரை.); state umbrella.

*[வட்டம் + குடை.]*

வட்டக்குழிபிடி-த்தல் *vaṭṭa-k-kuḻi-piḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) வில்லைப் போலிருக்க வேண்டி, உருக்கினதை, உருக்கிச் சாய்க்க வட்டமாகச் செய்த ஓர் குழி; a bow shaped pit (to pour the melted matal into it) for casting (சா.அக.).

வட்டக்குளம்படி *vaṭṭa-k-kuḷambaḍi,* பெ.(n.) கழுதைக் குளம்படி; plant known as ass's hoof (சா.அக.).

வட்டக்குளிகம் *vaṭṭa-k-kuḷigam,* பெ.(n.) மேக நிறச் செவ்வந்தி; chrysanithemum flower of cloud colour (சா.அக.).

வட்டக்கெண்ணை *vaṭṭakkeṇṇai,* பெ.(n.) கண்டுபாரங்கி; Indian lotus croton.

வட்டக்கைச்சில் *vaṭṭa-k-kaiccil,* பெ.(n.) கொட்டாங்கச்சியின் அடிப்பாதியோடு (யாழ். அக.); the lower half of a coconut-shell.

*[வட்டம்[1] + கச்சி →கச்சில்[2] →கைச்சில்]*

வட்டக்கொட்டை *vaṭṭa-k-koṭṭai,* பெ.(n.) வட்டமான தலையணை; round pillow.

*[வட்டம்[1] + கொட்டை]*

வட்டக்கொடை *vaṭṭa-k-koḍai,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo (சா.அக.).

வட்டக்கோட்டை *vaṭṭa-k-kōṭṭai,* பெ.(n.) வட்டமாகவோ, சதுரமாகவோ அமைந்த கோட்டை; a fort in the shape of circle or square.

*[வட்டம் + கோட்டை]*

வட்டக்கோரை *vaṭṭa-k-kōrai,* பெ.(n.) புல்வகையுளொன்று (நாநார்த்த.128); a kind of sedge or grass.

வட்டக்கோல் *vaṭṭa-k-kōl,* பெ.(n.) வட்ட வடிவு; circular or round shape or form.

*[வட்டம்[1] + கோல்]*

வட்டக்கோவை *vaṭṭa-k-kōvai,* பெ.(n.) கொடி வகை; a common creeper of the hedges-*Coccinia indica.* *"கோவையங் கனிநே றென்ன" (திருச்செந். பு.8, 56)*

வட்டக்கோள் *vaṭṭa-k-kōḷ,* பெ.(n.) வட்டம்[1], 2 (சிலப்.10,102, உரை) பார்க்க; see *vaṭṭam.*

மறுவ. கரந்துறைகோள்.

*[வட்டம்[1] + கோள்[2]]*

வட்டகம் *vaṭṭagam,* பெ.(n.) வயிற்றுளைச்சலைப் போக்கும் மருந்து; hollarrhena antidysenterica.

வட்டகன்னி *vaṭṭa-kaṉṉi,* பெ.(n.) வட்டத்துத்தி பார்க்க; see *vaṭṭa-t-tutti* (சா.அக.).

வட்டகை *vaṭṭagai,* பெ.(n.) 1. பரப்பெல்லை; area, extent. 2. நிலப்பகுதி; region. *"ஊர்நாறகாத வட்டகை" (சிலப்.5, 133,* உரை). 3. வட்டம்[1] 9, 10 பார்க்க; see *vaṭṭam.* 4. வட்டகைநிலம் (வின்.) பார்க்க; see *vaṭṭagai-nilam.* 5. சிறுகிண்ணம்; small bowl. *"கொடியனார் வெள்ளி வட்டகை யூன்றிவாய் மடுப்ப" (சீவக.938).* 6. வட்டில்; metal cup. *"செம்பொற்றூமணி வட்டகையோடு" (காஞ்சிப்பு. தழுவக்.333).*

*[வட்டம்[1] →வட்டகை = சிறிய நாட்டுப் பகுதி (தேவ.13, பக்.5). 'வட்டகை' யென்னும் வடிவம் வடமொழியி லில்லை.]*

**வட்டகைநிலம்** *vaṭṭagai-nilam,* பெ.(n.) அடைப்புக்கட்டிய நிலம்; enclosed field, fenced land.

*[வட்டம்[1]→வட்டகை + நிலம்]*

**வட்டகைமணியம்** *vaṭṭagai-maṇiyam,* பெ.(n.) வட்டமணியம் (வின்.) பார்க்க; see *vaṭṭa-maṇiyam.*

*[வட்டம்→வட்டகை + மணியம். மணியம் = ஊர், ஊரிலுள்ள கோயில் மற்றுமுள்ளவற்றை மேற்பார்வை செய்கை]*

**வட்டங்கண்கூலி** *vaṭṭaṅkaṇ-kūli,* பெ.(n.) நாணயமாற்றம் செய்யும் வணிகத் துறை இடையீட்டாளர் பெறும் கூலி; money broker's commission.

*[வட்டம் + கண்கூலி]*

**வட்டங்கி** *vaṭṭaṅgi,* பெ.(n.) வெள்வங்கம்; white lead, tin.

**வட்டங்கூட்டு–தல்** *vaṭṭaṅ-kūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) அணியமாதல் (நெல்லை); to prepare, to be neadied.

*[வட்டம்[1] + கூட்டு–தல்]*

இது வழக்கியன் மரபுச் சொற்களு ளொன்று.

**வட்டச்சக்கரம்** *vaṭṭa-c-cakkaram,* பெ.(n.) சித்திர பா வகை (யாப்.வி.பக். 497); a kind of metrical composition.

**வட்டச்சாரணை** *vaṭṭa-c-cāraṇai,* பெ.(n.) 1. வெள்ளை வட்டச் சாரணை; trianthema pentandra. 2. இதன் இலைகள் கண்நோய்க்குப் பயன்படுவதாலிப் பெயர்; rounded mucronate leved train thema-*Orgia trianthemoides.* It is so called because of its usefulness in ophthalmia and other diseases of the eye (சா.அக.).

**வட்டச்சில்லி** *vaṭṭa-c-cilli,* பெ.(n.) பழந்தமிழர் விளையாட்டுகளுளொன்று; one of the games of the ancient *Tamils.*

*[வல்→ வள்→வட்டம் + சில்→சில்லி.]*

வட்டமான அரங்கு கீறி ஆடும் இவ்விளையாட்டுக் குறித்து, மொழிஞாயிறு கூறுவது :

ஆடுகருவி :– சக்கரவடிமான ஓர் அரங்கும் ஆளுக்கொரு சில்லியும் இதற்கான ஆடு கருவியாம்.

சக்கரத்தின் குறட்டில் ஒரு குறிப்பிட்ட வட்டத் தொகையும், அதன் ஆரைகட்கிடையில் முறையே அத் தொகைக்கு வரிசை யொழுங்காகக் கீழ்ப்பட்ட சிறுதொகைகளும், குறிக்கப்படும்.

ஆடுமுறை: முதலாவது கீழ்த்தொகையுள்ள கட்டத்திற் சில்லியெறிந்து, நொண்டியடித்து ஒரேயெட்டில் மிதித்து வெளியே தள்ளி, மீண்டும் ஒரேயெட்டில் அதை மிதித்தல் வேண்டும். இங்ஙனம் தொடர்ந்து மேன்மேலுயர்ந்த தொகையுள்ள சுற்றுக் கட்டங்களிலெல்லாம் ஆடியபின், நடுக்கட்டத்தில் ஆடல் வேண்டும். நடுக்கட்டத்துள் எறிந்த சில்லியை, அது அங்கிருக்கும்போதும் அதை வெளியே தள்ளிய பின்பும், நேரே ஒரேயெட்டில் மிதித்தல் வேண்டு மேயன்றிச் சுற்றுக் கட்டத்தின் வழியாய்ச் சென்று மிதித்தல் கூடாது.

ஒருவர் தவறியபின் அடுத்தவர் ஆட வேண்டும்.

குறித்த வட்டத் தொகையை முந்தி யெடுத்தவர் (அதாவது எல்லாக் கட்டங்களையும் தவறாது முந்தியாடியவர்), கெலித்தவராவர். கெலிப்பதற்குப் 'பழம்' என்று பெயர். ஒவ்வொரு பழத்திற்கும் காலால் ஒவ்வோர் உப்பு வைக்கப்படும்.

உப்புக்குள், வட்டையினின்று தொடங்கி ஒன்றையொன்று தொட்டுக்கொண்டு வரிசையாக இருக்கும். வெளியே தள்ளப்பட்ட சில்லி ஒரேயெட்டில் மிதிக்க முடியாதவாறு தொலைவிலிருப்பின், ஆடுபவர் தாம் வைத்த உப்பு வரிசைமேல் நடந்துசென்று அதை மிதிக்கலாம்.




வட்டச்சீட்டு *vaṭṭa-c-cīṭṭu,* பெ.(n.) நிதிச் சீட்டுவகை; a kind of chit transaction.

*[வட்டம்[2] + சீட்டு. வட்டம் = ஒருசுற்று.]*

வட்டசட்டம் *vaṭṭa-caṭṭam,* பெ.(n.) ஒழுங்கு (இ.வ.), ஒழுங்கான நிலை; regularity, orderliness.

*[வட்டம்[1] + சட்டம். ஒருகா. வாட்டசாட்டம் → வட்டசட்டம்.]*

வழக்கியன் மரபுச் சொற்களு ளொன்று.

வட்டஞ்சுற்று-தல் *vaṭṭañ-cuṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சுற்றி வளைந்துச் செல்லுதல்; to go in a circuitous or round about route. *"வட்டஞ் சுற்றியும் வழியே போ"* (நாஞ்.).

*[வள் → வட்டு →வட்டம்[1] + சுற்று-,]*

வட்டச்சொச்சவியாபாரம் *vaṭṭa-c-cocca-viyābāram,* பெ.(n.) நாணயமாற்று முதலிய தொழில்; money exchange the profession.

வட்டணம் *vaṭṭaṇam,* பெ.(n.) 1. வட்டமான கேடகம்; shield. *"இட்ட வட்டணங்கண் மேலெறிந்த வேல்"(கலிங்.413).* 2. நெடுங் கேடக வகை (யாழ்.அக.); a kind of big shield.

மறுவ. பரிசை

த. வட்டணம் > Skt. அட்டன.

*[வட்டம் → வட்டணம் = வட்டமான கேடகம் (மு.தா.2, பக்.85).]*

வட்டணி[1]-த்தல் *vaṭṭaṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வட்டமாக்குதல்; to make round or circular, to encircle.

*[வட்டணம் → வட்டணி.]*

வட்டமாதல், வட்டமாக்குதல் (மு.தா. 2, பக்.85) 'வட்டணி' என்னும் வினைவடிவம். வடமொழியி லில்லை.

வட்டணி[2]-த்தல் *vaṭṭaṇi-,* 4 செ.கு.வி. (v.i.) வட்டமாதல்; to encircle to become round or circular.

*[வட்டணம் → வட்டணி.]*

வட்டணி என்னும் வினைவடிவம் வடமொழியி லில்லை.

வட்டணிப்பு *vaṭṭaṇippu,* பெ.(n.) வட்டமா யிருக்கை, வட்டவடிவமான தன்மை; roundness, circularity, rotundity. *"குண்டலமென்று வட்டணிப்பைச் சொல்லவுமாம்"(திருவிருத்.57, வ்யா.பக்.318).*

*[வட்டணம் → வட்டணி →வட்டணிப்பு.]*

வட்டணை[1] *vaṭṭaṇai,* பெ.(n.) 1. பொருள் பொதிந்த, அறிவார்ந்த பேச்சு; flowery meaningful speech, learned jargon.

2. வண்ணனை; flowery or rhetorical speech or statement. *"வட்டணை பேசுவர்" (பதினொ, கோபப்பிர.85).*

வட்டணை[2] *vaṭṭaṇai,* பெ.(n.) 1. வட்டம்[1], 1 (பிங்.) பார்க்க; see *vaṭṭam. "வாயினூலால் வட்டணைப் பந்தர் செய்த சிலந்தி" (தேவா. 507, 2).* 2. உருண்டை; globe, ball. 3. வட்டமான செலவு; circular course, as of a horse. *"மாப்புண்டர வாசியின் வட்டணைமேல்" (கம்பரா.படைத்.97).* 4. இட வலமாகச் சுற்றுகை; moving left and right, as in pugilistic performance. *"சுற்றிவரும் வட்டணையிற் றோன்றா வகைகலந்து" (பெரியபு. ஏனாதி.29).*

த. வட்டணம் > **Skt**. வர்த்தன.

*[வட்டணம் → வட்டணை = இருமுனையும் வளைந்து தொடுமாறு முழுமையாக வளைவாக அமைக்கப்பட்ட வட்டணை.]*

வட்டணை[3] *vaṭṭaṇai,* பெ.(n.) 1. தொழுதற்கு அறிகுறியாகத் தாமரை மொட்டுப் போலக் கைகளைக் குவிக்கை (பரிபா.16, 11, உரை); a gesture with both hands signifying obcisance, consisting in folding one's hands so as to resemble a lotus bud. *"வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி" (மணிமே.7, 4, 3).* 2. தாளக் கருவி; cymbals. *"கொம்மைக் குயவட்டணை கொண்டிலனோ" (கம்பரா. அதிகாயன்.9).* 3. தாளம் போடுகை (பிங்.); beating time. 4. அடிக்கை (அரு.நி.); beating. 5.மொத்துகை (அரு.நி.); dashing against.

வட்டணை[4] *vaṭṭaṇai,* பெ.(n.) கிடுகு, கேடகம்; shield. *"மன்னவர்காண வட்டணை வாளெடுத்து" (கல்லா.48, 8).*

*[வட்டணம் → வட்டணை = வட்டமான கேடகம் (மு.தா.2, பக்.85]*

வட்டணை[5] *vaṭṭaṇai,* பெ.(n.) வட்டமான அணை, வட்டவடிவிலமைந்த படுக்கை; circular bed or cushion. *"வட்டணை....... இரீஇயினாரே" (சீவக.2433).*

*[வட்டம் + அணை]*

வட்டணையுறுத்து-தல் *vaṭṭaṇai-y-uruttu-,* 5 செ.கு.வி.(v.i.) தாளம்போடுதல் (வின்.); to beat time, to struggle.

*[வட்டணை + உறு→உறுத்து-,]*

வட்டத்தகரை *vaṭṭa-t-tagarai,* பெ.(n.) வண்டுக் கடிகளைப் போக்கும் ஒருவகைத் தகரைச்செடி; a species of cassia which has round leaves and is capable of curing beetle sting (சா.அக.).

*[வட்டம் + தகரை]*

வட்டத்தலைப்பா *vaṭṭa-t-talaippā,* பெ.(n.) தலைப்பாகை வகையுளொன்று (யாழ். அக.); a kind of head-dress, round turban.

*[வட்டம் + தலைப்பா]*

வட்டத்தறிமுறையன் *vaṭṭa-t-tari muraiyan,* பெ.(n.) பெருமருந்து; a twiner- *Aristolochia indica.*

வட்டத்தாமரை *vaṭṭa-t-tāmarai,* பெ.(n.) 1. மரவகை; Indian lotus croton. 2. ஒரு வகைச் சிறு செடி (M.M.588.); narrow woolly-stipuled lotus croton.

*[வட்டம் + தாமரை]*

வட்டத்தாமரை, வட்டக்கிலுகிலுப்பை என்பனவும் பிறவும் தொன்றுதொட்டு வழங்கி வரும் நிலைத்திணைப் பெயர்களாகும். இது கேரளப் பகுதியிற் காணக்கூடும்.

வட்டத்தாளி *vaṭṭa-t-tāḷi,* பெ.(n.) செடி வகை (M.M.938.); a shrub.

*[வட்டம்[1] + தாளி[5]]*

வட்டத்திப்பிலி *vaṭṭa-t-tippili,* பெ.(n.) மருந்துக் கொடி வகை (பதார்த்த. 954); long pepper- m.cl., piper longum.

வட்டத்திரி *vaṭṭa-t-tiri,* பெ.(n.) 1. துமுக்கி (துப்பாக்கி)க்கு நெருப்பு வைக்குந் திரி (வின்.); match of a gun. 2. காதிடு திரி; small roll of cloth put into the pierced lobe of the ear for widening the aperture.

*[வட்டம் + திரி.]*

வட்டத்திருகாணி *vaṭṭa-t-tirukāṇi,* பெ.(n.) மேற்பகுதி வட்டமாக அமைந்த திருகாணி; tirukani with round brim.

*[வட்டம் + திருகாணி]*

வட்டத்திருப்பி[1] *vaṭṭa-t-tiruppi,* பெ.(n.) 1. பொன்முசுட்டை வேர்; root of cissampelos pareira. 2. கொழுப்பு தசையை வளர்க்கும் உடம்பு; it increases flesh ingient in the body (சா.அக.).

வட்டத்திருப்பி[2] *vaṭṭa-t-tiruppi,* பெ.(n.) 1. கொடிவகை; velvet leaf, kidney-leaved bracteate moonseed. 2. அரிவாண் மணைப்பூண்டு (L.); sickle-leaf shrub. 3. ஆடு தின்னாப்பாளை; an ash coloured bitter prostate medicinal plant, worm-killer-*Aristolochia bracteata.*

வட்டத்துத்தி[1] *vaṭṭa-t-tutti,* பெ.(n.) ஓர் வகைச் சிறுதுத்தி; a shrub-*Macaranga Roxburghi.*

வட்டத்துத்தி[2] *vaṭṭa-t-tutti,* பெ.(n.) வட்டத் தாமரை, 2 பார்க்க; see *vaṭṭa-t-tāmarai.*

வட்டத்தொப்பி *vaṭṭa-t-toppi,* பெ.(n.) தொப்பி வகை (யாழ்.அக.); a kind of round hat.

*[வட்டம்[1] + தொப்பி]*



வட்டத்தோல் *vaṭṭa-t-tōl,* பெ.(n.) கிடுகு, கேடகம்; shield. *"வட்டத்தோல் வரிபுறங் கிடந்தசைய"(திருவிளை. நரிபரி.30).*

*[வட்டம் + தோல்.]*

வட்டதரி *vaṭṭa-tari,* பெ.(n.) முண் மரவகை (பதார்த்த.245); ashy babool.

வட்டதாக்கல் *vaṭṭa-tākkal,* பெ.(n.) வட்டமாகச் செய்தல்; to make round shape.

வட்டதிட்டம் *vaṭṭa-tiṭṭam,* பெ.(n.) நேர்மையான ஏற்பாடு; proper course. *"வட்டதிட்டந் தெரிந்து நடந்து கொள்ள வேண்டும்" (இ.வ.).*

வட்டநரிமருட்டி *vaṭṭa-nari-maruṭṭi,* பெ.(n.) வட்டக்கிலுகிலுப்பை (மூ.அ.) பார்க்க; *vaṭṭa-k-kilukiluppai.*

*[வட்டம் + நரிமருட்டி]*

**வட்டப்பக்கா** *vaṭṭa-p-pakkā*, பெ.(n.) அகன்ற வட்டவடிவாயமைந்த பக்காப் படிவகை; Madras measure, when made with a wide circular mouth.

*[வட்டம் + பக்காப்படி→பக்கா. பக்காப்படி = பெரியபடியி னளவு.]*

**வட்டப்பண்டிகை** *vaṭṭa-p-paṇḍigai*, பெ. (n.) கோயில் விமானத்தில் வட்ட வடிவமாக அமைந்த பண்டிகை; an arnament on the top of temple tower.

**வட்டப்பாலை**[1] *vaṭṭa-p-pālai*, பெ.(n.) தமிழிசையின் அடிப்படையான பகுப்பு நான்கனுளொன்று (சிலப்.17, உரை, பக்.453); one of the four base of the ancient Tamil music.

*[வட்டம் + பாலை]*

குமரிக்கண்டத் தமிழர் நுண்மாண் நுழைபுலத்தராயும் தலைசிறந்த நாகரிகராயும் எஃகுச் செவியராயு மிருந்ததினால் ஏழுபேரிசையும் ஐந்து சிற்றிசையுமாகிய பன்னீரிசையை (சுரத்தை)யும் கண்டு ஆயப்பாலை என்னும் முறையில், எழுபாலைப் பண்களைத் திரித்ததுமன்றி, அப்பன்னீரிசையையும் வட்டப்பாலை என்னும் முறையில், 24 ஆகவும்......... நுட்பமாய்ப் பகுத்து எல்லையற்ற இசைப் பேரின்பத்தை நுகர்ந்திருக்கின்றனர் (பண்.தமி.நா.பண்.பக்.112).

**வட்டப்பாலை**[2] *vaṭṭa-p-pālai*, பெ.(n.) நிலைத் திணை வகையுளொன்று; a class of thing that immovable.

*[வட்டம் + பாலை]*

**வட்டப்பாறை** *vaṭṭa-p-pāṟai*, பெ.(n.)1. வட்டமான பாறை; round, flat stone or rock. *வட்டப்பாறை நாச்சியார்* (வின்.). 2. விளைவற்ற கற்பாங்கான பகுதி (வின்.); rockey, barren surface, uncultivable rocky area. 3. சந்தனக்கல்; round, flat stone used for triturating sandal wood. *"வட்டப்பாறையின் முழங்கையை மணங்கொள் சந்தனமா. . . தேய்க்குமுன்* *(திருவாலவா.51, 6).*

*[வட்டம் + பாறை]*

**வட்டப்புல்** *vaṭṭa-p-pul*, பெ.(n.) காவட்டம் புல் (மூ.அ.); Citronella-grass.

மறுவ. காமாட்சிப்புல்

*[காவட்டம்புல் →வட்டம்புல்→வட்டப்புல்]*

**வட்டப்பூ** *vaṭṭa-p-pū*, பெ.(n.) கால்விரலணி வகை (சிலப்.6, 97, அரும்.); a toe-ring.

மறுவ. மெட்டி

*[வட்டம் + பொல்→பூல்→பூ]*

**வட்டப்பூடு** *vaṭṭa-p-pūḍu*, பெ.(n.) ஒருவகைப் பூடு; a species of small milkwort-*Polygalaglabra*.

*[வட்டம் + பூடு]*

**வட்டப்பேந்தா** *vaṭṭa-p-pēndā*, பெ.(n.) பழந்தமிழர் விளையாட்டுகளில் ஒன்று; one of the games of ancient *Tamiḷs*.

*[வல்→வள்→வட்டு→வட்டம் + பேந்தா]*

வட்டமான வளையமிட்டு ஆடும் இக்கோலி விளையாட்டுப் பற்றி பாவாணர் கூறுவது :

ஆட்டின் பெயர் : பேந்தா எனப்படும் வட்டக் கோட்டிற்குள் உருட்டியாடுங் கோலியாட்டு வகை வட்டப் பேந்தாவாம். இது சதுரப் பேந்தாவுடன் ஒப்பு நோக்கி வட்டப் பேந்தா எனப்பட்டது.

ஆடுவார் தொகை : மூவர் முதல் எத்துணைப் பேராயினும் இதை ஆடலாம். ஆயினும், ஐவர்க்குக் குறையாதும் பதின்மர்க்குக் கூடாதும் இருப்பின் சிறப்பாம்.

ஆடுகருவி : ஆடகருள் ஒவ்வொருவனுக்கும் பல கோலிகள் இருத்தல் வேண்டும். அவற்றோடு தெல் என்னும் ஒரு பெருங்கோலி ஒவ்வொருவ னிடத்துமாவது எல்லார்க்கும் பொதுவாகவாவது இருத்தல் வேண்டும்.

ஏறத்தாழ முக்கச விட்டமுள்ள ஒரு வட்டக்கோடு கீறப்படும். அதன் நடுவில் ஒரு குழி கில்லப்படும். வட்டத்தின் அடியில் கால்வட்டம் அமையுமாறு ஒரு குறுக்குக் கோடும் கீறப்படும்.

கால் வட்டமுள்ள பக்கத்தில், வட்டத்தினின்று ஏறத்தாழ முக்கசத் தொலைவில், உத்தி கீறப்படும். அதற்கு மேலும் இரு பக்கத்தும் கவியுமாறு ஒரு தலைகீழான பகரக்கோடு இடப்படும். அது மூடி எனப்படும். அதை இன்று டாப்பு (TOP) என்னும் ஆங்கிலச் சொல்லாற் குறிப்பர்.

ஆடுகளம் : முற்றமும் புறக்கடையும் பொட்டலும் வெளி நிலமும் இதை ஆடுமிடமாம்.

ஆடுமுறை : ஆடகரெல்லாரும் முதன் முதல் உத்தியில் நின்றுகொண்டு, ஒவ்வொருவனாய்த் தத்தம் கோலியை வட்டத்தின் நடுவிலுள்ள குழியை நோக்கி உருட்டல் வேண்டும். யார் கோலி குழிக்கு அண்ணணித்தாய் (அதாவது மிக நெருங்கி) நிற்கின்றதோ, அவன் முன்னும்; அதற்கு அடுத்து நிற்குங் கோலிக்காரன் பின்னும்; அதற்கடுத்து நிற்குங் கோலிக்காரன் அதன் பின்னுமாக; இங்ஙனம் குழியண்மை வரிசைப்படி எல்லாரும் ஆடல் வேண்டும். கோலியை உருட்டும்போது ஒருவன் கோலி இன்னொருவனதை அடித்துவிட்டால், எல்லார் கோலியும் மீண்டும் ஒவ்வொன்றாய் உருட்டப்படும். கோலிகள் ஒன்றோடொன்று அடிபடுவது சடபுடா எனப்படும்.

ஆடுவார் வரிசை யொழுங்கு இவ்வாறு துணியப்பட்ட பின், முந்தி யாடுகிறவனிடம் ஏனையோரெல்லாரும் ஆளுக்கொரு கோலி கொடுத்துவிடல் வேண்டும். அவன் அவற்றுடன் தன் கோலியையுஞ் சேர்த்து, எல்லாவற்றையும் மொத்தமாய் வட்டத்திற்குள் உருட்டுவான். அதன்பின், தெல்லால் (அதாவது குண்டால்) முக்கால் வட்டத்திலுள்ள கோலிகளுள் எதையேனும் எவற்றையேனும் அடிப்பான். கால் வட்டத்துள் உள்ளவற்றை அடித்தல் கூடாது; அடிப்பின், 'பச்சா'வாம். அதற்கு ஒரு கோலி போட்டுவிட வேண்டும். அதன்பின், அடுத்தவன் ஆடுவான்.

உருட்டுவான் யாராயினும், மூடியை மிதிக்கவாவது தாண்டவாவது கூடாது. அங்ஙனஞ் செய்யின் தவறியவனாவன். அதனால் அடுத்தவன் ஆட நேரும். மூடி பொதுவாக முதலிற் போடப்படுவதில்லை. பலமுறை சொல்லியுங் கேளாது, ஒருவன் உத்திக்கு முன்னாற் கால் வைத்து முன்புறமாகச் சாய்ந்து அடிப்பின், மூடி போடப்படும். அது போடப்பட்ட பின் அதை மிதிப்பின் அல்லது தாண்டின் 'பச்சா' என்னும் குற்றமாம். அதற்கு ஒரு காய் போட்டு விடவேண்டும்.

உருட்டப்பட்ட கோலிகளுள் ஏதேனும் ஒன்று நேரே குழியில் விழுந்துவிடின், வெற்றியாம். அவன் காய்களை அடிக்கத் தேவையில்லை. உருட்டினவன் திரும்பவும் ஆடலாம்.

முக்கால் வட்டத்துள் உள்ள கோலியை அல்லது கோலிகளை அடிப்பின், அடிபட்ட கோலியனைத்தும் வட்டத்தினின்று வெளியேறிவிடல் வேண்டும். அங்ஙனம் வெளியேறிவிடின் அது ஒரு வெற்றியாம். குழியிற் போட்டாலும் காயடித்தாலும், ஏனையோரெல்லாரும் கெலித்தவனுக்கு ஒவ்வொரு காய் கொடுத்துவிடல் வேண்டும். குழியுள் போட்டுக் காயும் அடித்துவிடின் இரட்டைக் கெலிப்பாதலின், ஏனையோர் இவ்விரு காய் கொடுத்துவிடல் வேண்டும். முக்கால் வட்டத்துள் உள்ள காய்களை

அடிக்கும்போது, குழிக்காயையும், அடிக்கலாம்; வெளிக்காயையும் அடிக்கலாம். வென்றவன் என்றும் திரும்பியாடுவான்.

குழியிலும் போடாமல் முக்கால் வட்டத்திற்குள் உள்ள காயையும் அடிக்காமல் போனவன், தன் ஆட்டத்தை இழந்து விடுவான். அதன்பின் அடுத்தவன் ஆடல் வேண்டும். அன்று ஒருவரும் காய் போடுவதில்லை.

அடித்தகாயாவது அடிக்கப்பட்ட காயாவது வட்டத்தை விட்டு வெளியே போகாவிடின், பச்சா என்னுங் குற்றமாம். அதற்கு ஒரு கோலி அடுத்தவனிடம் கொடுத்துவிட்டு, ஆட்டத்தை விட்டு விடல் வேண்டும். குழியிற் போட்டவிடத்தும் அடித்த காய் அல்லது அடிக்கப்பட்ட காய் வெளியேறாவிடின், இரட்டைப் பச்சாவாம். அன்று, அடித்தவன் இரு காய் கொடுத்துவிட்டு ஆட்டத்தை விட்டுவிடல் வேண்டும். அடுத்தவன் அவற்றையுஞ் சேர்த்து உருட்டுவான். அவன் கெலித்துவிடின், அப் பச்சாக் காய்களையும் வழக்கப்படி கொடுக்கிறவற்றையும் எடுத்துக் கொள்ளலாம்; கெலிக்காவிடின் பச்சாக் காய்கள் பழங்காய்களுடன் சேர்த்து உருட்டப் பெறும். எவன் எங்ஙனம் கெலிப்பினும், பழங்காய்களை ஒருபோதும் கெலிப்புக் காயாகப் பெறல் முடியாது. ஆட்டமும் முடியும் வரை, அவை ஒரு 'முதல்' போல் இருந்து கொண்டே யிருக்கும். ஆட்டம் முடிந்தபின், அவனவன் முதற்காய் அவனவனைச் சேரும்.

ஒருவன் கெலித்தவிடத்து இன்னொருவனுக்குப் போடக் காயில்லாவிட்டால், அவன் கடனாகவாவது விலைக்காவது பிறனிடம் வாங்கிக் கொள்ளலாம்; அல்லாக்கால், அவன் முதலில் இட்ட காயை இழந்துவிடுவான்.

எல்லாரும் ஆடி முடிந்தபின், ஒருவரிடமாவது பலரிடமாவது காய் மிகுதியாய்ச் சேர்ந்திருக்கும். அவற்றுள் அவரவர் சொந்தக் காய்க்கு மேற்பட்டவெல்லாம் கெலிப்புக் காயாகும்.

ஆட்டின் பயன் : கோலியாட்டின் பொதுப் பயனாக முற்கூறப்பட்டவற்றொடு, பெருந் தொகையான கோலிகளை எளிதாய் ஈட்டிக் கொள்வதும், சிறு முதலையிட்டுப் பேரூதியம் பெறும் கருத்துறவும், இவ் வாட்டின் பயனாம்.

**வட்டப்பேய்மருட்டி** *vaṭṭa-p-pēy-maruṭṭi,* பெ.(n.) ஒரு பேய் மருட்டி; a kind of plant-*Anisomeles ovata.*

**வட்டப்போதிகை** *vaṭṭa-p-pōdigai,* பெ.(n.) போதிகையின்கீழ் அமைத்த வட்ட வடிவான தாங்கல் வகை (வின்.); a circular supporting piece placed under the capital of a pillar.

*[வட்டு→வட்டம் + போதிகை]*

**வட்டம்¹** *vaṭṭam,* பெ.(n.) 1. பணம், வராகன் போன்ற பெயர்; money named like '*varāgaṉ*'. 2. வட்டக்காரர் பார்க்க; see *vaṭṭa-k-kārar.*

**வட்டம்²** *vaṭṭam,* பெ.(n.) 1. மண்டலம், வட்ட வடிவு (தொல்.சொல்.402, உரை); circle, circular form, ring-like shape. 2. பரிவேடம் (சிலப்.10, 102, உரை.); halo round the sun or moon, a *karandurai-kōl.* 3. குயவன் திரிகை (பிங்.); potter's wheel. 4. வண்டிச்சக்கரம் (யாழ். அக.); wheel of a cart. 5. உண்கலமாய்த் தைக்கும் இலையின் நடுப்பகுதி (இ.வ.); the central portion of a leaf-plate stitched for taking food. 6. தடவை, முறை; turn, course, as of a mantra. *"விநாயகர் நாமத்தை நூற்றெட்டு வட்டஞ்செய்து" (விநாயகபு.74, 214).* 7. சுற்று (வின்.); revolution, cycle. 8. ஒரு கோள் வானமண்டலத்தை ஒரு முறை சுற்றி வரும் காலம்; cycle of a planet. *அவன் சென்று ஒரு வியாழவட்டமாயிற்று.* 9. சுற்றியுள்ள நிலப்

பகுதி; circuit, surrounding area or region. *"கோயில் வட்டமெல்லாம்" (சீவக.949).* 10. சில ஊர்களைக் கொண்ட நிலப்பகுதி; a revenue unit comprising of a few villages, called taluk. 11. வட்டணை[2], 3 பார்க்க; see *vaṭṭaṇai. "தார்பொலி புரவிவட்டந் தான்புகக் காட்டுகின்றாற்கு" (சீவக.442).* 12. விருந்து முதலியவற்றிற்குச் சமைத்த தொடுகறிவகைகள் (நாஞ்.); items or course of side dishes of a meal for a feast etc. 13. அப்பவகை; a kind of pastry. *"பாகொடு பிடித்த விழைசூழ் வட்டம்" (பெரும்பாண்.378).* 14. வட்டப்பாறை, 3 பார்க்க; see *vaṭṭa-p-pāṟai. "வடவர்தந்த வான்கேழ் வட்டம்" (நெடுநல்.51).* 15. ஆலவட்டம்; circular ornamental fan. *"செங்கேழ் வட்டஞ் சுருக்கி" (நெடுநல்.58).* 16. வாகுவலயம் (பிங்.); bracelet worn on the upper arm. 17. தராசுத்தட்டு; scale-pan, round plate for balance. *"வட்டமது ஒத்தது வாணிபம் வாய்த்ததே" (திருமந். 1781).* 18. கைம்மணி (பிங்.); hand bell. 19. கிடுகு, கேடகம் (பிங்.); shield. *"ஐயிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப" (திருமுரு.111).* 20. முத்து வகை (பிங்.); a kind of pearl. *"முத்து வட்டமும் அனுவட்டமும்" (S.S.I.I.ii, 22).* 21. பீடம், இருக்கை (யாழ்.அக.); seat, chair. 22. குளம் (பிங்.); pond, tank. 23. கொள்கலம் (யாழ்.அக.); receptacle. 24. நீர்ச்சால் (பிங்.); large water pot. 25. நீரெறிகருவி; a kind of water-squirt. *"பூநீர் பெய் வட்டமெறிய" (பரிபா.21, 42).* 26. வளைவு; curve, bend. *"வில்லை வட்டப்பட வாங்கி" (தேவா.5, 9).* 27. பாரா வளை; a kind of boomerang. *"புகரினர் சூழ் வட்டத்தவை" (பரிபா.15, 61) (பிங்.).* 28. ஆடை; dress, cloth. *"வாலிழை வட்டமும்" (பெருங்.உஞ்சைக்.42, 208).* 29. எல்லை (சூடா.); boarder, boundary, limit. *"தொழுவல்வினை யொல்லை வட்டங் கடந் தோடுத லுண்மை" (தேவா.5, 9).* 30. திருத்தம், செம்மை; polish, refinement. *வட்டமாய்ப் பேசினான் (இ.வ.).* 31. ஐந்நூறு சால் கொண்ட நீரளவு; a unit for measuring the quantity of water = 500 average potfuls, as the quantity necessary for a *paṅgu* for one week. 32. மக்கட் பிரிவு (இ.வ.); sect, tribe. 33. யானையின் நடுச்செவி(பிங்.); the middle ear of an elephnat. 34. தாழ்வு (அக.நி.) ஆழமான பள்ளத்தாக்கு; lowness, depth, as of a valley. 35. களத்திற் சூடடிப்பதற்குப் பரப்பிய நெற்கதிர் (நாஞ்.); sheaves of paddy spread on a threshing floor for being threshed. 36. வட்டமரம்[2] பார்க்க (வின்.); see *vaṭṭa-maram.*

த. வட்டம் → **Pkt.** vaṭṭa → **Skt.** வ்ருத்த.

ஒ.நோ. நட்டம் → நடம் **Skt.** ந்ருத்த → **L.** verto (to turn)

*[முள் → வள் → வட்டு + அம் → வட்டம் = சுற்று. ஒருகா. வள் + தம் என்றுமாம்.]*

'வள்' என்னும் வழிவேர் தமிழிற் பல்வேறு வடிவங்கொண்டு நூற்றுக்கணக்கான சொற்களைப் பிறப்பிக்கும். வ்ருத்த என்னும் வடசொல் தமிழில் வட்டம் என்று திரியவில்லை. வட்டம் என்னும் சொல்லே வருத்த என்று திரிந்தது. வளை, வள்ளம், வட்டு, வட்டி முதலிய பல சொற்கட்கும் வள் என்பதே வேர். இச்சொற்கட்கெல்லாம் இனமானவை வடமொழியிலில்லை.

ஒரு கோள் வான மண்டலத்தை ஒருமுறை சுற்றி வருங்காலம் (மு.தா.2 : 89).

வளைந்த பொருளில் இரு முனையும் தொடுமாறு முழு வளைவானதே வட்டம் (மு.தா. 2 : 89).

'வளைவு முற்றியதே வட்டமாம்' (மொழியா. கட்.பக்.52) என்றும் வட்டத்துக்குப் பொருள் வரையறை செய்வார் பாவாணர்.

**வட்டம்³** *vaṭṭam,* இடை. (part.) தோறும்; each, every. *"ஆட்டைவட்டம் காசு ஒன்றுக்கு.... பலிசை" (S.I.I. ii, 122, 27).*

*[வள்→வட்டு→ வட்டம்.]*

**வட்டம்⁴** *vaṭṭam,* பெ.(n.) 1. நாணய மாற்றின் வட்டம்; rate of exchange. 2. நாணயம் மாற்றுவோரின் பிடித்தத் தொகை; money-changer's Commission. *"நாணயத்தின் வட்டமென்றும்" (பணவிடு.179).* 3. ஒட்டு மொத்த வாணிகத்திற் கொடுக்கும் தள்ளுபடி (இ.வ.); wholesale trade discount. 4. ஊதியம்; profit. *'அந்த வணிகத்தில் எனக்கு வட்டமொன்றுமில்லை'.*

*[வட்டு→ வட்டம்.]*

**வட்டம்⁵** *vaṭṭam,* பெ.(n.) முதலாம் பராந்தகன் ஆட்சியில், நாட்டுப்பிரிவுகளுக்கு வழங்கிய பெயர்; a word used to indicate as one of the regions of *Parāndaga Cōḷa* kingdom. *"இடையாற்று நாட்டு வடகரையூர் நாட்டு சிற்றாயல் வட்டத்து சிற்றுவக்குடி" (தெ.கல். தொ.7, கல்.515).*

வட்டமாக அமைந்த ஊர் அல்லது நாட்டுப் பகுதி. பல ஊர்களடங்கிய சூழலே வட்டமாக, கணிக்கப்பட்டுள்ளது. இக் காலத்தில் ஒரூரின் உட்பிரிவுகளாகக் குறிக்கின்றனர். இச் சொல் ஊதியம், வருவாய் ஆகியவற்றிற்கமைந்த காலவரையறையினைக் குறிக்கும் வழக்குச் சொல்லாகவும் பயின்று வருகிறது. திருமறைக் காடுடையார் கோயில் முப்பது வட்டத்துக் காணியுடைய சிவபிராமணர்".

*[வட்டு→வட்டம்.]*

**வட்டம்கூறு-தல்** *vaṭṭam-kūṟu-,* 5 செ. குன்றாவி.(v.t.) போட்டியில் பலர்முன் ஏற்றி விலை கூறுதல்; to be auctionning by voice, oral auction.

*[வட்டம் + குல்→ கூல்→கூறு-. குல் = பொருத்து. வட்டம் கூறுதல் = பொருத்தமாக ஏலம் கூறுதல்.]*

**வட்டம்பண்ணு-தல்** *vaṭṭam-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மந்திரம் முதலியவற்றை நாள்தோறும் மனனஞ் செய்தல் அல்லது உருப்போடுதல் (யாழ்ப்.); to mug or recite daily mantras, etc.

*[வட்டம் + பண்ணு-,]*

**வட்டம்பிரிதல்** *vaṭṭam-piridal,* பெ.(n.) நாணயமாற்றம் முதலியவற்றில் ஊதியம் பெறுகை (வின்.); profit or gain in exchange etc.

*[வட்டம் + பிரிதல். வட்டம் = நாணயமாற்றின் வட்டம்.]*

**வட்டம்போடு¹-தல்** *vaṭṭam-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வட்டமிடு-, (வின்.) பார்க்க; see *vaṭṭam-iḍu-.*

*[வட்டம் + போடு-,]*

**வட்டம்போடு²-தல்** *vaṭṭam-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) சூடடிக்க நெற்கதிர்களை நிலத்திற் பரப்புதல்; to spread sheaves of

paddy on the threshing floor for being threshed.

[வட்டம் + போடு-,]

வட்டம்போடு³-தல் vaṭṭam-pōḍu-, 19 செ.குன்றாவி.(v.t.) வட்டமிடு பார்க்க; see vaṭṭam-iḍu.

[வட்டம் + போடு-,]

வட்டம்போர் vaṭṭam-pōr, பெ.(n.) சூதாட்டம் (தொல்.எழுத்து.418, இளம்.); dice-play, gambling.

[வள் → வட்டு → வட்டம் + போர். ஒ.நோ. சொற்போர்.]

வட்டமடக்கி vaṭṭam-aḍakki, பெ.(n.) வட்டத் திருப்பி (சங்.அக.) பார்க்க; see vaṭṭa-t-tiruppi.

வட்டமணியக்காரன் vaṭṭamaṇiya-k-kāraṉ, பெ.(n.) நாட்டாண்மைக்காரன்; headman of a village or group of villages.

[வட்டமணியம் + காரன்¹]

வட்டமணியம்¹ vaṭṭa-maṇiyam, பெ.(n.) சுற்றியிருக்கும் ஊர்களில் வரிதண்டும் வேலை; the office of revenue collection in a division.

வட்டமணியம்² vaṭṭa-maṇiyam, பெ.(n.) 1. நாட்டாண்மை; office of headman of a circle or group of villages. 2. நாட்டாண்மைக்காரன்; village headman.

[வட்டம் + மணியம்.]

வட்டமணை vaṭṭa-maṇai, பெ.(n.) 1. திருக் கோயில் திருமேனியை வைப்பதற்குரிய வட்டமான பீடம்; circular platform for idols, in a temple. 2. மதிப்புறவாக இடும் இருக்கை; seat offered as a mark of respect.

[வட்டம்¹ + மணை¹]

வட்டமணைவேதியை vaṭṭa-maṇai-vēdiyai, பெ.(n.) வட்டமணை (இ.வ.) பார்க்க; see vaṭṭa-maṇai.

வட்டமயிர்க்கத்தி vaṭṭa-mayir-k-katti, பெ.(n.) சத்திரக் கருவி 26-ல் ஒன்று; one of the 26 surgical instruments described in the Tamil medical science.

வட்டமரம் vaṭṭa-maram, பெ.(n.) 1. செக்கின் ஆட்டு மரம்; turning pole of an oil-press. 2. காட்டு மரவகை (வின்.); a jungle tree.

வட்டமறுதி vaṭṭam-aṟudi, பெ.(n.) சீட்டு முதலியவற்றின் முடிவு (கொ.வ.); conclusion, close, as of a chit fund etc.

[வட்டம் + அறு → அறுதி]

வட்டமிடு¹-தல் vaṭṭam-iḍu-, 20 செ.கு.வி. (v.i.). 1. பறவை முதலியன சுற்றி வருதல்; to hover about, as a hawk; to gyrate. 2. உருண்டையாதல்; to be round or globular. *"வட்டமிட் டடியிட்டு" (தனிப்பா.i, 322,16).*

[வட்டம் + இடு-,]

வட்டமிடு²-தல் vaṭṭa-iḍu-, 18 செ.குன்றாவி. (v.t.) நோக்கங்கொண்டு சுற்றுதல்; to hang about in order to gain an object, to round about with a view to gain something. *கலுழன் இரையைத் தேடி வானத்தில் வட்டமிட்டுத் திரிகிறது.*

[வட்டம் + இடு-,]

வட்டமுத்து *vaṭṭa-muttu,* பெ.(n.) வட்ட வடிவில் அமைந்த முத்து; round pearl. *'பிறப்பிலேயே தட்டையான வடிவில் வட்டமாக அமைந்த முத்து'.*

*[வட்டம் + முத்து]*

ஒருகா. முத்துவட்டம்

வட்டமுலையாள் *vaṭṭamulaiyāḷ,* பெ.(n.) ஓர் வகைப்பூடு; a kind of shrub (plant).

வட்டமூக்குகோலா *vaṭṭa-mūkku-kōlā,* பெ.(n.) கடல் மீன்வகை; a kind of sea fish, anacanthus barbatus, body strongly compressed dull brown or grey fish with yellow fins 10 inches long.



வட்டமேசைமாநாடு *vaṭṭa-mēšai-mā nāḍu,* பெ.(n.) தனிப்படக்கூட்டிய ஆய்வுக் கூட்டம் (தற்கா.); round table conference, as of persons sitting in conference round a circular table, conkened for specific purpose.

வட்டரவு *vaṭṭaravu,* பெ.(n.) வட்டவடிவு (யாழ்ப்.); circularity.

*[வட்டம் → வட்டரவு]*

வட்டராயசம் *vaṭṭa-rāyašam,* பெ.(n.) வருவாய்த்துறை ஆய்வாளரின்கீழ் பணியாற்றும் எழுத்தன் (G.Tp.D.I. 241); revenue inspector's clerk.

வட்டவங்கரம் *vaṭṭavaṅgaram,* பெ.(n.) காஞ்சூரை; strych nine tree-*Strychnes nux vomica* dried bottle gourd fakeer's bottle.

வட்டவழுக்கை *vaṭṭa-vaḻukkai,* பெ.(n.) வழுக்கை பார்க்க; see *vaḻukkai.*

வட்டவாழி *vaṭṭa-vāḻi,* பெ.(n.) நன்னாரி; Indian sarsaperilla-*llemidesmus indica.*

வட்டவிருக்கம் *vaṭṭa-virukkam,* பெ.(n.) ஆலமரம்; banyan tree-*Ficus bengalensis.*

மறுவ. தொன்மரம், ஆல்.

*[வட்டம் + விருட்சம் → விருக்கம்.]*

வட்டவோடு *vaṭṭa-v-ōḍu,* பெ.(n.) அகல்; a small earthen pot (dish).

*[வட்டம் + ஓடு.]*

வட்டறவு *vaṭṭaṟavu,* பெ.(n.) முடிவாக அறுதி யிடுகை (யாழ்.அக.); final determination, finality.

*[வட்டு → வட்டறவு.]*

வட்டன்[1] *vaṭṭaṉ,* பெ.(n.) வட்டுப்போல் உருண்டு திரண்டவன்; round person. *"குறுவட்டா நின்னி னிழிந்ததோ கூனின் பிறப்பு" (கலித்.94, 27).*

*[வட்டு→வட்டன் (வ.வ.2, பக்.77)]*

இருபதிற்கு மேற்பட்ட காட்சிப் பொருள்களினின்று கிளைத்த சொல். வட்டன் என்னுஞ்சொல், தோற்றத்தில் உருண்டு திரண்ட காட்சியைக் குறித்தது (தேவ. 12, பக்.4).

வட்டன்² *vaṭṭaṉ,* இடை.(part.) ஒவ்வொரு, ஒவ்வொன்றும்; each and every. *"ஆட்டைவட்டன் முக்குறுணி நெற்பொலிசையாக" (S.I.I.ii,69, 3).*

*[வட்டம்→வட்டன்.]*

வட்டா¹ *vaṭṭā,* பெ.(n.) மேற்புறம் அகன்று, வட்டமான பரப்புக் கொண்டதும், கீழ்ப்புறம் நிற்க வைப்பதற்கு ஏற்ப வடிவம் கொண்டதுமான பாத்திரம்; a small tray-like case to keep saucer-like vessel.

மறுவ. கோப்பை

*[வட்டு→வட்டா]*

வட்டா² *vaṭṭā,* பெ.(n.) வட்டில், மல்லை; porringer.

வட்டா³ *vaṭṭā,* பெ.(n.) வாயகன்ற கலவகை; plate, porringer, bowl. *"வட்டாவுந் தாம்பூலமுந் துகிலுந் தாங்கிநிற்ப"(சீதக்.).*

*[வட்டு→வட்டா]*

வட்டா⁴ *vaṭṭā,* பெ.(n.) திறமை; சமர்த்து (திருவிருத்.71, அரும்.பக்.371); ability, cleverness.

*[வட்டம்→வட்டா]*

வட்டாகிருதி *vaṭṭākirudi,* பெ.(n.) 1. வட்ட வடிவு; circular shape or form, ellipse or other curvilinear figure. 2. வட்ட வடிவுள்ளவற்றின் சுற்றளவு; periphery of a curvilinear figure.

*[வட்டு + **Skt.** ākrti> த. ஆகிருதி.]*

வட்டாசிதுத்தி *vaṭṭāši-tutti,* பெ. (n.) ஒரு வகைச் செடி; a kind of plant.

வட்டாட்சியர் *vaṭṭāṭciyar,* பெ.(n.) சிறு நாட்டுப் பகுதியின் ஆட்சியாளர்; tasildar. *இன்று வட்டாட்சியர் அலுவலகம் சென்று வந்தேன்.*

*[வட்டம் + ஆட்சியர்]*

வட்டாட்டம் *vaṭṭāṭṭam,* பெ.(n.) வட்டாட்டு பார்க்க; see *vaṭṭāṭṭu.*

*[வட்டம் + ஆட்டம்.]*

வட்டாட்டு *vaṭṭāṭṭu,* பெ.(n.) வட்டுக் கொண்டு ஆடும் சூதாட்டம்; game of dice, gambling. *"வட்டாட்டாடிடம் பலவுங் கண்டார்" (கம்பரா. மிதிலைக்.17).*

*[வட்டாடு→வட்டாட்டு.]*

வட்டாட்டு, வல்லாட்டு, வேட்டையாடலுமின்ன பிறவும் அரசன் இன்பமாகப் பொழுதுபோக்கும் வழிகளாம்.

வட்டாடு-தல் *vaṭṭāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) வட்டையுருட்டிச் சூதாடுதல்; to play with draughts or dice. *"அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள், 401).*

மறுவ. கவறாடுதல்.

*[வள்→வட்டு + ஆட்டு→ஆடு-. வட்டு = வட்டமான சூதாட்டுக் கருவி.]*



வட்டாணி *vaṭṭāṇi,* பெ.(n.) 1. திறமை; ability, capacity. 2. வாய்வட்டமாகப் பேசுகை (திருவிருத்.71, அரும்.பக்.371); cleverness or talent, expertness in talking as in speech.

தெ. வடாரி.

*[வட்டம்¹ + ஆணி]*

வட்டாத்தி *vaṭṭātti*, பெ.(n.) ஒருவகை மரம்; a kind of tree- *Bauhinia malabarica*.

வட்டாப்பத்து *vaṭṭā-p-pattu*, பெ.(n.) ஒற்றை ஓலையாற் செய்த விசிறி (யாழ்ப்.); fan made of a single talipot leaf.

வட்டாரம்[1] *vaṭṭāram*, பெ.(n.) தூக்கு குண்டு, சுவரொழுங்கினைச் சரிபார்ப்பதற்குப் பயன்படும் கருவி; an iron round used to verify the vertical level of a wall or a door frame etc.

வட்டாரம்[2] *vaṭṭāram*, பெ.(n.) 1. சூழக்கிடந்த நிலப்பகுதி (வின்.); circuit, surrounding area or region. *"கோயில் வட்டமெல்லாம்" (சீவக.949).* 2. வீட்டின் சுற்றுப்புறம்; compound round a house. 3. வீடு (வின்.); house. 4. தவசக் களஞ்சியம்; granary.

தெ. வட்டாரமு; க. வடர; து. வட்டார.

*[வள்→வட்டு→வட்டம்→வட்டாரம் = சுற்றுப்புற நாட்டுப்பகுதி (வ.வ.2, பக்.77).]*

'வட்டாரம்' என்னுமிவ் வடிவம் வடமொழியி லில்லை.

வட்டாரம்[3] *vaṭṭāram*, பெ.(n.) குறிப்பிட்ட இடமும், அதனைச் சூழக்கிடக்குஞ் சுற்றுப் பகுதியும்; particular region. *'தஞ்சை வட்டாரத்தில் கோயில்கள் அதிகம்'.* 2. வட்டம்; ward, division.

*[வள்→வட்டு+ஆரம் = ஒரீறு.]*

வட்டாரமொழி *vaṭṭāra-moḻi*, பெ.(n.) பொதுமொழியிலிருந்து ஒலிப்பு முறையாலும், சொற்களாலும், இலக்கண அமைப்பாலும், சற்றே வேறுபாடுடையதும், குறிப்பிட்ட நிலப்பகுதியைச் சார்ந்தவர்களால் மட்டும் பேசப்படுகின்ற மொழி; language variety, spoken by the people of a region of a country or by a class of its people dialect with slight difference of popular language local variety of a localised language.

மறுவ. நடைமொழி, வட்டார வழக்கு.

*[வட்டாரம் + மொழி]*

வட்டாரவழக்கு *vaṭṭāra-vaḻakku*, பெ.(n.) வட்டாரமொழியில் உள்ள சொல் வழக்கு; usage in a language variety or dialect local usage register.

மறுவ. இடவழக்கு, உலக வழக்கு.

கிளைமொழி

*[வட்டாரம் + வழக்கு]*

பூனையைப் 'பூசு' என்றழைப்பது நெல்லை வட்டார வழக்கு. யானையை 'ஏனை'யென்பது தென்னாட்டுக் குடியானவர் வழக்கு.

வட்டி[1]-த்தல் *vaṭṭi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. வட்டமாதல் (யாழ்.அக.); to be round in shape. 2. சுழலுதல், சுற்றிச் சுற்றி வருதல்; to revolve, to move round and round, to gyrate. *"வட்டித்துப் புயலே நுரைஇய வியலிரு ணடுநாள்" (அகநா.28).* 3. வஞ்சினமுரைத்தல், சூளுரைத்தல்; to swear, to take an oath. *"வட்டித்து விட்டா ளெறிந்தாள் (சிலப்.21:45).* 4. தாள வொற்றறுத்தல் (இசை.); to beat time, to deviate from rhyme of cymbals.

க. பட்டிசு.

வட்டி[2]-த்தல் *vaṭṭi-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. தோள் புடைத்தல், வஞ்சினமுரைத்தலால் தோள் விம்மிப் புடைத்தல்; to slap one's own shoulders, in defiance or challenge. *"செருவறைந்து பாழித்தோள் வட்டித்தார்" (பழமொ.326).* 2. சுழற்றுதல்; to whirl, to swing round. *"மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்து" (புறநா.42).* 3. உருட்டுதல்,

சுற்றுதல், சுழற்றி எறிதல்; rolling or throwing as of dice. *"கழகத்துத் தவிராது வட்டிப்ப" (கலித்.136).* 4. உணவு பரிமாறுதல் (வின்.); to serve, as a meal. 5. கட்டுதல்; to tie. *"அலகில் மாலை யார்ப்ப வட்டித்து" (புறநா. 394).* 6. எழுதுதல் (சிலப்.21, 46, அரும்.); to write. 7. வளைத்தல் (இலக். அக.). to bend. 8. கடிதல்; to reprove, reprimand, censure. *அவன் என்னை வட்டித்தான் (வின்).*

வட்டி[3] *vaṭṭi-*, பெ.(n.) 1. கடகப்பெட்டி; basket made of palm stem fibre. *"வேட்டுவன் மான்றசை சொரிந்த வட்டியும்" (புறநா.33).* 2. கூடை; basket. *"பல்கல வட்டியர்" (அகநா. 391).* 3. படியளவு கொண்ட முகத்தலளவை (தொல்.எழுத்து.170) (பிங்.); a measure of capacity = 1 nāḻi = 1 paḍi. 4. பலகறை; cowry. *"வட்டி மாலை கண் மானு மெயிற்றினர்" (கந்தபு.வீரபத்.38) (வின்.).* 5. வழி, பாதை (அக.நி.); path, way, track. 6. கிண்ணம் (அக. நி.); porringer. 7. சூலுற்ற பெண்களுக்கு உண்டாகும் மயக்கம் (வின்.); giddiness during pregnancy. 8. வட்டில், 7 (தேவா.692, 7) பார்க்க; see *vaṭṭil*.

வட்டி[4] *vaṭṭi-*, பெ.(n.) 1. பணத்தைப் பிறன் பயன்பாட்டிற்காக கொடுத்து உடையவன் பெறும் ஊதியம்; interest on money, loaned for others. *"வட்டியை யறவாங்குநர்" (கடம்ப.பு. இலீலா.147).* 2. வருவாய்ப் பெருக்கம் (நாமதீப.645.); profit, gain

த. வட்டி → **Skt.** வர்த்தி.

*[வட்டு→வட்டி.]*

முதல் தொகையை சுழற்சி முறையில் கொடுத்துப்பெறும்பொழுது, கிடைக்கும் வருவாய் பெருக்கம்.

வட்டித்தல் = வட்டமாதல், சுழலுதல், சுழற்றுதல், சுழற்சிக் கருத்தினின்று தோன்றிய சொல்.

வட்டி[5] *vaṭṭi*, பெ.(n.) கடன் தொகைக்கு குறிப்பிட்ட காலத்திற்கு இவ்வளவு என்கிற விதத்தில் கூடுதலாகப் பெறப்படும் தொகை; fixed interest on a loan for a specified period.

வட்டிக்கண்ணி *vaṭṭi-k-kaṇṇi*, பெ.(n.) சிறு செடி வகை (M.M. 588.); narrow woolly stipulated lotus croton.

*[வள்→வட்டு→வட்டி. வட்டித்தல் = வட்டமாதல். வட்டி + கண்ணி = வட்டமாகச் சுற்றி முளைத்த சிறுசெடி அல்லது மரம்.]*

வட்டிக்கருப்பட்டி *vaṭṭi-k-karuppaṭṭi*, பெ.(n.) வட்டுக்கருப்பட்டி (இ.வ.) பார்க்க; see *vaṭṭu-k-karuppaṭṭi*.

*[வட்டுக்கருப்பட்டி →வட்டிக்கருப்பட்டி. வட்டு → வட்டி + கரும்புல் + அட்டி – கரும்புல்லட்டி → கரும்பட்டி →கருப்பட்டி (கரும்புல் = பனைமரம்).]*

வட்டிக்குவட்டி *vaṭṭikkuvaṭṭi*, பெ.(n.) 1. வட்டித் தொகைக்குத் கொடுக்கும் மேல்வட்டி; interest on interest. 2. வட்டியை முதலோடு சேர்த்துக் கணக்கிட்டுக் கொடுக்கும் வட்டி; compound interest, interest on cummulative deposit.

*[வட்டி + கு + வட்டி.]*

வட்டிகை[1] *vaṭṭigai*, பெ.(n.) 1. வளைத்தெழுதுங் கோல்; painter's brush, drawing pencil. *"வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்" (மணிமே.4, 57).* 2. ஓவியம், படம், சித்திரம் (சூடா.); portrait picture. *"வட்டிகைப் பாவை நோக்கி" (சீவக. 2085) (சூடா.).*

த. வட்டிகை → **Skt.** வர்த்திகா.

*[வட்டி →வட்டிகை.]*

எழுத்தும் உருவெழில் ஓவியமும் பெரும்பாலும் வளைத்தெழுதவும் வரையவுங் காணலாம்.

**வட்டிகை**[2] *vaṭṭigai,* பெ.(n.) 1. சுற்றளவு, நகரத்தின் சுற்றளவு; circumference, as of a town. 2. வட்டம் (யாழ்.அக.); circle. 3. கைம்மணி (யாழ்.அக.); hand bell.

**வட்டிகை**[3] *vaṭṭigai,* பெ.(n.) கூடை (பிங்.); basket.

*[வட்டு→வட்டி →வட்டிகை]*

**வட்டிகை**[4] *vaṭṭigai,* பெ.(n.) 1. சிறப்புப் பட்டம், விருது வகையுளொன்று; special title an item of paraphernalia. *"அலகில் வட்டிகை தழல் விழித்தலால்" (கலிங்.333.).* 2. ஓடவகை; coracle, wicker-boat. *"துள்ளியல் வட்டிகை துடுப்பிற் கடைஇ" (பெருங்.உஞ்சைக் 40, 46).*

*[வட்டி →வட்டிகை]*

**வட்டிகை**[5] *vaṭṭigai,* பெ.(n.) நால்வகைச் சாந்துள் ஒன்று (பிங்.); an unguent, one of *nāl-vagai-c-cāndu.* *"சீதவட்டிகை வாரி வாரி . . . . . . . . இறைப்ப" (இரகு.வாகு.44) (பிங்.).*

**வட்டிகைப்பலகை** *vaṭṭigai-p-palagai,* பெ.(n.) சித்திரமெழுதும் பலகை; plank or tablet for painting. *"எழுதுகோலையும் வட்டிகைப் பலகையிலே போகட்டு" (சீவக.1107).*

*[வட்டிகை + பலகை]*

**வட்டிகைப்பள்ளம்** *vaṭṭigai-p-paḷḷam,* பெ.(n.) நெஞ்சாங்குலையின் வலது புறத்திலமைந்த குழி (வின்.); fossa ovalis, a depression on the left wall of the right article of the heart.

*[வட்டிகை[2] + பள்ளம்]*

**வட்டிகைப்பாவை** *vaṭṭigai-p-pāvai,* பெ.(n.) உருவெழிலோவியம்; drawing, picture or portrait. *"வட்டிகைப் பாவை நோக்கி" (சீவக.2085).*

மறுவ. சித்திரப்பாவை

*[வட்டிகை[1] + பாவை]*

**வட்டிச்சிட்டை** *vaṭṭi-c-ciṭṭai,* பெ.(n.) வட்டிக் கணக்கு எழுதும் புத்தகம்; account book showing interest calculated up-to-date.

*[வட்டி + சில் →சிட்டு→சிட்டை]*

**வட்டிடல்** *vaṭṭiḍal,* பெ.(n.) வட்டிலில் வைத்தல்; to keep in porringer.

**வட்டிநாழி**[1] *vaṭṭi-nāḻi,* பெ.(n.) வட்டித் தொகை பெறுதற்குரியதாகப் பெறப்படும் பழைய வரி; a kind of ancient tax, accruing interest. It is also considered as a tax to be collected in kind of paddy.

*[வட்டி + நாழி]*

இதனை நெல்லாகப் பெறும் வரியென்றும் கொள்வர்.

**வட்டிநாழி**[2] *vaṭṭi-nāḻi,* பெ.(n.) பழையவரி வகை (*S.I.I.ii, 521.*); an ancient tax.

**வட்டிப்பு** *vaṭṭippu,* பெ.(n.) 1. சூள் (நாமதீப. 667); vow, determined effort. 2. வட்டம் (யாழ்.அக.); circle.

வட்டிமேல்வட்டி *vaṭṭi-mēl-vaṭṭi,* பெ.(n.) வட்டிக்குவட்டி (வின்.) பார்க்க; see *vaṭṭikku-vaṭṭi.* 2. காலந்தாழ்த்திய வட்டித் தொகைக்குப் பெறப்படும் சிறுவட்டி; penal interest for delayed payment of interest.

*[வட்டி³ + மேல்வட்டி]*

வட்டியில்லாக்கடன் *vaṭṭi-y-illā-k-kaḍaṉ,* பெ.(n.) 1. வட்டியின்றிக் கொடுக்குங் கடன் தொகை; interest free loan debt not carrying interest. 2. திரும்பச் செய்தலை எதிர்நோக்கிக் கொடுக்கும் நன்கொடை (இ.வ.); present made in expectation of a similar return thereof.

*[வட்டி + இல் + ஆ (எ.ம.இ.நி) + கடன்]*

வட்டிரோகம் *vaṭṭi-rōgam,* பெ.(n.) மகப்பேறு நடந்தேறிய பெண்களின் உடம்பில் உண்டாகும் அரத்தப் போக்கு; a disease marked by flow of blood through vagina during post delivery.

வட்டில்¹ *vaṭṭil,* பெ.(n.) மாழையாற் செய்த படையல் தட்டு; a puja metal plate. *"வட்டில் பஞ்சவன் மாதேவி என்னும் திருநாமத்தால் விளங்கிற்று ஒன்று" (தெ.கல்.தொ.2:2, கல்.51).*

வட்டில்² *vaṭṭil,* பெ.(n.) 1. கிண்ணம், தட்டு, குவளை; porringer, platter, plate, cup. *"பொன்வட்டில் பிடித்து" (திவ். பெருமாள்.4, 3).* 2. வட்டி², 3 (தொல்.எழுத்.170. இளம்.) பார்க்க; see *vaṭṭi.* 3. நாழிகை வட்டில்; clepsydra, a small vessel with holes in the bottom, floating on the water and sinking at the end of a *nāḻigai,* being a contrivance for determining time. 4. அம்புக்கூடு; quiver for arrows. *"வாளிவட்டில் புறம் வைத்து" (கம்பரா. தேரேறு.39).* 5. கூடை (அக.நி.); basket. 6. வழி, பாதை (அக.நி.); path, way. 7. பட்டம், விருதுவகையுளொன்று; a degree, an award, an item of paraphernalia. *"ஏறுமால் யானையே சிவிகையந்தளக மீச்சோப்பி வட்டில்" (தேவா.692, 7).* 8. சொக்கட்டான் அறை (வின்.); draught-board. 9. அப்பளஞ் செய்யுமாறு உருட்டி வைக்கும் மாவுண்டை (இ.வ.); ball of dough, for preparing appalam.

*[வட்டு→வட்டி→வட்டில் = வட்டமான கலம் (மு.தா.2, பக்.85).]*

ஒருகா. வள் + தி → வட்டி + இல் என்றுமாம்.

வட்டிலை *vaṭṭilai,* பெ.(n.) முட்செடிவகை (M.M.293.); caricature plant, a thorny plant.

*[வடு→வட்டு + இலை]*

வட்டிவாசி *vaṭṭi-vāśi,* பெ.(n.) 1. வட்டி வீதம்; rate of interest. 2. வட்டி; interest.

*[வட்டி³ + வாசி. வாசி = வீதம், விழுக்காடு.]*

வட்டிவாணிகம் *vaṭṭi-vāṇigam,* பெ.(n.) பொருளை முதலாக வைத்து, கடனாகக் கொடுத்து, கடன் தொகைக்குரிய வட்டிக் காசினைக் கால அளவு மற்றும் ஒழுங்கு முறைப்படி பெற்று வரும் வாணிகம்; a kind of trade for investment and loaning for earning interest accrued thereto with a time frame. *"புறவரவா வந்து வட்டி வாணியஞ் செய்வாரையும் உள்ளூரிலிருந்து வட்டி வாணியஞ் செய்வாரையும் வட்டியால் நாழி நெல்லாகக் கொண்டும்" (தெ.கல்.தொ. 17.கல்.235).*

*[வட்டி + வாணிகம்]*

வட்டிற்பூ *vaṭṭiṟ-pū,* பெ.(n.) தாமரைப்பூ (சங். அக.); lotus.

*[வட்டில் + பூ]*

வட்டினி *vaṭṭiṉi,* பெ.(n.) போட்டியில் வைக்கும் பொருள்; wager stake in a game. *"வட்டினி கொடுத்து..... வட்டாட்டாடிடம்" (கம்பரா. மிதிலை.17).*

வட்டு[1] *vaṭṭu,* பெ.(n.) 1. சூதாட்டத்திற்குரிய வட்டுக் கருவி; small spheroidal pawn, dice, draught. *"கையாடு வட்டிற் றோன்றும்" (அகநா.108).* 2. திரட்சி (சூடா.); roundness. 3. திரண்டபொருள்; anything round. *"முட்டி வட்டனைய கோல முத்துலாய்" (சீவக. 2950).* 4. நீரெறி கருவி வகை; a water-squirt. *"வண்ண நீர் கரந்த வட்டு விட்டெறிவோரும்" (பரிபா.11, 55).* 5. பாண்டி விளையாட்டுக்குரிய சில் (இ.வ.); a circular piece used in *pāṇḍi* game. 6. விளையாட்டுக் கருவி வகை; a game-piece. *"கல்லாச் சிறாஅர் நெல்லி வட்டாடும்" (நற்.3). "குன்ற மணிவட்டினுருட்டு மாற்றல்" (சீவக.611).* 7. வட்டில், 9 (இ.வ.) பார்க்க; see *vaṭṭil.* 8. குடையிற் கம்பிகள் கூடும் இடம் (இ.வ.); the circular piece to which the ribs of an umbrella are joined. 9. சிறு துணி (தஞ்சை.); small piece of cloth. 10. வட்ட (பனைவெல்ல)க் கருப்பட்டி; a large round shaped cake of jagger.

*[வள் + து →வட்டு = வட்டமான கருப்புக் கட்டி, வட்டமான ஓடு (மு.தா.2, பக்.85)]*

வட்டு[2] *vaṭṭu,* பெ.(n.) 1. கண்ட சருக்கரை (இலக். அக.); candied sugar. 2. கத்தரி வகை; Indian nightshade. *"முள்ளுச் செழுமலரோன்" (திவ். இயற்.சிறிய.ம. தனியன்).*

*[வள் + து – வட்டு]*

வட்டுக்கத்தரி *vaṭṭu-k-kattari,* பெ.(n.) கத்தரி வகை; a variety of round brinjal.

*[வட்டு + கத்தரி]*

வட்டுக்கருப்பட்டி *vaṭṭu-k-karuppaṭṭi,* பெ. (n.) பனாட்டுக் கட்டி; large ball of jaggery.

மறுவ. பனங்கருப்பட்டி

*[வள்→வட்டு + கருப்பட்டி.]*

கரும்புல்+அட்டு→ அட்டி = கரும்புல்லட்டி கரும்பட்டி. கரும்பட்டி→கருப்பட்டி. கரும்புல் = பனை மரம். அட்டு→அட்டி = அடப்பட்டது; காய்ச்சப்பட்டது.

ஒருகா. வட்டக்கருப்புக்கட்டி→ வட்டுக் கருப்பட்டி.

வட்டுக்கருப்புக்கட்டி *vaṭṭu-k-karuppu-k-kaṭṭi,* பெ.(n.) வட்டுக்கருப்பட்டி (வின்.) பார்க்க; see *vaṭṭu-k-karuppaṭṭi.*

*[வட்டு + கருப்புக்கட்டி.]*

வட்டுக்காய்[1] *vaṭṭu-k-kāi,* பெ.(n.) பத்திய வுணவு; a restricted or prescribed diet.

மருத்துவரால் பரிந்துரைக்கப்பட்ட உணவினை ஏற்றலும் விலக்கியன ஒழிதலும் வட்டுக்காயாகலாம்.

வட்டுக்காய்[2] *vaṭṭu-k-kāy,* பெ.(n.) சூதாடு கருவி; dice.

*[வட்டு + காய்[3]]*

வட்டுக்குத்தி *vaṭṭu-k-kutti,* பெ.(n.) பனைக் குருத்தினடி (வின்.); the part just below the top of a fresh palm leaf.

*[வள்→வட்டு + குத்தி]*

வட்டுக்கொல்லி *vaṭṭu-k-kolli,* பெ.(n.) 1. தேவதாரு; a fragrant wood. 2. சம்பங்கி; a fragrant flower, champaca.

வட்டுச்செடி *vaṭṭu-c-cedi,* பெ.(n.) வட்டு பார்க்க; see *vaṭṭu.*

வட்டுடை *vaṭṭuḍai,* பெ.(n.) 1. முழந்தாளளவாக உடுக்கும் உடை; cloth tied round the waist and reaching down the knee. *"அந்நுண் மருங்கு லிகந்த வட்டுடை" (மணிமே.3, 122).* 2. ஆடை (பிங்.); garment. 3. அரைக்காற் சட்டை; drawers.

*[வட்டு→ வட்டுடை = முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடைச்சிறப்பு (விசேடம்) (சீவக.468, நச்.)]*

வட்டுப்பருப்பு *vaṭṭu-p-paruppu,* பெ.(n.) பருப்பு வகையுளொன்று; a kind of dhal - *Lathyrus Sativus.*

மறுவ. கேசரிப் பருப்பு.

*[வட்டு + பருப்பு.]*

இப்பருப்பு நாவலந்தேயத்தில் (இந்தியாவில்) வங்காளம், அசாம், நடுவண் பைதிரம் (மத்தியப்பிரதேசம்) முதலான இடங்களில் பயிராகின்றது. வங்கத்தின் காட்டுப் பகுதிகளிலும், (களி கலந்த வண்டல் மண்ணில்), ஏனைய பகுதிகளிலும் விளைகின்றது. ஆண்டு தோறும் அக்டோபர் மாதத்தில் விதைத்து, ஆறு திங்களில் அறுவடை செய்வர். இது மற்றப் பயிர்களிடையே, களை போன்று விளையும் தன்மைத்து. வட்டுப் பருப்புத் தவசத்தின் வடிவம் ஒழுங்காக இராது; ஆப்பு வடிவில் இருக்கும். பழுப்பு நிறத்தில், கறுப்பு வரிகளுடன் காணப்படும்.

இப் பருப்பினைக் கடலைப் பருப்பு, துவரப் பருப்புடன் சேர்த்து சமைத்து உண்பர்.

வட்டுப்பருப்புநோய் *vaṭṭu-p-paruppu-nōy,* பெ.(n.) வட்டுப்பருப்பு உண்பதாலுண்டாகும் ஒருபக்க ஊதை (பாரிசவளிம) நோய்; lathyrism.

*[வட்டுப்பருப்பு + நோய்]*

வட்டுப்பழம் *vaṭṭu-p-paḻam,* பெ.(n.) ஒருவகைக் கொட்டை; a kind of nut. *இதன் கொட்டையாலான பொடியினால் பற்றூய்மை செய்தால் பற்புழு போம்.*

வட்டுப்போர் *vaṭṭu-p-pōr,* பெ.(n.) சூதாட்டம்; gambling. *"வட்டுப்போர்கள் பொருதல் அரியவாமாறு போல" (பழ.176, உரை).*

*[வட்டு + போர்]*

வட்டுமுள்ளி *vaṭṭu-muḷḷi,* பெ.(n.) கழிமுள்ளி; Indian nightshade.

வட்டுவப்பை *vaṭṭuva-p-pai,* பெ.(n.) வட்டுவம் (வின்.) பார்க்க; see *vaṭṭuvam.*

*[வட்டுவம்+பை]*

வட்டுவம் *vaṭṭuvam,* பெ.(n.) 1. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு, புகையிலை முதலியன வைக்கும் பை (வின்.); pouch in which betel leaves, nuts, chunnam, tobacco, etc. are kept. 2. மருந்துப்பை; medicine pouch. *"வட்டுவத்தைத் தூக்கிக் கொண்டு திரிகிறார்களே" (பிரதாப விலா.121).* 3. பையின் உட்பை (வின்); pocket inside a pouch or purse.

தெ. வட்டுவமு.

*[வள் + து–வட்டு + அகம் – வட்டகம் → (வட்டுகம்)→வட்டுவம்.]*

வட்டுறுப்பு *vaṭṭuṟuppu,* பெ.(n.) திருத்தம், செம்மை (யாழ்.அக.); exactness, precision, correctness.

**வட்டெலி** *vaṭṭeli,* பெ.(n.) மரவெலி (வின்.); a species of rat.

*[வட்டு + எலி]*

**வட்டெழுத்து[1]** *vaṭṭeḻuttu,* பெ.(n.) 1. கி.பி. 12–ஆம் நூற்றாண்டு வரை, தமிழ் மொழியில் வழங்கிவந்த வட்ட வடிவில் அமைந்த வரி வடிவம்; a script slightly circular in form which was used till 12th century A.D. in *tamiḻ* language. 2. பழைய தமிழெழுத்து வகையுளொன்று; (I.P.M.) an ancient Tamil script.

மறுவ. பட்டயவெழுத்து, வட்டம், தெக்கன் மலையாளம், நானா மோனம்.

*[வட்டு + எழுத்து. வளைந்த தமிழெழுத்து வகை (வே.க.4, பக்.102).]*

ஒருகா. வெட்டெழுத்து → வட்டெழுத்து என்றுமாம்.

வள் → வட்டு → வட்டம் + எழுத்து.

வட்டம் = வளைவு. 'வள்' எனும் வளைவுக் கருத்து வேரிலிருந்து கிளைத்த சொல். வட்டெழுத்து என்பது வளைந்த தமிழெழுத்து வகை எனப் பொருள்படும். தெக்கன மலையாளம் பட்டயவெழுத்து.

கி.பி. 3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.13ஆம் நூற்றாண்டு வரை, தமிழகத்தில் தமிழ் மொழியை எழுதுவதற்கு வழங்கிய, வட்ட வடிவமான எழுத்து. கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டில் இவ்வெழுத்து "வட்டம்" என்று குறிக்கப்பெற்றுள்ளது. (எ–டு)

*"திருமலை ஜீர்ணிக்கையால்*
*உத்தாரணம் பண்ணினவிடத்து*
*திருமலையில் கல்வெட்டு வட்டம்*
*ஆகையால், தமிழாகப்படியெடுத்து"*

என்று கல்வெட்டு கூறுகிறது. திருக்குற்றாலநாத சுவாமி கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டிலிருந்து, புரிந்து கொள்ளவியலாத வட்டம் நீங்கலாக ஏனைய கல்வெட்டுகள் அனைத்தும், மீண்டும் சுவரில் பொறிக்கப்பட்டனவென்று அறிகிறோம்.

இவ்வட்டெழுத்துக் கல்வெட்டுகளை அனைவராலும் படிக்கவியலவில்லை. ஒருசிலரே, இக் கல்வெட்டுகளைப் படித்தனர் என்று திருக்குற்றாலத்திலுள்ள குறும்பலா ஈசர் கல்வெட்டு தெளிவுறுத்துகிறது.

வட்டெழுத்தின் தோற்றம் : திரு.டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள்,

1. தமிழகத்தில் குகைகளில் காணப்படும் தமிழி எழுத்துகளிலிருந்தே, வட்டெழுத்து வளர்ச்சி அடைந்தது என்று கூறியுள்ளார்.

2. பெரும்பேராசிரியர் (மகாமகோபாத்யாய) அரிபிரசாத் சாத்திரி என்பார், *"கரோஷ்டி எழுத்துகளிலிருந்தே வட்டெழுத்து தோன்றியது"* என்று குறித்துள்ளார்.

3. முனைவர் பர்னல் அவர்கள் வட்டெழுத்து ஃபினிசியன் எழுத்திலிருந்து தோன்றியது என்றும், அசோகன் பிராம்மியிலிருந்து வேறுபட்டது என்றும் கூறியுள்ளார். இவர் மேலும் கூறுங்கால்,

வடமொழி தமிழகத்தில் பரவுதற்கு முன்னரே தமிழகத்தில் வழக்கிலிருந்து, அசோகன் பிராமியிலிருந்து வளர்ந்தது என்ற கருத்தினை ஏற்றுக் கொள்ள முடியாது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

4. முனைவர் பூலர் கூறுவது : வட்டெழுத்து தமிழின் மாறுபட்ட வடிவம். மராட்டியர், மோடி எழுத்தைப் பயன்படுத்தியது போன்று தமிழக வணிகர் பயன்படுத்திய எழுத்தே, வட்டெழுத்தாகும்.

தமிழி எழுத்தே வட்டெழுத்திற்கு மூலமாகும்.

இக்கருத்து தமிழ் எழுத்தின் வரிவடிவ வளர்ச்சியினின்று வட்டெழுத்தின் வரிவடிவ வளர்ச்சியினை ஒப்பிட்டு நோக்கி அறியப்பட்ட உண்மையாகும்.

அண்மையில் வட ஆற்காடு மாவட்டத்தில் தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை பல நடுகற்களைப் படி எடுத்தது. இவை கி.பி.6ஆம் நூற்றாண்டிலிருந்து 9–ஆம் நூற்றாண்டுக்கு உட்பட்ட காலத்தைச் சார்ந்தவை. இவற்றில் பெரும்பாலானவை வட்டெழுத்தில் உள்ளன. கி.பி.5–ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் காணப்படும் இரு நடுகற்கள் தருமபுரி மாவட்டம் இருளப்பட்டி என்னும் இடத்தில் இருந்து கிடைத்தன. இவையும் வட்டெழுத்தில் உள்ளன. அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் 'பண்டையத் தமிழி எழுத்தில் இருந்துதான் வட்டெழுத்து வளர்ந்தது' என்று தெளிவாகக் குறிக்கின்றன. ஆதலின் வட்டெழுதத்தின் வளர்ச்சியைக் குறித்து இனி ஐயப்பாட்டுக்கே இடமில்லை. தமிழி எழுத்துக்கள் படிப்படியாக வட்டெழுத்தாக மலர்வதை ஒவ்வொரு எழுத்திலும் காட்டலாம்.

இதுகாறும் வட்டெழுத்தில் காலத்தால் முற்பட்டதாகக் கருதப்பட்டது செஞ்சியின் அருகில் திருநாதர்குன்று என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டாகும். இது கி.பி.5–ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்பட்டது. ஆனால் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இதைக் காட்டிலும் தொன்மையானவை. இவற்றில் பலவற்றைக் கவனித்தால் இவை தனி வட்டெழுத்தில் எழுதப்படவில்லை; வட்டெழுத்தும் தமிழும் கலந்தே எழுதப்பட்டுள்ளன; ஆதலின் தொடக்கத்தில் வட்டெழுத்தும் தமிழும் கலந்தே எழுதப்பட்டன என்பது தெளிவாகியது. இதன் அடிப்படையில் காணும் போது அரச்சலூரில் உள்ள கல்வெட்டு இரு எழுத்துகளின் தொடக்கத்தையும் காட்டுகிறது. இரண்டு ஒரே கல்வெட்டில் கலந்தே எழுதப்பட்டுள்ளதையும் இங்குக் காண்கிறோம். ஆதலின் வட்டெழுத்து கி.பி.3–ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் வழக்கில் வந்தது என்று கூறலாம்.

வட்டெழுத்து பாண்டி நாட்டில் சிறப்பாக வழங்கியது என்றும், மலையாளப் பகுதிகளில் அண்மைக்காலம் வரை சிறப்புற்றிருந்தது. ஆதலின் தமிழகத்தின் தென் பகுதியில் தோன்றியிருக்க வேண்டும் என்றும் அங்குத் தான் வழக்கிலிருந்தது என்றும் கருத்து நிலவியது. ஆனால் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகளிலிருந்து தமிழகத்தின் வடபகுதியில் வடாற்காடு, தென்னாற்காடு, செங்கல்பட்டு, தருமபுரி, கோவை முதலிய மாவட்டங்களில் (அதாவது பண்டைய கொங்கு நாடு, கங்கபாடி, பெரும்பாணப்பாடி, தொண்டைமண்டலம் ஆகிய பகுதிகளில்) பரவலாக இவ்வெழுத்து வழக்கிலிருந்தது என்று அறிகிறோம். காலத்தால் தொன்மையான வட்டெழுத்துக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழகத்தில் வடபகுதியில் தான் கிடைத்துள்ளன.

பல்லவர்களின் கல்வெட்டுகள் தமிழ் எழுத்திலும், வட்டெழுத்தும் தமிழ் எழுத்தும் கலந்த எழுத்திலும் உள்ளன என்று கண்டோம். ஆக இருவகை எழுத்துகள் ஒன்றாக வளர்ச்சி பெற்றிருக்கின்றன. இரண்டும் தமிழ் மொழியை எழுதப் பயன்பட்டவைதான்.

கி.பி.6–ஆம் நூற்றாண்டிலிருந்து 8–ஆம் நூற்றாண்டு வரை பல்லவர்களின் பல கல்வெட்டுகள் வட்டெழுத்தில் கிடைத்துள்ளன. பாண்டி நாட்டில் ஏழாம் நூற்றாண்டிலிருந்து வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. 8, 9–ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர்களது செப்பேடுகள் அனைத்தும் வட்டெழுத்தில் உள்ளன. செப்பேடுகள் அரசனால் அளிக்கப்பட்டவை. ஆதலின் வட்டெழுத்து பாண்டியர் அவையில்

சிறப்புற்றிருந்தது என்பது தெளிவு. பல்லவர்களது பகுதிகளில் வட்டெழுத்து வழக்கிலிருந்த போதிலும் செப்பேடுகளில் அது காணப்படவில்லை. சோழ மண்டலத்தில் வட்டெழுத்துச் சாய்கால் பெறவில்லை. சோழர்கள் தமிழையே பயன்படுத்தினர். ஆனால் பாண்டி நாட்டைக் கைப்பற்றிய போது அவர்கள் அப்பகுதிகளில் வட்டெழுத்தையே வழங்கினர். விரைவில் வட்டெழுத்தை விட்டு அங்கும் தமிழிலேயே எழுதத் தலைப்பட்டனர். கொங்கு நாட்டில் கொங்குச் சோழர் என்ற குலத்தோர் வட்டெழுத்தைப் பரவலாகப் பயன்படுத்தினர். தொண்டை மண்டலத்தில் கங்கர், பாணர் பகுதிகளிலும் வட்டெழுத்து 8–ஆம் நூற்றாண்டுக்கு பிறகு வழக்கற்றுப் போயிற்று. கொங்கு நாட்டிலும், பாண்டியர் பகுதிகளிலும் கி.பி.12–ஆம் நூற்றாண்டு வரை வட்டெழுத்து வழங்கி பின்னர் அங்கும் மறைந்தது. கேரளத்தில் அது வளர்ந்து, கிரந்தமும் வட்டெழுத்தும் இணைந்து இன்றைய மலையாள எழுத்தாக மலர்ந்துள்ளது.

**வட்டை[1]** *vaṭṭai,* பெ.(n.) 1. வயல்; crop field. 2. பெருங்காடு; large tract of big forest. 3. திக்கு; direction. *'எட்டு வட்டையிலும் வந்தார்கள்'.*

**வட்டை[2]** *vaṭṭai,* பெ.(n.) வழி (சூடா.); way. *"வல்லுயிர்தாங்கும் வட்டை வந்தனை" (கல்லா.40, 13).*

**வட்டை[3]** *vaṭṭai,* பெ.(n.) 1. சக்கரத்தின் மேல் வளைமரம்; felloe, rim of a wheel. *"உருள்கின்ற மணிவட்டை" (சிலப்.29, உரைப்பாட்டு. மடை).* 2. தேர் (யாழ்.அக.); car, chariot. 3. புலியினுடல்வரி (வின்.); stripes on a tiger's body. 4. பரப்பெல்லை, நிலப்பகுதி; area, region. 5. மரவட்டை; mountain tamana oil tree. 6. மரவட்டை வகை; marote. 7. வட்டப்பக்கா (நாஞ்.) பார்க்க; see *vaṭṭa-p-pakkā.*

**வட்டோடு** *vaṭṭōḍu,* பெ.(n.) தட்டாருடைய தீச்சட்டி; goldsmith's pot for live-coals.

**வட்பத்திரம்** *vaṭ-pattiram,* பெ.(n.) ஆல்; banyan tree-*Ficus bengalensis.*

**வட்புலி** *vaṭ-puli,* பெ.(n.) அரிமா (சங்.அக.); lion.

**வட[1]** *vaḍa,* பெ.அ.(adj.) வடக்கு என்பதன் பெயரடை; adjective of north. *வட மாநிலங்களில் மழையினால் வெள்ளம் ஏற்பட்டுள்ளது.*

[வட →வடக்கு + திசை→ வடதிசை]

**வட[2]** *vaḍa,* பெ.எ.(adj.) வடக்கத்தி பார்க்க; see *vaḍakkatti.*

**வடஒன்பதுபார்** *vaḍa-oṉbadu-pār,* பெ.(n.) வடக்கு ஒன்பது பார்; northern bank in nine fathoms.

**வடக்கத்தி** *vaḍakkatti,* பெ.அ.(adj.) வடக்கிற்குரிய (கொ.வ.) north, northern.

**வடக்கத்திய** *vaḍakkattiya,* பெ.அ.(adj.) வடக்குப் பகுதியைச் சார்ந்தவை; concerning northern region. *'வடக்கத்திய உணவு'.*

**வடக்கத்தியான்[1]** *vaḍakkattiyāṉ,* பெ.(n.) தொப்புள் நீண்டிருக்கும் மாடு; a kind of sturdy bull having elangated umbilical growth. *வடக்கத்தியா (கொ.வ.).*

[வடக்கு + அத்து + ஆன்]

**வடக்கத்தியான்[2]** *vaḍakkattiyāṉ,* பெ.(n.) வடபுலத்தான் (இ.வ.); northerner. *வடக்கத்திக்காரனுக்கு வாய் கொஞ்சம் நீளம் (இ.வ.).*

[வடக்கத்தி→வடக்கத்தியான்]

வடக்கயிறு[1] *vaḍa-k-kayiṟu,* பெ.(n.) மாடுகளைப் பிணைத்து கவலை ஓட்டுபவர் பயன்படுத்தும் கயிறு; a rope used by a person to draw water from a well, by lagging two bulls. *வடகவுறு (கொ.வ.). கமலை என்பது பாண்டிய நாட்டு வழக்கு.*

*[வடம் + கயிறு]*

வடக்கயிறு[2] *vaḍa-k-kayiṟu,* பெ.(n.) 1. தேர் முதலியவற்றை இழுக்கும் பெருங்கயிறு; large, stout rope or cable, as for drawing a temple-car. *"வடக்கயிறு வெண்ணரம்பா" (தாயு.சச்சிதா.2).* 2. ஏர் நாழிக்கயிறு (வின்.); cord of the *ēr-nāḻi.*

வடக்கன் *vaḍakkaṉ,* பெ.(n.) 1. வடக்குப் பக்கத்தான் (இ.வ.); northerner. 2. புகையிலை வகை (இ.வ.); a variety of tobacco.

ம. வடக்கன்.

வடக்காட்சி *vaḍa-k-kāṭci,* பெ.(n.) ஒளி பரப்பப்படும் பல்வேறு அலைவரிசைகளை ஈர்த்து வடத்தின் வழியாக, வீட்டுத் தொலைக்காட்சிகளுக்கு அனுப்பப்படும் செயல்முறை; the operation which received more telecasting channels and distributed to the home television sets through cables; cable television. *வடக்காட்சி அமைப்புப் பழுதுற்றதால், நேற்று ஒளிபரப்பான செம்மொழிக் கருத்தரங்க நிகழ்ச்சியை எல்லையம்மன் குடியிருப்பு மக்களால் கண்ணுறுதற்கியலவில்லை (இ.வ.).*

*[வடம் + காட்சி. 'சி' பண்புப்பெயரீறு. காண் + சி → காட்சி = கண்ணுறல்.]*

வடக்காளிமூலி *vaḍakkāḷi-mūli,* பெ.(n.) கோவை; a climber-*Coccinia indica.*

வடக்கிரு-த்தல் *vaḍakkiru-,* 4 செ.கு.வி. (v.i.) உயிர்துறக்குந் துணிவுடன், வடக்கு நோக்கியிருந்து மேற்கொள்ளும் உண்ணா நோன்பு (கூர்மபு. சூதக.27.); to sit facing north direction, taking a vow of fasting to death. *"புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே" (புறநா.66: 8).*

*[வடக்கு + இரு-]*

போரிற் பெற்ற புறப்புண் நாணியும், புதல்வர் தன்னொடு பொரவருகைநாணியும், உலகப் பற்றைத் துறந்தவிடத்தும், அரசர் ஊருக்கு வடக்கிலிருந்து உயிர் துறத்தல். பகைவரால் சிறைப்பட்டிருந்து உண்ணாதிறத்தலும் வடக்கிருத்தலின்பாற்படும்.

இம் மன்பதை நுகர்ச்சியைத் துறந்து, பசியால் உடலை மெலிவித்து, ஒக முயற்சியினால், உயிரை விடுதற்பொருட்டு, தான் வாழ்ந்த இடத்தை விட்டு வடதிசையிற் சென்று தங்குதலும், மீண்டும் வாராது, கொண்முடிபுடன் தவஞ்செய்யுமுகத்தான் வடக்கு நோக்கிச் செல்லுதலும், பண்டைய மரபாகும்.

வாழ்வில் நாணத்தகு நிலை நேர்ந்ததனால் சிலர் வடக்கிருந்ததாகக் கழக இலக்கியங்களில் பதிவு காணப்படுகின்றது.

(எ-டு) 1. சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற் பெருவளத்தானொடு பொருதுபட்ட, புறப்புண்ணாணி வடக்கிருந்தான் (புறநா.65).

2. அகநானூற்றிலும் இச் செய்தி இடம் பெற்றுள்ளது. "அழிகள மருங்கின் வாள் வடக்கிருந்தென, இன்னா இன்னுரை கேட்ட சான்றோர் அரும்பெறல் உலகத்தவனொடு செலீஇயர் பெரும்பிறிது ஆகியாங்கு" (அகநா.55).

3. கோப்பெருஞ்சோழன், தன் மக்கள் தன்னொடு பொரவந்த செயலுக்கு நாணி வடக்கிருந்தமை குறித்துப் புறநானூற்றுப் பாடல்கள் (214, 216, 218) தெரிவிக்கின்றன.

4. சிறுபஞ்ச மூலத்திலும் (73) வடக்கிருத்தல் பற்றிய கருத்து வந்துள்ளது.

5. கழகக்கால வாழ்வியலுடன் இணைந்த, இந்நிகழ்வினை, வில்லிபாரதம் (இந்திரப்.25); தஞ்சைவாணன் கோவை (374) ஆகிய நூல்களும், எடுத்தியம்புகின்றன.

வடக்கு *vaḍakku,* பெ.(n.) நாற்றிசையு ளொன்று; north, the north point of the compass.

தெ., ம. வடக்கு; க. படுகு.

*[வடம் + கு. ஒருகா. வட + அக்கு = பின்னொட்டு என்றுமாம்.]*

வடக்குத்திருவீதிப்பிள்ளை[1] *vaḍakku-t-tiruvīdi-p-piḷḷai,* பெ.(n.) திருவாய்மொழியின் உரையாசிரியர்; commentator of poetry titled *Tiruvāymoḻi. 15–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர், திருவாய் மொழிக்கு முப்பத்தாறாயிரப்படி உரை செய்தவர்.*

வடக்குத்திருவீதிப்பிள்ளை[2] *vaḍakku-t-tiruvīdi-piḷḷai,* பெ.(n.) நம்பிள்ளை இசைக் கதையைத் திருவாய் மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிரப்படியென்று விரிவா யெழுதின மாலியவாசிரியர்; a *vaisṇava ācāryawho* embodied the lectures of *Nambiḷḷai* on *Tiruvāy-moḻi,* into a commentary, named, *īḍu-muppattārāyira-p-paḍi. "வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை...... நன்குரைத்த தீடு முப்பத்தாறாயிரம் ( உபதேசரத்.44).*

*[வடக்கு + திருவீதிப்பிள்ளை]*

வடக்குநோக்கி *vaḍakku-nōkki,* பெ.(n.) காந்தம் ஏற்றிய திசைகாட்டுமுள் (மனோன். iii, 3, 95); magnetic needls, as always position indicating north.

*[வடக்கு + நோக்கு→நோக்கி]*

ஒருகா. காந்தவூசி

வடக்குப்பார்த்தவீடு *vaḍakku-p-pārtta-vīḍu,* பெ.(n.) தெருவாசல் வடக்குப் பக்கமாக அமைந்த வீடு; north facing house.

வடக்குமலையான் *vaḍakku-malaiyāṉ,* பெ.(n.) வடமலையான்[1] பார்க்க; see *vaḍa-malaiyāṉ.*

*[வடக்கு + மலையான்]*

வடக்குவடக்கா–தல் *vaḍakkuvaḍakkā-,* 6 செ.கு.வி.(v.i.) மயிர் முதலியன சடை பற்றுதல் (இ.வ.); to become matted, as hair.

*[வடம் + கு + வடம் + கு + ஆ–,]*

வடக்குவாசற்செல்வி *vaḍakkuvāsaṟ-celvi,* பெ.(n.) ஊரின் வடபுறத்து எல்லைத் தெய்வமாகிய காளி (இ.வ.); *Kāḷi,* as presiding at the northern gate of or border of a village or town or city.

மறுவ. வடக்குவாய்ச்சி

*[வடக்கு + வாசல் + செல்வி]*

வடக்குவேர் *vaḍakku-vēr,* பெ.(n.) வடக்கே ஓடும் வேர்; root running towards north.

வடக்கேபோ–தல் *vaḍakkē-pō-,* 5 செ.கு.வி. (v.i.) மணமகனும் மணமகளும் காரி அல்லது ஞாயிற்றுக் கிழமையில் ஆலயத்திற்கு சென்றுவருதல்; to go to temple or praying spots and come back therefrom by newly wedded couples.

வடக்கேயோடும்சங்கவேர் *vaḍakkē-y-ōḍum-šaṅga-vēr,* பெ.(n.) சங்கஞ் செடியின் வடக்கு வேர்; the root of the four spined monetia that runs towards north.

வடக்கொட்டை *vaḍakkoṭṭai,* பெ.(n.) புங்கங் கொட்டை; soap nut.

வடகதி *vaḍa-kadi,* பெ.(n.) மஞ்சள்நிறக் குருந்தம் (புட்பராகம்); one of the nine gems-*Topaz*.

வடகபாகவிதி *vaḍaga-pāgavidi,* பெ.(n.) வடகம்; process or method of preparing *vaḍagam.*

வடகம்[1] *vaḍagam,* பெ.(n.) 1. அரிசிமாக் கூழால் செய்யப்படும் வடகவற்றல்; water cakes of flour, seasoned and dried in the sun. 2. வத்தல்; dried paste of flour. 3. தாளிப்பதற்கு பயன்படுத்தும் நறுமணக் கூட்டு; condiment used in cookery.

*[வட்டம்→வடம்→வடகு →வடகம்]*

வடகம்[2] *vaḍagam,* பெ.(n.) அரைத்தமாவுடன் கறிச்சரக்குகளைச் சேர்த்து உலர்த்திய தாளிப்புருண்டை; a mixture of flour, herbs, spices, etc., made into lumps or balls and dried in the sun.

த. வடகம் → **Skt.** வடக.

*[வட்டம்→வடம்→ வடகு →வடகம்.]*

நன்கு அரைத்த பருப்புடன் கறிச்சரக்குகளைச் சேர்த்துலர்த்திய தாளிப்புருண்டை (வ.வ.பகுதி 2, பக்.78).

வடகம்[3] *vaḍagam,* பெ.(n.) 1. தோல்; skin. 2. ஒரு வகை மருந்து; a class of medicine. 3. தாளிப்பதற்கு பயன்படும் வாசனைக் கூட்டு; condiment or mixture of spices etc. used in coockery.

வடகம்[4] *vaḍagam,* பெ.(n.) 1. மேலாடை; upper garment. *"வடகமுந் துகிலுந் தோடும்" (சீவக.462).* 2. துகில்வகை (சிலப்.14, 108, உரை); a superior kind of cloth, a fine fabric. 3. தோல் (பிங்.); skin.

*[வட்டம்→வடம்→வடகம். அத்தவாளம்; உடைச் சிறப்பு (விசேடம்) (சீவ.468, நச்.)]*

வடகம்[5] *vaḍagam,* பெ.(n.) தாளிதம் செய்ய பழங்காலத்தில் பயன்படுத்தப்பட்ட கறி வடகம்; balls of condiments or spices used in preparation of food saucer etc. in ancient time. *கடுகு, சீரகம், வெந்தயம், வெங்காயம், உளுத்தம் பருப்பு, பெருங்காயம், கறிவேப்பிலை ஆகியவற்றின் கலவை உருண்டை.*

வடகயிலாயம் *vaḍa-kayilāyam,* பெ.(n.) சிவனுறையும் பனிமலை; Mt. *Kailāsa,* in the *Himalayās,* abode of *Šiva. "கயிலை மலையானே" (தேவா. 1159, 1).* 2. கோயம்புத்தூர் மாவட்டத்தில், பேரூருக்கு அருகிலுள்ளதொரு சிவன் கோயில்; a *Šivaṉ* temple near *Pērūr* in Coimbatore District.

*[வடக்கு + கயிலாயம்]*

வடகயிலை *vaḍa-kayilai,* பெ.(n.) வட கயிலாயம், 1 பார்க்க; see *vaḍa-kayilāyam. "வடகயிலை யண்டர்நாயக ரிருக்கும்" (பெரியபு. திருநாவுக்.364).*

*[வடக்கு + கயிலாயம்→கயிலை (மரூஉ.).]*

வடகலை[1] *vaḍa-kalai,* பெ.(n.) 1. வடமொழி நூல்; sanskrit literature. *"செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்" (திவ். பெரியதி. 7, 7, 7).* 2. வடமொழி; sanskrit. *"வடகலை*

*தென்கலை வடுகு கன்னடம்" (கம்பரா. பாயி.).* 3. வடகலைநாமம் பார்க்க; see *vadagalai-nāmam*. 4. மாலியப் பிரிவினருள் ஒரு சாரார்; a *vaisṇava* sect, dist fr *teṉ-kalai*.

**வடகலை[2]** *vaḍakalai,* பெ.(n.) ஞாயிற்றின் (சூரிய) கலை; vital air passing through right nostril.

மறுவ. பிங்கலை

*[வலம்→வட(ம்) + கலை.]*

**வடகலைநாமம்** *vaḍakalai-nāmam,* பெ.(n.) வடகலை 'ரு' வடிவத் திருப்பாதமில்லாத மாலியர் தரிக்கும் திருமண் காப்பு; the U-shaped mark indication of the *vaḍakalai-vaisṇavas,* sectarian.

**வடகலையார்** *vaḍakalaiyār,* பெ.(n.) வடகலை[1], 4 பார்க்க; see *vaḍa-kalai.*

*[வடகலை→ வடகலையார்.]*

**வடகாரம்** *vaḍa-kāram,* பெ.(n.) உப்பு வகை (மூ.அ.); a kind of salt.

**வடகாவிசேர்** *vaḍakāvi-šēr,* பெ.(n.) வடகாவி மரத்திற் கட்டப்படும் பாய்; main top sail.

**வடகாவிமரம்** *vaḍakāvi-maram,* பெ.(n.) வடமரத்தின் அடிக்கட்டைக்கு மேலுள்ள பகுதி; main top mast.

**வடகாற்று** *vaḍa-kāṟṟu,* பெ.(n.) வடதிசைக் காற்று (சூடா.); north wind.

மறுவ. வாடைக்காற்று, வாடை.

*[வடக்கு + காற்று.]*

**வடகிரி** *vaḍa-kiri,* பெ.(n.) மேருமலை (யாழ். அக.); Mt. Mēru, as the northern mountain.

மறுவ. வடமலை, வடவரை.

*[வடக்கு + **Skt.** கிரி.]*

**வடகிழக்கு** *vaḍa-kiḻakku,* பெ.(n.) வடக்குங் கிழக்குஞ்சேருங் கோணத்திசை; north east.

*[வடக்கு + கிழக்கு.]*

**வடகிழக்குப்பருவக்காற்று** *vaḍa-kiḻakku-p-paruva-k-kāṟṟu,* பெ.(n.) இந்தியாவில், குறிப்பிட்ட மாதங்களில் மழை பெய்விக்கும் வகையில் வடகிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்று; North-East monsoon in India.

*[வடகிழக்கு + பருவக்காற்று. குறித்த பருவத்தில் ஒருமுகமாயடிக்குங் கடற்காற்று.]*

**வடகிழக்குப்பருவமழை** *vaḍa-kiḻakku-p-paruva-maḻai,* பெ.(n.) தமிழகத்தை வளப்படுத்தும் பருவ மழையுள் ஒன்று; North-East monsoon.

மறுவ. அடைமழை.

*[வடகிழக்கு + பருவமழை.]*

**வடகீலியம்** *vaḍakīliyam,* பெ.(n.) சூரைச் செடி; a kind of medicinal plant.

**வடகீழ்த்திசை** *vaḍa-kīḻ-t-tišai,* பெ.(n.) வடகிழக்கு (யாழ்.அக.) பார்க்க; *vaḍa-kiḻakku.*

**வடகீழ்த்திசைப்பாலன்** *vaḍakīḻ-t-tišai-p-pālaṉ,* பெ.(n.) வடகிழக்குத் திசைக் காவலன் (ஈசானன்) (யாழ். அக.); *īšāṉaṉ,* as the regent of the north-east.

வடகு *vaḍagu*, பெ.(n.) தோல் (இலக்.அக.); skin.

*[வடகம் →வடகு.]*

வடகுணதிசை *vaḍa-kuṇa-tišai*, பெ.(n.) வடகிழக்கு பார்க்க; see *vaḍa-kiḻakku.*

*[வடக்கு+குணதிசை. குணம் + திசை (குணம் = கிழக்கு).]*

வடகோடி *vaḍa-kōḍi*, பெ.(n.) வடமுனை; northern end.

வடகோடு *vaḍa-kōḍu*, பெ.(n.) பிறைமதியின் வடக்கு முனை; the northern horn of the cresent moon. *"வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு தாழ்ந்தென்ன வான் பிறைக்கே" (பட்டினத்.திருப்பா.)*

வடகோடை *vaḍa-kōḍai*, பெ.(n.) வட மேற்குக் காற்று; northwest wind.

வடங்கன் *vaḍaṅgaṉ*, பெ.(n.) வெங்காரம் (சங்.அக.); borax.

வடசரமுனை *vaḍašara-muṉai*, பெ.(n.) புதிய செயல்கள் தொடங்க ஏற்ற காலம்; period conducive for commencing new ventures or works.

வடசவர்சவாய் *vaḍa-šavar-savāy*, பெ.(n.) வடசவர் மரத்திற்கு முன்பக்கத்தில் தாங்கும் வண்ணம் இழுத்து (ஆதாரமாக)க் கட்டப்படுங்கயிறு; main top gallant stay.

இது கப்பல் கட்ட பயன்படும் மரம்.

வடசவர்சேர் *vaḍa-šavar-sēr*, பெ.(n.) வடசவர் மரத்தில் கட்டப்படும் பாய்; main top gallant sail.

வடசவர்பறுவான் *vaḍašavar-paṟuvāṉ*, பெ.(n.) வடசவர் மரத்தின் குறுக்கே போடப்படும் மூங்கிற்கழி; main-top gallant yard.

*[வடசவர் + பறுவான். பறுவான் = பாய்மரந் தாங்குங் குறுக்குக்கழி.]*

வடசவர்பெற்பறோடி *vaḍašavar-peṟ paṟōḍi*, பெ.(n.) வடசவர் மரத்திற்குப் பக்க ஆதாரமாய்க் கட்டப்படுங்கயிறு (M.Navi.); main top gallant backstays.

வடசவர்மரம் *vaḍašavar-maram*, பெ.(n.) வடமரத்திலுள்ள காவிமரத்துக்கு மேலுள்ள பகுதி; main top-gallant mast.

வடசவர்லவுரான் *vaḍašavar-lavurāṉ*, பெ.(n.) வடசவர்சவாய் பார்க்க; see *vaḍašavar-šavāi.*

வடசேடி *vaḍa-šēḍi*, பெ.(n.) வெள்ளி மலையின் வடக்கு பகுதி (தக்கயாகப். 371); the northern range of the mythical silver mountain.

வடசேர் *vaḍa-šēr*, பெ.(n.) கப்பலின் வடமரத்தில் விரிக்கப்படும் பாய்; main sail.

வடசொல் *vaḍa-šol*, பெ.(n.) 1. வட (சமற்கிருத) மொழி; sanskrit language. *"வடசொற்கிளவி" (தொல்.சொல்.401).* 2. வடமொழி பார்க்க; see *vaḍa-moḻi.*

*[வடக்கு + சொல்]*

வடசொல்மரபு *vaḍašol-marabu*, பெ.(n.) திரிந்த சொல்; corrupted word. *திரிந்த வகையாகிய சொல்மரபு (தொல். செய்யுள்.76, இளம்.). வடசொல் என்பது ஆரியச் சொற் போலுஞ் சொல் (தொல். சொல்.391, இளம்.).*

*[வடசொல் + மரபு.]*

**வடதமிழ்** *vaḍa-tamiḻ,* பெ.(n.) தமிழகத்தின் வடபுலத்து மக்களிடையே வழங்கிவந்த தமிழ்; language speaking in northern part of *Tamiḻ-nāḍu,* is called *vaḍa-tamiḻ.*

*[வடக்கு+ தமிழ் →வடதமிழ்]*

**வடதரம்** *vaḍa-taram,* பெ.(n.) 1. வடதாரை பார்க்க; see *vaḍa-tārai.* 2. விடதாரை; dichrosta chyscineria.

**வடதலை** *vaḍa-talai,* பெ.(n.) வடக்குத் தலைப்பு; northern part. *"ஊர் வடதலையில் நத்தமும்".*

மறுவ. வடகோடி

*[வடக்கு+ தலை]*

**வடதளம்** *vaḍa-taḷam,* பெ.(n.) ஆலிலை; banyan leaf. *"வடதள வுதரவாணி" (மனோன்.i, 2,110).*

*[வடம் + தளம் (தளம் = இலை)]*

**வடதிசை** *vaḍa-tišai,* பெ.(n.) நாற்றிசையு ளொன்றான வடக்கு; north, the north point of the compass.

*[வடக்கு+ துகு→(தெகு)→திகை→ திசை.]*

திகைத்தல், மயங்கல். திகைப்பதற்கிடமானது திசை. திசைத்தல் திகைத்தல். "வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு தென்றிசை யாண்ட தென்னவன் வாழி" (சிலப்.11:21, 22).

**வடதிசைத்தலைவன்** *vaḍa-tišai-t-talaivaṉ,* பெ.(n.) எண்டிசைக் காவலருள் (பாலகர்) வட திசைக்குரிய குபேரன் (பிங்.); *kubēra,* as the regent of the North.

*[வடதிசை + தலைவன்.]*

**வடதிசைப்பாலன்** *vaḍa-tišai-p-pālaṉ,* பெ.(n.) வடதிசைத்தலைவன் பார்க்க; *vaḍa-tišai-t-talaivaṉ.*

*[வடதிசை + பாலன்.]*

**வடதிரவிடம்** *vaḍa-diraviḍam,* பெ.(n.) வட நாட்டில் (வட இந்தியாவில்) வழங்கி வரும் திராவிட மொழிகள்; north Dravidian languages.

*[வட + திரவிடம்]*

ஒருகா.வடஇந்தியப் பிராகிருதம், பிராகிருதம்.

வடதிரவிடம் தோன்றிய பாங்கு பற்றிப் பாவாணர் பகருவது : வடதிரவிடம் என்பது பிராகிருதமாகும். பிராகிருதம் என்பது சமற்கிருதம் தோன்றுவதற்கு முன்பு வேதக்காலத்திலேயே, இந்தியா முழுதும் வழங்கி வந்த வட்டார மொழிகளாகும். பிராகிருதம் என்னும் சொல், முந்திச் செய்யப் பெற்றது அல்லது இயற்கையாக வுள்ளது என்று பொருள்படும். பைசாசம், சூரசேனி, மாகதி, மகாராட்டிரி, திராவிடீ எனப் பிராகிருதம் ஐந்தாக வகுக்கப் பெற்றிருந்தது. இவற்றுள் முன் நான்கே பெரும்பாலும் பிராகிருதம் எனப்படும். அவற்றுள்ளும், மராட்டிரம் முதற்காலத்தில் பஞ்ச திராவிடத்துள் ஒன்றாகக் கொள்ளப்பெற்றது. விந்திய மலைக்குத் தெற்கேயுள்ள கூர்ச்சரம், மகாராட்டிரம், ஆந்திரம், கன்னடம், திராவிடம் (தமிழ்) ஆகிய ஐந்நாடுகளும் பஞ்ச திராவிடம் என வழங்கிவந்தன. ஆகவே, முதற்காலப் பிராகிருதம், பைசாசம், சூரசேனி, மாகதி என்னும் மூன்றே. இவற்றையும் மொழியளவி லன்றிச் சொல்லளவில் வேறுபடுத்திக் காட்டுவது வழக்கமன்று. மூவகைப் பிராகிருதச் சொற்களையும் பிராகிருதம் என்று பொதுப்படக் குறிப்பதே வழக்கம்.

வடஇந்தியப் பிராகிருதமும் ஒருகாலத்தில் திரவிட மாயிருந்து திரிந்ததே. அது வேதக்

காலத்திற்கு மிக முந்தியதாகும். ஆகவே, வேத ஆரியர் வருகைக்கு முன், இந்தியப் பழங்குடி மக்கள் மொழிகளெல்லாம், தெற்கில் தமிழும் வடக்கில் திரவிடமுமாக இருவேறு நிலைப்பட்டிருந்தனவென் றறிதல் வேண்டும். திரவிடமும் தென்திரவிடம், நடுத்திரவிடம், வடதிரவிடம் என மூவகைப் பட்டிருந்தது. தென்திரவிடம் வடுகு போன்ற கொடுந்தமிழ்; நடுத்திரவிடம் மராட்டிரமும் குச்சரமும்; வடதிரவிடம் வட இந்தியப் பிராகிருதம்.

காலக்கடப்பினால் மட்டுமன்றி இடச் சேய்மையினாலும் மொழிகள் திரிகின்றன. தமிழ் போன்ற இயன்மொழியில்தான் செம்மை என்னும் வரம்பிட்டு, இலக்கிய வாயிலாகவும் உயர்ந்தோருலக வழக்கு வாயிலாகவும் அதன் திரிபைத் தடுக்க முடியும். தெலுங்கு, மராத்தி, இந்தி, ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய திரிமொழிகளெல்லாம் திரிபினாலேயே தோன்றியுள்ளன. ஆதலால், அவற்றின் திரிபைத் தடுக்குமாறும் விலக்குமாறும் இல்லை. திரிபை நீக்கிவிடின் திரிமொழிகள் அவ்வம் மொழிகளாகா. தெலுங்குத் திரிபை நீக்கிவிடின், அது தமிழாய்விடும். அங்ஙனமே பிரெஞ்சுத் திரிபை நீக்கிவிடின், அது இலத்தீ னாகிவிடும்.

திரிபிற்கு ஓர் எல்லையுமில்லை; ஒரு தனிப்பட்ட வகையுமில்லை. திரிமொழிகள் பல்வேறு வகையில் மேன்மேலுந் திரியத்திரிய, புதுப்புது மொழிகள் தோன்றிக்கொண்டே அல்லது பிரிந்துகொண்டே போகும். இதனால், ஓர் இயன்மொழிக்கும் அதன் திரிமொழிகட்கும் இடைப்பட்ட உறவு அல்லது தொடர்பு, திரிபின் அளவிற்கேற்ப நெருங்கியோ நீங்கியோ இருக்கும். திரிமொழிகட்குள்ளும் ஒரு தாய்மொழிக்கும் அதன் கிளைமொழிகட்கும் இடைப்பட்ட உறவும் இத்தகையதே.

பாலினின்றே தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகியவை உருவாக்கப் பெறுகின்றன. ஆயின், இவற்றிற் கிடைப்பட்ட உறவு திரிபிற்கேற்பத் தோற்றத்திலும் பண்பிலும், வேறுபட்டுள்ளது. உருக்கின நெய் தோற்றத்திற் பாலினின்று முற்றும் வேறுபட்டு விடுகின்றது. நெய் உருவாகும் வகையை அறியாதவன் நெய்க்கும் பாலிற்குமுள்ள தொடர்பை உணர முடியாது. இங்ஙனமே மொழிகட் கிடைப்பட்ட உறவுமென்க. வடதிரவிடம் என்னும் பிராகிருதம், தமிழுக்கு எத்துணை நெருக்கமா யிருந்ததென்பதைப் பின்வருஞ் சொற்களாற்கண்டு கொள்க.

| தமிழ் | பிராகிருதம் | தமிழ் | பிராகிருதம் |
|---|---|---|---|
| அச்சன் | அஜ்ஜ | சாவம் | சாவ |
| அத்தன் | அத்த | சிப்பி–இப்பி | சிப்பீ |
| அத்தை | அத்தா | சுண்ணம் | சுண்ண |
| அப்பன் | அப்ப | சுன்னம் | சுன்ன |
| இதோ | இதோ | செட்டி | சேட்டி |
| எட்டி–செட்டி | சேட்டி | சேணி | சேணி |
| ஏழகம் (ஆடு) | ஏளக | சொக்கம் | சொக்க |
| ஐயவி | சசவ | நட்டம்–(நடம்) | நட்ட |
| ஐயன் | அய்ய | நீல்–நீலம் | நீல் |
| கச்சை | கச்ச | நேயம் | நே அம் |
| கசடு | கசட, சகட | படிக்கம் | படிக்கஹ |
| கட்டை | கட்ட (ṭh) | படிமை | படிமா |
| கந்தன் | கந்த | பரிவட்டணை | பரிவட்டண |
| கப்பரை | கப்பர(kh) | பரிவட்டம் | பரிவட்ட |
| கற்பூரம் | கப்பர | பல்லக்கு | பல்லங்க(nk) |
| கம்பம் | கம்ப(kh.bh) | பளிங்கு | பலிக (ph) |
| கம்மாளன் | கம்மார | புடவி | புடவீ (dh) |
| கலாவம் | கலாவ | பேய் | பேந்து, பேத |
| கவாளம் | கவாட்ட | பையுள் | பய்யாவுல |
| காவு | காவ்(gh) | மண்டபம் | மண்டவ |
| குள்ளம் | குல்ல(kh) | மாது | மாது |
| கொக்கு | கொக்கை | வக்கணம் | வக்கண(gg) |
| சகடி | சாடீ(t) | வக்கு | வக்க |
| சரி (ஒப்பு) | சரி | வட்டம் | வட்ட |
| | | வண்ணம் | வண்ண |

**வடதுருவசக்கரம்** *vaḍa-turuva-cakkaram,* பெ.(n.) நிலத்தின் வட கோடியிலுள்ள குளிர்ச்சியான மண்டலத்தை வரையறுக்கும் சுற்றுரேகை; arctic circle.

*[வடதுருவம் + சக்கரம்]*

**வடதுருவம்** *vaḍa-turuvam,* பெ.(n.) வடக்கிலுள்ள நிலவுலக முனைக்கோடி (துருவம்); the north pole.

*[வடக்கு + துருவம்]*

**வடதெற்கு** *vaḍa-terku,* பெ.(n.) வடக்கும் தெற்கும்; north and south. *"வடதெற்கு விலங்கி"(பதிற்றுப்.31).*

*[வடக்கு + தெற்கு]*

தென்வடலின் எதிர்மறை வடதெற்காம்.

**வடதேசம்** *vaḍa-tēšam,* பெ.(n.) வடநாடு (யாழ். அக.); northern country or region.

மறுவ. வடபுலம்

*[வடக்கு + தேசம்]*

தேசம் = இடம், நாடு, முடிவு, எல்லை, பக்கம். திசை→ தேசு→தேசம். தேசம் என்னும் சொல், முதலில் எல்லையைக் குறித்தது. ஈண்டு வடதேசம் என்பது வடநாட்டையும், வடவெல்லையையும் குறித்து வழங்கிற்று.

**வடதேசவடமன்** *vaḍa-tēša-vaḍamaṉ,* பெ.(n.) வடமருள் ஒரு பிரிவினன்; a sub-sect of *vaḍamaṉ.*

*[வடதேசம் + வடவர்மகன்→வடமன்]*

**வடந்தாங்கி** *vaḍan-tāṅgi,* பெ.(n.) கோயில் தேர்வடத்தைத் தாங்கும் வட்டஞ்சுற்றி; temple car rope round shape supported.

**வடந்திங்கி** *vaḍan-tiṅgi,* பெ.(n.) கப்பற்பாயின் அடிப்புறத்தை மேலிழுக்கும் கருவி (Naut.); main clew-garnet; puchase, consisting of two single blocks and a fall, by which the lower corner of a square mainsail is hauled upto the yard.

**வடந்தை** *vaḍandai,* பெ.(n.) 1. வடக்கிலுள்ளது; that which is in the north. *"வடந்தைத் தண்வளி" (நெடுநல். 173).* 2. வடகாற்று ; northern wind. *"தண்பனி வடந்தை"(ஐங்குறு.263).*

**வடந்தைக்கனல்** *vaḍandai-k-kaṉal,* பெ.(n.) வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī.*

*[வடந்தை + கனல். வடதிசை நெருப்பு]*

வடந்தை = வடக்கிலுள்ளது. குல்→குன்→கன் →கனல் = எரிந்து கொண்டிருக்கும் தீ. வடக்கில் எரிந்து கொண்டிருக்கும் நெருப்பு.

**வடந்தைத்தீ** *vaḍandai-t-tī,* பெ.(n.) வடதிசை நெருப்பு (L.); aurora borealis. *"சுடர்ந்தெரி வடந்தைத் தீயும்" (காஞ்சிப்பு. இருபத்.384).*

*[வடம்→வடந்தை + தீ = வடதிசை நெருப்பு அல்லது வடவைக்கனல் (வ.மொ.வ.2, பக்.78). வடந்தை = வடக்கிலுள்ளது. வடக்கிலுள்ளதாகக் கருதப்படும் கனல்.]*

**வடநாடு** *vaḍa-nāḍu,* பெ.(n.) தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம், கருநாடகம் ஆகிய நான்கு மாநிலங்கள் தவிர்த்த பிற வட மாநிலங்கள்; northern part of India other than four southern states. *'அவனுக்கு வடநாட்டில் வேலை கிடைத்திருக்கிறது'.*

*[வடக்கு + நாடு]*

வடநூல் *vaḍanūl*, பெ.(n.) வடமொழியிலுள்ள நூல்; Sanskrit literature. *“வடநூன்மரபும் புகன்று கொண்டே” (வீரசோ. பாயி.3).*

வடநூலார் *vaḍanūlār*, பெ.(n.) வடமொழியில் வல்லார்; sanskritists, proficient an expert or adept in sanskirit. *“வடநூலார் தாமே பதிகமு முரையுஞ் செய்வார்”(பி.வி.3, உரை).*

*[வடநூல்→வடநூலார்]*

வடநெறி *vaḍa-neṟi*, பெ.(n.) வடநூன்முறை; literary convention or usage in sanskirit. *“மன்னும் வடநெறியே வேண்டினோம்” (திவ்.இயற்.பரிய.ம.40).*

*[வட + நெறி]*

வடப்படி *vaḍa-p-paḍi*, பெ.(n.) 144 பலங் கொண்ட நிறை (G.Tn.D.1, 237); a weight of 144 palam.

வடப்படிரம் *vaḍa-p-paḍiram*, பெ.(n.) சந்தனம்; sandel ptero carpus santalinus (சா.அக.).

வடப்பிலவம் *vaḍa-p-pilavam*, பெ.(n.) அத்தி மரம்; tailed oval leaved fig-*Ficus talboti*.

வடபடி *vaḍa-paḍi*, பெ.(n.) வடப்படி (இ.வ.) பார்க்க; see *vaḍa-p-paḍi*.

வடபத்தி *vaḍa-patti*, பெ.(n.) வடபத்திரம் (சங்.அக.) பார்க்க; see *vaḍa-pattiram*.

வடபத்திரசாயி *vaḍapattirašāyi*, பெ.(n.) ஆலிலையிற் பள்ளி கொண்ட திருமால்; *visṇu*, as in a sleeping posture on a banyan leaf.

வடபத்திரம் *vaḍa-pattiram*, பெ.(n.) மர வகை (யாழ்.அக.) a kind of tree.

வடபத்திரிகா *vaḍa-pattirigā*, பெ.(n.) கிளுவை; balsam tree-*Balsmodendron beryi*.

வடபரதம் *vaḍa-baradam*, பெ.(n.) வட இந்தியா (வின்.); Northern India.

மறுவ. வடநாடு, வடபுலம்.

*[வட + பரதம்]*

வடபல்லி *vaḍa-palli*, பெ.(n.) தலைக் கோலத்திற் புல்லகமென்னும் அணிகலன் (சிலப். 6, 107, உரை); woman's ornament for the forehead, part of *talai-k-kōlam* or decoration.

வடபாங்கு *vaḍa-pāṅgu*, பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள தெருக் கூத்து வகையு ளொன்று; a street play normally performed in South Arcot District.

வடபால்விதேகம் *vaḍa-pāl-vidēgam*, பெ. (n.) ஒன்பது நிலப்பெரும் பிரிவுளொன்று (பிங்.); a continent, one of *nava-kaṇḍam*.

வடபாலிரேவதம் *vaḍa-pāl-irēvadam*, பெ. (n.) ஒன்பது நிலப்பெரும் பிரிவிளொன்று (பிங்.); a continent, one of a *nava-kaṇḍam*.

வடபாற்பரதம் *vaḍa-pāṟ-paradam*, பெ.(n.) தொண்பது (ஒன்பது) கண்டத்துள்ளொன்று (பிங்.); a continent, one of *nava-kaṇḍam*.

*[வடபால் + பரதம்]*

**வடபுலம்** *vaḍa-pulam,* பெ.(n.) 1. வடநாடு; northern country. *"வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த" (சிறுபாண்.48).* 2. வடதிசைக்குரு *(பதிற்றுப்.68, 13);* uttara-guru, the earthly paradise.

*[வட + புலம்]*

**வடபூமி** *vaḍa-būmi,* பெ.(n.) வடநாடு; northern country.

**வடபெருங்கல்** *vaḍa-peruṅkal,* பெ.(n.) வடமலை, 2 பார்க்க; see *vaḍa-malai. "தென்குமரி வடபெருங்கல்" (மதுரைக்.70).*

*[வடக்கு + பெரு–மை+கல்]*

**வடபொழில்** *vaḍa-poḻil,* பெ.(n.) வடக்கிலுள்ள நிலப்பரப்பு; northern region. *"நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடை" (பரிபா.5: 8).*

மறுவ. வடபுலம்

*[வடக்கு + பொழி→பொழில்.]*

**வடம்¹** *vaḍam,* பெ.(n.) 1. பருங் கயிறு; a thick rope. 2. தேரினை யிழுக்கப் பயன்படும் நீண்டகயிறு; cable, large rope, as for drawing a temple-car. *"வடமற்றது" (நன்.219, மயிலை.).* 3. தாம்பு (சூடா.); cord. 4. தென்னை, பனை மரமேறவுதவுங் கயிறு (இ.வ.); a loop of coir rope, used for climbing palm-trees. 5. மணிவடம் (சூடா.); string of jewels. *"வடங்கள் அசையும்படி உடுத்து" (திருமுரு.204, உரை.).* 6. வில்லின் நாண் (பிங்.); bowstring. 7. சரம், சரப்பளி; strands of a garland, chains of a necklace. *"இடை மங்கைகொங்கை வடமலைய" (அஷ்டப். திருவேங்கடத் தந்.39).* 8. ஒழுங்கு; arrangement in order. *"தொடங்கற்காலை வடம்பட விளங்கும்" (ஞானா.14, 41).* 9. வட்டமாகப் பரவும் ஆலமரம் (சூடா.); banyan. *"வடநிழற்கண் ணூடிருந்த குருவே"(தாயு. கருணா.41.).*

*[வட்டம்→வடம்.]*

த. வடம் > **Skt.** vaṭa.

நாவலந் (இந்து) தேயத்தின் வடபாகத்தில் வட(ஆல) மரம் மிகுதியாய் வளர்தலின் அத்திசை வடம் எனப்பட்டது.

*vaṭam* (perhaps prākrit for vrita, surrounded covered' என்று மா.வி.அ. குறித்திருத்தல் காண்க.

வடம் = வட்டமாகப் பரவும் ஆலமரம். உருண்டு திரண்ட கயிறு. கமலை (கம்மாலை) உருண்டு திரண்ட பொற்கொடி அல்லது மணிக்கோவை.

வடம் என்னும் தூய தென்சொல்லை வடமொழிச்சொல்லென்று சென்னைப் பல்கலைக் கழக தமிழ் அகரமுதலி குறித்துள்ளது, முற்றிலும் பொருந்தாது. அடிப்படைப் பொருண்மையாகிய வட்டம் என்ற சொல்லினின்று வடம் தோன்றியதறிக. உருண்டு, திரண்ட வட்டப் பொருள் குறித்த சொற்கள், இலக்கியத்திலும், மக்கள் வழக்கிலும், இன்றும் மிகுதியாக வழக்கூன்றியுள்ளன.

(எ.கா.) வடக்கயிறு, தேர்வடம், வடமாலை, வடமணி வளை, வடமணிக் கோவை.

மேற்குறித்த கரணியங்களைக் கருத்திற் கொண்டே, மொழிஞாயிறு, தமது நூலில் (வ.வ. 248–249) வடம் தென்சொல்லென்று நிறுவியுள்ளார்.

**வடம்²** *vaḍam,* பெ.(n.) 1. மண்டலம் (அக.நி.) (தொல். சொல். 402, உரை); circle, circular form, ring-like shape. 2. பலகை; plank of wood. *பக்கவடம்; கதவு வடம் (நாஞ்.).*

வடம்³ *vaḍam*, பெ.(n.) 1. கோயில் தேரை இழுக்கப் பயன்படுத்தும் பருத்த முறுக்குக் கயிறு; thick twisted rope, to haul a heavy object like a temple car. 2. கழுத்துச் சங்கிலியின் தடித்த சரடு; a string of a gold chain. *இரட்டை வடச் சங்கிலி.*

வடம்பி *vaḍambi*, பெ.(n.) தான்றிக்காய்; a tree-*Terminalia bellerica* (சா.அக.).

வடம்பிடி-த்தல் *vaḍam-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) வடத்தைப் பிடித்துத் தேரிழுத்தல்; to pull or draw a temple-car by seizing it by its cables or thick ropes.

*[வடம் + பிடி-,]*

வடம்புலி *vaḍam-puli*, பெ.(n.) ஆல்; banyan tree-*Ficus bengalensis* (சா.அக.).

வடம்போக்கி *vaḍam-pōkki*, பெ.(n.) வடத்தை இழுத்துச் செல்வதற்குரிய இடம்; a specific location for pulling the thick rope the Temple care.

*[வடம் + போகு→போக்கி.]*

வடம்போக்கித்தெரு *vaḍam-pōkki-t-teru*, பெ.(n.) தேர் திரும்புவதற்கு முன், முதற்கண் வடத்தை இழுத்துச் செல்வதற்கு வாய்ப்பாக அமைந்த தெரு; a street located for conveniently turning the temple car.

*[வடம்போக்கி + தெரு.]*

வடமகீதரம் *vaḍa-magīdaram*, பெ.(n.) மேருமலை; big Mt.Meru. *"சிரவுட மகீதர மெனக் குவித்து"* (பாரத. இராசசூய. 44).

வடமதுரை *vaḍa-madurai*, பெ.(n.) நாவலந் (இந்து)தேயத்தின் வட பாகத்திலுள்ள மதுரை; Madurai, in north India. *"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை"* (திவ். திருப்பா. 5).

*[வட(ம்) + மதுரை.]*

வடமநெடுந்தத்தனார் *vaḍama-neḍun tattaṉār*, பெ.(n.) கழகக்காலப் புலவருள் ஒருவர்; an ancient *Šaṅgam* poet.

வடநெடுந்தத்தனார் என்றும், வடம நெடுந்தத்தனாரெனவும் அழைக்கப்படுகின்ற இவர், புறநானூற்றில் 179-ஆம் பாடலை இயற்றியவராவார். 'நாலைகிழவன் நாகன்' என்பவனைப் பற்றி பாடியுள்ளார்.

*"ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென*
*ஏலாது கவிழ்ந்தஎன் இரவல் மண்டை*
*மலர்ப்போர் யாரென வினவலின் மலைந்தோர்*
*விசிபிணி முரசமொடு மண்பல தந்த*
*திருவீழ் நுண்பூண் பாண்டியன் மறவன்*
*படைவேண் டுவழி வாளு தவியும்*
*வினைவேண் டுவழி அறிவு தவியும்*
*வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து*
*அசைநுகம் படாஅ ஆண்டகை யுள்ளத்துத்*
*தோலா நல்லிசை நாலை கிழவன்*
*பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்*
*திருந்துவேல் நாகற் கூறினர் பலரே"* (புறம். 179).

வடமரம்¹ *vaḍa-maram*, பெ.(n.) கப்பலின் நடுவில் இருக்கும் பாய்மரம்; main mast.

வடமரம்² *vaḍa-maram*, பெ.(n.) ஆலமரம்; banyan tree-*Ficus Bengalensis*.

மறுவ. தொன்மரம்

*[வடம் + மரம்.]*

வடம்போன்ற விழுதுகளை விடுவது, வட (ஆல) மரம். வடமரம் வங்காளத்தில் மிகுதியாய் வளர்கின்றது. அதனாலேயே அது 'Fiscus bengalensis' என்று நிலைத்திணை நூலில் அழைக்கப்படுகிறது.

**வடமருது** *vaḍa-marudu,* பெ.(n.) மருத மரவகை; flowering murdah.

**வடமலை** *vaḍa-malai,* பெ.(n.) 1. மேரு மலை; big Mt. Mēru. *"வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்" (பட்டினப். 187).* 2. இமயமலை; the Himalayas. *"வடமலைப் பெயர்குவை யாயின்" (புறநா.67).* 3. தமிழகத்தின் வடவெல்லையாக அமைந்த திருப்பதி மலை; the Tiruppadi hills, as the northern boundary of the Tamil country. *"தென்னனுயர் பொருப்பும் தெய்வ வட மலையும்" (திவ். இயற். பெரிய. ம, 6).* 4. மந்தர மலை; Mt. Mandara. *"மன்னு வடமலையை மத்தாக" (திவ். இயற். பெரிய. ம.105).* 5. வடமலையப்பபிள்ளையன் (பெருந் தொ.1321) பார்க்க; see *vaḍa-malaiyappa-piḷḷaiyaṉ.*

*[வடக்கு + மலை.]*

**வடமலையப்பப்பிள்ளையன்** *vaḍamalai-y-appa-p-piḷḷaiyaṉ,* பெ.(n.) கி.பி.1706-ஆம் ஆண்டில் நாயக்க மன்னரின் ஆளுமைக்குட்பட்டு திருநெல்வேலிச் சீமையை ஆண்டவரும் மச்ச புராணம் இயற்றியவருமான பெருமகன்; a viceroy of the *Tirunelvēli* regions under the Naiks of Madurai, 1706 A.D.

*[வடமலையப்பன் + பிள்ளையன்]*

**வடமலையப்பபிள்ளை** *vaḍamalai-y-appa-piḷḷai,* பெ.(n.) 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet, lived in 17 C. *இவர் நாநூற்றுக்கோவை, நீடூர்த்தலபுராணம், மச்ச புராணம், நாற்கவி வண்ணம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.*

**வடமலையப்பன்** *vaḍamalai-y-appaṉ,* பெ.(n.) வடமலையப்பபிள்ளையன் (பெருந் தொ. 1327) பார்க்க; see *vaḍamalai-y-appa-p-piḷḷaiyaṉ.*

*[வடமலை + அப்பன்]*

**வடமலையான்** *vaḍa-malaiyāṉ,* பெ.(n.) 1. திருப்பதி மலையுறையுந் திருமால்; *Visṇu* as residing in the Tiruppadi hills. *"வடமலையாய்... அஞ்சேலென்று வந்தருளே" (அஷ்டப். திருவேங்கடத்தந்.6).* 2. நெல் வகையு ளொன்று (வின்.); a kind of paddy.

மறுவ. வேங்கடவன்.

*[வடமலை →வடமலையான்]*

**வடமலைவாண்டன்** *vaḍamalai-vāṇḍaṉ,* பெ.(n.) வடமலையான் (யாழ்.அக.) பார்க்க; see *vaḍamalaiyāṉ.*

*[வடமலை + வாழ்நன் → வாண்டன்]*

**வடமலைவாணன்** *vaḍamalai-vāṇaṉ,* பெ.(n.) வடமலையான் (யாழ்.அக.) பார்க்க; see *vaḍa-malaiyāṉ.*

*[வடமலை + வாழ்→வாழ்நன் → வாணன்]*

**வடமவண்ணக்கன்** *vaḍama-vaṇṇakkaṉ,* பெ.(n.) வடமொழி பேசும் வடநாட்டு மக்கள்; northerners who speak sanskirit. *கழகக்கால புலவர்களுள் ஒருவர். இவர் குறுந்தொகையில் 81 வது பாடலை பாடியவராவார்.*

**வடமவண்ணக்கன்தாமோதரனார்** *vaḍama-vaṇṇakkaṉ-tāmōdaraṉār,* பெ.(n.) சங்கப்புலவருள் ஒருவர்; an ancient *saṅgam* poet. *இலக்கியங்களில் வடமன் தாமோதரனார் என்று காணப்படும்*

*இப்பெயர், வண்ணக்கன் என்பதன் பொருள் நாணய நோட்டஞ் செய்பவன் என்பதாகும். புறநானூற்றின் 172ஆம் பாடலில் 'பிட்டங் கொற்றன்' குறித்து பாடியுள்ளார். இவர் வடதிசையில் இருந்து வந்தவராக கருதப்படுகிறார். 'யாரினும் இனியன் பேரன் பினனே' என்னும் பாடலும் இவர் பாடியது.*

*"யாரினும் இனியன் பேரன் பினனே*
*உள்ளூர்க் குரீஇத் துள்ளுடைச் சேவல்*
*சூல்முதிற் பேடைக் கீனி லிழைஇயர்*
*தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்*
*நாறா வெண்பூக் கொழுதும்*
*யாண ரூரன் பாணன் வாயே" (குறுந். 85).*

வடமவண்ணக்கன்பேரிசாத்தனார் *vaḍama-vaṇṇakkaṉ-pēri-šāttaṉār*, பெ.(n.) கழகக்காலப் புலவர்களுள் ஒருவர்; an ancient sangampoet. *மாந்தரஞ் சேரலிரும்பொறையும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் போர் செய்தபோது, சோழனின் படைத்தலைவன் தேர்வண் மலையனைப் பற்றிப் பாடியவர். இவர், புறநா 198, 125, அகநா:38, 214, 242, 268, 305, குறுந்: 81, 159, 278, 314, 366 நற்.25, 37, 67, 104, 199, 299, 323, 378 முதலானவை இவர் பாடியவையே.*

வடமன் *vaḍamaṉ*, பெ.(n.) வடநாட்டான்; man of the north country.

*[வடவர்மகன் →வடமன்]*

வடமாது *vaḍa-mādu*, பெ.(n.) புளி; tamarind.

வடமாலிகை *vaḍa-māligai*, பெ.(n.) பருத்தி; cotton shrub.

வடமீதி *vaḍa-midi*, பெ.(n.) வடபாதி (நாஞ்.); the northern half.

*[வட + மீதி]*

வடமீன் *vaḍa-miṉ*, பெ.(n.) அருந்ததி யென்னும் விண்மீன்; the star called arundadi. *"வடமீன் புரையுங் கற்பின் மடமொழி" (புறநா. 122).*

*[வட→ வடமீன்]*

வடமுகம்[1] *vaḍa-mugam*, பெ.(n.) வடபால் (யாழ்.அக.); the northern quarter, towards north.

*[வட + முகம்]*

வடமுகம்[2] *vaḍa-mugam*, பெ.(n.) கால்வாயின் முகப்பு (யாழ்ப்.); head of a water-course or channels (சா.அக.).

*[மடைமுகம் → வடமுகம்]*

வடமுகில் *vaḍa-mugil*, பெ.(n.) பாண்டியன் (அக.நி.); Pāṇḍiyaṉ.

வடமுருங்கை *vaḍa-muruṅgai*, பெ.(n.) காட்டு முருங்கை; a plant wild moringa-*Ormocarpum sennoides* (சா.அக.).

வடமூலகன் *vaḍa-mūlagaṉ*, பெ.(n.) சிவபிரான் (சங்.அக.); *Šivaṉ.*

வடமேரு *vaḍa-mēru*, பெ.(n.) மேருமலை; Mt. *Mēru. "கல்லன்றோ..... வடமேரு" (கம்பரா. மாயாசனகப்.81).*

மறுவ. கனகமலை.

*[வடக்கு + மேரு]*

வடமேற்காறு *vaḍamēṟkāṟu*, பெ.(n.) வட மேற்கு நாட்டில் விளையும் சமுத்திராப்பழம், கடுக்காய், சீயக்காய், பொன்னிளங்காய், தேற்றான் வித்து, வலம்புரிக்காய் ஆகிய ஆறு வகைச் சரக்குகள்; six drugs that grow in the north west territory.

**வடமேற்கு** *vaḍa-mēṟku,* பெ.(n.) வடக்கும் மேற்குஞ் சேர்ந்த கோணத்திசை; north-west direction.

*[வடக்கு + மேற்கு]*

**வடமேற்றிசை** *vaḍa-mēṟṟišai,* பெ.(n.) வட மேற்கு பார்க்க; see *vaḍa-mēṟku.*

*[வடமேற்கு + திசை]*

**வடமேற்றிசைக்குறி** *vaḍamēṟṟišai-k-kuṟi,* பெ.(n.) கழுதை (திவா.); ass.

*[வடமேற்றிசை + குறி]*

**வடமேற்றிசைப்பாலன்** *vaḍamēṟṟišai-p-pālaṉ,* பெ.(n.) வளி வழங்கு தேவன் (யாழ். அக.); *vāyu,* as the regent of the north-west.

*[வடமேற்றிசை + பாலன்]*

எண்டிசைப் பாலகருள் வடமேற்கு மூலைக்குரியவனும் காற்றுக்கு அதிகாரியுமான தேவன்.

**வடமொழி** *vaḍa-moḻi,* பெ.(n.) 1. சமற்கிருத மொழி; sanskrit language. *"வடமொழி முதலான பிற கலைக்கடல்களுள்ளும்" (நன். 459, மயிலை.).* 2. வடசொல் (இலக்.); sanskrit word. *"செந்தமிழ்க்கண் வந்த வடமொழியு மாற்றாதே" (யாப்.வி. பக். 461).*

மறுவ. ஆரியம், ஆரியமொழி.

*[வட + மொழி = வடக்கினின்று வந்த அயன்மொழி (தேவ.12, பக்.223)]*

சமற்கிருதத்தைத் தொன்று தொட்டு, வடமொழியென்று வழங்கினர். வேதமொழி அல்லது அதன் செயற்கை வளர்ச்சியான இலக்கிய நடைமொழி (literary dialect), வடக்கினின்று வந்ததால் வடமொழி என்றும், நன்றாகச் செய்யப்பட்டது என்னும் பொருளில் சமற்கிருதம் (ஸம்ஸ்கிருத) என்றும், தேவர் பேசுவது என்னும் பொருளில் தேவமொழி (தேவபாஷா) அல்லது கீர்வாணம் என்றும், ஆரியர் மொழி என்னும் பொருளில் ஆரியம் என்றும், பெயர் பெறும்.

வடமொழி என்னுமிச்சொல் இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் இடம்பெற்றுள்ளன.

(எ.கா) *"வடமொழி வாசகம் செய்தநல் லேடு" (சிலப்.15:58).*

*"வடமொழி யாளரொடு வருவோன் கண்டு" (மணிமே.5:40).*

*"வடமொழியாட்டி மறைமுறை யெய்தி" (மணிமே. 13:73).*

ஆரியமும், வடமொழியும் ஒரு பொருட் சொற்களாகத் தமிழகத்தில் வழக்கூன்றியிருந்தன வென்பதைப் பின்வரும், கம்பராமாயணப் பாடல் வரியால் அறியலாம்.

*"ஆரியம் முதலிய பதினெண் பாடையின்" (கம்பரா. பம்பா.14)*

வடமொழி ஒரு திரிமொழியும், கலவை மொழியுமாகும். வடமொழி பின்வருமாறு ஐவேறு நிலைகளைக் கொண்டதாகும்.

1. தென்திரவிடம் (வடுகு); 2. வடதிரவிடம் (பிராகிருதம்); 3. கீழையாரியம்; 4. வேதமொழி; 5. சமற்கிருதம்.

இயன்மொழியாகிய செந்தமிழின் சீர்மைகளையும், திரிமொழியாகிய வடமொழியின் தன்மைகளையும், பாவாணர் வேறுபடுத்திக் காட்டும் பாங்கு வருமாறு :–

தென்மொழி வடமொழி வேறுபாடு :– செந்தமிழாகிய தமிழும் கொடுந்தமிழ்களாகிய திரவிட மொழிகளும் சேர்ந்தது தென்மொழியாகும்.

| தென்மொழி | வடமொழி |
|---|---|
| (1) தெற்கில் தோன்றியது | வடக்கினின்று வந்தது |
| (2) இயற்கையாய் அல்லது தானாய்த் தோன்றிய இயன்மொழி | திராவிடத்தினின்று திரிந்து தமிழால் வளம்படுத்தப் பெற்ற திரிமொழி. |
| (3) தூய ஓரினத் தாய்மொழி | ஈரினக் கலவை மொழி. |
| (4) உலக வழக்கு மொழி. வாழும் உண்ணிமொழி | வழங்கா நூன்மொழி; அதனால் பிறமொழி -களையே சார்ந்து வாழும் உண்ணிமொழி. |
| (5) இந்திய ஐரோப்பிய மொழிக்கோவையின் முதனிலை | இந்தி ஐரோப்பிய மொழிக்கோவையின் இறுதிநிலை. |
| (6) மென்மொழி | வன்மொழி. |
| (7) இயற்கைப் பால் மொழி | செயற்கைப் பால் மொழி |
| (8) பொருளிலக்கணத்தால் இலக்கண நிறைமொழி. | பொருளிலக்கணமின்மை -யால் இலக்கணக் குறை மொழி. |
| (9) செம்மை வரம்புமொழி. | செம்மை வரம்பிலா மொழி |
| (10) பெரும்பாலும் மூல இலக்கிய மொழி | பெரும்பாலும் மொழி -பெயர்ப்பிலக்கிய மொழி. |
| (11) உண்மை, சமன்மை, அன்பு முதலியவற்றை உணர்த்தும் பண்பாட்டு மொழி | பொய்ம்மை, பிரிவினை, ஒருகுல முன்னேற்றம் முதலியவற்றையுணர்த்தும் பண்பாடற்ற மொழி. |
| (12) மக்கள் மொழி -யென்று ஒப்பும் மொழி | தேவ மொழியென்று ஏமாற்றும் மொழி. |

சமற்கிருதத்தை வடமொழியென்றும் தமிழைத் தென்மொழியென்றும் தொன்று தொட்டு வழங்கி வருவதால், முன்னது வடக்கினின்று வந்த அயன் மொழி என்றும், பின்னது முதலில் இருந்தே தெற்கின்கண் வழங்கி வந்த நாட்டுமொழியென்றும் தெள்ளத் தெளிவாக அறியலாம்.

மொழிக்குச் சொன்னது மொழியாளர்க்கும் ஒக்கும். சிலர் வரலாற்றுண்மைக்கு மாறாக வடமொழியும் முற்காலத்தில் இருந்தே தென்னாட்டில் வழங்கி வந்த தென்பர். அவர்க்கு வடமொழி என்னும் பெயரே வாயடைத்தல் காண்க (சொல்.21).

வண்ணமாலை (வர்ண மாலா): வடமொழி நெடுங்கணக்கு அல்லது குறுங்கணக்கு வர்ணமாலா எனப்பெறும். வண்ணம்-வர்ண. மாலை-மாலா. வர்ண, அக்ஷர என்பன எழுத்தின் பொதுப் பெயர்கள். இவற்றுட் பின்னது அசையையுங் குறிக்கும் (வ.வ.).

ஒலியும் பிறப்பும்: உயிரெழுத்துகளுள்; ருகரம் குற்றியலுகரம் சேர்ந்த ரகரமாகும். ரூகாரம் அதன் நெடில் அல்லது நீட்டம். லுகரம் குற்றிய லுகரம் சேர்ந்த லகரம்.

ஐ, ஔ என்னும் இரு நெடிலும் முதற்காலத்தில் ஆய், ஆவ் என நீண்டொலித்தனவென்றும், ஆரியம் தமிழொடு தொடர்பு கொண்டபின், அவை தமிழிற்போல் அய், அவ் எனக் குறுகி யொலிக் கின்றனவென்றும், கூறுவர்.

தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான பிற எழுத்துகளெல்லாம், தமிழிற்போன்றே ஒலிக்குமென அறிக.

ஏ, ஒ இரண்டும் தமிழில் எகர ஒகரங்களின் நீட்டமான தனி யொலிகளாகச் (Simple vowels) கொள்ளப்பெறும்; சமற்கிருதத்தில் தவறாகப் புணரொலிகளாகக் (Diphthongs) கொள்ளப் பெறுகின்றன. இதற்கு அம்மொழியில் எகர ஒகர மின்மையும் குணசந்தியுமே காரணம்.

அ, ஆ + இ, ஈ-ஏ. எ-டு : மஹா + இந்திர(ன்) = மஹேந்திர(ன்)

அ, ஆ+உ, ஊ= ஒ. எ-டு : குல + உத்துங்கன் = குலோத்துங்கன்.

எழுத்துச் சாரியை :

*'காரமும் கரமும் கானொடு சிவணி*

*நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை'* என்பது தொல் காப்பியம் (134).

உயிரெழுத்தின் உதவியின்றித் தாமாக வொலிக்காத மெய்யெழுத்துகளை ஒலிப்பித்தற் பொருட்டும், தாமாக வொலிக்கும் உயிரெழுத்துகளையும் எளிதாக ஒலிப்பித்தற் பொருட்டும், சில துணையொலிகளைப் பண்டைத் தமிழிலக்கண நூலார் அமைத்துள்ளனர். அவை சாரியை எனப்பெறும்.

முறை: மேலையாரிய மொழிகட்குள் ஒன்றிற்காவது முறை என்னும் எழுத்திலக்கணம் இன்றுமில்லை. வேத ஆரியர் எழுத்தும் இலக்கியமுமின்றி இந்தியாவிற்குட் புகுந்தனர். வேத மொழிக்கும் வேதத்திற்கும் எழுதாக்கிளவி என்று பெயர். வேதத்தைக் குறிக்கும் ச்ருதி (கேள்வி) என்னும் பெயரே ஆரியர்க்கு எழுத்தின்மையை உணர்த்தும்.

உயிர் வரிசையுட் செருகப்பட்ட சிறப்பெழுத்துகளை நோக்கினும், முற்றுகரத்தை யடுத்துக் குற்றுகரமும், ரகரக் குற்றுகரத்தின் பின் லகரக் குற்றுகரமும் வைக்கப் பெற்றிருப்பது, எத்துணைத் தமிழ் முறையொட்டியது!

அளபு : அளவு என்பது எழுத்தொலியின் மாத்திரை அல்லது அளவு. அளபு, மாத்திரை என்பன ஒருபொருட் சொற்கள். இவற்றுள் முன்னது தமிழ்ச் சிறப்புச் சொல்; பின்னது தென்மொழிக்கும் வடமொழிக்கும் பொதுச் சொல்.

மெய்க்கு அரையும் குறிற்கு ஒன்றும் நெடிற்கு இரண்டும் மாத்திரை என்பது இருமொழிக்கும் பொது. வடமொழியீல் ப்லுதம் என்னும் அளபெடையையும் உயிர் அல்லது உயிர்மெய் வகைகளுள் ஒன்றாகச் சேர்த்து, அதற்கு மும்மாத்திரை என வகுத்துள்ளனர்.

அளபெடையையும் ஓர் உயிர் வகையாகக் கொண்டது வடமொழியிலக்கணத்தின் பின்மையையே காட்டும்.

வடிவம் : வடமொழிக்கு முதன்முதல் எழுத்து ஏற்பட்டது தமிழ் நாட்டில் தான். அது தமிழ் ஏட்டெழுத்தினின்று திரிந்த கிரந்த வெழுத்து. அதன் காலம் தோரா கி.மு.10ஆம் நூற்றாண்டு.

ஐந்திரம் என்னும் வடமொழி வியாகரணம் தொல்காப்பியத்திற்கு முந்திய நூலாதலால், வடமொழிக் கிரந்தவெழுத்து அதற்கு ஓரிரு நூற்றாண்டு முற்பட்டதாயிருத்தல் வேண்டும்.

கிரந்தம் என்பது நூல். வடமொழியாளர்க்குச் சொந்த வழக்கு மொழியின்மையால், நூலிற்கு மட்டும் பயன்படுத்தப்பெற்ற எழுத்தைக் கிரந்தாட்சரம் என்றனர்.

இன்றுள்ள தேவநாகரி கி.பி.4ஆம் நூற்றாண்டிற் கருக் கொண்டு 11ஆம் நூற்றாண்டில் முழுநிறைவடைந்தது. அதையும் உற்று நோக்கின், அதற்கும் கிரந்தவெழுத்திற்குமுள்ள நுண்ணிய வடிவொப்புமை புலனாகும்.

புணர்ச்சி:- எழுத்துப் புணர்ச்சி, சொற்புணர்ச்சி எனப் புணர்ச்சி இரு வகைப்படும்.

தமிழிலக்கணத்தை முதன் முதல் ஆய்ந்து கண்டு நூலியற்றியவர் தலைசிறந்த முனிவர் என்பது,

*"வினையின் நீங்கி விளங்கிய வறிவின்*

*முனைவன் கண்டது முதனூ லாகும்"*

*(தொல்.1594)* என்னும் தொல்காப்பிய நூற்பாவால் விளங்கும்.

முனிவர் மெய்ப்பொருளுணர்வு முதிர்ந்தவ ராதலின், உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் உயிர், உயிரில்லது (மெய்), உயிருள்ளது (உயிர்மெய்) என மூவகையாக இருக்கக்கண்டு, அவற்றை யொத்த மூவகை எழுத்தொலிகட்கும் அவற்றின் பெயரையே உவமையாகு பெயராக இட்டு, உயிர்மெய்க்குத் தனி வடிவும் அமைத்தனர்.

இதனால், உயிர்மெய்யொலியை உயிரும் மெய்யுமாக முதன்முதற் பகுத்தவர் தமிழர் என்பதும், உயிர்மெய்யிலேயே எழுத்துப் புணர்ச்சி தோன்றிவிட்டதென்பதும், தெளிவாம்.

சொற்புணர்ச்சி எல்லா மொழிகளிலுமுண்டு. ஆயின், இயன்மொழியிலேயே புணர்ச்சி ஒழுங்காகவும் புணர்சொற்கள் எளிதாய்ப் பகுக்கக் கூடியனவாகவுமிருக்கும். திரிமொழிகளில் தனிச்சொல்லும் கூட்டுச் சொல்லும் பெரும்பாலும் திரிந்திருப்பதாலும், திரிபுப் புணர்ச்சி நிகழவேண்டிய விடத்தும் இயல்புப் புணர்ச்சியே பெரும்பான்மையாய் நிகழ்வதாலும், திரிபுப் புணர்ச்சி நிகழ்ந்தவிடத்தும் அது வரிவடிவிற் காட்டப் பெறாமையாலும், அவற்றிற் புணர்ச்சியிலக்கணம் வகுக்கப் பெரிதும் இடமில்லை.

சமற்கிருதம் திரிமொழியாயினும், தொன்று தொட்டுத் தமிழொடு தொடர்பு கொண்டமையானும், ஐந்திலிரு பகுதிக்குக் குறையாது தமிழாயிருத்தலானும், தமிழைத் தழுவியே இலக்கணஞ் செய்யப் பெற்றமையானும், புணர்ச்சியிலக்கணம் அதற்கமைந்ததென்க. ஆயினும், திரிமொழியாதலின், தமிழ்ப் புணர்ச்சிபோற் பெரும்பாலும் ஒழுங்குபடாது எத்துணையோ விலக்குகளைக் கொண்டுள்ளதென அறிக.

சமற்கிருதம் ஆரியமும் திரவிடமுங் கலந்த மொழியாதலின், பல முதிரொலிகளைக் கொண்டிருப்பதுடன், வல்லின் ஐவகையுள்ளும் பொலி (voice) யொலியுடனும் பொலியா (voiceless) வொலியுடனும் மூச்சொலியை ஒழுங்காகச் சேர்த்து அவற்றிற்குத் தனி வடிவம் அமைந்துள்ளது.

kh, gh; ch, jh, ṭh, dh; th, dh ph, bh என்னும் பத்துக் கூட்டு மெய்கட்கும், வடமொழியில் தனி வடிவம் அமைந்திருத்தல் காண்க. இந்நிலைமை வேறெம் மொழியிலுமில்லை.

வடமொழி வண்ணமாலையின் பின்மை :- வடமொழி வண்ணமாலையின் பின்மை பின்வருஞ் சான்றுகளால் துணியப்பெறும்.

1. வடமொழியின் பின்மை.

2. ஆரிய வேதம் பன்னூற்றாண்டு எழுதாக் கிளவியாயிருந்தமை.

3. தமிழெழுத்தைப் பின்பற்றிய கிரந்தம் தேவநாகரிக்கு முற்பட்டமை.

4. ஒலி வடிவு, மாத்திரை, சாரியை, வரிவடிவு, முறை முதலியவற்றில் இயன்றவரை தமிழைப் பின்பற்றியிருத்தல்.

5. ஒலிப்பெருக்கம்.

6. கூட்டுமெய்கட்குத் தனி வடிவு கொண்டுள்ளமை.

7. மேலையாரியம்போற் குறுங்கணக்கு மட்டுங் கொண்டிராது தமிழ்போல் நெடுங்கணக்குங் கொண்டிருத்தல் (வ.வ).

பால் (லிங்க) : வடமொழியில் திணையில்லை; பால்மட்டும் உண்டு. அது புல்லிங்கம் (ஆண்பால்), திரீலிங்கம் (பெண்பால்), நபும்ஸகலிங்கம் (அலிப்பால்) என மூவகைப்படும்.

வடமொழிப் பால்வகுப்பு இயற்கையான பொருளியல்பு பற்றியதன்று; பெரும்பாலும் செயற்கையான இலக்கண முறை பற்றியது. சில பெயர்களே உண்மையான பால்காட்டும்.

எ-டு: புதகம் (ஆ.பா.), சிலா (பெ.பா.) = கல்.

வேற்றுமை (விபக்தி) : கிரேக்க இலக்கணத்தில், எழுவாய் வேற்றுமை, விளிவேற்றுமை, செய்பொருள் வேற்றுமை, கிழமை வேற்றுமை, கொடை வேற்றுமை என்னும் ஐவேற்றுமைகளும், இலத்தீன் இலக்கணத்தில் எழுவாய் வேற்றுமை, கிழமை வேற்றுமை, கொடை வேற்றுமை, செய்பொருள் வேற்றுமை, விளிவேற்றுமை, நீக்கவேற்றுமை, என்னும் அறுவேற்றுமைகளுமே, கூறப்படுகின்றன.

முதற்கால ஆங்கிலத்தில் எழுவாய், விளி, செய்பொருள், கிழமை, கொடை, கருவி என்னும் அறுவேற்றுமைகள் இருந்ததாகச் சொல்லப் படுகின்றது. ஆயின் மேலையாரிய மொழி ஒன்றிலாவது எண் வேற்றுமை சொல்லப்பட வில்லை.

வடமொழியிலோ தமிழிற்போல் எண்வேற்றுமை காட்டப்பெறுவதுடன், அவற்றின் வரிசையும் பெயரும் பொருளும் முற்றும் தமிழை ஒத்திருக்கின்றன.

| வேற்றுமைப்பெயர் | | வேற்றுமைப்பொருள் | |
|---|---|---|---|
| தமிழ் | வடமொழி | தமிழ் | வடமொழி |
| முதல்வேற்றுமை | ப்ரதமா விபக்தி | வினைமுதல் | கர்த்தா |
| இரண்டாம் " | த்விதீயா " | செய்பொருள் | கர்ம(ம்) |
| மூன்றாம் " | த்ருதீயா " | வினைமுதல், கருவி | கர்த்தா, கரணம் |
| நான்காம் " | சதுர்த்தீ " | கொடை | ஸம்பிரதானம் |
| ஐந்தாம் " | பஞ்சமீ " | நீக்கம் | உபாதானம் |
| ஆறாம் " | ஷஷ்டீ " | கிழமை | ஸம்பந்த(ம்) |
| ஏழாம் " | ஸப்தமி " | இடம் | அதிகரணம் |
| எட்டாம் " | ஸம்போதன ப்ரதமா " | விளி | ஸம்போதனம் |

இங்ஙனம் முற்றும் ஒத்திருப்பதால், வடமொழி வண்ணமாலை போன்றே வடமொழி வேற்றுமையமைப்பும் தமிழைத் தழுவியதென்பது வெள்ளிடைமலை.

தமிழில் எண்வேற்றுமையும் எண்வரிசையால் மட்டுமின்றி, எழுவாய், செய்பொருள், கருவி, கொடை, நீக்கம், கிழமை, இடம், விளி எனப் பொருள்பற்றியும்; பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என உருபுபற்றியும்; பெயர்பெறும்.

வடமொழியில் எட்டாம் வேற்றுமை எண்ணாற் பெயர்பெறாதிருப்பதும் கவனிக்கத்தக்கதாம்.

தமிழ் இயன்மொழியாதலால் அதில் முதல் வேற்றுமைக்கு உருபில்லை; சமற்கிருதம் திரிமொழியாதலின், அதற்கு அஃதுண்டு.

வடமொழி திரிமொழியாதலின், அதன் வினைகட்கு வேர்ச்சொற்கள் அம்மொழியிலில்லை. அவை பெரும்பாலும் இயன் மொழியாகிய தமிழில்தான் உள்ளன. ஆயினும், வடமொழி தேவ மொழியென்னும் ஏமாற்றிற்கேற்ப வடமொழி வினைச் சொற்களின் முதனிலைகளையும் (Themes) அடிகளையும் (Stems) வேர்களாகக் (Roots) காட்டியுள்ளனர். மேனாட்டாரும், தமிழை வரலாற்று முறைப்படி ஆராயாமையால், வடமொழியை இயன்மொழியென்றும், ஆரியத் தாய்மொழியென்றும் மயங்கி வடவர் காட்டியுள்ள போலி வேர்ச்சொற்களை உண்மையான வேர்ச்சொற்ளென்றே நம்பியிருக்கின்றனர்.

வடவர் காட்டியுள்ள தாதுக்கள் (வேர்ச் சொற்கள்) ஏறத்தாழ 1750. அவை எங்ஙனம் தவறானவை என்பது, இங்கு ஐந்தாதுக்களால் எடுத்துக் காட்டப்பெறும்.

கீர்த்

சீர் = சிறப்பு, புகழ். சீர் – சீர்த்தி = பெரும்புகழ்.

*சீர்த்தி மிகுபுகழ் (தொல்.796).*

சீர்த்தி–கீர்த்தி. ச–க. ஒ.நோ. : செய் – (கெய்)–கை, செம்பு–கெம்பு, சேரலம்–கேரளம், சேது–கேது.

சீர் என்னும் முதனிலையும், 'தி' என்னும் ஈறும், 'த்' ஆகிய புணர்ச்சித் தோன்றலும், கொண்ட சீர்த்தி என்னும் தொழிற் பெயரின் (அல்லது தொழிலாகு பெயரின்) முற்பகுதித் திரிபாகிய கீர்த் என்பதை முதனிலையாகக் கொள்வது எத்துணையியற்கைக்கு மாறானது! வடமொழி நூன்மொழியேயாதலால், அதில் எச்சொல் வடிவையும் எப்பொருளிலும் ஆளலாம்.

கீர்த்தி என்பதனோடு நேர்த்தி என்பதனை ஒப்பு நோக்குக.

இனி, இதற்கு வேராக, க்ரு[2] என்பதனைப் பாணினியார் (3:3:97) குறித்துள்ளார். அது கரை என்னும் தென்சொல்லின் திரிபே.

கரைதல் = 1. அழைத்தல். *"கலங்கரை விளக்கம்" (சிலப்.).*

2. சொல்லுதல், கற்பித்தல்

*அறங்கரை நாவின் நான்மறை முற்றி (தொல்.சி.பா.).*

3. எடுத்துச் சொல்லுதல், புகழ்தல்.

அழைத்தலைக் குறிக்கும் அகவல் என்னும் சொற்போல், கரைதல் என்னும் சொல்லும் பாடுதலை உணர்த்தும். ஆதலால், வடமொழியிற் பாணனை அல்லது பாவலனைக் காரு (இ.வே.) என்பர்.

சுட்டும் வினாவும் : சுட்டும் வினாவும், ஆரியமும் சேமியமுமான பிறமொழிகளிலெல்லாம் சொற்களாகவே யிருக்கின்றன. தமிழிலோ அவை சொற்களாக மட்டுமின்றிச் சொற்கட்கு மூலமான எழுத்துகளாகவும் இருக்கின்றன. அவ்வெழுத்துகள் உண்மையில் ஒரெழுத்துச் சொற்களே.

*நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி.*
*குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே.*
*ஆவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே.*
*அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு.*
*ஆஏ ஓஅம் மூன்றும் வினா.*
*எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி....*

என்று தொல்காப்பியம் (43, 44, 301, 31, 32, 552) கூறுவதாலும், சுட்டும் வினாவும் இன்றும் தனி நெடிலாகத் திரவிடத்திலும் வடதிரவிடக் கான் முளையாகிய இந்தியிலும் வழங்குவதாலும், குறில் நெடில் பலுக்க வெளிதா யிருப்பதனாலும், ஆண்டு ஈண்டு யாண்டு (ஏண்டு) என்னுஞ் சொற்கட்கு முதல் குறுகிய வடிவின்மையாலும், சுட்டு வினாவெழுத்துகள் முதற்காலத்தில் நீண்டேயிருந்து பின்னர்க் குறுகியமை அறியப்படும்.

சுட்டடிகளும் வினாவடிகளும் தனியெழுத்துகளா யிருப்பதனால், அவற்றை இடைச்சொல்லென்று கொண்டனர் முன்னோர். அவை தனியெழுத்துகளாயினும், பொருளுணர்த்துவதாற் சொல்லாயும் பலவெழுத்துச் சொற்போன்றே பொருள் நிரம்பியும், இருப்பதை அறிக.

தமிழில் உறவியல் (Relative) வினாவும் நேர்வினாவும் ஒரேவகையடி கொண்டிருக்கும். வடமொழியில் உறவியல்வினா யகரவடி கொண்டும் நேர்வினா ககர வடிகொண்டும் உள்ளன. எ–டு:–

| உறவியல் வினாச்சொல் | நேர்வினாச்சொல் |
|---|---|
| யத்(d) | கிம் = யார், எது |
| யத்ர | குத்ர = எங்கு |

வடமொழி : தொடரியல்

(1) தொகைச் சொல் (ஸமாஸ)

வேதமொழியின் மூலமாகிய மேலையாரிய முறைப்படி சமற்கிருதச் சொற்றொடரமைப்பு ஒரு மருங்கு வேறுபட்டிருப்பினும், வேத மொழியின் வடதிரவிட அல்லது பிராகிருதக் கலப்பினாலும், சமற்கிருதத்தின் தமிழ்த் தொடர்பினாலும், அது ஒரு மருங்கு தமிழையும் தழுவியுள்ளது.

அடுக்குத் தொடர் (வீப்ஸா)

தமிழிற் போன்றே வடமொழியிலும் சொற்கள் அடுக்கி வரலாம்.

எ–டு : வ்ருக்ஷம் வ்ருக்ஷம் ஸிஞ்சதி = மரம் மரமாய்த் தண்ணீர் ஊற்றுகிறான்.

2. சொற்றொடர் (வாக்ய)

வடமொழிச் சொற்றொடர்ச் சொல்வரிசை பெரும்பாலும் தமிழ் முறையை ஒத்ததே.

எழுவாய் முன்னும் செயப்படுபொருள் இடையும் பயனிலை பின்னும் வருவதே இயல்பான முறை.

வடமொழியிலக்கணம் எழுத்து, சொல், சொற்றொடர் என்னும் மூன்றொடு முடிகிறது. செய்யுளிலக்கணம் சந்த என்றும், அணியிலக்கணம் அலங்கார சாத்திரம் என்றும் வேறு நூல்கள் போல் வெவ்வேறாகக் கூறப்படும்.

தமிழில் வடமொழியில்லாப் பொருளிலக்கண முண்மையாலும், பண்டை யிலக்கியமெல்லாம் செய்யுள் வடிவி லிருந்தமையாலும், சொல்லை யடுத்த மொழியுறுப்பு பொருளென்று கொண்டு, அதனுள்ளே செய்யுளையும் உடம்பின் இயற்கையழகு போற் செய்யுளிலமைந்திருக்கும் அணியையும் அடக்கி விட்டனர், மெய்ப் பொருளியல் முற்றத் துறைபோய மேதகு பண்டைத் தமிழ் நூலோர்.

நன்னூல், சின்னூல் முதலிய தென்னூலும் எழுத்துஞ் சொல்லும் சொற்றொடருமே கூறுகின்றனவேயெனின், அவை வடநூன் முறை தழுவிய பின்னூலென்றும், தொல்காப்பியம்போல் நிறைவான பிண்ட நூலாகாது குறைவான துண்ட நூலே யென்றும், கூறி விடுக்க.

வடமொழி என்பது ஒருகாலும் பேசப்படாத நூன்மொழியே யாதலின், அதன் வரலாறென்பது உண்மையில் இலக்கிய வரலாறே (வ.வ.).

வடமொழிக்கும் தென்மொழிக்கும் வேறுபாடு

1. எழுத்துகளின் தொகை (உண்மை யானபடி) வடமொழியில் 42: தென்மொழியில் 30.

2. வடமொழியொலிகள் வலியன; தென்மொழி யொலிகள் மெலியன.

3. மூச்சொலிகள் வடமொழியில் மட்டுமுண்டு.

4. கூட்டெழுத்துகள் தென்மொழியில் இல்லை.

5. வடமொழியில் உயிர்கள் (தீர்க்கம், குணம், விருத்தியென மூவகையில்) நெடிலாக மாறிப் புணரும்; தென்மொழியில் உடன்படுமெய் பெற்றுப் புணரும்.

6. தமிழில் மொழி முதல் இடை கடை வராத எழுத்துகளெல்லாம், வடமொழியில் மொழி முதலிடை கடை வரும்.

7. இடுகுறிப்பெயர் தமிழுக்கில்லை.

8. முன்னிலையை உளப்படுத்தும் தன்மைப் பன்மைப் பெயர் வடமொழியிலில்லை.

9. உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு வடமொழியில் இல்லை.

10. ஆண்பால், பெண்பால், அலிப்பால் என வடமொழியில் பால் மூன்று; அவை ஈறு பற்றியன; தமிழில் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனப் பால் ஐந்து; அவை பொருளும் எண்ணும் பற்றியன.

11. இருமை என்னும் எண் தமிழில் இல்லை.

12. முதல் வேற்றுமைக்கு உருபு வடமொழியி லுண்டு; தென்மொழியில் இல்லை.

13. குறிப்புவினை வடமொழியில் இல்லை.

14. வடமொழியிற் பெயரெச்சமும் பெயர் போல வேற்றுமையேற்கும்.

15. வடமொழியில் வரும் முன்னொட்டுச் (Prefix) சொற்கள் தமிழில் பின்னொட்டுச் (Suffix) சொற்களாயிருக்கும்.

16. தழுவுஞ் சொல்லும் நிலைமொழியும் வடமொழியில் வருமொழியா யிருப்பதுண்டு. தமிழில் வழுவமைதியாயும் அருகியுமே அங்ஙனம் வரும்.

17. வினைத்தொகை வடமொழியில் இல்லை.

18. தமிழில் மிகச் சிறப்பாகக் கருதப்படும் பொருளிலக்கணம் வடமொழியில் இல்லை.

19. வெண்பா, ஆசிரியப்பா முதலிய பாக்களும் இவற்றின் வேறுபாடுகளும் இனங்களும் வடமொழியில் இல்லை.

20. இயல் இசை நாடகமெனத் தமிழை மூன்றாகப் பகுப்பது போல வடமொழியைப் பகுப்பதில்லை.

**வடமொழிநூல்** *vaḍa-mōḻi-nūl,* பெ.(n.) சிந்தாமணி முதல் வைத்திய மாலை ஈறாகவுள்ள 32 நூல்கள்; thirty two scientific sanskrit books from *Cindāmaṇi* to *Vaittiyamālai.*

*[வடமொழி + நூல்]*

**வடமொழியாட்டி** *vaḍa-moḻi-y-āṭṭi,* பெ.(n.) பார்ப்பனத்தி; Brahmin woman. *"வடமொழி யாட்டி மறைமுறை யெய்தி" (மணிமே.13, 73).*

*[வடமொழி + ஆட்டி. ஆட்டி = பெண்பாலீறு.]*

ஈங்கு வடமொழியாட்டி, என்னுஞ்சொல் ஆரியப் பார்ப்பனியைக் குறித்து மணிமேகலையில் வழங்குஞ் சொல்லாகும்.

**வடமொழியாளன்** *vaḍa-moḻi-y-āḷaṉ,* பெ.(n.) பார்ப்பான்; brahmin. *"வடமொழி யாளரோடு வருவோன் கண்டு" (மணிமே. 5, 40).*

*[வடமொழி + ஆள்→ஆளன். ஆளன் = ஓர் ஆண்பாற் பெயரீறு.]*

ஆரியப்பார்ப்பான், கி.பி. 3ஆம் நூற்றாண்டி லெழுந்த மணிமேகலையில் வடமொழியாளன், என்று குறிக்கப்பட்டுள்ளான் (வ.வ.2-21).

**வடமோடி** *vaḍa-mōḍi,* பெ.(n.) இலங்கையி லுள்ள தெருக்கூத்து வகையு ளொன்று; a street play normally performed in Srilanka.

*[வட→வடமோடி]*

**வடமோதங்கிழார்** *vaḍa-mōdaṅ-kiḻār,* பெ. (n.) கழகப்புலவர்; an ancient *saṅgam* poet.

புறநானூற்றில் 260-ஆம் பாடலை இயற்றியவர். நிரை மீட்டுவந்த வீர னொருவன் தன் உயிர்விட்ட மாண்பினை சிறப்பித்துக் கூறியுள்ளமையால் இவர்தம் புலமை நன்கு விளங்கும். அகநானூற்றில் 317-ஆம் பாடல் இவர் இயற்றிய பாடலாகும். கொங்குமலரில் குரவ மலருதிர்வது பொன் தராசுத் தட்டில் வெள்ளித் துண்டு சொரிவது போலுமென்று இவர் வண்ணித்துள்ளமை இவர்தம் புலமைக்கு சான்றாம்.

*"மாக விசும்பின் மழைதொழில் உலந்தெனப்*
*பாசு யன்ன பகலிருள் பரப்பிப்*
*புகைநிற வுருவின் அற்சிரம் நீங்கக்*
*குவிமுகை முருக்கின் கூர்நுனை வையெயிற்று*
*நகைமுக மகளிர் ஊட்டுகிர் கடுக்கும்*
*முதிராப் பல்லிதழ் உதரப் பாய்ந்தடன்*
*மலருண் வேட்கையின் சிதர்சிதர்ந் துகுப்பப்*
*பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி*
*நுண்கோல் அறைகுறைந் துதிர்வன போல*
*அரவ வண்டினம் ஊதுதொறுங் குரவத்து*
*ஓங்குசினை நறுவீ கோங்கல ருறைப்பத்*
*துவைத்தெழு தும்பித் தவிரிசை விளரி*
*புதைத்துவிடு நரம்நன் இம்மென இமிரும்*
*ஆனே முற்ற காமர் வேனில்*
*வெயிலவிர் புரையும் வீததை மராஅத்துக்*
*குயிலிடு பூசல் எம்மொடு கேட்ப*
*வருவேம் என்ற பருவம் ஆண்டை*
*இல்லை கொல்லென மெல்ல நோக்கி*
*நினைந்தன மிருந்தன மாக நயந்தாங்கு*
*உள்ளிய மருங்கின் உள்ளம் போல*
*வந்துநின் றனரே காதலர் நந்துறந்து*
*என்னுழி யதுகொல் தானே பன்னாள்*
*அன்னையும் அறிவுற வணங்கி*
*நன்னுதற் பாஅய பசலை நோயே" (அகநா. 317).*

**வடயம்** *vaḍayam,* பெ.(n.) நெல்லிக் கனி முதலியவற்றை அரைத்துத் தட்டிய வடை; cake, as of nelli fruits.

*[வடை→வடையம்→வடயம்]*

**வடரம்** *vaḍaram,* பெ.(n.) 1. தலைச்சீலை; head-dress, turban. 2. பாய்; mat.

**வடராசி** *vaḍarāši*, பெ.(n.) மரவகை; variegated mountain ebony.

**வடல்** *vaḍal*, பெ.(n.) ஆலமரம் (மலை.); banyan tree.

*[வடம்→வடல்]*

**வடலி** *vaḍali*, பெ.(n.) இதரயிட்டம் பனை ஐந்தனுளொன்றான இளம்பனை (G.Tn. D.I.307); young or immature palmyra tree, one of five *idarayiṭṭam-paṇai.*

*[மடல் → வடல்→ வடலி.]*

**வடலுறுசிற்றம்பலம்** *vaḍaluṟu-širrambalam*, பெ.(n.) வடலூர் பார்க்க; see *vaḍalūr.* *"வடலுறு சிற்றம்பலத்தே வாழ்வாய் என் கண்ணுள் மணியே" (அருட்பா.3802).*

*[வடலுறு + சிற்றம்பலம்.]*

செ→செத்து→சித்து = கருத்து அறிவு, கருதியதை அடையும் திறம்.

(ஒ.நோ.) செந்துரம்→சிந்துரம் சித்து + அம்பலம்–சித்தம்பலம்→சிற்றம்பலம்.

அம்புதல் = குவிதல், கூடுதல்.

அம்பு→அம்பல்→அம்பலம் = கூடும் அவை, அவைக்களம்.

அருட்பேரொளி ஆண்டவரின் திருவருட் செல்வர்கள் கூடுமிடம். இறையருள் ஒருமுகப்பட்டு, அனைவருக்கும் அருளை வாரிவழங்குமிடமே, வடலுறு சிற்றம்பலம், எனலாம்.

**வடலூர்** *vaḍalūr*, பெ.(n.) கி.பி.1865இல், வள்ளலாரால் பாடல் பெற்றதும், அனைத்து நெறிக்கழகம் (சமரச சுத்தசன்மார்க்க சத்திய ஞான சங்கம்) அமைக்கப்பெற்றதுமான, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இடம்; *vaḍalūr*, a fabulous historical place, canonized by *vaḷḷalār*, the found of *aniattu-neṟi-k-kaḻagam (Šamarasa-Šutta-Šaṉ-mārga-Šattiyañāṉa Šaṅgam)* located in *Kaḍalūr*, dt. *"வருவார் அழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே" (அருட்பா.4482) வடலூரில் தருமச் சாலையை 23.05.1867–இல் வள்ளலார் நிறுவினார் (இ.வ.).*

மறுவ. வடல்வாய், வடலுறு சிற்றம்பலம்.

*[வடல் + ஊர்.]*

வடலூர், அருட்பேரொளி ஆண்டவரின் திருவருளின்பத்தை, மன்பதைக்கு எஞ்ஞான்றும் வாரி வழங்கிக் கொண்டிருக்கும், வள்ளலார்தம் அருட்பாக்களில் பார்வதிபுரம், வடல், வடல்வாய், சித்திபுரம், ஞானசித்திபுரம், உத்தரஞானசித்திபுரம், உத்தரஞான சிதம்பரம் முதலான பெயர்களில் அழைக்கப்படும் பாடல் எண்கள் வருமாறு:– 3790, 3802, 4239, 4242, 4482, 3690, 3585, 3796, 4636, 3981, 4046–4056.

அற்றார் அழிபசி தீர்த்தலும்– அறவுணவுச் சாலையும் (சத்திய தருமச்சாலை) : –

அற்றார் அழிபசி தீர்த்தலே குமுகாயத்தில் உயர் பேரறமென்பது, வள்ளலார்தம் பேரருட்கொள்கை. வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடிய வள்ளலார், பசியினால் இளைத்த ஏழைகளைக் கண்டுளம் பதைத்து அவர்தம் முக வாட்டத்தைப் போக்கிடவும், இறையருள் நாட்டத்தை ஊட்டுதற்பொருட்டும், 1867 விடை (வைகாசி)த் திங்கள் 11–ஆம் நாள் அறவுணவுச்சாலையை (சத்திய தருமச்சாலை) நிறுவினார். வடலூரின்கண் அமைந்துள்ள அறவுணவுச் சாலையில், 23.05.1867–இல் மூட்டிய தீ, ஏதுமற்ற ஏதிலிகளின் வயிற்றுப் பசியை, இன்றுவரை, போக்கிய வண்ணம் உள்ளது.

மனிதர்களின் சிற்றம்பலமாம், நெற்றிப் பொட்டில் (புருவமய்யத்தில்), அருளொளிப் பிழம்பாக இறைவன் இலங்குவதால், எவரும் பசியோ டிருத்தலாகாது என்னும் பொதுநோக்கில், வடலூரில் வள்ளலாரால் அறவுணவுச் சாலை நிறுவப்பட்டது. இவ்வறவுணவுச்சாலையிலேயே வள்ளலார் 1867–1870 வரை வீற்றிருந்தார். மெய்யறிவுப் பேரவை (சத்தியஞானசபை) 25.01.1872–இல் எல்லாம் வல்ல இறைவனைப் பேரொளிப் பிழம்பாக கண்ட வள்ளலார், ஒளி (அருட்பெருஞ்சோதி) வழிபாட்டிற்கென, மெய்யறிவுப் பேரவையை (சத்தியஞானசபை) 1872–ஆம் ஆண்டு சுறவத் திங்கள் 13–ஆம் நன்னாளில், (பூசம்) அருட்பேராளி வழிபாட்டினை, வடலூரில் முதன்முதலாகத் தொடங்கி அருட்பேரொளிக் காட்சியினை, அனைவரும் கண்டு களிக்குமாறு செய்தார்.

இயற்கையின் விளக்கமே, வடலூரிலுள்ள மெய்யறிவுப் பேரவை (சத்தியஞானசபை) என்பது வள்ளலார்தம் அருள் விளக்கமாகும். அனைத்து மனிதரிடத்தும் அகத்தே ஒளிரும் இறையொளிக் காட்சியின் புறவெளிப்பாடே, மெய்யறிவுப் பேரவை (சத்தியஞானசபை) எனின், மிகையன்று.

ஆதனுள் ஒளிரும் அருட்பேரொளியை மறைத்துக்கொண்டிருப்பது, ஆணவக்கூறுகளாம் வெவ்வேறு நிறமுள்ள ஏழுதிரைகளான படலங்களே என்பது வள்ளலார்தம் கருத்தாகும்.

மாந்தரிடமுள்ள, அறியாமையாகிய திரைகளை அகற்றுவதே, இப்பிறவியின் நோக்கம். இதற்காகவே இப்பிறவியை இறைவன் நமக்களித்துள்ளான் என்பது வள்ளலார்தம் கொள்கையாகும். அறிவின்மைத் திரையை நாம் இப்பிறவியில் அகற்றிவிட்டால், ஆதனுள்ளத்தே அமைந்த மெய்யறிவுத் திரையில், அருட் பேரொளி ஆண்டவன் விளங்கித் தோன்றுவதை, அனைவருக்கும் குறிப்பால் உணர்த்துவதை வெளிப்படையாக, விளக்கும் பொருட்டே, மெய்யறிவுப் பேரவை (சத்தியஞான சபை)யை, வடலூரில் வள்ளலார் தோற்றுவித்தார், என்பதே சாலப் பொருந்தும். வள்ளலார் தமது அகத்தே பெற்ற அருட்பேரொளிக் காட்சியினை, புறத்தே, வடலூரில் மெய்யறிவுப் பேரவையின் வாயிலாக, இன்றும் காட்டிய வண்ணம் உள்ளார்.

(எ.டு.) "திருந்தும் என் உள்ளத் திருக்கோயில் கண்டேன்" (அருட்பா. 3796).

"சத்திய ஞானசபை என்னுள் கண்டனன், சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்" (அருட்பா.4909) முதலான வள்ளலாரின் அருண்மொழிகள், மெய்யறிவுப் பேரவையின் அருளொளிக் காட்சியினை விளக்கும் வண்ணம் உள்ளது.

**வடலூரார்** *vaḍalūrār*, பெ.(n.) வள்ளலார் பார்க்க; see *vaḷḷalār*. *கொலைபுலை தவிர்த்தலே வடலூரார் நெறி (இ.வ.). இறவாப் (மரணமிலா) பெருவாழ்வு நெறியை வடலூரார் இம்மன்பதையில் நிலைநிறுத்தினார் (இ.வ.).*

மறுவ. சிதம்பரம் இராமலிங்கம்

*[வடல் + ஊர் + ஆர் – வடலூரார். 'ஆர்' பெருமைப் பொருட் பெயரீறு.]*

**வடவர்¹** *vaḍavar*, பெ.(n.) வடபுலத்தார்; northerners. *"வடவர் வாடக் குடவர் கூம்ப" (பட்டினப். 276).*

*[வடல்→வடலர்→வடவர்]*

**வடவர்²** *vaḍavar*, பெ.(n.) வடதிசையைச் சார்ந்த குழுக்கள்; committes of northern directions. *'வடவர் வாடக் குடவர்*

*கூம்பத்தென்னவன் திறல் கெட' என்று பட்டினப்பாலையிற் குறிப்பிடப்பெறும். இவர்கள் அருவா நாட்டிற்கு வடக்கே வாழ்ந்த வீரக் குடி மக்களாவர்.*

*[வடலர்→வடவர்]*

வட்டவர்சேர் *vaṭṭavar-šēr*, பெ.(n.) வடவர் மரத்தில் கட்டப்படும் பாய்; main royal sail.

வடவர்மகன் *vaḍavar-magaṉ*, பெ.(n.) வடவர்களின் வழி வந்தவன்; descendant of northeners. *'வடவர் மகன்' என்பதன் மரூஉ 'வடமன்' என்பதாகும். பார்ப்பனர்களில் ஒரு கிளைக்குடியினர் 'வடவர்' என்று அழைக்கப்படுகின்றனர்.*

வடவர்மரம் *vaḍavar-maram*, பெ.(n.) வட மரத்தின் உச்சிப்பாகம்; main royal mast.

வடவரை *vaḍa-varai*, பெ.(n.) 1. மாமேரு; big Mt. *Mēru*. *"வடவரை கொட்டையாய்ச் சூழ்ந்த" (உத்தரரா. தோத்திர. 15).* 2. மந்தர மலை; Mt. Mandara. *"வடவரை மத்தாக" (சிலப். 17, முன்னிலைப்பரவல்,1).*

*[வட + வரை]*

வடவளம் *vaḍa-vaḷam*, பெ.(n.) வடநாட்டில் விளைந்த பண்டம்; produce of the northern country. *"வடவளந் தரூஉ "நாவாய்" (பெரும்பாண். 320).*

*[வட + வள் + அம்→வடவளம்]*

வடவனம் *vaḍa-vaṉam*, பெ.(n.) மரவகை; a species of tree. *"வடவனம் வாகை" (குறிஞ்சிப். 67).*

வடவனல் *vaḍa-vaṉal*, பெ.(n.) வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī*. *"வெள்ளத்திடை வாழ் வடவனலை" (கம்பரா. தைலமா.86). "அக்கடலின்மீது வடவனல் நிற்கவில்லையோ" (தாயு.பரிபூர.9).*

*[வட + அனல். அனல் = தீ. உல்→உல→உலை. உல்→அல்→அன்→அனல். வடக்கிலுள்ளதாகக் கருதப்படும் வடதிசை நெருப்பு.]*

வடவனலம் *vaḍa-v-aṉalam*, பெ.(n.) வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī*. *"கடுகிய வடவன லத்தினை வைத்தது" (கலிங். 402).*

*[வடக்கு + அனல் + அம். அம் = பெருமைப் பொருட் பின்னொட்டு]*

வடவாக்கினிப்பால் *vaḍavākkiṉippāl*, பெ.(n.) ஒருவகை மருந்து; a kind of medicine (சா.அக.).

வடவாசுதர் *vaḍavā-šudar*, பெ.(n.) அசுவினி தேவர் (யாழ்.அக.); the *Ašviṉs*.

வடவாமுகம் *vaḍavā-mugam*, பெ.(n.) 1. வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī*. *"வடவாமுகத் தழலொடே" (பிரபோத. 19.1).* 2. நிரயம் (உரி.நி.); the nether region.

வடவாயிற்செல்வி *vaḍa-vāyiṟ-celvi*, பெ.(n.) வடக்குவாசற்செல்வி (நாஞ்.) பார்க்க; see *vaḍakku-vāšaṟ-celvi*.

*[வடக்குவாசல் →வடவாயில் + செல்வி]*

'வடக்குவாச்சி' (கொ.வ.).

வடவானசாறு *vaḍavāṉa-šāṟu*, பெ.(n.) இரும்பின் ஊறலைப் போக்கும் ஓர் மூலிகைச்சாறு; the juice of a herb that remove rust from iron.

*[வடிவான + சாறு.]*

தெள்→தெறு→தெற்று = தெளிவு.

தெற்று→தெறு→தேறு→தேறல் = தெளிந்த சாறு, கள், தேன், காய், கனி போன்றவற்றிலிருந்து வடித்தெடுக்கப்பட்ட தெளிநீர்.

தேறு→சாறு = வடிகட்டிய நீர்.

இரும்பின்மேல் படர்ந்துள்ள அழுக்கு, துரு போன்றவற்றைப் போக்கும் மூலிகைச் சாறே, வடவான சாறு என்றழைக்கப்பட்டது.

வடவானலம் *vaḍa-v-āṉalam*, பெ.(n.) வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī*. *"மண்ணுமின்றி வடவானலமு மின்றி" (தக்கயாகப்.408).*

*[வடவை + அனல் + அம்.]*

வடவிருக்கம் *vaḍa-virukkam*, பெ.(n.) ஆல மரம்; banyan tree-*Ficus bengalensis* (சா.அக.).

வடவீதி *vaḍa-vīdi*, பெ.(n.) வடபாதி (நாஞ்.); the northern half.

வடவு *vaḍavu*, பெ.(n.) மெலிவு; fatigue, weak. *"ஆறாத வடவாற" (தக்கயாகப். 557).*

வடவெளிச்சத்தூலக்கட்டு *vaḍa-veḷic-cattūlakkaṭṭu*, பெ.(n.) கூரை அமைப்பில் முக்கோணச் சாய்வாயமைந்த ஒருவகை அமைப்பு; triangle-shaped roof.

வடவேங்கடம் *vaḍa-vēṅgaḍam*, பெ.(n.) திருப்பதி மலை; the Tirupadi hills, as in the northern part of the Tamil country. *"வடவேங்கடந் தென்குமரி யாயிடை" (தொல். பாயி.).*

*[வடக்கு + வேங்கடம்]*

தமிழ் கூறும் நல்லுலகம், வடவேங்கடம் வரை பரவியிருந்த பான்மையைத் தொல்காப்பியப் பாயிரம் புலப்படுத்துகிறது.

வடவேர் *vaḍa-vēr*, பெ.(n.) வடக்கே ஓடும் வேர்; root running towards north.

*[வட+ வேர்]*

வடவை *vaḍavai*, பெ.(n.) 1. பெண் குதிரை (பிங்.); mare. 2. மகளிர்சாதி மூன்றனுள், குதிரையினத்துப்பெண் (கொக்கோ.3,6). 3. வடந்தைத்தீ (பிங்.) பார்க்க; see *vaḍandai-t-tī*. 4. அடிமைப்பெண் (யாழ்.அக.); slave-girl. 5. எருமை (பிங்.); buffalo. 6. பெண்யானை (பிங்.); female elephant.

*[வடம்→ வடவை = வடதிசை நெருப்பு (Auroro borealis).]*

வடக்கிலுள்ளதாகக் கருதப்படும் ஊழித்தீ.

*"வடவைக் கனலைப் பிழிந்தெடுத்து" (தனிப்பா.).*

வடவனல் = வடவை.

*"அக் கடலின்மீது வடவனல் நிற்கவிலையோ" (தாயு.பரிபூர.9).*

வடவனலம் = வடவை.

*"கடுகிய வடவன லத்திடை வைத்தது" (கலிங்.402).*

வடந்தை = வடக்கிலுள்ளது. வடந்தைத்தீ = வடவை.

*"சுடர்ந்தெரி வடந்தைத் தீயும்" (காஞ்சிப்பு. இருபத்.384).*

உத்தர மடங்கல் = வடவை (திவா.) உத்தரம் = வடக்கு.

மடங்கல் = ஊழித்தீ.

உத்தரம் = வடக்கிலுள்ள ஊழித்தீ (பி.)

பண்டைத் தமிழர் சுற்றுக் கடலோடிகளா (circumnavigators)யிருந்தமையால், வடமுனையில் ஒரோவொருகால் தோன்றும் மின்னொளியைக் கண்டு அதற்கு வடவை அல்லது வடவனல் எனப் பெயரிட்டிருந்தனர். குமரிக்கண்டத்திற் பல பேரழிவுகள் நேர்ந்ததினால், ஊழியிறுதியழிவிற்கு அவ் வடவையே காரணமென்றுங் கருதினர்.

தென்முனையிலும் வடவை போன்ற ஒளி தோன்றுமேனும், பண்டைத் தமிழிலக்கியம் முற்றும் அழியுண்டு போனமையால், அதைப்பற்றிய இலக்கியக் குறிப்பும் இறந்துபட்டது.

"Aurora, n.Luminous atmospheric (prob.electrical) phenomenon radiating from earth's northern (borealis) or southern (australis) magnetic pole" என்று COD கூறுதல் காண்க.

வடவர் வடவை என்னுஞ் சொல்லை வடசொல்லாகக் காட்டல் வேண்டி, வடபா என்னும் அதன் வடமொழி வடிவிற்குப் பெண்குதிரை என்று பொருளிருத்தலால், அதற்கேற்ப ஒரு கதையைக் கட்டி வடபாக்னி என்றும் வடபா முகாக்னி என்றும் பெயரிட்டு, பெண்குதிரை முகத்தில் தோன்றிய நெருப்பென்று பொருளும் விரித்துவிட்டனர். அக்கதை வருமாறு:

கிருதவீரியன் மக்கள், பிருகு முனிவர் ஈட்டிவைத்த பெருஞ்செல்வத்தைக் கவரவேண்டி அம் முனிவரின் மக்களையும் பேரப் பிள்ளைகளையுங் கருநிலையிலுங் கொன்றதினால், அக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரேயொரு பெண் தன் கருவைத் தன் தொடையில் மறைத்து வைத்திருந்து, அது பிறந்தபின் ஔர்வ எனப் பெயரிட்டாள். (ஊரு = தொடை. ஔர்வ = தொடையிற் பிறந்தவன்). அவ் வாண்பிள்ளை பெரியவனானபின், தன் தந்தைமாரைக் கொன்றவரைப் பழிவாங்கும் பொருட்டுத் தவஞ்செய்ய, அத்தவத்தினின்று உலகையே அழித்துவிடத்தக்க ஒரு பெருந்தீ கிளர்ந்தெழுந்தது. அதைக் கண்டு அவன் முன்னோர் அஞ்சி அதைக் கடலில் இட்டுவிடுமாறு கட்டளையிட, அவனும் அதற்கிணங்கி அங்ஙனமே இட்டு விட்டான். அது ஒரு பெண்குதிரைமுக வடிவு கொண்டு அங்கு தங்கிற்று.

மா.வி.அ. இக் கதையையும் வரைந்து, வடபாக்னி என்னுஞ் சொற்கு, "mare's fire, `submarine fire or the fire of the lower regions (fabled to emerge from a cavity called the `mare's mouth' under the sea at the South Pole") என்று விளக்கமுங் கூறியுள்ளது.

மேலையர் தமிழைக் கல்லாமையால் விளையும் தீங்கு இதனால் வெளியாகின்றது.

**வடவைக்கனல்** *vaḍavai-k-kaṉal,* பெ.(n.) வடந்தைத்தீ பார்க்க; see *vaḍandai-t-tī.* *"வடவைக் கனன்மாவும்" (தக்கயாகப். 694).*

*[வடவை + கனல். குல்→குன்→கன்→கனல்.]*

வடதிசையிலுள்ள ஊழித்தீ.

**வடவைத்தீ** *vaḍavai-t-tī,* பெ.(n.) வடந்தைத் தீ பார்க்க; see *vaḍandai-t-tī.* *"சுடர்ந்தெரி வடந்தைத் தீயும்" (காஞ்சிப்பு. இருபத்.384).*

மறுவ. ஊழித்தீ

*[வடவை + தீ.]*

**வடனகலாயம்** *vaḍaṉa-kalāyam,* பெ.(n.) வடகயிலாயம் பார்க்க; see *vaḍa-kayilāyam.*

**வடாகரம்** *vaḍāgaram,* பெ.(n.) கயிறு (யாழ்.அக.); rope.

வடாது *vaḍādu*,பெ.(n.) 1. வடக்குள்ளது; that which is in the north. *"வடாஅது பனிபடு நெடுவரை" (புறநா.6).* 2. வடக்கு; north. *"வடாதுந் தெனாதும் பரராசர் வகுத்த நேமி" (பாரத. பதின்மூன்று. 80).*

*[வட → வடாது.]*

வடாம் *vaḍām*,பெ.(n.) வடகம்[1] பார்க்க; see *vaḍagam*

வடாரகம் *vaḍāragam*,பெ.(n.) கயிறு (இலக். அக.); string, rope.

வடி[1]–தல் *vaḍi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. ஒழுகுதல்; to drip, trickle, as water. சீழ் வடிகின்றது. 2. நீர் முதலியன வற்றுதல்; to be diminished, as water in a river; to flow back, ebb, as tide. *"வடியாத பவக்கடலும் வடிந்து" (அஷ்டப். திருவரங். கலம். 93).* 3. திருந்துதல்; to be perfected, as pronunciation. *"வடியா நாவின்" (புறநா. 47).* 4. தெளிதல்; to be clear, as sound. *"வடிமணி நின்றியம்ப" (பு.வெ.10, 14, பக்.116).* 5. அழகு பெறுதல்; to become handsome. *"வடுவின்று வடிந்த யாக்கையன்" (புறநா. 180).* 6. நீளுதல் (சூடா.); become long. *"குழைவிரவு வடிகாதா" (தேவா.1091, 1).*

*[வழி → வடி–. ழ → ட மெய்த் திரிபு (ஒ.நோ.) குழல் → குடல். புழல் → புடல்.]*

வடி[2]–தல் *vaḍi-*, 4 செ.கு.வி.(v.i.) வீக்கம் வாங்கல்; diminishing of swalling pus etc.

வடி[3]–த்தல் *vaḍi-*, 11 செ.குன்றாவி.(v.t.) 1. வடியச் செய்தல்; to cause to flow out; to shed, as tears; to drain. *"கட்புனல் வடித்து" (தனிப்பா.i, 351, 73).* 2. வடிகட்டுதல்; to strain, as conjee from cooked rice; to filter. *"மற்றுமொருகால் வடித்தெடுத்து" (தனிப்பா.i, 182,5).* 3. பிழிதல்; to squeeze out. *"பன்றிக் கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்றால்" (நாலடி, 257).* 4. தயில மிறக்குதல்; to distill, as oil. *"கடத்துற வடி" (தைலவ.தைல.116).* 5. திருத்தமாகச் செய்தல்; to refine, polish; to perfect. *"வானுட்கும் வடிநீண் மதில்" (புறநா. 18).* 6. சாரமான சொல்லா லமைதல்; to express in choice language. *"வாயினால் வடித்த நுண்ணூல்" (சீவக.271).* 7. வயமாக்குதல் (சூடா.); to win over; to bring under control, to influence. 8. பழக்குதல்; to tame, train as wild elephants. *"கதிக்குற வடிப்போர் கவின் பெறுவீதியும்" (மணிமே. 28, 61).* 9. பயிலுதல்; to practise. *"வார்சிலை வடிப்ப வீங்கி" (சீவக. 1450)* 10. சோறு சமைத்தல் (கொ.வ.); to cook, as rice. 11. கூராக்குதல் (சங்.அக.); to sharpen. *"வடித்தாரை வெள்வேல்" (சீவக. 2320).* 12. வாரிமுடித்தல் (நற்.23); to comb and fasten, as hair. 13. தகடாக்குதல்; to flatten out. *"இரும்பு வடித்தன்ன மடியா மென்றோல்" (பெரும்பாண்.222).* 14. நீளமாக்குதல்; to lengthen, to elongate. 15. யாழ் நரம்பை உருவுதல்; to stroke with the fingers over, as the string of a lute in playing. *"வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்தும்" (பொருந.23).* 16. அழகு படுத்தல், அணி செய்தல்; to equip, as a horse, to decorate. *"வடித்த போத்தொடு" (சீவக. 1773).* 17. ஆராய்தல்; to investigate, examine, to research. *"வடித்த நூற்கேள்வியார்" (சீவக. 1846).* 18. ஆராய்ந்தெடுத்தல்; to select, choose. *"மாரனிக்கு வில்வளைத் தலர்க்கணை வடித்து" (பிரபோத. 30, 59).* 19. கிள்ளி யெடுத்தல்; to pluck, nip. *"கிளிபோல் காய

கிளைத்துணர் வடித்து" (அகநா. 37).

[வழி→ வடி-. ழ→ட மெய்த் திரிபு (ஒ.நோ.) குழல்→ குடல். புழல்→புடல்.]

**வடி[4]-த்தல்** *vaḍi-,* 11 செ.கு.வி.(v.i.) வடிக்கு-, பார்க்க; see *vaḍikku-.*

**வடி[5]** *vaḍi,* பெ.(n.) 1. தேன்; honey. *"வடிமலர் வள்ளம்" (சூளா. இரத. 45). "வடிகொள் பொழிலின்" (தேவா. 116, 3).* 2. கள் (பிங்.); toddy. 3. நீளுகை (அரு.நி.); lengthening, elongation.

[வழி→ வடி.]

**வடி[6]** *vaḍi,* பெ.(n.) 1. வடித்தெடுக்கை; filtration, distillation. *"வடியுறு தீந்தேறல்" (பு.வெ.1,19).* 2. கூர்மை (நாமதீப.); sharpness. *"வடியாரு மூவிலைவேல்" (தேவா.830,6).* 3. வாரி முடிக்கை; combing and fastening, as of the hair. *"வடிக்கொள் கூழை யாயமொடு" (நற்.23).* 4. ஆராய்ச்சி, துப்பறிகை; research, scrutiny, investigation. *"வடியமை" (சீவக. 1685, உரை).* 5. வடிகயிறு (யாழ்.அக.) பார்க்க; see *vaḍi-kayiṟu.* 6. கயிறு (யாழ்.அக.); rope. 7. நாய் (சது.); dog.

[வழி→ வடி (மு.தா.பக்.109).]

**வடி[7]** *vaḍi,* பெ.(n.) 1. மாம்பிஞ்சு; tender, green mango. *"நெடுமரக் கொக்கி னறுவடி விதிர்த்த" (பெரும்பாண்.309).* 2. பிளவுபட்ட மாம்பிஞ்சு; piece of green mango, cut longitudinally in two. *"வடியன்ன வுண்கட்கு" (கலித். 64).*

[வடு→ வடி.]

**வடி[8]** *vaḍi,* பெ.(n.) காற்று; wind. *"வடிபட வியங்கும் வண்ணக் கதலிகை" (பெருங். மகத. 3, 36).*

[வளி→ வடி. வளி = வளைந்துவீசுங் காற்று.]

**வடி[9]** *vaḍi,* பெ.(n.) வடிவம்; form, shape. *"கரியது வடிகொடு" (தேவா. 815, 5).*

[வடிவு→ வடி.]

**வடி[10]** *vaḍi,* பெ.(n.) சிறுதடி (நாஞ்.); small cane or stick.

தெ. படித; க. படி; ம. வடி.

**வடிக்கதிர்** *vaḍi-k-kadir,* பெ.(n.) நூல் முறுக்குங் கருவி (யாழ்.அக.); spindle, instrument for twisting threads.

[வடி + கதிர். குதிர்→கதிர். வடிகதிர் = நூல் நூற்கும் கருவி.]

**வடிக்கயிறு** *vaḍi-k-kayiṟu,* பெ.(n.) வடிகயிறு பார்க்க; see *vaḍi-kayiṟu.* *"வடிக்கயிறு முட்கோல் பற்றிய தடக்கையுள பாகு" (கந்தபு. சூரபன். வதை. 218).*

[வடி + கயிறு.]

**வடிக்கருவி** *vaḍi-k-karuvi,* பெ.(n.) வடிக் கதிர் (யாழ்.அக.) பார்க்க; see *vaḍi-k-kadir.*

[வடி + கருவி.]

**வடிக்கு-தல்** *vaḍikku-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வடியச் செய்தல்; to filter. 2. களங்க மறுத்தல்; to strain out. 3. காய்ச்சி இறக்குதல்; to distil.

[வடி →வடிக்கு-.]

**வடிகஞ்சி** *vaḍi-kañji,* பெ.(n.) சோறு வடித்த கஞ்சி (பதார்த்த. 1389); conjee, rice water strained in cooking.

[வடி + கஞ்சி.]

வடிகட்டி *vaḍi-kaṭṭi,* பெ.(n.) நீர்ம மட்டுமே பெறுதற்கேற்ற சல்லடை; strainer.

*[வடிகட்டு→வடிகட்டி.]*

மண்டி மகுளி தூசுதுப்பட்டையை நீக்கி நீர்ம மொன்றை மட்டும் பெறுதற்குரியது வடிகட்டி.

வடிகட்டின *vaḍi-kaṭṭiṉa,* பெ.அ.(adj.) சுத்தமான, முழுமையான; down right. *'இது வடிகட்டின பொய்'.*

வடிகட்டு[1]-தல் *vaḍi-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வடித்தல்; to strain; to filter. *"நீரை வடிகட்டி யெடு".* 2. சாரத்தைத் திரட்டுதல்; to epitomise; to give the purport of.

*[வடி + கட்டு-.]*

ஒரு கலத்திலுள்ள நீரை ஊற்றும்போது அதிலுள்ள மண்டியைத் தடுத்தற்குக் கலத்தின் வாயில் துணிகட்டுதலாம்.

வடிகட்டு[2]-தல் *vaḍi-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கஞ்சியை வடிகட்டுதல்; filtering of gruel.

*[வடி + கட்டு-.]*

வடிகம் *vaḍigam,* பெ.(n.) குளிகை (மாத்திரை); pill, it is usually prepared by reducing the required drugs in the fine powder, and then grinding them with the juice or decoction, as the case may be, into a paste of wax consistency, then pills are made with hand.

வடிகயிறு *vaḍi-kayiṟu,* பெ.(n.) குதிரையின் வாய்க்கயிறு; rein. *"வடிகயிறாய்ந்து" (சீவக. 794).*

*[வடி + கயிறு.]*

வடிகலசம் *vaḍi-kalaśam,* பெ.(n.) வடிகட்ட பயன்படும் பாத்திரம்; vessel used to collect the filtered substance.

*[வடி + கலசம். கலசம் = குடம்.]*

வடிகாது *vaḍi-kādu,* பெ.(n.) தொங்குந் துளைச்செவி; perforated ear lengthened by weighting the earlobes. *"குழைவிரவு வடிகாதா" (தேவா. 1091, 1).*

*[வடி + காது.]*

பாண்டி நாட்டுப் பழநாகரிக மகளிர்போல் கற்றைகள் தமிழப் பெண்டிரும் காது வளர்த்துள்ளனர்.

வடிகால் *vaḍi-kāl,* பெ.(n.) நீரை வடியவிடுங் கால்வாய்; outlet, a channel to drain water.

*[வடி + கால். கால் = நீண்டுசெல்லும் நீர்க்கால்.]*

வடிகால்குழாய் *vaḍikāl-kuḻāy,* பெ.(n.) சுதைமா வினால் கட்டப்பட்ட குழாய், இது தண்ணீரை வெளியேற்றவும், உள் கொணரவும் பயன்படும்; a pipe used for conveying and draining of water.

*[வடிகால் + குழாய்.]*

வடிகால்வாய் *vaḍi-kāl-vāy,* பெ.(n.) வடிகால் பார்க்க; see *vaḍi-kāl.*

வடிகால்நிலம் *vaḍikāl-nilam,* பெ.(n.) வெள்ளப் பெருக்கை வெளியேற்றுதற்குரிய நிலம்-நிலப்பரப்பு; outlet land.

*[வடிகால் + நிலம்.]*

வடிகொண்டசூரணம் *vaḍi-koṇḍa-šūraṇam,* பெ.(n.) வடிகட்டிய சூரணம்; filtered or sieved powder.

**வடிகொள்ளல்** *vadi-kollal,* தொ.பெ.(vbl.n.) வடித்துக் கொள்ளல்; getting filter.

*[வடி + கொள்ளல். கொள்→கொள்ளல்]*

**வடிசதுக்கம்** *vadi-šadukkam,* பெ.(n.) நெய்ம முதலியன வடிக்கும் இடம் (தைலவ. தைல. பாயி. 44); place where filtration is done.

*[வடி + சது→சதுக்கம். சதுக்கம் = இடம். மருந்தெண்ணெய் வடிகட்டுமிடம்.]*

**வடிசம்**[1] *vadišam,* பெ.(n.) அல்குல்வை; fourchette.

**வடிசம்**[2] *vadišam,* பெ.(n.) தூண்டில் (யாழ். அக.); fish-hook.

**வடிசம்பா** *vadi-šambā,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[வழி→வடி + சம்பா. சம்→சம்பா.]*

தமிழ் நாட்டில் விளையும் அறுபது வகைச் சம்பா நெல் வகையுளொன்று.

**வடிசல்**[1] *vadišal,* பெ.(n.) 1. நீர் முதலியன வற்றுகை (வின்.); ebbing, decreasing, draining as to water etc. 2. நீளுகை; elongation, lengthening.

*[வடி→வடியல்→வடிசல்]*

**வடிசல்**[2] *vadišal,* பெ.(n.) 1. வடிக்கை; straining, filtering. 2. வடித்த சோறு; rice boiled and strained. *வடிசல் நைவேத்தியம் (யாழ்ப்.).*

**வடிசற்காது** *vadišar-kādu,* பெ.(n.) வடிகாது (வின்.) பார்க்க; see *vadi-kādu.*

*[வடிசல் + காது]*

**வடிசாந்து** *vadi-šāndu,* பெ.(n.) நற்சாந்து (யாழ்.அக.); superior fragrant unguent.

*[வடி*[2] *+ சாந்து]*

**வடித்தண்ணீர்** *vadi-t-tannir,* பெ.(n.) நாற்றங் காலில் நீர் கட்டி பின் வடிக்கப்பட்ட தண்ணீர்; drained water from seed-bed after properly irrigating for a while.

**வடித்தநீர்** *vaditta-nir,* பெ.(n.) வடிநீர்; distilled water-*Aque distilata.*

**வடித்திறு-த்தல்** *vadittiru-,* 4 செ.கு.வி. (v.i.) தெளியவைத்து இறுத்தல்; to decant.

*[வடி→வடித்து + இறு-,]*

**வடித்துக்கொட்டு-தல்** *vadittu-k-kottu-,* 5 செ.குன்றாவி.(v.t.) சமைத்துப் படைத்தல்; to cook and serve.

*[வடி→வடித்து + கொட்டு-.]*

**வடித்துக்கொள்ளல்** *vadittu-k-kollal,* தொ. பெ.(vbl.n.) கருக்கு நீர் எட்டில் ஒன்றாய் உருவாக்குதல்; preparing decoction by boiling it down to one eight.

*[வடித்து + கொள்ளல்.]*

**வடித்தெடு-த்தல்** *vadittedu-,* 4 செ.கு.வி. (v.i.) வடித்திறுத்தல் பார்க்க; see *vadi-t-tiru-.*

*[வடி→வடித்து + எடு-,]*

கல், மண், தூசு துப்பட்டை, ஈயெறும்பு முதலிய பொருள்களோடு கலக்க நேர்ந்த உண்டற்குரிய நீரையும் நீர்ப்பொருளையும், அவற்றை நீக்கும் பொருட்டு துணிகட்டி வடித்தெடுப்பதும் பனஞ்சாறு அல்லது பனைநீரை, இங்ஙனம் வடித்தெடுத்து பருகுவதும் இன்றும் கண்கூடு.

வடிதங்கம் *vaḍi-taṅgam*, பெ.(n.) தூய்மை யாக்கிய பொன் (யாழ்.அக.); pure gold.

*[வடி² + தங்கம்]*

ஒருகா. பசும்பொன்.

வடிதங்கொடி *vaḍitaṅ-koḍi*, பெ.(n.) கொடி மாதுளை; creeper-pommegranate.

வடிதட்டு¹ *vaḍi-taṭṭu*, பெ.(n.) சோற்றிலிருந்து கஞ்சியை வடித்தெடுக்க உதவும் வகையில், செம்பாதிப் பரப்பில் மட்டும் துளைகளை கொண்ட தட்டு; a shallow metal round plate with partial perforation used to strain cooked rice.

*[வடி + தட்டு]*



வடிதட்டு² *vaḍi-taṭṭu*, பெ.(n.) சிப்பற்றட்டு வகை (இ.வ.), அரிகலம்; a kind of colander.

வடிதமிழ் *vaḍi-tamiḻ*, பெ.(n.) தெளி தமிழ் (யாழ்.அக.); choice *Tamiḻ*.

வடிதயிர் *vaḍi-tayir*, பெ.(n.) கட்டித்தயிர்; thick mass of curds. *"வைத்த நெய்யுங் காய்ந்த பாலும் வடிதயிரு நறுவெண்ணெயும்" (திவ். பெரியாழ். 2, 2, 2).*

*[வடி + தயிர்.]*

வடிதாள் *vaḍi-tāḷ*, பெ.(n.) வடிகட்டும் தாள்; filter paper.

வடிதேய்-த்தல் *vaḍi-tēy-*, 4 செ.குன்றாவி. (v.t.) பொடியிட்டுத் தேய்த்து மினுக்குதல் (நாஞ்.); to polish; as jewels; to burnish, as gold.

*[வடி + தேய்-,]*

வடிந்தகாது *vaḍinda-kādu*, பெ.(n.) வடிகாது (வின்.) பார்க்க; see *vaḍi-kādu.*

*[வடி¹ + காது]*

வடிந்துபோ-தல் *vaḍindu-pō-*, 8 செ.கு.வி. (v.i.) இளைத்துப்போதல்; getting emaciated, to be weak.

வடிநாமம் *vaḍi-nāmam*, பெ.(n.) கோமேதகம்; one of the 1nine gems Cannmon stone.

வடிநிரயம் *vaḍi-nirayam*, பெ.(n.) தோற்ற அமைவு; posture.

வடிப்பம் *vaḍippam*, பெ.(n.) 1. செப்பம்; elegance. *"வடிப்பம் வடிப்பமாய்ப் பேசிக் கொள்ளாதே" (இராமநா. கிஷ். 9).* 2. வடிவழகு; physical handsomeness. *"ராமன் வடிப்பங்கள் கண்டுகொண்டு" (இராமநா. பால. 20).* 3. அழகு (வின்.); beauty. 4. செயலாற்றல், திறம் (யாழ்.அக.); capacity, ablity. 5. கூர்மை; sharpness.

*[வடி → வடிப்பம்]*

வடிவு = அழகு. அழகு பொருந்துமாறு வடிக்கப்பட்ட சிற்பம் வடிப்பமாகும். கண்டார் கண்ணையும் கருத்தையும் கவரும் பான்மையில் அமைந்ததும், அனைவர்தம் உள்ளத்திலும், எஞ்ஞான்றும் நின்று நிலவுபாங்கினில் எழிலுடன் வடிக்கப்பட்ட சிற்பமே வடிப்பமெனப்படும்.

முதற்பொருளாம் வடிவைக் குறிக்காது காலப்போக்கில் வடிவின் அமைதியாய்த் திகழும் அழகைக் குறிக்கலாயிற்று. சிலர் பெயரே வடிவென வழங்குதலறிக. "வடிவான் மருட்டுதல்" என்பது வடிவழகால் மயக்குதல் என்பதாம்.

வடிக்கப்பட்டவேல் அழகாக விளங்குவதுடன், கூர்மையும் கொண்டிருத்தலால், அதற்குக் கூர்மைப் பொருளும் உண்டாயிற்று.

**வடிப்பான்** *vaḍippāṉ,* பெ.(n.) நீர்மங்களி லிருந்து கசடுகளை வடித் தெடுக்குங் கருவி; filter.

**வடிப்பு[1]** *vaḍippu,* பெ.(n.) 1. வடிக்கை (யாழ். அக.); straining filtering. 2. தெரிந்தெடுக்கை; selecting, choosing. 3. இருப்புக் கம்பி (யாழ்.அக.); iron rod.

**வடிப்பு[2]** *vaḍippu,* பெ.(n.) காய்ச்சி யிறக்குதல்; distillation.

**வடிப்பு[3]** *vaḍippu,* பெ.(n.) வடஇந்தியா (வின்.) northern india.

**வடிப்போர்** *vaḍippōr,* பெ.(n.) யானை முதலியன பயிற்றுவோர்; tamers, trainers, as of elephants. *"புதுக்கோள் யானையும்.... பொற்றார்ப் புரவியுங் கதிக்குற வடிப்போர்" (மணிமே. 28, 61).*

**வடிபலகை** *vaḍi-palagai,* பெ.(n.) சோறு வடிக்கப் பயன்படும் சிறு மரப்பலகை (நெல்லை.); a small flat piece of wood, used as a strainer in cooked rice.

*[வடி + பலகை]*

**வடிபாத்திரம்** *vaḍi-pāttiram,* பெ.(n.) மருந்தெண்ணெய் வடிப்பதற்கு வேண்டி பயன்படுத்தும், வாயகன்ற மட்பாண்டம் அல்லது சட்டி; wide mouthed eartheren ware to hold or collect the medicated oil to be filtered.

**வடிபானை** *vaḍi-pāṉai,* பெ.(n.) 1. சோறாக்குதற்கான மட்கலம்; vessel for cooking rice. 2. காய்ச்சுஞ் சரக்கின் ஆவியைக் குளிரச்செய்து நீர்மநிலையில் வடிக்கும் பானை (வின்.); condenser in a distilling apparatus; pot which receives the distilled liquid.

*[வடி + பானை]*

**வடிம்பலம்நின்றபாண்டியன்** *vaḍimbalam-niṉṟa-pāṇḍiyaṉ,* பெ.(n.) பண்டைய பாண்டிய மன்னர்களுளொருவன்; an ancient *Pāṇḍiyaṉ* king. *"ஆழிவடிம்பலம்ப நின்றானென" (நளவெண்பா.). "இவன் பஃறுளியாற்றை உண்டாக்கிக் கடற் றெய்வத்திற்கு விழாச் செய்த பாண்டியன்" (புறநா.).*

மறுவ. உக்கிரவருமன்.

அடியார்க்கு நல்லார் (சிலம்பு.) உரையில் இவனைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. இவன் கடல் சுவற வேலெறிய, கடல் வற்றி, இவன் கால்விளிம்பு மட்டாகக் கழுவியது. அதனால், வடிம்பலம்ப நின்றானெனப் பெயராயிற்று.

நளவெண்பாவிலும் இவனைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

**வடிம்பிடு-தல்** *vaḍim-piḍu,* 18 செ. குன்றாவி. (v.t.) 1. கட்டாயப் படுத்துதல்; to compel. *"வடிம்பிட்டு ஆசிரயிக்கைக்காக" (ஈடு.10.1, 4).* 2. கோயில் தேரினைத் தணிபோட்டுக் கிளப்புதல் (ஈடு, 7, 2, 5, அரும்.); to rise and start with a lever, as a temple-car. 3. தூண்டுதல், நகருதல்; to urge, move. *"நெஞ்சிலே வடிம்பிட்டு.....*

*ஸ்தோத்ரம் பண்ணா நின்றாள்" (ஈடு. 7, 2, 5).* 4. குறை கூறுதல், பழி கூறுதல்; to slander, blame. *"தாய்மாரும் ஊரவரும் வடிம்பிடுகிறார்களோ வென்று" (திவ். திருநெடுந். 21, வ்யா, பக். 170).*

*[வடிம்பு + இடு-,]*

வடிம்பு *vaḍimbu,* பெ.(n.) 1. துணி, கத்தி முதலியவற்றின் விளிம்பு அல்லது நுனி; border, edge as of garment, blade, as of a knife. *"பொன் வடிம் பிழைத்த வான்பகழி" (கம்பரா. கிளை. 38).* 2. கால் முதலியவற்றின் விளிம்பு; extremity, as of the foot. *"ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பி னிடந்திட்டு" (கலித். 103).* 3. கூரைச் சாய்வு (வின்.); eaves, edge of a standing roof. 4. தேர் முதலியவற்றைக் கிளப்புந் தணிமரம்; lever. *"ரதத்தோ பாதி வடிம்பாலே தாக்கி" (ஈடு. 1. 4, 6).* 5. வடிம்புக் கம்பி (இ.வ.) பார்க்க; see *vaḍimbu-k-kambi.* 6. தழும்பு, வடு (நெல்லை.); mark, scar, smudge. 7. பழி; reproach, blame. *"தாய்மாரும் ஊரவரும் வடிம்பிடுகிறார்களோ வென்று" (திவ். திருநெடுந். 21, வ்யா, பக். 170).*

*[விளி→(விளிம்பு)→வடிம்பு (மு.தா.I, பக்.103.]*

வடிம்புக்கம்பி *vaḍimbu-k-kambi,* பெ.(n.) தாங்குமரம் (இ.வ.); spar.

*[வடிம்பு + கம்பி]*

வடிம்புக்கழி *vaḍimbu-k-kaḻi,* பெ.(n.) குறுக்கு விட்டம் (யாழ்.அக.); transverse piece in roofing.

*[வடிம்பு + கழி]*

வடிம்புபிடி-த்தல் *vaḍimbu-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) குறுக்கு விட்டந் தொடுத்தல் (வின்.); to tie cross timbers of a roof.

*[வடிம்பு + பிடி-,]*

வடிமணி *vaḍi-maṇi,* பெ.(n.) தெளிந்த ஓசையுள்ள மணி; clear sounding bell. *"வடிமணி நின்றியம்ப" (பு.வெ.10, 14, பக். 116).*

வடிமருந்து *vaḍi-marundu,* பெ.(n.) கள்; arrack, intoxicating liquor (சா.அக.).

பட்டைச் (சாராயம்) வெறியம்.

தென்னை, பனை, அரிசி, வெல்லம் முதலியவற்றிலிருந்து வடிக்கப்படும் புளிப்பேறிய மதுவகை.

மருந்து = வெறியம் (சாராயம்). மருத்துவக் குணமுடையது. வயிற்று வலிக்கும் உடம்பிலுள்ள எலும்புகளுக்கும் ஊட்டமாகப் பயன்படுவது.

வடிமார் *vaḍi-mār,* பெ.(n.) கூரைவேயப் பயன்படும் புல்வகை; a species of sedge used for roofing thatched shed.

வடிமாலை *vaḍi-mālai,* பெ.(n.) கடுகு ரோகணி; a purgative drug-*Helleborus niger* (சா.அக.).

வடியல் *vaḍiyal,* பெ.(n.) 1. வடிசல்[2], 1 பார்க்க; see *vaḍišal.* 2. வடித்த நீர் முதலியன (யாழ்.அக.); strained or filtered liquid. 3. சமைக்கப்பட்டது; that which is cooked. *நான்கு படியரிசி வடியல்.*

*[வடி →வடியல்]*

வடியவெடுத்தல் *vaḍiya-v-eḍuttal,* தொ.பெ. (vbl.n.) வடிகால்வாய் வழியாக நீர் வடிக்கச்

வடிக்கச் சொல்லல்; draining of water through an outlet or canal.

[வடிய + எடுத்தல்.]

**வடியிடு-தல்** *vaḍi-y-iḍu-*, 18 செ. குன்றாவி.(v.t.) வடித்தெடுத்தல்; to be filtered. *"தெள்ளிமறை வடியிட்ட வமுதப்பிழம்பே" (தாயு.கருணா.8).*

[வடி + இடு-, இல்→இள்→இடு-தல்.]

**வடியுப்பு** *vaḍi-uppu*, பெ.(n.) வடித்தவுப்பு; filtered salt.

[வடி + உப்பு.]

**வடியெண்ணெய்** *vaḍi-y-eṇṇey*, பெ.(n.) வடித்தெடுத்த மருந்தெண்ணெய் (வின்.); clarified medicinal oil.

[வடி + எண்ணெய்]

**வடிரசி** *vaḍiraši*, பெ.(n.) ஓர் பாலை; alstonia scholaris.

**வடிவகணிதம்** *vaḍiva-kaṇidam*, பெ.(n.) வடிவங்களையும், உருவங்களையும், உருவாக்கும் கோடுகள், கோணங்கள் முதலியவற்றைக் கணித அடிப்படையில் விளக்கும் பிரிவு; geometry.

[வடிவம் + கணிதம்]

**வடிவடைப்புவேலை** *vaḍivaḍaippu-vēlai*, பெ.(n.) தூண் அல்லது வேண்டிய வடிவத்தில் அமைக்கப்பட்டு, அதில் கற்காரையிட்டுச் செய்யப்படும் வேலை; decorative work in pillar or any structure with polished coloured marbles or tiles.

[வடிவம் + அடைப்புவேலை.]

**வடிவணங்கு** *vaḍi-v-aṇaṅgu*, பெ.(n.) அழகிய பெண்; beautiful lady, as fair-complexioned. *"ஆதிமா மரபின்வரு வடிவணங்கை" (திருவாலவா. 11, 3).*

[வடிவு + அணங்கு]

**வடிவம்**[1] *vaḍivam*, பெ.(n.) உள்ளடக்கத்துக்குத் தகுந்த புற அமைப்பு; appearance or form that is reflective of the inner content.

[படிவம்→வடிவம்]

**வடிவம்**[2] *vaḍivam*, பெ.(n.) 1. உருவம் (பிங்.); form, shape, figure. *"சங்கம வடிவம்..... தாபர வடிவம்" (திருவாலவா. 61, 14).* 2. உடல் (யாழ்.அக.); body. 3. அழகு, செம்மை, நேர்த்தி; beauty, charm, comeliness. *"வடிவமங்கை தனைச் சுருதி விதியின் மணம் புணர்ந்தான்" (திருவாலவா. 3, 3).* 4. நிறம், உடல் வண்ணம் (அக.நி.); colour, good physique. 5. பளபளப்பு, ஒளிர்வு; glassiness, lustre, glittering. 6. மெய்ச் சொல் (அக.நி.); true word, truth.

[படி→வடி→வடிவு→வடிவம்]

**வடிவம்**[3] *vaḍivam*, பெ.(n.) 1. உருப்படிவம்; model. 2. கலைஞர்களுக்கு உருப்படிவமாக (மாதிரியாக) அமைபவர்;

**வடிவமை-த்தல்** *vaḍivamai-*, 4 செ. குன்றாவி. (v.t.) 1. வடிவம் கிடைக்கும் படி செய்தல்; to design, shape. 2. உருவாக்குதல்; to architect. *இந்தத் திரையரங்கத்தை வடிவமைத்தவர் யார்?*

[வடிவம் + அமை-]

**வடிவமைப்பு** *vaḍivamaippu*, பெ.(n.) உருவாக்கப்பட்ட தோற்றம்; design. *'அந்தக்*

*கொதிகலன்கள் கோபுரம் போன்ற வடிவமைப்புக் கொண்டவை'.*

*[வடிவம் + அமைப்பு]*

வடிவவுவமம் *vaḍiva-v-uvamam,* பெ.(n.) உருவத்தை ஒப்பித்துக் கூறும் உவமை (யாழ். அக.); simile in which the comparison is in respect of shape or form.

*[வடிவம் + உவமம்]*

வடிவழகி *vaḍivaḷagi,* பெ.(n.) வெற்றிலை; betel leaf-*Piper beter* (சா.அக.).

வடிவாக *vaḍi-v-āga,* கு.வி.எ.(adv.) முற்றும் (நெல்லை.); completely, fully, entirely.

*[வடிவு + ஆக-.]*

வடிவாளன் *vaḍi-v-āḷaṉ,* பெ.(n.) அழகன் (இ.வ.); handsome man.

*[வடிவு + ஆள்→ஆளன்]*

வடிவானவைத்தன் *vaḍivāṉa-vaittaṉ,* பெ. (n.) சாரைப்பாம்பு; the male of cobra-the rat snake.

வடிவிக்குமருந்து *vaḍivikku-marundu,* பெ. (n.) உடம்பு அல்லது வீக்கத்தை வற்றச் செய்யும் மருந்து; drugs or medicines capable of reducing the swelling of the body.

வடிவியல் *vaḍiviyal,* பெ.(n.) வடிவகணிதம் பார்க்க; see *vaḍiva-kaṇidam.*

வடிவிலாக்கூற்று *vaḍivilā-k-kūṟṟu,* பெ.(n.) வான்வெளி வாக்கு; voice from an invisible speaker, voice from heaven. *"பிறந்திட்டதோர் வடிவிலாக்கூற்று" (சேதுபு. பராவு. 42).*

*[வடிவு + இல் + ஆ + கூற்று]*

வடிவு[1] *vaḍivu,* பெ.(n.) அல்குல் (பிங்.); vagina, mons veneris.

வடிவு[2] *vaḍivu,* பெ.(n.) 1. உருவம், அமைப்பு; form, shape. *"வண்ணந்தானது காட்டி வடிவு காட்டி" (திருவாச. 5, 25).* 2. உடல் (சூடா.); body. 3. அழகு; beauty. *"வடிவுடை மலைமகள்" (தேவா. 618, 7). "வடிவார் வயற்றில்லை" (திருக்கோ. 139).* 5. நன்னிறம்; fair complexion. 6. பளபளப்பு, ஒளிர்வு, பிறங்கொளி, அழகொளி; brightness, lustre. *"வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும்" (திவ். திருப்பல். 2).* 7. உண்மை, மெய்ச்சொல் (அரு.நி.); truth, true word.

தெ. வடுவு; ம. வடிவு.

*[வடி→வடிவு]*

வடிவு[3] *vaḍivu,* பெ.(n.) 1. வடித்தது (இ.வ.); that which is strained or filtered. 2. மிகுதியாக வடிந்த நீர்; overflow, surplus water.

வடிவுப்பானை *vaḍivu-p-pāṉai,* பெ.(n.) வடிபானை (வின்.) பார்க்க; see *vaḍi-pāṉai.*

*[வடி→வடிவு + பானை.]*

வடிவுவமை *vaḍi-v-uvamai,* பெ.(n.) வடிவவுவமம் (சங்.அக.) பார்க்க; see *vaḍiva-v-uvamam.*

*[வடிவு + உவமை]*

வடிவெண்ணெய் *vaḍi-v-eṇṇey,* பெ.(n.) குருதிக்கேட்டாலுண்டான நோய்களுக்குக் கொடுக்கும் எண்ணெய்; medicated oil for diseases caused by vitiation of blood (சா.அக.).

**வடிவெலும்பு** *vaḍi-v-elumbu,* பெ.(n.) மாரெலும்பு; rib, breast bone - *Sternum.*

**வடிவெழுத்து** *vaḍi-v-eḻuttu,* பெ.(n.) ஒலியின் குறியாக, எழுதப்படும் எழுத்து (நன்.256, மயிலை) (பிங்.); a letter, written symbol of an uttered sound, dist. fr. *oli-y-eḻuttu.* 2. திருந்திய கையெழுத்து (இ.வ); legible or fine hand writing.

*[வடி→வடிவு + எழுத்து]*

**வடிவேல்**[1] *vaḍivēl,* பெ.(n.) 19-ஆம் நூற்றாண்டில் *"சுப்பிரமணியர் துதிக் கோவை"* என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet who composed a work titled subramaniar *Tudikkōvai* in 19C.

**வடிவேல்**[2] *vaḍivēl,* பெ.(n.) 1. கூரிய வேல்; sharp lance. *"வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே" (கந்தரலங். 70).* 2. முருகக்கடவுள் (இ.வ.); Kanda, as wielding the lance.

*[வடி + வேல்]*

**வடு**[1] *vaḍu,* பெ.(n.) 1. மாம்பிஞ்சு; unripe fruit, especially very green tender mango. *"மாவின் வடுவகிரன்ன கண்ணீர்" (திருவாச. 9, 2).* 2. உடல் மச்சம் (வின்.); wart, mole. 3. தழும்பு; scar, smudge, cicatrice, wale. *"சாபநோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்" (புறநா. 14).*

**வடு**[2] *vaḍu,* பெ.(n.) 1. உளியாற் செதுக்கின உரு; chiselled figure. *"கூருளி பொருத வடுவாழ் நோன்குறடு" (சிறுபாண். 252).* 2. புண்வாய்; mouth affected by an ulcer or wound. *"தாழ் வடுப் புண்" (பு.வெ.10, சிறப்பிற்.11).*

**வடு**[3] *vaḍu,* பெ.(n.) 1. குற்றம்; fault, defect. *"வடுவில் வாய்வாள்" (சிறுபாண்.121).* 2. பழி; reproach, blemish. *"வடுவன்று வேந்தன் றொழில்" (குறள். 549).* 3. கேடு; injury, calamity, catastrophe. *"நாயகன் மேனிக் கில்லை வடுவென" (கம்பரா. மருத்து. 5).*

**வடு**[4] *vaḍu,* பெ.(n.) 1. நுண்ணிய கருமணல்; fine, black sand. *"வடுவா ழெக்கர் மணலினும் பலரே" (மலைபடு. 556).* 2. செம்பு (பிங்.); copper. 3. வாள் (யாழ்.அக.); sword. 4. வண்டு (பிங்.); beetle.

**வடு**[5]**-த்தல்** *vaḍu-,* 4 செ.கு.வி.(v.i.) பிஞ்சு விடுதல் (வின்.); to bear fruit.

**வடு**[6]**-த்தல்** *vaḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. வெளிப்படுத்துதல்; to manifest. 2. பார்வைக்கு காட்சியாக வைத்தல்; to exhibit. *"வடுத்தெழு கொலை" (கல்லா.5).*

**வடு**[7] *vaḍu,* பெ.(n.) 1. மாணி (இ.வ.); celibate student. 2. இளைஞன் (யாழ்.அக.); youth. 3. திறமையானவன் (இ.வ.); clever boy, talented youngster.

**வடுக்கு-தல்** *vaḍukku-,* 5 செ.கு.வி.(v.i.) நூற்பாவில், வண்ணமேற்றாத முரட்டு நூலை ஏற்றுதல்; to thrust undyed coarse thread into spinning mill.

*[வடு→வடுகு-.]*

**வடுக்கொள்(ளு)-தல்** *vaḍu-k-koḷ(ḷ)-,* 13 செ.கு.வி.(v.i.) 1. தழும்பு படுதல்; to bear mark, smudge, sear. *"நல்லகம் வடுக்கொள முயங்கி" (அகநா. 100).* 2. புண் முதலியன ஆறத் தொடங்குதல் (இ.வ.); to begin to heal, as a sore etc.

*[வடு + கொள்-,]*

வடுகக்கடவுள் *vaḍuga-k-kaḍavuḷ,* பெ. (n.) சிவபெருமானின் வயிரவ வடிவம் (திவா.); *Bhairavaṉ,* a form of *Śivaṉ.*

வடுகக்காது *vaḍuga-k-kādu,* பெ.(n.) வடிகாது (வின்.) பார்க்க; see *vaḍi-kādu.*

வடுகச்சி *vaḍugacci,* பெ.(n.) வடுகப்பெண் (வின்.); a woman of *vaḍuga* caste.

*[வடுகர் + அச்சி. அச்சன் (ஆ.பா.)→அச்சி (பெ.பா.)]*

வடுகச்செட்டி *vaḍuga-c-ceṭṭi,* பெ.(n.) செட்டியாருள் ஓரினத்தவர் (வின்.); a division of *ceṭṭiyar* caste.

வடுகடுக்காய் *vaḍu-kaḍu-k-kāi,* பெ.(n.) கடுக்காய்ப் பிஞ்சு; an unriped chebulic myrobalan (சா.அக.).

வடுகநம்பி *vaḍuga-nambi,* பெ.(n.) இராமாநுசரின் வழித்தொண்டர் (குருபரம்.); a disciple of *Rāmānujar.*

வடுகநாததேசிகர்[1] *vaḍuganāda-tēśigar,* பெ.(n.) 17–ஆம் நூற்றாண்டில் *"திருமுல்லை வாயிற் புராணம்"* என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet who composed a work titled *'Tirumullai-vāyiṟ-purāṇam'* in 17C.

வடுகநாததேசிகர்[2] *vaḍuganāda-tēśigar,* பெ.(n.) 19, 20ஆம் நூற்றாண்டில் காத்திருப்பு என்னும் ஊரைச் சேர்ந்த, புள்ளிருக்க வேளூர்ப்புராணம் என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet who composed a work titled *'pullirukka-vēḷūr-p-purāṇam'* in 19-20 C. He hails from *Kāttiruppu* village.

வடுகநாதன் *vaḍuga-nādaṉ,* பெ.(n.) வடுகக்கடவுள் பார்க்க; see *vaḍuga-k-kaḍavuḷ.*

வடுகப்பறையன் *vaḍuga-p-paṟaiyaṉ,* பெ. (n.) மாலிய சமயத்தைச் சார்ந்த தெலுங்க நாட்டுப் பஞ்சம வகையான் (இ.வ.); a *vaisṇava paṟaiya* of the Telugu country.

*[வடுகன் + பறையன்]*

வடுகம் *vaḍugam,* பெ.(n.) வடுகு பார்க்க; see *vaḍugu.*

*[வடம்→ வடகு→ வடுகு→ வடுகம் (வ.வ.பக்.26).]*

வடகு என்னும் சொல்லிடையுள்ள டகரம், அதையடுத்து ஈற்றிலுள்ள குகரச் சார்பால், டுகரமாயிற்று. (ஒ.நோ.) கேடகம்→கிடுகு.

இங்ஙனம் அகரம் உகரமாய்த் திரிந்தது உயிரிசைவு மாற்றம் (Harmonic sequence of Vowels) என்னும் நெறிமுறையாகும்.

வடுகர்[1] *vaḍugar,* பெ.(n.) தமிழகத்தின் வடக்குப் பகுதியில் வாழ்ந்த குடியினர்; inhabitant lived in northern region of T.N. *'வடுகர்' என்பது ஒரு குடியின் பெயராகும். 'வடுகு' என்பவற்றோடு 'அர்' விகுதி சேர்ந்தமையால் 'வடுகர்' என்றாயிற்று. வடுகர் தமிழகத்தின் வட வெல்லையில் மட்டுமின்றி, நாலாபுறமும் பரவி வாழ்ந்தனர். வடக்கே வாழ்ந்த வடுகரைத் தமிழர் 'வட வடுகர்' என்றழைத்தனர். 'கதநாய் வடுகர்' (அகம்.381, 7). 'வம்ப வடுகர்' என்னும் சொல்லாளப் படுவதால், புதியவர்கள், நிலையற்றவர்கள், அயலார்கள் எனவும் அழைக்கலாம். 'கடுங்குரற் பம்பை கதநாய்*

*வடுகர்' (நற்.212, 5). 'கல்லா நீள்மொழிக் கதநாய் வடுகர்' (அகம்.107, 11). 'கதநாய் வடுகர்' (அகம்.375, 14) என வடுகரைக் குறித்த பாடல்கள் கழகக்கால இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது.*

வடுகர்[2] *vaḍugar,* பெ.(n.) 1. தெலுங்கர்; people of the Telugu country. *"கதநாய் வடுகர்" (நற். 212).* 2. கி.பி.16–ஆம் நூற்றாண்டில் விசயநகர நாட்டினின்று, தமிழ் நாட்டிற் குடியேறிய தெலுங்கர்; a caste of Telugu immigrants, from the kingdom of vijayanagar into the Tamil country in the 16th century.

*[வடுகு→வடுகர்]*

வடுகரணம் *vaḍu-karaṇam,* பெ.(n.) பூணூல் போடும் விழா (யாழ்.அக.); investiture with the sacred thread.

வடுகவழிபன்னீராயிரம் *vaḍuga-vaḻi-paṉṉīrāyiram,* பெ.(n.) நெல்லூர், குண்டூர், கடப்பை முதலாய நிலப்பரப்பை யுள்ளடக்கிய வடுகர் வாழ் தேயம்; *vāṇargaḷ* country comprising of *Nellūr, Guṇḍūr, Kaḍappai* etc. *'பன்னீராயிரம் என்பது பூமியின் பரப்பைக் குறிப்பதாமென்பர். பன்னீராயிரம் ஊர்களை கொண்ட பரப்பிடம் என்பதனை, முடியலூர் சாசனம் உணர்த்துகின்றது'. "நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும் வால் நிணப்புகலின் வடுகர் தேயத்து" (அகம்.213:7–8).*

*[வடுகவழி → வடுகநாடு.]*

வடுகவாளி *vaḍuga-vāḷi,* பெ.(n.) வடுக நாட்டு மகளிர் காதில் அணியும் காதணி வகை; a kind of ear-ring worn by vaduga community women. *"வடுகவாளி ஒன்றில் கோத்தமுத்து ஒன்பது" (தெ.இ.கல். தொ.2:2, கல்.51).*

*[வடுகர் + வாளி. வாளி = ஒரு வகைக் காதணி]*

வடுகன்[1] *vaḍugaṉ,* பெ.(n.) 1. வயிரவன் (பிங்.); Bhairava. 2. மாணி; celibate student. 3. இளைஞன் (யாழ்.அக.); youth. 4. மூடன் (யாழ்.அக.); fool, stupid.

வடுகன்[2] *vaḍugaṉ,* பெ.(n.) தெலுங்க நாட்டான்; man from the Telugu country.

*[வடுகு + அன்]*

வடுகன்றாய் *vaḍugaṉ-ṟāy,* பெ.(n.) காளி (திவா.); *Kāḷi,* the mother of Bhairava.

*[வடுகன் + தாய்]*

வடுகி *vaḍugi,* பெ.(n.) வடுகன்றாய் (பிங்.) பார்க்க; see *vaḍugaṉ-ṟāy.*

வடுகு[1] *vaḍugu,* பெ.(n.) 1. தமிழ்நாட்டின் வடவெல்லையிலுள்ள நாடு; the region situated in the north of the Tamil country. *"வடதிசை மருங்கின் வடுகு வரம்பாக" (தொல்.பொருள்.650, உரை).* 2. ஆந்திரநாடு; the Telugu country. 3. தெலுங்கு மொழி; the Telugu language. *"வடகலை தென்கலை வடுகு கன்னடம்" (கம்பரா. தனி.).* 4. தெலுங்கின் கிளைமொழி; a dialect of Telugu. *"கன்னடம் வடுகு கலிங்கந் தெலுங்கம்" (நன்.272, மயிலை) (தொல். சொல்.400, உரை).* 5. தெலுங்கு பேசுவோரிடையே உள்ள தொரு பிரிவு (பிங்.); a division of Telugu-speaking people.

க. படகு.

*[வடம்→வடகு→வடுகு. ஒருகா. கொடுந்தமிழ்.]*

முதன்முதல் வடதிசையாற் பெயர் பெற்ற மொழி வடுகு என்னும் தெலுங்கே. அது வேதக் காலத்திலேயே தமிழினின்று திரிந்திருந்தது.

வடம்→ வடகு→வடுகு→வடுகம்.

வடகு என்னும் சொல்லிடையுள்ள டகரம், அதையடுத்து ஈற்றிலுள்ள குகரச் சார்பால், டுகரமாயிற்று. இங்ஙனம் அகரம் உகரமாய்த் திரிந்தது உயிரிசைவு மாற்றம் (Harmonic Sequence of Vowels) என்னும் நெறிமுறையாகும்.

ஒ.நோ. : கேடகம் – கிடுகு.

எடுப்பொலி (எ–டு) : குடி– gudi (கோவில்), கூன் – gūvu. சடை – ஜட.

வலிப்பொலி (எ–டு): செய் – cey, போடு – பெட்டு.

இங்க்கா = இன்னும், கொஞ்ச்செமு = கொஞ்சம்,

அண்ட்டாரு = என்றார், எந்த்த = எவ்வளவு,

கும்ப்பு = கும்பு.

இங்ஙனம் ஆரியத்தன்மையடைந்த ங்க்க, ஞ்ச்ச, ண்ட்ட, ந்த்த, ம்ப்ப என்னும் வல்மெலிவலி யிணைகள் முதன்முதல் வடுகிலேயே தோன்றுகின்றன. தமிழில் இத்தகைய வொலிகள் மருந்திற்குங் காணக்கிடையா. அதிலுள்ளவை யெல்லாம் ங்க, ஞ்ச, ண்ட, ந்த, ம்ப, ன்ற ஆகிய மென்மெலிவலி யிணைகளே.

வடுகு[2] *vaḍugu,* பெ.(n.) 1. மருத யாழ்த்திறத் தொன்று (பிங்.); a secondary melody-type of the marudam class, one of four *maruda-yāḻ-t-tiṟam.* 2. இந்தளம் (பிங்.); a melody-type. 3. மெய்க் கூத்து வகை (சிலப். 3, 12, உரை); a physical dance.

*[வடக்கு→வடுகு]*

வடுகு[3] *vaḍugu,* பெ.(n.) மணியிலமைந்த குற்றம் (C.G.); a flaw imperfection in a gem.

*[வடு→வடுகு]*

வடுகு[4] *vaḍugu,* பெ.(n.) பூணூலணியும் விழா; investiture with the sacred thread. *"ஏழுறு வடுகுசெய் திருக்கு வேமுதல்....... ஓதியே" (நல்.பாரத.துட்டிய.60).*

வடுகுந்தமிழுங்குணம் *vaḍugun-tamiḻuṅ-guṇam,* பெ.(n.) வயிற்றுக் கடுப்பு; pain in abdomen.

வடுச்சொல் *vaḍu-c-col,* பெ.(n.) பழிமொழி; reproach.

*[வடு + சொல்]*

வடுத்தலைக்கலவாய் *vaḍu-t-talai-k-kalavāy,* பெ.(n.) மஞ்சள் நிறமானதும் நெடிதாய் வளர்வதுமான கடல் மீன்; sea-fish attaining a large size.

*[வடு + தலை + கலவாய்]*

ஒருகா. பன்றிமீன்.



வடுப்படல் *vaḍu-p-paḍal,* பெ.(n.) மீன் வேட்டையில் உண்டாகும் காயம்; a wound caused due to forecially fish catching.

வடுப்பிஞ்சு *vaḍu-piñju,* பெ.(n.) இளம்பிஞ்சு; tender, unriped fruit.

*[வடு + பிஞ்சு.]*

வடுபட்டவள் *vadu-pattaval*, பெ.(n.) ஆணுடன் தொடர்புடையவள்; a reduced woman.

வடுபடுத்து-தல் *vadu-paduttu-*, 5 செ.கு.வி.(v.i.) வெட்டு, குத்து முதலியவற்றால் காயப்படுத்துகை; wounding.

வடும்பு[1] *vadumbu*, பெ.(n.) மூங்கிற் கழி, கெடை; a long bamboo post.

வடும்பு[2] *vadumbu*, பெ.(n.) சாத்து மரங்களின் குறுக்கே போடுங்கழி; tie beam.

வடுமாங்காய் *vadu-māṅgāy*, பெ.(n.) மாவடு ஊறுகாய் (கொ.வ); a pickled preparation of green tender mangoes.

*[வடி→வடு + மாங்காய்.]*

வடுவக்கூடை *vaduva-k-kūdai*, பெ.(n.) கூடைவகை (வின்.); a kind of basket.

*[வடுகன்→வடுவன் + கூடை]*

வடுவரி *vaduvari*, பெ.(n.) 1. வண்டு (சது.), தேனீ; beetle, bee. 2. சிற்றுயிரி; insect.

*[வடு + வரி]*

வடுவறவேதல் *vaduvara-vēdal*, தொ.பெ.(vbl.n.) முழுவதுமாக வேதல்; cooking well.

*[வடு + அற + வே-,]*

வடுவன் *vaduvan*, பெ.(n.) தெலுங்கு நாட்டான்; man from the Telugu country.

*[வடுகு→வடுகன்→வடுவன்]*

வடுவும்புள்ளியும் *vaduvum-pulliyum*, பெ.(n.) அம்மையிறங்கி உதிர்தல்; to be full of warts and spots as after small pox.

வடுவை *vaduvai*, பெ.(n.) செம்பு; copper.

வடை *vadai*, பெ.(n.) தேர்ச்சக்கர வடிவாகச் செய்யப்படும் உழுத்தம் பலகாரம்; a cake made of black grum, fried in ghee or oil.

**Skt.** வடா.

*[வட்டை → வடை]*

ஒ.நோ.பெட்டை பெடை.

வட்டக் கருத்துச் சொற்களுள் வட்டு, வட்டை என்னும் வடிவுகள் வடமொழியில் இல்லை (வே.க.4 பக்.104).

வடைக்குத்தி *vadai-k-kutti*, பெ.(n.) பண்ணிகாரம் குத்தியெடுக்குங் குத்தூசி வகை; a picker, used in frying cakes.

*[வடை + குத்தி]*

வடைகறி *vadai-kari*, பெ.(n.) வடைக்குரிய கடலை மாவுடன் கறிமசாலை சேர்த்துத் தாளித்து, ஆவியில் வைத்தெடுக்கும் ஒருவகைத் தொடுகறி; a kind of side dish. using chickpea flour paste as in the preparation of vadai.

*[வடை + கறி]*

வடைப்பருப்பு *vadai-p-paruppu*, பெ.(n.) பயற்றம் பருப்புடன் எலுமிச்சம்பழச்சாறு முதலியன சேர்த்துச் செய்யப்படுஞ் சிற்றுண்டி வகை; a salad of green gram split and soaked in lime water and seasoned with condiments.

தெ. வடபப்பு

*[வடை + பருப்பு]*

**வடைமாலை** *vaḍai-mālai,* பெ.(n.) வேண்டுதலின் பொருட்டு வடைகளைக் கோத்து மாகாளர், குரக்கினத் தலைவன் (அனுமன்) முதலிய தெய்வங்கட்கு இடும் மாலை; garland of vaḍai offered in vow to deities, such as *Mākāḷar, Hanumār,* etc.

*[வடை + மாலை]*

**வடையம்** *vaḍaiyam,* பெ.(n.) 1. நெல்லிப்பழம் முதலியவற்றை அரைத்துத் தட்டிய வடை; cake, as of nelli fruits. 2. பொட்டலமாகக் கட்டிய வெற்றிலை பாக்கு (தஞ்.); folded packet of betel leaves and areca-nut.

**வடையற்றது** *vaḍai-y-aṟṟadu,* பெ.(n.) வீணானது (யாழ்.அக.); that which is useless, wasteful material.

**வடைவாரி** *vaḍai-vāri,* பெ.(n.) துளைகள் கொண்ட வாரியெடுக்கும் கரண்டி; perforated ladle to take out *vaḍai-cakes.*

*[வடை + வாரி]*



**வண்களமர்** *vaṇ-kaḷamar,* பெ.(n.) வேளாளர் (திவா.); *vēḷāḷās.*

*[வள் → வண் + களமர்.]*

**வண்சிறை** *vaṇ-šiṟai,* பெ.(n.) மதில் (சது.); battlement.

*[வன்சிறை → வண்சிறை.]*

**வண்டகி** *vaṇḍagi,* பெ.(n.) முந்திரிக் கொட்டை; cashew nut-*Anacardium occidentale.*

**வண்டத்தனம்** *vaṇḍa-t-taṉam,* பெ.(n.) 1. குறும்பு (கொ.வ.), கொடுமை; mischief, wickedness. *வண்டத்தனக்காரனுக்கு சண்டித்தனப் பெண்சாதி (உ.வ.).* 2. நாண மின்மை; impudence. 3. மதிப்பின்மை; impertinence. 4. இழி செயல்(வின்.); lewdness.

தெ. பண்டதனமு; க. பண்டதன.

*[வண்டம் + தனம். 'தனம்' சொல்லாக்க ஈறு. ஒ.நோ. குறும்புத் தனம், கஞ்சத்தனம்.]*

**வண்டப்புரட்டன்** *vaṇḍa-p-puraṭṭaṉ,* பெ.(n.) ஏமாற்றுக்காரன்; consummate cheat. *வண்டப்புரட்டனுக்கு வாய்த்த சண்டி (இ.வ.). "வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு வைக்கினுங் கடனீந்திடார் (குமரே. சத. 4). வண்டப் புரட்டனுக்கு உடம்பெல்லாம் வாய் (உ.வ.).*

*[வண்டம் + புரட்டு→புரட்டன்.]*

**வண்டப்பேச்சு** *vaṇḍa-p-pēccu,* பெ.(n.) 1. குறும்புப் பேச்சு; imprudent talk. 2. இழிவான பேச்சு; lewd talk. 3. கண்மூடித்தனமான பேச்சு; rash talk. *மட்டுமரியாதையற்ற வண்டப்பேச்சு பகையை வளர்க்கும் (இ.வ.).*

*[வண்டம் + பேச்சு.]*

அளவுக்கு மீறி, எல்லைக் கடந்து, மிகு சினத்தால் பேசும் பேச்சு.

**வண்டம்** *vaṇḍam,* பெ.(n.) குந்தம் (சங்.அக.); a weapon.

**வண்டமை[1]** *vaṇḍamai,* பெ.(n.) கருஞ்சங்கு (சா.அக.); black conch.

**வண்டமை[2]** *vaṇḍamai,* பெ.(n.) கடல்மீன் வகை (சங்.அக.); shell fish.

**வண்டயக்கட்டை** *vaṇḍaya-k-kaṭṭai,* பெ.(n.) மரத்தூணின் உருண்டை வடிவப் பகுதி; a round plank attached to wooden pillar to act, as a connector.

**வண்டயம்[1]** *vaṇḍayam,* பெ.(n.) கழல்; anklet. *"வீரவண்டயம் அணிந்த திருவடிகள்" (திவ். திருப்பா. 17, அரும். பக். 162).*

தெ. பெண்டியமு; க. பெண்டெய.

*[வண்டு→வண்டயம். (ஒ.நோ.) தண்டு → தண்டயம்.]*

வண்டயம் = உருட்டிய துணிப்பந்தம்.

**வண்டயம்[2]** *vaṇḍayam,* பெ.(n.) வண்டவாளம் பார்க்க; see *vaṇḍavāḷam. 'அவன் வண்டயமெல்லாம் வெளிவந்து விட்டது'.*

**வண்டர்** *vaṇḍar,* பெ.(n.) 1. அரசனுக்கு நாழிகையறிவிக்கும் கடிகையார்; panegy -rists who keep the king informed of the time, by praising him at stated hours. *"வண்டரு மோவரும் பாட" (சீவக. 1844).* 2. மங்கலம் பாடுவோர் (வின்.); panegyrists, bards. 3. வீரர் (நாமதீப. 139); warriors.

**வண்டரம்** *vaṇḍaram,* பெ.(n.) 1. நாயின் வால் (யாழ்.அக.); dog's tail. 2. நாய்; dog. 3. முகில்; cloud. 4. மார்பு; breast, chest.

**வண்டரன்** *vaṇḍaraṉ,* பெ.(n.) 1. அலி (யாழ்.அக.); eunuch. 2. இவறன் (கஞ்சன்); miser.

*[வண்டரன் = முற்கால அரசவைகளில் விதையகற்றப்பட்டு அமர்த்தப்பட்ட பணியாள்.]*

**வண்டரிசி[1]** *vaṇḍariśi,* பெ.(n.) உளுத்த அரிசி, குருவண்டுக்குள்ளிருக்கும் அரிசி (rhm f.); pest eaten rice. *"பேருகேள் வண்டினது அரிசி பட்டால் பேரண்டம் நீறியது பிளக்குந் தானே" (கொங்கணவர்).*

**வண்டரிசி[2]** *vaṇḍariśi,* பெ.(n.) கழுதை வண்டின் முதுகில் சுண்ட அரிசியைப் போல் விழும் முட்டை; இது கையில் பட வெந்து போகும் தன்மைத்து; இதில் இளங்கூட்டி அரைத்துப் பூச துரிசு நீறும், பேரண்டம் நீறிப் பிண்டிக்கும், சரக்கெல்லாம் நீறுக்கும்; the egg of a kind of beetle calcifies copper sulphate, skull bone and other drugs.

**வண்டல்[1]** *vaṇḍal,* பெ.(n.) வெள்ளப்பெருக்கு முதலியவற்றால் அடித்தொதுங்கிய வளமான மண்; silt, alluvium. *'அழிக்கும் வெள்ளமே வளம் தரும் வண்டலையும் கொண்டு வருகிறது'. நன்செய் தொளி நடவில் குளத்து வண்டல் தூவினால் விளைச்சல் மிகுதியாகும் (இ.வ.).*

*[வண்டு→வண்டல்.]*

**வண்டல்[2]** *vaṇḍal,* பெ.(n.) 1. மகளிர் விளையாட்டு வகை (திவா.); a girl's game of making toy houses. *"தண்முத்தம் பேதை மடவார்தம் வண்டல் விளக்கயரும்" (ஐந். ஐம். 46).* 2. மகளிர் கூட்டம் (அரு.நி.); bevy of ladies. 3. விளையாட்டாக இழைத்த சிற்றில்; toy house. *"தண்புனல் வண்டலுய்த் தென" (ஐங்குறு.69).* 4. நீர் முதலியவற்றினடியில் மண்டிய பொடி மண் முதலியன; dregs, lees, sediment; mud,

mire, slush. *“வண்டல் பாய் பொன்னி நாடனை” (கலிங். 135). “வியனதி வண்டலாக” (பாரத. பதினாறாம். 73).* 5. நீரொதுக்கி விட்டமண்; earth or sand washed ashore by a river, lake etc. *“வண்டலுண் மணல் தெள்ளி” (திவ். நாய்ச். 2, 3).* 6. செம்மண்டரை (இ.வ.); alluvial soil, capable of retaining moisture and of a light red colour. 7. சேறு முதலியன உலரும் போது மேலே காய்ந்தெழும்பும் ஏடு; flake, skin, thin layer that peels off, scale. *"பூசுகந்தம் தனத்திற் பொரிந்தது..... பொருக்கெழும்பி" (தனிப்பா.1, 381, 27).* 8. பருக்கைக்கல் (யாழ்.அக.); pebble. 9. நீர்ச்சுழி (யாழ்அக.); whirlpool.

*[மண்டு→வண்டு→வண்டல்.]*

வண்டல்கீரை *vaṇḍal-kīrai,* பெ.(n.) வள்ளைக்கீரை பார்க்க; see *vaḷḷai-k-kīrai.*

வண்டல்நீர் *vaṇḍal-nīr,* பெ.(n.) வண்டற் படிவு கலந்த நீர்; water with sediments.

*[வண்டல் + நீர்.]*

வண்டலடி-த்தல் *vaṇḍalaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வயலுக்கு உரமாக வண்டல் பரப்புதல் (C.G); to spread, alluvial deposit in fields, as manure. 2. வயல் மண்மேடிடுதல் (கொ.வ.); to become silted up, as a field.

*[வண்டல் + அடி-,]*

வண்டலம் *vaṇḍalam,* பெ.(n.) சேறு (யாழ். அக.); slush.

*[வண்டல்→வண்டலம்.]*

வண்டலவர் *vaṇḍalavar,* பெ.(n.) விளையாட்டு மகளிர்; playful girls. *“இரிவுற்றார் வண்டிற்கு வண்டலவர்” (கலித்.92).*

*[வண்டு→வண்டலவர்.]*

வண்டலாயம் *vaṇḍal-āyam,* பெ.(n.) விளையாடும் தோழியர் கூட்டம்; a company of girl-playmates. *“வண்டலாயமொ டுண்டுறைத் தலைஇ” (பெரும்பாண்.311).*

*[வண்டல் + ஆயம்.]*

வண்டலிழை-த்தல் *vaṇḍal-iḻai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. மணலாற் சிற்றிலிழைத்து விளையாடுதல் (பொருந. 187, உரை); to make a toy-house out of sand. 2. பருவமகளிர் விளையாட்டுகளுள் ஒன்று; a play of virgins.

மறுவ. கூடலிழைத்தல்.

*[வண்டல் + இழை-.]*

பருவப் பெண்டிர், தத்தம் மனங்கவர் மணாளன் வாய்ப்பது குறித்து, மணலில் வட்டங்கீறிக் கணித்தறியும் விளையாட்டு.

வண்டவாளம்[1] *vaṇḍavāḷam,* பெ.(n.) மானக் கேடான நிகழ்வுகள்; unpleasant, discreditable facts. *அவருடைய வண்ட வாளங்களெல்லாம் எங்களுக்குத் தெரியும் (உ.வ.). உன் வண்டவாளத்தையெல்லாம், தண்டவாளத்தில் ஏற்றலாமா? (பழ.).*

*[வண்→வண்ட + வாலம்→வாளம். வாளம் = நெடுமை.]*

வண்டவாளம் = தகுதிக் குறைவான, முறையற்ற செயல்கள். "உன் வண்டவாளத்தைத் தண்டவாளத்தில் ஏற்றுகிறேனா, இல்லையா பார்!" என்பது" எரிச்சலுணர்வின் வெளிப்பாடைக் காட்டும் வழக்குத் தொடராகும்.

தண்டவாளத்தில் ஏற்றல் என்பது ஊரறியப் பரப்புதல், தண்டவாளத்தில் என்பது, தொடர்வண்டியில் செய்தித்தாள் அனுப்புவது போல, அனுப்புவதாம்.

**வண்டவாளம்**[2] *vaṇḍa-vāḷam,* பெ.(n.) 1. நிலைமை, தன்மை; state, condition, used in contempt. 2. முதல்; capital, funds.

தெ. பண்டவாலமு; க., து. பண்டவால.

**வண்டற்கல்** *vaṇḍaṟ-kal,* பெ.(n.) வெள்ளி நிமிளை; antimony.

**வண்டற்படுகை** *vaṇḍaṟ-paḍugai,* பெ.(n.) வண்டலிட்ட ஆற்றங்கரை (வின்.); muddy bank of a river.

*[வண்டல் + படு → படுகை.]*

**வண்டற்பாவை** *vaṇḍaṟ-pāvai,* பெ.(n.) வண்டலாற் செய்த விளையாட்டுப் பாவை; toy made of mud. *"வண்டற்பாவை வௌவலின் நுண்பொடி யளைஇக் கடறூர்ப் போளே" (ஐங்குறு. 124).*

*[வண்டல் + பாவை.]*

**வண்டன்**[1] *vaṇḍaṉ,* பெ.(n.) குள்ளன் (இலக். அக.); short, dwarfish person.

**வண்டன்**[2] *vaṇḍaṉ,* பெ.(n.) திண்ணியன் (பிங்.); brave and resolute man.

*[வண்டு→வண்டன்.]*

**வண்டன்**[3] *vaṇḍaṉ,* பெ.(n.) தீயோன்; wicked or evil person. *"வண்டர் மும்மதின் மாய்தர வெய்தவன்" (தேவா. 755, 7).*

*[வண்டு→வண்டன்.]*

**வண்டன்**[4] *vaṇḍaṉ,* பெ.(n.) சுன்னத்துப் பண்ணப்பட்டவன் (யாழ்.அக.); circumcised man.

**வண்டனான்** *vaṇḍaṉāṉ,* பெ.(n.) முனிவன் (சீவக. 1632, உரை); austere sage, as bee-like in nature.

**வண்டாலம்** *vaṇḍālam,* பெ.(n.) 1. குந்தாலி; pick-axe. 2. மழு (பு.வெ.9, 38, உரை); battle-axe.

மறுவ. கணிச்சி.

**வண்டாழ்ங்குருகு** *vaṇḍāḻṅ-kurugu,* பெ.(n.) குருகு வகையுளொன்று; a kind of heron. *"வண்டாழ்ங் குருகினுடைய சேவல்களோடே" (மதுரைக். 674, உரை).*

**வண்டாழ்வான்** *vaṇḍāḻvāṉ,* பெ.(n.) ஒரு வகை பறவை; a bird which (is a) terrorises the beetles.

**வண்டாளம்** *vaṇḍāḷam,* பெ.(n.) வண்டவாளம், 1 (இ.வ.) பார்க்க; see *vaṇḍavāḷam.*

**வண்டாளை** *vaṇḍāḷai,* பெ.(n.) நெல்வகை (குருகூர்ப்.58); a kind of paddy.

**வண்டானம்** *vaṇḍāṉam,* பெ.(n.) நாரைவகை; pelican ibis. *"நாரைவண்டான மெதிர்த்த தண்புனல்" (சீவக. 2108).*



**வண்டானவண்டு** *vaṇḍāṉa-vaṇḍu,* பெ.(n.) 1. ஓர் வகை யுப்பு; a secret salt. 2. கருப்பிண்டத்திலிருந்து தயாரிக்கும் ஓர் உப்பு; a salt extracted by a secret process from the foetus (சா.அக.).

**வண்டி**[1] *vaṇḍi,* பெ.(n.) 1. சகடம்; cart, carriage, bandy. *"வண்டியை யேறினாள்" (சீவக. 2054, உரை). "வண்டியில் ஓடமும் ஏறும்; ஓடம் வண்டியில் ஏறும்" (பழ.).* 2. வண்டிப்பாரம் பார்க்க; see *vaṇḍi-p-pāram.* 3. சக்கரம்; உருளை (சூடா.); wheel, as of a cart car.

தெ., க., பண்டி; ம. வண்டி.

*[வள் → வண் → வண்டு → வண்டி (வே.க.4:101).]*

ஒருகா. வள் + தி – வண்டி. இச்சொல்லும் வளைவுக் கருத்தினடிப்படையில் தோன்றியதாகும்.

'வண்டி'யென்பது முதலிற் சக்கரத்தையும் பின்பு உறுப்பாகுபெயராய்ச் சகடத்தையும் குறிக்கும்.

சகடம் என்னும் பொருளில், வண்டி என்னுஞ்சொல், பண்டி என்பதன் திரிபாகத் தெரிகின்றது. ஏனெனின், பண்டி என்னும் வடிவே, சீவகசிந்தாமணி மூலத்தில் இடம் பெற்றுள்ளது. மேலும், பாண்டி, பாண்டில் என்பவற்றை யொத்த வகர முதற் சொற்கள், இருவகை வழக்கிலுமில்லை.

ஒருகால், வண்டியென்னும் வடிவே, தொன்றுதொட்டு உலகவழக்காயிருந்திருக்கலாம். வண்டி யென்னும் வடுக கன்னட வடிவம், வகர பகரத் திரிபின் விளைவாம் (வே.க.4:101).

**வண்டி**[2] *vaṇḍi,* பெ.(n.) வயிறு (யாழ்.அக.); belly, stomach.

**வண்டி**[3] *vaṇḍi,* பெ.(n.) 1. அடிமண்டி; sediment, dregs. 2. கழிவுப்பொருள்; lees.

தெ., க. பண்டு.

*[மண்டி → வண்டி.]*

**வண்டி**[4] *vaṇḍi,* பெ.(n.) ஆனேற்றாலோ, பரியாலோ (குதிரை) இழுக்கப்படும் அல்லது இயந்திரத்தால் இயங்கும் சக்கரங்களை உடைய ஊர்தி; generally vehicle, especially bullock-cart, horse-drawncart.

*[வள் → வண் → வண்டு → வண்டி (வே.க.4:101).]*



**வண்டிக்கட்டு** *vaṇḍi-k-kaṭṭu,* பெ.(n.) 1. வண்டிப்பட்டா (வின்.) பார்க்க; see *vaṇḍi-p-paṭṭā.* 2. மகளிர் முடிந்து கொள்ளும் தலைமுடி வகை (இ.வ.); a mode of tying a woman's braided hair.

*[வண்டி + கட்டு. கள் → கடு → கட்டு.]*

கட்டு = இணைப்பு, சேர்ப்பு, முடிப்பு. வட்ட வடிவில் முடிந்து கொள்ளும் மகளிர்தம் தலைமுடிப்பு.

**வண்டிக்கடுக்கன்** *vaṇḍi-k-kaḍukkaṉ,* பெ. (n.) பொன்னாலியன்ற பெரிய வட்ட வடிவான கடுக்கன் வகை (இ.வ.); a large circular, gold ear-ring of men.

*[வண்டி + கடுக்கன். கடி → கடு → கடுக்கன். கடித்தல் = பொருத்துதல், பிடிப்பாக இருத்தல். வண்டிக்கடுக்கன் = வண்டிச்சக்கர வடிவிலமைந்த ஆடவர் காதணி.]*

**வண்டிக்காரன்** *vaṇḍi-k-kāraṉ*, பெ.(n.) 1. வண்டியோட்டுபவன்; cart driver. 2. ஓட்டுநர்; driver. 3. வண்டிக்கு உரியவன்; owner of a cart or carriage.

*[வண்டி + காரன். காரன் = வினைமுதல், உடைமை முதலிய பொருளில்வரும் ஆண்பாற் பெயரீறு (விகுதி).]*

வடமொழியாளர் இப்பெயரீற்றைக் 'க்ரு' (செய்) என்னும் முதனிலையினின்று திரித்துப் பொருளுரைப்பது பொருந்தாது. காரன் என்னும் ஆண்பாற் பெயரீறு, செந்தமிழுக்கேயுரியது.

ஆட்டுக்காரன்: மாட்டுக்காரன், வீட்டுக்காரன், வேலைக்காரன், கோழிக்காரன், வெள்ளைக்காரன் போன்ற எண்ணிலடங்கா வினைமுதற் பெயரீறுகள் தமிழில் வழக்கூன்றியுள்ளமை காண்க.

**வண்டிக்கால்** *vaṇḍi-k-kāl*, பெ.(n.) வண்டிச் சக்கரம் (வின்.); cart-wheel.

*[வண்டி + கால்.]*

**வண்டிக்கீல்** *vaṇḍi-k-kīl*, பெ.(n.) வண்டிமசகு (இ.வ.) பார்க்க; see *vaṇḍi-maśagu*.

*[வண்டி + கீல். இல்→கில்→கீல்.]*

**வண்டிக்கூடு** *vaṇḍi-k-kūḍu*, பெ.(n.) வண்டியின் மேற்கூண்டு; dome-like top or cover of a cart.

*[வண்டி + கூடு. குல்→குள்→கூடு.]*



**வண்டிக்கொட்டகை** *vaṇḍi-k-koṭṭagai*, பெ.(n.) வண்டிப்பேட்டை (கட்டட. நாமா.) பார்க்க; see *vaṇḍi-p-pēṭṭai*.

**வண்டிக்கொழுப்பு** *vaṇḍi-k-koḻuppu*, பெ.(n.) வண்டிமசகு (வின்.) பார்க்க; see *vaṇḍi-maśagu*.

*[வண்டி + கொழுப்பு.]*

**வண்டிகட்டு-தல்** *vaṇḍi-k-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. மாட்டை வண்டியின் நுகத்தடியிற் பூட்டுதல்; to yoke the bullocks to a bandy, as for a journey. 2. சுற்றுப் பயணம் முதலியன தொடங்குதல் (இ.வ.); to start, as on a journey.

*[வண்டி + கட்டு-, கள்→கட்டு = இணைத்தல், பிணைத்தல்.]*

மாட்டை வண்டி நுகத்தடியில் இணைத்துச் சேர்த்தலே, வண்டி கட்டுதலாகும்.

**வண்டிச்சத்தம்** *vaṇḍi-c-cattam*, பெ.(n.) வண்டிக்கூலி, வண்டி வாடகை; carriage, hire, fare, hire charges.

மறுவ. சகடக்கூலி

*[வண்டி + சத்தம்.]*

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்தம்→சத்தம் = வண்டிக்குக் கொடுக்கும் கூலி. வண்டிச் சத்தம் என்பது வண்டியிற் பண்டங்களை ஏற்றிச் செல்லுவதற்கான கூலி அல்லது வாடகை.

**வண்டிச்சவடு** *vaṇḍi-c-cavaḍu*, பெ.(n.) வண்டித்தடம் பார்க்க; see *vaṇḍi-t-taḍam*. *"ஆன்குடிக்குப் போகிற வண்டிச்சவட்டுக்கு வடக்கும்"* (புதுக்.கல். 420).

*[வண்டி + சுவடு→ சவடு. உகரமுதற்சொல் அகரமுதலவாதல் தமிழில் இயல்பாம்.]*

**வண்டிச்செடிலாடல்** *vaṇḍi-c-ceḍil-āḍal,* பெ.(n.) வண்டியில் வைத்துள்ள செடிலில் ஆடுகை (வின்.); swinging from hook in a machine mounted on a cart and rotated.

**வண்டிசண்டி** *vaṇḍi-šaṇḍi,* பெ.(n.) திறமை யுள்ளவன் (இ.வ.); clever person.

**வண்டித்தடம்** *vaṇḍi-t-taḍam,* பெ.(n.) வண்டிச் சக்கரம் சென்று தேய்ந்த தடம்; cart-track. *வண்டி தட, வண்டி தடை (பே.வ.).*

*[வண்டி + தடம்]*

**வண்டிப்பட்டா** *vaṇḍi-p-paṭṭā,* பெ.(n.) வண்டிச் சக்கரத்தின் மேல் தைத்த இருப்புச் சட்டம்; iron frame of cart-wheel.

*[வண்டி + பட்டை → பட்டா]*

**வண்டிப்பட்டை** *vaṇḍi-p-paṭṭai,* பெ.(n.) வண்டிப் பட்டா (இ.வ.) பார்க்க; see *vaṇḍi-p-paṭṭā.*

*[வண்டி + பட்டை.]*

**வண்டிப்பாதை** *vaṇḍi-p-pādai,* பெ.(n.) வண்டித் தடம் பார்க்க; see *vaṇḍi-t-taḍam. வண்டிபாட்ட (பே.வ).*

*[வண்டி + பாதை.]*

**வண்டிப்பாரம்** *vaṇḍi-p-pāram,* பெ.(n.) 1. வண்டியிலேற்றும் சுமை; cart-load. *"வண்டிப்பாரம் நிலத்திலே" (பழ.).* 2. பட்டணம் படி 480 முதல் 500 வரை கொள்ளும் தவச அளவுவகை; a unit of dry measure, varying from 480 to 500 (Chennai) city measures.

**வண்டிப்பேட்டை** *vaṇḍi-p-pēṭṭai,* பெ.(n.) 1. சுற்றுலா வண்டிகள் தங்கும் இடம்; caravansari, enclosed halting place for travelling carts. *வண்டிப்பேட்டைச் சண்டிக்காளை வச்சசுமையை இழுக்காது (உ.வ.).* 2. வண்டிமேடு பார்க்க; see *vaṇḍi-mēḍu.*

*[வண்டி + பேட்டை = பயண வண்டி முதலியன தங்குமிடம்.]*

**வண்டிப்பைதா** *vaṇḍi-p-paidā,* பெ.(n.) வண்டிச் சக்கரம்; cart-wheel.

**வண்டிபுட்பம்** *vaṇḍi-puṭpam,* பெ.(n.) அசோகு; a kind of tree-*Saraca indica.*

**வண்டிப்பொறை** *vaṇḍi-p-poṟai,* பெ.(n.) வண்டிப்பாரம், 1 பார்க்க; see *vaṇḍi-p-pāram.*

*[வண்டு → வண்டி + பொறை. பொறை = பாரம்.]*

**வண்டிமசகு** *vaṇḍi-mašagu,* பெ.(n.) வண்டிச் சக்கரத் துளையிலிடும் மை (இ.வ.); wheel-grease.

*[வண்டி + மதி→மசி→மசகு.]*

மசகு = வைக்கோற் கரியோடு விளக்கெண்ணெய் கலந்து மசித்த (குழைத்த) வண்டிமை.

**வண்டிமசி** *vaṇḍi-maši,* பெ.(n.) வண்டிமசகு (இ.வ.) பார்க்க; see *vaṇḍi-mašagu.*

*[வண்டி + மதி→மசி.]*

**வண்டிமலைச்சி** *vaṇḍi-malaicci,* பெ.(n.) சிற்றூர்ப் பெண்தெய்வம்; a village goddess.

**வண்டிமலையன்** *vaṇḍi-malaiyaṉ,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டத்தில் வணங்கப் படுகின்ற தெய்வம்; male deity worshiped in South Arcot district.

**வண்டிமேடு** *vaṇḍi-mēḍu,* பெ.(n.) வண்டி நிற்குமிடம் (கொ.வ.); cart-stand.

**வண்டிமை** *vaṇḍi-mai,* பெ.(n.) வண்டிமசகு பார்க்க; see *vaṇḍi-mašagu.*

*[வண்டி + மசி→மயி→மை = வண்டிமசகு.]*

**வண்டியகவாய்** *vaṇḍi-y-agavāy,* பெ.(n.) வண்டிச் சக்கரத் துளை (வின்.); axle-tree hole.

*[வண்டி + அகவாய் = உள்ளிடம்.]*

**வண்டியம்** *vaṇḍiyam,* பெ.(n.) செடிவகை (மலை.); pink-tinged white sticky mallow.

**வண்டியிலை** *vaṇḍi-y-ilai,* பெ.(n.) சக்கரத்தின் வட்டையையும், குடத்தையும் ஒன்றிணைக்கும் பன்னிரண்டு மரக் கட்டைகள்; 12 wood pieces connecting the wheel rim and kuḍam. *வண்டி எல (பே.வ.).*

மறுவ. ஆரக்கால்.

*[வண்டி + இலை. இலை = வண்டிச்சக்கரத்தின் ஆரக்கால்.]*

**வண்டியேர்க்கால்** *vaṇḍi-yēr-k-kāl,* பெ.(n.) வண்டியின் மத்தியில் மையக் கட்டையின் மேல் நுகத்தடியுடன் பொருத்தப்பட்ட நீண்ட வலுவான மரக்கட்டை; a long sturdy plank centrally fixed in the bullock easy longitudinally. *வண்டி ஏர்க்காலு (பே.வ.).*

**வண்டிரம்** *vaṇḍiram,* பெ.(n.) வாகை மேற் புல்லுருவி; a parasite plant on the tree vāgai.

**வண்டில்**[1] *vaṇḍil,* பெ.(n.) வெங்காரம்; borax.

**வண்டில்**[2] *vaṇḍil,* பெ.(n.) 1. வண்டி[1], 1 (வின்.) பார்க்க; see *vaṇḍi.* 2. சக்கரம் (நாமதீப. 461); wheel.

*[வண்டு→வண்டி→ வண்டில்.]*

**வண்டிவட்டை** *vaṇḍi-vaṭṭai,* பெ.(n.) வண்டிச் சக்கரம் உருப்பெறுதற்குரிய ஆறு வளைவான மரச்சட்டங்கள்; six rims of wheel. *வண்டி வட்(ை)ட (பே.வ.).*

*[வண்டி + வட்டு→வட்டை]*

**வண்டினரி** *vaṇḍiṉari,* பெ.(n.) 1. வண்டரிசி பார்க்க; see *vaṇḍariši.* 2. ஆறு புள்ளி வண்டு கொளுஞ்சி, செடிவண்டு, குருவண்டு, குழிவண்டு, நீருக்குள் சுழல் வண்டு, எரிவண்டு, கழுதை வண்டு இவையெல்லாம் குருமுறைக்கு எடுத்தவை; all the above kinds of beetles are useful in alchemy.

**வண்டு**[1] *vaṇḍu,* பெ.(n.) 1. வண்டு, சுரும்பு, தேன், ஞிமிறு என நால்வகைப்பட்ட அறுகாற் சிறுபறவை; chafer, bee of four kinds, viz., *vaṇḍu, šurumbu, tēṉ, ñimiṟu.* *"யாழிசை கொண்ட வினவண்டிமிர்ந் தார்ப்ப" (கலித். 131). வண்டு மொய்க்காத அரும்பும், வண்ணான் துவைக்காத துணியும் சிறக்காது (உ.வ.).* 2. நறுமணத்தை நாடிப் பறக்கும் அறுகாற் சிறு பறவை வகை; a kind of bee. *"வண்டு கண்மகிழ்தே னினங்காள்" (சீவக. 892). வண்டு ஏறாத மரமில்லை (பழ.). வண்டு தூரத்திலேயே வாசனை அறியும் (இ.வ.).*

*[வள்→வண்→ வண்டு (வே.க.4, பக்.100).]*

**வண்டு**[2] *vaṇḍu,* பெ.(n.) 1. மறவருள் ஒரு உட்பிரிவைச் சார்ந்தவர் (புறநா. 263, உரை); a sub-sect of *Maṟava* caste. 2. அம்பு (பிங்.); arrow. *"ஒழிகில வேள்கர வண்டே" (வெங்கைக்க. 18).* 3. குற்றம் (பிங்.); fault.

4. கைவளை (பிங்.); bracelet. *"கைவண்டுங் கண்வண்டு மோடக் கலையோட" (ஆதி. உலா. 98).* 5. சங்கு (பிங்.); conch. 6. நூல் (பிங்.); thread. 7. எட்டாம் நாண் மீனான கொடிறு (பூசம்) (பிங்.); the eighth *naksatra.* 8. சிற்றொழுக்கம் (நாமதீப. 650); lowly or mean conduct. 9. செம்மரம்; coromandel redwood.

*[வண் →வண்டு.]*

**வண்டு³** *vaṇḍu,* பெ.(n.) 1. பெருவிரலும் அணிவிரலும் வளைந்து, நுனியொன்றிச் சிறுவிரல் நிமிர்ந்து, சுட்டு விரலும் நடுவிரலும் நெகிழ வளைந்து நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which the tips of the thumb and the ring-finger are joined and the little finger is held erect, while the fore finger and the middle finger are bent and held loosely together, one of 33 *iṇaiyā-viṇai-k-kai.* 2. நாட்டிய முத்திரைக்குரிய அலிக்கை வகை (சிலப். 3, 18, உரை, பக்.92, கீழ்க்குறிப்பு); a hand-pose.

*[வண் →வண்டு.]*

பெருவிரலும் அணிவிரலும் வளைந்து நுனியொன்றில் சிறுவிரல் நிமிர்ந்து, சுட்டு விரலும, அணிவிரலும் நெகிழ வளைந்து நிற்பது (சிலம்பு. 3:18 அடியார்க்கு).

**வண்டு⁴** *vaṇḍu,* பெ.(n.) 1. தவசத்தை அளக்கும் பொழுது கீழே விழுவனவற்றைப் பிடித்துக் கொள்ளும் வைக்கோற் கூடு; small coil of twisted straw used to catch what drops out while measuring grain. 2. சுற்றுப் பயணத்தில் மாடுகளின் உணவாக வண்டியின் மேலிடும் வைக்கோற் பழுதை; twist or bundle of straw thrown over the cover of a bullock cart, as fodder for bullocks during the journey.

*[வண் →வண்டு.]*

**வண்டுக்காய்** *vaṇḍu-k-kāy,* பெ.(n.) வெண்டைக்காய்; ladies finger-*Hibiscus esculentus.*

**வண்டுக்குள்ளரிசி** *vaṇḍukkuḷḷariśi,* பெ.(n.) வண்டரிசி பார்க்க; see *vaṇḍariśi.*

**வண்டுகட்டு-தல்** *vaṇḍu-kaṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) பானையின் வாயைச் சீலையால் மூடிக் கட்டுதல்; to cover and tie up the mouth of a pot with cloth, in preserving things. *'நலமதாய்க் கவசம் தன்னில் நயமதாய் வண்டுகட்டி'.*

*[வண்டு + கட்டு-,]*

**வண்டுகட்டல்** *vaṇḍu-kaṭṭal,* பெ.(n.) வேடு கட்டுதல்; the film that is formed on boiling milk and other substances.

**வண்டுகடி** *vaṇḍu-kaḍi,* பெ.(n.) 1. வண்டு கொட்டுகை; sting of wasp or beetle. 2. தோல் மே லுண்டாகும் சொறி வகை (இ.வ); ring worm. 3. வண்டுகொல்லி, 2 (இ.வ.) பார்க்க; see *vaṇḍu-kolli.*

*[வண்டு + கடி.]*

**வண்டுகடியிலை** *vaṇḍu-kaḍi-y-ilai,* பெ.(n.) வண்டுகொல்லி, 2 (கொ.வ.) பார்க்க; see *vaṇḍu-kolli .*

**வண்டுகாயப்போடு-தல்** *vaṇḍu-kāyap pōḍu-,*19 செ.குன்றாவி.(v.t.) உப்பளப் பாத்தியிலிருந்து வாரியெடுக்கும் உப்பை, அப்பாத்தியின் வரப்பிலேயே குவித்து, ஒருநாள் முழுவதும் வெயிற் காய்ச்சலிடுகை; drying proeers on the ridges of beds in salt pans by heaping.

**வண்டுகுத்தி** *vaṇḍu-kutti,* பெ.(n.) குருவி வகை (சங்.அக.); a small bird.

*[வண்டு + குத்தி.]*

ஒருகா. வண்டுகொத்தி →வண்டுகுத்தி.



**வண்டுகூட்டு-தல்** *vaṇḍu-kūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) பாத்தியிலிருந்து உப்பை அவ்வரப்பிலேயே வாரிக் குவித்தல்; to heap salt on the ridge itself after collecting from salt beds.

*[வண்டு + கூட்டு-,]*

**வண்டுகொல்லி**[1] *vaṇḍu-kolli,* பெ.(n.) 1. சீமையகத்தி; large-leafleted-eglandular senna. 2. தோல் நோய்தீர்க்கும் மருந்துச் செடிவகை; ring worm shrub. 3. மரவகை (மலை.); deodar cedar. 4. சண்பகம் (மூ.அ.); champak.

**வண்டுகொல்லி**[2] *vaṇḍu-kolli,* பெ.(n.) 1. ஆடு தின்னாப் பாளை; a creeper, which is very bitter and ash coloured-*Aristo lochia bracteata.* 2. தேவதாரம்; a kind of fragrant wood-Eagle wood.

**வண்டுச்சிலந்தி** *vaṇḍu-c-cilandi,* பெ.(n.) ஒருவகைப் புண் (சீவரட். 354); a burning blister.

**வண்டுச்சொறி** *vaṇḍu-c-coṟi,* பெ.(n.) வண்டு கடிப்பதினால் உண்டான சொறி; urticaria caused by sting of beetles.

**வண்டுசுற்று-தல்** *vaṇḍu-šuṟṟu-,* 5 செ. கு.வி. (v.i.) வைக்கோல் முதலியவற்றைப் புரியாக நெருங்கச் சுற்றிக் கட்டுதல்; to make twists of straw and pack them.

*[வண்டு + சுற்று-.]*

**வண்டுணாமலர்மரம்** *vaṇḍuṇā-malar-maram,* பெ.(n.) 1. செண்பகம்; champak. 2. வேங்கை ... East Indian kino.

*[வண்டு + உண்- + ஆ (எ.ம.இ.நி.) + மலர் மரம்.]*

**வண்டுணி** *vaṇḍuṇi,* பெ.(n.) தாமரை (சா. அக.); lotus.

**வண்டுநாணான்** *vaṇḍu-nāṇāṉ,* பெ.(n.) வண்டுகளை வில்லின் நாணாகவுடைய காமன் (நாமதீப. 59); *kāma,* as having a row of beetles for the string of His bow.

*[வண்டு + நாண் + ஆன்.]*

**வண்டுநெல்லி** *vaṇḍu-nelli,* பெ.(n.) வண்டு கொல்லி (இங்.வை.) பார்க்க; see *vaṇḍu-kolli.*

**வண்டுமரம்** *vaṇḍu-maram,* பெ.(n.) ஓர் வகை கொடி; beetle tree.

**வண்டுமூலி**[1] *vaṇḍu-mūli,* பெ.(n.) உப்பு; the three salts obtained from the efflooresence grown on the soil of fuller's earth.

**வண்டுமூலி**[2] *vaṇḍu-mūli,* பெ.(n.) வெள்ளெருக்கு; madar shrub with white flowers-*Calotrops gigantea.*

வண்டுருவன் *vaṇḍuruvaṉ*, பெ.(n.) திருமால் (நாமதீப 50); *Viṣṇu.*

வண்டுவிடு-தல் *vaṇḍu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வைக்கோல் முதலியவற்றைப் புரியாகத் திரித்தல்; to twist straw.

*[வண்டு + விடு.]*

வண்டுளம் *vaṇḍuḷam,* பெ.(n.) நந்தியா வட்டம்; white flower of a plant which yields milky juice when wounded - East India rosebay.

வண்டுறுக்கு-தல் *vaṇḍuṟukku-,* 5 செ.கு.வி. (v.i.) உதட்டை மடக்கிக் கடித்தல் (திருநெல்.); to curl and bite one's lips.

*[வண்டு + உறுக்கு-, உறுக்குதல் = சினத்தல்.]*

வண்டுறை *vaṇḍuṟai,* பெ.(n.) எழுத்தில்லா வோசை (சது.); inarticulate sound.

வண்டெச்சில் *vaṇḍeccil,* பெ.(n.) தேன்; honey. *"இளநீர் வண்டெச்சில் பயறப்பவகை" (திருப்பு. விநாயகர். 3).*

*[வண்டு + எச்சில்.]*

வண்டேறாமலர் *vaṇḍērā-malar,* பெ.(n.) அப்பொழுதலர்ந்த மலர் (வின்.); flower just blown, as not visited by the bee.

*[வண்டு + ஏறு + ஆ (எ.ம.இ.நி.) + மலர்.]*

வண்டை[1] *vaṇḍai,* பெ.(n.) வெண்டை (சங். அக.); a plant, yielding ladies-finger- *Hibiscus esculentus.*

க. பெண்டெ.

*[முள் → (மள) → வள் → வண்டை.]*

வண்டை[2] *vaṇḍai,* பெ.(n.) கொச்சையானது; which is corrupt or vulgar. *'வண்டைப் பேச்சு' (இ.வ.).*

*[வண்டு → வண்டை.]*

வண்டையிழைப்புளி *vaṇḍai-y-iḻaip puḷi,* பெ.(n.) தச்சுக் கருவி வகை (இ.வ.); beading plane.

*[வண்டு → வண்டை + இழைப்பு + உளி.]*



வண்டோதரி *vaṇḍōdari,* பெ.(n.) இராவண னுடைய மனைவி; the wife of *Rāvaṇāṉ.* *"அழகமர் வண்டோதரிக்குப் பேரருளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானை" (திருவாச.18 : 2).*

*[மண்டோதரி → வண்டோதரி]*

வண்டோதரிவேர் *vaṇḍōdari-vēr,* பெ.(n.) ஒருவகை மூலி; a kind of medicine.

வண்டோலம் *vaṇḍōlam,* பெ.(n.) 1. வண்ட வாளம் 1, 2 பார்க்க; see *vaṇḍa-vāḷam.* 2. ஒருவனது முந்தைய வரலாறு; one's antecedents. *'உன் வண்டோல மெல்லாம் நன்றாய் அறிவேன்' (திருநெல்.).*

வண்ண ஆவாரம் *vaṇṇa-āvāram,* பெ.(n.) தகரை; ring worm plant, cassia tora.

**வண்ணக்கச்சோலம்** *vaṇṇa-k-kaccōlam,* பெ.(n.) ஓமாலிகை முப்பத்திரண்டனு ளொன்று (சிலப். 6 : 77, உரை); one of 32 *ōmāligai.*

*[வண்ணம் + கச்சோலம். கச்சோலம் = ஒருவகை நறுமணப் பொருள்.]*

வண்ணக்கச்சோல முள்ளிட்ட முப்பத்திரு வகை ஓமாலிகையும் ஊறவைத்த நன்னீரில் அரச மகளிரும் செல்வப் பெண்டிரும் குளித்து வந்தனர்.

**வண்ணக்கட்சி** *vaṇṇa-k-kaṭci,* பெ.(n.) வண்ணக்களஞ்சியம் பார்க்க; see *vaṇṇa-k-kaḷañjiyam. "என்பேர் வண்ணக்கட்சி" (தமிழ்நா. 242).*

*[வண்ணம் + கட்சி.]*

**வண்ணக்கம்மர்** *vaṇṇa-k-kammar,* பெ.(n.) வண்ணவேலை செய்வோர்; painters. *"வத்தநாட்டு வண்ணக்கம்மரும்" (பெருங். உஞ்சைக். 58, 44).*

*[வரணம் → வண்ணம்+கருமம் → கம்மம் → கம்மர்.]*

**வண்ணக்கலிவிருத்தம்** *vaṇṇa-k-kali-viruttam,* பெ.(n.) சந்தம் அமைந்த கலி மண்டிலப்பா; rhythmic stanza of "*Kali-maṇḍila-p-pā*" kind.

*[வரணம்→வண்ணம் + கலிவிருத்தம். (கலி விருத்தம் = நாற்சீரடி நான்காய் வரும் கலிப்பாவின் இனம்).]*

சந்தம் அமைந்த வண்ணக்கலி விருத்தப் பாடல் வருமாறு :-

*"மால்ஏந்திய குழலார்தரு மயல்போம் இடர் அயல்போம்*
*கோல்ஏந்திய அரசாட்சியும் கூடும் புகழ் நீடும்*
*மேல்ஏந்திய வானாடர்கள் மெலியாவிதம் ஒருசெவ்*
*வேல்ஏந்திய முருகாஎன வெண்ணீ றணிந்திடிலே"*
*(அருட்பா).*

**வண்ணக்கவுதாரி** *vaṇṇa-k-kavudāri,* பெ.(n.) கவுதாரி வகையுளொன்று; painted trancolin-*Francolinus-pictus.*

மறுவ. கதுவாலி.

*[வண்ணம் + கதுவாலி→கவுதாரி]*

தமிழ் நாட்டின் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளிற் காணப்படும் இக்கவுதாரி, 31 விரலம் உயரம் வரை வளரும் தன்மைத்து. கரும் புள்ளிகளுடன், கோடுகளும், வெள்ளைப் பட்டைகளும் கொண்ட பழுப்பு நிற உடலைக் கொண்டது. தவசங்கள், புல் விதைகள், சிறு பழங்கள், கரையான் ஆகியவற்றை இரையாகக் கொள்ளும் இவை, 4 முதல் 8 வரையிலான எண்ணிக்கையில் முட்டையிடும்.



**வண்ணக்களஞ்சியம்** *vaṇṇa-k-kaḷañjiyam,* பெ.(n.) வண்ணம் (சந்தப் பாடல்) பாடுவதிற் சிறந்த பாவலன்; poet, specially skilled in composing *vaṇṇam* verses. *'வண்ணக் களஞ்சியப் புலவர்' (இ.வ.).*

*[வரணம்→வண்ணம் + களஞ்சியம்.]*

**வண்ணக்கஞ்சாத்தனார்** *vaṇṇakkañ-cāttaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்களுள் ஒருவர்; an ancient *Śaṅgam,* poet. *இவர்தம் பாடலொன்று திருவள்ளுவ*

மாலையில் இடம் பெற்றுள்ளது. வண்ணக்கஞ்சாத்தனார் திருக்குறளை வேதத்திற்கு ஒப்பாகக் கூறியுள்ள பாடல், வருமாறு :- "ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது சீரியது என்று ஒன்றைச் செப்பரிதால் – ஆரியம் வேதம் உடைத்து; தமிழ்திரு வள்ளுவனார் ஒது குறட்பா உடைத்து" (திருவள்ளுவமா.43).

[வண்ணம்→வண்ணகம் வண்ணக்கம் + சாத்தன்→சாத்தனார்.]

பண்டைக் காலத்தில் பெரும்பாலும் வணிகரே சாத்தன் என்னும் பெயர் தாங்கியிருக்கவும் இப்புலவர் பெருந்தகை போலும் கூலவாணிகன் சீத்தலை சாத்தனார் மற்றும் இன்னபிற பெயர் பெற்றாரையும் எண்ணிப் பார்க்க.

**வண்ணக்களஞ்சியப்புலவர்** *vaṇṇa-k-kaḷañjiya-p-pulavar,* பெ.(n.) 18–ஆம் நூற்றாண்டில் "முகைதீன் புராணம்" என்னும் நூலை இயற்றிய புலவர்; a poet, who composed the work titled *Mugaidīṉ purāṇam* in 18C. *இவர் மதுரைக்கு அண்மையிலுள்ள 'மீசல்' என்னுமூரிற் பிறந்தவர். 'வண்ணம்' பாடுவதிற் சிறந்த பாவலராவார். இவர் பாடிர் அல்தின் புலவர் எனவும் அழைக்கப்படுகிறார்.*

*[வண்ணக்களஞ்சியம் + புலவர்.]*

**வண்ணக்கன்**[1] *vaṇṇakkaṉ,* பெ.(n.) 1. மாசுண்ட துணிவெளுக்கும் தொழிலாளி; washerman. 2. வண்ணச் சித்திரங்கள் எழுதுபவன்; artist. *"சனநாதத் தெரிந்த வலங்கை வேளைக் காறரில் வண்ணக்கன் ஐயாறனாகிய சித்திரயாளி" (தெ.கல்.தொ.17, கல்.238). முதல் இராசராசன் கி.பி. 1007 முதல் இராசராசன் திருநெய்த்தானம் கல்வெட்டு.*

*[வண்ணம் → வண்ணக்கன்.]*

**வண்ணக்கன்**[2] *vaṇṇakkaṉ,* பெ.(n.) கட்டி பொற்காசு, பொற் கட்டிகளை (நிறுத்தும் உரைத்தும்) நோட்டஞ் செய்பவன்; tester of coins. *"வண்ணக்கன் சாத்தனார்" (நற்.). "வண்ணக்கர் காணத்தை நீலமென்றலும்" (தொல். சொல். 16, சேனா).*

மறுவ. காசுநோட்டகன்.

*[வண்ணம் → வண்ணகன் → வண்ணக்கன்.]*

பொற்காசை அல்லது பொற்கட்டியை உரைத்துப் பார்த்து, அதன்மாற்று வண்ணத்தால் (நிறத்தால்) காசின் அல்லது பொற் கட்டியின் இயல்பறியும், நோட்டகன். சரியானவற்றின்மேல் முத்திரையிடுவதும் இவ்வலுவலர்தம் பொறுப்பாம். கழகக்காலப் புலவராகிய வடம வண்ணக்கன் தாமோதரனார் (புறம்.172), காசுநோட்டக மரபினர் என்பர்.

**வண்ணக்கன்**[3] *vaṇṇakkaṉ,* பெ.(n.) 1. செயலலுவலர்; executive. 2. மேலாளர்; manager.

**வண்ணக்கன்சொருமருங்குமரனார்** *vaṇṇakkaṉ-śorumaruṅ-kumaraṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்களுளொருவர்; an ancient *śaṅgam* poet. *இவர் நாணய நோட்டகராக இருந்தவர், குறிஞ்சித் திணையை சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் பாடலில் தலைமகன் இரவில் வருநெறியினை கூறியது சிறப்புடையது. நற்றிணையில் ஒரு செய்யுளை பாடியதாக கூறுவர். அப்பாடல் வருமாறு:–'*

*"விளிவில் அரவமொடு தனிசிறந் துரைஇ*
*மழையெழுந் திறுத்த நளிர்தூங்கு சிலம்பிற்*
*கழையமல்பு நீடிய வானுயர் நெடுங்கோட்டு*
*இலங்குவெள் ளருவி வியன்மலைக் கவாஅன்*

*அரும்புவா யவிழ்ந்த கருங்கால் வேங்கைப்*
*பொன்மருள் நறுவீ கன்மிசைத் தாஅம்*
*நன்மலை நாட நயந்தனை யருளாய்*
*இயங்குநர் மடிந்த அயந்திகழ் சிறுநெறிக்*
*கடுமா வழங்குதல் அறிந்தும்*
*நடுநாள் வருதி நோகோ யானே" (நற்; 257).*

**வண்ணக்கன்தத்தனார்** *vaṇṇakkaṉ-tattaṉār*, பெ.(n.) கழகக் காலப் புலவர்களுள் ஒருவர்; an ancient *Śaṅgam* poet. *கழகக் காலத்தில் தத்தனார் என்னும் பெயரில் குடில் தத்தனார், நெய்தல் தத்தனார், கணக்காயன் தத்தனார், நெடுந்தத்தனார் என புலவர்கள் வாழ்ந்துள்ளனர்.*

*[வண்ணக்கன் + தத்தன்→தத்தனார்.]*

**வண்ணக்குங்குலு** *vaṇṇa-k-kuṅgulu*, பெ.(n.) மருந்திலை வகையுளொன்று; a kind of medicinal leaves.

**வண்ணக்குதிரை** *vaṇṇa-k-kudirai*, பெ.(n.) வரிக்குதிரை; piebald horse. *வண்ணக் குதிரை மண்ணைத் தின்னும்போது, தட்டுவாணிக் குதிரை கொள்ளுக்கு அழுகிறதாம் (பழ.).*

*[வரி+அணம்→வரணம்→வண்ணம்+ குதிரை (வரி = நிறம், வரைவு).]*

பல நிறக் கோடுள்ள குதிரை.



**வண்ணக்குழிப்பு** *vaṇṇa-k-kuḻippu*, பெ.(n.) வண்ணச் செய்யுளின் சந்தவாய்பாடு (வின்.); a set or formal harmonic rhythm for *vaṇṇam* compositions.

*[வரணம்→வண்ணம் + குழி→குழிப்பு.]*

**வண்ணக்குனிப்பு** *vaṇṇa-k-kuṉippu*, பெ.(n.) வண்ணக்குழிப்பு (வின்.) பார்க்க; see *vaṇṇa-k-kuḻippu.*

*[வண்ணம் + குனிப்பு.]*

**வண்ணகம்** *vaṇṇagam*, பெ.(n.) 1. விளக்கமுற வண்ணித்துப் புகழ்கை (தொல். பொருள். 452, உரை); elaborate eulogy. 2. கலிப்பாவினுறுப்புளொன்று (வீரசோ. யாப். 11, உரை); a component of kali verse. 3. சந்தனம் (யாழ்.அக.); sandal wood. 4. நறுமணம் (யாழ்.அக.); fragrance. *வண்ணித்து வருதலின் வண்ணகம் எனப்படும் (யாப்.84).*

Skt. வர்ணக.

*[வள்→வண்→வண்ணம்→வண்ணகம் (வே.க. 4:97).]*

ஒ.நோ. திண்ணம்→திண்ணகம். வண்ணகம் = அராகம் என்னும் வண்ணவுறுப்பு (மு.தா.2, பக்.78) வண்ணித்துப் புகழ்தலான் வண்ணகம் எனப்படும் (தொல்.பொருள்.452, பேரா.).

**வண்ணகவொத்தாழிசை** *vaṇṇaga-v-ottāḻisai*, பெ.(n.) 1. அராகம், தாழிசை, எண், வாரம் என்னும் உறுப்புக்களைச் சிறப்பாகக் கொண்டு வரும் கலிப்பாவகை (தொல். பொருள். 452); a variety of *kali* verse in which *arāgam*, *tāḻisai*, *eṇ* and *vāram* are

the main features. 2. வண்ணகவொத் தாழிசைக்கலிப்பா; see *vaṇṇaga-v-ottāḻiśai-k-kalippā.*

*[வண்ணகம் + ஒத்தாழிசை.]*

ஆறுறுப்பமைந்த வண்ணக வொத்தாழிசைக் கலி தொன்றுதொட்டு வழங்கும் தமிழ்ச்செய்யுள் வகை; ஒருவன் தன் காதலை வெளிப்படுத்தற்கும் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி கடவுளை வழுத்தற்கும், வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாபோல், மிகப் பொருத்தமான செய்யுள் வகையை வேறெம் மொழியிலுங் காணவியலாது (வே.க.4: பக்.97).

வண்ணக வொத்தாழிசைக்கலி என்னும் செய்யுள் வகை, தொல்காப்பியர் முந்து நூலிற்கண்ட இலக்கணக் குறியீடாதலின், தலைக்கழகக் காலத்தது என்று அறிதல் வேண்டும்.

**வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா** *vaṇṇaga-v-ottāḻiśai-k-kalippā,* பெ.(n.) வண்ணகவொத்தாழிசை பார்க்க; see *vaṇṇaga-v-ottāḻiśai.*

*[வண்ணகம்+ஒத்தாழிசை→வண்ணகவொத் தாழிசை + கலிப்பா.]*

அசையடி முன்னர், அராகம் வந்து, அனைத்துறுப்புகளும் அமையும் வண்ணம் இயற்றப்படும் பா, வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா எனப்படும். வண்ணகவொத்தாழிசைக் கலி என்னும் செய்யுள்வகை. தொல்காப்பியர் முந்து நூலிற் கண்ட இலக்கணக் குறியீடாதலின், தலைக் கழகக் காலத்தது என்பது வெள்ளிடை மலை.

வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா செய்யுளிற் பயின்றுவரும் பான்மைபற்றி, அமிதசாகரனார், யாப்பருங்கலக் காரிகையுள் உரைப்பது வருமாறு:-

"அம்போதரங்க உறுப்பிற்குந் தாழிசைக்கும் நடுவே அராக உறுப்புப் பெற்று தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறுறுப்பினையும் உடைத்தாய் வருமெனின், அது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா எனப்படும்:-

வண்ணகவொத்தாழிசையின் அடிவரை யறையாவது:- சிறுமை நான்கடி, பெருமை எட்டடி, இடை ஐந்தடியானும், ஆறடியானும், ஏழடியானும் வரப்பெறும் எனக்கொள்க.

என்னை, "அளவடி முதலா வனைத்தினு நான்கடி முதலா யிரட்டியு முடுகியு னடக்கும்".

வண்ணகவொத்தாழிசைக்கலிப்பா பாடல் வருமாறு:-

**இன்னே எழுக செயல்முனைப் புற்றே!**
(வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா)

தரவு

*நிறைபுலத்துப் பெருவளஞ்சேர் நெடியபுகழ்*
*நிலைகொண்ட*
*மறைமலையின் மனத்தரங்கில்*
*மலர்ந்தெழுந்த ஒளிப்பிழம்பு*
*மொழிஞாயி றெனவுலகந் தொழுதேத்தும்*
*பாவாணர்*
*ஒழிவின்றிப் பலதுறையும் விழிவைத்துப்*
*பெரிதாய்ந்தே*
*உலகமுதன் மொழியீதென் றுறுதியுற*
*நிறுவியசீர்*
*இலகுவள மிகுதமிழுக் கியல்புரிமை*
*யுடையோய் கோள்!*

**தாழிசை**

*நீணிலத்தின் உடன்றோன்றி நிலைசிறந்த*
*குடிமரபின்*
*மாணுயர்ந்த ஒருமூவர் வழிவந்தோய்*
*நிலவரையில்*
*பெரியதமிழ் நலமறியார் அறிவாரைப்*
*பேணுகிலார்*

*அரியணைக்கே குறிவைப்பார் அவர்க்கோல்*
*செய்தனையே!*
*தென்கடல் நெடும்பரப்புத் திகழ்ந்தபெருங்*
*குமரியினைத்*
*தன்வயிற் றுளதாக்கிக் காண்டதன்றி*
*நின்மடியால்*
*வழிமொழிகள் வலக்காரம் வரம்பிகந்து*
*மிகநீளக்*
*கொழிதமிழ் வழங்குநிலம் மேன்மேலுங்*
*குறுகியதே!*
*நீள்தமிழுக் கயலவர்கள் நின்னாட்டிற்*
*காலூன்றி*
*ஆள்கின்ற நிலையும்பெற் றார்க்கின்றார்*
*நின்னவரோ*
*பலநாடுஞ் சென்றவற்றைப் பசுமையுறச்*
*செய்தாலுஞ்*
*சிலவேனும் உரிமையின்றிச் சீரழியும்*
*நிலையென்னே!*

### அராகம்

*மாட்சியின் உயர்தமிழ் வழிபடு மொழியிலை*
*எனமிக இழிவுசெய் மதம்!*
*ஆட்சியின் அலுவலில் தமிழிடம் பெறுவதில்*
*தடையுறும் அரசியல் நெறி!*
*காட்சியின் இனியநல் மழலையர் முதலனை*
*வரும்பயில் வதுபிற மொழி!*
*மீட்சியும் தமிழ்க்கினி யுளதுகொல் எனமிக*
*உளைவது பெரியவர் மனம்!*

### நாற்சீர் ஈரடி நான்கு அம்போதரங்கம்

*புறம்போக்கு மொழிச்சொற்கள்*
*இடையிடையே புக்கதனால்*
*திறம்பட்ட செந்தமிழின் சீர்குலைவை*
*யறிகிலையால்!*
*துறைதொறுந் தமிழ்வளமை புதுக்குவதற்*
*கிடையூறாய்த்*
*திறைகொள்வார் தங்கொள்கை செயற்படுதல்*
*உணர்கிலையால்!*

### நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்

*தாய்மொழியிற் கையொப்பம் இடுவதில்லை*
*தமிழன் கை!*
*தாய்மொழியைப் பலுக்குதற்குப் புரள்வதில்லை*
*தமிழன் நா!*
*தமிழிசையைக் கேட்கிலவால் தமிழன்றன்*
*செவியிணையே!*
*தமிழ்வரியைக் காண்கிலவால் தமிழன்றன்*
*கண்ணிணையே!*

### முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்

*கலப்படத்தால் திரிந்தது மொழி!*
*கயவர்களால் இழிந்தது கலை!*
*மறைகளினால் மறைந்தது மதி!*
*மனுவினரால் பிறழ்ந்தது முறை!*
*சடங்குகளால் புதைந்தது மதம்!*
*சாதிகளாய்ச் சிதைந்தது குடி!*
*வீறாப்பாய் இழிந்தது மறம்!*
*வெறுந்தரகால் ஒழிந்தது பொருள்!*

### இருசீர் ஓரடிப் பதினாறு அம்போதரங்கம்

*வரலாற்றுத் திரிப்பொருபால்!*
*வழிபாட்டுக் கெடுப்பொருபால்!*
*அரசியலில் புரட்டொருபால்!*
*அலுவலர்செய் அலைப்பொருபால்!*
*கட்சிகளின் பிணக்கொருபால்!*
*கல்வியகப் பறிப்பொருபால்!*
*திரைப்படத்துத் தீங்கொருபால்!*
*உரைப்பாட்டுக் கரைப்பொருபால்!*
*சாதிகளின் தழைப்பொருபால்!*
*தாளிகைகள் கதைப்பொருபால்!*
*காட்சியொலி அழிம்பொருபால்!*
*ஆட்டத்தின் அலைப்பொருபால்!*
*பணியில்லாப் பிணியொருபால்!*
*பரிசுச்சீட் டீர்ப்பொருபால்!*
*நடிப்பவரைச் சுவைப்பொருபால்!*
*நாடேகுஞ் செலவொருபால்!*

தனிச்சொல்

*எனவாங்கு*

சுரிதகம்

*மொழியும் மொழிகொள் மக்களும் நிலனும்*
*இழிவுறக் கிடந்த பழிபடு நிலைமை*
*போய்மடிந் தொழியத் தாய்மொழி போற்றி*
*ஆய்வின் அறிவின் துறைபல கண்டு*
*தன்னுரிமை வாழ்க்கை நலம்பெற*
*இன்னே எழுக செயல்முனைப் புற்றே!*

குமரிக்கண்டத் தமிழர் செய்யுட் கலையின் கொடுமுடியேறி நாலும் ஐந்தும் ஆறுமான உறுப்புகளையுடைய நால்வகைக் கலிப்பாக்களையும் யாத்திருந்தனர்.

**வண்ணகூபிகை** *vaṇṇa-kūbigai,* பெ.(n.) மைக்கூடு (யாழ்.அக.); ink-bottle.

**வண்ணச்சுவையமுதம்** *vaṇṇa-c-cuvai-y-amudam,* பெ.(n.) வண்ணவமுதம் பார்க்க; see *vaṇṇa-v-amudam.* *"வண்ணச் சுவையமுதம் வைக" (சீவக. 2604).*

*[வண்ணச் + சுவை + அமுதம்.]*

**வண்ணஞ்சேர்ந்தோன்** *vaṇṇa-ñ-cērndōṉ,* பெ.(n.) வீரபாகுதேவர் (நாமதீப.37); *vīrabāhu-tēvar.*

**வண்ணடை** *vaṇṇaḍai,* பெ.(n.) துகில் வகையு ளொன்று (சிலப். 14, 108, உரை); a fine cloth.

*[வண்ணம் + ஆடை→ அடை.]*

பண்டைத் தமிழ்நாட்டில் நெய்யப்பட்டதாக அடியார்க்கு நல்லாரால் குறிக்கப்பெற்ற 36 ஆடை வகைகளுளொன்று.

**வண்ணத்தரு** *vaṇṇa-t-taru,* பெ.(n.) பாடல் வகையுளொன்று (யாழ்.அக.); a kind of poetic composition.

*[வண்ணம் + தரு.]*

**வண்ணத்தான்** *vaṇṇattāṉ,* பெ.(n.) ஆடைக்கு நிறமூட்டுபவன்; dhobi. *"ஸ்ரீ வைஷ்ணவ வண்ணத்தான் திருப்பரி வட்டங்களை அழகிதாக வாட்டி" (ஈடு. 5, 10, 6).*

மறுவ. வண்ணான்

ம. வண்ணத்தாந.

*[வண்ணம்→ வண்ணத்தான்.]*

**வண்ணத்தி** *vaṇṇatti,* பெ.(n.) சொறி, தேமலைப் போக்கும் ஓர் பூடு; a shrub used to cure skin disease.

**வண்ணத்துப்பூச்சி** *vaṇṇattu-p-pūcci,* பெ.(n.) வண்ணாத்திப்பூச்சி பார்க்க; see *vaṇṇātti-p-pūcci.* *"மயிர்ப்புழுவிலிருந்து வண்ணத்துப் பூச்சி பரிணமித்தாலென்ன" (ஈச்சுரநிச்சயம், 167).*

*[வண்ணம் + அத்து + பூச்சி.]*



**வண்ணதூதன்** *vaṇṇa-tūdaṉ,* பெ.(n.) திருமுகங் கொண்டு செல்வோன் (யாழ்.அக.); messenger carrying letters.

*[வண்ணம் + தூது→தூதன்.]*

ஒருகா. அஞ்சலாள்.




வண்ணத்திப் பூச்சிகள்

இந்தியாவில் உள்ள பலவகை வண்ணத்திகளில் இங்கு 10 வகைகள்

**வண்ணநங்கைவித்து** *vaṇṇa-naṅgai-vittu,* பெ.(n.) அழிஞ்சில் விதை, நாட்பட்ட சீலக்கழிச்சலுக்குப் பயன்படுத்தப்படும் கூட்டுச் சரக்குகளு ளொன்று (சா.அக.); a compound medicine of chronic dysentery..

**வண்ணநீர்** *vaṇṇa-nīr,* பெ.(n.) அரக்கு நீர்; vermilion water sprinkled on festive occasions. *"வண்ணநீர் கரந்த வட்டு" (பரிபா. 11, 55).*

*[வண்ணம் + நீர்.]*

**வண்ணப்படம்** *vaṇṇa-p-paḍam,* பெ.(n.) வரணந்தீட்டி வரைந்தெழுதிய படம்; colourful picture.

*[வண்ணம் + படம்.]*

**வண்ணப்பரிமளம்** *vaṇṇa-p-parimaḷam,* பெ.(n.) முகமதியர் பாவியத்தின் ஆசிரியர்; author of epic titled 'Mugamadiyar'.

**வண்ணப்புறக்கந்தரத்தனார்** *vaṇṇappuṟa-k-kandarattaṉār,* பெ.(n.) கழகப் புலவர்; an ancient Šaṅgam poet.

இவருடைய இயற்பெயர் கந்தரத்தன். பாலைத் திணைப்பாடலிற் பயின்றுவரும் 'வண்ணப்புறவு' என்ற சொற்சிறப்பு நோக்கி, அச்சொல்லே இவர்க்கு அடைமொழியாக அமைந்தது. நற்றிணையில் ஒரு பாடலும், அகநானூற்றில் ஒரு பாடலும் இடம்பெற்றுள்ளது. வண்ணப் புறக் கல்லாடனார் என்ற பெயராலும் அழைக்கப்படுகின்றார். இவர் பாடியவை அகம் : 49-ஆம் பாடலும் நற்றிணையில் 71-ஆம் பாடலுமாகும்.

*"மன்னாப் பொருட்பிணி முன்னி இன்னதை*
*வளையணி முன்கைநின் இகுளைக்*
*குணர்த்தெனப்*
*பன்மாண் இரத்தி ராயிற் சென்மென*
*விடுநா ளாதலு முரியள் விடினே*
*கண்ணும் நுதலும் நீவி முன்னின்று*
*பிரிதல் வல்லிரோ ஐய செல்வர்*
*வகையமர் நல்லில் அகவிறை யுறையும்*
*வண்ணப் புறவின் செங்காற் சேவல்*
*வீழ்துணைப் பயிருங் கையறு முரல்குரல்*
*நும்மிலள் புலம்பக் கேட்டொறும்*
*பொம்ம லோதி பெருவிதிப் புறவே" (நற்;71)*

**வண்ணம்**[1] *vaṇṇam,* பெ.(n.) 1. அளவு; level. 2. ஒப்பீடு; comparison. 3. வீதம்; ratio. 4. முறைமை; arrangement, order. *"நாழிக்கு நெல்லு தூணிவண்ணமாக ஓராட்டை நாளைக்கு நெல்லு 120 கலமும்" (தெ. கல். தொ. 14, கல். 210). நெல்லு குறுவாள் கூலி ஏற்றி அஞ்சிரண்டு வண்ணத்தால் அறுநாழி உழக்கும்" (தெ. கல். தொ. 19. கல். 210).*

**வண்ணம்**[2] *vaṇṇam,* பெ.(n.) 1. நிறம்; colour. *"வெளியார்முன் வான்சுதை வண்ணங் கொளல்" (குறள், 714).* 2. ஓவியம் வரைதற்குரிய வண்ணக் கலவை; paint drawing paste. *"பலகை வண்ணநுண் டுகிலிகை" (சீவக. 1107).* 3. சாந்துப் பொது (யாழ்.அக.); unguent; pigment. *வண்ணத்துக்குக் கிண்ணம் போடுகிறான் (இ.வ.).*

*[வரணம் →வண்ணம்.]*

குமரிக் கண்டத் தமிழர் எஃகுச் செவியும், கூர்ங்கண்ணும் நுண்மதியும் உடையராதலின், வண்ணங்களை யெல்லாம் நுட்பமாய் வகுத்து அவற்றிற்கு வெள்ளை, கருப்பு, நீலம், பச்சை, மஞ்சள், சிவப்பு, கத்தரி (Violet) யென வெவ்வேறு பெயரிட்டிருந்தனர். பண்டை யிலக்கிய மெல்லாம்

செய்யுள் வடிவிலேயே இருந்ததினாலும், அவையும் அடியோடு இறந்துபட்டமையாலும், பல வண்ணப் பெயர்களும் இறந்தொழிந்தன. இன்றும் மீன்பெயர்களில் வெண்ணிற வகைகளைக் குறிக்க வெள்ளி, வெள்ளை, வெளிச்சி வெண்ணெய், வெளுவை முதலிய சொற்கள் ஆளப்பெற்றிருப்பது கவனிக்கத்தக்கது.

**வண்ணம்[3]** *vaṇṇam,* பெ.(n.) 1. அழகு; beauty, handsome. *"பிறைநுதல் வண்ண மாகின்று" (புறநா. 1).* 2. இயற்கையழகு; unadorned, natural beauty. *"வண்ணமுந் தேசு மொளியுந் திகழ" (பரிபா. 12, 20).* 3. ஒப்பனை (அக.நி.); adorning, decoration. 4. குணம்; nature; character; quality. *"நிரலுடைமையும் வண்ணமுந் துணையும்" (குறிஞ்சிப். 31).* 5. நன்மை (யாழ்.அக.); good. 6. சிறப்பு; merit, virtue. *"கைவண்ண மிங்குக் கண்டேன்" (கம்பரா. அகலிகை.82).* 7. மாலை (நாஞ்.); garland. 8. செயல் (இலக்.அக.); action. 9. இத்தனை மடங்கு என்பதைக் குறிக்கும் எண் (வின்.); co-efficient.

**வண்ணம்[4]** *vaṇṇam,* பெ.(n.) 1. கனம்; thickness. *"யானைக் கையினளவு வண்ணமும் நீளமும் உள்ளது யாளியின் தும்பிக்கை.* 2. வடிவு (பிங்.), அமைப்பு; form, figure. 3. சாதி (தொல். பொருள்.82, உரை); caste. 4. இனம், பிரிவு; species; class. *"வண்ண வண்ணத்த மலர்" (குறிஞ்சிப். 114).* 5. வகை, வடிவம், ஒழுங்கு; way, manner, method. *"தலைச்செல்லா வண்ணத்தால்" (குறள், 561).*

*[வள்→வண்→வண்ணம்.]*

வண்ணம் என்னும் சொல், வகை என்னும் பொருளில், அவ்வண்ணம், இவ்வண்ணம், எவ்வண்ணம் என, இருவகை வழக்கிலும், பெருவழக்காய் வழங்குதலையும் நோக்குக (மு.தா.2, பக்.79).

**வண்ணம்[5]** *vaṇṇam,* பெ.(n.) 1. பாவின்க ணிகழும் ஓசை வேறுபாடு (தொல். பொருள். 313); verse rhythm. 2. சந்தப்பாட்டு; rhythmic verse with regular beats. வண்ணத்திரட்டு. 3. முடுகியல் வண்ணம் (பிங்.); a part of kali verse. 4. பண் (சது.); melody. 5. இசைப் பாட்டு; song. *"கோதை தானே யிட்டதோர் வண்ணந்தன்னை" (சீவக. 1696).*

*[வள்→வண்→வண்ணம்.]*

ஒருகா. பண் → பண்ணம் → வண்ணம் என்றுமாம் (தென்.கட்.பக்.9).

குறிலும் நெடிலும் அளபெடையிரண்டும் இனம் மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம் (தொல்.பொருள்.314, பேரா.). ஒரு பாவின்க ணிகழும் ஓசை (விகற்பம்) வேறுபாடு (தொல்.செய்யுள்.1, நச்.).

எழுத்து, வரைவு, பூச்சு, நிறம், வகை, செய்யுள், ஓசை வகை முதலான பொருண்மைகளில் இச்சொல் பயின்று வரும் (மு.தா.2, பக்.78).

அருணமலை (கிரி)யார் பாடிய திருப்புகழ் வண்ணங்களும் பட்டினத்தார் பாடிய உடற்கூற்று வண்ணமும், அகப்பொருட் செய்யுள்களில் வரும் உள்ளுரையுவமையும் போன்ற அருஞ்சுவை யின்பக்கூறுகள் வேறெம்மொழி யிலக்கியத்திலும் காணக்கிடையா.

வண்ணம் பற்றி மொழிஞாயிறு கூறுவது வருமாறு:

செய்யுள் ஒலிப்புமுறை, ஓசை, சந்தம், வண்ணம் என மூவகைப்படும். அவற்றுள் வண்ணம்

என்பது, எல்லா அடியும் மாத்திரையும் எழுத்தினமும் சீரும் ஒத்துவரப் பாடுவது. அதை, நூற்றுக்கணக்கான வகையில், பல்லாயிரமாகப் பாடுவது இறைவன் திருவருள் பெற்றவர்க்கே இயலும் (த.இ.வ.48).

*"சந்தவேறுபாடு" (தொல்.பொருள்.525 பேரா.)*

*"குணம்" (நச்.குறிஞ்.31). சந்தம் (தொல். செய்யுள்.234, நச்.).*

**வண்ணம்பூசு-தல்** *vaṇṇam-pūsu-*, 5 செ.கு.வி. (v.i.) வண்ணக் கலவையை சுவற்றில் பூசுதல்; to rub the colour or paint.

*[வரணம்→வண்ணம் + பூசு-.]*

**வண்ணமகள்** *vaṇṇa-magaḷ*, பெ.(n.) கோலஞ் செய்வாள்; lady's maid. *"வண்ண மகளி ரிடத்தொடு தம்மிடம்...... கொள்ளார்" (ஆசாரக். 83).*

*[வண்ணம் + மகள்.]*

**வண்ணமாதிரு** *vaṇṇa-mātiru*, பெ.(n.) 1. தூவல், கரிமுனை; pen; pencil. 2. தூதி; female messenger or ambassador.

**வண்ணமாதிருகை** *vaṇṇa-mādirugai*, பெ.(n.) கலைமகள் (யாழ்.அக.); *kalaimagaḷ* the Goddess of learning.

**வண்ணமாலை** *vaṇṇa-mālai*, பெ.(n.) நெடுங் கணக்கு (சங்.அக.); the alphabet.

*[வரணம்→வண்ணம் + மாலை.]*

**வண்ணமாயிரு-த்தல்** *vaṇṇa-māyiru-*, 4 செ.கு.வி.(v.i.) தடிமன் அல்லது பருமனாக இருத்தல்; to be stout or bulky, to be far.

**வண்ணவமுதம்** *vaṇṇa-v-amudam*, பெ.(n.) பருப்புச்சோறு (சீவக.2604, உரை); cooked rice mixed with dholl.

*[வண்ணம் + அமுதம்.]*

**வண்ணவிருத்தம்** *vaṇṇa-viruttam*, பெ.(n.) சந்தம் அமைந்த ஆசிரிய மண்டிலப்பா; rhythmic stanza of *āśiriya-maṇḍila-p-pā*.

*[வரணம்→வண்ணம் + விருத்தம்.]*

வண்ணவிருத்தத்தில் அமைந்த ஆசிரிய மண்டிலப்பா வருமாறு:-

*"திருமால் ஆதியர் உள்ளம் கொள்ளும் ஓர்*
*செவ்விய வேலோனே*
*குருமாமணியே குணமணியே சுரர்கோவே*
*மேலோனே*
*கருமா மலம்அறு வண்ணம் தண்ணளி*
*கண்டே கொண்டேனே*
*சுதியே பதியே கனநிதியே கற்கண்டே*
*தேண்தேனே*
*அருமா தவம்உயர் நெஞ்சம் விஞ்சிய*
*அண்ணா விண்ணவனே*
*அரசே அமுதே அறிவுருவே முருகையா*
*மெய்யவனே*
*உருவாகிய பவபந்தம் சிந்திட ஓதிய வேதியனே*
*ஒளியே வெளியே உலமெலாம் உடையோனே*
*வானவனே" (அருட்பா).*

**வண்ணவுவமம்** *vaṇṇa-v-uvamam*, பெ.(n.) நிறம்பற்றிக் கூறும் உவமை (தொல். பொருள். 276); a simile in which the subject of comparison is colour.

*[வரணம்→வண்ணம் + உவ→உவமம்.]*

**வண்ணவொழுங்கு** *vaṇṇa-v-oḻuṅgu*, பெ.(n.) 1. அகரமுதலி வரிசை; alphabetical order. 2. சாதியொழுங்கு; caste-code.

*[வண்ணம் + ஒழுகு→ஒழுங்கு.]*

**வண்ணவோதனம்** *vaṇṇa-v-ōdaṉam,* பெ.(n.) புளி, எள், சருக்கரை முதலான சுவையூட்டும் பொருட்கள் கலந்தட்ட சோறு (விதான. யாத்திரை.8); a preparation of cooked rice mixed with condiments.

*[வண்ணம் + ஓதம்→ஓதனம்.]*

**வண்ணனை**[1] *vaṇṇaṉai,* பெ.(n.) வண்ணித்துப் புகழ்கை; description, delineation.

*[வண்ணம்→வண்ணி→வண்ணனை.]*

**வண்ணனை**[2] *vaṇṇaṉai,* பெ.(n.) 1. புனைவுரை (தண்டி.பொது.7); desrciption, interpre -tation, delineation. 2. புகழ்ந் தேத்துகை, முகமன் மொழிகை (யாழ்.அக.); praise, flattery.

**வண்ணனைமொழி** *vaṇṇaṉai-moḻi,* பெ.(n.) காட்சி, கருத்து என்னும் இருவகைப் பொருள்களையும் வண்ணத்தால் வரைதல் அல்லது சொல்லாற் புகழ்ந்து விரித்துக் கூறுதல்; expressing the two different matters of depiction and description by means painting or by narration of words.

*[வண்ணம் → வண்ணி → வண்ணனை + மொழி.]*

**வண்ணனைமொழிநூல்** *vaṇṇaṉai-moḻi-nūl,* பெ.(n.) விளக்கமொழியியல்; descriptive linguistics. *'வண்ணனை மொழிநூல் உண்மைக்கு மாறானது' (மொழி ஞாயிறு).*

*[வண்ணனை + மொழிநூல்.]*

மொழிநூல் மூவகைப்படும். அவை யாவன :-

1. வண்ணனை மொழிநூல் (Descriptive linguistics).

2. வரலாற்று மொழிநூல் (Historical linguistics).

3. ஒப்பியன் மொழிநூல் (Comparative linguistics).

கி.பி.18–ஆம் நூற்றாண்டுமுதல், அமெரிக்காவில், வண்ணனை மொழிநூல் தனிக்கலையாக, வழங்கியும், வளர்ந்தும் வருகிறது.

முதன்முதலாக தொல்காப்பியரே, மொழி நூற்கலைக்கு, கி.மு.7–ஆம் நூற்றாண்டிலேயே வித்திட்டுள்ளார் என்பதனைக் கீழ்க்காணும் சொல்லதிகார நூற்பாக்களால் அறியலாம்.

*"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே" (தொல்.640).*

*"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" (தொல்.877).*

*"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்*
*றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (தொல்.880).*

*"வடசொற் கிளவி, வடவெழுத் தொரீஇ*
*எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" (தொல்.884).*

அமெரிக்கர் வளர்த்து வரும் வண்ணனை மொழிநூலுள், பலகுறைகள், உண்மைக்கு மாறாகவும், தமிழுககுக் கேடாகவும் மலிந்துள்ள பாங்கினை மொழிஞாயிறு, வண்ணனை மொழிநூலின் வழுவியல் என்னும் நூலுள் விளக்கமாக உரைத்துள்ளார்.

மேனாடுகளில் கடந்த முந் நூற்றாண்டுகளாக வளர்க்கப்பெற்று வரும் மொழிநூல், தொடக்கத்தில் ஆங்கிலத்தில், (Science of speech, Science of Language, Linguistic Science, Linguistics, Glottology, Philology) எனப் பல பெயர்களைப் பெற்றிருந்தது. இவற்றுள் (Linguistics, Philology)

என்னும் இரண்டே இறுதியில் நிலைபெற்றன. மொழிநூல், ஒரே சமயத்தில், வரலாறு தழுவியதாகவும் ஒப்பு நோக்கியதாகவும் பல கூறுகளாகப் பகுக்கப்படாததாகவும் உள்ளது. மாக்கசு முல்லர் (Max Muller), விற்றினி (Whitney), செசுப் பெர்சென் (Jespersen) முதலிய மொழி நூற் பேரறிஞரெல்லாம் மேற்கூறிய முறையிலேயே மொழி நூலை வளர்த்து வந்தனர். ஆயின், அண்மையில், சில மேலை மொழி நூலறிஞர்,

**வண்ணாங்குன்னை** *vaṇṇāṅkuṉṉai,* பெ.(n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

**வண்ணாத்தான்** *vaṇṇāttāṉ,* பெ.(n.) வண்ணான் (ஈடு. 4, 3, 5); washerman, dhobi.

*[வண்ணத்தான்→வண்ணாத்தான்.]*

**வண்ணாத்தி**[1] *vaṇṇātti,* பெ.(n.) வண்ணாரப் பெண்; washer-woman, dhobi. *"வண்ணானுக்கு வண்ணாத்திமேல் ஆசை; வண்ணாத்திக்குக் கழுதைமேல் ஆசை" (பழ.).*

*[வண்ணான்(ஆ.பா.)→வண்ணாத்தி (பெ.பா.)]*

**வண்ணாத்தி**[2] *vaṇṇātti,* பெ.(n.) 1. வண்ணாத்திக் குருவி; washer woman robin. 2. வெண்ணிறமும் நான்கு அங்குல வளர்ச்சியுமுடைய ஆற்று மீன்; fresh-water fish, silvery, attaining 4 in. in length. 3. பூநீறு (யாழ்.அக.); a medicinal powder. 4. வண்ணாத்திப்பூச்சி (வின்.); butterfly.

**வண்ணாத்தி**[3] *vaṇṇātti,* பெ.(n.) நாகணவாய்ப்புள்; myna.

**வண்ணாத்தி**[4] *vaṇṇātti,* பெ.(n.) 1. ஒருவகை வெள்ளை உவர்மண் (வின்.); light white-coloured earthy matter containing a great proportion of carbonate soda. 2. ஒருவகை மருந்துப்பொடி (யாழ்.அக.); a medicinal powder.

**வண்ணாத்திக்கிழங்கு** *vaṇṇātti-k-kiḻaṅgu,* பெ.(n.) பல பிள்ளைக் கிழங்கு; a tuber.

*[வண்ணாத்தி + கிழங்கு.]*

**வண்ணாத்திக்குருவி** *vaṇṇātti-k-kuruvi,* பெ.(n.) 1. பறவை வகையுளொன்று; washer woman robin. 2. விசிறிக் குருவி; white-browed fantail.

*[வண்ணாத்தி + குருவி.]*



**வண்ணாத்திகதிர்** *vaṇṇātti-kadir,* பெ.(n.) வழலை; effloresence grown on the soil of fuller's earth.

*[வண்ணாத்தி + கதிர்.]*

**வண்ணாத்திமீன்** *vaṇṇātti-mīṉ,* பெ.(n.) கருப்பு வெள்ளை வரிகளும், மஞ்சள் நிறமான துடுப்புமுடைய ஓர் அழகான கடல் மீன்; butterfly fish.

*[வண்ணத்துமீன்→வண்ணாத்திமீன்.]*

**வண்ணாத்திப்பூச்சி** *vaṇṇātti-p-pūcci,* பெ.(n.) பலவண்ணத்துப் பூச்சி (இ.வ.); butterfly.

*[வண்ணத்துப்பூச்சி →வண்ணாத்திப்பூச்சி.]*

பலநிறம் அல்லது கோலமுள்ள பூச்சி.

**வண்ணாப்பண்டி** *vaṇṇā-p-paṇḍi,* பெ.(n.) வண்ணார் துணிகளை யேற்றும் வண்டி (யாழ்.அக.); washerman's cloth loading cart.

**வண்ணார்கற்காசு** *vaṇṇār-kaṟ-kāšu,* பெ.(n.) ஆடைகளின் அழுக்கெடுக்கும் தொழிலாளிகள், அழுக்ககற்றுவதற்கும், உலர்த்துவதற்கும், நீர்நிலைகளில் கற்கள் பரப்பின இடத்துக்கு கொடுக்கும் வரி; a kind of tax or cess paid by washermen in lieu of washing and drying activities on a place of stony surface.

*[வண்ணார் + கற்காசு.]*

**வண்ணார்பந்தம்** *vaṇṇār-pandam,* பெ.(n.) துணிப்பந்தம்; torch made of rags.

*[வண்ணார் + பந்தம்.]*

**வண்ணாற்பற்று** *vaṇṇār-paṟṟu,* பெ.(n.) அரையில் வரும் மேகப்படை வகை; dhobi's itch.

**வண்ணார்பாட்டம்** *vaṇṇār-pāṭṭam,* பெ.(n.) வண்ணார்கற்காசு பார்க்க; see *vaṇṇār-kaṟ-kāšu.*

*[வண்ணார் + பாட்டம்.]*

**வண்ணார்வரி** *vaṇṇār-vari,* பெ.(n.) வண்ணாரிடமிருந்து அரசு பெற்ற பழையவரி (S.I.I.i.81); tax collected from washer man.

*[வண்ணார் + வரி.]*

**வண்ணாரத்துறை** *vaṇṇāra-t-tuṟai,* பெ.(n.) வண்ணான்றுறை (வின்.) பார்க்க; see *vaṇṇāṉṟuṟai.*

*[வண்ணார்→வண்ணார + துறை.]*

**வண்ணாரப்பாறை** *vaṇṇāra-p-pāṟai,* பெ.(n.) வரிவகை (புதுக்.கல். 90); a petty cess.

மறுவ. வண்ணாரப்பாட்டம்.

**வண்ணாரம்** *vaṇṇāram,* பெ.(n.) உடுத்துக் களைந்த துணியைத் தூய்மை செய்யும் தொழில்; profession of a dhoby or washerman. *'வண்ணாரந் துன்னார மச்சிகமே' (நீலகேசி. 280).*

**வண்ணாரமாடன்** *vaṇṇāra-māḍaṉ,* பெ.(n.) உடம்பு கொதித்தல், இரத்தம் கக்குதல் முதலிய குணத்தைக் காட்டும் ஓர் பைசாசம்; a develish disease causing vomiting of blood etc.

**வண்ணான்¹** *vaṇṇāṉ,* பெ.(n.) 1. வழலை பார்க்க; see *vaḻalai.* 2. சவர்க்காரம், மருந்துகளின் அழுக்காகிய குற்றங்களைப் போக்கும் குரு; one that removes flaws in the medicine.

*[வள்→வண்→வண்ணம் + ஆன் - வண்ணான்.]*

*மண்ணுதல் = கழுவுதல், தூய்மையாக்குதல். ஒருகா. மண்→மண்ணான்→வண்ணான். மண் = உவர்மண். மண்ணான் = உவர்மண்ணினால், ஆடையின் அழுக்ககற்றுபவன்*

**வண்ணான்²** *vaṇṇāṉ,* பெ.(n.) குடிமக்கள் பதினெண்மருள் ஆடைவெளுக்கும் இனத்தான் (பிங்.); washerman, a person belonging to the washerman caste, dhobi one among 18 in number. *வண்ணானுக்கு நோய் வந்தால் கல்லோடே.*

*[மண்ணான்→வண்ணான்.]*

**வண்ணான்காரம்** *vaṇṇāṉ-kāram,* பெ.(n.) உவர்மண்; fuller's earth.

மறுவ. களர்நிலம், ஆடைமண்.

*[வண்ணான் + காரம்.]*

**வண்ணான்குறி** *vaṇṇāṉ-kuṟi,* பெ.(n.) சேங்கொட்டை; marking nut, dhoby's nut-*Semi carpus anacardium.*

**வண்ணான்தாழி** *vaṇṇāṉ-tāḻi,* பெ.(n.) பழந்தமிழர் விளையாட்டுகளுள் ஒன்று; one of the games of the ancient *Tamils.*

*[வண்ணான் + தாழி.]*

இவ்விளையாட்டின் பெயர் : பாண்டி நாட்டில், வண்ணாரக் குலத்தையும் தாழ்த்தப்பட்ட வகுப்புகளையும் சேர்ந்த சிறுவர், வண்ணான் துறையில் ஆடையொலிப்பது போல் நடித்தாடும் ஆட்டு வண்ணான் தாழி. தாழி என்பது அலசுவதற்குத் துணிகள் வைக்கப்பட்டிருக்கும் பெரும்பானை.

ஆடுவார் தொகை : பொதுவாக, நால்வர்க்கு மேற்பட்ட பலர் இதை ஆடுவர்.

ஆடு கருவி : ஒரு துணி மூட்டை இதற்கு வேண்டுங் கருவியாம்.

ஆடுகளம் : ஊர்ப் பொட்டலிலும் அகன்ற தெருவிலும் இது ஆடப்பெறும்.

ஆடுமுறை : ஆடுவார் அனைவரும் ஒவ்வொரு துணிபோட வேண்டும். அவை ஒரு மூட்டையாகக் கட்டப்படும். அதை ஒருவன் எடுத்துத் தன் பிடரியில் வைத்துக்கொண்டு, மருள்கொண்ட தேவராளன்போல் ஆடி வரிசையாய் நிற்கும் ஏனையோருள் ஒருவன்மேல் கண்ணை மூடிக்கொண்டு எறிவான். அது யார்மேல் விழுந்ததோ அவன் அதைத் தன் பிடரியில் வைத்து இருகையாலும், பிடித்துக்கொண்டு கீழே உட்கார வேண்டும். மூட்டையை எறிந்தவன், அதில் இரண்டோர் அடியடித்துவிட்டு, "கூழ் குடிக்கப் போகிறேன்", என்று சொல்லிச் சற்றுத் தொலைவுபோய் மீள்வான். அதற்குள் ஏனையோரெல்லாம் அம் மூட்டையில் தொப்புத் தொப்பென்று அடித்து மகிழ்வர். போய் மீண்டவன் அவருள் ஒருவனைத் தொடமுயல்வான். அவன் அணுகியவுடன் அனைவரும் ஓடிப்போவர். அவன் ஒருவனைத் தொடுமுன் இன்னொருவன் மூட்டையில் அடித்துவிடின், அத் தொடுகை கணக்கில்லை. இன்னொருவன் மூட்டையில் அடிக்குமுன் ஒருவனைத் தொட்டுவிடின் தொடப்பட்டவன் மூட்டையை வாங்கித் தன் பிடரிமேல் வைத்துக்கொண்டு கீழே உட்கார வேண்டும். முன்பு கீழே உட்கார்ந்திருந்தவன் பின்பு பிறரைத் தொடுபவனாவன். முன்பு தொட்டவன் பின்பு பிறரொடு சேர்ந்து மூட்டையில் அடித்து விளையாடுவான்.

இங்ஙனமே, நெடுகலும், தொடப்பட்டவன் மூட்டை வைத்திருப்பவனாகவும், மூட்டை வைத்திருந்தவன் தொடுபவனாகவும், தொட்டவன் மூட்டையில் அடித்து விளையாடு பவனாகவும், மாறிக்கொண்டே வருவர்.

புதிதாய்த் தொடு பவனாகும் ஒவ்வொருவனும், முதலாவது மூட்டையில் இரண்டடி யடித்துவிட்டுக் கூழ் குடிக்கப் போவதும், பின்பு மீண்டும் பிறரைத் தொடுவதும் மரபாம்.

மூட்டையில் அடித்து மகிழும் ஒவ்வொருவனும் பின்பு மூட்டை தாங்கி அடிவாங்குவதற்க இடமிருத்தலால், முன்பு பிறன் முதுகில் மூட்டையிருந்தபோது கண்ணோட்டமின்றி வன்மையாய் அடித்தவன். பின்பு தன் வினைவிளைவை மிகுதியாய் அறுக்கநேரும்.

விளையாட்டு முடிந்தபின், அவனவன் துணியை அவனவன் எடுத்துக்கொள்வான்.

ஆட்டைத் தோற்ற விளக்கம் : வண்ணாருள் ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு துறையுண்டு. ஒருவன் இன்னொருவன் துறையில் வெளுப்பது, வசதிக் குறைவுமட்டு மன்றி இழப்பு முண்டு பண்ணும். பழங்காலத்தில் ஒவ்வொரு வண்ணானும் வண்ணாரப் பாட்டம் அல்லது வண்ணாரப் பாறை என்னும் தொழில்வரி செலுத்த வேண்டியிருந்தது. அதனால் ஒருவன் பாறையில் இன்னொருவன் வெளுப்பது, மிகக் கண்டிப்பாய்த் தடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆயினும், ஒருவன் பாறை மிக வசதியுள்ளதாகவிருப்பின், அவன் தான் வழக்கமாக உண்ணுங் கூழுண்ணச் சென்றிருக்கும்போது, வரும்போது, அவர் ஓடியிருப்பர். அவன் அவரைத் துரத்தி அடித்திருப்பான், அல்லது கடுமையாய்த் திட்டியிருப்பான்.

இச் செயலையே இவ் விளையாட்டு உணர்த்துகின்றது. தொடுபவன் வண்ணானையும், மூட்டை பாறையையும், அதில் அடிப்பவர் அவன் கூழுண்ணச் சென்றிருக்கும்போது அதைப் பயன்படுத்தும் பிற வண்ணாரையும், ஒருவனை ஒடித்தொடுவது திருட்டுத்தனமாய்ப் பாறையைப் பயன்படுத்திய ஒருவனைப் பிடித்து அடிப்பதையும், குறிப்பதாகக் கொள்ளப்படும்.

ஆட்டின் பயன் : ஓடும் ஒருவனைப் பிடிப்பதும் ஒருவனாற் பிடிபடாமல் ஓடிப்போவதுமான வினைப்பயிற்சி, இவ் விளையாட்டின் பயனாம்.

**வண்ணான்பூமி** *vaṇṇāṉ-pūmi,* பெ.(n.) வண்ணான்காரம் பார்க்க; see *vaṇṇāṉ-kāram.*

*[வண்ணான் + பூமி.]*

**வண்ணான்றுறை** *vaṇṇāṉṟuṟai,* பெ.(n.) வண்ணான் ஆடை வெளுக்கும் நீர்த்துறை (சினேந். 174); washerman's ghat in a river or tank. *வண்ணான் துறைக்கல்லிலே வந்தபேரெல்லாம் தோய்க்கலாம் (பழ.).*

*[வண்ணான் + துறை.]*

**வண்ணானவுரி[1]** *vaṇṇāṉ-avuri,* பெ.(n.) நீலவுரி; indigo-a plant that yields indigo.

**வண்ணானவுரி[2]** *vaṇṇāṉ-avuri,* பெ.(n.) செடி வகை (பெ.மாட்.); a plant.

**வண்ணானழுக்கு[1]** *vaṇṇāṉ-aḻukku,* பெ.(n.) சூதகம்; menses.

**வண்ணானழுக்கு[2]** *vaṇṇāṉ-aḻukku,* பெ.(n.) வண்ணானிடம் வெளுக்கப்போடும் அழுக்காடை (அறப். சத. 64); soiled or dirty clothes for washing.

*[வண்ணான் + அழுக்கு.]*

உடுத்திக் களைந்ததும் மாசு படிந்ததுமான, சட்டை, வேட்டி, துண்டு முதலியன வண்ணானழுக்கெனக் கொள்ளவுஞ் சொல்லவும் பெறும் நாட்டுப்புற மக்களின் நல்லதமிழ்ச் சொற்களு ளொன்று.

**வண்ணானிடத்தி** *vaṇṇāṉ-iḍatti,* பெ.(n.) கழுதை; ass.

**வண்ணானுக்குவாலை** *vaṇṇāṉukku-vālai,* பெ.(n.) அண்டச் சுண்ணம்; calcified powder of egg.

**வண்ணானைக்கும்பிட்டார்[1]** *vaṇṇāṉai-k-kumbiṭṭār,* பெ.(n.) முதல் குலோத்துங்கன் ஆட்சியில், தகடூர் நாட்டைக் காத்திருந்த அதிகாரியின் பெயர்; an official who protected the *Tagadūr* country during *kulōtuṅgaṉ.* *"திருக்காளத்தியினின்றும் ஆண்டார் வண்ணானைக் கும்பிட்டா ரெழுந்தருளி" (தெ.கல்.தொ. 7, கல். 533).*

**வண்ணானைக்கும்பிட்டார்[2]** *vaṇṇāṉai-k-kumbiṭṭār,* பெ.(n.) சேரமான் பெருமா ணாயனார்; *Cēramāṉperumāṇāyaṉār.*

**வண்ணி–த்தல்** *vaṇṇi-*,4 செ.குன்றாவி. (v.t.) 1. புனைந்துரைத்தல்; to depict, describe. *"வண்ணித்தலா வதில்லா" (சீவக. 2458).* 2. போற்றி வணங்கிக் கூறுதல்; to praise, submissively. 3. மிகைபடக்கூறுதல் (வின்.); to exaggerate. 4. உவமித்தல் (வின்.); to illustrate by anology. 5. விரித்தல்; to expatiate, to write copiously.

*[வண்ணம் →வண்ணி–.]*

பல வகையில் அல்லது பல்வேறு ஓசைபடப் புகழ்ந்து பாடுதல். ஓர் ஓவியத்தைப் பல்வேறு நிறங்களாலும், நுண்வினைகளாலுஞ் சிறப்பிப்பதும், ஓர் அணிகத்தைப் (வாகனத்தை) பன்னிற அழகிய பொருள்களாற் சுவடிப்பதும், ஓர் உடம்பைப் பன்னிற ஆடையணிகளால் அழகுபடுத்துவதும் போன்று, இறைவனை அல்லது ஒரு தலைவனைப் பல்வேறு கருத்துகளாலும், பல்வகைச் செய்யுள் உறுப்புகளாலும், சிறப்பித்துப் புகழ்தல்; அல்லது பொருளிடங் காலங்களுள் ஒன்றன் இயல் செயலுறுப்புக ளெல்லாவற்றையும் விளத்தமாக (விவரமாக) எடுத்துக் கூறுதல் (வே.க.4, பக்.97).

**வண்ணிகன்** *vaṇṇigaṉ*,பெ.(n.) எழுத்தாளன் (சது.); writer.

**Skt.** வர்ணிக.

*[வண்ணி →வண்ணிகன்.]*

**வண்ணிகை** *vaṇṇigai*, பெ.(n.) மருந்துச் சரக்கு வகை; a drug. *"வண்ணிகை வங்கப் பாவையோடு" (பெருங்.மகத.17, 150).*

**வண்ணிகைத்திருக்கொற்றக்குடை** *vaṇṇigai-t-tiru-k-koṟṟa-k-kuḍai*, பெ.(n.) ஒப்பனை செய்யப்பட்ட கொற்றக் குடை; decked or adomed king's count. *"வண்ணிகைத் திருக்கொற்றக்குடை மகுடம் அடுத்து விளக்கின பறளை உள்பட ஒன்று" (தெ.கல்.தொ.2, கல்.1).*

**வண்பயன்** *vaṇ-payaṉ*,பெ.(n.) முழுமையான விளைச்சல்; abundant yield. *"வசையிலா வண்பயன் குன்றும்" (குறள், 239).*

*[வண் + பயன்.]*

மல் → வல் → வள் → வண் + பயன். பயன் = விளைச்சல். 'மல்' என்னும் வேரடி வளமைப் பொருள் பயப்பது. "மல்லல் வளனே" என்று தொல்காப்பியர் உரியியலில் உரைப்பது காண்க. வண்பயன் என்பது முழுமையான வளமிக்க நல்விளைச்சலைக் குறித்தது.

**வண்புகழ்** *vaṇ-pugaḻ*,பெ.(n.) கொடையால் வருஞ்சிறப்பு; reputation for liberality. *"வண் புகழ் மூவர்" (தொல். பொருள். 391).*

*[வண்–மை + புகழ்.]*

**வண்மை** *vaṇmai*,பெ.(n.) 1. ஈகை; bounty, liberality. *"வண்மையு மன்ன தகைத்து" (நாலடி, 269).* 2. தன்மை, இயல்பு, சிறப்பு, வளமை, குணம் (பிங்.); quality, property, nature, speciality. *"ஈது..... கருமஞ் செய்வார் வண்மை" (திருவாத. பு. திருப்பெருந். 93).* 3. அழகு (யாழ்.அக.); beauty. 4. வாய்மை (பிங்.); truth. *"வாரா தொழியா னெனும் வண்மையினால்" (கம்பரா. உருக்காட். 6).* 5. வளப்பம் (திவா.), (குறள், 239); fruitfulness, fertility, abundance. 6. வலிமை (பிங்.); strength. 7. புகழ் (சூடா.); praise, reputation. 8. வாகைமரம் (சங். அக.); sirissa.

*[வள் → வண்மை. வண்மை = வளம், வளத்தாலாகும் ஈகை.]*

**வணக்கம்** *vaṇakkam*, பெ.(n.) 1. வளைகை; bending. *"வில்வணக்கந் தீங்கு குறித்த மையான்" (குறள். 827).* 2. வழிபாடு; adoration, reverence; worship. *"குறைவிலா வென்னொடு வணக்கங் கூறி" (கம்பரா. தைல. 38).* 3. நூன்முகம மூன்றனுள், தெய்வம், குரு முதலியவர்க்கு வணக்கங் கூறுகை; verses in praise of god, guru, etc., at the commencement of a work, one of nūṉ-mugam. *"வாழ்த்தும் வணக்கமும் பொருளியல் புரைத்தலுமென மூவகைப்படும்" (சி.போ. பா. மங்க. பக்.1).* 4. கீழ்ப்படிகை (யாழ்.அக.); obedience, submision. 5. பெருமைப் படுத்துகை (யாழ்.அக.); respect, regard. 6. அணாவைக் குறிக்கும் குழூஉக் குறி (C.N.); cant for an 'anna', a coin.

தெ. வங்கு; க. பக்கு; ம. வணக்கம்.

*[வள் →(வண்) → வண → வணங்கு → வணக்கு → வணக்கம்.]*

மக்கள் கடவுளையும், தாழ்ந்தோர் உயர்ந்தோரையும் வணங்கும்போது, உடம்பு வளைதலால், வளைதற் கருத்தில் வணக்கக் கருத்துப் பிறந்தது (மு.தா.2, பக்.71).

**வணக்கவொடுக்கம்** *vaṇakka-v-oḍukkam*, பெ.(n.) வணங்கி ஒடுங்கி ஒழுகுகை; deferential or reverential behaviour.

மறுவ. ஒடுக்கவணக்கம்.

*[வணங்கு → வணக்கு → வணக்கம் + ஒடுக்கு → ஒடுக்கம்.]*

ஒருவரை யொருவர் நெருங்கும்போது நெருக்கமும் அதனால் ஒடுக்கமும் ஏற்படுவது இயல்பு. இடைவெளி ஒடுக்கம், பொருளொடுக்கம், ஒழுக்கவொடுக்கம் எனும் மூவகை யொடுக்கத்துள் இவ்வணக்க வொடுக்கமென்பது ஒழுக்க வொடுக்கத்தின்பாற்படும்.

**வணக்கி** *vaṇakki*, பெ.(n.) துறட்டி; iron crook.

*[வணக்கு → வணக்கி.]*

கரும்பொன்னில் (இரும்பில்) வளைத்துச் செய்த துறட்டி.

**வணக்கு[1]-தல்** *vaṇakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. வளைவித்தல்; to bend, make flexible, as the body. 2. பணியச்செய்தல்; to make submissive. *"மழுபுலம் வணக்கிய மாவண் புல்லி" (அகநா. 61).*

தெ. வந்த்சுட (vantsuta); க. பக்கிசு (baggisu).

*[வணங்கு-, → வணக்கு-,]*

**வணக்கு[2]** *vaṇakku*, பெ.(n.) 1. வணக்கம், 1 பார்க்க; see *vaṇakkam*. *"வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்" (சிலப்.6, 95).* 2. வணக்கம், 2 பார்க்க; see *vaṇakkam*. *"வணக்கொடு மாள்வது வலமே" (திவ். திருவாய். 1, 3, 8).* 3. வணக்கம், 3 பார்க்க; see *vaṇakkam*. *"நூன்முகத்துறைக்கு மங்களாசரணை வாழ்த்து வணக்கொடு வத்து நிர்த்தேசம்" (வேதா. சூ. 8).*

*[வணங்கு → வணக்கு.]*

**வணக்குமார்** *vaṇakkumār*, பெ.(n.) கோயிற் கணக்கெழுதுவோன்; temple accountant.

**வணங்காமுடி** *vaṇaṅgā-muḍi*, பெ.(n.) யாருக்கும் அடிபணியாமல் நடப்பவன்; recalcitrant person, stiff necked person.

**வணங்காமுடிமன்னன்** *vaṇaṅgā-muḍi-maṉṉaṉ,* பெ.(n.) வணங்காமுடியோன் பார்க்க; see *vaṇaṅgā-muḍiyōṉ.*

*[வணங்கு + ஆ (எ.ம.இ.நி.) + முடிமன்னன்.]*

**வணங்காமுடியோன்** *vaṇaṅgā-muḍiyōṉ,* பெ.(n.) 1. பிறர்க்கு அடிபணியாத அரசன்; independent monarch, as bowing his head to no one. 2. துரியோதனன் (சூடா.); *Duriyōdaṉaṉ.* 3. ஒருவருக்கும் பணியாதவன்; man of sturdy independence.

*[வணங்கு + ஆ (எ.ம.இ.நி.) + முடி.]*

**வணங்காலவணம்** *vaṇaṅgā-lavaṇam,* பெ.(n.) பிடாலவணம்; a variety of salt.

**வணங்கு¹** *vaṇaṅgu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கைகூப்புதல்; to greet. 2. வளைதல்; to bend one's body when doing work, to involve fully in ones work. *'வணங்கி வேலை செய்'.*

க. baggu.

*[குள் → மள் → வள் (வண்) → வணங்கு –, (மு.தா.பக்.71)]*

**வணங்கு²–தல்** *vaṇaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நுடங்குதல்; to bend, to yield, as a freed in a flood. *"வணங்கிடை" (பு.வெ.7, 27).* 2. அடங்குதல்; to be submissive, gentle, modest. *"வணங்கிய வாயினர்" (குறள். 419).* 3. ஏவற்றொழில் செய்தல்; to perform menial service. *"நம்மில் வந்து வணங்கியும்" (கலித். 76).*

க. பக்கு.

*[வள் → வண் → வண → வணங்கு –,(வே.க.4, பக்.98).]*

**வணங்கு³–தல்** *vaṇaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வழிபடுதல், தொழுதல்; to worship, adore, revere, salute, pray respectfully. *"எண்குணத்தான் றாளை வணங்காத் தலை" (குறள். 9).* 2. சூழ்ந்து கொள்ளுதல்; to surround, encompass. *"வணங்குமிப் பிறப்பிவை நினையாது" (திருவாச. 41, 6).*

*[வள் → வண் → வண → வணங்கு –, (வே.க.4, பக்.98)]*

**வணங்குஞ்சூரி** *vaṇaṅguñ-cūri,* பெ.(n.) செடி வகை; a kind of plant.

**வணர்¹–தல்** *vaṇar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வளைதல்; to bend. *"வணர்ந்தேந்து மருப்பின்" (மலைபடு. 37).* 2. மயிர் குழன்றிருத்தல்; to curl, as the hair. *"வெறிகமழ் வணரைம்பால்" (கலித். 57).*

*[வள் → வண் → வணர் – (வ.வ.81).]*

'வள்' என்னும் வளைவுக் கருத்தினைக் குறிக்கும் அடிப்படை வேரடியினின்று கிளைத்த சொல் (ஒ.நோ.) திள் → திண்.

**வணர்²** *vaṇar,* பெ.(n.) கட்டட வேலை வளைவு (வின்.); vault, arched roof.

*[வள் → வண் → வணர்]*

'வள்' என்னும் வளைவுக் கருத்தினைக் குறிக்கும் அடிப்படை மூலத்தினின்று முகிழ்த்த சொல்லாகும்.

**வணர்³** *vaṇar,* பெ.(n.) யாழ்க் கோட்டின் வளைந்த உறுப்பு; the curving part of the lute.

*[வள் → வண் → வணர்]*

**வணிக்கிராமத்தார்** *vaṇi-k-kirāmattār,* பெ.(n.) பண்டைக்காலத்துள்ள ஒரு வணிகர் குழு (தொல். சொல். 167, உரை); an ancient guild of merchants.

*[பணிகன்→வணிகன் (ஒ.நோ.) பகு→வகு. பணி + **Skt.** grāma >த. கிராமம்→கிராமத்தார்.]*

**வணிகக்காய்கறிப்பூடு** *vaṇiga-k-kāy-kaṟi-p-pūḍu,* பெ.(n.) வழுதலை; brinjal.

*[பணிகம்→வணிகம் + காய்கறி + பூடு. விளைவித்து உருவாக்கும் வழுதலை.]*

**வணிகசூரியர்** *vaṇiga-šūriyar,* பெ.(n.) வணிகரில் முதன்மை பெற்றோர்; chief or leading or prominent merchants, merchant princes. *"வணிக சூரியரே வாரீர்" (திருவாலவா. 41, 18).*

*[வணிகம் + சூரியர்.]*

**வணிகநோக்கு** *vaṇiga-nōkku,* பெ.(n.) ஊதியத்தை எதிர்பார்க்கும் போக்கு; commercialism, profitable approach. *'கல்வி வணிக நோக்கில் நடைபெறுகின்றது'.*

*[வணிகம் + நோக்கு]*

**வணிகபதம்** *vaṇiga-padam,* பெ.(n.) விற்பனை (யாழ்.அக.); trade.

*[வணிகம் + பதம்.]*

**வணிகம்** *vaṇigam,* பெ.(n.) பல பண்டம் கொள்வதும் கொடுப்பதுமான தொழில் (வின்.); trade.

*[பணிகம்→வணிகம்.]*

பண்ணுதல் = செய்தல், உண்டாக்குதல், விளைத்தல், உருவாக்குதல்.

த. வணிகம் < **Skt.** vanij.

இச்சொற்கு வடவர் கூறும் பண்டமாற்றுப் பொருள் கற்பனையே. பண்ணியம் பண்ணப்பட்ட பொருள், பண்டம், விற்கப்படும் வணிகப் பொருள் என்னும் பொருண்மையில் கழகவிலக்கியங்களில் பயின்று வந்துள்ளமைக்கான சான்றுகள் வருமாறு :-

1. விளைவித்த அல்லது உருவாக்கிய பொருள் அல்லது பண்டம் என்னும் பொருளில் :-

*"பல்வேறு பண்ணியந் தழீஇத்திரி விலைஞர்" (மதுரைக்.405).*

*"காம ருருவிற் றாம்வேண்டும் பண்ணியம்" (மதுரைக்.422).*

2. விற்பனை செய்யப்படும் வணிகப் பொருள் :- *"கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ" (மணிமே.7:24).*

3. பண்ணிய பொருளை வணிகம் செய்பவர் என்னும் பொருளில் :-

*"பெருங்கடல் நீந்திய மரம்வலி யுறுக்கும் பண்ணிய விலைஞர்".*

*[பண்ணியன்→ பண்ணிகன்→ பணிகன் →வணிகன்→வணிகம் (வ.வ.பகுதி 2: 82).]*

**Guj.** vaṇiyo, baniya, **A.** banyan, **Port.** banian, **E.** banian, banyan.

குமரிக்கண்ட முழுக்கினாலும், முதலிரு கழக இலக்கிய இறந்துபாட்டாலும், பலசொற்களின் வேர்களையும், இணைப்பு அண்டுகளையும், இன்று காட்ட இயலவில்லை.

வணிகன்→ வணிகு (ஒ.நோ.) வேந்தன் (வேய்ந்தோன்) →வேந்து.

*"அதன்கண் வணிகனொருவ னுளன்" (மேருமந்.280).*

வணிகம்→வணிகு→வணிஜ்.

இனி, பொருள் பண்ணுபவன் (ஈட்டுபவன்) பணிகன் என்றுமாம்.

"Vanij.m. (also written banij) a merchant, trader RV &&" என்பது மா.வி.அ.

வணிகம் என்னும் சொல், வடவர் கூறுவது போன்று பண்டமாற்றுப் பொருண்மை பொதிந்த சொல்லன்று.

செய்தல், விளைவித்தல், உருவாக்குதல் என்னும் பொருட்பொருத்தப்பாட்டிலிருந்து முகிழ்த்த சொல்லாகும்.

பண்ணியன் → பண்ணிகன் → பணிகன் → வணிகன், என்று ஏரணமுறையில் அமைந்த சொல்லாகும்.

உழவினால் விளைக்கப்படும் பொருள்களையும், கைத்தொழிலாற் செய்யப்படும் பொருள்களை வெளிநாட்டிலும், வெளிநாட்டுப் பொருள்களை உள்நாட்டிலும், பரப்பவும், பெரும் பொருளீட்டி நாட்டுச் செல்வத்தை பெருக்கவும், வணிகம் இன்றியமையாத தென்று கண்ட பண்டையவரசர், அதனை ஒல்லும் வாயெல்லாம் ஊக்கி வந்தனர்.

நகரந்தொறும், வணிகர் குழுமம் (Merchant Guild) இருந்தது. நாட்டுப்புற நகராட்சி பெரும்பாலும் நகர வணிகர் கையில் இருந்தது. நகரங்களையெல்லாம் அரசன் நேரடியாக மேற் பார்த்து வந்தனன். தலைமை வணிகனுக்கு எட்டிப் பட்டமும், எட்டிப்புரவும் அளிக்கப்பட்டது. வணிகர் குழுமங்கட்கு வலஞ்சை மணிக்கிராமம் அஞ்சுவண்ணம் முதலிய பட்டங்களும் அளிக்கப்பட்டன.

வரலாற்றுக் காலத்திற்கு முன்பே, தமிழர் வணிகத்திற் சிறந்து திகழ்ந்தனர். வணிகம் நிலவணிகம், நீர்வணிகம் என இருவகைப்படும். இருவகை வணிகமும் தமிழகத்தில் தழைத்தோங்கியது. நிலங்கடந்து செய்யும் நில வணிகம் காலிற்பிரிவு என்றும், நீர் கடந்து செய்யும் நீர் வணிகம், கலத்திற் பிரிவு என்றும் கழக இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்கிறோம்.

*"முந்நீர் வழக்கம் மகடூவோ டில்லை"* என்னும் தொல்காப்பிய நூற்பா, நீர் வகித்திற்கு நற்சான்று நீர்வணிகத்தின் நிமித்தம் படைக்கின்றது. பண்டைத்தமிழர், கடல் கடந்து செல்லுங்கால், மகளிரை உடனழைத்தச் செல்லாமை யென்னும், பண்பாட்டையும் நிறுவுகின்றது.

பத்துப்பாட்டுள், பட்டினப்பாலையும் மதுரைக்காஞ்சியும், பண்டைத் தமிழர் நீர் வணிகத்திலும், நில வணிகத்திலும் ஈடுபட்டுச் செல்வ வளஞ் சிறந்து வாழ்ந்த வரலாற்றினைப் பேசுகின்றன எனலாம்.

**வணிகர்** *vaṇigar,* பெ.(n.) வணிகன் பார்க்க; see *vaṇigaṉ.*

*[பணிகர்→வணிகர்.]*

இப்பர், கவிப்பர், பெருங்குடியரென்று மூன்று பாலார் (சீவக.1756, நச்.).

**வணிகர்குணம்** *vaṇigar-guṇam,* பெ.(n.) வணிகரெண்குணம் (பிங்.) பார்க்க; see *vaṇigareṇguṇam.*

**வணிகர்தொழில்** *vaṇigar-toḻil,* பெ.(n.) ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம் என்னும் வாணிகர்தம் அறுவகைத் தொழில் (தொல்.பொருள்.75, உரை); occupations of the *vaiśyā's,* six in number, viz, *ōdal, vēṭṭal, īdal, uḻavu, nirai-y-ōmbal, vāṇigam.*

**வணிகரறுதொழில்** *vaṇigararu-toḻil,* பெ.(n.) வணிகர்தொழில் (திவா.) பார்க்க; see *vaṇigar-toḻil.*

**வணிகரெண்குணம்** *vaṇigar-eṇguṇam,* பெ.(n.) தனிமையாற்றல், முனிவிலனாதல், இடனறிந்தொழுகல், பொழுதொடு புணர்தல், உறுவது தெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், பகுத்தல் என்னும் வாணிகரின் எட்டுக் குணங்கள் (பிங்.); virtues desirable in merchants, eight in number viz., *taṉimai-y-āṟṟal, muṉivilaṉ-ādal, iḍaṉ-aṟindoḻugal, poḻudoḍu-puṇardal, uṟuvadu-teridal, iruvadañjāmai, īṭṭal, paguttal.*

*[வணிகர் + எண்குணம்.]*

**வணிகவியல்** *vaṇiga-v-iyal,* பெ.(n.) பொருட்களின் பரிமாற்றத்திற்கு இடையூறாக இருப்பவற்றை நீக்குவதற்கான வழிகளைப் பற்றியும், நிருவாக வரவு, செலவு பற்றியும் மேற்கொள்ளும் படிப்பு; as a subject of study in commerce.

*[வணிகம் + இயல்]*

**வணிகன்** *vaṇigaṉ,* பெ.(n.)1. வணிகவினத்தான் (பிங்.); person belonging to the *vaiśyā* caste, trader community. 2. பண்ட விற்பனையாளன்; merchant, trader. 3. துலாவோரை (யாழ்.அக.); libra of the zodiac.

மறுவ. விலைஞன், விற்பவன், செட்டி.

த. வணிகன் > **Skt.** vanija.

*[பண்ணியன் → பண்ணிகன் → பணிகன் →வணிகன்.]*

ஒருகா. வள் →வணிகம் என்றுமாம்.

வளைவுப் பொருள் வளர்ச்சியைக் குறிக்கும். தனித்தமிழ்ப் பகுப்பான நால்வகை மக்கட்பிரிவில் விற்பனையாளன் 'வணிகன்' என்னுஞ் சொல்லாலேயே தொன்றுதொட்டுக் குறிக்கப்படு கின்றனர்.

(ஒ.நோ.) பண்ணியாரம் →பண்ணிகாரம் → பண்ணியாரம் →பணியாரம். பகு →வகு (வ.வ.2:82).

"வணிகன்" என்னும் சொல், வணிஜ் என்ற வடசொல்லின் திரிபென்று மா.வி. அகரமுதலி குறிப்பிட்டுள்ளது. பண்டமாற்றுப் பொருளினின்று இச்சொல் தோன்றியது என்று வடமொழியாளர் கருதுவது, முற்றிலுங் கற்பனை என்பார் மொழிஞாயிறு.

பண்ணுதல் என்னும் சொல் செய்தல், உண்டாக்குதல், உருவாக்குதல், விளைவித்தல் என்னும் பொருண்மைகளை உள்ளடக்கியது.

இச்சொல்பற்றி மொழிஞாயிறு, வடமொழி வரலாறு–2, பக்கம் 82–83இல் பகர்வது வருமாறு:–

வணிகன் – வணிஜ் (இ.வே.) வணிஜ.

பண்ணுதல் = செய்தல், உண்டாக்குதல், விளைவித்தல், உருவாக்குதல். இச் சொற்கு வடவர் கூறும் பண்டமாற்றுப் பொருள் கற்பனையே.

பண்ணியம் = 1. பண்ணப்பட்ட பொருள், பண்டம்.

*"பல்வேறு பண்ணியந் தழீஇத்திரி விலைஞர்" (மதுரைக்.405).*

*"காம ருருவிற் றாம்வேண்டும் பண்ணியம்" (மதுரைக்.422).*

*"சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்" (மதுரைக்.506).*

2. விற்கப்படும் வணிகப் பொருள் :–
*"கொடுப்போர் கடைதொறும் பண்ணியம் பரந்தெழ" (மணிமே.7:24).*

பண்ணிய விலைஞர் = பண்டவாணிகர்.

*"பெருங்கடல் நீந்திய மரம் வலியுறுக்கும் பண்ணிய விலைஞர்" (பதிற்.76:5).*

பண்ணியாரம் → பண்ணிகாரம் = பலபண்டம் (திவா.) தெ. பண்யாரமு.

பண்ணியன் → (பண்ணிகன்) → வணிகன்.

ஒ.நோ. பண்ணியாரம் → பண்ணிகாரம். பண்ணியாரம் → பணியாரம். பகு → வகு.

வணிகன் →வணிகம். வணிகன் → வாணிகன் → வாணிகம். வாணிகன் → வாணியன்.

*"வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை" (தொல்.1578).*

**Guj.** vamiyo, baniya, **A.** banyan, **Port.** banian, **E.** banian, banyan.

குமரிக்கண்ட முழுக்கினாலும், முதலிரு கழக இலக்கிய இறந்து பாட்டாலும், பலசொற்களின் வேர்களையும், இணைப்பு அண்டுகளையும் இன்று காட்ட இயலவில்லை.

வணிகன் → வணிகு (ஒ.நோ.) வேந்தன் (வேய்ந்தோன்) →வேந்து.

*"அதன்காண் வணிகொருவ வேந்துனுளன்" (மேருமந்.280).*

வணிகு → வணிஜ். இனி, பொருள் பண்ணுபவன் (ஈட்டுபவன்) பணிகன் என்றுமாம்.

"Vaṇij.m. (also written banij) a merchant, trader RV &&" என்பது மா.வி.அ.

*[பண்ணியன் → பண்ணிகன் → பணிகன் →வணிகன் (வ.வ.பகுதி 2: 82).]*

**வணிகு** *vaṇigu,* பெ.(n.) வணிகன் 1, 2 பார்க்க; see *vaṇigaṉ.* *"அதன்கண் வணிகொருவ னுளன்" (மேருமந்.230).*

*[வணிகன் →வணிகு.]*

(ஒ.நோ.) வேந்தன் (வேய்ந்தோன்)→வேந்து.

த. வணிகு > **Skt.** vaṇij.

"Vaṇij.m. (also written banij) a merchant, trader RV. &&" என்பது மா.வி.அ.

**வணிச்சியம்** *vaṇicciyam,* பெ.(n.) வணிகம், விற்பனை (யாழ்.அக.); commence, trade.

**வணிசம்** *vaṇisam,* பெ.(n.) **1.** **வணிசை** (யாழ்.அக.) பார்க்க; see *vaṇišai.* **2.** எருது; ox.

**வணிசை** *vaṇišai,* பெ.(n.) கரணம் பதினொன்றுளொன்று (விதான. பஞ்சாங். 29, உரை); a division of time, one of 11 karaṇam.

**வணிதம்[1]** *vaṇidam,* பெ.(n.) ஆளுகைக்குட்பட்ட திணைநிலப் பகுதி; locality, administrative region. *"சோழங்க நல்லூர் வணிதத்திலே யிருக்கும்படி" (கோயிலொ. 54).*

தெ. வணிதமு.

**வணிதம்[2]** *vaṇidam,* பெ.(n.) செப்பம் (யாழ்.அக.); elegance, handsomeness.

**வணை-த்தல்** *vaṇai-,* 4 செ.குன்றாவி.(v.t.) தண்ணீர் ஊற்றுதல்; to pour, as water from a pot.

**வணை[1]-தல்** *vaṇai-,* 2 செ.கு.வி.(v.i.) வளைதல் (திருநெல்.); to bend.

**வணை[2]-த்தல்** *vaṇai-,* 4 செ.கு.வி.(v.i.) வளைத்தல் (நெல்லை.); to bend.

**வணை[3]** *vaṇai,* பெ.(n.) வயிற்றிலுண்டாம் மாட்டு நோய் வகை (Rd.M.24); a cattle-disease affecting the bowels.

வத்தகம் *vattagam,* பெ.(n.) வெட்பாலை (மலை.); conessi bark.

வத்தகி *vattagi,* பெ.(n.) 1. பெருமுள்ளி; large nail-dye. 2. மரமல்லிகை; Indian-cork.

ஒருகா. காட்டுமுள்ளி.

வத்தகுதோதரம் *vattagutōdaram,* பெ.(n.) எருவாய்ச் சுருக்கத்தால் ஏற்படும் வயிற்றுப்பசம்; tympanitis caused by the constriction of the anus.

வத்தகை[1] *vattagai,* பெ.(n.) தருப்பூசணி; water melon.

வத்தகை[2] *vattagai,* பெ.(n.) சருக்கரைக் கொம்மட்டி (இ.வ.); sweet water-melon.

வத்தகோபன் *vatta-kōban,* பெ.(n.) சினங் காப்போன் (யாழ்.அக.); one who has subdued his anger.

*[வத்தம் + கோபன்]*

வத்தங்கிக்கட்டை *vattaṅgi-k-kaṭṭai,* பெ.(n.) சாயமரச்சக்கை; logwood.

வத்தங்கி *vattaṅgi,* பெ.(n.) சப்பங்கி (M.M. 783); sappan-wood.

*[வத்தம் + அங்கி]*

வத்தப்பழம் *vatta-p-paḻam,* பெ.(n.) உடலுக்குள் ளிருக்கும் பித்தம் நீக்கும் பழம்; a fruit which reduces bile.

வத்தம்[1] *vattam,* பெ.(n.) 1. வற்றம், உள் வாங்குதல்; drying up, evaporation. 2. கடல் நீர் குறைதல்; reduction in volume of sea water.

வத்தம்[2] *vattam,* பெ.(n.) சோறு; boiled or cooked rice. *"பறவைப் பெயர்படு வத்தம்" (பெரும்பாண். 305).*

வத்தமம் *vattamam,* பெ.(n.) ஆமணக்கு (மலை.); castor plant.

*[வத்தம் → வத்தமம்]*

வத்தர் *vattar,* பெ.(n.) நுவல்வோன், நூலாசிரியன்; teller, speaker, author of a work.

வத்தராயன் *vattarāyaṉ,* பெ.(n.) 1. வற்ச நாட்டரசன்; king of the vatsa country. 2. தலைவர் சிலர்க்கு வழங்குஞ் சிறப்புப் பெயர் (கல்.); title of certain chiefs or leaders.

வத்தரோதயப்பூடு *vattarōdaya-p-pūḍu,* பெ.(n.) பருத்தி; cotton.

வத்தல்[1] *vattal,* பெ.(n.) பெரிய தோணி; big boat.

ஒருகா. வள்ளம்.

வத்தல்[2] *vattal,* பெ.(n.) வற்றல்; dried vegetables or fruit thereof.

வத்தல்[3] *vattal,* பெ.(n.) 1. வறண்டது; anything dried. 2. உப்பிட்டுலர்த்தியதோர் உணவுப் பண்டம்; fish or vegetable, salted and dried, dried salty food stuff. 3. ஒல்லியானது (கொ.வ.); anything lean or slim.

*[வற்றல் → வத்தல்]*

வத்தல்[4] *vattal,* பெ.(n.) சிறிய ஓடம் (யாழ்.அக.); small or tiny boat.

*[வத்தம் → வத்தல்]*

**வத்தல்குழம்பு** *vattal-kuḻambu,* பெ.(n.) புளிக்கரைசலில் உப்பிட்டுலர்த்திய வத்தலிட்டுச் செய்த குழம்பு; a sauce of thick tamarind solution with dried vegetable pieces.

*[வற்றல்→வத்தல் + குள்→குழ→குழம்பு]*

சுவையூட்டுவனவும் உடம்பை வலுப்படுத்து வனவும் நோய் வராது தடுப்பனவுமான மஞ்சள், மிளகு அல்லது மிளகாய் வற்றல், சீரகம், கொத்துமல்லி, தேங்காய் முதலியவற்றை மைபோல் அரைத்துக் கலந்தும் இஞ்சி, வெங்காயம், வெள்ளைப்பூண்டு, பெருங்காயம், கருவாப்பட்டை, ஏலம், சோம்பு முதலிய மருந்துச் சரக்குகளை வேண்டுமளவு உசிலை (மசாலை)யாகச் சேர்த்தும் வெந்தபின் புளிக்கரைசலிட்டும் கடுகு, கறிவேப்பிலை முதலிய தூவி எண்ணெயில் தாளித்தும் செய்யப் பெறுவது, குழம்பு.

உப்பேறிய உவர்ப்புடன்கூடிய கசப்பும் வெப்பநாடாம் நம் நாட்டின் இயல்பிற்கேற்ற வளவிலான புளிப்பும் தமிழரின் சுவைமுதிர்ச்சி, நாகரிகம், மருத்துவ அறிவு, உடல்நல உணர்ச்சியை ஒருங்கெடுத்துக்காட்டுவனவாம்.

**வத்தலும்தொத்தலுமாக** *vattalum-tottalum-āga,* வி.அ.(adv.) உடல் நலிந்து மெலிந்துமாக; in a thin and emaciated condition, being mere skin and bones. *'வத்தலும் தொத்தலுமாக நாலைந்து சிறுவர்கள்'.*

*[வத்தலும் + தொத்தலும் + ஆக.]*

**வத்தவன்** *vattavaṉ,* பெ.(n.) வச்ச நாட்டரசன்; king of the vatsa country. *"வடித்தேர்த் தானை வத்தவன் றன்னை" (மணிமே. 15, 62).*

**வத்தற்கில்லி** *vattaṟ-killi,* பெ.(n.) மஞ்சள் நிறக் குருந்தம் (புட்பராகம்); one of the nine gems-topaz.

**வத்தாக்கு[1]** *vattākku,* பெ.(n.) ஓர் கொடி; a creeper.

**வத்தாக்கு[2]** *vattākku,* பெ.(n.) 1. கொம்மட்டி (வின்.); water-melon. 2. சருக்கரைக் கொம்மட்டி (M.M.372); sweet water-melon.

**வத்தாகிலுகிலுப்பை** *vattā-kilu-kiluppai,* பெ.(n.) வட்டக்கிலுகிலுப்பை பார்க்க; see *vaṭṭa-k-kilu-kiluppai.*

**வத்தாங்கி** *vattāṅgi,* பெ.(n.) வத்தேக்கு; caesalpinia sappan.

**வத்தாம்பம்** *vattāmbam,* பெ.(n.) இலைக் கள்ளி; leafy spurge-*Euphorbia nerifolia.*

**வத்தாயி** *vattāyi,* பெ.(n.) கிச்சிலி வகை; batavian orange.

**வத்தாலை** *vattālai,* பெ.(n.) 1. சருக்கரைக் கொம்மட்டி; sweet water-melon. 2. கொம்மட்டி (சங்.அக.); water-melon.

**வத்தாலைக்கொடி** *vattālai-k-koḍi,* பெ.(n.) சருக்கரை வள்ளி (மலை.); sweet potato.

**வத்தாவி** *vattāvi,* பெ.(n.) பட்டாவியாவி லிருந்து வரும் எலுமிச்சம் பழம்; Batavian lemon.

**வத்தாவிப்பூசனி** *vattāvi-p-pūšaṉi,* பெ.(n.) நீண்ட வெள்ளைப் பூசணி வகை; a kind of pumpkin, as originally from Batavia.

**வத்தாளங்கிழங்கு** *vattāḷaṅ-kiḻaṅgu,* பெ.(n.) சருக்கரைவள்ளிக் கிழங்கு (யாழ்ப்.); sweet potato.

**வத்தி[1]** *vatti,* பெ.(n.) கல் மூங்கில், இது நல்ல மலையில் விளையும்; rough stemmed

shrubby bamboo-oxytenan thera thwaitesi. It is a hard bamboo grown in the Nallamalai hills and Western ghats.

வத்தி² *vatti,* பெ.(n.) 1. திரி; wick. 2. ஊதுவத்தி; joss-stick, incense-stick. 3. மெழுகுவத்தி; candle. 4. தீக்குச்சி (இக். வழ.); match stick. 5. விளக்குத் தகழி (யாழ்.அக.); oil-cup of a lamp. 6. ஆடையின் அருகு (யாழ்.அக.); unwoven end or fringe of a cloth. 7. வரி (யாழ்.அக.); line. 8. மணியின் கீழ்ப்பதிக்கும் வண்ணத் தகடு (யாழ்.அக.); foil.

*[பற்றி →பத்தி→வத்தி]*

வத்தி⁴-த்தல் *vatti-,* 4 செ.கு.வி.(v.i.) உளதாதல்; to exist. *"பாருற வத்திக்குங் கொடியாள்" (உத்தரரா. அரக்க. 5).*

வத்திகம் *vattigam,*பெ.(n.) ஆரைக்கீரை; a kind of sweet greens grown in Marshy land-*Manasilea qudrifolia.*

வத்திப்பெட்டி *vatti-p-peṭṭi,* பெ.(n.) தீப்பெட்டி (சென்னை. வழ.); match-box.

*[வத்தி + பெட்டி]*

வத்தியம் *vattiyam,*பெ.(n.) இறப்பு (யாழ். அக.); death.

வத்திரசுரம் *vattira-šuram,* பெ.(n.) பேரா முட்டி; a plant-*Pavonia odorata.*

வத்திரசோதினி *vattira-šōdiṉi,* பெ.(n.) எலுமிச்சை (யாழ்.அக.); sour-lime.

வத்திரதாரு¹ *vattira-dāru,*பெ.(n.) தேவதாரு (சங்.அக.); red cedar.

வத்திரதாரு² *vattira-tāru,* பெ.(n.) செம்புளிச்சை (பச்.மூ.); rosella.

வத்திரதேசி *vattira-dēši,*பெ.(n.) வயிற்றில் வலி யுண்டாக்கி முன்னுண்டது செரிக்கும் சமயத்தில் வயிறுளைந்து கொப்பூழில் வலித்து விம்மிக் காணுமோர் நோய்; a disease which causes intense pain in the navel region or alimentary canal during disgestion of food.

வத்திரபஞ்சகம் *vattira-pañjagam,* பெ.(n.) சிவகரந்தை; sweet basil -*Sphoeranthus seylanica.*

வத்திரவாகு *vattira-vāgu,*பெ.(n.) தேவதாரு (சங்.அக.); red-cedar.

வத்திராட்சம் *vattirāṭcam,* பெ.(n.) அந்தி மந்தாரை (வின்.); four-'o' clock plant.

வத்திரி *vattiri,*பெ.(n.) தோல் வார் (சங்.அக.); leather strap.

வத்திரிகாளிதம் *vattiri-kāḷidam,* பெ.(n.) இடித்த சூரணத்தைத் துணியி லிட்டுச் சலித்தல்; filtering or sieving of powder through a cloth.

வத்திரிசோதினி *vattiri-šōdiṉi,* பெ.(n.) எலுமிச்சை; lime.

வத்திரோணம் *vattirōṇam,*பெ.(n.) பெருமரம் (மலை.); tooth-leaved tree of heaven.

வத்திவை-த்தல் *vatti-vai-,*4 செ.கு.வி. (v.i.) 1. வெடி கொளுத்துதல்; to ignite the fuse. 2. சண்டை மூட்டுதல்; to stir up trouble; to instigate; to create misunderstanding as igniting combustibles. 3. கோட் சொல்லுதல்; to backbite. 4. புண்ணிற்குக் காரம் வைத்தல்; to apply a piece of cloth soaked airth caustic to a sore.

*[வத்தி + வை-.]*

வத்து vattu, பெ.(n.) உவமை (நாமதீப. 675); simile.

வத்துப்பு vattuppu, பெ.(n.) கறியுப்பு (யாழ். அக.); common salt.

*[வத்து + உப்பு]*

வத்துளம் vattuḷam, பெ.(n.) 1. வட்டமானது; that which is circular in shape. 2. சக்கரம் (நாமதீப.766); wheel, as of a cart.

*[வட்டளம்→வட்டுளம் → வத்துளம்]*

வத்தூரம் vattūram, பெ.(n.) பொன்னாங்கண்ணி (சங்.அக.); a kind of greens growing in damp fields and ridges thereto.

வத்தேக்கு[1] vattēkku, பெ.(n.) 1. சருக்கரைக் கொம்மட்டி; sweet water-melon. 2. கொம்மட்டி (சங்.அக.); a small water-melon.

*[வத்தாக்கு → வத்தேக்கு]*

வத்தேக்கு[2] vattēkku, பெ.(n.) சப்பங்கி மரவகை (வின்.); sappan-wood.

வத்தேந்தி vattēndi, பெ.(n.) கதவு நிலைமேல் வைக்குஞ் சுவர்தாங்கி (யாழ்.அக.); lintel.

*[வை + ஏந்தி – வைத்தேந்தி → வத்தேந்தி]*

வத்தை[1] vattai, பெ.(n.) உள்வயிரமற்றது (யாழ்.அக.); pith, soft portion of wood.

*[வற்று → வத்து → வத்தை]*

வத்தை[2] vattai, பெ.(n.) வத்தல்[2] (இ.வ.) பார்க்க; see vattal.

வதக்கம் vadakkam, பெ.(n.) 1. வாடுகை; fading, withering. *மரத்தில் இலை வதக்கமாயிருக்கிறது (இ.வ.).* 2. இளைப்பு, களைப்பு; fatigue, lassitude, tiredness.

*[வதங்கு → வதக்கு → வதக்கம்]*

வதக்கல் vadakkal, பெ.(n.) வாட்டல்; searching (drying for the remcoval of the structural of constitutional matter from a substance - arefaction), drying and withering of a substance as a result of extreme heat.

*[வதங்கல் → வதக்கல்]*

வதக்கிக்கட்டல் vadakki-k-kaṭṭal, தொ.பெ. (vbl.n.) மருந்திலையை நெருப்பில் காட்டி, பிறகு புண் புரைக்குக் கட்டுகை; bandaging after applying scorched medicinal leaves to abscess, wounds etc.

*[வதக்கி + கட்டல்]*

வதகனாப்பூ vadaganā-p-pū, பெ.(n.) வாடா மல்லிகை பார்க்க; see vāḍā-malligai.

வதக்கு–தல் vadakku-, 5 செ.குன்றாவி. (v.t.) 1. வாட்டுதல், பொரித்தல்; to roast, to dry. *"பன்றி தன்னை யெரியினில் வதக்கி" (பெரியபு. கண்ணப்ப. 117).* 2. வருத்துதல்; to harass, annoy.

*[வதங்கு → வதக்கு → வதக்கு–தல்]*

வதக்குவதக்கெனல் vadakku-vadak-keṉal, பெ.(n.) 1. பக்குவமாகாது ஈரப்பசை யோடிருத்தற் குறிப்பு; being under-boiled or under-fried as greens. 2. மார்பு அடித்துக் கொள்ளுதற் குறிப்பு; palpitation of the heart.

*[வதக்கு + வதக்கு + எனல்]*

வதங்கல் *vadaṅgal,* பெ.(n.) 1. வாடியது; that which is withered or dried. 2. ஈரப்பசை நீங்காத உணவுப் பண்டம்; under-boiled or under-fried foodstuff. 3. உடல்வலியற்ற– வன்–வள்–து; constitutionally weak person or animal. *"ஆள் வதங்கல்" (உ.வ.).*

*[வதங்கு→வதங்கல்]*

வதங்கிப்போ–தல் *vadaṅgi-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) வாடிப்போதல்; to dry up, to fade, wither. *வதங்கிப் போதல் (பே.வ.).*

வதங்கு–தல் *vadaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வாடுதல்; to wither, fade, to grow dry. 2. சோர்தல்; to be discouraged or dispirited, to be fatigued.

வதம் *vadam,* பெ.(n.) ஆலமரம்; banyan tree-*Ficus bengalensis.*

*[வடம்→வதம்.]*

வதரம் *vadaram,* பெ.(n.) இலந்தை மரம் (யாழ்.அக.); jujube tree.

வதரி[1] *vadari,* பெ.(n.) 1. வதரம் பார்க்க; see *vadaram.* 2. சங்கு; conch-shell.

வதரி[2] *vadari,* பெ.(n.) இலந்தை (சூடா.); jujube-tree.

வதரி[3] *vadari,* பெ.(n.) திருமாலுக்குரிய சிறப்புமிகு தவத்தோர் வாழும் தலத்து ளொன்று; a hermitage sacred place to *Vishṇu. "வதரி வணங்குதுமே" (திவ். பெரியதி. 1, 3).*

வதலி[1] *vadali,* பெ.(n.) தடவை, முறை; time, turn. *"அவன் ஒருவதலி வந்தான்" (நெல்லை.).*

வதலி[2] *vadali,* பெ.(n.) வடலி (G.Tn.D. I. 307) பார்க்க; see *vaḍali.*

வதவடி *vadavaḍi,* பெ.(n.) வதுவடி பார்க்க; see *vadu-vaḍi.*

வதவத *vadavada,* வி.அ.(adv.) ஒன்றை அடுத்து ஒன்றாக, நிறைந்த அளவில்; to an excessive or annoying degree or extent, one after the other consecutively.

வதவதவென்று *vadavada-v-eṉṟu,* பெ.(n.) நிறைந்து வழிகை; over flowing, surplusing in brim of a bowl or vessel or any container.

வதவரிசி *vada-v-ariśi,* பெ.(n.) 1. அரைக் காய்ச்சலான புழுங்கல் (நெல்) அரிசி (வின்.); rice husked from boiled paddy before it is fully dried. 2. ஈரம் படிந்த அரிசி (இ.வ.); rice affected by dampness.

*[வதங்கல்→வதவல் + அரிசி.]*

வதவல் *vadaval,* பெ.(n.) 1. வாடியது (யாழ். அக.); that which has faded or dried. 2. அரைக்காய்ச்சலானது; that which is partially parched. 3. ஆடு முதலியவற்றின் குடலிலுள்ள செரிமானமாகாத தீனி (இ.வ.); undigested feed in indestive or alimentary canal of sheep etc.

*[வதங்கல்→வதவல்.]*

வதவலரிசி[1] *vadaval-ariśi,* பெ.(n.) சரியாக காயாத அரிசி; partially dried rice.

*[வதவரிசி→வதவலரிசி.]*

வதவலரிசி[2] *vadaval-ariśi,* பெ.(n.) வதவரிசி பார்க்க; see *vada-v-arisi.*

*[வதவல் + அரிசி]*

**வதற்றரு** *vatarraru,* பெ.(n.) கறிமுள்ளி; a plant - *Solanum indicum.*

**வதறு[1]-தல்** *vadaru-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வாயாடுதல் (வின்.); to chatter, prate; to be talkative. 2. மழலை மொழியாதல்; to lisp, to babble.

தெ. வதறு; க. ஒதறு.

**வதறு[2]-தல்** *vadaru-,* 2 செ.குன்றாவி.(v.t.) திட்டுதல்; to abuse, scold. *"வாயாலே வதறுகிறவன்" (உ.வ.).*

**வதனப்பூடு** *vadana-p-pūdu,* பெ.(n.) கரிசலாங் கண்ணி; a prostrate plant-*Eclypta prostata.*

**வதனம்** *vadanam,* பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; a twiner bearing white flowers - *Chitoria ternatea (albfloria).*

**வதாலகம்** *vadālagam,* பெ.(n.) மீன்வகை (சங்.அக.); a kind of fish.

**வதாலம்** *vadālam,* பெ.(n.) வதாலகம் (சங்.அக.) பார்க்க; see *vadālagam.*

**வதி[1]-தல்** *vadi-,* 2 செ.கு.வி.(v.i.) 1. தங்குதல்; to dwell, abide; to sojourn, stay. *"வதிமண வம்பலர் வாயவிழ்ந் தன்னார்" (பரிபா. 10, 20).* 2. துயிலுதல்; to sleep. *"ஆற்றா ணினையுநள் வதிந்தக்கால்" (கலித். 126).*

*[பதி→வதி.]*

**வதி[2]** *vadi,* பெ.(n.) 1. விலங்கு முதலியன தங்குமிடம்; lair, nest. *"மாவதிசேர" (கலித். 119).* 2. சேறு (பிங்.); mire. *"செங்கயல் வதிக்குதி கொளும் புனலது" (கலித். 126).*

**வதி[3]** *vadi,* பெ.(n.) 1. வழி (பிங்.); way. *"தனிவதி யியக்கர் காட்ட" (பாரத. அருச்சுனன்றவ. 27).* 2. கால்வாய்; channel, head of a channel. *"முக்கோலக்கலத்தால் வதியட்டிக் கீழ்க்கடை நீர் போவதாகவும்"* (S.I.I.vi, 147).

**வதியழி-தல்** *vadi-y-aḻi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. தங்குதல்; to stay, abide, house. 2. பெருகியிருத்தல்; to be a plenty, to be in abundant growth. *'மாம்பழம் வதியழியுது'.*

*[பதி→வதி + அழி-.]*

'வள்ளிதாய் (முழுதும்), வதியழி-தல் போன்ற நூற்றுக்கணக்கான சொற்கள் தென்பாண்டி வழக்கிற்கு சிறப்பாகும். ஆதலால் தமிழைச் செவ்வையாய் அறிய வேண்டின் பாண்டி நாட்டுலக வழக்கை ஆராய்தல் வேண்டும் (த.வ.முன்னுரை).

**வது** *vadu,* பெ.(n.) 1. மணமகள்; bride. வதுவரர். 2. மகனின் மனைவி (யாழ்.அக.); daughter-in-law. 3. மனைவி (யாழ்.அக.); wife.

**வதுக்கு** *vadukku,* பெ.(n.) 1. மேம்பட்ட நிலை; improved condition, better position. 2. நன்னிலை; good or favourable circumstances. *'வதுக்குப் பெற்றிருக்கிறான்' (வின்.).*

தெ., க. பதுகு.

**வதுகி** *vadugi,* பெ.(n.) வைக்கோல் (சங். அக.); straw.

*[வதகி → வதுகி]*

**வதுகை** *vadugai,* பெ.(n.) மனைவி (யாழ்.அக.); wife.

*[வது → வதுகை]*

**வதுமரம்**[1] *vadu-maram*, பெ.(n.) பழமுண்ணிப் பாலை; edible paulay-*Mimusops kanki* (சா.அக.).

**வதுமரம்**[2] *vadu-maram*, பெ.(n.) மரவகை (சங்.அக.); a tree.

**வதுவடி** *vaduvaḍi*, பெ.(n.) உலக்கைப் பாலை (மலை.); wedge-leaved ape-flower.

**வதுவர்** *vaduvar*, பெ.(n.) வாதுவர் (சூடா.); horse grooms.

*[வாதுவர்→வதுவர்]*

**வதுவை** *vaduvai*, பெ.(n.) 1. மணமகள்; bride. *"வதுவை நாறும் வண்டுகம ழைம்பால்" (மலைபடு. 30).* 2. திருமணம்; wedding, marriage. *"எம்மனை வதுவை நன்மணங் கழிகென" (ஐங்குறு. 399).* 3. மண மாலை; wedding garland. *"வானர மகளிர்க்கு வதுவை சூட்ட" (திருமுரு. 117).* 4. நறுமணம் (பிங்.); fragrance. 5. புணர்ச்சி (அக.நி.); sexual union, inter course, copulation. 6. வலுவந்தம் (யாழ். அக.); compulsion; force.

*[மருவு→(மவு)→மது→வது→வதுவை.]*

**வதுவைக்கண்ணி** *vaduvai-k-kaṇṇi*, பெ.(n.) பெரியாணங்கை; a kind of plant.

**வதுவைக்கணம்** *vaduvai-k-kaṇam*, பெ.(n.) மணமக்களின் ஓரைப் பொருத்தம் (வின்.); correspondence or matching in respect of *ōrai* of the bride and bride-groom.

*[வதுவை + கணம்]*

**வதுவைக்கலியாணம்** *vaduvai-k-kaliyāṇam*, பெ.(n.) சடங்குகட்குட்பட்ட திருமணம்; marriage as in the form approved by the rituals. *"தன்னகத்து வதுவைக் கலியாணஞ் செய்வான்" (இறை. 23, உரை. பக். 127).*

*[வதுவை + கலியாணம்]*

**வதுவைச்சூட்டணி** *vaduvai-c-cūṭṭaṇi*, பெ.(n.) மணமாலை; wedding garland. *"வதுவைச் சூட்டணி வண்டுவாய் திறப்பவும்" (பெருங். உஞ்சைக். 33, 75).*

*[வதுவை + சூடு→சூட்டு[2] + அணி]*

திருமண நிகழ்வின்பொழுது மணமக்கள் சூடும் மணமாலை.

**வதுவைத்திண்ணை** *vaduvai-t-tiṇṇai*, பெ.(n.) திருமண வேதிகை (பிங்.); marriage -dais or platform.

மறுவ. மணமேடை

*[வதுவை + திண்ணை]*

**வதுவைநாற்றம்** *vaduvai-nāṟṟam*, பெ.(n.) புதுமணம்; new fragrance. *"வதுவை நாற்றம் புதுவது கஞல" (அகநா. 25).*

*[வதுவை + நாற்றம்]*

**வதுவைமணம்** *vaduvai-maṇam*, பெ.(n.) வதுவைக்கலியாணம் பார்க்க; see *vaduvai-k-kaliyāṇam*. *"நாளை வதுவைமண மென்று நாளிட்டு" (திவ். நாய்ச். 6, 2).*

*[வதுவை + மணம்]*

இருமனமுமொன்று கலந்த இம்மணம் கரணத்தோடு கூடிய திருமணமாம்.

**வதுவைமுளை** *vaduvai-muḷai*, பெ.(n.) திருமணத்தில் ஒன்பது தவசங்கள் விதைக்கும் பாலிகை (பிங்.); nine earthen pots in which *onbadu-tavašam is* sown and allowed to sprout during marriage.

*[வதுவை + முளை]*

**வதூ** *vadū,* பெ.(n.) வது (யாழ்.அக.) பார்க்க; see *vadu.*

*[வது → வதூ]*

**வதூவரர்** *vadūvarar,* பெ.(n.) மணமகனும் மணமகளும்; bride and bridegroom.

**வதை** *vadai,* பெ.(n.) தேன்கூடு (வின்.); honey comb.

*[வது→ வதை]*

**வந்தகணிசம்** *vanda-kaṇišam,* பெ.(n.) நீர் குறையும் நேரம்; time frame to dry water.

*[மந்த → வந்த + கணிசம்.]*

**வந்தட்டி** *vandaṭṭi,* பெ.(n.) வந்தேறி பார்க்க; see *vandēṟi.* *'வந்தட்டி காக்கெ வரப்பிலெ கம்மாக் காக்கெ கரையிலெ' யென்பது பாண்டி நாட்டு சொலவம்.*

*[வா→வந்து+ அண்டி – வந்தண்டி→வந்தட்டி.]*

**வந்தட்டிவரத்தட்டி** *vandaṭṭi-varattaṭṭi,* பெ.(n.) வந்தேறி (இ.வ.) பார்க்க; see *vandēṟi.*

*[வந்தட்டி + வரத்தட்டி.]*

**வந்தடை—தல்** *vandaḍai-,* 2 செ.குன்றாவி. (v.t.) இறைவனே வலிய வந்து ஆதனை (ஆன்மாவை) ஆட்கொள்ளுதல்; to unite God voluntarily, with soul.

*[வா→வந்து + அடை.]*

**வந்தணை—தல்** *vandaṇai-,* 2 செ.குன்றாவி. (v.t.) வந்தடைதல்; to come near. *"வந்தணைந்து நல்லூரின் மண்ணுதிருத் தொண்டனார் வணங்கி மகிழ்ந்து எழும் பொழுதில்......" (பெரியபு.).*

*[வந்து + அள்→அண்→அண→அணை–.]*

**வந்ததுகொண்டுவாராததுணர்த்தல்** *vandadu-koṇḍu-vārādaduṇarttal,* பெ.(n.) பின் ஒரு வழி வந்தது கொண்டு முன் வாராததொரு பொருளை அறியவைக்கும் தந்திரவுத்தி வகை (தொல். பொருள். 666); a literary device which consists in applying to an earlier statement an implication drawn from a later explicit statement.

**வந்ததுவரட்டும்** *vandadu-varaṭṭum,* வி.மு. (in.v.) நேரிடுவது நேரிடட்டும்; come what may-voguelagalere.

*[வந்தது = இயல்பாய் வருவது. வந்தது + வரட்டும்.]*

**வந்தமார்க்கம்** *vandamārkkam,* பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

**வந்தனி** *vandaṉi,* பெ.(n.) கோரோசனை (நாமதீப. 393); bezoar of the cow.

**வந்தி** *vandi,* பெ.(n.) 1. கைவளை (வின்.); bracelet. 2. துன்பம், இடர்; difficulty. வந்தியான உழவு, வந்தியான வேலை. 3. வன்முறை, கட்டாயம் (திவ். நாய்ச். 9, 3, அரும்.); compulsion. 4. கட்டாயமாய் வந்தது (யாழ்.அக.); that which comes through external compulsion. 5. முரண்டு (வின்.); perversity, pertinacity. 6. சண்டை (திவ். நாய்ச். 9, 3, அரும்.); quarrel. 7. ஏணி (யாழ்.அக.); ladder.

**வந்திகட்டு—தல்** *vandi-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கட்டாயப்படுத்துதல், வற்புறுத்துதல் (யாழ்.அக.); to compel, to force, pressurise.

*[வலிந்து→வலிந்தி →வந்தி + கட்டு–தல்]*

**வந்திகை** *vandigai,* பெ.(n.) 1. கைவளை; bracelet. 2. கையில் தோளின்கீழ் அணியப்படும் அணிகலன், தோள்வளை; armlet. *"பணைத்தோள்..... வயக்குறு வந்திகை" (மதுரைக். 415).* 3. நுதலணி வகை (அக.நி.); an ornament worn on the forehead. 4. அணிகலன் (அரு.நி.); ornament.

*[வண்டு→ வந்து→ வந்திகை]*

**வந்தித்தல்¹** *vandittal,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை (மலை.); worm-killer.

**வந்தித்தல்²** *vandittal,* பெ.(n.) பங்கம்பாளை; a bitter prostate plant-*Aristolochia bractcata.*

**வந்திபற்று-தல்** *vandi-parṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வலிந்து எடுத்துக் கொள்ளுதல்; to obtain or take by force. *"வரிவளையிற் புகுந்து வந்திபற்றும் வழக்குளதே" (திவ். நாய்ச். 9, 3).*

*[வலிந்து→வந்து→வந்தி + பற்று-.]*

ஒரு செயல் அல்லது வினையின் வன்மை குறித்த வழக்காகும்.

**வந்திபீசம்** *vandi-pīšam,* பெ.(n.) நேர்வாளம்; croton seed.

**வந்திபோடு-தல்** *vandi-pōḍu-,* 19 செ. குன்றாவி. (v.t.) கட்டாயமாய்ப் பொறுப்பேற்றுதல் (யாழ்.அக.); to force responsibility upon.

*[வலிந்து→வலிந்தி→வந்தி + போடு-.]*

**வந்தியம்¹** *vandiyam,* பெ.(n.) குத்துப்பிடாரி; a kind of plant.

**வந்தியம்²** *vandiyam,* பெ.(n.) மலட்டுத்தனம்; sterility.

**வந்தியிறு-த்தல்** *vandi-y-iṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கட்டாயமாக வற்புறுத்தலுக் குட்பட்டு வரி முதலியன செலுத்துதல் (யாழ்.அக.); to pay tax, etc... under compulsion.

*[வலிந்து→ வந்தி + இறு-.]*

**வந்தியை** *vandiyai,* பெ.(n.) வந்திகை¹ பார்க்க; see *vandigai¹.*

*[வந்திகை → வந்தியை]*

**வந்திவாங்கு-தல்** *vandi-vāṅgu-,* 5 செ. குன்றாவி.(v.t.) கட்டாயத்திற்குட்படுத்தி வரி முதலியன வாங்குதல் (யாழ்.அக.); to collect tax, etc., using force or destraint.

*[வலிந்து→வலிந்தி→வந்தி+ வாங்குதல்]*

**வந்தீவு** *vantīvu,* பெ.(n.) தூத்துக்குடியில், சிறிய மீன்பிடி துறைமுகத்தில் இருக்கின்ற கலங்கரை விளக்கம்; a small island north of Tuticorin, on which there is small fishing beacon.

**வந்து¹** *vandu,* பெ.(n.) காற்று; wind. *"வந்தெனக் கந்தனூறு கணைதொடா" (கந்தபு. சூர. வதை. 188).*

*[வண்டு→ வந்து = வளைந்து வீசுங்காற்று (வேக.பக்.101).]*

**வந்து²** *vandu,* இடை. (part) 1. ஓர் அசைச் சொல்; an expletive. 2. பேச்சில் ஏற்படும் இடைவெளி தெரியாதவாறு இட்டு நிரப்பப் பயன்படுத்தும் ஒருசொல்; a filler in conversation. *"ஏன் இவ்வளவு நேரங்கழித்து வந்தாய்? என்று கேட்டதற்கு, 'அது "வந்து" வீட்டிலிருந்து புறப்பட நேரமாகி விட்டது' என்று இழுத்தாற்போல் பதில் சொன்னான்" (இக்.வ.).*

*[வா → வந்து]*

வந்துலோ *vandulō*, பெ.(n.) காஞ்சிரை; a tree-*Strychnos nuxvomica* (சா.அக.).

வந்துவம் *vanduvam*, பெ.(n.) பங்கம்பாளை; an ash coloured bitter medicinal prostate plant-*Aristolochia Bracteata* (சா.அக.).

வந்தூலமது *vantūla-madu*, பெ.(n.) வெள்ளுமத்தை; thorn-apple-*Dhatura alba* (சா.அக.).

வந்தேறி *vandēṟi*, பெ.(n.) 1. புதிதாகக் குடியேறியவன்; new-comer, immigrant, new settler. *"வந்தேறிகளாய்த் திருநாள் சேவித்துப் போவாரைப் போலே" (திவ். நாய்ச். 8, 9, வ்யா.).* 2. இடையில் வந்து குடியேறியவர்; that which is introduced from outside; exotic. *"இது வந்தேறி என்று தோற்றா நின்றதிறே" (ஈடு. 5, 1, 5). ஒரு சிலர் தங்களை மண்ணின் மைந்தர்கள் என்றும், பிறரை வந்தேறிகள் என்றும் அழைப்பது வழக்கமாகி விட்டது (இ.வ.).*

*[வா → வந்து + ஏறி]*

வந்து ஏறுபவர் வந்தேறி எனப்படுவர். வருதல் நாடு தாண்டி நாடு வருதல். ஒரு நாட்டார் மற்றொரு நாட்டிற்கு உரிமை பெறாமல் வருவதும், வந்து நிலைமக்களாகத் தங்கி விடுவதும் 'வந்தேறி' எனப்படுகின்றதாம். நிலை மக்களாக இருப்பவரையும் வந்தேறிகளாக அலை மக்கள் ஆக்கி விடுவர் என்பதற்கு ஈழநாட்டு நிலை எடுத்துக்காட்டாம். வந்தேறிகள் நிலை மக்களாவதற்கு அமெரிக்க, ஆப்பிரிக்க, ஆத்திரேலிய நாட்டு ஆட்சியுடையாளர் சான்றாவர். வருதல், இருத்தல் ஆகியது, வந்தேறுதல் எனப்படுவது குடியேறுதல், குடியேற்றம் போன்ற வழக்காம்.

வந்தேறு-தல் *vandēṟu-*, 5 செ.கு.வி.(v.i.) புதிதாக வந்து குடிபுகுதல்; to come and settle permanently, new settler, to immigrate. *"இருவினைகள் வந்தேற வழியுமில்லை" (தாயு. ஆனந்த. 10).*

'வந்தேறிகள் வஞ்சகர் தமிழால் பிழைத்தார். வளர்ந்தபின் அவரே தமிழை அழித்தார்' என்பது பாவாணரின் பொன்மொழி.

*[வா + ஏறி = வந்தேறி → வந்தேறு-.]*

வந்தேறுங்குடி *vandēṟuṅ-kuḍi*, பெ.(n.) ஒருரில் புதிதாக வந்து வேளாண்மை செய்யுங் குடியானவன்; immigrant cultivator.

*[வந்தேறு + குடி[4]]*

வந்தை[1] *vandai*, பெ.(n.) பெருமை (யாழ். அக.); greatness, honour, esteem.

*[வா→வந்தை]*

வந்தை[2] *vandai*, பெ.(n.) புல்லுருவி; honeysuckle mistletoe.

வந்தை[3] *vandai*, பெ.(n.) வந்திகை பார்க்க; see *vandigai*. *"வந்தைக்கும்..... இரண்டிலை பதியின்றேல்" (சேதுபு.துத்தம.9).*

வப்புக்கல் *vappu-k-kal*, பெ.(n.) செம்பாறைக் கல்; gravel stone.

வப்புகாரம் *vappu-kāram*, பெ.(n.) ஒரு மருந்து வகை; a kind of medicine.

வபபவனம் *vaba-bavaṉam*, பெ.(n.) தொட்டி நஞ்சு; a kind of arsenic.

வம்பக்கோட்டி *vamba-k-kōṭṭi*, பெ.(n.) பயனிற் சொல் பாராட்டுங் கூட்டம்; assembly of men indulging in vain or idle and aimless talk, blabbering crowd. *"வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியும்" (மணிமே. 14, 63).*

*[வம்பு[1] + கோட்டி[2]]*

வம்படி[1]–த்தல் *vambaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வீண்சொல் பேசுதல்; indulge in idle talk or unnessary talk. 2. இன்பமொழி பேசுதல்; to indulge in wanton talk. 3. தீதுரைத்தல்; to speak evil. 4. பழித்துப் பேசுதல்; to talk disparagingly.

*[வம்பு + அடி–.]*

வம்படி[2]–த்தல் *vambaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. இழித்துப் பழிதூற்றுதல் (கொ.வ.); to slander, to throw mud with evil words. 2. தீங்கு செய்தல்; to do harm.

*[வம்பு + அடி–.]*

வம்பப்பரத்தர் *vamba-p-parattar,* பெ.(n.) பெண்கள் பலரின், சிற்றின்ப புதிய நுகர்ச்சியை விரும்பும் காமுகன்; lascivious men who are ever after fresh victims for their lust. *"வறுமொழியாளரொடு வம்பப்பரத்தரொடு" (சிலப். 16, 63).*

*[வம்பு + பரத்தர். வம்பு = புதுமை (பரத்தர் = விலைமகளோடு விளையாடுபவன்)]*

வம்பப்பரத்தை *vamba-p-parattai,* பெ.(n.) கழிகாமத்தையுடைய விலைமகள்; lustful mistress or prostitute or harlot. *"வம்பப் பரத்தை வறுமொழியாளனொடு..... குறுகினர்" (சிலப். 10, 219).*

*[வம்பு + பரத்தை. பரத்தர் (ஆ.பா.)→பரத்தை (பெ.பா.)]*

வம்பம் *vambam,* பெ.(n.) சாலங்க வைப்பு நஞ்சு (யாழ்.அக.); a mineral poison.

வம்பமாக்கள் *vamba-mākkaḷ,* பெ.(n.) புதியோர், வெளிநாட்டவர்; immigrants, newcomers, strangers, foreigners. *"வம்பமாக்கள்..... கட்போருளரெனில்" (சிலப். 5, 111).*

*[வம்பு[1] + மாக்கள்]*

வம்பமாந்தர் *vamba-māndar,* பெ.(n.) 1. வம்பமாக்கள் பார்க்க; see *vamba-mākkaḷ.* 2. ஒரு கூட்டத்திலுஞ் சேராத மக்கள் (சிலப். 16, 63, அரும்.); nondescript persons.

*[வம்பு[1] + மாந்தர்]*

வம்பமாரி *vamba-māri,* பெ.(n.) காலமல்லாத காலத்துப் பெய்யும் மழை; unseasonal rains. *"வம்பமாரியைக் காரென மதித்தே" (குறுந். 66).*

*[வம்பு[1] + மாரி[1]]*

வம்பரத்தை *vambarattai,* பெ.(n.) பருத்தி; cotton - *Gossypium herbaceum.*

வம்பல் *vambal,* பெ.(n.) திசை (பிங்.); region, point of the compass.

தெ. வம்பு.

வம்பலன் *vambalaṉ,* பெ.(n.) 1. புதியோன்; new comer, stranger, unknown person. *"வம்பலர் துள்ளுநர்க் காண்மார்" (கலித். 3).* 2. வழிப்போக்கன்; wayfarer, a gypsy or traveller. *"வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்" (புறநா. 230).* 3. அயலான்; neighbour, alien. *"வம்பலன் றன்னொடு வைகிரு ளொழியாள்" (மணிமே. 20, 88).*

*[வம்பு[1] → வம்பலன்]*

வம்பலாட்டம் *vambalāṭṭam,* பெ.(n.) குழப்பம் (இ.வ.); confusion, complication, perplexity, puzzlement.

*[வன்பு→வம்பு→ வம்பல் + ஆட்டம்]*

**வம்பள[1]–த்தல்** *vambaḷa-*,3 செ.கு.வி. (v.i.) வம்படி–, 1, 2, 3, 4 பார்க்க; see *vambaḍi-*.

*[வன்பு→வம்பு [1] + அள–.]*

**வம்பள[2]–த்தல்** *vambaḷa-*, 3 செ.குன்றாவி. (v.t.) பொல்லாங்குரைத்தல்; to slander, to talk evil. *"அன்னை மாரென்னை வாய் வம்பளக்கின்றதே" (அஷ்டப். அழகரந். 70).*

*[வம்பு [1] + அள–.]*

**வம்பன்** *vambaṉ*,பெ.(n.) 1. பயனற்றவன்; worthless person. *"வம்பனாய்த் திரிவேனை" (திருவாச. 42, 9).* 2. வம்பளப்போன்; gossip-monger. 3. தீய நடத்தையாளன் (யாழ்.அக.); mischievous, wanton person, bad fellow. 4. முறை கேடாகப் பிறந்தவன் (யாழ்.அக.); illegitimate son.

தெ. வம்பு

*[வன்பு→வம்பு [1] → வம்பன்]*

**வம்பாடு** *vambāḍu*, பெ.(n.) கடின உழைப்பு; hard tireless effort.

மறுவ. அரும்பாடு

*[வன்பாடு→வம்பாடு.]*

**வம்பா நிலம்** *vambānilam*, பெ.(n.) கடற் கரையை யடுத்த நன்செய்நிலம் (C.G.); arable wet land adjacent to the sea.

**வம்பி[1]** *vambi*, பெ.(n.) 1. பயனற்றவள்; worthless or useless woman. 2. வம்பளப்பவள்; gossip-monger. 3. கெட்ட நடத்தையுள்ளவள்; mischievous, wanton woman. 4. முறைகேடாகப் பிறந்தவள்; illegitimate daughter.

*[வம்பன் → வம்பி]*

**வம்பி[2]** *vambi*,பெ.(n.) கருவண்டு (யாழ்.அக.); black bee.

**வம்பு[1]** *vambu*,பெ.(n.) 1. புதுமை (பிங்.); newness, novelty. *"வம்பப் பதுக்கை" (புறநா.3).* 2. நிலையின்மை; instability. *"வம்புநிலை யின்மை" (தொல். சொல். 327).* 3. பயனிலாமை, மதிப்பின்மை; uselessness; worthlessness, dishonour. *"வம்பு பழுத்து" (திருவாச. 40, 6).* 4. வீண் பேச்சு (கொ.வ.); idle-talk; gossip. 5. பழிமொழி; scandal. *"ஊரார் புகல் வம்பே" (வெங்கைக்க.18).* 6. தீச்சொல்; evil word. *"வெறிதே வம்புரைத்தனை" (கந்தபு. சூரன்வதை. 157).* 7. படிறு (பிங்.); falsity, untruthfulness. 8. சிற்றொழுக்கம் (நாமதீப. 650); base conduct. 9. இழிச்சொல் (யாழ். அக.); indecent language. 10. வஞ்சனை (பிங்.); deceit, slyness. 11. காமக் களியாட்டம்; wanton act; dalliance. *"அவளொடு வம்பு பண்ணினான்".* 12. சண்டை; quarrel. *"அவன் ஒருவரோடும் வம்புக்குப் போகிறதில்லை".* 13. வம்பமாரி பார்க்க; see *vamba-māri*. *"வம்பார் சிலம்பா" (திருக்கோ.159).* 14. வம்புக்காய் பார்க்க; see *vambu-k-kāy*. 15. வம்புப் பிள்ளை (யாழ்ப்.) பார்க்க; see *vambu-p-piḷḷai*. 16. உவமை; comparison, similitude. *"வம்பிறு சிவனிடத்து" (ஞானா. 68, 12).* 17. அரைக் கச்சு; girdle, belt for the waist. *"வம்புடை யொள்வாண் மறவர்" (பு.வெ.6, 24).* 18. யானைக்கச்சு; girth of an elephant. *"வம்பணி யானை" (புறநா. 37).* 19. முலைக் கச்சு (பிங்.); stays for woman's breast. *"வம்புடைக் கண்ணுருத் தெழுதரு முலை" (அகநா. 150).* 20. கையுறை; glove. *"வம்புகளை வறியாச் சுற்றம்" (பதிற்றுப்.19, 9).* 21. மேற்போர்வை (அரு.நி.); upper garment. 22. மிடா (யாழ்.அக.); a big earthen vessel. *"வம்பைச் சமைத்து வடிவுகண்டு" (கூளப்ப. 193).*

**வம்பு[2]** *vambu,* பெ.(n.) நறுமணம்; smell, fragrance. *"வம்பறா வரிவண்டு" (தேவா. 737:5).*

**வம்பு[3]** *vambu,* பெ.(n.) 1. பல்லக்கின் வளை கொம்பு (இ.வ.); curved bamboo-pole of a Palanquin. 2. புரசமரம்; satin wood. 3. கலப்பை, வண்டியிவற்றின் நுகங்கொளுவும் உறுப்பு; shaft, as of a plough or of a carriage; thill.

தெ. வம்பு; க. பம்பு.

*[வள் →வட்கு →வக்கு →வங்கு →வம்பு. வம்பு = வளைவு; (ஓ.நோ.) தீங்கு →தீம்பு.]*

**வம்புக்கச்சேரி** *vambu-k-kaccēri,* பெ.(n.) வம்பளந்து, வீண்பேச்சுப் பேசிப் பொழுது போக்கும் கூட்டம்; gossiping crowd, company gathered for idle talk, blabbers.

*[வம்பு + U. kacceri > த. கச்சேரி]*

**வம்புக்காய்** *vambu-k-kāy,* பெ.(n.) பருவந் தப்பிக் காய்க்குங் காய் (யாழ்.அக.); fruit growing out of season.

*[வம்பு + காய்]*

**வம்புச்சண்டை** *vambu-c-caṇḍai,* பெ.(n.) வலியச் சென்று ஏற்படுத்தும் சண்டை; quarrel which one picks up wontonly. *வம்புச் சண்டைக்குப் போகாதே வந்த சண்டையை விடாதே (பழ.).*

*[வன்பு →வம்பு + சண்டை]*

**வம்புத்தனம்** *vambu-t-taṉam,* பெ.(n.) 1. குறும்பு (சங்.அக.); mischief. 2. வீண் பேச்சு; gossip. 3. வஞ்சகம் (யாழ்.அக.); fraud, deceit, slyness, craftiness.

*[வம்பு [1] + தனம்[1]. தனம் = பண்புணர்த்தற் பொருட்டு வந்த சொல்லாக்க ஈறு.]*

**வம்புதும்பு[1]** *vambu-tumbu,* பெ.(n.) வீண் வம்பு; unnecessary interference. *"அவன் யாருடைய வம்புதும்புக்கும் போக மாட்டான்" (மரபிணைமொழி).*

**வம்புதும்பு[2]** *vambu-tumbu,* பெ.(n.) 1. வீண் பழிச்சொல்; scandal and gossip. 2. மதிப்புரவற்ற சொல் (வின்.); ribaldry. 3. குறும்புத்தனம் (இ.வ.); mischief.

*[வம்பு[1] + தும்பு [1]]*

**வம்புப்பாளை** *vambu-p-pāḷai,* பெ.(n.) பருவந் தப்பிய பாளை (யாழ்.அக.); spathe opening out of season.

*[வம்பு [1] + பாளை [1]]*

**வம்புப்பிள்ளை** *vambu-p-piḷḷai,* பெ.(n.) முறைகேடாகப் பிறந்த குழந்தை (வின்.); bastard, illegitimate child.

*[வம்பு + பிள்ளை]*

**வம்புப்பிறப்பு** *vambu-p-piṟappu,* பெ.(n.) ஒழுக்கங்கெட்டவளிடம் பிறக்கை (யாழ்.அக.); birth out of wedlock, illegitimate birth.

*[வம்பு + பிறப்பு]*

**வம்புப்பேச்சு** *vambu-p-pēccu,* பெ.(n.) வீண் பேச்சு (யாழ்.அக.); idle talk, gossip, empty chat.

*[வம்பு + பேச்சு]*

**வம்புமரம்** *vambu-maram,* பெ.(n.) குற்ற வாளிகளைக் கட்டி வைத்தடிக்கும் குறுக்கு மரவகை (வின்.); a kind of slant-tree to which criminals are tied when whipped.

*[வன்பு → வம்பு[2] + மரம்]*

**வம்புவளர்-த்தல்** *vambu-vaḷar-,* 4 செ.கு.வி. (v.i.) வம்பள-த்தல் பார்க்க; see *vambaḷa-.*

*[வம்பு[1] + வளர்-.]*

**வம்மரம்** *vammaram,* பெ.(n.) வன்மரம் (வின்.) பார்க்க; see *vaṉ-maram.*

*[வன்மை + மரம் = வம்மரம்]*

**வம்மரை** *vammarai,* பெ.(n.) வம்மரம் (L.) பார்க்க; see *vammaram.*

*[வம்மரம் → வம்மரை]*

**வம்மி** *vammi,* பெ.(n.) மரவகை; guinea peach.

**வம்மை** *vammai,* பெ.(n.) பெற்றோர் மண மகட்குக் கொடுக்குஞ் சீர்; presents given to a bride by her parents on the occasion of wedding. *"வம்மை வரிசை" (இ.வ.).*

*[வண்மை → வம்மை]*

**வமனி** *vamaṉi,* பெ.(n.) 1. அட்டை (சங்.அக.); leech. 2. பருத்திச்செடி; cotton plant.

**வமிசரோசனை** *vamiša-rōšaṉai,* பெ.(n.) மூங்கிலுப்பு bamboo-salt.

*[வமிசம் + ரோசனை]*

**வமைச்சு** *vamaiccu,* பெ.(n.) இளமை (அக. நி.); youth.

**வய[1]-த்தல்** *vaya-,* 4 செ.குன்றாவி.(v.t.) விரும்புதல்; to wish for, to desire. *"வயந்தே யுமக்காட் செய்து" (தேவா. 946. 7).*

**வய[2]** *vaya,* பெ.(n.) 1. ஆற்றல், வலி; strength, power. *"வயத்தணிந் தேகு" (பரிபா. 11, 40). "வய வலியாகும்" (தொல்.849).* 2. மிகுதி; increase, abundance, surplus.

**வயக்கம்** *vayakkam,* பெ.(n.) 1. ஒளி, வெளிச்சம்; brightness, light. *"வெண்ணிற வயக்க மாண்டது" (தணிகைப்பு. திருநாட். 15).* 2. ஒளிவட்டம் (யாழ்.அக.); halo.

*[வயங்கு → வயக்கு → வயக்கம்]*

**வயக்கல்[1]** *vayakkal,* பெ.(n.) பண்படுத்தம் பெறா நிலத்தை திருத்தி, பயிர் செய்வதற்குரிய வகையில் பண்படுத்தல்; convert the waste land, fit for cultivation. *"திடல் வயக்கிய நிலம்" (தெ. கல். தொ. 8, கல். 660). "கல்லி வயக்கின நிலம்" (தெ. கல். தொ. 8. 655, 681).*

*[வசக்கு → வசக்கல் → வயக்கல்]*

**வயக்கல்[2]** *vayakkal,* பெ.(n.) வயல் (இ.வ.), கழனி; paddy field, agricultural tract, cultural land.

*[வயக்கு → வயக்கல்]*

**வயக்கு[1]-தல்** *vayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. விளங்கச் செய்தல்; to cause to shine. 2. திருத்துதல் (கல்.); to improve, reclaim as land.

*[வயங்கு → வயக்கு → வயக்கு-.]*

**வயக்கு[2]-தல்** *vayakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) பழக்குதல் (யாழ்.அக.); to tame, break in.

Ma. vayakkuga; Kol. vay; Nāk. vay.

*[வசக்கு[1] → வயக்கு-தல்]*

**வயக்கு[3]** *vayakku,* பெ.(n.) ஒளி, வெளிச்சம்; brightness, splendour, light. *"வயக்குறு மண்டிலம்" (கலித். 25).*

*[வயங்கு → வயக்கு]*

வயக்கேதனம் *vayakkētaṉam,* பெ.(n.) காட்டு மிளகாய்; wild chilly.

வயகாண்டகம் *vaya-kāṇḍagam,* பெ.(n.) வயகுண்டம் பார்க்க; see *vaya-kuṇḍam.*

வயகுண்டம் *vaya-kuṇḍam,* பெ.(n.) 1. கவிழ்ந்து பூக்கும் தும்பை வகை; a low annual plant flourishing in dry localities. 2. மலைத் தும்பை; hill toombay.

வயகுண்டலி *vaya-kuṇḍali,* பெ.(n.) வய குண்டம் பார்க்க; see *vaya-kuṇḍam.*

வயங்கல் *vayaṅgal,* பெ.(n.) உருவம் காட்டும் கண்ணாடி; mirror, as bright. *“மணிபுரை வயங்கலுட் டுப்பெறிந் தவைபோல” (கலித். 33).*

*[வயங்கு → வயங்கல்]*

வயங்கு-தல் *vayaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒளி செய்தல்; to shine, gleam, glitter. *“வயங்கொளி மண்டிலம்” (அகநா.11).* 2. விளங்குதல்; to be resplendent. *“வயங்கிய கற்பினாள்” (கலித்.2).* 3. தெளிதல்; to be clear, lucid, as water. *“வயங்கொலி நீர்” (பு.வெ.2,14).* 4. தோன்றுதல்; to be exhibited. *“வயங்காக் கூத்து வயங்கியபின்” (சீவக. 2704).* 5. மிகுதல்; to abound. *“அணிநிழல் வயங்கு..... மதி” (பரிபா. 3, 51).* 6. நடத்தல் (யாழ்.அக.); to walk, go.

*[வயங்கு → வயங்கு-தல்]*

வயச்சம் *vayaccam,* பெ.(n.) குழலா தொண்டை; a plant-*Capparis aphylla.*

வயசத்து *vaya-šattu,* பெ.(n.) பலகல்லு சத்து; the essence of several stones.

வயஞானம் *vaya-ñāṉam,* பெ.(n.) உண்மை யறிவு; real knowledge. *“வயஞானம் வல்லார் மருகற் பெருமான்..... அடியுள்குதலால்” (தேவா. 662, 11).*

*[வய + ஞானம். **Skt.** ñāṉa > த. ஞானம்.]*

வயணம் *vayaṇam,* பெ.(n.) 1. வழி, வகை, பான்மை (வின்.); manner, method, way. 2. நிலைமை (வின்.); circumstance, condition. *‘அதன் வயணமென்ன’?* 3. தெளிவான விளக்கம்; clear details, particulars. *“வயணமாய்ப் பேசினான்”.* 4. உணவு முதலியவற்றின் வளம்; sumptuousness. *‘வயணமாய்ச் சாப்பிடுகிறவன்’.* 5. நல்லமைப்பு; good, agreeable condition. *‘குழம்பு வயணமாயிருக்கிறது’ (வின்.).* 6. சீர்மை (வின்.); neatness. 7. ஏற்றது; favourableness, suitability. *‘காற்று வயணமாயிருக்கிறது’.* 8. காரணியம்; reason, cause. *‘அப்படிச் செய்ததின் வயணம் என்ன’ (இ.வ.).*

**Ka.** vaina; **Tu.** vayana; **Te.** Nayinamu.

*[வசம் → வயம் → வயன் → வயனம் → வயணம்.]*

வயத்தம்பம் *vayattambam,* பெ.(n.). இளமை மாறாமல் நிறுத்தும் வித்தை; art of arresting the influence of advancing age in a person. *“இகலிலா வயத்தம்ப மென் றின்னவை செய்தும்” (திருவிளை. எல்லாம். 17).*

*[வயம் + தம்பம். **Skt.** stamlbha > த. தம்பம்.]*

வயத்தன் *vayattaṉ,* பெ.(n.) வசப்பட்டிருப்பவன் (யாழ்.அக.); one brought to a state of subjection.

*[வசம் → வயம் → வயத்தன்]*

**வயதரம்** *vayadaram,* பெ.(n.) கடுக்காய் (மலை.); chebulic myrobalan.

*[வய + தரம்]*

**வயதெற்றி** *vayaterri,* பெ.(n.) திப்பிலி (சங். அக.); long-pepper.

*[வயவெற்றி → வயதெற்றி.]*

**வயதேகி** *vaya-tēgi,* பெ.(n.) வயதெற்றி பார்க்க; see *vayaterri.*

**வயநாட்டுச்சிரிப்பான்** *vaya-nāṭṭu-c-cirippāṉ,* பெ.(n.) பறவை வகையு ளொன்று; wayanad laughing thrush-*Garrulax delessert.*

இப்பறவை நீலமலை, கொடைக்கானல் சார்ந்த மலைப் பகுதிகளிற் காணப்படும். 23 விரலம் உயரம் வரை வளரும் தன்மைத்து. உடலின் மேற்பகுதி செம்பழுப்பு நிறமும், கீழ்ப்பகுதி சாம்பலும், பழுப்பு நிறமுங் கலந்து காணப்படும். புழு, பூச்சிகளை உட்கொண்டு, 2 முதல் 3 முட்டைகளிட்டு, தன்னுடைய இனத்தைப் பெருக்கும்.

**வயநிமிளை** *vaya-nimiḷai,* பெ.(n.) அஞ்சனக்கல்; sulphurate of antimony.

**வயப்படு-தல்** *vaya-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வசமாதல்; to be brought under another's influence; to be subjugated. *"தீமையுடையார் வருந்தினா ரென்றே வயப்படுவதுண்டோ" (பழமொ. 110).*

*[வசம் →வயம் + படு-.]*

**வயப்பயறு** *vaya-p-payaṟu,* பெ.(n.) 1. நரிப்பச்சைப் பயறு; jackal green gram - *Rothia trifoliata* (சா.அக.). 2. எலிப்பயறு; rat gram. 3. கொல்லைப்பயறு; garden pulse. 4. பனிப் பயறு; dew pulse.

*[வயல் + பயறு]*

**வயப்புலி** *vaya-p-puli,* பெ.(n.) அரிமா (திவா.); lion. *"வயப்புலியை வாலுருவி விடுகின்றீரே" (பாரத. சூதுபோர். 265).*

*[வய + புலி. வய = வலிமை, ஆற்றல். புலி = அரிமா (அக.நி.)]*



**வயப்போத்து** *vaya-p-pōttu,* பெ.(n.) அரிமா (பிங்.); lion.

*[வய + போத்து]*

**வயம்[1]** *vayam,* பெ.(n.) 1. வலி (நாமதீப. 793); power, might. 2. வெற்றி; victory, conquest. *வலம்புரி வயநேமியவை" (பரிபா. 15, 59).*

*[வய→வயம். வலம்→வயம் (சு.வி.16).]*

**வயம்[2]** *vayam,* பெ.(n.) நிலம்; earth. *"வயமுண்ட மாலும்" (தேவா. 69, 9).*

*[வையம் → வயம்]*

**வயம்[3]** *vayam,* பெ.(n.) வேட்கை; desire. *"வயந்தலை கூர்ந்தொன்றும் வாய்திறவார்" (திருக்கோ. 383).*

**Ka.** bayake, bay(i)ke, bavake; **Tu.** bayakini; **Te.** vācu; **Go.** wassāvā.

*[வயா → வயம்]*

வயம்[4] *vayam,* பெ.(n.) பறவை (பிங்.); bird.

வயம்[5] *vayam,*பெ.(n.) 1. வசம்; state of subjugation. *"வயங்கொள நிற்பதோர் வடிவினை யுடையார்" (தேவா.1133, 2).* 2. மூலம்; means, agency. *"வையை வயமாக வை" (பரிபா. 6, 78).* 3. தொடர்பு (அரு.நி.); connection. 4. ஏற்றது, பொருத்தமானது; suitability. *"காற்று வயமா யிருக்கிறது" (உ.வ.).*

*[வசம் → வயம்.]*

(ஒ.நோ.) நேசம்→நேயம். தேசம்→தேயம் ச→ ய = திரிபு.

வயம்[6] *vayam,* பெ.(n.) நீர் (பிங்.); water.

*[பயம் → வயம்]*

வயம்[7] *vayam,* பெ.(n.) குதிரை (யாழ்.அக.); horse.

*[அயம் → வயம்]*

வயம்[8] *vayam,*பெ.(n.) 1. முயல் (பிங்.); hare. 2. கராம்பூ (சங்.அக.); clove.

வயமது *vayamadu,*பெ.(n.) சீந்தில் (சங். அக.); gulancha.

வயமம் *vayamam,* பெ.(n.) அத்தி (சங்.அக.); country fig.

வயமா *vaya-mā,*பெ.(n.) 1. அரிமா (பிங்.); lion. *"ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉங் குன்று" (ஐங்குறு.307).* 2. மடங்கல் மாதம்; the month of *āvaṇi.* *"வயமா கனிக்குங் கோற்றேட்கு நன்னான்கு" (தைலவ. பாயி. 55).* 3. புலி (பிங்.); tiger. *"குன்றில் வயமா முழங்க" (சீவக. 2778).* 4. யானை; elephant. *"வயமாத் தானவாரியும்" (கம்பரா. ஊர்தேடு. 17).* 5. குதிரை; horse. *"பணைநிலை முணைஇய வயமாப் புணர்ந்து" (ஐங்குறு. 449).*

*[வய + மா. வய = வலிமை, ஆற்றல்.]*

வயமான் *vaya-māṉ,* பெ.(n.) வயமா, 1 பார்க்க; see *vaya-mā.* *"அரும்பொறி வயமா னனையை" (பதிற்றுப். 75,2).* 2. வயமா, 3 பார்க்க; see *vaya-mā.* *"முணங்கு நிமிர் வயமான் முழுவலி யொருத்தல்" (புறநா. 52).*

*[வய + மான்]*

வயமீன் *vaya-mīṉ,* பெ.(n.) சகடேனும் (உரோகணி) நாண்மீன்; the fourth naksatra.

*[வய + மீன்]*

வயல் *vayal,* பெ.(n.) 1. கழனி; paddy field. *"வளவய லூர" (நாலடி, 367).* 2. மருத நிலம் (சூடா.); agricultural tract. 3. வெளி (பிங்.); open space; plain.

மறுவ. பற்று

தெ., க., து. பயல்; ம. வயல்.

**Koi.** ve-gad; **Kod.** bell.

*[வயம் → வயல்]*

வயல்கதிர்க்குருவி *vayal-kadir-k-kuruvi,* பெ.(n.) குருவி வகையுளொன்று; paddy field warbler - *Acrocephalus agricola.*

*[வயல் + கதிர்க்குருவி]*

நீர்வளம் கொண்ட நெல்வயல், புதர், கருப்பங்காடு ஆகியப் பகுதிகளிற் காணப்படும்

இவை எறும்புகள், சிறு வண்டுகள் முதலியவற்றை உணவாகக் கொண்டு வாழும் தன்மைத்து. 13 விரலம் உயரம் வரை வளரும். தமிழகத்தில் இனப்பெருக்கம் மேற்கொள்வதில்லை.

வயல்சுற்றித்திரிவான் *vayal-šuṟṟi-t-tirivāṉ,* பெ.(n.) கொக்கு; a paddy bird-stork.

*[வயல் + சுற்றி + திரிவான்]*

வயல்சூழ்சோலை *vayal-šūḻ-šōlai,* பெ.(n.) இளமரக்கா (பிங்.); grove.

*[வயல் + சூழ் + சோலை]*

வயல்நண்டு *vayal-naṇḍu,* பெ.(n.) கழனியில் வாழும் நண்டு; field crab.

*[வயல் + நண்டு]*

வயல்நரி *vayal-nari,* பெ.(n.) நரிவகையு ளொன்று; a kind of field jackal.

மறுவ. வளைநரி, குள்ளநரி.

*[வயல் + நரி.]*

வயற்புறத்தே வாழும் நரி. இந்நரி வயல்களில் விளையும் காய்கறி, கிழங்குகளையும், பிற உயிரிகளையும் உண்டு வாழுந் தன்மைத்து. சாம்பசிவ மருத்துவ அகரமுதலியில், இந்நரியின் பெயர், வளைநரி என்று குறிக்கப்பட்டுள்ளது.



வயல்நீர் *vayal-nīr,* பெ.(n.) நெற் கழனி யிலிருக்கும் தண்ணீர், இதனால், வெள்ளை, மூர்ச்சை, சுரம் இவை நீங்கும்; water in the paddy field.

*[வயல் + நீர்].*

வயல்நெட்டி[1] *vayal-neṭṭi,* பெ.(n.) கழனி யோரத்தில் வளரும் நீர்நெட்டி; pith growing near fields.

*[வயல் + நெட்டி. நெட்டி = கோரை.]*

வயல்நெட்டி[2] *vayal-neṭṭi,* பெ.(n.) நெட்டி வகை (மூ.அ.); a species of sola pith.

*[வயல் + நெட்டி]*

வயல்பாய்ச்சல் *vayal-pāyccal,* பெ.(n.) வயல் முகமாக அமைந்த வீடு; paddy field view house.

*[வயல் + பாய்→பாய்ச்சல்]*

வயல்மாதுளை *vayal-māduḷai,* பெ.(n.) மாதுளை வகை (மூ.அ); a species of pomegranate.

*[வயல் + மாதுளை]*

வயல்முருங்கை *vayal-muruṅgai,* பெ.(n.) செடிவகை (நாஞ்.); a plant.

*[வயல் + முருங்கை]*

வயல்மெருகு[1] *vayal-merugu,* பெ.(n.) ஒரு வகை மெருகன்கிழங்கு; a kind of bulbous root.

*[வயல் + மெருகு]*

வயல்மெருகு[2] *vayal-merugu,* பெ.(n.) மெருகஞ் செடிவகை (மூ.அ.); a species of arum.

*[வயல் + மெருகு[2]]*

**வயல்மேடு** *vayal-mēḍu,* பெ.(n.) வயலை விடச் சற்று உயரமான இடம்; threshing ground (a little elevated from the ground).

மறுவ. களத்துமேடு, திடல்.

*[வயல் + மேடு]*

வயற் பகுதிகளில் நெற்கதிர்களை அடிப்பதற்கு பயன்படுத்தப்படும் மேட்டுப் பகுதி.

**வயல்வெளி** *vayal-veḷi,* பெ.(n.) வயலும், வயல் சார்ந்த இடமும்; agricultural tract.

மறுவ. மருதநிலம்.

*[வயல் + வெளி.]*

வயலும், வயலையொட்டி நெற்கதிரடித்தற் கென்று அமைந்த மேட்டு நிலப்பகுதியுமாம்.

**வயல்வேளை** *vayal-vēḷai,* பெ.(n.) வயலி பார்க்க; see *vayali.*

*[வயல் + வேளை]*

**வயலம்மான்பச்சரிசி** *vayal-ammāṉ-paccariši,* பெ.(n.) 1. சிற்றம்மான் பச்சரிசி (வின்.); thyme-leaved spurge. 2. வட இந்தியா (வின்.) northern India.

*[வயல் + அம்மான் + பச்சரிசி]*

**வயலுக்குள்ளழகானவல்லி** *vayalukkuḷ-ḷ-aḻagāṉa-valli,* பெ.(n.) வல்லாரை; Indian penny wort-*Hydrocotyle asiatica.*

**வயலுப்பு** *vayaluppu,* பெ.(n.) வளையலுப்பு பார்க்க; see *vaḷaiyal-uppu.*

**வயலெலி** *vayal-eli,* பெ.(n.) வயலில் வாழும் எலி; field rat.

*[வயல் + எலி]*

கதிர்களையும், குருத்தையும் தின்றழித்து வயலில் வாழும் எலி.



**வயலை¹** *vayalai,* பெ.(n.) பசலைக்கொடி; purslane. *"மனைநடு வயலை வேழஞ் சுற்றும்" (ஐங்குறு. 11).*

தெ. பட்டலி; க. பயலு.

*[பசலை → வயலை]*

**வயலை²** *vayalai,* பெ.(n.) வெளி (தஞ்சைவா. 333, உரை); open space; plain.

தெ. பைலு; க. பயலு.

*[வயல் → வயலை]*

**வயவரி** *vaya-vari,* பெ.(n.) புலி (திவா.); tiger.

*[வய + வரி]*

**வயவன்¹** *vayavaṉ,* பெ.(n.) கருமை நிறமும் பிளந்த வாலுமுடைய கரிக்குருவி; a small black bird.

**வயவன்²** *vayavaṉ,* பெ.(n.) 1. வீரன், வலிமிக்கவன்; strong man, valiant man. *"வயவர்வேந்தே" (பதிற்றுப்.15, 21).* 2. திண்ணியன் (சூடா.); man of robust build. 3. படைத்தலைவன்; commander. *"வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு" (சிறுபாண். 249).* 4. கணவன் (சூடா.); husband. 5. காரிப் பிள்ளை (பிங்.); king-crow.

*[வய → வயவன். வய = வலிமை, ஆற்றல்.]*

**வயவாசம்** *vaya-vāšam*, பெ.(n.) கொழுஞ்சி; a plant-zanzibar indigo-*Tephrosia purpurea.*

**வயவு**[1] *vayavu*, பெ.(n.) கருப்பம்; womb.

*[வயா → வயவு.]*

**வயவு**[2] *vayavu*, பெ.(n.) வலிமை; strength. *"தாவா தாகு மலிபெறு வயவே" (பதிற்றுப். 36, 2).*

தெ. வலபு.

*[வய → வயவு]*

**வயவு**[3] *vayavu*, பெ.(n.) 1. கருப்பகாலத் துண்டாம் மசக்கை முதலியன; morning sickness and morbid longings of a pregnant woman. *"வயவுறு மகளிர்" (புறநா. 20).* 2. விருப்பம், ஆசை, அன்பு; desire, love, affection. *"வயவேற நனிபுணர்மார்" (பரிபா.11, 67).*

*[வயா → வயவு]*

**வயவுநோய்** *vayavu-nōy*, பெ.(n.) வயா நடுக்கம் பார்க்க; see *vayā-nadukkam. "வயவுநோய் நலிதலின்" (கலித். 29).*

*[வயவு + நோய்]*

**வயவெற்றி** *vayaverri*, பெ.(n.) திப்பிலி (மலை.); long-pepper.

**வயவை** *vayavai*, பெ.(n.) வழி, பாதை (திவா.); way, path, track.

*[வயம் →வயவை.]*

**வயளை** *vayaḷai*, பெ.(n.) பசளை; a kind of greens-Spinach- *Spinacia deracea.*

*[வயலை → வயளை]*

**வயற்கடைதூரம்** *vayar-kadai-tūram*, பெ.(n.) வயலளவுள்ள தூரம் (G.Tj.D.I. 344); a field's length or distance, considered a unit to indicate distance.

*[வயல் + கடை + தூரம்]*

**வயற்கரந்தை** *vayar-karandai*, பெ.(n.) திருநீற்றுப் பச்சை (வின்.); a kind of basil.

*[வயல் + கரந்தை]*

**வயற்கரை** *vayar-karai*, பெ.(n.) 1. வயலுள்ள பகுதி; tract of wet lands. 2. வயல் (வின்.); paddy field.

*[வயல் + கரை. கரை = நஞ்சைநிலம், செய்வரம்பு.]*

**வயற்கல்** *vayar-kal*, பெ.(n.) வெள்ளைச் சுக்கான் கல்வகை (மூ.அ.); a kind of white gravel.

*[வயல் + கல்]*

**வயற்கள்ளி** *vayar-kaḷḷi*, பெ.(n.) பொரிப் பூண்டு (சங்.அக.); water-thorn.

*[வயல் + கள்ளி[1]]*

**வயற்காடு** *vayar-kādu*, பெ.(n.) வயற்கரை பார்க்க; see *vayar-karai.*

மறுவ. வயற்சார்பு

*[வயல் + காடு]*

வயலும் வயல் சார்ந்த நிலப்பரப்பு 'வயற்கரை' யெனவும் 'வயற்கா'டெனவும் சொல்லப்பெறும்.

**வயற்கொடுக்கி** *vayar-kodukki*, பெ.(n.) ஒரு வகைச் செடி (வின்.); a herbaceous plant.

*[வயல் + கொடுக்கி]*

**வயற்கோலியன்** *vayar-kōliyan*, பெ.(n.) பாம்பு வகை (யாழ்.அக.); a kind of snake.

*[வயல்+கோல் = வயற்கோல் → வயற்கோலியன்]*

**வயற்கோவி** *vayar-kōvi*, பெ.(n.) வெண் தேக்கு; a tree, white teak (சா.அக.).

**வயற்சார்பு** *vayar-cārbu*, பெ.(n.) மருத நிலம் (வின்.); agricultural tract.

*[வயல் + சார்பு]*

**வயற்சுள்ளி** *vayar-culli*, பெ.(n.) பொரிப் பூண்டு (யாழ்.அக.); water-thorn-*Lepidagathes cristata.*

*[வயல் + சுள்ளி]*

**வயற்சூலம்** *vayar-cūlam*, பெ.(n.) உழவுக்காகாத விண்மீன்கள்; which are in auspicious for tilling.

**வயற்செம்பை** *vayar-cembai*, பெ.(n.) 1. செடி வகை (யாழ்.அக.); a plant. 2. செம்பைச் செடி; a kind of medicinal plant (சா.அக.).

*[வயல் + செம்பை]*

**வயற்சேம்பு** *vayar-cēmbu*, பெ.(n.) மழைக் காலத்தில் வரப்புக்களிலுண்டாம் சேம்புவகை (M.M.402); a variety of Indian hales.

*[வயல் + சேம்பு]*

**வயற்பயறு** *vayar-payaru*, பெ.(n.) 1. சிறு பயறு; field gram. 2. பச்சைப்பயறு, பாசிப் பயறு; green gram.

*[வயல் + பயறு]*

**வயற்புல்** *vayar-pul*, பெ.(n.) நன்செய்ப் பயிர்களிடையே முளைக்கும் களை; the grass or weed grown between crops in wet-land.

*[வயல் + புல்.]*

நன்செய்ப் பயிர்களின் விளைச்சலைக் கெடுக்கும் புல்.

**வயற்றுத்தி** *vayarrutti*, பெ.(n.) துத்திவகை (மூ.அ.); a species of evening mallow.

*[வயல் + துத்தி [1]]*

**வயறு[1]** *vayaru*, பெ.(n.) வயிறு பார்க்க; see *vayiru.*

**வயறு[2]** *vayaru*, பெ.(n.) 1. கொக்கி; hook. 2. கயிறு; rope.

**வயன்** *vayan*, பெ.(n.) வழி, நிலைமை; way, condition. *"நந்திதமராம் வயன்பெறுவீர்" (திருமந். 55).*

*[வயனம் → வயன்]*

**வயன்கட்டு** *vayan-kattu*, பெ.(n.) எல்லை வரம்பு (யாழ்.அக.); boundary.

*[வசன் → வயன் + கட்டு]*

**வயனண்டு** *vayanandu*, பெ.(n.) கழனி நண்டு (வின்.); field crab.

*[வயல் + நண்டு]*

மருத நிலக் கழனியில், நன்செய் மண் வளத்தை, மென்மேலும் வளஞ்செறியச் செய்யும் நண்டு.



வயனம்[1] *vayaṉam*, பெ.(n.) 1. பேச்சு, சொல்; word, speech. *"சரபோசி..... தனக்கேற்ற வயனத்தான்" (சரபேந்திர குறவஞ்சி 11, 8).* 2. மறைநூல்; the *vēdās*. *"நால்வயனத்தவ" (திருவிளை. கான்மாறி. 27).* 3. பழிமொழி; reproach, aspersion. *"வயனங்கள் மாயா வடுச் செய்தான்" (திருவாச. 12,4).*

வயனம்[2] *vayaṉam*, பெ.(n.) பான்மை வழி, தன்மை, வகை (வின்.); manner, way, quality. *"வயனங்களா லென்றும் வந்து நின்றானே" (திருமந். 1836).*

வயனர் *vayaṉar*, பெ.(n.) பறவை வடிவினர்; beings in the shape of birds. *"வயனர் சூழு காவிரியும்" (திருப்பு. 733).*

*[வயம்[4] → வயனர்]*

வயா[1] *vayā*, பெ.(n.) ஆசை; desire (சா.அக.).

வயா[2] *vayā*, பெ.(n.) 1. வேட்கைப் பெருக்கம் (திவா.); great desire. *"வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்" (தொல்.854).* 2. வயாநடுக்கம் (தொல். சொல். 371) பார்க்க; see *vayā-naḍukkam*. 3. கருக்கொள் கால மயற்கை நோய் (சூடா.); lanquor or lassitude during pregnancy. 4. கருப்பம் (பிங்.); foetus. 5. கருப்பை (வின்.); womb. 6. மகப்பேற்றிற்குரிய வலி (வின்.); pains of child-birth, labour pains. 7. வலி, வருத்தம் (பிங்.); pain, guib, sorrow. 8. நோய் (அக.நி.); disease.

வயாக்கோட்டி *vayā-k-kōṭṭi*, பெ.(n.) வயா நடுக்கம் பார்க்க; see *vayā-naḍukkam*.

*[வயா + கோட்டி [1]]*

ஒருகா. வசாக்கோட்டி→வயாக்கோட்டி.

வயாநடுக்கம் *vayā-naḍukkam*, பெ.(n.) வயாநோய் பார்க்க; see *vayā-nōy*.

*[வயா + நடுக்கம்]*

வயாநோய் *vayā-nōy*, பெ.(n.) கருப்பக் காலத்து ஏற்படும் மசக்கை நோய் (சூடா.); morning sickness and morbid longings of a pregnant woman. *"புளிங்காய் வேட்கைத் தன்று நின் மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே" (ஐங்குறு. 51).*

*[வயா + நோய்]*

வயாப்பண்டம் *vayā-p-paṇḍam*, பெ.(n.) கருக்கொண்ட மகளிர் விரும்பும் தின்பண்டம் (யாழ்.அக.); eatables longed for by pregnant women.

*[வயா + பண்டம் [1]]*

வயாமது *vayāmadu*, பெ.(n.) சீந்தில் (மூ.அ); gulancha.

*[வயமது → வயாமது]*

வயாலெடு-த்தல் *vayā-leḍu-*, 4 செ.கு.வி. (v.i.) கக்கல்; to vomit (சா.அக.).

மறுவ. கக்குதல்

*[வாயாலெடு-த்தல் → வயாலெடு-த்தல்]*

வயாவிதனம் *vayā-vidaṉam*, பெ.(n.) வலி; pain (சா.அக.).

*[வயா + விதனம். **Skt.** visava > த. விதனம்]*

வயாவு[1]-தல் *vayāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to desire, wish. *"காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்" (மலைபடு. 476).*

*[வயா → வயாவு-]*

**வயாவு**[2] *vayāvu*,பெ.(n.) வயா (பிங்.) பார்க்க; see *vayā*.

*[வயா → வயாவு]*

**வயாவுயிர்–த்தல்** *vayā-v-uyir-*,4 செ.கு.வி. (v.i.) 1. மகப்பெறுதல் (யாழ்.அக.); to yean, to give birth to be delivered of. 2. வருத்தந்தீர்தல்; to be relieved of pain.

*[வயா + உயிர்–த்தல்.]*

**வயான்** *vayāṉ*,பெ.(n.) கருப்பு நிறமும் பிளந்த வாலுமுடைய பறவை (பிங்.); king-crow.

மறுவ. காரிப்புள்

*[வயவன் → வயான்]*

**வயானம்**[1] *vayāṉam*,பெ.(n.) பறவை (சூடா.); bird.

*[வயா → வயானம்]*

**வயானம்**[2] *vayāṉam*,பெ.(n.) சுடுகாடு; cremation ground. *"சவத்துக்கு முன்னே வயானத்துக்குக் கூட்டிப் போகிறதும்" (புதுக். கல்.847).*

*[மயானம் → வயானம்]*

**வயானன்** *vayāṉaṉ*,பெ.(n.) வயான் (யாழ். அக.) பார்க்க; see *vayāṉ*.

*[வயான் → வயானன்]*

**வயிக்கிராந்தம்** *vayi-k-kirāndam*, பெ.(n.) வைப்புநஞ்சுவகை (மூ.அ.); a mineral poison.

**வயிகா** *vayigā*,பெ.(n.) விளாம்பிசின்; gum of wood-apple tree - gum of *Feronia elephantum* (சா.அக.).

**வயித்தியலிங்கம்** *vayittiya-liṅgam*, பெ.(n.) சிந்தாமணி நிகண்டின் ஆசிரியர்; author of *cindāmaṇinigaṇḍu*. *யாழ்ப் பாணத்திற் பிறந்த இவர் பரதவ குலத்தைச் சார்ந்தவர். வடமொழி, தென்மொழியிற் புலமை மிக்கவர். இவர் இயற்றிய நூல்களாவன செல்வச் சந்நிதி முறை, வல்லை வைத்தியேசர் பதிகம், முதலியவைகளாகும்.*

**வயித்தியன்** *vayittiyaṉ*,பெ.(n.) மருத்துவன் (வின்.); medical practioner, doctor, medical professionalist.

**வயிர்**[1]**–த்தல்** *vayir-*,4 செ.கு.வி.(v.i.) வயிரங் கொள்ளுதல்; to be solid, to harden. *"வயிர்த்தன ணிலத்தினுயர் வானமினி தென்பாள்" (பாரத. சம்பவ. 102).*

*[வல்→வள்→வய்→வயிர்–.]*

வலிமை கொள்ளுதல், திண்மையுடன் இருத்தல் (த.வ.பக்.111).

**வயிர்**[2]**–த்தல்** *vayir*, 4 செ.கு.வி.(v.i.) செற்றங் கொள்ளுதல்; to be angry, to bear grudge.

*[வயிரம் [2] → வயிர் [3]–]*

**வயிர்**[3] *vayir*, பெ.(n.) கூர்மை (அரு.நி.); sharpness. *"வச்சிரவயிர்வாயால்..... கொய்திட்டான்" (சேதுபு. துத். 19).*

*[வள்→வய்→வயிர் (வள் = கூர்மை) (வய்) →வை = கூர்மை.]*

ள→ய = மெய்த்திரிபு. ளகரமெய் யகர மெய்யாகத் திரிவது பெருவழக்கு (த.வ.I, பக்.11).

(ஒ.நோ.) கோள்→ கோய். தொள்→தொய். நொள்→நொய். பிள்→பிய். வெள்→வெய்.

**வயிர்**[4] *vayir,* பெ.(n.) 1. மூங்கில்; bamboo. *"முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரி" (ஐங்குறு. 395).* 2. ஊதுகொம்பு; large trumpet, horn, bugle. *"திண்காழ் வயிரெழுந் திசைப்ப" (திருமுரு. 120). "வயிரிடைப்பட்ட தெள்விளி யியம்ப" (அகநா. 269:18).*

*[வெதிர் → வயிர்]*

**வயிரக்கட்டை** *vayira-k-kaṭṭai,* பெ.(n.) விளைந்த – வயிரம் பாய்ந்த கட்டை; a hard log (சா.அக.).

*[வல்→வள்→வய்→வயிர்→வயிரம் + கட்டை = திண்ணிய கொம்பு (வ.வ.2, பக்.83).]*

*"திண்ணிய வயிரத்தையுடைய கொம்பு"* (நச்.) உரையில் வருவது காண்க. வயிரக்கட்டையினைப் பிங்கலந்தை மரவயிரம் என்று குறித்துள்ளது.

**வயிரக்கல்** *vayira-k-kal,* பெ.(n.) வயிரமணி; diamond.

*[வயிர்→வயிரம்[1] + கல்]*

தொண்(நவ) மணியுளொன்று.

**வயிரக்கனிந்தன்** *vayirak-kaṉindaṉ,* பெ.(n.) பெருச்சாளி; an animal, bandicoot (சா.அக.).

*[வயிரம் + கனிந்தன்]*

**வயிரக்காணி**[1] *vayira-k-kāṇi,* பெ.(n.) வயிர கரணி பார்க்க; see *vayira-karaṇi.*

*[வயிரம் + காணி]*

**வயிரக்காணி**[2] *vayira-k-kāṇi,* பெ.(n.) நெல் வயல்; paddy field. *நெல்விளையும் வளஞ்செறிந்த நன்செய் நிலம்.*

*[வள்→வய்→வயிர்→வயிரம் + காணி.]*

காண் → காணி = (220' x 220') 20 பெருங்கோல் சதுரம் 1/80.

**வயிரக்குணங்கள்** *vayira-k-kuṇaṅgaḷ,* பெ.(n.) எட்டுவகைப் பலகை, ஆறுவகைக் கோணம், தாரை, சுத்தி, தராசம் என வயிரத்திற் காணப்படும் ஐந்து வகை நற்குணங்கள் (சிலப். 14, 180, உரை); good qualities found in diamonds, five number, viz., eight kinds of palagai, six hinds of *kōṇam, tārai, šutti, tarāšam.*

*[வயிர்→வயிரம் + குள்→குணம்.]*

**வயிரக்குப்பாயம்** *vayira-k-kuppāyam,* பெ.(n.) ஊடுருவிச் செல்லவியலாதவாறும், துளைக்க முடியாதவாறமைந்த உறுதியான கவசம்; impenetrable coat of armour. *"எடுத்தென்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம்".*

மறுவ. மெய்ச்சட்டை.

*[வல்→வள்→வய்→வயிர்→வயிரம்+ குப்பாயம்.]*

*குள்→குவ்→குப்பு→குப்பாயம்.*

வலிமைக் கருத்தினின்று கிளைத்த சொல். உடலைக் கவ்வும் பான்மையில், வலிமையாக அமைந்த உறுதியான மெய்க்கவசம்.

**வயிரக்குற்றம்**[1] *vayira-k-kuṟṟam,* பெ.(n.) சரைமலம், கீற்று, சப்படி, பிளத்தல், துளை, கரி, விந்து, காகபாதம், இருத்து, கோடியில்லன, கோடிமுறிந்தன, தாரை மழுங்கல் என வயிரத்திற் காணப்படும் பன்னிரண்டு குற்றங்கள் (சிலப். 14, 180, உரை); 12 flaws in diamonds viz., *Šaraimalam, kiṟṟu, cappaḍi, piḷattal, tuḷai, kari, vindu, kāga-pādam, iruttu,*

*kōḍi-y-illaṉa, kōḍi-muṟindaṉa, tārai-maḻungal.*

*[வயிர்→வயிரம்+குல்→குறு→குற்றம். குற்றம்.]*

**வயிரக்குற்றம்²** *vayira-k-kuṟṟam,* பெ.(n.) வயிரங்களிலமைந்த குற்றம்; defects in diamond.

*[வயிரம் + குற்றம்]*

வயிரங்களில் காணப்படுகின்ற குற்றங்களாக கல்வெட்டு பின்வருவன வற்றை குறிப்பிடுகின்றது. 1.பொறிவு, 2. முறிவு, 3. அரத்தவிந்து, 4. காக விந்து, 5. வெந்தனம், 6. முங்குதாரை, 7. மப்புச்சுடி.

**வயிரகரணி** *vayira-karaṇi,* பெ.(n.) பெரு நெருஞ்சி (மலை.); a stout-stemmed herb.

**வயிரங்கொள்(ளு)-தல்** *vayiraṅ-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) முதிர்தல்; to have the qualities of age. *வயிரங்கொண்ட வேப்பமரப் பலகை எடுக்கவிருக்கும் வீட்டின் கதவுநிலை, பல்கணிகட்டு பயன்பாடுடைய தாகலாம்.*

**வயிரச்சங்கிலி** *vayira-c-caṅgili,* பெ.(n.) சரப்புணியென்னும் அணி (பிங்.); a kind of necklace.

*[வயிர்→வயிரம் + சங்கிலி.]*

*அங்கு→சங்கு = வளைந்தது. சங்கு→ சங்கிலி = வளைந்து ஒன்றுடனொன்று கோத்திருப்பது.*

**வயிரச்சன்னம்** *vayira-c-caṉṉam,* பெ.(n.) சிறுவயிரம் (இ.வ.); small-sized diamond.

*[வயிரம் + சன்னம் = நுண்மையான வலிமைவாய்ந்த சிறுவயிரம். சுல்→ சல்→ சன்னம். சன்னம் = நுண்மை.]*

**வயிரச்சிராய்** *vayira-c-cirāy,* பெ.(n.) வயிரத்துகள்; diamond dust (சா.அக.).

*[வயிரம் + சிராய்.]*

சுல்→சல்→சில்→(சீர்)→சிராய் = சிறிய துகள்

**வயிரசுத்தி** *vayira-šutti,* பெ.(n.) வயிரத்தை சுத்தப்படுத்துகை; purification of diamond.

*[வயிரம் + சுத்தி.]*

**வயிரஞ்சாதி-த்தல்** *vayirañ-cādi-,* 4 செ.கு.வி. (v.i.) பகை மிகுதல் (யாழ்.அக.); to wreak vengeance, to fulfil one's hatred.

*[வயிரம் ² + சாதி ¹–]*

Skt. Šādh > த. சாதி

**வயிரத்தளம்** *vayira-t-taḷam,* பெ.(n.) தட்டையான வயிரம் (வின்.); flat diamond.

*[வயிரம் + தல்→தள்→ தளம்.]*

பெரிய வயிரத்தின் தட்டையான அடிப்பரப்பு.

**வயிரத்தனம்** *vayira-t-taṉam,* பெ.(n.) வன்குணம் (யாழ்.அக.); hardness, toughness.

*[வயிர்→வயிரம்¹ + தம்→தன் + அம்–தனம் = தமக்கேயுரிய வலிமைக் குணம்.]*

**வயிரத்தாரணை** *vayira-t-tāraṇai,* பெ.(n.) ஆணவத்தை முற்றாயொழித்து, எஞ்ஞான்றும் ஆன்மா இரண்டறக் கலந்து இறையுடன் ஒகத்தில் ஆழ்கை (யாழ்.அக.); contemplation of the divine, always converging the facultis of the mind to one point, renouncing, egoism, one of *nava-tāraṇai.*

*[வயிர்→வயிரம் + தாரணை ]*

தார் + அணை = எஞ்ஞான்றும் ஆதனுக்கு நலமே நல்கும் இறையருள் ஒகநிலையில், ஆதனின் உள்ளத்தில் அணைவதால் (ஒன்றுவதால்) உள்ளம் ஒருமுகப்படுகை அல்லது வலிமையுறுகை.

வயிரத்தூள் *vayira-t-tūḷ*, பெ.(n.) வயிரத்தை தீயிலிட்டு புடமிடுகை; the purified diamond should be burnt in a fire and dipped in the decoction mixed with eyafoetida samuda salts and the seeds dolichos biflones.

*[வயிரம் + தூள்]*

வயிரப்பசை *vayira-p-pašai*, பெ.(n.) திண்ணிய வலிமை வாய்ந்த பசை; glue.

*[வயிரம்[1] + பசை]*

வயிரப்படை *vayira-p-paḍai*, பெ.(n.) வலிமை மிக்க படை (வச்சிராயுதம்) (பிங்.); thunderbolt.

*[வயிரம்[1] + படு→ படை]*

வயிரப்படையோன் *vayira-p-paḍaiyōṉ*, பெ.(n.) வானவர் தலைவன் (இந்திரன்); Indra, as the wielder of thunderbolt. *'வயிரப்படையோன் முதலமரர்' (காசிக. தேவர்கள் அகப். 10).*

*[வயிரம் + படை →படையோன்]*

வயிரப்பற்பம் *vayira-p-paṟpam*, பெ.(n.) கருப்பத்தால் வந்த சூலையை நீக்குமோர் மருந்து. நெஞ்சாங்குலை குளிர்ச்சி யுண்டாகி, சில்லிட்டுபோன போது, அக்குளிர்ச்சியை நீக்கி, இயல்பு நிலைக்குக் கொணரும். மேலும் இறக்குந்தறுவாயில் இருப்பவரை ஒரு மணி நேரத்தில் பேசும்படி செய்யும் தன்மைத்து; calcined diamond, it is prescribed for heart disease. it is said to stimulate the heart; which has been chilled to inaction.

*[வயிரம் + பற்பம்]*

Skt. bhasman > த. பற்பம்

வயிரப்பன்னாடை *vayira-p-paṉṉāḍai*, பெ.(n.) பனைமரத்துப் பன்னாடை; webbed sheath found in the palymra tree.

*[வயிரம் + பனை + ஆடை – பனையாடை →பன்னாடை.]*

வயிரம் = உறுதி.

உறுதியுள்ள பனைநாரினாலாகிய பன்னாடை.

வயிரப்பொடி *vayira-p-poḍi*, பெ.(n.) சிறு வயிரம் (இ.வ.); small sized or tiny diamond.

*[வயிரம்[1] + பொடி]*

வயிரப்பொலி *vayira-p-poli*, பெ.(n.) முற்றிய தவசமணி (இ.வ.); mature or ripe grain of corn.

*[வயிரம்[1] + பொல் →பொலி]*

நன்கு திரண்ட உறுதிமிக்க தவசம்.

வயிரம்[1] *vayiram*, பெ.(n.) 1. வயிரப்படை (பிங்.); thunderbolt. 2. தொண்மணி யுளொன்று; diamond, one of *nava-mani*. *"வயிரப் பொற்றோடு" (சிலப். 29, செங்குட்டுவன் கூற்று).* 3. மர வயிரம் (பிங்.); core of a tree, as the hardest part. 4. திண்மை; robustness, firmness. *"உலந்தரு வயிரத் திண்டோள்" (கம்பரா. பூக்கொ. 10).* 5. வலிமை; strength. *"தோள் வயிரந் தோன்ற" (சீவக. 645).* 6. கூர்மை (பிங்.); sharpness, pointed ness. *"கொறவைபுரி*

*வயிரவேலான்" (தணிகைப்பு. சீபரி. 32).* 7. கிம்புரி; ornamental knob, as on a tusk or horn. *"கோட்டை வயிரஞ் செறிப்பினும் ..... பன்றி செயிர்வேழ மாகுதலின்று" (நாலடி, 358).* 8. தண்டாயுதம் (பிங்.); club. 9. முக்கோல் (திருவோணம்) (திவா.); the 22nd naksatra. 10. வாளியென்னும் அணிகலனின் தகடு (யாழ்.அக.); the flat metal piece of a kind of ear-ring.

த. வயிரம் > **Skt.** vajra

*[வல்→வள் = வலிமை (பிங்.). வள்→வய்→வை →வயிர் = திண்ணிய கொம்பு. வயிர்→வயிரம் = திண்மை (வ.வ.பகுதி.2–83).]*

வயிரம் என்னுஞ் சொல், தூய தென்சொல். வட மொழியில் இதற்கு மூலமில்லை. தமிழில் இலக்கிய வழக்கிலும், மக்கள் வழக்கிலும், மிகுதியாக வழக்கூன்றியுள்ளது. பத்துப்பாட்டுளொன்றான திருமுருகாற்றுப் படையிலும், சிலப்பதிகாரத்திலும், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலான இலக்கியங்களிலும், நிகண்டுகளிலும், வலிமை, திண்மை என்னும் பொருளில் இடம் பெற்றுள்ளது.

வயிரம் என்னும் செந்தமிழ்ச்சொல்லே, வடமொழியில் வஜ்ர என்று திரிக்கப்பட்டுள்ளது. திண்மையுடையதாயிருத்தல், கடினமாயிருத்தல் வலிமையாயிருத்தல் என்னும் பொருண்மையில், மக்களிடைய வழங்கும், "வயிரம் பாய்ந்த கட்டை", "வயிரம் பாய்ந்த உடம்பு" போன்ற வழக்குகளை நோக்குக. இச் சொல்லின் வரலாற்றைக் கீழ்க்கண்டவாறு, மொழிஞாயிறு வடமொழி வரலாறு–இரண்டாம் பகுதி, மொழியதிகாரத்தில், பொருட் பொருத்தப் பாட்டுடன் விளக்கும் பாங்கு வருமாறு:–

வல் → வள் → வலிமை (பிங்.) *"வள்வார் முரசு" (பு.வெ.3:2, கொளு).*

வள் → (வய்) → வை → வயிர் = திண்ணிய கொம்பு.

*"திண்காழ் வயிரெழுந் திசைப்ப" (திருமுருகு. 120).*

இதன் உரை : *"திண்ணிய வயிரத்தையுடைய கொம்பு மிக்கொலிப்ப" – நச்.*

வயிர்த்தல் = 1. வயிரங்கொள்ளுதல்.

*"வயிர்த்தன ணிலத்தினுயர் வானமினி தென்பாள்" (பாரத.சம்பவ.102).*

வயிர் →வயிரம் = 1. திண்மை.

*"உலந்தரு வயிரத் திண்டோள்" (கம்பரா. பூக்கொ.10).*

2. வலிமை. *"தோள்வயிரந் தோன்ற"*

3. மரவயிரம் (பிங்.).

4. தொண்மணியுள் ஒன்று.

*"வயிரப் பொற்றோடு" (சிலப்.29, செங்குட்டுவன் கூற்று).*

5. மனவயிரமாகிய செற்றம்.

வடமொழியில் இதற்கு மூலமில்லை.

"Another vuj or uj, `to be hard or strong `may be inferred from ugra, ojas, vājra, vāja, (qq.vv.) the last of which gave rise to the Nom. vājaya" என்று மா.வி.அ.குறித்திருப்பதை நோக்குக.

**வயிரம்**[2] *vayiram,* பெ.(n.) செற்றம்; **anger,** animosity. *"வாள் வயிரம் விற்கு மடநோக்கி" (சீவக. 645).*

**வயிரம்**[3] *vayiram,* பெ.(n.) மயிர்ப்படாம் (நாமதீப. 55); woollen cloth.

*[வயிரியம் → வயிரம்]*

**வயிரம்**[4] *vayiram,* பெ.(n.) 1. ஒரு கல்; one of the nine gems, a very hard gem. 2. இது ஆறுவகைப்படும் (தேவபிரம சத்திரிய, வைசிய, சூத்திர சங்கரக் கற்கள் தங்கியிருக்கும்); the matrix of the gem is sand stone breccia lying under the compact sand stone of which the hills near kurnool are composed.

**வயிரம்**[5] *vayiram,* பெ.(n.) தொன்மணிகளுள் உறுதி மிக்கதும், விலை மதிப்பு மிக்கதுமான கல்; diamond.

உயர்ந்த வயிரங்களில் அமைந்த குணங்கள் ஆறு என்று இரத்தினநூல் இயம்புகிறது. அவை 1. கோணமாயிருத்தல். 2. இலகுவாயிருத்தல். 3. சமமான எட்டுத் தளங்களுடன் அமைதல். 4. கூரிய முனைகளுடைமை. 5. ஒளித் தெளிவுடைமை. 6. நான்கு பட்டைச் சதுரகமாக இருத்தல் என்பவைகளாகும். கல்வெட்டுகளில் சிறந்த வயிரம் என்பது 'இராசவர்த்தனம்' என்ற பெயருடன் குறிக்கப்படுகின்றது. வயிர வகைகளாகப் பின்வருவன குறிக்கப்பட்டுள்ளன. 1. பளிங்கு – உள்ளொளித் தெளிவுடனமைந்தது. 2. பொத்தி – கீழ்க்குழிவும் மேற்புடைப்புமுள்ளது. 3. தாளிம்பம் – பனையோலை கீற்றுப் போன்ற வடிவுடையது. 4. பளிக்கு வயிரம் – தூய ஒளியுடன் கூடியது. 5. சப்படி – சப்பையாகப் பிறப்பிலேயே இருப்பது. 6. கோமளம் – மென்மையும் வெளிறிய ஒளியும் பொருந்தியது. 7. உருளை – திரட்சியாக இருப்பது. 8. பந்தசாரம் – ஒன்றன் மேலொன்றாகப் படிந்த விளைவுடனிருத்தல். (தெ.கல்.தொ. 2:1, 2:2) (முதல். இராச.).

**வயிரம்கோத்தபட்டைக்காறை** *vayiram-kōtta-paṭṭai-k-kāṟai,* பெ.(n.) வயிரங்கள் வைத்து இழைக்கப்பட்ட கழுத்தணி; diamond studded necklace.

*[வயிரம் + கோத்த + பட்டைக்காறை.]*

**வயிரம்பாய்-தல்** *vayiram-pāy-,* 1 செ. குன்றாவி.(v.t.) வலிமை அல்லது உரமிகுதல்; to get strength. *வயிரம் பாய்ந்த தேக்குமரம் வாசற்காலுக்கு ஏற்றது (உ.வ.). வயிரம் பாய்ந்த உடலுக்கு மருத்துவம் இல்லை (இ.வ.).*

*[வயிரம் + பாய்-.]*

**வயிரம்போடல்** *vayiram-pōḍal,* தொ.பெ. (vbl.n.) வயிரத்தூள் பார்க்க; see *vayira-t-tūḷ.*

*[வயிரம் + போடல்]*

**வயிரமணி** *vayira-maṇi,* பெ.(n.) 1. வயிரம்[1], 2 பார்க்க; see *vayiram.* 2. பொன்னாலாகிய மணிவகை (யாழ்.அக.); bead of gold.

*[வயிரம்[1] + மணி]*

**வயிரமுடி** *vayira-muḍi,* பெ.(n.) 1. வயிரம் இழைத்த மணிமுடி; crown studded with diamonds. 2. வயிரம் முதலிய மணிகள் வைத்து இழைத்துச் செப்புத் திருமேனியிற் சூட்டப்பெறுந் தொப்பாரம்; head-ornament of an idol, set with diamonds and other precious stones.

*[வயிரம்[1] + முடி]*

**வயிரமுத்து** *vayira-muttu,* பெ.(n.) ஆணி முத்து (வின்.); pearl of the best quality.

*[வயிர் →வயிரம் + முள் →முட்டு →முத்து. வயிரம் + முத்து]*

குற்றமற்ற உயர்ந்த கட்டாணிமுத்து. வன்மையானதும், திண்ணியதுமான, விலை யுயர்ந்த நன்முத்து.

**வயிரமேகவிருத்தி** *vayira-mēga-virutti,* பெ.(n.) இலக்கண நூல்களுளொன்று (தக்கயாகப். 16, உரை); one of treatise on grammar.

*[வயிரமேகம் + விருத்தி]*

**வயிரவசாந்தி** *vayirava-šāndi,* பெ.(n.) இயற்கைக்கு மாறாக இறந்தவர்கட்கு பகர நேர்வாக வயிரவக் கடவுளுக்குச் செய்யும் வழிபாடு (வின்.); ceremony of appeasing Bhairava by making offerings in the sacrificial fire at the funeral ceremonies of a person who dies an unnatural death.

*[வைரவம் → வயிரவம் + சாந்தி]*

**வயிரவபூசை** *vayirava-pūšai,* பெ.(n.) திருத்தலங்களுக்குச் சென்று திரும்பி வந்தவுடன், வயிரவக்கடவுளுக்குச் செய்யும் பூசை (நாஞ்.); worship of Bhairava performed on return from a pilgrimage of holy places.

*[பயிரவம் → வயிரவம் + பூசை]*

**வயிரவம்** *vayiravam,* பெ.(n.) 1. அகப்புறச் சமயம்; the Bhairava sect. *"சிலர் கடாம் வயிரவத்தினை மேலெனத் தேர்வார்" (திருக்காளத். பு. 30, 26).* 2. நடுக்கம், அச்சம் (வின்.); terror, horror. 3. கலக்கம், கவலை; fear.

*[வைரவம் → வயிரவம்]*

**வயிரவர்** *vayiravar,* பெ.(n.) வயிரவக்கடவுள்; a God.

**வயிரவராதி** *vayiravarādi,* பெ.(n.) 1. வலம்புரிச் சங்கு; conch whose spirals turn to the right. 2. நந்தியாவட்டம்; East Indian rosebay.

**வயிரவல்லி** *vayiravalli,* பெ.(n.) பிரண்டை (மூ.அ.); square stalked vine.

**வயிரவளை**[1] *vayira-valai,* பெ.(n.) சிறுபயறு (மலை.); field-gram.

*[வயிரம்[1] + வளை]*

**வயிரவளை**[2] *vayira-valai,* பெ.(n.) நரிப்பயறு; dew gram-*Phaseolus aconitifolius.*

**வயிரவன்பூசை** *vayiravan-pūšai,* பெ.(n.) பரதவருடன் தொடர்புடைய ஒரு பூசை; a prayer pertaining to fishermen tribe.

*[வயிரவன் + பூசை]*

*"அண்டு ராவைக்கு ஏலேலோ*
*வயிரவன் பூசையாம் ஏலேலோ*
*தாவறு மடமாம ஏலேலோ*
*மடத்தம்மா ஐயா ஏலேலோ" (நாட்டார் பாடல்)*

**வயிரவன்மடை** *vayiravan-madai,* பெ.(n.) வயிரவர்க்கிடும் திருப்படையல் (வின்.); oblations offered to Bhairava.

*[வயிரவன் + மடை[1]]*

**வயிரவன்வாகனம்** *vayiravan-vāganam,* பெ.(n.) நாய்; dog, as the vehicle of *vayiravan.* *"சீராடையற்ற வயிரவன் வாகனஞ் சேரவந்து" (தனிப்பா.* i, 186, 14).

*[வயிரவன் + வாகனம்]*

**வயிரவாரினி** *vayira-vārini,* பெ.(n.) 1. கீரைத் தண்டு வகை; a species of amarnath. 2. கீரை வகை (யாழ்.அக.); a pot-herb.

**வயிரவாள்** *vayiravāl,* பெ.(n.) வச்சிரப்படை (பிங்.); thunderbolt.

*[வயிரம்[1] + வாள்]*

**வயிரவாளி** *vayira-vāli,* பெ.(n.) 1. வயிர வுறுதியுள்ள அம்பு (வின்.); adamantine arrow. 2. மாதர் காதணிவகை (யாழ்ப்.); a woman's ear-ornament.

*[வயிரம் ¹ + வாளி]*

**வயிரவி¹** *vayiravi,* பெ.(n.) 1. கொற்றவை; Bhairavi. 2. பைரவிப் பண் (இசை.); a musical mode.

*[வைரவி → வயிரவி]*

**வயிரவி²** *vayiravi,* பெ.(n.) 1. சாரணை; a prostate plant. 2. சத்தி சாரணை; a boerhaavia rependa.

**வயிரவிழா** *vayira-viḻā,* பெ.(n.) அறுபதா மாண்டு நிறைவுக் கொண்டாட்டம் (தற்கா.); diamond jubilee.

*[வயிரம் ¹ + விழு → விழா]*

**வயிரவுருக்கு** *vayira-vurukku,* பெ.(n.) வயிரத்தை உருக்கக்கூடிய பொருள்; a thing that melts or dissolves diamond. *'வயிரவுருக்கானது அரக்கையுருக்கச் சொல்லவேணுமோ' (திவ். திருநெடுந். 22. வ்யா. பக். 205).*

*[வயிரம் + உருகு → உருக்கு]*

வன்மையுந் திண்மைமிக்கதுமான, உறுதி வாய்ந்த உருக்கினையும் உருகச் செய்யும் பொருள்.

**வயிரவூசி** *vayira-v-ūsi,* பெ.(n.) 1. கண்ணாடி யறுக்குங் கூரிய வயிரம்; glazier's diamond for cutting glass. *"வயிரவூசியு மயன் வினையிரும்பும்" (நன். 265, சங்கர.).* 2. முத்துத்துளைக்கும் ஊசி (யாழ்.அக.); diamond-drill; needle for boring pearls.

*[வயிரம் ¹ + ஊசி ¹]*

**வயிரவேர்** *vayira-vēr,* பெ.(n.) சாயவேர் (மலை.); Indian madder.

*[வயிரம் ¹ + வேர்]*

**வயிராக்கியம்** *vayirākkiyam,* பெ.(n.) உலகப் பற்றின்மை; desireless altitude towards wordly objects, oath to conquer all worldly attachment. *"வேண்டும் வயிராக்கியத்துக்குற்ற வனிதாதி" (வேதா. சூ. 143).*

மறுவ. தன்னொறுப்பு

*[வைராக்கியம் → வயிராக்கியம்]*

**வயிராக்கியன்** *vayirākkiyan,* பெ.(n.) 1. பற்றற்றவன் (இ.வ.); one who is free from wordly desires and attachments, sage. 2. தன்முனைப்புள்ளவன்; obstinate, pertinacious or adamant person. 3. பற்றார்வலர் (வின்.); zealot, enthusiast.

*[வைராக்கியம் → வயிராக்கியம் → வயிராக்கியன்]*

**வயிராகம்** *vayirāgam,* பெ.(n.) 1. பற்றின்மை; absence of wordly passions. *"ஊன்று ஞானமோ டுயர் வயிராக நல்லொழுக்கம்" (பிரபுலிங். கைலாச. 43).* 2. ஊக்கம் (வின்.); zeal, enthusiasm, energy. 3. இணங்காமை (வின்.); obstinacy, pertinacity, adamancy.

**வயிராகரம்** *vayirāgaram,* பெ.(n.) மத்திய மாகாணத்திலுள்ள பெருநகரம்; a metropolitain city in Madhya pradesh. *"மதவரையீட்டம் வயிராகரத்து வாரி".*

**வயிராகி** *vayirāgi,* பெ.(n.) பற்றற்றவன் (வின்.); one who is free from wordly desires, or who conquered five senses, one who establishes desirelessness.

வயிராவி *vayirāvi,* பெ.(n.) வயிராகி (யாழ். அக.) பார்க்க; see *vayirāgi.*

*[வயிராகி → வயிராவி]*

வயிரி[1]-த்தல் *vayiri-,* 11 செ.கு.வி.(v.i.) 1. மனம் முதலியன இறுகுதல்; to be hardened, as in feeling. 2. இணங்காதிருத்தல்; to be obstinate, adamant.

*[வயிர் → வயிரி-.]*

மனம் வன்மையாகவும், திண்மையாகவும் கடிடன்படுதல் அல்லது உறுதியுடைத்தாதல். இணங்காதிருந்து செற்றங் கொள்ளுதலும் வயிரித்தலே யென்க.

வயிரி[2] *vayiri,* பெ.(n.) பகைவன்; enemy, foe. *"அவ்வயிரி செய்த" (திருநூற். 34).*

*[வயிர் → வயிரி = பகை, பகைவன் (மு.தா.2, பக்.65).]*

வயிரி[3] *vayiri,* பெ.(n.) கன்னெஞ்சன் (யாழ். அக.); iron or stone or hard hearted man.

*[வயிரம்[1] → வயிரி]*

வயிரி[4] *vayiri,* பெ.(n.) வல்லூறு (வின்.); royal falcon.

வயிரிப்பு[1] *vayirippu,* பெ.(n.) 1. இறுகுகை, கடினமாகை (வின்.); hardening, mental stress. 2. இணங்காமை, obstinacy, adamancy.

*[வள் → வய் → வயிர் → வயிரி → வயிரிப்பு வலியது; கடினமானது.]*

மனம் வயிரம்போல், வன்மையாயும், கடினமாயும் மாறுங்கால் எளிதில் அடங்காத் தன்மையேற்பட்டுத் தன்முரண் பிடித்தலே வயிரிப்பாகும்.

வயிரிப்பு[2] *vayirippu,* பெ.(n.) 1. வயிரம் பார்க்க; see *vayiram.* 2. வலிப்பு; convulsion.

வயிரியம் *vayiriyam,* பெ.(n.) மயிர்ச்சீலை (பிங்.); wollen cloth.

*[வயிர் → வயிரி → வயிரம்[3] → வயிரியம்]*

வன்மையாயும், திண்மையாயும், உருவாக்கப் பட்டுள்ள மயிர்ச்சீலை.

வயிரியமாக்கள் *vayiriya-mākkaḷ,* பெ.(n.) 1. வயிரியர்; professional dancers, actors, musicians. 2. பாடகர்; professional musicians. *"வயிரியமாக்கள் பண்ணமைத் தெழீஇ" (பதிற்றுப். 29).*

*[வயிரியர் + மாக்கள்]*

வயிரியர் *vayiriyar,* பெ.(n.) 1. கூத்தர், பாணர், விறலியர்; professional dancers, actors or actresses. *"விழவினாடும் வயிரியர் மடிய" (மதுரைக். 628).* 2. பாடகர்; professional musicians, songster or songstress.

*[வயிர்[4] → வயிரியர்]*

வயிரோசனன் *vayirōšaṉaṉ,* பெ.(n.) விரோசனன் மகன் மாவலி; *Mahābali,* son of *Virōšaṉaṉ.* *"வயிரோசனனுக்குல கீந்தவர்" (வெங்கைக்கோ. 162).*

வயிரோசனி *vayirōšaṉi,* பெ.(n.) சிவதை யென்னுங் கொடிவகை (சங்.அக.); Indian jalap.

வயில் *vayil,* பெ.(n.) 1. கூரை வேயப் பயன் கொள்ளும் ஒருவகைப்புல்; a kind of grass used for thatched roofing. 2. விழற்புல்; a kind of grass.

தீயபார்வையால் குழந்தைகட்கு ஏற்படும் கேட்டினைப் போக்குவதாகக் கருதப்படும் புல்.

**வயில்வீடு** *vayil-vīḍu*, பெ.(n.) விழலெனுங் கோரையால் வேய்ந்த கூரை வீடு; thatched roofing house.

*[வயில் + வீடு]*



**வயிலத்தி** *vayilatti*, பெ.(n.) உள்ளங்கால் (சங்.அக.); sole of foot.

**வயிலத்திருகு** *vayilattirugu*, பெ.(n.) உள்ளங்கை (சா.அக.); palm of the hand.

**வயிற்றக்கமயூரம்** *vayirrakkamayūram*, பெ.(n.) வெள்ளூமத்தை; dhatura plant bearing white flowers - *Dhatura alba*.

**வயிற்றகச்சவ்வு** *vayirraga-c-cavvu*, பெ.(n.) வயிற்றினுட்சவ்வு பார்க்க; see *vayirrinuṭ-šavvu*.

**வயிற்றகமுடையான்** *vayirragamuḍaiyāṉ*, பெ.(n.) (வயிற்றிற் பிறந்த ) மகன் (இ.வ.); son, as born of one's womb.

*[வயிற்றகம் ' + உடையான்]*

**வயிற்றரை** *vayirrarai*, பெ.(n.) வயிற்றிலுள்ள வெற்றிடம்; abdominal cavity.

**வயிற்றழுக்கு** *vayirraḻukku*, பெ.(n.) சூதக வழுக்கு; menstrual blood.

**வயிற்றளைச்சல்** *vayirraḷaiccal*, பெ.(n.) வயிற்றுநோய் வகை; dysentery.

*[வயிறு + அளைச்சல்]*

**வயிற்றாசாரம்** *vayirrāšāram*, பெ.(n.) வயிற்றுக் கொடுமைக்காக நடந்து கொள்ளும் நடத்தை (இ.வ.); conduct dictated by necessitous circumstances.

*[வயிறு + ஆசாரம் ' ]*

**வயிற்றாத்திரம்** *vayirrāttiram*, பெ.(n.) பசி (இ.வ.); hunger.

*[வயிறு + ஆத்திரம்]*

**வயிற்றாலெடு-த்தல்** *vayirrāl-eḍu-*, 4 செ.கு.வி.(v.i.) வயிற்றாலேபோ-, (கொ.வ.) பார்க்க; see *vayirrālē-pō-*,

*[வயிறு + எடு-,]*

**வயிற்றாலேபோ-தல்** *vayirrālē-pō-*, 8 செ.கு.வி.(v.i.) வயிற்றுப் போக்காதல் (உ.வ.); to have diarrhoea or loose motions.

*[வயிறு + போ-.]*

**வயிற்றாள்** *vayirrāl*, பெ.(n.) பெரு வயிறுடையவள்; big bellied woman (சா.அக.).

*[வயிறாள் →வயிற்றாள்.]*

**வயிற்றாளி** *vayirrāḷi*, பெ.(n.) அளவின்றி வயிறு நிரைப்போன்(இ.வ.); belly-slave, glutton.

மறுவ. கழிபே ரிரையான்.

*[வயிறு + ஆள் → ஆளி = வயிற்றாளி.]*

'இ' உடைமைப் பொருளீறு.

வயிற்றான் *vayiṟṟāṉ,* பெ.(n.) பெரு வயிறோன் (இ.வ.); big-bellied man.

*[வயிறு + ஆன். ஆன் = ஆண்பாலீறு.]*

வயிற்றிசிவு[1] *vayiṟṟiśivu,* பெ.(n.) 1. வயிற்று வலி (வின்.); stomach-ache. 2. வயிற்றி லேற்படும் மகப்பேற்று வலி; labour-pains.

*[வயிறு + இழுப்பு→இசிப்பு→இசிவு. இசிவு = வயிற்றுவலி, மகப்பேற்றுவலி.]*

வயிற்றிசிவு[2] *vayiṟṟiśivu,* பெ.(n.) வயிற்றி லேற்படும் தசைபிடிப்பு; cramp of the abdominal muscles (சா.அக.).

*[வயிறு + இழுப்பு→இசிப்பு→இசிவு.]*

வயிற்றிரைச்சல்[1] *vayiṟṟiraiccal,* பெ.(n.) வயிற்றிலுண்டாகும் இரைச்சல்; gargling or gurgling sound in the abdomen (சா.அக.).

வயிற்றிரைச்சல்[2] *vayiṟṟiraiccal,* பெ.(n.) ஊதை மிகுதியான் வயிற்றி லுண்டாகும் இரைச்சல் (இ.வ.); rumbling of the bowels.

*[வயிறு + இரை [2] → இரைச்சல்]*

வயிற்றில்களிம்புகட்டல் *vayiṟṟil-kaḷimbu-kaṭṭal,* பெ.(n.) 1. உப்புசம்; tympanitis. 2. வளி வெளிநோக்கல்; any abnormal escape air as by belching yawning etc- *Herifleaus* (சா.அக.).

*[வயிற்றில் + களிம்பு + கட்டல்]*

வயிற்றில்வாயுபொருமல் *vayiṟṟil-vāyu-porumal,* பெ.(n.) ஊதையால் ஏற்படும் அடிவயிற்று வீக்கம்; tympanitis (சா.அக.).

வயிற்றிலடசல் *vayiṟṟilaḍaśal,* பெ.(n.) வருமகுற்றம் (தோஷம்); industrinal fault or disorder (சா.அக.).

வயிற்றிலடி–த்தல் *vayiṟṟil-aḍi-,* 4 செ. குன்றாவி.(v.t.) பிழைப்பைக் கெடுத்தல் (இ.வ.); to deprive a person of his food or doing harm to the means of livelihood, as striking at the stomach. *"தொழிலாளர் வயிற்றிலடித்துப் பணம் சேர்ப்பது, முதலாளி களுக்குக் கைவந்த கலையாகும்" (உ.வ.).*

*[வயிறு + அடு→ அடி–,]*

வயிற்றிலிட்டுக்கொள்(ளு)–தல் *vayiṟṟil-iṭṭu-k-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) 1. வயிற்றுப் போக்காதல் (இ.வ.); to have diarrhoea or loose motions. 2. இடுக்கண் முதலியவற்றால் உடம்பு இன்னலுறுதல் (இ.வ.); to be affected physically, as by a calamity, etc.

*[வயிறு + இடு + கொள்–,]*

வயிற்றிழைச்சல் *vayiṟṟiḻaiccal,* பெ.(n.) வயிறுளை–த்தல் பார்க்க; see *vayiṟuḷai-.*

*[வயிறு + இள்→ இழை→இழைச்சல்.]*

வயிற்றிளக்கம் *vayiṟṟiḷakkam,* பெ.(n.) வயிற்றின் சுருக்கம்; relaxation of the bowels by cathartics or by discharges (சா.அக.).

*[வயிறு + இள்→இள→இளகு→இளக்கு →இளக்கம்.]*

வயிற்றிளைச்சல் *vayiṟṟiḷaiccal,* பெ.(n.) வயிறுளை–த்தல் பார்க்க; see *vayiṟuḷai-* (சா.அக.).

*[வயிறு+இள்→இளை→இளைச்சல்.]*

வயிற்றிற்கிருமி *vayiṟṟiṟ-kirumi,* பெ.(n.) வயிற்றுக்கிருமி (வின்.) பார்க்க; see *vayiṟṟu-k-kirumi.*

*[வயிறு + Skt. krmi > த. கிருமி]*

**வயிற்றிற்கொள்(ளு)-தல்** *vayiṟṟiṟ-koḷ (ḷu)-*, 10 செ.குன்றாவி.(v.t.) 1. உண்ணுதல்; to eat. *"தம் வயிற்றிற் கொண்டு" (திவ். திருவாய். 8, 7, 9).* 2. பாதுகாத்தல்; to protect. *"வயிற்றிற் கொண்டு நின் றொழிந்தார்" (திவ். திருவாய். 8, 7, 9).* 3. மனத்திற் கொள்ளுதல்; to retain in memory, to absorb in mind. *"வயிற்றிற் கொண்டு மன்னவைத்தேன்" (திவ். திருவாய். 8, 7, 9).*

*[வயிறு + கொள்-,]*

**வயிற்றின்கொடுமை** *vayiṟṟiṉ-koḍumai,* பெ. (n.) வயிற்றுப்பசி; want of food, starvation (சா.அக.).

*[வயிற்றின் + கொடுமை]*

**வயிற்றுக்கட்டி** *vayiṟṟu-k-kaṭṭi,* பெ.(n.) 1. வயிற்றுப் புண்கட்டி (வின்.); abdominal abscess. 2. ஈரல் முதலியவற்றின் வீக்கம் (உ.வ.); enlargement of the liver or the spleen.

மறுவ. ஆமைக்கட்டி, காய்ச்சற்கட்டி

*[வயிறு + கள்→ கட்டு→கட்டி.]*

கள் திரளல், பெருகுதல், உருண்டு கட்டியாதல். வயிற்றிலுள்ள உருண்டு திரண்ட கட்டி.

மலையும் மலைசார்ந்த குறிஞ்சிநிலத்துவாழ் மக்களுக்கு மண்ணீரல் சுரந்து கட்டியைப்போலத் தோற்றுவிக்கும் ஒரு வகை வீக்கமாகலாம்.

**வயிற்றுக்கட்டு** *vayiṟṟu-k-kaṭṭu,* பெ.(n.) 1. அடிவயிற்றிலிருந்து குறிவரைக்கும் துணியால் இறுகக்கட்டும் கட்டு; abdominal compress, a form of local pack, made by forming folds of a coarse linen towel of sufficient breadth to reach upto the penis. 2. ஈன்று புறந்தந்தவுடன் அடி வயிற்றிற் கட்டும் கட்டு; an abdominal bandage or belt for woman immediately after delivery (சா.அக.).

*[வயிறு→ வயிற்று + கள்→கடு→கட்டு. கட்டு இணைத்தல், சேர்த்தல். வயிற்றை இடுப்போடிணைத்துப் பிணைத்துக் கட்டும் கட்டு.]*

**வயிற்றுக்கடுப்பு** *vayiṟṟu-k-kaḍuppu,* பெ.(n.) 1. வயிற்றினழற்சியால் உண்டாகும் ஓர் நோய்; a disease causing throbbing pain or irritation in some parts of the abdomen. 2. மூலக்கடுப்பு; tenismus, as in dysentery. 3. வயிறுகடுப்பு பார்க்க; see *vayiṟu-kaḍuppu* (சா.அக.).

*[வயிறு + கடு→கடுப்பு.]*

வயிற்றின் அழற்சியால், கடுமையான வலி யுண்டாக்கும் வயிற்றுநோய்.

**வயிற்றுக்கடுப்பு[2]** *vayiṟṟu-k-kaḍuppu,* பெ.(n.) 1. வயிற்றுப் போக்கால் ஏற்படும் வலி; grips. 2. அரத்தக் கழிச்சல்; dysentery. 3. வயிற்றில் உண்டாம் நோவுவகை; stomach-ache, colic, cramp, stabbing pain in the stomach.

*[வயிறு + கடு →கடுப்பு.]*

வயிற்றில் மிகு வலியினையும், குத்தலையும் உண்டாக்கும் வயிற்று நோய்.

**வயிற்றுக்கண்டரை** *vayiṟṟu-k-kaṇḍarai,* பெ.(n.) அடி வயிற்றிலோடும் அரத்தக்குழாய்; abdominal aorta.

*[வயிறு + கண்டு→ கண்டரை]*

கண்டரை = நெஞ்சாங்குலையின் மேற்புறம் உள்ள இடப்பெருந் தமனி, ஆதார நாடி.

வயிற்றுக்கலக்கல் *vayiṟṟu-k-kalakkal,* பெ.(n.) வயிறு கலங்கி மலங்கழிகை; stirring sensation in the abdomen causing an inclination to go to stools (சா.அக.).

*[வயிறு + சல → கலக்கல்.]*

வயிற்றுக்கழிச்சல்[1] *vayiṟṟu-k-kaḻiccal,* பெ.(n.) அதிசாரம்; flux, purging (சா.அக.).

வயிற்றுக்கழிச்சல்[2] *vayiṟṟu-k-kaḻi-c-cal,* பெ.(n.) வயிற்றுப்போக்கு (இ.வ.) பார்க்க; see *vayiṟṟu-p-pōkku.*

*[வயிறு + கழி →கழிச்சல்]*

கடுமையான வயிற்றுப்போக்கினாலுண்டாகும் நீர் நெருடலான கழிச்சல்.

வயிற்றுக்கனப்பு *vayiṟṟu-k-kaṉappu,* பெ.(n.) 1. செரிமான ஆற்றலறியாமல் உண்பதால் வயிறு விம்முகை (வின்.); heaviness of stomach as from over-eating or excessive eating. 2. ஊதை மிகுதியான் அடி வயிறு விம்முகை (கொ.வ.); tympanites.

மறுவ. வயிற்றுத் தீ

*[வயிறு + கனப்பு]*

கல்→கனல் = நெருப்பு அல்லது வயிற்றிலேற் படும் வெப்பம். மிகு செரிமானத்தால் ஏற்படும் வயிற்றுத் தீ.

வயிற்றுக்காந்தல்[1] *vayiṟṟu-k-kāndal,* பெ.(n.) கடும் பசியால் வயிறு காந்துகை; pricking in the stomach due to hunger (சா.அக.).

வயிற்றுக்காந்தல்[2] *vayiṟṟu-k-kāndal,* பெ.(n.) வயிற்றுக்காய்ச்சல் (கொ.வ.) பார்க்க; see *vayiṟṟu-k-kāyccal.*

*[வயிறு + காந்து → காந்தல் = அல் தொ.பெ.ஈறு]*

வயிற்றுப் பசியின் வெப்பமிகுதியாலேற்படும் எரிச்சல்.

வயிற்றுக்காய்ச்சல்[3] *vayiṟṟu-k-kāyccal,* பெ.(n.) வயிற்றுப் பசி (யாழ்.அக.); hunger, starvation.

*[வயிறு+காய் → காய்ச்சல். 'அல்' தொழிற் பெயர் ஈறு.]*

ஒருகா. வயிற்றுத்தீ

கடும் பசியினால் வயிற்றிலுண்டாகும் காய்ச்சல்.

வயிற்றுக்கிராந்தம்[1] *vayiṟṟu-k-kirāndam,* பெ.(n.) 1. குமுத நஞ்சு; a kind of poision. 2. வயிரக்கிராந்தம் பார்க்க; see *vayira-k-kirāndam* (சா.அக.).

*[வயிறு + **Skt.**கிராந்தம்.]*

**Skt.** krānta> த. கிராந்தம்

வயிற்றுக்கிராந்தம்[2] *vayiṟṟu-k-kirāndam,* பெ.(n.) செய்நஞ்சு வகையு ளொன்று (சங்.அக.); a kind of mineral poison.

*[வயிறு + கிராந்தம்]*

வயிற்றுக்கிருமி *vayiṟṟu-k-kirumi,* பெ.(n.) வயிற்றிலுண்டாம் கொக்கிப்புழு, நாடாப்புழு (யாழ்.அக.); round-worm, ring-worm, tape-worm.

*[வயிறு + கிருமி]*

Skt. krmi > த. கிருமி.

நுண்ணிய நச்சுயிரிகளின் விளைவாக, வயிற்றிலுருவாகும் இப்புழு, மனிதனுடைய குடலில் ஒட்டிக் கொண்டு, தனக்குத் தேவையான உணவை உறிஞ்சி உயிர் வாழும் இயல்பினது.



**வயிற்றுக்குத்து** *vayiṟṟu-k-kuttu,* பெ.(n.) வயிற்றிலேற்படும் நோவு (வின்.); stomach-ache, stabbing pain in stomach.

மறுவ. வயிற்றுவலி

*[வயிறு + குல்→ குத்து.]*

வயிறு குத்திக் குத்தி வலிப்பதாலுண்டாகும் நோவு.

**வயிற்றுக்குத்துவாதம்** *vayiṟṟu-k-kuttu-vādam,* பெ.(n.) வயிற்றுக்குத்து பார்க்க; see *vayiṟṟu-k-kuttu.*

*[வயிற்றுக்குத்து + Skt. வாதம்]*

மிகும் வளித்தொல்லையினால், வயிற்றிலேற்படும் வலி. இவ்வயிற்று வலியானது, வயிற்றின் ஏதேனும் ஒருபுறத்தே தாக்கும்; சிறிது நேரத்திற்கு ஒருமுறை குத்திக் குத்தி வலிக்குந் தன்மைத்து.

**வயிற்றுக்கேடு** *vayiṟṟu-k-kēḍu,* பெ.(n.) வயிற்றுப்போக்கு; disorder of stomach (சா.அக.).

*[வயிறு + கெடு→கேடு]*

**வயிற்றுக்கொட்டல்** *vayiṟṟu-k-koṭṭal,* பெ.(n.) சிறுக, சிறுக சீதமும், கழிமாசுக்கட்டும் இழிதல்; dysentery (சா.அக.).

*[வயிறு + கொள்→கொட்டு + அல்]*

**வயிற்றுக்கொடுமை** *vayiṟṟu-k-koḍumai,* பெ.(n.) வயிற்றுப் பசி (கொ.வ.); hunger, starvation.

*[வயிறு + கொடு→கொடுமை]*

**வயிற்றுக்கொதி** *vayiṟṟu-k-kodi,* பெ.(n.) 1. பசி; hunger. 2. வயிற்றுப்போக்கு; diarrhoea.

*[வயிறு + குல்→குதி→கொதி]*

**வயிற்றுக்கோளாறு** *vayiṟṟu-k-kōḷāṟu,* பெ.(n.) வயிற்றில் ஏற்படும் பலவித ஊறுபாடு; disorder of stomach due to indigestion (சா.அக.).

*[வயிறு + குளறு→குளாறு→கோளாறு]*

**வயிற்றுச்சங்கடம்** *vayiṟṟu-c-caṅgaḍam,* பெ.(n.) வயிற்றுத் தொந்தரவு; trouble in the stomach (சா.அக.).

த. சங்கடம் > Skt. Šaṅkata.

*[வயிறு + சாங்கடை→சங்கடை→சங்கடம் = வருத்தம், ஒடுக்கவழி.]*

**வயிற்றுச்சிறுநோய்** *vayiṟṟu-c-ciṟu-nōy,* பெ.(n.) அடி வயிற்றிலேற்படும் சிறுவலி; slight pain in the abdomen (சா.அக.).

*[வயிறு + சில்→சிறு + நோய்.]*

வயிற்றில் உண்டாகும் சிறிய குத்தல் வலி.

வயிற்றுச்சுரப்பு *vayiṟṟu-c-curappu,* பெ.(n.) வயிற்றுக்கனப்பு பார்க்க; see *vayiṟṟu-k-kaṉappu.*

*[வயிறு + சுள்→சுர்→சுர→சுரப்பு]*

வயிற்றுச்சூலை *vayiṟṟu-c-cūlai,* பெ.(n.) 1. ஓர்வகைச்சூலை, அடிவயிறு வீக்கத்துடன் கூடிய குடல் நோவு; colic pain in the abdomen. 2. வயிற்றுக்குத்தல் பார்க்க; see *vayiṟṟu-k-kuttal* (சா.அக.).

*[வயிறு + சூல்→சூலை]*

வயிற்றுத்தீ *vayiṟṟu-t-tī,* பெ.(n.) 1. முற்பொழுதுண்ட உணவைச் செரிக்கச் செய்யும் வயிற்றுத்தீ; digesting agency, considered a fire or heat abiding in the stomach. *"வயிற்றுத்தீத் தணிய" (புறநா. 74).* 2. பெரும்பசிப்பிணி வகை; a disease that causes insatiable hunger. *"வயிற்றுத் தீயார்க்கு" (ஏலாதி. 57).*

மறுவ. கடும்பசி

Skt. உதராக்கினி

*[வயிறு + தீ]*

வயிற்றுத்தொந்தி *vayiṟṟu-t-tondi,* பெ.(n.) வயிற்றின் தசை மடிப்பு; collop (சா.அக.).

*[வயிறு + தொந்தி]*

வயிற்றுநாளம் *vayiṟṟu-nāḷam,* பெ.(n.) அரத்தம், தசைநீர், கொழுப்புநீர் முதலானவற்றை உடலின் பல பகுதிகட்கும், எடுத்துச் செல்லும் அடிவயிற்று நரம்பு; gastric vein (சா.அக.).

*[வயிறு + நாளம். நள்→நாள்→நாளம்.]*

உட்டுளை, உட்டுளை நரம்பு.

வயிற்றுநீராம்பல் *vayiṟṟu-nirāmbal,* பெ.(n.) அடி வயிற்று நோய்; a disease of the abdomen.

*[வயிறு + நீராம்பல்]*

வயிற்றுநோக்காடு *vayiṟṟu-nōkkāḍu,* பெ.(n.) வயிற்றுநோவு பார்க்க; see *vayiṟṟu-nōvu.*

*[வயிறு + நோய் + காடு. காடு = சொல்லாக்க ஈறு.]*

ஒ.நோ. பூ + காடு

வயிற்றுநோய் *vayiṟṟu-nōy,* பெ.(n.) வயிற்று வலி (வின்.); stomach-ache.

*[வயிறு + நோய்]*

வயிற்றுநோவு *vayiṟṟu-nōvu,* பெ.(n.) 1. வயிற்று வலி (வின்.); stomach-ache. 2. மகப்பேற்று வலி; labour-pains, a pre-delivery symptom.

*[வயிறு + நோ → நோவு]*

வயிற்றுப்பசம் *vayiṟṟuppašam,* பெ.(n.) வயிறுப்பசம் (M.L) பார்க்க; see *vayiṟuppašam.*

*[வயிறு + உப்பசம். உப்பசம் = வீக்கம்.]*

வயிற்றுப்பசையெடுப்பான் *vayiṟṟu-p-pašai-eḍuppāṉ,* பெ.(n.) பறவை வகையுளொன்று; chestnut bellied nuthatch-*Sitta castanea.*

*[வயிறு + பசை + எடுப்பான்]*

இப்பறவையினம் தமிழ்நாட்டின் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிகளிலும், இலையுதிர்க் காடுகள், மரங்கள் நிறைந்த ஊர்ப்புறத் தோப்புகளிலும் காணப்படும். இப்பறவை

யினமானது, 12 விரலம் உயரம் வரை வளரும். உடலின் மேற்பகுதி நீலம் தோய்ந்த கருஞ்சாம்பல் நிறமாகவும், கண், அலகு முதலியவற்றில் கருப்புக்கோடும் காணப்படும். புழு, பூச்சி, சிறு விதைகள் ஆகியன இவற்றின் உணவாகும். 4 அல்லது 5 முட்டைகள் இட்டு தன் இனத்தை பெருக்கும்.



வயிற்றுப்பறதி *vayiṟṟu-p-paṟadi,* பெ.(n.) வயிற்றுப்பறப்பு (வின்.) பார்க்க; see *vayiṟṟu-p-paṟappu.*

*[வயிறு + பறதி]*

வயிற்றுப்பறப்பு *vayiṟṟu-p-paṟappu,* பெ.(n.) 1. பசித்தாருக்கு ஏற்படும் உணவு வேட்கை (வின்.); voracity. 2. வாழ்க்கைத் துன்பம்; straitened means of livelihood, inadequate means of living, poverty-sticken living.

*[வயிறு + பற → பறப்பு.]*

பசியால் வருந்துவோர் உண்பன கிடைத்தவிடத்து வயிறு நிரைத்தற் பொருட்டுளதாகும் உணவு வேட்கை.

வயிற்றுப்பாடு *vayiṟṟu-p-pāḍu,* பெ.(n.) வயிற்றுப்பிழைப்பு (வின்.) பார்க்க; see *vayiṟṟu-p-piḻaippu.*

*[வயிறு + படு→பாடு]*

வயிற்றுப்பிசம் *vayiṟṟuppišam,* பெ.(n.) வயிறுப்பசம் பார்க்க; see *vayiṟuppašam.*

*[வயிறு + உப்பிசம்]*

வயிற்றுப்பிசம்[2] *vayiṟṟuppišam,* பெ.(n.) வயிறூதல், வயிற்றுப் பொருமல்; a distension of the abdomen attended with incarceration of flatus, and an intense pain and rumbling inside-tympanitis, it arrests the emission of flatus (சா.அக.).

*[வயிறு + உப்பசம்→உப்பிசம்]*

உப்பிசம் (கொ.வ.)

சீரகமும் வெல்லமும் உரியமுறையில் கலந்துண்ண வயிற்றுப்பசம் நீங்கும்.

வயிற்றுப்பிடுங்கல் *vayiṟṟu-p-piḍuṅgal,* பெ.(n.) வயிற்றுநோய்; gnawing pain in the abdomen (சா.அக.).

*[வயிறு + பிடுங்கல்]*

வயிற்றுப்பிழைப்பு *vayiṟṟu-p-piḻaippu,* பெ.(n.) வாழ்விற்குரிய தொழில், பிழைப்பிற்குரிய தொழில்; liveli-hood, profession, occupation, as a means of living.

*[வயிறு + பிழைப்பு ' ]*

வயிற்றுப்பிள்ளை *vayiṟṟu-p-piḷḷai,* பெ.(n.) கருப்பத்தில் இருக்கின்ற பிள்ளை; child in the womb (சா.அக.).

*[வயிறு + பிள்ளை]*

வயிற்றுப்பிள்ளைக்காரி *vayiṟṟu-p-piḷḷai-k-kāri,* பெ.(n.) கருவுற்றவள்; pregnant woman.

மறுவ. சூலி, உண்டானவள், முழுகாதவள், பிள்ளைத்தாய்ச்சி.

*[வயிறு + பிள்ளைக்காரி.]*

வயிற்றுப்புகைச்சல் *vayiṟṟu-p-pugaiccal,* பெ.(n.) வயிற்றுட் கொதிப்புண்டாகை (யாழ்.அக.); excessive heat in the stomach due to empty stomach.

*[வயிறு + புகை→புகைச்சல்]*

வயிற்றுப்புண் *vayiṟṟu-p-puṇ,* பெ.(n.) வயிறு அழளுகை; ulceration of the stomach, stomach ulcer (சா.அக.).

*[வயிறு + புண்]*

வயிற்றுப்புரட்டல் *vayiṟṟu-p-puraṭṭal,* பெ.(n.) வாந்தி யெடுப்பதற்கு முன் வயிற்றில் உண்டாகும் வாய்க்குமட்டலுணர்வு; changes in the stomach or the sensation in the stomach before vomitting (சா.அக.).

*[வயிறு + புரட்டல்]*

வாயாலெடுக்கு முன் ஏற்படும் குமட்டலுணர்வு.

வயிற்றுப்புளிப்பு *vayiṟṟu-p-puḷippu,* பெ.(n.) முன்னுண்ட உணவு அறாமையான் இரைப்பையிற் புளிப்புச்சத்து மிகுதியா யிருக்கை (M.L.); acidity of the stomach.

*[வயிறு + புளிப்பு]*

வயிற்றுப்புற்று *vayiṟṟu-p-puṟṟu,* பெ.(n.) வயிற்றுப்பரப்பிலேற்படும் புற்றுநோய் வகை; stomach cancer (சா.அக.).

*[வயிறு + புற்று]*

வயிற்றுப்பூச்சி *vayiṟṟu-p-pūcci,* பெ.(n.) வயிற்றில் உண்டாகும் புழு (யாழ்.அக.); round-worm, ring-worm, tape-worm. in stomach.

*[வயிறு + பூச்சி]*

வேப்பிலைக் கொழுந்துடன், சிறிது வெல்லம் கலந்துண்ண வயிற்றுப்பூச்சி மடியும். துளசியையும், மிளகையும் உரியமுறையிற் கலந்து, கருக்குநீரிட்டுக் குடித்துவர, வயிற்றுப்பூச்சி மடியும்.

வயிற்றுப்பொருமல் *vayiṟṟu-p-porumal,* பெ.(n.) 1. வயிறுப்பசம் (வின்.) பார்க்க; see vayiṟuppašam. 2. பொறாமை (யாழ்.அக.); envy, jealousy.

மறுவ. வயிற்றுமந்தம்

*[வயிறு + பொருமல்]*

வயிற்றுப்போக்கு *vayiṟṟu-p-pōkku,* பெ.(n.) 1. வயிற்றோட்டம், செரியாமல் மலங் கழிகை (யாழ்ப்.); diarrhoea. 2. நச்சுக் கழிச்சல் (யாழ்.அக.); cholera.

*[வயிறு + போக்கு[2]]*

மாதுளம் பிஞ்சு, தென்னங்குரும்பை, மாவிலைக் கொழுந்து இம்மூன்றையும் அரைத்துக் கொடுத்தால், வயிற்றுப்போக்கு அகலும். சுட்ட வாழைப்பழத்தில், சிறிது தேன் கலந்து கொடுத்தாலும் வயிற்றுப்போக்கு நிற்கும்.

வயிற்றுமந்தம் *vayiṟṟu-mandam,* பெ.(n.) பசிவேட்கையின்மை; loss of appetite (சா.அக.).

*[வயிறு + மந்தம்]*

வயிற்றுமாரி *vayiṟṟu-māri,* பெ.(n.) கழிபே ரிரையான் (வின்.); glutton.

மறுவ. மிடாவிழுங்கி

*[வயிறு + மாரி[1]]*

**வயிற்றுவலி** *vayiṟṟu-vali,* பெ.(n.) 1. வயிற்றில் உண்டாம் நோவு வகை; stomach-ache, colic gripe; cramp in the stomach. 2. செரியாமையாலேற்படும் நோவு; dyspepsia, gastritis, pain due to indegestion.

மறுவ. குடல்முறுக்குநோய்

*[வயிறு + வல்→வலி.]*

**வயிற்றுவால்காக்கை** *vayiṟṟu-vāl-kākkai,* பெ.(n.) காக்கை வகையினுள் ஒன்று; bellied treepie-*Dendrocitha leucogastra* (சா.அக.).

*[வயிற்றுவால் + காக்கை]*

நீலமலை, ஆனைமலை போன்ற பகுதிகளில் மட்டுமே காணப்படுகின்ற, இந்த காக்கைக் கூட்டம் ஓணான், எலி, பழங்கள், கொட்டைகள் போன்றவற்றை உணவாகக் கொள்ளும். 50 விரலம் உயரம் வரை வளரும் தன்மை கொண்டது. நெற்றி, தலை, மார்பு, தொண்டை போன்றவை கருப்பு நிறமாகவும், இறக்கை கருமையும் வெண்மையுங் கலந்த வண்ணத்தில் காணப்படும். இதன் வாலானது 30 விரலம் நீளம் வரை வளர்ந்திருக்கும். 3 முதல் 4 முட்டைகளிட்டு தன் இனப்பெருக்கத்தை மேற்கொள்ளும் தன்மைத்து.

**வயிற்றுவிம்மல்** *vayiṟṟu-vimmal,* பெ.(n.) அன்னாசயத்திலும், குடலிலும் காற்று சேருவதினால் உண்டாகும் நோய்; tympanites (சா.அக.).

*[வயிறு + விம்மல்]*

**வயிற்றுவிரணம்** *vayiṟṟu-viraṇam,* பெ.(n.) வயிற்றிலுண்டாகும் புண்; peptic or duodenal ulcer.

*[வயிறு + விரணம்.]*

***Skt.*** *vraṇa.*

**வயிற்றுளைச்சல்** *vayiṟṟuḷaiccal,* பெ.(n.) வயிற்றுப்போக்கு (M.L.) பார்க்க; see *vayiṟṟu-p-pōkku.*

*[வயிறு + உளை → உளைச்சல்]*

வெற்றிலையுடன், உப்பையும் சேர்த்துக் கொடுக்க வயிற்றுளைச்சல் விட்டுப்போகும்.

**வயிற்றுளைவு**[1] *vayiṟṟuḷaivu,* பெ.(n.) அடிவயிற்றில் குடைதல் போன்ற நோய்; boring pain in abdomen (சா.அக.).

*[வயிறு + உளை→உளைவு]*

**வயிற்றுளைவு**[2] *vayiṟṟuḷaivu,* பெ.(n.) 1. வயிற்றுப்போக்கு (யாழ்.அக.) பார்க்க; see *vayiṟṟu-p-pōkku.* 2. வயிற்றுவலி, 1 (வின்.) பார்க்க; see *vayiṟṟu-vali.*

*[வயிறு + உளை → உளைவு]*

**வயிற்றெடுப்பு** *vayiṟṟeḍuppu,* பெ.(n.) 1. ஆட்டு நோய் வகை (M.Cm.D.1, 249); a disease of sheep. 2. வயிற்றுப்போக்கு பார்க்க; see *vayiṟṟu-p-pōkku.*

*[வயிறு + எடுப்பு]*

**வயிற்றெரி** *vayiṟṟeri,* பெ.(n.) வயிற்றுத் தீ; digestive heat. *"பூதம் வயிற்றெரி மூண்டவே" (தக்கயாகப். 568).*

மறுவ. கடும்பசி, அழிபசி, யானைப்பசி.

*[வயிறு + எரி]*

**வயிற்றெரிச்சல்** *vayiṟṟericcal,* பெ.(n.) 1. வயிற்றிற்காணும் எரிவு; burning sensation in the stomach. 2. பொறாமை (யாழ்.அக.); envy, jealousy. 3. மன வருத்தம் (வின்.); sorrow, grief, unhappiness. 4. இரக்கம் (வின்.); compassion, pity.

*[வயிறு + எரிச்சல்]*

வயிற்றெரிச்சல்கொள்ளல் *vayiṟṟericcal-kol̤l̤al,* பெ.(n.) 1. இழப்பு, ஏமாற்றம் போன்றவற்றால் மனக்கொதிப் படைதல்; frustration. 2. பொறாமைப்படல்; heart burning, jealousy. *பிறர் ஆக்கம் கண்டு, வயிற்றெரிச்சல் கொள்ளல் உடல் நலத்திற்கு கேடு விளைவிக்கும்.*

*[வயிறு + எரிச்சல் + கொள்ளல்.]*

வயிற்றெரிச்சற்படு–தல் *vayiṟṟericcaṟ-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. பொறாமைப் படுதல்; to envy, to feel envy. *எதிர் வீட்டுக்காரர் மாடமாளிகை கட்டியதற்காக நீ ஏன் வயிற்றெரிச்சற் படுகிறாய்? அவனுக்கு நல்ல வேலை கிடைத்தற்காக நீ ஏன் வயிற்றெரிச்சல் படுகிறாய்? (உ.வ.).* 2. மன வருத்தமடைதல்; to feel vexation.

*[வயிறு + எரிச்சல் + படு–.]*

வயிற்றெரிவு *vayiṟṟerivu,* பெ.(n.) வயிற்றெரிச்சல் (வின்.) பார்க்க; see *vayiṟṟericcal.*

*[வயிறு + எரி→எரிவு]*

வயிற்றைக்கட்டு[1]–தல் *vayiṟṟai-k-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அளவிட்டிதாய் உண்ணுதல்; to eat moderately. 2. வயிற்றுப் போக்கை நிறுத்துதல்; to bind the bowels, to check diarrhoea. *'இந்த மருந்து வயிற்றைக் கட்டும்' (உ.வ.).*

*[வயிறு + கட்டு–.]*

வயிற்றைக்கட்டு[2]–தல் *vayiṟṟai-k-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) அளவறிந்து செலவு செய்தல்; to be thrifty. *அருமந்த ஒருமகனை பெற்று ஆளாக்கினாள் 'வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி' வளர்த்தெடுத்த பெருமை குறித்தவாம். இவைபோன்ற நூற்றுக் கணக்கான சொற்களும் பாண்டி நாட்டுலக வழக்கிற்குச் சிறப்பாம்.* 2. கஞ்சத்தனமா யிருத்தல்; to be niggard. *வயிற்றைக்கட்டி வாயைக்கட்டி வாழ்ந்தாலும் மிஞ்சும் பணமே மிஞ்சும் (இ.வ.).*

*[வயிறு + கட்டு–.]*

வாயைக்கட்டி, வயிற்றைக்கட்டிக் காசு பணம் சேர்த்தல் என்னும் வழக்கு சிக்கனமாயிருத்தல் என்னும் பொருண்மை பொதிந்த மரபினை மொழியாகும். இவ்வழக்கு தென்மாவட்டங்களில் வாழும் கல்லாதார் நாவில், மிகுதியாக வழக்கூன்றியுள்ளது, குறிக்கத்தக்கது. 'வயிற்றைக் கட்டுதல்' என்னும் வழக்குத் தொடர், வாழ்வியலில், சிக்கனமாயிருத்தலையும், வயிற்றைக்கட்டி வாழ்தல் நோய் நொடியின்றி வாழ்தற்குரிய வழிமுறையையும் குறித்ததெனலாம்.

வயிற்றைக்கலக்கு–தல் *vayiṟṟai-k-kalakku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நீருஞ் சேறுமாக கழிமாசு மலம் வெளிப்பட வேண்டி வயிற்றில் குழப்பம் உண்டாதல் (கொ.வ); to feel uncomfortable due to rumbling of the bowels. 2. பேரச்சங்கொள்ளுதல்; to be terrified alarmed, horrified, shocked.

*[வயிறு + கலக்கு–.]*

வயிற்றைக்கழுவு–தல் *vayiṟṟai-k-kal̤uvu-,* 5 செ.கு.வி.(v.i.) வயிறுகழுவு–, (இ.வ.) பார்க்க; see *vayiṟu-kal̤uvu-,* *நாலைந்து வீடுகளில் ஏவிய வேலை செய்து கிடைக்கும் அளவிட்டிதாம் பணத்தில் வயிற்றைக் கழுவுகிறாள் (உ.வ.).*

*[வயிறு + கழுவு–]*

**வயிற்றைக்குறை–த்தல்** *vayirrai-k-kurai-,* 4 செ.குன்றாவி.(v.t.) வயிற்றுக்கு ஈயப்படும் உணவளவைக் குறைத்துக் கொள்ளுதல்; to reduce quantity of diet.

*[வயிற்றை + குறை–.]*

**வயிற்றைத்திற–த்தல்** *vayirrai-t-tira-,* 3 செ.கு.வி.(v.i.) கருக்கொள்ளுமாறு அருளுதல்; to bless a woman to give birth a child, to bless for motherhood. *"தெய்வம் இன்னும் அவள் வயிற்றைத் திறக்கவில்லை" (கொ.வ.).*

*[வயிறு + திற–,]*

**வயிற்றைப்பீறல்** *vayirrai-p-pīral,* பெ.(n.) வயிற்றைக்கிழித்து குழந்தையை வெளியே எடுத்தல்; incision of the uterus through the abdominal wall and the extrication of the foetus there from caesarean section (சா.அக.).

*[வயிறு + பீறல்.]*

**வயிற்றைப்பெருக்கு–தல்** *vayirrai-p-perukku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. உண்ணும் அளவைக் கூட்டுதல்; to increase one's appetite. *"ஸ்வயம் பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே" (ஸ்ரீவசன. 84).* 2. நிறைவாக உண்ணுதல் (இ.வ.); to be gluttonous, to take full meal.

*[வயிறு + பெருக்கு–.]*

**வயிற்றையொடுக்கு–தல்** *vayirrai-y-odukku,* 5 செ.கு.வி.(v.i.) உண்ணும் உணவின் அளவைக் குறைத்தல் (வின்.); to restrain one's appetite, to reduce the quantity of food.

*[வயிறு + ஒடுக்கு–,]*

**வயிற்றையொறு–த்தல்** *vayirrai-y-oru-,* 4 செ.கு.வி.(v.i.) வயிற்றையொடுக்கு–, (வின்.) பார்க்க; see *vayirrai-y-odukku-.*

*[வயிறு + ஒறு–,]*

**வயிற்றைவலி–த்தல்** *vayirrai-vali-,* 4செ. குன்றாவி.(v.t.) குடலில் வலி ஏற்படுகை; colic (சா.அக.).

**வயிற்றைவளர்–த்தல்** *vayirrai-valar-,* 4 செ.கு.வி.(v.i.) வயிறுகழுவு–, (இ.வ.) பார்க்க; see *vayiru-kaluvu-.*

*[வயிறு + வளர்–.]*

**வயிற்றோட்டம்** *vayirrōttam,* பெ.(n.) வயிற்றுப்போக்கு, 1 (M.L.) பார்க்க; see *vayirru-p-pōkku.*

*[வயிறு + ஓட்டம்' ]*

**வயிறடி–த்தல்** *vayiradi-,* 4 செ.கு.வி. (v.i.) துயரக்குறியாக வயிற்றிலடித்துக் கொள்ளுதல்; to beat one's stomach with one's hands, as in grief. *"வைத்தது காணாள் வயிறடித்து" (திவ். இயற். சிறிய. ம. 34).*

*[வயிறு + அடு→அடி–.]*

**வயிறடைத்தல்** *vayiradaittal,* தொ.பெ.(vbl.n.) 1. உண்ணும் விருப்பம் இல்லாதிருக்கை; loathing of food not fond of food. 2. மலடாயிருக்கை; being barren, sterile. 3. பூப்பு நின்றுபோகை; being past menopause. 4. கருத்தரிக்குந் தன்மையற்றுப் போகை; ceasing to bear children, infertility.

*[வயிறு + அடைத்தல்.]*

**வயிறதுக்கு–தல்** *vayiradukku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வயிறுபிடி–த்தல் பார்க்க; see *vayiru-pidi-,* 2. வயிறலை–த்தல்

பார்க்க; see *vayiṟalai-*, *"அரிவைய ரவ்வயிறதுக்கினார்" (சீவக. 1104).*

*[வயிறு + அதுங்கு(த.வி.)→அதுக்கு-,]*

வயிறலை-த்தல் *vayiṟalai-*, 4 செ.கு.வி. (v.i.) வயிறடி-த்தல் பார்க்க; see *vayiṟaḍi-*, *"வந்தானை யிடைநோக்கி வயிறலைத்து" (கம்பரா. சூர்ப்ப. 115).*

*[வயிறு + அல்→அலை. அலைதல் (த.வி.) →அலைத்தல் (பி.வி.)]*

வயிறழி-தல் *vayiṟaḻi-*, 2 செ.கு.வி. (v.i.) 1. கருக்குலைதல்; to abort. 2. வெளிவிடுதல்; to be delivered. *"மஞ்சு தம்வயிறழிந்து" (சீவக.570).*

*[வயிறு + ஒழி→அழி-,]*

வயிறழிதல் *vayiṟiḻidal*, பெ.(n.) வயிறுகழிதல் (இ.வ.) பார்க்க; see *vayiṟukaḻidal.*

*[வயிறு + இழி¹-தல்]*

வயிறழுதல் *vayiṟaḻudal*, தொ.பெ.(vbl.n.) வயிற்றில் இரைச்சலுண்டாகை (வின்.); flatulency , rumbling of the bowels.

*[வயிறு + அழிதல்→அழுதல்.]*

வயிறார *vayiṟāra*, கு.வி.எ.(adv.) வயிறுநிரம்ப; to one's bellyful. *உணவு சுவையாய் இருந்ததால், வயிறார உண்டான் (இக்.வ.).*

*[வயிறு +ஆர்→ஆர. ஆர = மிக, நிறைய.]*

வயிறிரைதல் *vayiṟiraidal*, பெ.(n.) வயிறழுதல் பார்க்க; see *vayiṟaḻudal.*

*[வயிற + இரை¹தல்]*

வயிறு *vayiṟu*, பெ.(n.) 1. உதரம்; belly, stomach, paunch. *"உணவு..... சிறிது வயிற்றுக்கு மீயப் படும்" (குறள், 412). "அவ்வயிறு அலைத்த என்செய்வினைக் குறுமகள்" (நற்.179:3). "தண்ணுமைக் கண்ணின் அலைஇயர்தன் வயிறே" (அகநா. 1.06.93). "ஈன்ற வயிறோ விதுவே" (புறநா. 86:5).* 2. கருப்பப்பை; womb. *"பத்து மாதம் வயிற்றிற் சுமந்து பெற்ற பிள்ளை" (வின்.).* 3. நடுவிடம்; centre, heart, as of a tree. *"கடல்வயிறு கலக்கினையே" (சிலப். 17, முன்னிலைப் பரவல். 1).* 4. உள்ளிடம்; interior, inner space. *"வயிற்றிற்கொண்டு நின்றொரு மூவுலகும்" (திவ். திருவாய். 8, 7, 9).* 5. மனம் (திவ். திருவாய். 8, 7, 9); mind.

க. பசிறு.

**Ma.** vayaṟu; **Ko.** vi-r; **Kui.** vahi; **Ka.** basaṟ(u); **Tu.** bañji.

*[வயின்→வயிறு]*

வயிறுகட்டல்[1] *vayiṟu-kaṭṭal*, பெ.(n.) 1. மகப்பேறு நிகழ்ந்த பெண்களுக்கு அடிவயிற்றில் கட்டும் கட்டு; obsteric binder, bandage applied to the abdomen after delivery. 2. நோயாளி, கருவுற்றவள் உணவுக் கட்டுப்பாட்டிலிருத்தல்; patient and pregnant woman to be on diet (சா.அக.).

*[வயிறு + கள்→கட்டு + அல்]*

வயிறுகட்டல்[2] *vayiṟu-kaṭṭal*, பெ.(n.) தேவையற்ற உணவினை தவிர்த்தல்; avoidance of unnesessary food.

*[வயிறு + கட்டல்]*

வயிறுகடி *vayiṟu-kaḍi*, பெ.(n.) 1. பசி நோவு (இ.வ.); pinch of hunger. 2. வயிற்று வலி; stomach-ache. 3. பொறாமை; jealousy, envy.

*[வயிறு + கடி[6] ]*

**வயிறுகடித்தல்** *vayiṟu-kaḍittal,* தொ.பெ.(vbl. n.) வயிறுகடி பார்க்க; see *vayiṟu-kaḍi-.*

*[வயிறு + கடித்தல். கடித்தல் = வலித்தல்.]*

**வயிறுகடு-த்தல்** *vayiṟu-kaḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) வயிறு வலித்தல்; stomach-ache.

*[வயிறு + கடு-,]*

**வயிறுகடுப்பு** *vayiṟu-kaḍuppu,* பெ.(n.) வயிற்றின்அழற்சி; inflammation of the stomach-gastritis.

*[வயிறு + கடுப்பு]*

**வயிறுகடுப்பெடு-த்தல்** *vayiṟu-kaḍu-p-peḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) வயிறு கடு-த்தல் பார்க்க; see *vayiṟu-kaḍu-,*

*[வயிறு + கடுப்பு + எடு-.]*

**வயிறுகண்டிப்பு** *vayiṟu-kaṇḍippu,* பெ.(n.) அடிவயிற்று வீக்கம்; swelling abdomen (சா.அக.).

*[வயிறு + கண்டு→கண்டி→கண்டிப்பு]*

**வயிறுகலக்கல்** *vayiṟu-kalakkal,* பெ.(n.) வயிறுகடுப்பு பார்க்க; see *vayiṟu-kaḍuppu.*

*[வயிறு + கலக்கல்]*

**வயிறுகழிதல்** *vayiṟu-kaḻidal,* தொ.பெ. (vbl.n.) இளகிய நிலையில் கழிமாசு (மலம்) போன்றவை இழிதல் (இ.வ.); having loose motions.

*[வயிறு + கழிதல்]*

**வயிறுகழுவு-தல்** *vayiṟu-kaḻuvu-,* 5 செ. கு.வி.(v.i.) அரும்பாடுபட்டு, உணவு தேடிப் பிழைத்தல்; to manage with great difficulty to get food and live, to eke one's livelihood. *வயிறுகழுவ வழியில்லாதவள் வானூர்தி ஏற நினைக்கலாமா? (பழ.).*

*[வயிறு + கழுவு-]*

**வயிறுகனத்தல்** *vayiṟu-kaṉattal,* பெ.(n.) வயிறுகடுத்தல் பார்க்க; see *vayiṟu-kaḍuttal.*

*[வயிறு + கனத்தல்]*

**வயிறுகாந்தல்**[1] *vayiṟu-kāndal,* பெ.(n.) வயிற்றுப்புகைச்சல் (வின்.) பார்க்க; see *vayiṟṟu-p-pugaiccal.*

*[வயிறு + காந்தல்]*

**வயிறுகாந்தல்**[2] *vayiṟu-kāndal,* பெ.(n.) வயிறு காந்துகை; to be pinched with hunger (சா.அக.).

*[வயிறு + காந்தல்]*

**வயிறுகாந்துதல்** *vayiṟu-kāndudal,* பெ.(n.) வயிறுகாய்தல் (வின்.) பார்க்க; see *vayiṟu-kāydal.*

*[வயிறு + காய்→காய்ந்து→காந்து→காந்துதல் = எரிவெடுத்தல் (வே.க.185).]*

**வயிறுகாய்தல்** *vayiṟu-kāydal,* பெ.(n.) பட்டினியாயிருக்கை, நீருஞ் சோறுமாகிய இருமருந்துளொன்றேனு முண்ணாமை; abstinency, starvation, being pinched with hunger, fasting. *"வயிறுகாய் பெரும்பசி" (மணிமே. 14, 6).*

*[வயிறு + காய்[1] +தல் = தொ. பெ. ஈறு]*

வயிறுகிடமுடெனல் *vayiṟu-kiḍa-muḍeṉal,* தொ.பெ.(vbl.n.) வயிற்றில் உண்டாகும் பேரிரைச்சல்; warble.

*[வயிறு + கிடமுடெனல்.]*

கிடமுடெனல் = ஒலிக்குறிப்புச் சொல்

வயிறுகிண்டுதல் *vayiṟu-kiṇḍudal-,* பெ.(n.) வயிறுகாய்தல் (இ.வ.) பார்க்க; see *vayiṟu-kāydal.*

*[வயிறு + கிள்→கிண்டு→கிண்டுதல்.]*

வயிறுகிள்ளுதல் *vayiṟu-kiḷḷudal,* பெ.(n.) வயிறுகாய்தல் பார்க்க; see *vayiṟu-kāydal.*

*[வயிறு + கிள்ளுதல்]*

வயிறுகிள்ளும்பசி *vayiṟu-kiḷḷum-paśi,* பெ.(n.) அழி பசி; gnawing hunger.

மறுவ. கொடும்பசி.

*[வயிறு + கிள்ளும் + பசி]*

வறியவரது கொடிய பசியே, வயிறு கிள்ளும் பசியெனவாம். இக்கொடிய பசியினைப் போக்குபவனே, அனைத்து நன்மைகளும், பெற்றவனாவன்.

வயிறுகுத்துதல் *vayiṟu-kuttudal,* பெ.(n.) வயிற்றில் வலியுண்டாகை (தொல். சொல்.15, உரை); having stabbing pain in the stomach.

*[வயிறு + குத்துதல்]*

வயிறுகுமுறல் *vayiṟu-kumuṟal,* பெ.(n.) வயிற்றுளெழும் அதிரொலி; quavering or trembling sound.

*[வயிறு + குமுறல்]*

வயிறுகுளிர்-தல் *vayiṟu-kuḷir-,* 2 செ.கு.வி. (v.i.) பொந்திகையடைதல்; to be refreshed, as by food, to be satisfied. *'அவன் வயிறு குளிர்ந்தான்' (வின்.).*

*[வயிறு + குளிர்-,]*

வயிறுகூப்பிடுதல் *vayiṟu-kūppiḍudal,* பெ.(n.) வயிறழுதல் (இ.வ.) பார்க்க; see *vayiṟaḻudal.*

*[வயிறு + கூப்பிடுதல்.]*

வயிறுகெல்லல் *vayiṟu-kellal,* பெ.(n.) வயிற்றளைச்சல்; irritation of the stomach (சா.அக.).

*[வயிறு + கெல்லல்]*

வயிறுகொட்டல் *vayiṟu-koṭṭal,* பெ.(n.) குருதிகொட்ட கழிமாசு (மலம்) கழிக்கை (M.L.); dysentery.

*[வயிறு + கொட்டு + அல்.]*

வயிறுகோளாறு *vayiṟu-kōḷāṟu,* பெ.(n.) அற்றதறிந் துண்ணாமையா னேற்படும் இடர், உடல் ஊறுபாடு; complication in the stomach due to indigestion and other cause.

*[வயிறு + கோளாறு]*

வயிறுசுருட்டிபிடி-த்தல் *vayiṟu-śuruṭṭi-piḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) வயிறுகெல்லல் பார்க்க; see *vayiṟu-kellal.*

*[வயிறு + சுருட்டி + பிடி-,]*

வயிறுதம-த்தல் *vayiṟu-tama-,* 4 செ. குன்றாவி. (v.t.) வயிறுதமத்தது பார்க்க; see *vayiṟu-tamattadu.*

*[வயிறு + தம-,]*

**வயிறுதமத்தது** *vayiṟu-tamattadu,* பெ.(n.) பசியாறுகை; appeasement or satiation of hunger.

*[வயிறு + தமத்தது]*

**வயிறுதள்ளல்** *vayiṟu-taḷḷal,* தொ.பெ.(vbl.n.) 1. தொந்தி விழுகை; being pot-bellied or large belly. 2. கருப்பமாகை; conceinability, becoming pregnant (சா.அக.).

*[வயிறு + தள்ளல்]*

**வயிறுதள்ளு-தல்** *vayiṟu-taḷḷu-,* 5 செ. குன்றாவி. (v.t.) வயிறு பருத்தல்; to be in enlarged or bulging stomach.

*[வயிறு + துள்→தள்→தள்ளு-.]*

**வயிறுதளர்ச்சி** *vayiṟu-taḷarcci,* பெ.(n.) வயிற்றிளக்கம்; laxity of stomach.

*[வயிறு + தள்→தளர்→ தளர்ச்சி]*

வயிறு தளர்ந்து சுருங்குகை.

**வயிறுதாரி** *vayiṟu-tāri,* பெ.(n.) 1. பரு வயிறோன்; person with a big belly, pot-bellied person. *"கணபதியேல் வயிறுதாரி" (தேவா.1053, 2).* 2. கழிபேரிரையான் (வின்.); glutton. 3. தன்னலம் ஒன்றையே கருதுபவன்; extremely selfish person.

*[வயிறு + தாரி[4]]*

**வயிறுதிறத்தல்** *vayiṟu-tiṟattal,* தொ.பெ. (vbl.n.) 1. மகப்பெறுகை (இ.வ.); giving birth to children. 2. கழிபேரிரையானாகை; being gluttonous.

*[வயிறு + திறத்தல்.]*

**வயிறுநோ-தல்** *vayiṟu-nō-,* 17 செ.கு.வி. (v.i.) மகப்பேற்று வலியுண்டாதல்; to have labour-pains.

*[வயிறு + நோ-,]*

**வயிறுதூர்-தல்** *vayiṟu-tūr-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. பசிவேட்கையில்லாதிருத்தல்; to have loss of appetite. 2. மலடியாகுகை; to become barren or infertile (சா.அக.).

*[வயிறு + தூர்-]*

**வயிறுநிமிரஉண்ணல்** *vayiṟu-nimira-uṇṇal,* பெ.(n.) வயிறு நிரம்ப உண்ணல்; full consumption of food (சா.அக.).

மறுவ. வயிறார உண்ணல்.

*[வயிறு + நிமிர + உண்ணல்]*

**வயிறுநீரோடல்** *vayiṟu-nīrōḍal,* பெ. (n.) நீராய் கழிமாசு (மலம்) கழிதல்; dilute motions.

*[வயிறு + நீரோடல்]*

**வயிறுப்பசம்** *vayiṟu-p-paśam,* பெ.(n.) குடலில் தங்கும் வளிமிகுதியால் ஏற்படும் வயிற்றூத்தம்; distension of the abdomen from a morbid collection of air in the instentines and stomach.

**வயிறுப்பல்** *vayiṟuppal,* பெ.(n.) வயிறு பருத்தல்; distension of the abdomen (சா.அக.).

*[வயிறு + உப்பல்]*

**வயிறுப்பு-தல்** *vayiṟuppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வயிறுப்பல் பார்க்க; see *vayiṟuppal.*

**வயிறுப்புசம்** *vayiṟuppuśam,* பெ.(n.) உண்டது செரியாமல் வயிறு பெருக்கை (இ.வ.); tympanites.

*[வயிறு + உப்பசம்]*

வயிறுபழு–த்தல் *vayiṟu-paḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) மகப்பெறுதலின் பிறகு பெண்களுக் குண்டாகும் ஒருவகை நோய்; a post delivery disease of the stomach attacking woman (சா.அக.).

*[வயிறு + பழு–,]*

வயிறுபிடி–த்தல் *vayiru-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) துயரக்குறியாக வயிற்றைப் பிசைதல்; to press one's stomach with one's hands, as in grief or distress. *"ஏத்தாத நாளைக்கும் வயிறுபிடிக்க வேண்டும்படியான விஷயம் (ஈடு. 10, 1, 2).*

*[வயிறு + பிடி–,]*

வயிறுபுடை–த்தல் *vayiṟu-puḍai-,* 4 செ. குன்றாவி. (v.t.) வயிறு பெரிதாகுகை; distension of the abdomen (சா.அக.).

*[வயிறு + புடை–]*

வயிறுபுரட்டல் *vayiṟu-puraṭṭal,* தொ.பெ. (vbl.n.) குமட்டல்; nausea.

*[வயிறு + புரட்டல்]*

வயிறுபுழு–த்தல் *vayiṟu-puḻu-,* 4 செ.கு.வி. (v.i.) கருக்கொள்ளுதல்; to conceive. *அவள் அடிக்கடி வயிறுபுழுத்த வண்ணம் இருக்கிறாள்.*

*[வயிறு + புழு–.]*

வயிறுபேதித்தல் *vayiṟu-pēdittal,* தொ.பெ. (vbl.n.) வயிறுகழிதல் (யாழ்.அக.) பார்க்க; see *vayiṟu-kaḻidal.*

*[வயிறு + பேதித்தல்]*

வயிறுபொருமுதல் *vayiṟu-poṟumudal,* தொ.பெ.(vbl.n.) 1. வயிறுப்பசம் பார்க்க; see *vayiṟuppaśam.* 2. வயிற்றெரிச்சல், 2 பார்க்க; see *vayiṟṟericcal.*

*[வயிறு + பொருமுதல்]*

வயிறுபோ–தல் *vayiṟu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) வயிறுபோக்கு பார்க்க; see *vayiṟu-pōkku.*

*[வயிறு + போ–.]*

வயிறுபோக்கு *vayiṟu-pōkku,* பெ.(n.) வயிற்றுப் போக்கு பார்க்க; see *vayiṟṟu-p-pōkku.*

*[வயிறு + போக்கு]*

வயிறுபோதல் *vayiṟu-pōdal,* தொ.பெ.(vbl.n.) வயிறுநீரோடல் பார்க்க; see *vayiṟu-nīrōḍal.*

*[வயிறு + போதல்]*

வயிறுமுட்ட *vayiṟu-muṭṭa,* கு.வி.எ.(adv.) வயிறார பார்க்க; see vayiṟāra.

*[வயிறு + முட்ட.]*

வயிறுவளர்–த்தல் *vayiṟu-vaḷar-,* 4 செ.கு.வி. (v.i.) வயிறுகழுவு–, (யாழ்.அக.) பார்க்க; see *vayiṟu-kaḻuvu-,*

*[வயிறு + வளர்–.]*

வயிறுவாய்¹–த்தல் *vayiṟu-vāy-,* 4 செ. குன்றாவி.(v.t.) மகப்பெறுதல்; to give birth a child. *"திதி யென்பாள்..... அசுரர்தமை வயிறு வாய்த்தாள்" (கம்பரா.சடாயுகாண். 25).*

*[வயிறு + வாய்–,]*

வயிறுவாய்²–த்தல் *vayiṟu-vāy-,* 4 செ.கு.வி. (v.i.) கருப்பத்திற்றங்குதல்; to remain in the womb as foetus. *"கௌசலை தன் மணிவயிறு வாய்த்தவனே" (திவ். பெருமாள். 8, 1).*

*[வயிறு + வாய்–,]*

வயிறுவாழ்–தல் *vayiṟu-vāḻ-*, 2 செ.கு.வி. (v.i.) தேவையான உணவு பெற்றிருத்தல்; to have enough or sufficient food. 2. உயிர்வாழ்தல்; to be alive. *'வயிறு வாழாமல் செய்கிறானன்றே' (திவ். பெரியாழ். 2, 9, 3, வ்யா. பக். 457).*

*[வயிறு + வாழ்–,]*

வயிறுவானமா–தல் *vayiṟu-vāṉam-ā-*, 6 செ.குன்றாவி.(v.t.) வயிறுப்புதல்; bloating of the abdomen.

*[வயிறு + வானம் + ஆ –,]*

வயிறுவிடுதல் *vayiṟu-viḍudal*, பெ.(n.) வயிறு கழிதல் (யாழ்.அக.) பார்க்க; see *vayiṟu-kaḻidal*.

*[வயிறு + விடுதல்]*

வயிறுவிம்மல்[1] *vayiṟu-vimmal*, பெ.(n.) வயிறூதல் பார்க்க; see *vayiṟūdal*. *"கோதுற்ற வயிறுவிம்மி குடல்தான் புரட்டுந்தானே".*

*[வயிறு + விம்மல்]*

வயிறுவிம்மல்[2] *vayiṟu-vimmal*, பெ.(n.) வயிற்றுப்பசம்; distension of the abdomen (சா.அக.).

*[வயிறு + விம்மல்]*

வயிறுவீக்கம் *vayiṟu-vīkkam*, பெ.(n.) வயிறு வீங்குகை; swelling of the abdomen.

*[வயிறு + வீக்கம்]*

வயிறுவெடித்தல் *vayiṟu-veḍittal*, பெ.(n.) பேருண்டி, பெருஞ்சிரிப்பு முதலியவற்றால் வயிறு வெடிப்பது போலாகை (கொ.வ.); bursting, as with excessive food, long laughter.

*[வயிறு + வெடித்தல்.]*

வயிறுவே–தல் *vayiṟu-vē-*, 17 செ.கு.வி. (v.i.) வயிறெரி–, பார்க்க; see *vayiṟeri-*.

*[வயிறு + வே–, → வேகு–தல்.]*

வயிறுவை–த்தல் *vayiṟu-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) வயிறு பருத்துத் தொந்தி வைத்தல்; to become pot belly. *அளவறியா துணவு கொள் பழக்கத்தால் அவனுக்கு வயிறு வைத்துவிட்டது (உ.வ.).*

*[வயிறு + வை–த்தல்.]*

அளவிற்கதிகமாக, நேரங்கெட்ட நேரத்தில் உணவுண்பதாலும், அலுவலகத்தில், அமர்ந்த வண்ணமே, பணிசெய்வதாலும், போதிய உடலுழைப்பு, உடற்பயிற்சி இன்மையாலும், நகரத்தில் வாழ்நர் வயிறு வைத்த நிலையில் துன்புறுகின்றனர்.

வயிறு வைத்தலைத் தவிர்க்க வேண்டுமெனின் கொழுப்புணவினை, உடலுழைப்பிற்கு ஏற்றவண்ணம் உண்ண வேண்டும். நார்ச்சத்து, புரதச்சத்து, மாவுப்பொருளினை உரிய நேரத்திலுண்டு, மருத்துவரின் அறிவுரையின்படி, கொழுப்பு கரையுமளவு உடற்பயிற்சியினை மேற்கொள்ள வேண்டும்.

உடற்பயிற்சி செய்யவியலாதவர்களுக்கு, நடைப்பயிற்சியே வயிறு வைத்தலைத் தவிர்த்தலுக் குரிய நல்வழியாகும்.

வயிறுளை–த்தல் *vayiṟuḷai-*, 4 செ.குன்றாவி. (v.t.) வயிற்றைத் துளைத்தல் போன்ற நோய்; a disease with boring pain in the abdomen.

*[வயிறு + உளை–த்தல்.]*

வயிறுளைவு *vayiṟuḷaivu*, பெ.(n.) வயிறுளை–த்தல் பார்க்க; see *vayiṟuḷai-*.

*[வயிறு + உளைவு]*

(உளைவு = குடைச்சனோவு)

வயிறூதல்[1] *vayirūdal,*பெ.(n.) வயிறு விம்மல் பார்க்க; see *vayiru-vimmal*(சா.அக.).

வயிறூதல்[2] *vayirūdal,*பெ.(n.) வயிற்றில் ஊதை தங்குவதால் உண்டாகும் வயிற்றூத்தம்; distension of the abdomen due to collection of air or flatus (சா.அக.).

வயிறூதுகை *vayirūdugai,* பெ.(n.) வயிறு பொருமுதல் (வின்.) பார்க்க; see *vayiru-porumudal.*

*[வயிறு + ஊதுகை]*

வயிறெடுத்தல் *vayireduttal,*பெ.(n.) வயிறு கழிதல் பார்க்க; see *vayiru-kalidal.*

*[வயிறு + எடு-,]*

வயிறெரி-தல் *vayireri-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பொறாமை கொள்ளுதல்; to be envious. *அவள் வளமனையில் வாழ்க்கைப்பட்டதைக் கண்டு வயிறெரிகிறாள்.* 2. மிகுதுயரமுறுதல் (பிரபுலிங். சித்தரா. 48); to be greatly moved by sorrow, to mentally upset.

*[வயிறு + எரி[1]]*

வயிறெரித்தல் *vayirerittal,* பெ.(n.) வயிற்றெரிச்சல் பார்க்க; see *vayir-r-ericcal.* *"மிகவும் வயிற்றெரித்தலுக்கு உடலாயிருக்குமிறே" (ஈடு. 4, 3, 4).*

*[வயிறு + எரி - வயிறெரி → வயிறெரித்தல்]*

வயிறெரிவு *vayirerivu,*பெ.(n.) வயிற்றெரிச்சல் *(வின்.)* பார்க்க; see *vayirrericcal.*

*[வயிறு + எரிவு]*

வயிறெற்று-தல் *vayirerru-,* 5 செ. குன்றாவி.(v.t.) வயிறடி-, பார்க்க; see *vayiradi-, "வயிறெற்றி யெற்றி" (கம்பரா. கைகேசி சூழ். 47).*

*[வயிறு + எற்று]*

வயின்[1] *vayin,*பெ.(n.) 1. இடம் (பிங்.); place. *"யாழ்ப்பாணர் வயின்வயின் வழங்கு பாடல்" (கம்பரா. நாட்டுப். 8).* 2. பக்கம்; side. *"புடைவீ ழந்துகி லிட வயிற்றழீஇ" (நெடுநல். 181).* 3. வீடு (சூடா.); house. 4. வயிறு; belly, stomach. *"வயின் கட்டோற்று மகவு" (இரகு.தேனுவ.46).* 5. பக்குவம்; proper stage, as in boiling rice. *"மகடூஉ வயினறிந் தட்ட" (பெரும்பாண். 304).* 6. முறை; order. *"வயின் வயி னுடன்றுமேல் வந்த வம்ப மள்ளரை" (புறநா. 77).* 7. எல்லை (அரு.நி.); boundary, limitation. 8. பிணை (அரு.நி.); security.

வயின்[2] *vayin,* இடை.(part.) 1. ஏழாம் வேற்றுமையின் சொல்லுருபு; sign of the locative. *"தம்வயிற் குற்றம்" (குறள், 846).* 2. ஓர் அசைச்சொல் (பெருங். அரும்.); an expletive.

வயினதேயன் *vayina-dēyan,* பெ.(n.) கருடன்; garudan, eagle. *"வெற்றிசேர் வயினதேயன்" (உத்தரரா. இலங்கையழி. 14).*

*[வயினதேயம்→வயினதேயன்]*

வயினம் *vayinam,* பெ.(n.) பறவை (யாழ். அக.); bird.

*[வயனம்[4] → வயினம்]*

வயினன் *vayinan,*பெ.(n.) கலுழன்; *garudan,* eagle. *"வெஞ்சிறை வயினன்" (அரிசமய. பரகா. 123).*

*[வயின் → வயினன்]*

வயினனாசயம் *vayinanāśayam,* பெ.(n.) வயிறு; stomach. *"வயினனாசயத்தின் வைகி..... பக்குவாசயமும் பற்றும்" (சிவதரு. சனன. 6).*

*[வயின் + ஆமாசயம் → ஆனாசயம்]*

வயினாருடதயம் *vayinārudadayam,* பெ.(n.) ஓர் வகை மருந்து வேர்; a medicinal root- arbian costus-*Costus arabicus* (சா.அக.).

வயேகடம் *vayēgadam,* பெ.(n.) மரமஞ்சள் (மலை.); tree turmeric.

வயோதிகம் *vayōdigam,* பெ.(n.) முதுமை; old age.

*[வயோதிகன்→வயோதிகம் = கிழம்.]*

**Skt.** வயோதிக

வயோதிகன் *vayōdigan,* பெ.(n.) கிழவன்; old man.

*[வயோதிகம் → வயோதிகன்]*

வயோதிபம் *vayōdibam,* பெ.(n.) வயோதிகம் (யாழ்.அக.) பார்க்க; see *vayōdigam.*

வயோவகவம் *vayōvagavam,* பெ.(n.) ஈயம் (சங்.அக.); lead.

வர்க்கபுட்பம் *varkka-putpam,* பெ.(n.) திருநாமப்பாலை; a plant-*Similax macrophlla* (சா.அக.).

*[வர்க்கம் + புட்பம்]*

வர்க்கம் *varkkam,* பெ.(n.) எருக்கம்பால் (சங்.அக.); sap or milky exudation of the indian madder shrub.

வர்க்கம்பால் *varkkam-pāl,* பெ.(n.) எருக்கம் பால்; milky exudation of Indian madder shrub calotropis gigantia.

வர்ணகெந்தி *varna-kendi,* பெ.(n.) கெந்தகம்; sulphur (சா.அக.).

வர்ணசுக்கில் *varna-sukkil,* பெ.(n.) ஓர் வகைக் கண்ணோய்; a kind of eye disease (சா.அக.).

வர்ணசுரம் *varna-śuram,* பெ.(n.) சுரவகை; a kind of fever (சா.அக.).

வர்ணி *varni,* பெ.(n.) 1. சாதிலிங்கம்; cinnabar. 2. மாஞ்ச ரோகணி; a plant-pimpernal (சா.அக.).

வர்த்தங்கி *varttangi,* பெ.(n.) 1. சப்பங்கி மரம்; sappan-wood tree. 2. சந்தனமர வகை; malay sandal tree.

வர்த்தமானபிப்பிலி *varttamāna-pippili,* பெ.(n.) திப்பிலிகளை 3, 5, 7 ,10 என்று இவ்விதமாக நாளுக்கு நாள் உயர்த்திக் கொண்டு சாப்பிடும் திப்பிலி சூரணம், இது காசம், கோழை நீக்கும் தன்மைத்து; taking in the powder of long peppe increased doses as mentioned above. It is said to cure asthma consumption etc (சா.அக.).

வர்த்தமானம் *varttamānam,* பெ.(n.) ஆமணக்கு (தைலவ.தைல.); castor-plant.

*[வர்தன → வர்த்தமானம்]*

வர்த்திப்பிரயோகம் *vartti-p-pirayōgam,* பெ.(n.) மருக்காரை முதலியவற்றால் செய்து, எருவாயினுள் செலுத்துமோர் வகை நீண்ட

குளிகைகள்; long medicated , .lls made of the lant randia dumetorum for insertior into the rectum (சா.அக.).

*[வர்த்தி + பிரயோகம்]*

வர[1] *vara,* இடை.(part.) அசைச்சொல்; an expletive. *"தழங்கு மருவி என்னும் பாட்டுத்தொட்டு இதன்காறும் வர இப்பாட் டொன்பதும்" (திருக்கோ.135, உரை). "அஞ்சிறை மடநாரைக்குப் பின்பு இவ்வளவும் வர" (ஈடு. 2, 1, ப்ர.).*

*[வா → வர]*

வர[2] *vara,* இடை.(prep.) வரை; till, until. *"பரத்துவமே தொடங்கி அவதாரங்களிலே வர" (ஈடு. 3, 6, ப்ர.).*

*[வா → வர]*

வரக்கழலை *vara-k-kaḻalai,* பெ.(n.) தோற் பகுதியில் தோன்றும் கட்டி நோய்; a skin disease dermatitis (சா.அக.).

வரக்காட்டு–தல் *vara-k-kāṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) அனுப்புதல் (யாழ்.அக.); to send, as by post, courier or messanger.

*[வர + காட்டு–.]*

வரக்கூலி *vara-k-kūli,* பெ.(n.) நெல் முதலியவற்றை எடுத்து வருவதற்குள்ள வண்டிக் கட்டணம் (S.I.I.VIII, 5); vehicle hire charge or rent for carrying paddy, etc.

*[வரல் + கூலி.]*

வரகதி *vara-gadi,* பெ.(n.) 1. மேலான நிலை; salvation, as the most exalted state, emancipation or attainment. 2. துறக்கநிலை; heaven. *"வாட்டியவுடம்பின் யாங்கள் வரகதி விளைத்து மென்னில்" (சீவக. 1431).*

*[பரகதி → வரகதி.]*

**Skt.** gati > த. கதி.

வரகம்மை *varagammai,* பெ.(n.) ஓர் வகை அம்மை; a kind of pox (சா.அக.).

*[வரகு + அம்மை.]*

வரகுத் தவசம் போல் தோன்றும் மணல்வாரி அம்மை.

வரகமொத்தான்கொடி *varaga-mottāṉ-koḍi,* பெ.(n.) ஓர் கொடி வகை; a creeper- *Citrullus colexynthes* (சா.அக.).

வரகரிசி *varagarisi,* பெ.(n.) வரகினரிசி; husked grain of common millet. *"வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்" (தமிழ்நா. 22).*

*[வறகு→வரகு + அரிசி]*

வரகவி *varakavi,* பெ.(n.) 1. அருட்கவி (யாழ்.அக.); gifted, soul inspired poet. 2. சிறந்த செய்யுள்; poem of great merit, poem of outstanding nature. *"வீரராகவன் வரகவி மாலையை" (திருவேங்கடக்கலம். தனியன்).*

*[பரம்→ வரம் + கவி.]*

**Skt.** kavi > *த. கவி.*

வரகு *varagu,* பெ.(n.) 1. சிறுதவசம்; common millet. *"புறவுக் கருவன்ன புன்புல வரகின்" (புறநா.34). "வாலிதின் விளைந்த புதுவர கரிய" (புறநா.120 : 9).* 2. சாமை; poor man's millet.

த. வரகு > **Skt.** varuka.

தெ. வரிகி; ம. வரகு; க. பரகு.

*[வறகு → வரகு.]*

புன்செய் நிலத்திற் பயிராகும் சிறந்த தவசம். ஊட்டச்சத்து நிறைந்தது.

**வரகுக்கோழி[1]** *varagu-k-kōḻi*, பெ.(n.) கோழி வகையுளொன்று; lesser florican-*Sypheotides indica* (சா.அக.).

*[வரகு + கோழி]*

தமிழகத்தின் புன்செய் நிலப்பரப்பில் காணப்படும் இவ்வினம், தற்போது அழியும் நிலை உருவாகியுள்ளது. இலை, தழை, கொழுந்து, விதைகள், சிறுபழங்கள் ஆகியவற்றோடு, தத்துக்கிளி, வெட்டுக்கிளி, எறும்பு முதலியவற்றை உட்கொள்ளும் இவை 46 விரலம் உயரம் வரை வளரும் தன்மைத்து. பழுப்பு நிற உடலில், அம்புமுனையைப் போன்ற கருப்புத்திட்டுகள் கொண்ட உடலையும், செம்பழுப்பு நிற மார்பையும், வயிற்றையும் கொண்டது. இவை நான்கு அல்லது ஐந்து முட்டைகளை இட்டு, இனப்பெருக்கம் மேற்கொள்ளும்.



**வரகுக்கோழி[2]** *varagu-k-kōḻi*, பெ.(n.) சீவல் வகை (M.M.); florican.

*[வரகு + கோழி]*

**வரகுச்சம்பா** *varagu-c-cambā*, பெ.(n.) ஆடவை, கடகம், மடங்கல் (ஆனி, ஆடி, ஆவணி) மாதங்களில் விதைத்து, ஆறு மாதத்திற் பயிராகும் சம்பா நெல்வகை (Rd.M.44); a variety of paddy, sown in the months of *āṉi, āḍi, āvaṇi* and maturing in six months.

*[வரகு + சம்பா[1]]*

**வரகுச்சிறுகுறுவை** *varagu-c-ciṟu-kuṟuvai*, பெ.(n.) மடங்கல் (ஆவணி) முதல், நளி (கார்த்திகை) வரையிலுள்ள காலத்தில் விதைத்து, நான்கு மாதத்திற் பயிராகும் நெல்வகை (Rd.M.45); a variety of paddy, sown in the season from *āvaṇi* to *kārttigai* and maturing in four months.

*[வரகு + சிறுகுறுவை]*

**வரகுசுட்டசாம்பல்** *varagu-šuṭṭa-šāmbal*, பெ.(n.) கருவுற்ற மகளிரின் அரத்தப் போக்கினை அகற்றும், எரிபட்ட நீறு; the ashes of burnt kodo millet, it is prescribed for flow of blood in pregnant woman (சா.அக.).

*[வரகு + சுட்டசாம்பல்]*

**வரகுணதேவர்** *varaguṇa-dēvar*, பெ.(n.) வரகுணன், 2 பார்க்க; see *varaguṇaṉ*, 2. *“பெரியவன்பின் வரகுண தேவரும்” (பதினொ. திருவிடை. மும். 21).*

*[வரகுணன் + தேவர்]*

**வரகுணம்** *vara-guṇam*, பெ.(n.) உயர்ந்த குணம்; excellent disposition or the best quality. *“மாதைய ரதிபதி வரகுண மேரு” (இலக். வி. சிறப்பு).*

*[வரம்+குணம். பரம்→வரம்=உயர்வு, மேன்மை.]*

**வரகுணமங்கை** *varaguṇa-maṅgai,* பெ.(n.) பாண்டிவள நாட்டிலுள்ள திருமால் திருப்பதிகளில் ஒன்று; one of the *Tirumāl tiruppati* in flourishing *Paṇḍiyaṉ* region.

**வரகுணன்** *varaguṇaṉ,* பெ.(n.) மாணிக்க வாசகர் காலத்திருந்த பாண்டிய மன்னன்; a *Pāṇḍiyā* king, contemporary of Saint *Māṇikkavāšagar.* *"வரகுணனாந் தென்னவ னேத்துசிற் றம்பலத்தான்" (திருக்கோ. 306).*

மறுவ. கடவுட் குணம்

*[வரகுணம் → வரகுணன்]*

ஒருகா. பரகுணம் →வரகுணம் →வரகுணன் = மேலான இறைத்தன்மை.

**வரகுதிரி** *varagudiri,* பெ.(n.) அம்மைவகை (வின்.); an acute contagious viral disease, as of small pox.

*[வரகு+உதிரி :வரகுபோற் சிறியவளவினதாய், சில நாட்களில் உதிரும் தன்மையுள்ள அம்மை வகை.]*

**வரகுதிரிகை** *varagu-tirigai,* பெ.(n.) வரகு திரிக்கும் பொறி; mill for grinding common millet. *"யானையினது காலையொக்கும் வரகுதிரிகை" (பெரும்பாண். 187, உரை).*

*[வரகு + திரிகை]*

**வரகுழுமநியாயம்** *vara-kuḻuma-niyāyam,* பெ.(n.) ஒரு குழுமத்துள் ஒருவர் தாம் அறியாதவற்றை, மற்றவருடைய உதவியால் அறிந்து கொள்ளுதல் போலும் நெறி (சி.சி.3, 4, சிவாக்.); the principle by which a member of an organisation or a body gains knowledge with the help of other members.

**Skt.** nyāya > த. நியாயம்.

*[வரகுழுமம் + நியாயம்]*

**வரங்கிட-த்தல்** *varaṅ-kiḍa-,*3 செ.கு.வி. (v.i.) வரம்பெறுதற்காகக் கோயில், கருவறை (கருப்பக்கிருகம்) முன் படுத்துக் கிடத்தல்; to lie prostrate in the presence of a deity, praying for the grant of a boon. *"வரங்கிடந்தான் றில்லை யம்பல முன்றிலம் மாயவனே" (திருக்கோ. 86).*

*[புரம்→பரம்→வரம் + கிட-. பரம்→புரம் = உயர்ச்சி, உயரமான கட்டடம், கோபுரம். கோபுரமுள்ள கோயில், நகர்.]*

**வரங்கு** *varaṅgu,* பெ.(n.) மரவகை; malabar wood-oil tree.

**வரச்சந்தனம்** *vara-c-candaṉam,* பெ.(n.) சந்தன மரவகை (யாழ்.அக.); a species of sandal wood tree.

*[வரம் + சந்தனம்]*

**வரச்சிக்கரப்பன்** *varacci-k-karappaṉ,* பெ.(n.) வறண்ட தோல் தடிப்புநோய் வகை; dry eczema.

**வரட்சித்திமிரம்** *varaṭci-t-timiram,* பெ.(n.) கருவிழியில் மந்தமும், நடுநரம்பில் குத்தலும், பீளையும், நீரும் பெருகச் செய்யும், மூளையைப் பித்தம் வறட்டும் போது பிறக்கும் நோய்; a disease of the block of eye that occurs when bile affects brain.

**வரட்சிப்பிரமேகம்** *varaṭci-p-piramēgam,* பெ.(n.) நீரழியும் போது கடுப்பு, எரிச்சல், நீர்த்தாரைவீக்கம், அதன் வாயுதட்டிலும் வீக்கம் ஆகியவற்றை உண்டாக்கி, வெட்டை நீர் கொஞ்சமேனும் வாராதிருக்கின்ற ஒரு

நோய் வகை; a disease of urethra marked by burning sensation during micturation, swelling of urethra etc.

வரட்சிவாதக்கரப்பான் *varaṭci-vāda-k-karappāṉ,* பெ.(n.) தோலில் தோன்றும் அரிப்பு நோய்; a kind of dry ecsema.

வரட்சிவாதம் *varaṭci-vādam,* பெ.(n.) தோல் வறண்டு காணப்படும் நோய் வகையு ளொன்று; a kind of skin disease.

*[வரட்சி + வாதம்]*

**Skt.** vāta> த. வாதம்.

வரச்சூலை *vara-c-cūlai,* பெ.(n.) வறட்சூலை (இ.வ.) பார்க்க; see *varaṭ-cūlai.*

*[வரள் + சூலை]*

வரசவிருக்கம் *varaša-virukkam,* பெ.(n.) அரசமரம் (சா.அக.); a sacred tree peepral tree - ficus neligiosa.

வரசளுப்பு *varašaḷuppu,* பெ.(n.) மருந்துப்பு வகையுளொன்று; a kind of medicinal salt.

வரட்கணம் *varaṭ-kaṇam,* பெ.(n.) 1. குழந்தைகளுக்கு உடல் சிவந்து, நெஞ்சு துடித்தலுடன், நாவில் கருத்த முள்ளுண்டாகி மஞ்சள் பூத்திருக்கும் ஒரு நோய்; a disease in children caused by congenital heat and marked by palpitation of the heart, parched tongue with thorny eruptions and yellow coloured face. 2. உடல் வறண்டு, விழிவெளுத்து, வலுக்குறைந்து, கை கால்களில் வலி தோன்றுகை; the above symptoms are also found in *Varaṭ-kaṇam* (சா.அக.).

வரட்கழலை *varaṭ-kaḻalai,* பெ.(n.) ஒருவகைக் கழலை; tumour (சா.அக.).

*[வரள் + கழலை.]*

வரட்கழிச்சல் *varaṭ-kaḻi-c-cal,* பெ.(n.) வயிற்றுப்போக்கு வகையுள் ஒன்று; a kind of loose motion like that of diarrhoea (சா.அக.).

வரட்காமாலை *varaṭ-kāmālai,* பெ.(n.) குழந்தைகளுக்கு கண் பசந்து, கால் ஓய்ந்து உடம்பு உலர்ந்து காணும் ஒரு வகை நோய்; a disease in children due to fatigue, weakness and yellow eye (சா.அக.).

*[வரள் + காமாலை.]*

வரட்சி *varaṭci,* பெ.(n.) வறட்சி பார்க்க; see *varaṭci.*

*[வரள் → வரட்சி]*

ஒ.நோ. திரள்→ திரட்சி. மருள்→மருட்சி.

வரட்சிகாசம் *varaṭci-kāšam,* பெ.(n.) வரட்டிருமல்; dry cough (சா.அக.).

**Skt.** ḷāša> த. காசம்.

*[வரட்சி + காசம்]*

வரட்சுண்டி *varaṭ-šuṇḍi,* பெ.(n.) வறட்சுண்டி (யாழ்.அக.) பார்க்க; see *vaṟaṭ-cuṇḍi.*

*[வரள் + சுண்டு→ சுண்டி.]*

வரட்சூலை *varaṭ-cūlai,* பெ.(n.) குடலைச் சுருட்டிப் பிடிக்கும் நோய்வகை (இங்.வை); pain in the ascending colon, a form of appendicitis.

*[வரள் + சூல் →சூலை]*

வரட்சொரி *varaṭ-cori,*பெ.(n.) சொரி வகையு ளொன்று (இராசவைத். 105); a kind of itch.

*[வரள் + சொரி]*

வரட்டடைப்பான் *varaṭṭaḍai-p-pāṉ,* பெ.(n.) மாட்டு நோய்வகையுளொன்று (பெ.மாட்.); a kind of cattle disease.

*[வரட்டு + அடைப்பான்]*

கால்நடைகளுக்குத் தொண்டையிலேற்படும் ஒரு வெக்கை நோய்.

வரட்டவரே *varaṭṭavarē,*பெ.(n.) 'வேகமாய் வா' என்பதைக் குறிக்கும் சொல்; a word to indicate quickly coming or arrival.

வரட்டி *varaṭṭi,*பெ.(n.) வறட்டி பார்க்க; see *vaṟaṭṭi. "வரட்டியுங் கேழ்வரகு ரொட்டியும் போலவே" (தனிப்பா.).*

தெ. வரட; க. பரடி; ம. வரடி.

*[வரட்டு → வரட்டி]*

வரட்டிருமல் *varaṭṭirumal,* பெ.(n.) 1. கோழை யுடன் கூடிய இருமல், இதற்கு நரிவெங்காயம், சுக்குத்தூள் சித்தரத்தை அரைத்துச் செய்த மாத்திரை; wild onion, dry ginger, lesser galangal are ground and made into pills and presribed for this disease. 2. வரட்சி காசம் பார்க்க; see *varaṭci-kāšam* (சா. அக.).

*[வரட்டு + இருமல்]*

வரட்டு[1]-தல் *varaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வறட்டு பார்க்க; see *vaṟaṭṭu.*

*[வரள் → வரட்டு-]*

வரட்டு[2] *varaṭṭu,*பெ.(n.) வறட்டு பார்க்க; see *vaṟaṭṭu.*

வரட்டுச்சொறி *varaṭṭu-c-coṟi,* பெ.(n.) மிகுதியான தினவுண்டாவதால், மிகு அரிப்புண்டாக்கும் ஒருவகைச் சொறி; a kind of itch causing great scarching sensation (சா.அக.).

*[வரட்டு + சுல்→சுர்→சுறு→சொறி]*

கரடுமுரடான, புறத்தோலின் மீது சிரங்குப் புண்ணேற்படும். இச் சிரங்குப் புண்ணின் விளைவாக உடம்பிலேற்படும் தினவு, வரட்டுச் சொறியெனப்படும்.

வரட்டுச்சோகை *varaṭṭu-c-cōgai,* பெ.(n.) அரத்தக்குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய்வகை; anaemia, a disease characterised by pale and bloated face.

*[வரட்டு + சோ→சோகை]*

அரத்தக் குறைவால், உடம்பில் வறட்சியேற்பட்டு, சுறுசுறுப்புத் தன்மை குறையும். சோ என்றால் மடி அல்லது சோம்பல். இந் நோயுற்ற மாந்தனும் சோகையினால், சோம்பித் திகழ்வான் எனலாம்.

வரட்டுப்பசு *varaṭṭu-p-pašu,*பெ.(n.) வறட்டுப் பசு பார்க்க; see *vaṟaṭṭu-p-pašu.*

**Skt.** Pašu> த. பசு.

*[வரட்டு + பசு.]*

வரட்டுமாடு *varaṭṭu-māḍu,*பெ.(n.) கன்று ஈனாத, பால் கறவாத மாடு; barren cow, infertile dry cow.

*[வரட்டு + மாடு]*

வரட்பூலா *varaṭ-p-pūlā,*பெ.(n.) பெருஞ் செடி வகை; Indian snowberry (சா.அக.).

**வரடம்** *varaḍam,* பெ.(n.) 1. எகினம் (அன்னம்) (சங்.அக.); swan, gander. 2. முல்லை; arabian jasmine.

**வரடை** *varaḍai,* பெ.(n.) தோல்வார்; leather strap or string.

*[வார்→வரு→வருடை→வரடை]*

**வரண்டகம்**[1] *varaṇḍagam,* பெ.(n.) 1. உண்டை; ball, mass. 2. சுவர்; wall. 3. முகப்பரு; pimple on the face. 4. யானை மேற்றவிசு; seat on an elephant, howdah.

*[கரண்டகம்→ (மரண்டகம்)→வரண்டகம்.]*

**வரண்டகம்**[2] *varaṇḍagam,* பெ.(n.) வரண்டகை பார்க்க; see *varaṇḍagai.* *"பொன் வரண்டகத்தின் மேல்" (மேருமந். 1134).*

*[கரண்டகம்→ (மரண்டகம்)→வரண்டகம்.]*

**வரண்டகம்**[3] *varaṇḍagam,* பெ.(n.) முகப்பரு; pimple on the face.

*[கரண்டகம்→ வரண்டகம்.]*

**வரண்டகை** *varaṇḍagai,* பெ.(n.)நாகணவாய்ப் புள்; myna. *"வரண்டகைக் கொடி நிரைத்த" (மேருமந்.1104).*

*[வரண்டம்→ வரண்டகை.]*

**வரண்டம்**[1] *varaṇḍam,* பெ.(n.) வரண்டகம் பார்க்க; see *varaṇḍagam.*

*[கரண்டம்→ வரண்டம்.]*

**வரண்டம்**[2] *varaṇḍam,* பெ.(n.) 1. சாலைவழி; pathway. 2. தூண்டிற்கயிறு; fishing thread or twine or string. 3. புற்குவியல்; heap of grass. 4. முகப்பரு; pimple of the face.

*[கரண்டம்→ வரண்டம்.]*

**வரண்டாலு** *varaṇḍālu,* பெ.(n.) ஆமணக்கு (மூ.அ.); castor plant.

**வரண்டியம்** *varaṇḍiyam,* பெ.(n.) பேராமுட்டி (மூ.அ.); pink-tinged white sticky mallow.

**வரண்மாடு** *varaṇ-māḍu,* பெ.(n.) கடாமாடு (யாழ்.அக.); bull.

*[வரள் + மாடு]*

**வரணக்காடை** *varaṇa-k-kāḍai,* பெ.(n.) காடை வகையுளொன்று; painted bush-quail-*Perdicula erythrorhyncha.*

*[வரணம் + காடை]*

இக் காடை வகையானது, நீர் வளம் மிகுந்த மலைப் பகுதிகளிலும், பள்ளத்தாக்குகளிலும், மலைவாழ் மக்கள் பயிரிடும் நிலங்களிலும், அதிகம் காணப்படும். புல் விதைகள், நிலைத்திணைகள் (தாவரங்கள்) தளிர்கள் ஆகியவற்றை உணவாகக் கொள்ளும். பழுப்பு நிற வெண்கோடுகளுடனும், கருப்புக் கறைகளுடனும் காணப்படும். இவை 18 விரலம் உயரம் வரை வளரும் தன்மையவை. 5 முதல் 8 வரையிலான எண்ணிக்கையில் முட்டை இடும். ஆண் வரணக்காடை சிறிது வேறுபட்டுத் தோன்றும்.



**வரணக்கினி** *varaṇa-k-kiṉi,* பெ.(n.) நிறத்தை மாற்றும் தன்மை கொண்டது; decolourising matter.

*[வரணம் + அக்கினி.]*

**வரணக்கோடாங்கியாட்டம்** *varaṇa-k-kōḍāṅgi-y-āṭṭam,* பெ.(n.) சிற்றூர்களில் வண்ண ஆடைகள் அணிந்து, கோடாங்கி அடித்து ஆடியும், பாடியும் குறிசொல்லும் ஒருவகை ஆட்டம்; a variety of dance of soothsaying, performed in villages, by wearing colourful clothes and beating a small *(ūḍukku)* hand drum.

*[வள்→ வர்→வரி + அணம்–வரணம் + கோடாங்கி + ஆட்டம்.]*

கோடாங்கம் என்னும் மரத்தால் செய்த உடுக்கை, அதனையடித்துக் குறிசொல்லும் வரணக் கோடாங்கியையும் குறித்தது.

**வரணக்கௌதாரி** *varaṇa-k-koutāri,* பெ.(n.) கௌதாரி வகையுளொன்று; painted sandgrouse - pterocles indicus.

*[வரணம் + கௌதாரி]*

தமிழகத்தின் வடக்கு, மேற்கு மாவட்டங்களின், மலைப் பகுதிகளில் காணப்படுகின்றதும், 28 விரலம் உயரம் வளர்வதும், சிறுகீற்றுகளை உடலில் கொண்டதுமாகிய இக்கௌதாரி, சிறுவிதைகள், களைச் செடிகள், சிறு பழங்கள் ஆகியவற்றை உண்ணும். 4 அல்லது 3 முட்டைகள் இட்டு, தன்னுடைய இனத்தைப் பெருக்கும்.

**வரணகம்** *varaṇagam,* பெ.(n.) 1. எழுத்து; letter. 2. பூசுவண்ணம்; paint. 3. சந்தனமரம்; sandle wood tree. 4. மஞ்சாடி மரம் (சங்.அக.); redwood.

*[வரணம்→ வரணகம்.]*

**வரணகச்சுழி** *varaṇaga-c-cuḻi,* பெ.(n.) செந்நிறமுள்ள கடல் மீன் வகை; sea-fish, reddish.

*[வரணகம் + சுழி.]*

**வரணச்சுண்டாங்கோழி** *varaṇa-c-cuṇḍāṅ-kōḻi,* பெ.(n.) சுண்டாங்கோழி வகையுளொன்று; painted spurfowl- *Galloperdix lunulata.*

*[வரணம் + சுண்டாங்கோழி]*

மேற்குத் தொடர்ச்சி மலையின் கிழக்குச் சரிவுகளிலும், கிழக்குத் தொடர்ச்சி மலைப் பகுதியிலுள்ள, வறண்ட காடுகளிலும் காணப்படும். இவை, 32 விரலம் உயரம் வரை வளரும். செம்பழுப்பான உடலில், கருப்பு வளையங்களுக்கிடையே, வெண் திட்டுக்களைப் பெற்றிருக்கும். விதைகள், முளைகள், இலந்தை முதலியன, இவற்றின் உணவு. 3 முதல் 5 வரையிலான முட்டைகளையிட்டு, இனப்பெருக்கம் செய்யும்.



**வரணசங்கரம்** *varaṇa-śaṅgaram,* பெ.(n.) சாதிக்கலப்பு; confusion or mixing of castes due to inter marriage.

*[வரணம் + சங்கரம்.]*

**வரணசபம்** *varaṇa-šabam,* பெ.(n.) மழை வேண்டி ஓதப்படும் மறைமொழி; vedic prayer for rain, addressed to *varuṇaṉ.*

*[வரணம் + சபம்.]*

**வரணசரம்** *varaṇa-šaram,* பெ.(n.) செம் மணிகளாற் செய்த கழுத்தணி; necklace of rubies or red gems.

*[வரணம் + சரம் = கழுத்தையொட்டி அணியும் அணி.]*

**வரணசூக்கம்** *varaṇa-šūkkam,* பெ.(n.) மழைக் கடவுள் பற்றிய பாடல்; a vedic hymn in praise of *varaṇaṉ.*

*[வரணம் + சூக்கம்.]*

**வரணடாறு** *varaṇaḍāṟu,* பெ.(n.) ஆமணக்கு; castor plant-ricinus communis (சா.அக.).

**வரணனை** *varaṇaṉai,* பெ.(n.) 1. வண்ணனை; description. 2. புனைவுரை (தண்டி.பொது.7); delineation. 3. புகழ்ச்சி, பாராட்டு; praise.

த. வரணனை > **Skt.** varṇaṉā.

*[வள் → வர் → வரி → வரணம் → வரணி → வரணை]*

(ஒ.நோ.) திள் → திர் → திரள் → திரளை → திரணை.

"வள்" என்னும் அடிப்படை மூலத்திலிருந்து, கிளைத்த சொல். இம் மூலத்திரிபு, வடமொழியில் இல்லை. 'வர்' என்னும் மேற்படை மூலத்திலிருந்து தோன்றிய வர்ண என்னும் சொல்லே வடமொழியில் வழக்கிலுள்ளது. வர்ண என்று வடவர் காட்டும் மூலம் செயற்கையே.

"varṇ (rather Nom. fr. varṇa)" என்று மா.வி. குறித்திருத்தல் காண்க.

இஃதும், வடவர் வலிந்து திரித்துக் கொண்ட பொருட் பொருத்தப்பாடற்ற மூலம் என்பது, தேவநேயர்தம் கொண்முடிபு (வ.வ.பக்.82).

வரணி என்பது தூய தென்சொல்லாகும். வரணனை, வரணி, வரணிப்பு போன்ற சொற்கள் தென்பாண்டி நாட்டில், கல்லாதார் நாவில், இன்றளவும், வழக்கூன்றியுள்ள நல்ல தமிழ்ச் சொற்களாகும்.

(எ.கா.) அழகர் வரணிப்பு

அழகர் வரணனை.

வண்ணனை, வரணனை போன்ற செந்தமிழ் வடிவங்கள், வடசொல் வடிவைப் பின்பற்றி, வருண, வருணனை என்று தமிழில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகரமுதலியில் வழுப்பட எழுதப்பட்டுள்ளன.

மதுரையம்பதியில், கள்ளழகர் வையையாற்றில் எழுந்தருளுங்கால், அழகர் வரணனை, மாலிருஞ்சோலை வரணிப்பு போன்ற வரணிப்புப் பாக்கள், இன்றும் படிப்பறிவற்ற பாமரர்களால் இசைக்கப்படுகின்றன. தங்கக்குதிரையில், மாலிருஞ்சோலை அழகன், இவர்ந்துவரும் எழிற்கோலத்தைத் திறம்பட இசை நயத்துடன் வண்ணிப்பதே வரணிப்பு எனும் வரணணை யாகும்.

வரணம், வரணனை, வரணிப்பு, வரணித்தல் போன்ற சொற்களில் உள்ள "வள்" என்னும் வளைவுக்கருத்தே மூலமாகும். வனைந்து, வனைந்து புகழ்ந்துரைத்தலே வரணனையாகும்.

வரணனைப் பாக்கள் அனைத்தும் ஒருவர்அல்லது ஒன்றன் அழகினை, மற்றும் புகழ் அல்லது செயற்பாட்டினை, விதந்தோதுதலாகும்.

**வரணத்தகடு** *varaṇa-t-tagaḍu,* பெ.(n.) மணிகளைப் பதிக்கும் போது அவற்றினடியில் வைக்கப்படும் வண்ணம் பூசப்பட்ட தகடு

(இ.வ.); foil used in setting precious stones.

*[வரணம் + தகடு.]*

வரணத்தடுக்கு *varaṇa-t-taḍukku,* பெ.(n.) அழகுப்படுத்தி, வண்ணம் பூசிய பாய்; decorated mat. *"வாழ்ந்த மகள் வந்தாள் வரணத்தடுக்கு போடு" (உ.வ.).*

*[வண்ணம் → வரணம் + அடுக்கு = அழகுபடுத்து.]*

வரணதாபம் *varaṇa-tābam,* பெ.(n.) தலையில் மூளையின் சவ்வுக்கு ஏற்படும் அழற்சி; inflammation of the membranes of brain-meningitis (சா.அக.).

*[வரணம் + தாபம்.]*

**Skt.** dāba> த. தாபம்.

வரணதிசை *varaṇa-tišai,* பெ.(n.) மேற்கு (திவா.); the west.

*[வரணம் + திசை.]*

வரணதேவம் *varaṇa-tēvam,* பெ.(n.) குன்று (சதய) நாள்; the 24th naksatra.

*[வரணம் + தேவம்.]*

வரணநாள் *varaṇa-nāḷ,* பெ.(n.) வரணனாள் பார்க்க; see *varaṇaṉāḷ.*

*[வரணம் + நாள்.]*

வரணப்பாட்டு *varaṇa-p-pāṭṭu,* பெ.(n.) பண்முறையை விளக்கிப் பாடும் பாட்டு; improvised introduction to a melody.

*[வரணம் + பாட்டு]*

வரணப்பிரியை *varaṇa-p-piriyai,* பெ.(n.) இராக வகை (பரத.ராக.பக்.104); a specific melody-type.

*[வரணம் + பிரியை.]*

வரணப்பூதர் *varaṇa-p-pūdar,* பெ.(n.) நால்வகை வரணங்களையும் காக்கும் நான்கு பூதங்கள்; the four goblins protecting, respectively, the four castes.

*[வரணம் + பூதம்→பூதர்.]*

வரணப்பொருத்தம் *varaṇa-p-poruttam,* பெ.(n.) பன்னீருயிரும் க, ங, ச, ஞ, ட, ண என்ற மெய்யாறும், பார்ப்பனச் சாதியும்; த, ந, ப, ம, ய, ர என்ற ஆறும், மன்னர் சாதியும்; ல, வ, ற, ன என்ற நான்கும் வணிகர் சாதியும்; ழ, ள இரண்டும் சூத்திர சாதியுமாகக் கொண்டு, உரியவாறு செய்யுண் முதன் மொழிப் பொருத்தங் கொள்ளுமுறை (வெண்பாப். முதன், 9, 10); (Poet) rule of propriety which enjoins that the first words of a poem, should contain letters pertaining to the caste of the hero (the vowels and ka, ṅa, ca, ña, ṭa, ṇa being brahmin; ta, na, pa, ma, ya, ra being ksattriya; la, va, ṟa, ṉa being vaišya; ḻa, ḷa being šūdra) one of ten *ceyyuṉ-mudaṉ-moḻi-p-poruttam.*

*[வரணம் + பொருத்தம்.]*

வரணபகவான் *varaṇa-pagavāṉ,* பெ.(n.) வருணன், 1 (உரி.நி.) பார்க்க; see *varuṇaṉ, 1.*

வரணம்[1] *varaṇam,* பெ.(n.) 1. நிறம் (பிங்.); colour. 2. எழுத்து; letter. 3. அழகு (பிங்.); beauty. 4. ஒளிப்படலம்; brightness.

5. மஞ்சள் (யாழ்.அக.); turmeric. 6. பொன்னுரை (யாழ்.அக.); streak of gold on the touchstone. 7. பொன் (யாழ்.அக.); gold. 8. புகழ் (யாழ்.அக.); fame. 9. முகமன்; praise, flattery. 10. நறுமணம் (யாழ்.அக.); fragrance. 11. குணம் (இலக்.அக.); character. 12. தன்மை; quality. 13. பூச்சு; coating. 14. பூச்சுக் களிம்பு; ointment. 15. புனைவு (யாழ்.அக.); disguise. 16. வகை (யாழ்.அக.); manner. 17. மாதிரி (யாழ்.அக.); style, example. 18. யானை (யாழ்.அக.); elephant.

க. பரெ; தெ. வரி; ம. வரெ.

த. வரணம் > **Skt.** Varṇa.

*[வள்→வர்→வரி + அணம் = வரணம். எழுத்து, பூச்சு, நிறம், வகை, அழகு, நிறம்பற்றிய குலம் (வ.வ.பகுதி.2, பக்.81).*

(ஒ.நோ.) திள் → திர் → திரள் → திரளை → திரணை. 'வள்' என்னும் வளைவுக்கருத்து மூலத்தினின்று தோன்றிய சொல்.

(எ.கா.) வள் → வளை → வளைத்தல் = எழுதுதல், வரைதல்.

வள் → வர் → வரி → வரணம்.

வள் → வர் → வரி → வரிதல் = 1. எழுதுதல் (பிங்.), 2. சித்திரமெழுதுதல், பூசுதல்.

"வரிவனப்புற்றவல்லிப் பாவை" (புறம்.33). வரித்தல் = 1. எழுதுதல். "வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை" (சீவக.2532). 2. சித்திரமெழுதுதல், பூசுதல். 3. கோலஞ் செய்தல். "அணிமலர் துறைதொறும் வரிக்கும்" (ஐங்குறு.117). "வள்" என்னும் அடிப்படை வளைவுக்கருத்து மூலத்தினின்று "வரி" என்னும் சொல் தோன்றும்.

(எ.கா.) வள் → வர் → வரி.

"வரி" என்னும் சொல்லினின்று எழுத்து, பூச்சு, நிறம், வகை, அழகு, நிறம்பற்றிய குலத்தைக் குறிக்கும் பொருண்மை பொதிந்த வரணம் என்னும் சொல் கிளைத்தது. வரணம் என்னும் சொல் தூயதென் சொல்.

வடவர்காட்டும் "வர்ண" (varṇ) என்னும் மூலம், பொருட் பொருத்தமற்றது. வடவர் திரித்துக் கொண்ட செயற்கைத் தன்மையுடையது, என்பார் பாவாணர்.

வரண அல்லது வர்ண என்னும் வடசொல்லே, தமிழில் வண்ணம் என்று திரிந்து வழங்குவதாகத் தமிழ்ப் பேராசிரியர் உட்படப் பலருங் கருதிக் கொண்டிருக்கின்றனர். வரணம், வண்ணம் என்னும் இரு சொல்லும் ஒரு சிறிது வடிவு வேறுபட்டனவேனும், ஒரே வேரினின்று முறையே, கீழ்ப்படையினு மேற்படையினுமாகத் தோன்றினவென் றறிதல் வேண்டும்.

(ஒ.நோ.) திண்ணை → திரணை.

தில்லுமுல்லு → திண்டுமுண்டு.

தில் → தெல் → தெள் → தெறு → தெற்று → தெற்றி → திண்ணை.

தில் → திள் → திண் → திண்ண = திரண்ட மேடை.

தில் → திண்டு → திள் → திட்டு → திட்டை.

தில் → திர் → திரள் → திரளை → திரணை திண்ணை.

திண்ணை, திரணை என்னும் இரு சொல்லும், கீழ்ப்படையிலும், மேற்படையிலுமாக ஒரே வேரினின்று தோன்றி, ஒரே பொருளை யுணர்த்துதல் காண்க.

இங்ஙனமே, வரணம், வண்ணம் என்னும் இருசொல்லுமெனக் கண்டு தெளிக. "திண்ணை" "திரணை"யின் திரிபன்று.

அங்ஙனமே, "வண்ணம்" வரணத்தின் திரிபன்று.'வண்ணகவொத்தாழிசை' வரணகவொத் தாழிசையென்று வழங்காமையும் நோக்குக (தேவ.13–பக்.40).

வரணம்[2] *varaṇam,* பெ.(n.) மூளையைக் கவர்ந்துள்ள மூன்று புரையான சவ்வுகள்; the three membrance that envelope the brain (சா.அக.).

வரணம்[3] *varaṇam,* பெ.(n.) மாற்று; degree of fineness, as of gold.

வரணம்[4] *varaṇam,* பெ.(n.) 1. தெரிந் தெடுக்கை; choice, selection. *“ஆசார்ய வரணம் பண்ணுதல்”.* 2. அமர்த்துகை (யாழ். அக.); appointing, nominating. 3. சூழ்கை (யாழ்.அக.); surrounding or incircling. 4. மதில் (இலக்.அக.); rampart, surrounding wall. 5. மறைக்கை (இலக். அக.); covering, screening. 6. சட்டை (நாமதீப.454); coat. 7. மாவிலிங்கம் (தைலவ.); round-berried cuspidate-leaved lingam tree. 8. ஒட்டகம் (யாழ்.அக.); camel. 9. பால் (யாழ்.அக.); milk.

*[வரி + அணம் – வரணம்]*

(ஒ.நோ.) மடி→மரி + அணம் = மரணம்.

மறைத்தற் கருத்தும், எழுதுதற் கருத்தும், வரணித்தற் கருத்தும், வளைதற் கருத்தோடு தொடர்புள்ளவையே. ஆதலால், சூழ்தலும், மறைத்தலும் பற்றிய சொல்லை வேறாகவும், நிறமும், வண்ணனை பற்றிய சொல்லை வேறாகவும், தமிழில் பிரித்தல் கூடாது (தேவ.13, பக்.40).

வரணம்பூசு–தல் *varaṇam-pūšu-,* பெ.(n.) 1. வண்ணம்பூசு–தல் பார்க்க; see *vaṇṇam-pūšu-.* 2. வரணம்வை–த்தல் பார்க்க; see *varaṇam-vai-.*

*[வரணம் + பூசு–.]*

ஓவியம், சுவர் போன்றவற்றில், வண்ணங் குறைந்த காலத்தே கோடிட்டு வரித்தல் அல்லது பூசுதல்.

வரணம்வை–த்தல் *varaṇam-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. நிறமூட்டுதல், வண்ணம் பூசுதல்; to give colour, to paint, to colour with dye. 2. வரணம்பூசு–தல் பார்க்க; see *varaṇam-pūšu-.*

*[வள்→வர்→வரி→வரணம் + வை–.]*

வரித்தல் = கோலஞ்செய்தல், சித்திரம் எழுதுதல், பூசுதல் என்னும் பொருண்மையில், சீவகசிந்தாமணி ஐங்குறுநூறு போன்ற இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.

"வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை" (சீவக.2532).

"அணிமலர் துறைதொறும் வரிக்கும்" (ஐங்குறு.117).

"வள்" என்னும் அடிப்படை மூலத்தினின்று கிளைத்த வரி என்னும் சொல்லினின்று, வரணம் என்னும் சொல் தோன்றியது.

வண்ணமெழுதுதல், வண்ணம் பூசுதல் என்னும் பொருட்பொருத்தப்பாட்டில், வரணம் வைத்தல் தென்பாண்டி நாட்டில் பரவலாக வழக்கூன்றியுள்ளது என்பார் மொழிஞாயிறு. வரி = வளைகோடு; எழுத்து.

எழுத்திலும், ஓவியத்திலும் வளைகோடும், வண்ணப்பூச்சும் நிரம்பி யிருப்பதால், வளைத்தற் கருத்தில், எழுத்துக்கருத்து தோன்றிற்று (வ.வ.பகுதி. 2, பக். 80).

வரணமாலை *varaṇa-mālai,* பெ.(n.) நெடுங் கணக்கு; the alphabet.

*[வரணம் + மாலை.]*

வரணமெட்டு *varaṇā-meṭṭu,* பெ.(n.) பாட்டிசை; இசைப்பாட்டு; song, musical composition.

*[வரணம் + மெட்டு]*

வரணமேறல் *varaṇam-ēṟal,* பெ.(n.) 1. பொன் மாற்றுயர்கை; increase of fineness or purity of gold. 2. மஞ்சளாகுகை; turning yellow. 3. குறைந்து காணும் வண்ணம் ஒளிர்தல்; dull colour becoming bright and shiny.

வரணலோகம் *varaṇa-lōgam,* பெ.(n.) 1. வரண மண்டலம்; region of *varaṇaṉ.* 2. நீர்; water.

*[வரணம் + உலகம் → லோகம்.]*

த. உலகம்→**Skt.** loka.

வரணவிந்து *varaṇa-vindu,* பெ.(n.) முத்துச் சிப்பி (யாழ்.அக.); mother of pearl.

*[வரணம் + விந்து.]*

வரணவிபாசகம் *varaṇa-vibāšagam,* பெ.(n.) ஒரு வகை நிறத்தைக் காட்டும் ஓர் முப்பட்டைக் கண்ணாடி; spectroscope.

வரணவில் *varaṇa-vil,* பெ.(n.) வானவில்லை அடுத்துத் தோன்றும் வில் வடிவு (வின்.); secondary rainbow.

*[வரணம் + வில்.]*

வரணவுலிமிடி *varaṇa-v-ulimiḍi,* பெ.(n.) கருப்பு உப்பிலாங் கொடி; a twiner black variety of *vuppilāṅ-koḍi.*

வரணவேலை *varaṇa-vēlai,* பெ.(n.) சித்திரம் எழுதுதல்; art of painting.

*[வரணம் + வேலை.]*

வரணனாள் *varaṇa-ṉāḷ,* பெ.(n.) குன்று (சதய) நாள் (பிங்.); the 24th naksatra.

*[வரணன் + நாள்.]*

வரணாச்சிரமதருமம் *varaṇā-c-cirama-tarumam,* பெ.(n.) நால்வகைச் சாதிக்கும் நால்வகை நிலைக்கும் உரிய ஒழுக்கம்; duties pertaining to the four classifications of castes and to the four stages of life.

*[வரணம் + ஆச்சிரமம் + தருமம்.]*

வரணாசாரம் *varaṇā-šāram,* பெ.(n.) சாதியொழுக்கம் (யாழ்.அக.); customs and manners pertaining to each of the four castes.

*[வரணம் + ஆசாரம்.]*

வரணாசிரா *varaṇā-širā,* பெ.(n.) சிவதை; purgative root - turbith root.

வரணாத்திரம் *varaṇāttiram,* பெ.(n.) வரணனை இறைவனாகக் கொண்ட படைக்கலன் (வின்.); the mystic arrow whose presiding deity is *varaṇaṉ.*

*[வரணம் + **Skt.** astra > த. அத்திரம்.]*

வரணாத்து *varaṇāttu,* பெ.(n.) புழுதிநாற்று; paddy seedling grown on dry seed-bed.

*[வரள் + நாற்று → நாத்து]*

வரணாத்துவா *varaṇāttuvā,* பெ.(n.) துறக்க நிலையை விளக்குவதும், அக்கர வடிவில் அமைந்ததுமான ஆறத்துவாக்களுள் ஒன்று (சி.சி.8, 6, மறைஞா.); a path to salvation or renunciation in the form of *varṇās,* one of six *āṟattuvā.*

*[வரண + அத்துவா.]*

**வரணாலயம்** *varaṇā-layam,* பெ.(n.) கடல்; the ocean or see.

*[வரணன் + ஆலயம்.]*

**வரணி[1]-த்தல்** *varaṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. புனைந்துரைத்தல்; to depict, describe. 2. புகழ்ந்தேத்துதல், பலவாறு கூறிப் பாராட்டுதல்; to praise. 3. உவமித்தல்; to illustrate by anology. 4. மிகைபடக் கூறுதல்; to exaggerate. 5. எழுதுதல்; to write. 6. வண்ணி-த்தல் பார்க்க; see *vaṇṇi-,*

த. வரணம் → வரணி → **Skt.** varṇ (இ.வே.)

*[வள் → வர் → வரி → வரணம் → வரணி= புனைந்துரைத்தல் (வ.வ.பகுதி.2, பக்.81)]*

வரணம், வரணி என்னும் இரு சொல்லும், வடசொல் வடிவைப் பின்பற்றி வருண, வருணி எனத் தமிழில் வழுப்பட எழுதப்பட்டுள்ளன. பாண்டி நாட்டிற், குலம் வினவும்போது, "என்ன வரணம்" என்றே, இன்றும் ரகர வடிவில் நாட்டுப்புறத்தில் வழங்குதல் காண்க.

வண்ணம், வரணம் என்னும் இருசொல்லும், ஒரே மூலத்தினின்று தோன்றியவையே. ஆயின், முன்னது அடிப்படை மூலமாகிய 'வள்' என்பதினின்றும், பின்னது மேற்படை மூலமாகிய 'வரி' என்பதினின்றும், திரிந்தவையாகும்.

வள் → வண் → வண்ணம் → வண்ணி → வண்ணணை (அடிப்படை மூலம்).

வள் → வர் → வரி → வரணம் → வரணி (மேற்படை மூலம்).

(ஒ.நோ.) திள் → திண் → திண்ணை (அடிப்படை மூலம்).

திள் → திர் → திரள் → திரளை → திரணை (மேற்படை மூலம்).

வரணித்தல் என்பதன் செந்தமிழ்ச் சொல் வடிவம் வண்ணித்தல் என்பதாகும்.

திண்ணை, திரணை என்னும் இரண்டும் ஒரே, மூலத்தனின்று தோன்றிய ஒரு பொருட் சொற்களே. இவையிரண்டும், இன்றும் நெல்லை நாட்டு உலக வழக்காம்.

இங்ஙனமே, வண்ணம், வரணம் என்பனவும்.

வண்ணம் என்னும் அடிப்படை மூலத்திரிபு, வடமொழியிலின்மையும், வரணம் (வர்ண) என்னும் மேற்படை மூலத்திரிபே, அதிலுண்மையும், கவனிக்கத்தக்கன (வ.வ.பகுதி, 2, பக்.82).

பல நிறங்களைக் கொண்டு ஓர் ஓவியத்தைச் சிறப்பித்தாற்போன்று, பல சொற்களையும், அணிகளையுங் கொண்டு புனைந்துரைத்தலே, வரணித்தலாகும்.

**வரணி[2]** *varaṇi,* பெ.(n.) மாவிலிங்கம் (நாமதீப. 327); round-berried cuspidate-leaved lingam tree.

*[வரணம் → வரணி]*

**வரணிக்கை** *varaṇikkai,* பெ.(n.) பாராட்டுகை, புகழ்கை, புனைந்துரைக்கை; praise; delineation.

*[வரணி → வரணிக்கை]*

**வரத்தாடு** *vara-t-tāḍu,* பெ.(n.) வெளியூரிலிருந்து கொண்டு வரப்படுகின்ற ஆடு; sheep or goat brought from other places, alien sheep.

செம்மறியாடுகளின் மந்தையைக் கிடை என்பர். ஊர் ஊராகச் சென்று பகலில் மேய்ச்சலுக்கு விட்டு, இரவில் நிலத்துக்குரியவரிடமிருந்து பணம் பெற்றுக் கொண்டு உரத்திற்காக கிடையமர்த்துவர். இந்த ஆடுகள் வெளியூரிலிருந்து கொண்டுவரப்படுவதால் வரத்தாடுகள் என்றும், இவற்றை மேய்ப்பவர்களை வரத்தாட்டுக்காரர்கள் என்றும் அழைக்கப்படுவர்.

வரத்தாறு *varattāṟu*, பெ.(n.) கிளையாறு (வின்.); tributary stream.

*[வரத்து + ஆறு]*

வரத்து[1] *varattu*, பெ.(n.) 1. தலைமுறை; genealogy, lineage, progeny. *'ஒருவனைக் கவிபாடும்போது அவனுடைய வரத்துச் சொல்லியிறே கவிபாடுவது' (திவ். அமலனாதி. 1. வ்யா. பக். 24).* 2. விருந்தினர் வரவைக் குறிக்கும் பல்லிச் சொல்; chirping of lizard indicating the arrival of guests. 3. கட்டளை; order, command.

*[வா→வரு→வரத்து.]*

வரத்து[2] *varattu*, பெ.(n.) 1. வருகை; advent, coming in. *"நம் கோவலன் வருகின்ற வரத்து" (சிலப்.9, 64-9, உரை).* 2. நீர் வரும் வழி; inlet or feeding channel or source of water supply, as to a tank. *"இந்தக் குளத்துக்கு வரத்து எங்கே?" (உ.வ.).* 3. வரும்படி; income, receipts, perquisite. *"ஒருவரத்துமின்றிச் செலவு செய்வோர்" (அறப். சத. 56).* 4. கணக்கில் வரவுதொகை காட்டும் பாங்கு; the process of crediting in an account. 5. பெருக்கு; increase or enhancement. *"வெள்ளம் வரத்தா வற்றா?"* 6. எல்லை; limit, boundary. *"இந்நாயனார் திருப்பதியில் நாலு வரத்துக்குள்ளும் இருந்த குடிமக்களை" (புதுக்கோ.கல்வெ. 176).*

*[வா → வரு →வரத்து]*

வரத்துப்பல்லி *varattu-p-palli*, பெ.(n.) 1. விருந்தின் வருகையைத் தெரிவிக்கும்படி ஒலிசெய்யும் பல்லி; lizard which indicates by its chirping the advent of guests. 2. தீயதன் தீநிமித்தமாக ஒலி செய்யும் பல்லி (வின்.); lizard which indicates ill omen by its chirping.

*[வரத்து + பல்லி]*

வரத்துப்போக்கு[1] *varattu-p-pōkku*, பெ.(n.) வழக்கமான பெண் புணர்ச்சி; habitual intercourse (சா.அக.).

வரத்துப்போக்கு[2] *varattu-p-pōkku*, பெ.(n.) 1. உள்ளே புகுகையும் வெளியே போகையும்; entrance and exit. 2. ஒருவர் வீட்டுக்கு ஒருவர் சென்றுவரும் பழக்கம்; visiting terms, terms of cordiality. *"அந்த வீட்டுக்கு வரத்துப் போக்குண்டா?" (இ.வ.).* 3. வரவும் செலவும்; income and expenditure.

*[வரத்து + போக்கு]*

வரத்துவாரி *varattu-vāri*, பெ.(n.) குளத்துக்கு நீர் வரும் வாய்க்கால் (இ.வ.); supply channel, feeding channel of a tank.

மறுவ. குளக்கால்

*[வரத்து + வாரி]*

வரதஞ்சி *vara-tañji*, பெ.(n.) ஒரு செடி வகை; a kind of plant-caesapinia sappan (சா.அக.).

வரதட்சி *vara-taṭci*, பெ.(n.) சத்திசாரம்; a kind of salt (சா.அக.).

வரதடியன் *varatadiyan*, பெ.(n.) மடிமிகுமட்டி (இ.வ.); dull, idle fellow, blockhead, a very stupid person.

மறுவ. முழுச்சோம்பேறி

வரதலன் *vara-talan*, பெ.(n.) வடதரன் பார்க்க; see *vadataran* (சா.அக.).

வரதாரு *varadāru*, பெ.(n.) தேக்குமரம் (மூ.அ.); teak tree.

வரதுங்கராமபாண்டியன் *varatunga-rāma-pāndiyan*, பெ.(n.) 16-17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet, lived in 16-17 C.

இவர் திருக்கருவை அந்தாதி, சிவகவசம், பிரமோத்தர காண்டம், கொக்கோகம், கூர்ம புராணம் முதலியவற்றை இயற்றியவர். இவர் அதிவீரராம பாண்டியனுடைய பெரிய தந்தையின் மகன். கூர்ம புராணம், அதிவீரராம பாண்டியன் செய்ததாகவும் கூறுவர்.

வரந்தருவார் *varan-taruvār*, பெ.(n.) வில்லிபுத்தூராழ்வாரின் புதல்வராகிய ஒரு புலவர் (பாரத. சிறப்புப் 23, தலைப்பு); a poet son of *villi-puttūr-ālvār*.

இவர், 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். வில்லிபுத்தூராரின் 'வில்லி பாரதத்திற்கு பாயிரம் பாடியவர்.

வரநதி *vara-nadi*, பெ.(n.) கங்கை; the Ganges. *'மன்னவன்..... வரநதிக் கரையிலுற்றான்' (பாகவ. 1, தன்மபுத்திரன். 8).*

*[வர + நதி.]*

**Skt.** nadī> த. நதி.

வரநிச்சயம் *vara-niccayam*, பெ.(n.) மணமகனை இன்னானென்று உறுதிசெய்து கொள்ளுகை; selecting the bridegroom for a particular bride.

*[வரன் + நிச்சம்→நிச்சயம் - வரநிச்சயம்.]*

**Skt.** niš-caya> த. நிச்சயம்.

வரப்படி *varappadi*, பெ.(n.) வரப்பின் அருகிலுள்ள வயற்பகுதி; portion of a field, adjoining to the ridges.

*[வரப்பு + அண்டி→அடி.]*

வரப்பினை யொட்டியுள்ள இடப்பகுதி அல்லது வரப்பின் கீழிடம்.

வரப்படுத்து-தல் *vara-p-paduttu-*, 8 செ.குன்றாவி.(v.t.) 1. நெட்டுருப் பண்ணுதல்; to cram or mug up as a lesson. *பாடத்தை வரப்படுத்துகிறான்.* 2. வந்ததைப் பெற்றுக் கொள்ளுதல்; to credit; to appropriate, to accept whatever is offered. *வந்ததை வரப்படுத்தடா வல்லக்காட்டு, இராமா (இ.வ.).*

*[வா → வர + படு →படுத்து-.]*

வரப்பண்ணு-தல் *vara-p-pannu-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. வரவழைத்தல்; to cause to come; to bring; to produce. 2. நெட்டுருச் செய்தல்; to mug up, to cram, as a lesson.

*[வா→ வர + பண்→பண்ணு-.]*

வரப்பற்று-தல் *vara-p-parru-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. தன்வயமாக்குதல்; to get into one's possession, to take hold of, to clutch eagerly. 2. வந்ததைப் பெற்றுக் கொள்ளுதல்

(இ.வ.); to credit, to appropriate, to accept whatever is offered.

*[வா → வர + பற்று–,]*

**வரப்பார்[1]–த்தல்** *vara-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) பிறர் வரவுக்காகக் காத்திருத்தல் (யாழ்.அக.); to await, to wait for some one's arrival.

*[வா → வர + பார்–.]*

**வரப்பார்[2]–த்தல்** *vara-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) வருமாறு செய்தல்; to cause or arrange to come.

*[வா → வர + பார்–.]*

**வரப்பிரசாதம்** *vara-p-piraśādam,* பெ.(n.) கடவுளரின் அருட்கொடை; Grace of Gods. *"தெய்வச்செயல் வரப்பிரசாதம்" (தனிச்.சிந். 231. 18).*

*[வரம் + பிரசாதம்]*

**Skt.** pra-sādi > த. பிரசாதி

**வரப்பிரசாதி** *vara-p-piraśādi,* பெ.(n.) வரமருள்வார்; bestower of boons. *"பழனியாண்டவர் நல்ல வரப்பிரசாதி".*

*[வரம் + பிரசாதி]*

**Skt.** pra-sādi > த. பிரசாதி.

**வரப்பிரதானம்** *vara-p-piradānam,* பெ.(n.) 1. வரந்தருகை; the granting of a boon, blessing. 2. நன்கொடை (யாழ்.அக.); excellent gift, donation.

*[வரம் + பிரதானம்]*

**Skt.** pradhāna > த. பிரதானம்

**வரப்பிரதை** *vara-p-piradai,* பெ.(n.) 1. வரமளிக்கும் தேவதை; benevolent goddess. 2. அகத்திய முனிவரின் மனைவியாகிய உலோபமுத்திரை (யாழ்.அக.); *Lōbamudrai,* the wife of Agattiyar.

*[வரம் + பிரதை]*

**Skt.** pratha > த. பிரதை

**வரப்பு** *varappu,* பெ.(n.) 1. வயல்வரம்பு; ridge of a field. *வரப்பு உயர நீர் உயரும்; குடி உயரக் கோன் உயரும் (உ.வ.). வரப்போ தலையணை; வாய்க்காலோ பஞ்சுமெத்தை (பழ.).* 2. வரம்பு; limit. 3. எல்லை (சது.); boundary.

*[வரம்பு → வரப்பு: வளைதற் கருத்தினின்று கிளைத்த சொல்.]*

ஒருவர் நிலத்தினின்று, மற்றொருவர் இடத்தை வளைத்து வரம்பிடுவதால் வரப்பு எனப் பெயர் பெற்றது. வயலின், எல்லையினை, அல்லது வயலோரத்தை வகுக்கும், வயல்வரம்பான திட்டு.

**வரப்புக்கடா** *varappu-k-kaḍā,* பெ.(n.) வரப்புநண்டு பார்க்க; see *varappu-nandu.*

*[வரப்பு + கடா[2]]*

**வரப்புகழி–த்தல்** *varappu-kali-,* 4 செ.குன்றாவி. (v.t.) வரப்பினைச் சரி செய்தல்; shaping or reclaiming the ridges of paddy field.

*[வரப்பு + கழி–.]*

ஒருகா. அண்டைவெட்டுதல்.

**வரப்புச்சுண்டெலி** *varappu-c-cundeli,* பெ. (n.) எலிவகை; field-mouse.

*[வரப்பு + சுண்டு + எலி.]*

வயலோர வரப்புக்குழியில் வாழும், சிற்றெலி வகையுளொன்று.

**வரப்புநண்டு** *varappu-naṇḍu,* பெ.(n.) வயல் நண்டு; field crab.

*[வரம்பு→வரப்பு + நொண்டு→நண்டு.]*

நண்டுதல் = கிண்டுதல், கிளறுதல்.

வரப்பு நண்டு = வரப்புப் பொந்திலுள்ள வண்டலை வெளிக் கொணர்ந்து தரும் தன்மைத்து; வண்டலிலும் மணலிலும் கிண்டினாற்போற் செல்லும் நீருயிரி.



**வரப்புமேடு** *varappu-mēḍu,* பெ.(n.) மேடான வரப்பு; mound boundary, raised ridge of a field. *வரப்புமோடு (பே.வ.).*

*[வரப்பு + மேடு]*

**வரப்புள்** *varappuḷ,* பெ.(n.) வயல் (பிங்.); cultivable field.

*[வரப்பு + உல்→உள்[2]]*

வரப்பினுட் பகுதியிலுள்ளதும், நன்கு பண்படுத்தப்பட்டதுமான நன்செய்.

**வரப்பூலா** *vara-p-pūlā,* பெ.(n.) 1. வறட்பூலா பார்க்க; see *varaṭ-pūlā.* 2. பூலா; fleggea lencophyrus (சா.அக.).

**வரப்பெலி** *vara-p-peli,* பெ.(n.) எலி வகை; field-rat (சா.அக.).

*[வரப்பு + எலி. இல்→இலி→எலி. இல் = குத்துதல், குடைதல்.]*

நன்செய் வரப்புப் பொந்துகளில் வாழும் எலி.

**வரப்போ-தல்** *vara-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) நிகழக்கூடியதாதல்; to be about to come; to come in the future, to be positive or optamistic. *"உனக்கு நல்லகாலம் வரப்போகிறது" (உ.வ.).*

*[வா → வர + போ-.]*

**வரபட்சம்** *vara-paṭcam,* பெ.(n.) மண மகனைச் சார்ந்தவர் (யாழ்.அக.); the bridegroom's party.

*[வரன் + பக்கம்→பட்சம்]*

த. பக்கம் > **Skt.** பட்சம் (paksa).

**வரபதி** *vara-pati,* பெ.(n.) மூலிகை வகையு ளொன்று; a kind of herbal medicine (சா.அக.).

**வரபலம்** *vara-palam,* பெ.(n.) தென்னை மரம்; cocoanut tree - *Cocos nucifera* (சா.அக.).

**வரம்[1]** *varam,* பெ.(n.) 1. தெய்வம் முதலியவற்றாற் பெறும் பேறு; boon, gift, blessing by a deity or a great person. *"காதலி னுவந்து வரங் கொடுத் தன்றே" (திருமுரு.94). "இமையா நாட்டத் தொருவரங் கொண்டு" (பரிபா. 5:30). "வருபுனல் அணிகென வரங்கொள் வோரும்" (பரிபா 8:105). 'வரங்கொடுத்த தெய்வத்திற்கு, மொட்டை போடுவதாக வேண்டிக் கொண்டான்' (உ.வ.).* 2. அருள் (வின்.), உதவி நன்மை; grace, favour, help.

3. வாழ்த்து (யாழ்.அக.); blessing, well wish. 4. வேண்டுகோள்; supplication, solicitation, entreaty, request, as made to a deity or a great person. *"வசையிலாள் வரத்தின் வந்தாள்" (சீவக. 201).* 5. விருப்பம் (பொருட்.நி.); desire. 6. மேன்மை; esteem, excellence, eminence. 7. ஒரு பொற்குவை (யாழ்.அக.); a treasure or fund. 8. சூழல் (யாழ்.அக.); enclosed or encircled space. 9. அடைக்கலாங்குருவி (யாழ்.அக.); sparrow. 10. எறும்பு (யாழ்.அக.); ant.

*[பரம்→வரம் = மேன்மை (தி.ம.49.]*

புரம் = மேல், மேன்மாடம். உயர்ச்சி, உயரமான கட்டிடம். புரம்→பரம் = மேல், மேலிடம், மேலுலகம். *"புரையுயர் பாகும்" (தொல்.).*

வரம் குறித்து நச்சினார்க்கினியர், சீவகசிந்தாமணி உரையில் கூறுவது :- *"வேண்டுவ கோடல்" (நச்.சீவ.661).*

**வரம்²** *varam,* பெ.(n.) மஞ்சள் (மலை.); turmeric (சா.அக.).

*[வர → வரம்]*

**வரம்படங்கல்பாட்டம்** *varambaḍaṅgal-pāṭṭam,* பெ.(n.) தண்ணீர்த்தட்டு முதலியவற்றால் வயல்விளைவு குறைந்தாலும், தள்ளுபடியில்லாத கட்டுக்குத்தகை வகை (நாஞ்.); a stringout lease of paddy-fields in which no remission is made in rent in the event of unforeseen drought, etc.

*[வரம்பு + அடங்கல் + பாட்டம். பாட்டம் = குத்தகை வகை.]*

**வரம்பழி–தல்** *varambaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) வரம்பிக–த்தல் பார்க்க; see *varambiga-,* *"வரம்பழியாது வாழ்ந்தேம்" (கம்பரா. மாயாசீதை.70).*

*[வரம்பு + அழி–. ஒழி→அழி.]*

**வரம்பழிதரிசு** *varambaḻi-tarišu,* பெ.(n.) பாழ்நிலம்; waste land.

*[வரப்பு→வரம்பு + அழி + தரிசு. ]*

ஒருகா. வறுநிலம்.

**வரம்பறு–த்தல்** *varambaṟu-,* 4 செ.கு.வி. (v.i.) வரம்பறுத்தவிளைநிலம் பார்க்க; see *varambaṟutta-viḷai-nilam.*

*[வரம்பு + அறு–. ]*

**வரம்பறுத்தவிளைநிலம்** *varambaṟutta-viḷai-nilam,* பெ.(n.) அளந்து, எல்லை யிட்டுப் பிரித்த நன்செய்நிலம்; measured cultivable, wet land. *'எம்மூர் வரம்பறுத்த விளைநிலமாயின வயல் நிலம்' (S.I.I. Vol.XII-102).*

*[வரம்பறு + விளைநிலம்.]*

**வரம்பிக–த்தல்** *varambiga-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அளவிலதாதல்; to be boundless. *"வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு" (கம்பரா. அயோத். மந்திரப்.1).* 2. அளவு கடத்தல்; to exceed limits.

*[வரம்பு + இக–.]*

**வரம்பிகந்தோடு–தல்** *varambigandōḍu-,* 5 செ.கு.வி. (v.i.) அளவு கடத்தல்; to exceed limits. *"வரம்பிகந்தோடி" (கம்பரா. நாட்.9).*

*[வரம்பிகந்து + ஓடு–.]*

வரம்பில்காட்சி *varambil-kāṭci,* பெ.(n.) முழுதுணரும் அறிவு (சீவக. 2846, உரை.); omniscience, infinite wisdom.

மறுவ. முற்றறிவு.

*[வரம்பு + இல் + காட்சி]*

வரம்பில்ஞானம் *varambil-ñāṉam,* பெ.(n.) வரம்பில்காட்சி (வின்.) பார்க்க; see *varambil-kāṭci.*

*[வரம்பு + இல் + ஞானம்[1]]*

வரம்பிலறிவன் *varambil-aṟivaṉ,* பெ.(n.) கடவுள் (நன். பாயி. 54, மயிலை.); God, as the omniscient or all pervading divine.

மறுவ. முற்றறிவன்.

*[வரம்பு + இல் + அறிவன்]*

வரம்பிலாற்றல் *varambil-āṟṟal,* பெ.(n.) வரம்பில் வல்லமை; infinite power. *"வைத்து மீடியால் வரம்பிலாற்றலாய்" (கம்பரா. மருத்து. 116).*

*[வரம்பு + இல் + ஆற்றல்]*

வரம்பிலின்பம் *varambil-iṉbam,* பெ.(n.) பேரின்பம், அளவிலா மகிழ்ச்சி; divine infinite happiness.

*[வரம்பு + இல் + இன்பம். இல்→இன்→இன்பு →இன்பம் = மட்டற்ற மகிழ்ச்சி.]*

வரம்பிலின்பமுடைமை *varambil-iṉbam-uḍaimai,* பெ.(n.) சிவனெண்குணத் தொன்றான அளவிலின்ப(பேரின்ப)முடைமை (குறள், 9, உரை); being in enjoyment of boundless bliss, one of *śivaṉ-eṇ-kuṇam* or eight qualitis.

*[வரம்பிலின்பம் + உடைமை. உடு→உடை →உடைமை]*

வரம்பிற-த்தல் *varambiṟa-,*4 செ.கு.வி. (v.i.) 1. அளவிலதாதல்; to be boundless. *"வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு" (கம்பரா. அயோத். மந்திரப். 1).* 2. அளவு கடத்தல்; to exceed limits.

*[வரம்பு + இள்→இறு→இற-.]*

வரம்பு *varambu,* பெ.(n.) 1. எல்லை; boundary, border, limit, extent. *"வரம்பி றானை பரவா லூங்கே" (பதிற்றுப். 29, 15). "தலைவரம் பறியாது வருந்துமென் னெஞ்சே" (குறுந்.172 : 7). "புலங்கெட விறுக்கும் வரம்பி றானை" (புறநா. 16 : 9). "எண்ணுவரம் பறியா உவலிடு பதுக்கை" அகநா. (109 : 8).* 2. வரப்பு; ridge of a field. *"செறுவின் வரம்பணையாத் துயல்வர" (அகநா.13).* 3. அணை; causeway, dam. *"வேலை வகுத்தன வரம்பு" (கம்பரா. மாயாச.27).* 4. வழி (யாழ்.அக.); way. 5. விளிம்பு (இ.வ); brim. 6. ஒழுங்கு; rule of conduct, principle. *"வகைதொகை யறியாதவனே வரம்பு மீறிப் பேசுவான்".* 7. வட்டி (அக.நி.); interest. 8. மனை (அக.நி.); house-site.

**Ka.** bara, bare, vari, vare; **Te.** varuju; **Tu.** barabu, baraṅgayi, barē; **Ma.** varambu, vara, varu, varē; **Ko.** var.

*[வரி→வரம்பு = எல்லை; வயல் வரம்பான திட்டு (வே.க.4 பக்.107).]*

வரம்புகட்டு[1]-தல் *varambu-kaṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. அணைகட்டுதல் (யாழ். அக.); to dam up. 2. எல்லைக் கட்டுதல்; to limit. *'கடிப்புண் பரவாதபடி மாந்திரிகன் வரம்பு கட்டினான்' (உ.வ).* 3. முடித்தல்; to finish, to put an end to.

*[வரம்பு + குள்→குட்டு→கட்டு-.]*

வரம்புகட்டு²–தல் *varambu-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) கடிப்புண் வட்டமாகத் தடித்தல்; to form rings, as in ringworm or spreading sores.

*[வரம்பு + கட்டு–.]*

வரம்புகட–த்தல் *varambu-kaḍa-,* 4 செ.கு.வி. (v.i.) வரம்பிற–த்தல் பார்க்க; see *varambiṟa-,*

*[வரம்பு + கட–,]*

வரம்புதிரட்டு–தல் *varambu-tiraṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) & செ.குன்றாவி.(v.t.) வரம்புகட்டு–தல் பார்க்க; see *varambu-kaṭṭu-,*

*[வரம்பு + திரட்டு–]*

வரம்புபண்ணு¹–தல் *varambu-paṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) வரம்புகட்டு–தல்–,1, 2 பார்க்க; see *varambu-kaṭṭu-.*

*[வரம்பு + பண்→பண்ணு–.]*

வரம்புபண்ணு²–தல் *varambu-paṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) சரிப்படுத்துதல் (யாழ். அக.); to adjust, to set right, to rectify.

*[வரம்பு + பண்ணு–.]*

வரமாலை *varamālai,* பெ.(n.) மணமகனுக்கு மணமகள் சூட்டும் மணமாலை; the garland put by the bride round the neck of the bride-groom, at a marriage.

*[வரன் + மாலை]*

வரமுள்ளி *vara-muḷḷi,* பெ.(n.) ஓர் வகை முள்ளி; barleria brionita (சா.அக.).

வரமூலி *vara-mūli,* பெ.(n.) ஓர் பூடு; barleria prionties (சா.அக.).

வரயாத்திரை *vara-yāttirai,* பெ.(n.) மண மகன் மணமகள் வீட்டை நோக்கி திருத்தலத்திற்கு வருவது போன்று, ஊர்வலம் வருகை; setting out of the bridegroom in procession towards the house of the bride, at a marriage.

*[வர + ஏ→ யா + திரை → யாத்திரை]*

வரயோகம் *vara-y-ōgam,* பெ.(n.) நந்தையுடன் செக்கு (சதயம்), ஆரல் (கார்த்திகை), மூதிரை (திருவாதிரை), அறுவை (சித்திரை) என்பவற்றுளொன்று கூடுதலாலுண்டாம் ஒக வகை (விதான. குணாகுண.10); combination of nandai with one of the *naksatras, šadayam, kārttigai, tiruvādirai* and *cittirai.*

*[வர + யோகம்]*

**Skt.** yōga→ *த. யோகம்*

வரர் *varar,* பெ.(n.) 1. சிறந்தோர்; saint, sages, great or enlightened persons. *"வரரழக் கண்டதுண்டோ?" (திருவாலவா. 29, 9).* 2. வானோர் (பிங்.); celestials.

*[பரர்→ வரர் = மேலானோர்.]*

வரராசையுலா *vara-rāšai-y-ulā,* பெ.(n.) 17–ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல்; a work composed in 17C.

இந்நூலின் ஆசிரியர் இன்னாரென்று அறியப்படவில்லை. நூலின் பெயராலே ஆசிரியர் அழைக்கப்படுகின்றார். வரராசை என்பது சங்கர நயினார் கோயில். வடமலையப்ப பிள்ளையன் செய்த திருப்பணி நன்கு விளக்கப்பட்டுள்ளது.

வரராமயோகி *vararāma-y-ōgi,* பெ.(n.) 12–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet, lived 12 C.

இவர் திருந்செந்தூர்ச் சண்முக சதகம், திருக்குறுங்குடி நம்பி சதகம், என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

வரருசி *vara-ruši,* பெ.(n.) பாணினி(வியாகரணத்துக்கு) இலக்கணத்திற்கு உரை செய்த முனிவர் (சங்.அக.); the sage who wrote the *vārtigam* supplementing *pāṇiṉis* grammar.

வரருடவாலி *vararuḍa-vāli,* பெ.(n.) கருநாகம்; black cobra (சா.அக.).

வரல் *varal,* பெ.(n.) வளருகை; growing. *"வனைந்துவரல் இளமுலை ஞெமுங்கப் பல்லூழ் விளங்குதொடி முன்கை வளைந்து புறஞ்சுற்ற" (அகம்.58:7–8).*

*[வா → வர்→வரு→வரல்.]*

வரல்வாறு *varal-vāṟu,* பெ.(n.) வரலாறு (யாழ்.அக.) பார்க்க; see *varalāṟu.*

*[வா → வர்→வரு→வரல் + வாறு.]*

வரலாற்றுக்களஞ்சியம் *varalāṟṟu-k-kaḷañjiyam,* பெ.(n.) வரலாற்றுச் செய்திகளை நிரல்படத் தொகுத்த நூல்; a historical encyclopaedia.

*[வரலாறு + களஞ்சியம்.]*

சிறப்பு மிக்க உலக வரலாற்று நிகழ்வுகளை ஏரணமுறைப்படி படவிளத்தங்களுடன் எடுத்தியம்பும் கலைக்களஞ்சியம்.

வரலாற்றுமுறைமை *varalāṟṟu-muṟaimai,* பெ.(n.) குடிவழியாகக் கையாளப்படும் இடையறவுபடாத வழக்கு; ancient and unbroken tradition or usage, hereditary custom. *"மரபு வழுவாவது வரலாற்று முறைமையின் மயங்கச் சொல்லுவது" (நன். 374, மயிலை.).*

*[வரலாறு + முறைமை]*

தொன்றுதொட்டு வழங்கி வரும் முறைமைக்கு மாறானது.

வரலாற்றுவஞ்சி[1] *varalāṟṟu-vañji,* பெ.(n.) சிற்றிலக்கியம் தொண்ணூற்றாறனுள் தலைவனது குலப்பிறப்பு முதலிய பல சிறப்பையும், புகழையும் வஞ்சிப்பாவாற் கூறும் பாடல்வகை; a panegyric in *vañji-p-pā* on the noble birth, greatness and fame of a hero, one of the 96 *ciṟṟilakkiyam.*

*[வரலாறு + வஞ்சி [2]]*

வரலாற்றுவஞ்சி[2] *varalāṟṟu-vañji,* பெ.(n.) போர்க்களத்துச் செல்லும் படையெழுச்சியைக் கூறும் சிற்றிலக்கியம் (இலக். வி. 869); a poem describing the majestic march of an army to the battle-field.

*[வரலாறு + வஞ்சி [3] ]*

வரலாறு *varalāṟu,* பெ.(n.) 1. நிகழ்ச்சி முறை; order of events. 2. இனவளர்ச்சி மற்றும் வாழ்வுமுறைத் தொடர்ப் பதிவேடு; history. *"ஈதிவன்றன் வரலாறுங் குலவரவும்" (கம்பரா. குலமுறை. 29).* 3. தொன்மநிகழ்வு; antecedents. 4. சூழல்; circumstances. 5. விளத்தம்; details. 6. வழிமுறை ; means, device. *"ஆவிதாங்கும் வரலாறு கேளும்" (அழகர்கல்.86).* 7. எடுத்துக்காட்டு; example, instance, illustration.

*[வா→வர்→வரு→ வரல் + ஆறு]*

கலைகளும் (Arts), அறிவியங்களும் (Sciences) 1. தற்சார்புள்ளது (independent), 2. மற்சார்புள்ளது (dependent) என இருதிறப்படும். தற்சார்பறிவியங்களுள் ஒன்றான வரலாறு, ஏனையறிவியங்கட்கெல்லாம் அடிமணையாயும், முதுகந்தண்டாயும் இருப்பதாகும்.

காட்சியும் கருத்துமாகிய ஒவ்வொரு பொருட்கும் வரலாறிருப்பினும், ஒரு நாடு, அதன் மக்கள், அவர்கள் மொழி, அவர்கள் நாகரிகம், ஆட்சி ஆகிய சிலவற்றின் வரலாறே சிறப்பாக வரலாறெனப்படும்.

ஒருநாட்டு வரலாறு அந்நாட்டின் பழங்குடி மக்களை (Aborigines)யும், வந்தேறி (immigrants) களையும், பிரித்துக் காட்டுவதால், ஒரு வீட்டுக்காரனுக்கு, அவ்வீட்டு ஆவணம் ஏமக்காப்பாவது போல், ஒரு நாட்டுப் பழங்குடி மக்கட்கும், அந்நாட்டு வரலாறு, சிலவுரிமை வகையில் ஏமக்காப்பாம்.

இனி வரலாறின்றி ஒரு மொழியின் உண்மையான இயல்பை அறிவதும் அரிதாம் (தேவ. பக்.24). ஒரு நாட்டின் வரலாற்றை அறிவதற்கு, அந்நாட்டு மொழியும், சொற்களும் உறுதுணை புரிவன எனலாம்.

**வரலாறுகாணாத** *varalāṟu-kāṇāda,* பெ.அ. (adj.) இதற்குமுன் இதுபோல் இருந்திராத, முன்பு ஒருமுறைகூட நடந்திராத; unprecedented, uneventful. *'வரலாறு காணாத கூட்டம்'.*

*[வரலாறு + காண் + ஆ (எ.ம.இ.நி.) → காணாத]*

**வரவண்ணினி** *varavaṇṇiṉi,* பெ.(n.) 1. திருமகள் (இலக்குமி) (யாழ்.அக.); *Tirumagaḷ.* 2. மலைமகள்; *Malaimagaḷ.* 3. கலைமகள்; *Kalaimagaḷ.* 4. கற்புடையாள்; contiment or chaste woman. 5. பெண்; woman. 6. மஞ்சள்; tumeric. 7. ஓர் நிறம்; a colour.

*[வரவர்ணினி → வரவண்ணினி]*

**வரவர** *vara-vara,* வி.அ.(adv.) 1. படிப் படியாய்; step by step, gradually. *வரவர அறிவு பெருகும்.* 2. மேன்மேலும்; further and further. *அடிக்கடி நடந்த வற்கட (பஞ்ச)த்தாலும் வெள்ளத்தாலும் வரிக் கொடுமையாலும் பொதுமக்கள் நிலைமை வரவரச் சீர்கெட்டு வந்தது.*

*[வா→வர்→வரு→வர + வர.]*

**வரவரமுனி** *varavaramuṉi,* பெ.(n.) மணவாள மாமுனி; a *vaisṇava-ācārya.*

**வரவழை-த்தல்** *vara-v-aḻai-,* 4 செ. குன்றாவி. (v.t.) வருவித்தல், அழைத்தல்; to cause, to come, invite. *"மாதை யீங்கு வரவழைத்தே" (வெங்கைக்கோ. 336).*

*[வா→ வர்→ வர + அழை-.]*

**வரவழைப்புப்பாட்டு** *vara-v-aḻaippu-p-pāṭṭu,* பெ.(n.) வேலூர் மாவட்டத்திலுள்ள சோளிங்கர் என்னுமிடத்தில் ஒருவர் மீது தெய்வத்தை வரவழைப்பதற்காக உருமியடிப் போர் பாடும் பாட்டு; a song used by drummer to invoke god is once person normally practical is sholingar a town is Vellor district.

*[வரவழைப்பு + பாட்டு.]*

**வரவாயு** *vara-vāyu,* பெ.(n.) வரள்வாயு பார்க்க; see *varaḷ-vāyu.*

*[வரள் + வாயு → வரவாயு]*

**Skt.** வாயு

**வரவிடு-தல்** *vara-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) அனுப்புதல்; to send. *"இவையெல்லாம் வரவிடுதற்கு முன்னேயும்" (திவ். பெரியாழ். 1, 3, 2, வ்யா.)*

*[வா→ வர்→ வர + விடு-.]*

**வரவிருத்தன்** *vara-viruttaṉ,* பெ.(n.) உயிர்களுக்கு மேலான பரவாழ்வளிக்கும் சிவபிரான் (யாழ்.அக.); *Śivaṉ.*

வரவினம் *varavinam,* பெ.(n.) ஒருவருக்குப் பல்வேறு இடங்களிலிருந்து வரும் பண வரவு; heads of receipts. *இந்த வாரம் வரவினங்கள் அதிகமாக இருக்கும் (இ.வ.). வரவினம் அதிகமானால் உறவினம் ஓடிவரும் (உ.வ.).*

*[வரவு + இனம்.]*

வரவு[1] *varavu,* பெ.(n.) 1. ஒளி நீர்; semen. 2. வரகு; koda millet-paspalum scrobiculatum (சா.அக.).

வரவு[2] *varavu,* பெ.(n.) 1. வருகை; coming, advent. *"செலவினும் வரவினும்" (தொல். சொல். 28). "யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே" (குறுந்.75:5). நும்மொடு வரவு தான் அயரவும்" (நற்.12:9). "படிகாரிரெம் வரவு சொல்லுதிர்" (கம்பரா.பள்ளிபடை.1).* 2. வருவாய்; income, receipts, revenue. *"வரவு காணாத செலவு" (குமரே. சத. 29). வரவுக்குத் தகுந்த செலவு; மாப்பிள்ளைக்குத் தகுந்த மஞ்சம் (பழ.). வரவுக்கு மீறிய செலவு, வறுமைக்கு வழி வகுக்கும் (இ.வ.).* 3. வரலாறு; history. *"இதன்வர விதுவென் றிருந்தெய்வ முரைப்ப" (மணிமே. 6, 205). 'வரவெமர் மறந்தன ரதுநீ" (புறநா. 149 : 4).* 4. தோற்றம்; origin. *"போக்கொடு வரவு மின்றி" (காசிக. மணிக. 2).* 5. பாதை, வழி; path, way, track. *"குன்றத்தாற் கூடல் வரவு" (பரிபா. 8, 28).* 6. வணங்குகை; worship. *"புரையின்று மாற்றாளை மாற்றாள் வரவு" (பரிபா. 20.73).*

க. பரவு

*[வா→ வர்→ வரு → வரவு]*

வரவு[3] *varavu,* பெ.(n.) 'வா' என்னும் வினைப்பொருண்மை குறித்த பெயர்ச்சொல்; a verbal noun of the verb vā.

*[வா→ வர்→ வரு → வரவு]*

வரவுசெலவு *varavu-šelavu,* பெ.(n.) 1. வருவாயும் செலவும்; income and expenditure. 2. பேரேட்டிற் செய்யும் பதிவு; ledger entry. *ஒவ்வொரு தொழிற்சாலையும் வரவுசெலவை நாள்தோறும் பேரேட்டிற் பதிவு செய்ய வேண்டும் (இ.வ.).*

*[வரவு + செலவு.]*

வரவுசெலவுஅறிக்கை *varavu-šelavu-arikkai,* பெ.(n.) வரவு செலவுத் திட்டத்தைக் கொண்டுள்ள அறிக்கை; budget report. *பாராளுமன்றத்தில் நிதியமைச்சர் இவ்வாண்டிற்கான வரவு செலவு அறிக்கையைப் படித்தார் (இக்.வ.).*

*[வரவு + செலவு + அறிக்கை]*

வரவுசெலவுக்கணக்கு *varavu-šelavu-k-kaṇakku,* பெ.(n.) குடும்பச் செலவு குறித்த கணக்கு; family budget. *வீட்டின் வரவு செலவுக் கணக்கை ஒழுங்காக எழுதி வைத்தால், குடும்பத்தை முன்னேற்ற முடியும் (இ.வ.).*

*[வரவு + செலவு + கணக்கு]*

வரவுசெலவுத்திட்டம் *varavu-šelavu-t-tiṭṭam,* பெ.(n.) நாட்டுக்கு அல்லது நிறுவனத்துக்கு எதிர்வரும் ஆண்டிற் கிடைக்கும் வருமானம், வருமானத்திற்கான வழிகள், செலவுகள், செலவுக்கான ஒதுக்கீடு முதலியவை குறிக்கப்பட்ட திட்டம்; budget. *திறமையான வரவுசெலவுத் திட்டமே, நாட்டின் வளர்ச்சிக்கு வழிகோலும் (இக்.வ.).*

*[வரவு + செலவு + திட்டம்]*

வரவுதாழ்-த்தல் *varavu-tāḻ-,* 4 செ.கு.வி. (v.i.) காலந்தாழ்த்தி வருதல், நேரங்கடந்து வருதல்; to arrive belatedly, to be delayed. *"உணவு வரவு தாழ்த்தது" (கம்பரா. பிரமாத்திர.88).*

[வரவு + தாழ்-.]

வரவுமுறை *varavu-muṟai,* பெ.(n.) வருவாய் (இ.வ); source of income.

மறுவ. ஆகாறு.

[வரவு + முறை]

வரவுவை-த்தல் *varavu-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) செலுத்திய தொகை குறித்து எழுதி வைத்தல்; to credit in account, to enter the receipt of money, as on a pro-note or document. *நான் கொடுத்த பணத்தை வரவுவைத்துக் கொண்டு, மீதம் எவ்வளவு பணம் தரவேண்டுமென்று சொல்லுங்கள் (உ.வ.).*

[வரவு + வை-.]

வரவெக்கை *vara-vekkai,* பெ.(n.) அடைப்பான் எனும் கால்நடை நோய்; anthrax, a cattle-disease.

[வரள் + வெக்கை]

வரவெதிர்-தல் *vara-v-edir-,* 2 செ. குன்றாவி. (v.t.) 1. வரவு எதிர்நோக்கி யிருத்தல்; to wait for, to wait the arrival of. 2. எதிர்கொண்டு அழைத்தல்; to welcome in person.

[வரவு + எதிர்-.]

வரவெதிர்ந்திருத்தல் *vara-v-edirnd-iruttal,* பெ.(n.) தலைவி தன் னிருப்பிடத்துத் தலைவன் வருகையை எதிர்பார்த் திருத்தலைக் கூறும் புறத்துறை (சங்.அக.); a theme in which the heroine is described as awaiting the arrival of the hero at her abode.

[வரவெதிர் + இரு-.]

வரவேல்[1]-தல் [வரவேற்றல்] *varavēl-,* 9 செ.குன்றாவி.(v.t.) எதிர்கொண்டழைத்தல்; to welcome in person. *புகழ்மிக்க தலைவர்களை எதிர் கொண்டழைப்பதும் விருந்தினரை வரவேற்பதும், மதிப்புரவுக்குரியது.*

[வரவு → வரவேல்]

வரவேல்[2]-தல் [வரவேற்றல்] *varavēl-,* 9 செ.குன்றாவி.(v.t.) 1. இன்முகத்தானு மின்சொலானும் வருக வருக வென்றழைத்து மகிழ்ச்சியை வெளிப்படுத்துதல்; to welcome the invitees. *பள்ளி ஆண்டு விழாவிற்கு வருகைபுரிந்த அனைவரையும், தலைமை யாசிரியர் மகிழ்ச்சியுடன் வரவேற்றார் (உ.வ.).* 2. திட்டம், ஒப்பந்தம் முதலியவற்றை ஆதரவு தந்து ஏற்றல்; to accept. *அரசின் நலத் திட்டத்தை எங்கள் கன்னை (கட்சி) முழுமனதுடன் வரவேற்கிறது (இக்.வ.). அமைதி உடன்பாட்டை உலக நாடுகள் அனைத்தும் வரவேற்கும் என்று நம்புகிறோம் (உ.வ.).* 3. ஒப்பந்தப்புள்ளி முதலியவற்றை அனுப்புமாறு வேண்டுதல்; to be invited, in tender notice etc. *எங்கள் நிறுவனத்திற்குத் தேவைப்படும் பொருள்கள் வழங்க ஒப்பந்தப் புள்ளிகள் வரவேற்கப்படுகின்றன (இ.வ., உ.வ.).*

[வா→வர்→வரு→வரவு + ஏல்.]

வரவேற்பவை *varavēṟpavai,* பெ.(n.) வரவேற்புக்கழகம் (தற்கா.) பார்க்க; see *varavēṟpu-k-kaḻagam.*

[வரவேற்பு + அவை. அமை→அவை.]

வரவேற்பறை *varavēṟpaṟai,* பெ.(n.) விருந்தினர் அமர்வதற்கான அறை; reception room. *அந்த வீட்டின் வரவேற்பறை மிகவும் எளிமையாக இருந்தது. அமைச்சரின் வரவேற்பறையில் நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தேன்.*

வரவேற்பு *varavēṟpu,* பெ.(n.) எதிர் கொண்டழைக்கை (தற்கா.); reception, welcome, to receive in person.

*[வரவு + ஏல்→ ஏற்பு]*

வரவேற்புக்கழகம் *varavēṟpu-k-kaḻagam,* பெ.(n.) பெரியவரை உசாவி அழைப்பதற்காக அமைக்கப்பட்ட அவை (தற்கா.); reception committee for V.I.Ps. or great personality.

*[வரவேற்பு + கல் +அகம் – கல்லகம் →கழகம்]*

வரவேற்புச்சபை *varavēṟpu-c-cabai,* பெ.(n.) வரவேற்பவை பார்க்க; see *varavēṟpavai.*

*[வரவேற்பு + சபை]*

த. அவை > **Skt.** sabha

வரவேற்புப்பத்திரம் *varavēṟpu-p-pattiram,* பெ.(n.) வரவேற்புமடல் பார்க்க; see *varavēṟpu-maḍal.*

*[வரவேற்பு + பத்திரம்]*

வரவேற்புமடல்[1] *varavēṟpu-maḍal,* பெ.(n.) பெரியோரை இனிது மொழிந்து உசாவியெதிர்கொண்டழைக்கும் அழைப்பிதழ்; welcome address in written form. *விழாவிற்கு வருகைபுரிந்த அமைச்சருக்குக் கட்சியினர் வரவேற்புமடல் படித்து வழங்கினர் (இ.வ.)*

*[வரவேற்பு + மடல்]*

வரவேற்புமடல்[2] *varavēṟpu-maḍal,* பெ.(n.) விழாவிற்கு வருகை செய்துள்ள விருந்தினர்தம் சிறப்பியல்பைப் புகழ்ந்து கூறும் இன்தீங்கிளவியம் பொதிந்த தாள்; scripted welcome address to be read out. *விழாவிற்கு வந்திருந்த தொழிலதிபருக்குத் தொழிலாளர்களால் வரவேற்பு மடல் அளிக்கப்பட்டது (உ.வ.).*

*[வரவேற்பு + மடல்]*

வரவேற்புரை *varavēṟpurai,* பெ.(n.) விழாவிற்கு வந்துள்ளோரை வரவேற்று நிகழ்த்தும் உரை; welcome address.

*[வரவேற்பு + உரை]*

வரவை *varavai,* பெ.(n.) **1.** வயற்றாக்கு (வின்.); plot of paddy-field, compartment in a paddy-field bounded by ridges. **2.** வரி; tax. *"இவ்வூரிற் பலவரவை யோடுங் கூட்டவும்" (தெ.இ.கல். தொ. 3, 211).*

*[வரவு → வரவை]*

வரவோலை *varavōlai,* பெ.(n.) அழைப்புக் கடிதம்; letter of invitation. *"வரவேண்டு மென்று வரவோலை அனுப்புவித்தார்".*

*[வரவு + ஓலை.]*

வரள்(ளு)–தல் *varaḷ(ḷu)-,* **12** செ.கு.வி. (v.i.) **1.** வற்றுதல் (பிங்.); to dry up, to evaporate. **2.** உடம்பு மெலிதல் (வின்.); to become lean or emaciated.

*[வறள் → வரள்–]*

வரள்வாயு *varaḷ-vāyu,* பெ.(n.) குடலைச் சுருட்டிக் கொள்ளும் நோய்வகை (இ.வ.); a disease of the colon.

*[வரள் + வாயு]*

வரளம் *varaḷam,* பெ.(n.) பிரமி; a prostate plant - *Grabiola moniera* (சா.அக.).

**வரளாரை** *varaḷārai,* பெ.(n.) ஆரைவகை (யாழ்.அக.); a species of aquatic cryptogamous plant (சா.அக.).

*[வரள் + ஆரை]*

**வரளி** *varaḷi,* பெ.(n.) விறட்டி; dung cakes (சா.அக.).

**வரற்கியம்**[1] *vararkiyam,* பெ.(n.) சிற்றரத்தை (சங்.அக.); lesser galangal.

**வரற்கியம்**[2] *vararkiyam,* பெ.(n.) கோரைக் கிழங்கு; fragrant root tuber of a grass-*Cyperus pertenuis* (சா.அக.).

**வரற்சுண்டி** *varar-cuṇḍi,* பெ.(n.) நெட்டிக் கொடி; a kind of medicinal creeper.

*[வரள் + சுண்டி]*

**வரற்சூரி** *varar-cūri,* பெ.(n.) நத்தைச்சூரி; a kind of herbal plant.

*[வரள் + சூரி]*

**வரற்பூலா** *varar-pūlā,* பெ.(n.) நீர்ப்பூலா; black honey shrub-*Phyllanthus multiflora.*

**வரற்பூலிகா** *varar-pūligā,* பெ.(n.) முள்ளி; a kind of plant (சா.அக.).

**வரற்றியம்** *vararriyam,* பெ.(n.) கோரைக் கிழங்கு; fragrant root tuber of a grass-*Cyperus pertenuis* (சா.அக.).

**வரன்** *varaṉ,* பெ.(n.) 1. சிறந்தவன்; superior, great person. *"தமிழ் முனிவரன்" (தக்கயாகப். 40).* 2. கடவுள்; God. 3. நான்முகன்; Brahman. 4. சீவன்முத்தருள் நான்முகன் எனப்படும் வகையினன்; person belonging to the birama-varar class of *jīvaṉ-muttar. "தேகசஞ்சார நிமித்தந்தானா வுன்னுவோன் வரன்" (கைவல்ய. தத்துவ. 99).* 5. தமையன் (நிகண்டு, 218); elder brother. 6. மணமகன்; bridegroom. *"தன் மகளுக்கொத்த வரனைத் தேடுவான்" (உத்தரா. இரவாணன் பிற.2).* 7. கணவன் (சூடா.); husband.

*[பரம்→வரம்→வரன். ம→ன = போலி.]*

வரன் = மேலானவன், சிறந்தவன், மேலான வீட்டுலகம். பரநிலையை ஆதனுக்கு வழங்கும் அருள் வடிவான இறைவன்.

**வரன்முறை** *varaṉ-muṟai,* பெ.(n.) 1. மரபின் வந்த முறை; tradition. *"பாடினை யருமறை வரன் முறையால்" (தேவா. 80, 3).* 2. வரலாறு; history. 3. மூலம்; origin, source. *"அதன் வரன்முறை சொன்னான்" (பிரமோத். 18,1).* 4. ஊழ் (யாழ்.அக.); fate, destiny. 5. பெரியோரிடங் காட்டும் மதிப்புறவு அல்லது பணிவு; courtesy, respect or regard to superiors. *"வரன்முறை செய்திட" (கம்பரா. திருவவ. 64).*

*[வா → வரன் + முறை - வரன்முறை]*

**வரன்று-தல்** *varaṉṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வரடுதல்; to scrape, to gather up, to collect. *"மணிவரன்றி வீழுமருவி" (நாலடி, 369).*

M. varanṭuka.

**வராக்கடன்** *varā-k-kaḍaṉ,* பெ.(n.) செல வெழுத வேண்டிய கடன் (கொ.வ.); bad debt.

*[வா + ஆ + கடன்]*

வராக்கு *varākku,* பெ.(n.) கொம்மட்டி (சங்.அக.); a small water-melon (சா.அக.).

வராகக்கிரந்தி *varāga-k-kirandi,* பெ.(n.) தொட்டால் வாடி; a sensitive plant.

*[வராகம் + கிரந்தி]*

வராககர்ணி[1] *varāga-karṇi,* பெ.(n.) அகவ கந்தி; a plant, horse root-withania somneifera (சா.அக.).

வராககர்ணி[2] *varāga-garṇi,* பெ.(n.) அமுக்கிராச் செடி; Indian winter cherry.

வராககற்பம் *varāga-kaṟpam,* பெ.(n.) ஓர் வகை கற்பம்; a kind of medicinal preparation taken in for longevity (சா.அக.).

வராகப்பூடு *varāga-p-pūḍu,* பெ.(n.) மூக்குத்திப் பூடு; Indian lantina.

*[வராகம் + பூடு]*

வராகபணம் *varāga-paṇam,* பெ.(n.) நாணய வகை; a coin.

*[வராகம் + பணம்]*

வராகபுடம் *varāga-puḍam,* பெ.(n.) பன்றியின் உயரமளவுபோடும் புடம், 1 முழ சதுரமும், 1 முழ ஆழமுமான பள்ளத்தில் காட்டு முட்டையை மேலும், கீழுமாக நிரப்பி மருந்திட்டுப் போடும் புடம்; process of calcination by burning the medicine, in a heap of cow dung cakes as high as a big (about 50 dung cakes) when plastered crucible is roasted in a pit the dimension of which are one cubit in every side (சா.அக.).

*[வராகம் + புடம்]*

வராகம் *varāgam,* பெ.(n.) நிலப்பனை; ground palm-curculigo orchioides (சா.அக.).

வராகமிகிரர் *varāgamigirar,* பெ.(n.) ஆறாம் நூற்றாண்டிலிருந்தவரும் கணித நூலில் வல்லவரும் வானசாத்திர நூல்கள் பல இயற்றியவருமான ஆசிரியர்; an ancient astronomer and mathematician of many treatises, 6th cent.

வராகன் *varāgaṉ,* பெ.(n.) 1. பன்றி வடிவங் கொண்ட திருமால் (பிங்.); Tirumāl in His boar-incarnation. 2. மூன்றரை உருபா மதிப்புள்ளதும் பன்றிமுத்திரை கொண்டதுமான ஒருவகைப் பொன்நாணயம் (அரு.நி.); *pagōḍa-* a gold coin = 3 1/2 rupees, as bearing the image of a boar. 3. மூக்குத்திக் கொடி (சங்.அக.); pointed-leaved hogweed.

*[வராகம் → வராகன்]*

வராகன்பூடு *varāgaṉ-pūḍu,* பெ.(n.) மூக்குத்திக் கொடி (மலை.); pointed-leaved hogweed.

*[வராகன்[1] + பூடு]*

வராகன்பூண்டு[1] *varāgaṉ-pūṇḍu,* பெ.(n.) கூத்தன்குதம்பை; pointed - leaved hog weed.

*[வராகன் + பூண்டு]*

ஒருகா. மூக்கொற்றி

வராகன்பூண்டு[2] *varāgaṉ-pūṇḍu,* பெ.(n.) வராகன்பூடு (மலை.) பார்க்க; see *varāgaṉ-pūḍu.*

*[வராகன்[1] + பூண்டு]*

**வராகனாட்டம்** *varāgaṉ-āṭṭam,* பெ.(n.) சீட்டாட்டத்தில் ஒரு வகை; a kind of card-playing.

*[வராகன் + ஆட்டம்]*

**வராகி** *varāgi,* பெ.(n.) 1. வாராகி (சூடா.); *vārāgi,* a divine energy. 2. சிறு குறட்டை (மலை.); a slight snoring. 3. சிற்றரத்தை (மலை.); lesser galangal. 4. நிலப்பனை (தைலவ.); moosly or weevil root. 5. கோரை (நாமதீப. 348); sedge. 6. சிறுகுறிஞ்சா (சங்.அக.); a climber. 7. வராகபுடம், 20 அல்லது 50 எருவிட்டுப் போடப்படும் புடம் (மூ.அ.); calcining metals with 20 or 50 cakes of cowdung. *"வராகிமேலிட்டுத் தூமஞ் செய்தனன்" (கந்தபு. மார்க். 135).*

*[வராகம் → வராகி]*

**வராகிக்கிழங்கு** *varāgi-k-kiḻaṅgu,* பெ. (n.) பன்றி மோத்தைக் கிழங்கு; root of trapa bispinosa (சா.அக.).

**வராகிசாரணை** *varāgi-šaraṇai,* பெ.(n.) சத்திசாரணை; a prostate plant, *Trianthema decandra* (சா.அக.).

**வராகிப்புகை** *varāgi-p-pugai,* பெ.(n.) மருந்துப்புகை வகை (யாழ்.அக.); a medicinal fumigation.

*[வராகி + புகை]*

**வராகிமூலம்** *varāgi-mūlam,* பெ.(n.) நிலப் பனங்கிழங்கு; ground palm, curculigo orchioides (சா.அக.).

**வராகியரத்தை** *varāgiyarattai,* பெ.(n.) சிற்றரத்தை; lesser galangal-*Alpinia galanga (minor)* (சா.அக.).

**வராகிவேய்** *varāgi-vēy,* பெ.(n.) வராகி வேல் (சங்.அக.) பார்க்க; see *varāgi-vēl.*

*[வராகம் + வேய்]*

**வராகிவேல்** *varāgi-vēl,* பெ.(n.) முட் பன்றியின் முள் (யாழ்.அக.); quill of porcupine (சா.அக.).

*[வராகம் + வே;ல]*

**வராகு** *varāgu,* பெ.(n.) வராகன் பார்க்க; see *varāgaṉ* (சா.அக.).

**வராங்கம்**[1] *varāṅgam,* பெ.(n.) வானவரின் உடல்; the body of a celestial being.

**வராங்கம்**[2] *varāṅgam,* பெ.(n.) இலவங்கப் பட்டை (மூ.அ.); cinnamon bark.

**வராங்கம்**[3] *varāṉgam,* பெ.(n.) 1. தலை (இலக்.அக.); head. 2. அழகியவுருவம்; elegant form. 3. உடல் (யாழ்.அக.); body. 4. யானை (யாழ்.அக.); elephant. 5. இலவங்கம் (நாமதீப.283); clove.

**வராங்கனை** *varāṅganai,* பெ.(n.) 1. மிகச் சிறந்தவள் (சங்.அக.); excellent woman. 2. கூந்தற் பனை; talipot palm.

**வராங்கி**[1] *varāṅgi,* பெ.(n.) 1. அழகுள்ளவள்; beautiful woman. 2. மஞ்சள் (மூ.அ.); turmeric.

**வராங்கி**[2] *varāṅgi,* பெ.(n.) பெருங்குமிழ்; flowering tree- *Gmellina arbonea* (சா.அக.).

**வராசனம்** *varāšaṉam,* பெ.(n.) 1. முட் செவ்வந்தி வகை (சங்.அக.); china rose. 2. நீர் முதலியன வைக்கும் பாத்திரம் (யாழ்.அக.); vessel or container for keeping water etc.

வராசனன் *varāšaṉaṉ,* பெ.(n.) 1. வாயிற் காப்போன்; door-keeper, watchman. 2. கள்ளக்காதலன்; paramour.

வராசான் *varāšāṉ,* பெ.(n.) கருப்பூரவகை (சிலப்.14, 109, உரை); a kind of camphor.

வராட்டி *varāṭṭi,* பெ.(n.) வறட்டி (சங்.அக.); cake of dried cowdung.

*[வரள் → வராட்டி]*

வராடகம் *varāḍagam,* பெ.(n.) 1. தாமரையின் காய் (சூடா.); seed-pod of the lotus. 2. பலகறை (சூடா.); cowry. 3. கயிறு (யாழ். அக.); rope.

வராடபேதி *varāḍa-bēdi,* பெ.(n.) எருவாய்க் கழிவு; discharge of foeces from the anus.

வராடம் *varāḍam,* பெ.(n.) வராடி[1] (வின்.) பார்க்க; see *varāḍi.*

வராடி[1] *varāḍi,* பெ.(n.) பலகறை (சூடா.); cowry.

வராடி[2] *varāḍi,* பெ.(n.) பாலையாழ்த் திறத்தொன்று (பிங்.); a melody-type of the *pālai* tracts.

வராடி[3] *varāḍi,* பெ.(n.) முரட்டுநூற் சீலை (வின்.); saree of coarse yarn.

*[வராசி → வராடி]*

வராடிகம் *varāḍigam,* பெ.(n.) வெண் மிளகாய்; white chilly (சா.அக.).

வராடிகை *varāḍigai,* பெ.(n.) பலகறை (சூடா.); cowry. *"வராடிகைத் திரள் பரப்பி" (பிரபோத.15, 61).*

*[வராடிகம் → வராடிகை]*

வராண்டம் *varāṇḍam,* பெ.(n.) தாமரையின் காய் (பிங்.); seed-pod of the lotus.

வராணசி *varāṇaši,* பெ.(n.) காசி (யாழ். அக.); Benares.

வராணி *varāṇi,* பெ.(n.) பாலை; a tree- *Mimusops hexandrus* (சா.அக.).

வராத்தம் *varāttam,* பெ.(n.) 1. கட்டளை (யாழ்.அக.); order, commandment. 2. வரிவாங்குகை (யாழ்.அக.); levying taxes. 3. கொடுக்கல் வாங்கல்; money dealings.

வராமுள்ளி *varā-muḷḷi,* பெ.(n.) மஞ்சள் நிற பூவையுடைய ஓர் பூடு; a throny plant with yellow flowers (சா.அக.).

வராரோகன் *varārōgaṉ,* பெ.(n.) யானைப் பாகன் (யாழ்.அக.); elephant-driver.

*[வராரோகம் → வராரோகன்]*

வரால் *varāl,* பெ.(n.) 1. சாம்பற் பச்சை நிறமும் நான்கடிவரை வளர்ச்சியுமுடைய மீன்வகை; murrel, a fish, greyish green, attaining 4 feet in length. *"நுண்ணாரற் பருவரால்" (புறநா.18:9). "கடுங்கண் வராஅற் பெருந்தடி மிளிர்வையொடு" (நற்.60-4).* 2. வெளிறின கருநிறமும் மூன்றடி வளர்ச்சியுமுடைய மீன்வகை; black-murrel, a fish, dark greyish or blackish, attaining 3 ft. in length. *"மோட்டிரு வராஅற்".* 3. நன்னீர் மீன் வகை (யாழ்.அக.); a fresh water fish.

த. வரால் > Skt. murala E. murrel.

**Ma.** varāl, virāl, vrāl; ḻoḍ. baremi-nī.

*[வரி→வரால்.]*

ஏரி, குளங்களிற் காணப்படும் மீன் வகைகளுள் ஒன்று. சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலி, வரால் என்னும் சொற்கு, கெண்டையென்று பொருள் குறித்துள்ளதை பாவாணர் தவறென்று சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலியின் சீர்கேடு என்னும் நூலுள் (பக்.19) குறித்துள்ளது காண்க. கெண்டை வேறு, வரால் வேறு.

வரால் நன்னீர்ப் பகுதியிற் காணப்படும் மீன். வரி = நீளம். வரால் = குறவையினும் நீண்டிருப்பது. முர் (சூழ், பின்னு, பிணை) என்பது மூலாமாயிருக்கலாமென்று கருதுவது சரியன்று (மா.வி.அ.).



வரால்வலை *varāl-valai*, பெ.(n.) வரால் மீனை வலைத்துப் பிடிக்க உதவும் வலை (நாஞ்.); a fresh water fishing net to catch *varāl*.

*[வரால் + வலை]*

வராலகம்[1] *varālagam*, பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

வராலகம்[2] *varālagam*, பெ.(n.) இலவங்கம் (தைலவ.); clove.

வராலடிப்பான் *varāl-aḍippaṉ*, பெ.(n.) ஒரு வகைப் பறவை; ospery.

*[வரால் + அடிப்பான்]*



வராலம் *varālam*, பெ.(n.) கிராம்பு (நாமதீப. 319); clove.

*[வரால் → வராலம்]*

வராலி *varāli*, பெ.(n.) பிரமி யெனும் பூடு (மலை.); pirami, a kind of prostrate herb.

*[விராலி → வராலி]*

வராலிகம் *varāligam*, பெ.(n.) ஈரல்; liver (சா.அக.).

*[வராலி → வராலிகம்]*

வராலுகம் *varālugam*, பெ.(n.) சங்கங்குப்பி; smooth volkameria - *Cledendron in creme* (சா.அக.).

*[வராலிகம் → வராலுகம்]*

வராவி *varāvi*, பெ.(n.) வராலி பார்க்க; see *varāli* (சா.அக.).

வராளம் *varāḷam*, பெ.(n.) பாம்பு (யாழ்.அக.); snake, serpent.

வராளி[1] *varāḷi*, பெ.(n.) 1. நிலவன் (சந்திரன்) (யாழ்.அக.); moon. 2. பண் வகையுளொன்று (இசை.); a specific melody-type. 3. யாழ் வகை (பரத. ஒழிபி.15); a kind of lute.

*[வராலி → வராளி]*

வராளி[2] *varāḷi,*பெ.(n.) மண்ணீரல் (சங்.அக.); spleen.

வராளிகை *varāḷigai,*பெ.(n.) கொற்றவை (யாழ்.அக.); Durgai.

*[வராளம் → வராளி → வராளிகை]*

வராற்பகடு *varāṟ-pagaḍu,*பெ.(n.) ஆண் வரால்; male murrel. *"அரில் வலை கீண்டு நிமிர்ந்தெழுவன வராற்பகடு" (திருக்காளத். பு. 2, 16).*

*[வரால் + பகடு]*

வராற்போத்து *varāṟ-pōttu,* பெ.(n.) இளவரால்; young murrel. *"பகுவாய் வராஅற்......... போத்து" (அகநா.36).*

*[வரால் + போத்து]*

வராணி[1] *varāṇi,*பெ.(n.) 1. பாலை; wedge-leaved ape flower. 2. வராணி பார்க்க; see *varāṇi* (சா.அக.).

வராணி[2] *varāṇi,*பெ.(n.) செடிவகை யுளொன்று (மலை.); a kind of plant.

வராணிகம் *varāṇigam,*பெ.(n.) பனை மரம்; palmyra tree (சா.அக.).

வரி[1] *vari,*பெ.(n.) 1. கோடு; line, as on shells, streaks, as in timber, stripe. *"நுண்ணிய வரியொடு திரண்டு..... கண்" (சீவக. 1702). "கொடுவரி யிரும்புலி தயங்க நெடுவரை" (அகநா.27:1).* வரிவிழுந்த புலியைப் பார்த்து *நரியும் கொள்ளிக் கட்டையை எடுத்துச் சுட்டுக் கொண்டதாம் (பழ.).* 2. தொய்யில் முதலிய வரைவு; ornamental marks on the breast. *"மணிவரி தைஇயும்" (கலித்.76).* 3. கை வரைவு (பிங்.); lines at the joint of fingers or on the palm of hand. 4. ஒழுங்கு நிரை; course, as of bricks, line, as of writing; series, as of letters, orderly line, as of ducks in flight; row. *"குருகி னெடு வரி பொறப்ப" (பதிற்றுப்.83, 2).* 5. எழுத்து (நாமதீப.673); letter. 6. புள்ளி; dot. *"வரிநுதற் பொருதொழி நாகம்" (நெடுநல். 117). "வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை" (நற். 7:7).* 7. தேமல்; spreading spots on the skin. *"பொன்னவி ரேய்க்கு மவ்வரி" (கலித்.22).* 8. வண்டு (திவா.); beetle. 9. கடல் (பிங்.); sea. 10. கட்டு; tie, bandage. *"வரிச்சிலையாற் றந்த வளம்" (பு.வெ.1,16).* 11. பல தெருக்கூடுமிடம் (பிங்.); junction of streets. 12. வழி (உரி.நி.); way, path. 13. கடைக்கழக நூல்களுள் ஒன்று (இறை.1, பக். 5); a poem of the last šaṅgam. 14. உயர்ச்சி (பிங்.); loftiness, laudability, praise. 15. நீளம் (சூடா.); length.

**Ma.** vara, varaccal, varekka, varayuka, variyuka; **Ka.** bare, bari, barepa, barapa, braha, barā; **Kod.** bare; **Ko.** varv; **To.** parē; **Kui.** vrīsa; **Pa.** vare; **Tu.** baripuri, bare, bareta.

*[வள் → வர் → வரி]*

வரி[2] *vari,*பெ.(n.) 1. இசை (நாமதீப. 678); music. 2. இசைப்பாட்டு, வரிப்பாட்டு; tune, melody. *"வரிநவில் கொள்கை" (சிலப்.13:38).* 3. வரிக்கூத்து (சிலப்.3:14); a kind of masquerade dance.

*[வள் → வர் → வரி]*

வரி = வளைந்த கோடு, எழுத்து (தேவ.13, பக்.38).

வரி பற்றியும், வரிப்பாட்டுக் குறித்தும் சிலப்பதிகார அரும்பதவுரைகாரர் கூறுவது வருமாறு:–

"வரியாவது, முகமுடைவரி, முகமில்வரி, படைப்புவரியென மூன்று வகைப்படும். வரிப் பாட்டுக்கு முகமாக நிற்றலின் முகமெனப்படும். முகமில்வரியாவது முகமொழிந்து ஏனைய உறுப்புக்களான் வருவது. படைப்பு வரியாவது, எல்லாவுறுப்பும் ஒன்றானும், பலவானும், வெள்ளையானும், ஆசிரியத்தானும், கொச்சகம் பெற்றும், பெறாதும், வேறு வேறாகி வருவது" (சிலம்பு.7:19, அரும்.).

அடியார்க்கு நல்லார் கூறுவது :–

அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழிற்றன்மையும் தோன்ற நடித்தல்". அவ்வரி எட்டு வகைப்படும். 1. கண்கூடு வரி; 2. காண்வரி; 3. உள்வரி; 4. புறவரி; 5. கிளர்வரி; 6. தேர்ச்சிவரி; 7. காட்சிவரி; 8. எழுத்துக்கோள் வரி (அடி.சிலம்பு.3:13).

**வரி[3]–தல்** *vari-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. எழுதுதல் (பிங்.); to write, pen. 2. சித்திர மெழுதுதல்; to paint, to draw. *"வல்லோன் றைஇய வரிவனப்புற்ற வல்லிப்பாவை"* (புறநா. *33).* 3. பூசுதல்; to smear, daub. 4. மூடுதல்; to cover, close. *"புண்ணை மறைய வரிந்து" (திவ். திருவாய். 5, 1, 5).* 5. கட்டுதல்; to bind, tie, fasten. *"வரிந்த கச்சையன்" (சூளா. சீய. 11).*

க., தெ. வ்ராயு (vrāyu) vrāyincu, rāyu, rāsu; Ma. variyuka.

*[வள்→வர்→வரி=எழுதுதல், பூசுதல், ஓவிய மெழுதுதல் (வ.வ.2, பக்.80)]*

வரிதல், எழுதுதல், கட்டுதல் : வரி என்பது கோடு. வரிதல் என்பது எழுதுதல் பொருளது. "என்ன வரிகிறாய்?" 'வரிந்து தள்ளுகிறாயே எதை?' என்பவற்றில் வரிதல் எழுதுதல் பொருளாதல் அறிக. வரிந்து கட்டு, வரி என்றால் இறுக்கிக் கட்டுதல் என்னும் பொருளதே. 'கட்டாயம் என்பது கண்டிப்பாகச் செலுத்த வேண்டிய வரி என்பதே. அதில் இருந்தே, தீரா நிலையில் நிறைவேற்றியாக வேண்டிய செயல், 'கட்டாயம்' எனப்பட்டதாம். அரசிறை எனப்படும், வரியைத் தவிர்த்தலாகாது என்பதை விளக்குவது கட்டாயச் சொல்லாம் (வ.சொ.அகராதி).

**வரி[4]–த்தல்** *vari-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. எழுதுதல்; to write, pen. *"வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை" (சீவக. 2532).* 2. சித்திரமெழுதல்; to draw, to paint. 3. பூசுதல் (சூடா.); to smear, daub. 4. கட்டுதல்; to bind, tie, fasten; to fix, as the reepers of a tiled roof. *"வரிக்குங் காட்சியிலா வறிவே" (ஞானவா. மாவலி.48).* 5. மொய்த்தல் (யாழ்.அக.); to swarm round. 6. கோலஞ்செய்தல்; to adorn, decorate, decks. *"புன்னை யணிமலர் துறைதொறும் வரிக்கும்" (ஐங்குறு. 117).*

*[வள்→வர்→வரி–.]*

வரி = எழுதுதல், சித்திரமெழுதுதல், பூசுதல், கோலஞ் செய்தல் முதலான பொருண்மைகளை யுள்ளடக்கிய 'வள்' என்னும், வளைவுக்கருத்து மூலவேரினின்று முகிழ்த்த சொல்லாகும்.

**வரி[5]–த்தல்** *vari-,* 4 செ.கு.வி.(v.i.) ஓடுதல்; to run; to flow. *"தலைவா யோவிறந்து வரிக்கும்" (மலைபடு. 475).*

*[வர்→வரி–.]*

**வரி⁶–த்தல்** *vari-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. தெரிவு செய்தல், தேர்ந்து கொள்ளுதல்; to choose, select. 2. அமர்த்துதல், பங்கீடு செய்தல்; to appoint, assign, allocate. *"கடவுள் வேதியர்களை வரித்து" (திருவிளை. இந்திரன்முடி. 26).* 3. அழைத்தல்; to invite. *"உலோபா முத்திரை தன்னொடும் வரித்து" (திருவிளை. அருச். 2).*

*[வர்→வரு→வரி–.]*

**வரி⁷** *vari,*பெ.(n.) குடிமக்கள் செலுத்தும் திறை (பிங்.), அங்கம், திறை; impost, tax, toll, duty, contribution.

மறுவ. ஆயம், இறை, கடன், கடமை, கறை, காணிக்கை, தீர்வை, பகுதி, பாட்டம், பூட்சி, பேறு, மகமை, மகன்மை.

**Te., Ma.**, vari; **Ko.** vary.

அரசு மக்களின் பொதுநலன் குறித்துச் செய்யும் செலவை ஈடுகட்டுதற் பொருட்டுப் பெறும் கட்டணம்.

வரி → வரிதல்.

வரி = கட்டு; வரிதல் = கட்டுதல்; வரித்தல் = இழுத்துக் கட்டுதல். வரி→வரிச்சு = கோடுபோல் நீண்ட கட்டு வரிச்சல். வரிச்சல் = கட்டல். வரி, வரிச்சு, வரிச்சல், வரிதல், வரித்தல் முதலான சொற்கள், கட்டு, கட்டல், கட்டுதல் பொருளில், இலக்கிய வழக்கிலும், மக்கள் வழக்கிலும், பண்டைக்காலந்தொட்டே வழக்கூன்றியுள்ளன. எடுத்துக்காட்டுகள் வருமாறு :–

*1. "வரிச்சிலையாற் றந்த வளம்" (பு.வெ. 1, 16), 2. "வரிக்குங் காட்சியிலா வறிவே" (ஞானவா. மாவலி.); 3. "வரிந்த கச்சையன்", 4. "வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே" (கம்பரா. சித்திர.46).*

பண்டைக்காலத்தில் அரசுக்குக் குடிமக்கள் செலுத்த வேண்டிய ஆயத்தைத் தவசமாகக் கட்டிவைத்தல்.

இன்றும் வரிகட்டுதல், பணங்கட்டுதல், தண்டங்கட்டுதல், போன்ற சொல்லாட்சிகள் பண்டைய நிலையை, எடுத்துக்காட்டும் பாங்கில் அமைந்துள்ளமை அறிக.

**வரி⁸** *vari,*பெ.(n.) 1. தீ (அக.நி.); fire. 2. நிறம்; colour. *"வரியணிசுடர் வான்பொய்கை" (பட்டினப். 38).* 3. அழகு; beauty. *"வரிவளை" (பு.வெ. 11,12).* 4. வடிவு, அமைவு (அக.நி.); form, shape.

*[அரி⁷ → வரி]*

**வரி⁹** *vari,*பெ.(n.) 1. நெல் (பிங்.); paddy. *"எடுத்துவரி முறத்தினிலிட்டு" (தனிப்பா. i, 354, 41).* 2. அதிமதுரம்; licorice. 3. கருவிழியில் ஏற்படும் ஒரு நோய்; a disease of the black of the eye. 4. தேமல்; a kind of skin diseases. 5. நெல்லரிசி; paddy rice (சா.அக.).

**Te., Ma.** vari; **E., Pa.** verci; **Go.** wanji.

*[வல்→வள்→வர்→வரி–.]*

த. வரி > **Skt.** vriri.

வரி = வரிச்சம்பா, வரியுள்ள நெல், நெல் (பிங்.) மா.வி.அ. "of doubtful derivation" என்று குறித்தலால், வடமொழியில் மூலமில்லை என்பதறிக (வ.வ.2,பக்.84).

**வரிக்கடுக்காய்** *vari-k-kaḍukkāy,*பெ. (n.) கடுக்காய் வகை (பதார்த்த. 973); species of chebulic myrobalan.

*[வரி + கடுக்காய்]*

கடு + காய் = கடுக்காய். கடுக்காய் = கசப்பு, கார்ப்புச் சுவையுள்ள காய்.

ஒருகா. வரிக்காய்

தமிழ் மருத்துவரால் திரிபலை என்றழைக்கப்பட்ட நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய் ஆகிய முக்காய்களுள் ஒன்று. வரிக்கடுக்காயின் வடிநீர் (கருக்குநீர்) ஊட்டச்சத்து நிறைந்தது. எழில் குன்றா இளமைக்கு எஞ்ஞான்றும் உறுதுணை புரிவது.

**வரிக்கடை[1]** *vari-k-kaḍai,* பெ.(n.) நெல்; paddy (சா.அக.).

*[வரி + கடை]*

குல் → குள் → குடு → கடு → கடை = ஒன்று இன்னொன்றை முட்டும் முனையுள்ள நெல் பக்கம் நோக்கிய முனையுள்ள வரி நெல். கடை இருவகை: 1. பக்கம் நோக்கியது, 2. மேனோக்கியது.

**வரிக்கடை[2]** *vari-k-kaḍai,* பெ.(n.) வண்டு (திவா.); beetle.

*[வரி[1] + கடை]*

**வரிக்கண்ணி** *vari-k-kaṇṇi,* பெ.(n.) பொன்னாங் கண்ணி; a prostate plant good for eye disease-Illecebrum sessile (சா.அக.).

*[வரி + கண்ணி]*

கண் + இ – கண்ணி.

ஒருகா. கள் (இளமை)→கண் →கண்ணி.

பொன்னாங்கண்ணி அரும்பிக் கொழுந்தாகத் தளிர்த்தலாற் பெற்ற பெயர்க் கண்ணி என முடியும். செடிகளும், மரங்களும், சொற்கருத்தால் கண்ணி என்றே குறிக்கப்பட்டுள்ளன.

**வரிக்கண்ணோரா** *varikka-ṇ-ṇōrā,* பெ.(n.) செஞ்சாம்பனிறமும் மஞ்சட் புள்ளிகளு முடைய கடல்மீன்வகை; a sea fish, dark greyish-brown, covered with light orange spots.

*[வரிக்கண் + ஒரா]*



**வரிக்கத்தலை[1]** *vari-k-kattalai,* பெ.(n.) குருங்கத்தலை; a sea, fish foot long with broad black strips upper jaw over lapping the lower not good for eating-seiaena maculata (சா.அக.).

*[வரி + கத்தலை]*

**வரிக்கத்தலை[2]** *vari-k-kattalai,* பெ.(n.) வரிக்கற்றலை பார்க்க; see *vari-k-karralai.*

*[வரி + கற்றளை → கத்தலை]*

**வரிக்கத்து** *vari-k-kattu,* பெ.(n.) வருக்கத்து பார்க்க; see *varu-k-kattu.*

*[வரி + கத்து]*

**வரிக்கயிறு[1]** *vari-k-kayiṟu,* பெ.(n.) வலிக்கயிறு பார்க்க; see *vali-k-kayiṟu.*

*[வரி + கயிறு]*

கள் = கட்டுதல், பிணைத்தல். கள்→கய்→ கயில்→கயிறு.

**வரிக்கயிறு²** *vari-k-kayiṟu,* பெ.(n.) வடக் கயிறு (இ.வ.); cable, long and thick rope.

*[வரி¹ + கயிறு]*

நன்கு முறுக்கேற்றிய திரட்சியான உருண்ட கயிறு.

**வரிக்கரப்பான்** *vari-k-karappāṉ,* பெ.(n.) வரிவரியாகத் தோன்றும் கரப்பான் வகை (சீவரட்.); a kind of eruption, a cutaneous disease.

*[வரி¹ + கரப்பான்]*

கரப்பு→கரப்பான். கரப்பு = சொறி, சுரசுரப்பு. குழந்தைகளுக்கு உண்டாகும் இருபத்தொன்பது கரப்பான் (சொறிநோய்). நோயுளொன்று.

**வரிக்கருடன்சம்பா** *varikkaruḍaṉ-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of cambā paddy.

*[வரி + கருடன்சம்பா]*

**வரிக்கல்** *varikkal,* பெ.(n.) நீளமாக அடித்துத் திருத்திய கல்; long piece of stone chiselled into required shape. *கோயில் மண்டபத்துக்கு வரிக்கல் கொண்டு வருகிறார்கள்.*

*[வரி + கல். குல்→கல்.]*

வரிக்கல் = உளியால் அடித்துத் திருத்தி வடிவமைத்த செப்பமான கல்.

**வரிக்கலவாய்** *vari-k-kalavāy,* பெ.(n.) மஞ்சட்கபில நிறங்கொண்ட கடல்மீன் வகை; a sea-fish, yellowish brown.

*[வரி + கலவாய்]*

ஆறுவகைக் கலவாய் மீன்வகையுளொன்று.

**வரிக்கற்றலை** *vari-k-kaṟṟalai,* பெ.(n.) 1. செந்நிறங்கொண்ட கடல்மீன் வகை; a kind of reddish sea-fish. 2. பளபளத்த சாம்பல் நிறமும், ஓரடி வளர்ச்சியுமுள்ள கடல் மீன்வகை; a sea-fish, silvery grey, attaining one feet in length.

*[வரி¹ + கற்றலை]*

கல் + தலை = கற்றலை. கற்றலை மீன் வகையு ளொன்று.



**வரிக்கற்றாழை** *vari-k-kaṟṟāḻai,* பெ.(n.) கற்றாழை வகையுளொன்று; a kind of aloe.

*[வரி + கற்றாழை]*

கல் + தாழை → கற்றாழை.

பதினேழுவகைக் கற்றாழையுளொன்று.

**வரிக்கற்றை** *vari-k-kaṟṟai,* பெ.(n.) கூரை வேய்தற்குதவும் புற்கற்றை முதலியன; bundle of straw etc, suitable for roofing. *"வரிக்கற்றை இடுமடத்து" (S.I.I. VI, 29).*

*[வரி + கற்றை]*

குல் = திரட்சிக் கருத்துவேர். குல்→கல்→ கற்றை. கூரைவேய்தற் பொருட்டுத் திரட்சியாகக் கட்டப் பெற்ற புற்கற்றை.

**வரிக்காம்பு** *vari-k-kāmbu,* பெ.(n.) அறுத்த புகையிலைச் செடியின் அடுக்கு; pile of harvested tobacco plants.

மறுவ. அடிக்கட்டை

*[வரி + காம்பு]*

கம்பு→காம்பு. அறுத்த புகையிலைச் செடியின் அடித்தூர்ப் பகுதி.

**வரிக்காய்** *vari-k-kāy,* பெ.(n.) கடுக்காய் வகையுளொன்று; a species of chebulic myrobalan.

*[வரி + காய்]*

கள்→காள்→காழ்→காய் = முதிர்ந்ததும், பழுக்காத நிலையிலுள்ளதுமான வரிக்கடுக்காய். இவ்வரிக் கடுக்காயின் கருக்கு நீரினை (வடிநீரினை) நாள்தோறும், மாலை வேளையிற் பருகினால், கோலூன்றி நடக்கும் கிழவனும், இளமைப் பொலிவை அடைவான் என்று தமிழ் மருத்துவர் கூறுவர்.

**வரிக்காரம்** *vari-k-kāram,* பெ.(n.) வரிகாரம் பார்க்க; see *vari-kāram.*

*[வரி + காரம்]*

**வரிக்காரல்** *vari-k-kāral,* பெ.(n.) வெண்மை நிறமும் எட்டு விரலம் (அங்குல) வளர்ச்சியுமுடைய கடல்மீன் வகை; a sea-fish, silvery, attaining 8 inch in length.

*[வரி¹ + காரல்.]*

காரல் மீன் வகையு ளொன்று.



**வரிக்காரன்¹** *vari-k-kāran,* பெ.(n.) தேர் முதலியவற்றை இழுக்கும் வடக்கயிறு திரிப்போன்; cable-twister, rope-maker.

*[வரி¹ + காரன்]*

**வரிக்காரன்²** *vari-k-kāran,* பெ.(n.) 1. வரி வாங்குபவன்; tax- collector. 2. வரி கொடுப்பவன் (இ.வ.); one who pays tax, contribution etc.

*[வரி⁵ + காரன். காரன் = வினைமுதற் பொருளில் வந்த ஆண்பாற் பெயரீறு.]*

**வரிக்காரை¹** *vari-k-kārai,* பெ.(n.) மீன் வகையுளொன்று; a kind of fish-Atropus.

*[வரி + காரை. கால்→கார்→காரை = நீண்ட முள் கொண்ட காறல் மீன்.]*

**வரிக்காரை²** *vari-k-kārai,* பெ.(n.) மல்லிகை வகை; devine jasmine - *Randia uligionsa* (சா.அக.).

*[வரி + காரை]*

**வரிக்காளான்** *vari-k-kāḷān,* பெ.(n.) காளான் வகையுளொன்று; a kind of mushroom (சா.அக.).

*[வரி + காள்→காளான்]*

சதுப்பு நிலங்களில் மழைக்குப்பின் தோன்றும் பச்சையமில்லாத செடிவகை. முதற்கண் கரிய நிறத்தைக் குறித்த காள் என்னும் வேரடி, கால்போக்கில் அனைத்துக் காளான் இனத்தையும் குறிக்கலாயிற்று.

**வரிக்கிரந்தி** *vari-k-kirandi,* பெ.(n.) சதையைப் பற்றிய புண்கட்டி; a kind of tumour of the muscles (சா.அக.).

*[வரி + கிரந்தி]*

**Skt.** granthi > த. கிரந்தி.

**வரிக்கீச்சான்** *vari-k-kiccāṉ,* பெ.(n.) மஞ்சட் பழுப்பு வண்ணத்ததும், பத்து விரலம் (அங்குல) வளர்ச்சியுமுடைய கடல்மீன்வகை; a sea-fish, yellowish brown, attaining 10 in. length.

*[வரி [1] + கீச்சு →கீச்சான்]*

**வரிக்குக்கூறுசெய்வார்** *varikku-k-kūṟu-ceyvār,* பெ.(n.) வரிக்கூறுசெய்வார் (தெ. இ.கல்.தொ.3, 211) பார்க்க; see *vari-k-kūṟu-šeyvār.*

*[வரி [5] + கூறுசெய்–.]*

**வரிக்குதிரை[1]** *vari-k-kudirai,* பெ.(n.) 1. பல வண்ணக் வரி நிறை குதிரை (வின்.); piebald horse. 2. சேணம் வேண்டாக் குதிரை (வின்.); horse not requiring a saddle.

*[வரி [1] + குதி→குதிரை]*

**வரிக்குதிரை[2]** *vari-k-kudirai,* பெ.(n.) உடலில் கறுப்பு, வெள்ளைப் பட்டைகளை உடைய குதிரைக் குடும்பத்தைச் சார்ந்த விலங்கு; zebra.

*[வரி + குதிரை]*



**வரிக்குப்பச்சை** *varikku-p-paccai,* பெ.(n.) பச்சைக்கல் வகை (யாழ்.அக.); a variety of green stone.

*[வரி → வரிசைக்கு + பச்சை → வரிசைக்குப் பச்சை → வரிக்குப்பச்சை]*

**வரிக்கும்மட்டி[1]** *vari-k-kummaṭṭi,* பெ.(n.) பேய்க்கொம்மட்டி (பதார்த்த. 576); colocynth (சா.அக.).

*[வரி + கொம்மட்டி →கும்மட்டி]*

**வரிக்கும்மட்டி[2]** *vari-k-kummaṭṭi,* பெ.(n.) ஆற்றுத்தும்மட்டி; a creeper-*Cucumis colocynthis* (சா.அக.).

மறுவ. பேய்த்தும்மட்டி, ஆற்றுக்கொடி.

ஆற்றுப்படுகைகளில் – மணற்பாங்கிற் காணக்கூடும் இச்செடிப் பகுதிகளனைத்தும் (சமூலம்) கசப்பானது.

**வரிக்குமரி** *vari-k-kumari,* பெ.(n.) வரிக் கற்றாழை பார்க்க; see *vari-k-kaṟṟāḻai* (சா.அக.).

மறுவ. குருவரிக்கற்றாழை

*[வரி + குமரி. குமரி = கற்றாழை.]*

**வரிக்குமரியன்மை** *vari-k-kumari-yaṉmai,* பெ.(n.) வரிக்கற்றாழஞ் சோறு; the pulp of striped aloe (சா.அக.).

**வரிக்குயில்** *vari-k-kuyil,* பெ.(n.) குயில் வகை (வின்.); banded koel.

*[வரி + குயில்]*

குயில், குக்கூவெனக் கூவுவதும், துயிலெழுப்பது மிதனியல்புபோலும்!



**வரிக்குறவான்** *vari-k-kuṟavāṉ,* பெ.(n.) முதுகுத் துடுப்பில் அரம் போன்ற முட்களமையப் பெற்றதும், கருப்பு, மஞ்சள் வரிகளுடையதுமான கடல் மீன். இது நச்சுத் தன்மையுடையதாகையால், உண்ணுவதற்குப் பயன்படாது; a kind of sea fish with yellow and black strips and sharp fins on the back; poisonous not fit for consumption (சா.அக.).

*[வரி +குறவான். வரி = கோடு. குறவான் = மீன்.]*

**வரிக்குறைப்பு** *vari-k-kuṟaippu,* பெ.(n.) வரியைத் தளர்த்துகை; tax-relaxation. *ஆடம்பரப் பொருட்களுக்கான வரிக்குறைப்பு இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் இடம் பெறவில்லை (உ.வ.).*

*[வரி + குறைப்பு.]*

**வரிக்கூத்து** *vari-k-kūttu,* பெ.(n.) கூத்து வகை (வின்.); a kind of masquerade dance.

*[வரி + குல்→குத்து→கூத்து.]*

பலவகைகளில் கால் குத்திட்டு பொய்த் தோற்றங்காட்டி, ஆடும் கூத்து.

எண்வகை வரிக்கூத்து சிலப்பதிகாரத்திற் குறிக்கப்பட்டுள்ளது.

**வரிக்கூறிடுவார்** *vari-k-kūṟiḍuvār,* பெ.(n.) வரிக்கூறுசெய்வார் (கல்.) பார்க்க; see *vari-k-kūṟu-ceyvār.*

*[வரி + குல்→கூல்→கூறு + இடுவார்.]*

பதிவு செய்த வரித்தொகைகளைப் பங்கிடுபவர் அல்லது பாகுபாடு செய்பவர்.

**வரிக்கூறுசெய்-தல்** *vari-k-kūṟu-šey-,* 1 செ.குன்றாவி.(v.t.) வரித் தொகையில், இன்னின்ன செலவிற்கு இவ்வள விவ்வளவென்று கூறுபடுத்தி ஒதுக்குதல்; to divide and allot tax for various expenditure (of departments).

*[வரிக்கூறு + செய்-.]*

**வரிக்கூறுசெய்வார்** *vari-k-kūṟu-šeyvār,* பெ.(n.) அரசிறை அதிகாரிகள் (கல்.); revenue officers in ancient times.

*[வரி⁵ + கூறுசெய்-.]*

தத்தமக்குரிய ஊர்களில் அரசிறை தண்டுபவர். வரவு செலவு வரிப் பொத்தகத்திலுள்ள கணக்குப்படி ஆய்வுசெய்து, மொத்தப் பணத்தை, ஒவ்வொரு வாரியத்திற்கும் ஒதுக்கீடு (Budget) செய்வார்.

**வரிக்கை** *vari-k-kai,* பெ.(n.) பலாவகை (நாமதீப. 294); a species of jack-tree.

*[வருக்கை [1] → வரிக்கை]*

**வரிக்கொம்மட்டி** *vari-k-kommaṭṭi,* பெ.(n.) பேய்க்கொம்மட்டி (M.M.372); colocynth.

மறுவ. பேய்த்தும்மட்டி

*[வரி + கும்மட்டி → கொம்மட்டி]*

ஆற்றுப்படுகைகளில் விளையும் இப் பூண்டின் செடிப் பகுதிகளனைத்தும் (சமூலம்), கசப்பாக விருக்கும். இதன் தூள் கண்ணிலும் மூக்கிலும் படநேரின், நெடியேறும்.

**வரிக்கொன்றை** *vari-k-konṟai,* பெ.(n.) சிவப்புகொன்றை வகை (இலத்.); Red Indian laburnum.

மறுவ. வரிக்கொன்னை.

*[வரி + கொல் → கொன்று → கொன்றை (கொத்து).]*

முப்பத்திரண்டு கொன்றையுள் செங் கொன்றை வகையைச் சார்ந்தது.

**வரிக்கோரை** *vari-k-kōrai,* பெ.(n.) கோரை வகையுளொன்று; striped sedge.

*[வரி + கோல் → கோர் → கோரை.]*

**வரிக்கோலம்** *vari-k-kōlam,* பெ.(n.) தொய்யிலின் பத்திக்கீற்று (சிலப். 5, 226, அரும்.); ornamental figures or lines drawn on the breast.

*[வள் → வர் → வரி + கோலம்.]*

குல் → கொல் (புதியது, அழகியது) → கோல் + அம்.

மகளிர், தோள், மார்பகங்களில் வரிக்கோலம் எழுதும் சந்தனக் குழம்பு; மகளிர் மார்பகங்களில் சந்தனக் குழம்பால் எழுதுங் கோலம், வரிக்கோலமாகும்.

**வரிக்கோலா** *vari-k-kōlā,* பெ.(n.) கருநீலப் பச்சை நிறமுடையதும் 18 விரல வளர்ச்சி யுடையதுமான கடல் மீன்வகை; a species of sea fish, violet green, attaining 18 in. in length.

*[வரி + கோலன் → கோலா.]*

வரிக்கோலா நீண்டும், ஒல்லியாயும், தலை கூர்மையாகவும், எலும்பு பச்சை நிறமாயும் இருக்கும்.



**வரிக்கோவை** *vari -k-kōvai,* பெ.(n.) கண்டிதாத்திரிக்கொடி. இக் கீரை நோய் செய்யுங் கோழையை வேரறுக்கும்; striped caper; the leaves of which is good for curing phlegm humour (சா.அக.).

*[வரி + கோவை]*

**வரிக்கோழிமீன்** *vari-k-kōḻi-mīṉ,* பெ.(n.) கடலிலிருக்கும், வரியையுடைய ஓர் வகைக் கோழி மீன்; a kind of sea fish (சா.அக.).

*[வரி + கோழி + மீன்]*

ஆழ்கடலுள் வாழும், இம்மீன் 18 விரலம் (அங்குல) நீளமுள்ளது. கருநீல வண்ணமுடையது; கடலடிக் கல்லில் உள்ள சிறிய மீன்களை இரையாகக் கொள்ளும்.



**வரிகயிறு** *vari-kayiṟu,* பெ.(n.) வண்டியிலேற்றப் பெற்ற பொதி மூட்டையைப் பிணைத்துக் கட்டுங் கயிறு (வின்.); rope used for fastening or tightening the load in a cart.

*[வரி + கயிறு]*

கள் → கய் → கயில் → கயிறு = கட்டுதல், பிணைத்தல். கயிறு = மூட்டையைப் பிணைத்துக் கட்டப் பயன்படும் கட்டுக்கயிறு.

த. கயிறு > E. Coir.

**வரிகரப்பன்** *vari-karappaṉ,* பெ.(n.) குழந்தைகளின் உடம்பிற், காணும் சொறிபுண் வகை; a children's ecazema marked by stripes or long fissures (சா.அக.).

*[வரி + கரப்பு → கரப்பன்.]*

கரப்பு = சொறி, சுரசுரப்பு. மூன்று அல்லது நான்கு திங்கள் முதல், மூன்றகவை வரையுள்ள குழந்தைகட்கு ஏற்படும் இருபத்தொன்பது வகைக் கரப்பான், சொறி புண்வகைகளுள் ஒன்று.

**வரிகற்றாழை** *vari-kaṟṟāḻai,* பெ.(n.) கோடு விழுந்த கற்றாழை, இவை ஓர் கற்பக மூலி; a kind of aloe with strips, it is a rejuvenation drug (சா.அக.).

மறுவ. குருவரிக்கற்றாழை

*[வரி + கற்றாழை]*

பதினேழு வகைக் கற்றாழைகளும் இஃதும் ஒன்று. இவ்வரிக் கற்றாழையின் மடல்கள் வெளிர் பச்சை வண்ணத்தன; இம்மடல்களின் நுனியில் கருஞ்சிவப்பு முட்கள் காணப்படும்.

**வரிகாரம்** *vari-kāram,* பெ.(n.) 1. வெங்காரம் (சங்.அக.); borax. 2. படிக்காரம்; alum. 3. பொரிகாரம்; borax.

*[வரி + கரி → கார் → காரம்.]*

காரம் = வெண்காரம், சீனிக்காரம்.

கரி என்னும் வினையடியால் பிறந்த தொழிற்பெயர். கரி + அம் – காரம். முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர். (ஒ.நோ.) படி + அம் – பாடம். தவி + அம் – தாவம். கரித்தல் = மிகுதல், காரம் = மிகுதி. கரி என்பது கடி என்னும் உரிச்சொல்லின் திரிபு. ட → ர = போலி. படவர் → பரவர்; முகடி → முகரி. உப்புக்கரிக்கும், உப்புக் கடுக்கும் என்பன ஒரு பொருள்பற்றிய உலக வழக்கு.

காரம் என்னும் சொல், முதற்கண் மிகுதியை உணர்த்திப் பின்பு உறைப்பு மிகுதியாயுள்ள வரிகாரப் பொருட்களான வெங்காரம் படிக்காரம் போன்றவற்றைக் குறித்ததென்க.

**வரிகோணியல்** *vari-kōṇiyal,* பெ.(n.) பொதி மாட்டின் இரு பக்கமும் சுமை யேற்றுவதற் கேதுவாகச் சேர்த்துத் தைத்த கோணி; double-bag, a pair of bags, with their mouths joined together, used in loading a pack-ox on either side.

*[வரி² + கோணியல்]*

**வரிகோலம்** *vari-kōlam*, பெ.(n.) தொய்யிலின் பத்திக்கீற்று (சிலப்.5, 226, அரும்.); ornamental figures or lines drawn on the breast. *"அவரெழுது வரிகோலம்" (சிலப். 5, 226).*

*[வள்→ வர்→ வரி +கோலம். குல் → கொல் (புதியது, அழகியது) கோல் + அம்.]*

**வரிச்சங்கு** *vari-c-caṅgu*, பெ.(n.) எலும்பு; bone (சா.அக.).

*[வரி + சக்கு→ சங்கு.]*

சங்கு போல், உள் வளைவுள்ள எலும்பு. சங்கு போன்ற ஊட்டி என்னும் மிடற்றுறுப்பு.

**வரிச்சந்தி** *vari-c-candi*, பெ.(n.) பல தெருக்கள் கூடுமிடம் (பிங்.); place where streets meet, cross-roads, a junction.

*[வரி' + அந்து→சந்து→சந்தி']*

அந்துதல் = கூடுதல். அந்து→அந்தி = கூடியது, கூடிய நேரம் அல்லது இடம். அந்து→சந்து = முதனிலைத் தொழிற்பெயர்.

வரி+சந்து=பல தெரு அல்லது பலவழி, கூடுமிடம்.

**வரிச்சம்பா** *vari-c-cambā*, பெ.(n.) சித்திரை மாதத்தில் விதைத்து, ஐந்து மாதங்களிற் பயிராவதும், நெல் மணிகளின் மீது வரியுடையதுமான சம்பா நெல்வகை; a kind of striped paddy, sown in cittirai and maturing in five months.

*[வரி' + சம்பா.]*

சம்→சம்பா = இங்கு குறித்துள்ள சம்பா, கோடைக் காலத்தே பயிராகும் நெல் வகையைச் சார்ந்தது; அறுபது சம்பா வகையுள், வரிச்சம்பாவும் ஒன்று. இச்சம்பா நெல் வகைகள், தமிழ் நாட்டின் விளைபொருள் வளத்திற்கு ஏற்றதொரு எடுத்துக்காட்டாய்த் திகழ்வன எனலாம். தமிழ் நாட்டிலன்றி வேறெங்கும் விளைவதில்லை;

தமிழ் நாட்டுள்ளும், தென்னாட்டிலேயே வரிச்சம்பா, ஆவாரம்பூச் சம்பா, சீரகச் சம்பா, குதிரைவாலிச்சம்பா, சிறு மணிச்சம்பா முதலான நெல் வகைகள் பயிராகின்றன. பழங்காலத்திற் பயிராகி வந்த பல்வகை நென்மணிகளும், பொன்னும் மணியும், பவழமும் இன்றும் தென்றமிழ் நாட்டில் விளைந்து வருவது கண்கூடு (சொல்.க.பக்.69, 70).

**வரிச்சல்** *variccal*, பெ.(n.) வரிச்சு (வின்.) பார்க்க; see *variccu*.

*[வரி→ வரிச்சு →வரிச்சல் = கோடுபோல் நிண்ட கட்டுவரிச்சல்.]*

**வரிச்சல்பட்டை** *variccal-paṭṭai*, பெ.(n.) நீண்ட மரப்பட்டை வகை; a kind of lengthy wooden roof.

*[வரிச்சல் + பட்டை]*

**வரிச்சலாணி** *variccalāṇi*, பெ.(n.) வரிச்சலிற் பதிக்கும் ஆணி (வின்.); nails for fastening reepers.

*[வரிச்சல் + ஆழ்→ஆழி→ஆணி.]*

ஒரு பொருளில் அல்லது வரிச்சற்கட்டையில் பதிக்குங்கால், ஆழ்ந்து பதியுந் தன்மை ஆணிக்கே யுரியது.

**வரிச்சலுகை** *variccalugai*, பெ.(n.) 1. வரி அல்லது தீர்வையைக் குறைக்கை; tax-concession or relief. *உடல் ஊனமுற்றவர் களுக்கு அரசு வரிச்சலுகை வழங்கியுள்ளது.* 2. வரிக்குறைப்பு பார்க்க; see *vari-k-kuraippu*.

*[வரி + சலுகை. சலிகை→சலுகை குறைக்கை, தளர்த்துகை.]*

**வரிச்சாணி** *variccāṇi,* பெ.(n.) வரிச்சலாணி (வின்.) பார்க்க; see *variccal-āṇi.*

*[வடி→வரி→வரிச்சு + ஆணி]*

**வரிச்சி** *varicci,* பெ.(n.) நீண்டிருக்கும் குச்சு; lengthy stick.

*[வரி→வரிச்சு→வரிச்சி.]*

**வரிச்சு** *variccu,* பெ.(n.) கோடு போல் நீண்ட கட்டுவரிச்சல்; reeper of a roof; transverse lath. *"வரிச்சுமேல் விரிச்சு மூட்டியே" (கம்பரா. சித்திர. 46).*

*[வரி[3] → வரிச்சு]*

கோடுபோல் நீண்ட வடிவிலமைந்ததும், கட்டுவதற்குப் பயன்படுவதுமான நெடுங்குச்சு. நீளுதற் பொருண்மையில், அஃதாவது நீட்சிக் கருத்திற் கிளைத்த சொல்.

**வரிச்சுமை** *vari-c-cumai,* பெ.(n.) வரிப் பளு; tax-burden.

*[வரி + சுமை.]*

அளவிற்கதிகமான வரிவிதிப்பினால் ஏற்படும் துயர்.

**வரிச்சுருள்** *vari-c-curuḷ,* பெ.(n.) செவ்வட்டை (சங்.அக.); a kind of leech.

*[வரி[1] + சுருள். சுள்→சுரு→சுருள்.]*



**வரிசந்தி** *vari-candi,* பெ.(n.) வரிச்சந்தி (யாழ்.அக.) பார்க்க; see *vari-c-candi.*

*[வரி + சந்தி]*

**வரிசிலத்துக்கிடந்தபூமி** *vari-šilattu-k-kiḍanda-būmi,* பெ.(n.) வரி, சில்லாயம் முதலியன இல்லாமல் பயனின்றிக் கிடந்த பூமி; unassessed waste land. *"ஊர் மஞ்சிக்கமாய் வரிசிலத்துக் கிடந்த பூமி" (S.I.I. Vol.III.156).*

*[வரி + சிலத்து + கிடந்த + பூமி]*

**வரிசிறையாய்கிட-த்தல்** *vari-šiṟaiyāi-kiḍa-,* 4 செ.கு.வி.(v.i.) வரி பெறுவதற் கியலாமல் போதல்; tax to be uncollectable.

*[வரி + சிறை + ஆய் + கிட-.]*

**வரிசிறையாய்கிடந்தபூமி** *vari-šiṟai-yāi-kiḍanda-būmi,* பெ.(n.) வரி பெறுவதற்கின்றி பயிரிடப் பெறாமல் கிடந்த நிலம்; unassessed cultivable waste land. *"ஊர்மஞ்சிக்கமாய் வரிசிறையாக் கிடந்த பூமி" (S.I.I. Vol.III.156)*

*[வரி + சிறையாய் + கிடந்த + பூமி]*

**வரிசெலுத்து-தல்** *vari-šeluttu-,* 5 செ. குன்றாவி.(v.t.) வரிக்கட்டுதல்; to remit tax. *ஒழுங்காக வரிசெலுத்துபவர், நாட்டின் பொருளாதாரத்திற்கு உதவியவராவர் (இ.வ.).*

*[வரி + செலுத்து-.]*

**வரிசை[1]** *varišai,* பெ.(n.) விளைச்சலில் உழவனுக்குரிய பங்கு; cultivator's, share of produce. *'வரிசைக்கு உழும்' (நேமிநா. சொல். 17, உரை). வரிசையும் இல்லை அரிசியும் இல்லை (பழ.).*

*[வள்→வரி→வரிசை]*

வரிசை = நிலத்தில் உழுது பயிரிடுபவனுக்கு, நிலவுடைமையாளன் தரும் பங்கு.

வரிசை[2] *varišai,* பெ.(n.) 1. ஒழுங்கு, முறை (சூடா.); order, regularity. 2. ஒருவருக்குப் பின் ஒருவராக, அல்லது ஒன்றையடுத்து ஒன்றாக, அமையும் பாங்கு; line, row series. *வழிபாடு முடிந்ததும் மாணவர்கள் வரிசையாக நடந்து வகுப்புகளுக்குச் சென்றனர் (உ.வ.).* 3. நிரையொழுங்கு, வரை, ஒழுங்கு; line, row, series. *சாலை ஓரத்தில் வரிசை வரிசையாக மரங்கள் (இக்.வ.).* 4. வேலைமுறை (வின்.); turn in duty or work. 5. அரசர் முதலியோரால் பெறுஞ் சிறப்பு; distinctive mark of honour or privilege granted by a royal or other authority. *"பொற்பட்ட முன்னா வரிசைகள்" (திருவாலவா. 28, 93). "வரிசை யறிதலோ வரிதே பெரிதும்" (புறநா. 121 : 3).* 6. அரச சிறப்புச் சின்னம் (முத்திரை); insignia of royalty. *"சாமரை யக்க மாதியாம் வரிசையிற் கமைந்த..... தாங்கி" (கம்பரா. நிந்தனை).* 7. மதிப்புரவு; honour, esteem. *"பொற்புற வரிசை செய்வான்" (திருவிளை. இந்திரன் முடி.37).* 8. மேம்பாடு; excellence, eminence. *"ஆடுகொள் வரிசைக்கொப்பப் பாடுவல்" (புறநா. 53).* 9. தகுதி; merit, fitness. 10. மதிப்பு; worth. *"வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்" (சிறுபாண். 217).* 11. பாராட்டு; regard, facilitate. *வரிசைப் பெரும்பாட் டெல்லாம்" (கலித். 85).* 12. நல்லொழுக்கம்; good conduct. *அவன் வரிசையாய் நடந்து கொள்கிறான் (உ.வ.).* 13. நன்னிலை (வின்.); good circumstances. 14. சீராகச் செய்யும் நன்கொடை; present, especially to a daughter on marriage or other occasion. *"மாமி வரவிட்ட வரிசையென்று" (விறலிவிடு. 533).* 15. வீதம்; rate; proportion, apportionment.

**Ka.** varase, varise; **Te.** varusa.

*[வரி¹ → வரிசை=சீர் வகையிற் செய்யும் நன்கொடை.]*

வரிசை–ஒழுக்கம் : 'எறும்பு வரிசை' ஓர் ஒழுங்கு முறையாக உலகமெல்லாம் பரவியிருத்தல் அறியக் கூடியது; ஒன்றன்பின் ஒன்றாகச் செல்லும் எறும்பு வரிசை, 'எறும்பின் ஒழுக்கு' எனச் சங்க நாளிலேயே சொல்லப்பட்டது. ஆயினும் பொருள் தட்டுப்பாடு, போக்குவரவு நெருக்கடி, காட்சிச் சாலை ஆகியவற்றால் அண்மைக் காலத்தே தான் வழக்கில் கொணரப்பட்டதாம். வரிகை (கியூ) முறை (Q System) என்பது எறும்புச்சாரி முறையே. நீரொழுக்கு, எறும்பொழுக்கு, ஒழுக்கம் என்பவை யெல்லாம் ஒழுங்கு முறைப்பட்டதாம். 'உன் வரிசை தெரியுமே' என்பதில் வரிசை ஒழுக்கமாதல் அறிக. வரிசை கெட்டவன் ஒழுக்கமற்றவன் என்பதாம் (வழக்குச் சொல்.அகராதி).

வரிசை[3] *varišai,* பெ.(n.) சிற்றூர் வரிவகை; village dues or rent. *"இந்நிலம் இரண்டு மாவுக்கும் வரிசையாவது" (புதுக். கல். 613)* (I.M.P.Tp.293).

*[வள்→வரி + சை]*

வரிசை[4] *varišai,* பெ.(n.) திருமணத்தின் பொழுதோ அல்லது சிறப்புப் பண்டிகை நாட்களிலோ, மகளுக்கு பிறந்த வீட்டில் கொடுக்கும் பொருள்; gifts, dowry. *அவர்களுக்கு ஒரே பெண் என்பதால், ஏராளமான வரிசை வைத்திருக்கிறார்கள் (உ.வ.).*

*[வள்→வர்→வரி→வரிசை]*

வரிசை[5] *varišai,* பெ.(n.) உருபா நோட்டுக் குறியீடுகளோடு ஒன்றையடுத்து ஒன்றாக வரும் எண்களைக் கொண்டவற்றின் தொகுப்பு; series of currency notes, etc. *புதிதாகச் செலாவணிக்கு வரும் ஐந்து உருபா நோட்டுகள் இரு வரிசை கொண்டவை.*

*[வர்→வரி → வரிசை]*

**வரிசைக்காரன்** *variśai-k-kāraṉ,* பெ.(n.) 1. நன்னடத்தையுள்ளவன் (வின்.); well behaved man. 2. முறைக்காரன்; one whose turn of duty occurs.

*[வரிசை [1] + காரன்[1]. காரன் = வினைமுதற் பொருளில் வந்த ஆண்பாற் பெயரீறு.]*

**வரிசைக்கிரமம்** *variśai-k-kiramam,* பெ.(n.) ஒழுங்கு முறை; proper or regular order.

*[வரிசை [1] + கிரமம்]*

**Skt.** krama > த. கிரமம்.

**வரிசைக்குப்பச்சை** *variśai-k-ku-p-paccai,* பெ.(n.) நாகப்பச்சை (யாழ்.அக.); a variety of green stone.

*[வரிக்குப்பச்சை → வரிசைக்குப்பச்சை]*

**வரிசைக்குற்றி** *variśai-k-kuṟṟi,* பெ.(n.) செங்கற்சூளையில் வரிசையாக அடுக்கும் விறகுக்கட்டை (நாஞ்.); stumps of wood set in a row in a brick-kiln.

*[வரிசை[1] + குறு → குற்றி. குற்றி = மரக்கட்டை.]*

**வரிசைக்கெட்டவன்** *variśai-k-keṭṭavaṉ,* பெ.(n.) 1. ஒழுக்கமில்லாதவன்; a man lacking discipline. *வரிசை கெட்டவனுக்குத்தான் வாய்க்கொழுப்பு அதிகம் (இ.வ.).* 2. மதிப்பற்றவன்; un-worthy person. 3. தகுதியற்றவன்; de-merit person.

*[வரிசை + கெட்டவன்.]*

**வரிசைச்சுரம்** *variśai-c-curam,* பெ.(n.) இடைவிட்டு முறையாக வரும் காய்ச்சல்; intermittent fever.

மறுவ. முறைக்காய்ச்சல்.

*[வரிசை [1] + சுரம் [1]]*

**வரிசைசெய்-தல்** *variśai-śey-,*1 செ.கு.வி. (v.i.) 1. சீர், சிறப்பு, மதிப்பு (மரியாதை)ச் செய்தல் (வின்.); to salute or render civility or courtesy. 2. வரிசையெடு-, பார்க்க; see *variśai-y-eḍu-,*

*[வரிசை [1] + செய்-.]*

**வரிசைப்படிஇறு-த்தல்** *variśai-p-paḍi-iṟu-,*3 செ.கு.வி.(v.i.) தண்டுவதாய நில வரியினை முறையாகச் செலுத்துதல்; to pay regularly the land revenue, levied by Govt.

மறுவ. வரியிறுத்தல், வரிசெலுத்தல்.

*[வரிசைப்படி + இறுத்தல்.]*

**வரிசைப்பெயர்** *variśai-p-peyar,* பெ.(n.) அரசனின் கொடிவழியைக் குறிக்கும் பெயர்; genelogical name of the king.

*[வரிசை + பெயர்.]*

வேள், மன்னன், கோவன் (கோன், கோ), வேந்தன் என்பன வரிசைப் பெயராம். அரசர் போன்றே அரசனுடைய பட்டத்தரசிக்குக் கோப்பெருந்தேவி அல்லது, பெருங்கோப்பெண்டு என்பது, வரிசைப்பெயராக வழங்கப் பெற்றும், பெருமை குறிக்கப்பெற்றும், வந்துள்ளமை காண்க.

**வரிசைபார்-த்தல்** *variśai-pār-,*4 செ.கு.வி. (v.i.) ஒழுங்குமுறையை நுட்பமாய்க் கவனித்தல் (வின்.); to be punctilious, formal or ceremonious.

*[வரிசை [1] + பார்-.]*

**வரிசைமகளிர்** *variśai-magaḷir,* பெ.(n.) விறலியர்; a class of female songesters. *"அடுப்புத் தொழிற் குரியரல்லாத வரிசை மகளிரும்" (பதிற்றுப். 18, 6, உரை).*

*[வரிசை [1] + மகளிர்.]*

வரிசைமாதர் *varišai-mādar,* பெ.(n.) வரிசைமகளிர் பார்க்க; see *varišai-magaḷir.* *"வரிசை மாதர் சிலம்போசை" (திருவாலவா. திருநகரச். 6).*

*[வரிசை [1] + மாதர் [1]]*

வரிசையளி-த்தல் *varišai-y-aḷi-,* 4 செ.கு.வி. (v.i.) வரிசைசெய்-தல் பார்க்க; see *varišai-šey-.*

*[வரிசை + அளி-,]*

*"வையமுஞ் சிவிகையு மணிக்கா லமளியும்*
*உய்யா னத்தி னுறுதுணை மகிழ்ச்சியுஞ்*
*சாமரைக் கவரியுந் தமனிய வடைப்பையுங்*
*கூர்நுனை வாளுங் கோமகன் கொடுப்பப்*
*பெற்ற செல்வம் பிறழா வாழ்க்கைப்*
*பொற்றொடி மடந்தையர்"*

என்னும் சிலப்பதிகாரப் பகுதியால், அரசன் பரத்தையரொடு, உலாப்போதலும், அவர்க்கு அவன் பற்பல வரிசையளித்தலும், உண்டென்பது பெறப்படும்.

வரிசையறி-தல் *varišai-y-aṟi-,* 2 செ.கு.வி. (v.i.) ஒருவர்தம் தரம் அறிந்து சிறப்பித்தல்; to assertain one's ability or speciality. *"வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்" (சிறுபாண்.217).*

*[வரிசை + அறி-]*

ஒருவர் தம் புலமை அல்லது ஆற்றலறிந்து பரிசு நல்குதலே, வரிசையறிதலாம். அரசன் அல்லது ஆட்சித் தலைவன், கலைஞர், புலவர், பாவலர், அறிஞர், ஆசிரியர், ஆராய்ச்சியாளர், பணித் திறவோர் முதலியோர்க்குப் பரிசளிக்கும் போதும் பட்டம் வழங்கும் போதும், இன்னபிற சிறப்புச் செய்யும் போதும், அவரவர் தகுதியும் தரமுதலாகிய வரிசையறிந்து செய்தல் வேண்டும். பரிசளித்தல் எளிது; வரிசையறிந்தளித்தல் அரிது. வரிசையறிதல் பற்றிக் கபிலர் மலையமான் திருமுடிக்காரியை நோக்கிப் பாடிய பாடல் வருமாறு:-

"ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
ஈதல் எளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே"
(புறநா.121) (தேவ.13, பக்.25).

"புலவர் பெருமக்களின் புலமைத் திறத்தைப் பகுத்தறிந்து பரிசு நல்குதலே, வரிசையறிதல்" என்பார், மொழிஞாயிறு.

பண்டைப் பாவலர் அனைவரும், தமது நுண்மாண் நுழைபுலங்கெழுமிய, சீர்த்த மதியினால், மன்னர்தம் வாழ்வியல் நிகழ்வுகளை, இயற்கை நிகழ்வுடன் இணைத்துப் பாடுவதில் வல்லவர்களாகத் திகழ்ந்தனர். கடையெழு வள்ளல்களும், கழகக்கால வேந்தர்களும் புலவர், பாணர், விறலியர், போன்றோரைப் பாதுகாக்கும் அரண்களாகத் திகழ்ந்தனர்.

இத்தகு வள்ளல்களுள், மலையமான் திருமுடிக்காரி போன்றோர் பரிசிலாளர்க்கு என்னதேவை என்பதறியாது, கொடைமடம்பட்டு, அனைவருக்கும் சமமாகப் பரிசுப் பொருட்களை வாரி வழங்கினர்.

பண்டைக்காலப் புலவர் பெருமக்கள், ஐந்நூறு ஊர் முற்றூட்டும், நாற்பது நூறாயிரம் பொன்னும், ஒருநாட்டு முழுவருவாயும், நூறாயிரம் பொற்காசொடு, ஒன்பது துலாம் பொன்னும், நூறாயிரம் பொற்காசொடு ஒருநாடும், இன்னோரன்ன பிறவும், அரசர்களிடையே பரிசாகப் பெற்ற பான்மையினை பண்டைத்தமிழ் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. இவ்வாறு, பரிசிலாளரால் வைத்துப் பாதுகாக்கவியலாத வண்ணம் கொடைமடம்பட்டுப் பரிசு நல்குதல்

வரிசையறியாது கொடுத்த பரிசின் பாற்படும் என்று இலக்கியத் திறனாய்வாளர் இயம்புவர்.

மலையமான் திருமுடிக்காரி, தம்மைப் பாடிய புலவர்க்கு, வரிசையறியாது, கொடைமடம்பட்டுப் பரிசளித்த பாங்கினைக் கபிலரும், புறநானூறு 121ஆம் பாடலுள் குறித்துள்ளது காண்க.

வரிசையறிதல் குறித்து (1980) செந்தமிழ்ச் செல்வி மேத் திங்களிதழில், பண்டைத்தமிழ் மன்னர் வரிசையறியாது பரிசுகள் வழங்கிய செய்தியினைக் குறித்துள்ளது வருமாறு :–

பண்டைப் புலவரெல்லாரும் பாவலராகவே யிருந்தனர். அவர்க்குப் புலமையும் பாவன்மையும் ஒருங்கே யமைந்திருந்தன. இக் காலத்தில் ஒரு சிலரே பாவலர். அவருட் பெரும்பாலோர் புலவரல்லர். உணர்ச்சியேயூட்டும் பாவன்மையினும் அறிவு புகட்டும் புலமையே சாலச் சிறந்தது.

புலவர் புலத்துறைபற்றிப் பலவகையர்; ஆற்றல்பற்றிப் பல திறத்தர். இயலர், இசையர், நாடகர், கணியர், மருத்துவர் முதலியோர் பலவகையர்; நாவலர், பாவலர், விளக்கியர், தருக்கியர், நூல்வலர், உரைவலர், ஆய்வலர், கதைவலர், கட்டுரைவலர் முதலியோர் பலதிறத்தர். இவ் விரு சாராரும், மீண்டும், தலையர், இடையர், கடையர் என முந்நிலையர்.

"புலவர்தம், திறமும் நிலையும் அறிந்தே அவரவர்க்குத் தக்கவாறு பரிசளித்தல் வேண்டும். இங்ஙனம் பகுத்தறிதலையே வரிசையறிதல் என்றனர்" முன்னோர். வரிசையறிதல் பற்றிப் புறநானூற்றுப் பாடல்களில் காணப்படும் சான்றுகள் வருமாறு:–

*"பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி" (புறம்.6).*

*"வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை" (ஷெ.47).*

*"ஒருதிசை யொருவனை யள்ளி நாற்றிசைப்*
*பலரும் வருவர் பரிசின் மாக்கள்*
*வரிசை யறிதலோ அரிதே பெரிதும்*
*ஈதல் எளிதே மாவண் டோன்றல்*
*அதுநற் கறிந்தனை யாயின்*
*பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே" (ஷெ.121).*

*"வரிசை யறிதலின் தன்னுந் தூக்கி*
*இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்*
*பெருங்களிறு நல்கி யோனே" (ஷெ.140).*

*"வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்*
*பரிசிலர்க் கடையா வாயி லோயே" (ஷெ.20)*

என்பன புலவரின் வரிசையறிதலைக் குறிப்பனவாகும்.

**வரிசையார்** *variśaiyār,* பெ.(n.) அண்ணன் மனைவி; elder brother's wife.

*[வரிசை + வரிசையார்.]*

**வரிசையாளர்** *variśai-y-āḷar,* பெ.(n.) நிலத்தைப் பயிரிடுங்குடிகள்; cultivating tenants. *"தம் கீழ்க்குடிகளாகிய வரிசை யாளரை" (பதிற்றுப். 13, 24, உரை).*

மறுவ. பயிரிடுங்குடி, உழைப்பாளர்.

*[வரிசை² + ஆள் → ஆளர். ஆள் = உயர்திணை இருபாற் பொதுச்சொல்.]*

**வரிசையெடு-த்தல்** *variśai-y-eḍu-,* 4 செ.கு.வி.(v.i.) பலருமறியச் சீரெடுத்தல் (இ.வ.); to fetch presents ceremonially on marriage or other occasions, in the presence of relatives etc.

*[வரிசை¹ + எடு-.]*

வரிசைவாரம் *varišai-vāram,* பெ.(n.) விளைச்சலுக்கு ஏற்றபடி திட்டப்படுத்திய மேல்வாரம்; fixed rent calculated on the ascertained average yield of the land cultivated.

*[வரிசை [2] + வாரம்.]*

வாரம் = நிலத்தைப் பயிரிடும் வேளாண் குடிகள், நிலவுடைமையாளருக்குச் செலுத்தும் பங்கு.

வரிசோறு *vari-šōṟu,* பெ.(n.) வரிவகை (I.M.P.Sm.2); a tax.

*[வரி [5] + சோறு]*

வரிஞ்சையூர் *variñjai-y-ūr,* பெ.(n.) சோழ நாட்டின் திருக்கீழ்வேளூர்க்கு தெற்கில் அமைந்த ஓரூர்; a village situated south of *Tiruk-kīḻ-vēlūr* in *Chōḻa* country. *இவ்வூரில் முன்னொரு நாளில் சிவனடியார்களை இகழ்ந்து பேசியவர்க ளுடைய நாவினையரிந்த சத்தி நாயனார் என்பவர் வாழ்ந்திருந்தார் என்று பெரியபுராணம் புகலும்.*

வரிட்டம் *variṭṭam,* பெ.(n.) மிகச்சிறந்தது; that which is pre-eminent, excellence. *“வரிட்ட மங்கலம்” (தக்கயாகப். 74, உரை).*

*[பரிட்டம்→வரிட்டம்]*

வரிட்டன் *variṭṭaṉ,* பெ.(n.) 1. மேலானவன்; esteemed or distinguished, pre-eminent man. 2. (ஆதன்) சீவன் முத்தருள் பிரமவரிட்டர் வகையினன்; person belonging to *pirama-variṭṭar* class of *cīvaṉ-muttar* or attained or enlightened saint. *“சீவன் முத்தர் நால்வகையாவர்..... பிரமவித்து வரன் வரியான் வரிட்டன்” (கைவல். தத். 94).*

*[பரம்→வரம்→வரிட்டன். பரம் = மேலானது, சிறந்தது.]*

வரித்தா *varittā,* பெ.(n.) கருக்காய்; indian gallnut, chebulic myrobalan (சா.அக.).

வரித்தும்மட்டி[1] *vari-t-tummaṭṭi,* பெ.(n.) வரிக்கும்மட்டி பார்க்க; see *vari-k-kummaṭṭi.*

*[வரி [1] + தும்மட்டி]*

வரித்தும்மட்டி[2] *vari-t-tummaṭṭi,* பெ.(n.) பேய்க்கொம்மட்டி; colocynth.

*[வரி [1] + தும்மட்டி]*

வரித்துலா *vari-t-tulā,* பெ.(n.) விடத்தேர் (L.); ashy, babool.

வரித்தோல்[1] *vari-t-tōl,* பெ.(n.) வரித்துலா பார்க்க; see *vari-t-tulā* (சா.அக.).

*[வரி [1] + தோல்]*

வரித்தோல்[2] *vari-t-tōl,* பெ.(n.) காக்காய்ப் பாலை (L.); cluster-flowered croton.

*[வரி [1] + தோல் [3]]*

வரிதகம் *varidagam,* பெ.(n.) முப்பத் திரண்டடியான் வரும் இசைப்பாட்டு (சிலப். 3, 3, உரை, பக். 88); a kind of song of 32 lines.

*[வரி [2] → வரிதகம்]*

வரித்தண்டல் *vari-t-taṇḍal,* தொ.பெ. (vbl.n.) இறை வாங்குதல்; collection of revenue. *இப்பொழுது மாநகராட்சியில் வரி தண்டற் பணி விரைவாக நடக்கிறது (உ.வ.).*

*[வரி + தண்டல். தண்டு→தண்டல். தண்டல் = வாங்குதல்.]*

**வரிதள்ளுபடி** *vari-taḷḷupaḍi,* பெ.(n.) வரி நீக்குகை; tax deduction. *அரிசி, கோதுமைக்கான வரி தள்ளுபடி செய்யப் பட்டது (உ.வ.).*

*[வரி + தள்ளுபடி.]*

**வரிதாளி** *vari-tāḷi,* பெ.(n.) தாளிப்பனை; a kind of palm -*Talipot palm* (சா.அக.).

*[வரி[1] + தாளி]*

**வரிந்துகட்டிக்கொண்டு** *varindukaṭṭi-k-koṇḍu,* கு.வி.எ.(adv.) விரைவாக, சண்டை, கலகத்தில் ஈடுபட; girding up one's loins. *என்ன சொல்லி விட்டேன் என்று வரிந்துகட்டிக்கொண்டு சண்டைக்கு வருகிறாய் (இக்.வ.). தேர்தலுக்குக் கட்சிகள் வரிந்துகட்டிக்கொண்டு நிற்கின்றன (இ.வ.). நண்பர் திருமணத்தில் வேலைகளை வரிந்துகட்டிக் கொண்டு செய்தார் (உ.வ.).*

*[வரிந்து + கட்டிக்கொண்டு.]*

**வரிந்துகட்டு[1]-தல்** *varindu-kaṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. இறுக்கிக்கட்டுதல்; to bind tightly. 2. தீவிரத் தன்மை காட்டுதல்; to girde up one's loins voluntarily.

*[வரி → வரிந்து + கட்டு-.]*

கள் → கட்டு. வரிந்து கட்டுதல் என்பது ஒன்றோடொன்றை இறுக்கிப் பிணைத்துக் கட்டுதலாகும்.

**வரிந்துகட்டு[2]-தல்** *varindu-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) வேலைக்கு ஆயத்தமாதல் (இ.வ.); to prepare for work, as by tying one's loin-cloth.

*[வரி → வரிந்து + கட்டு-.]*

**வரிந்துவரிந்து** *varindu-varindu,* வி.அ. (adj.) விடாது; தொடர்ந்து வருதல்; un interrupted continuous. *'காலையிலிருந்து வரிந்துவரிந்து என்ன எழுதிக் கொண்டிருக்கிறாய்? (உ.வ.).*

*[வரிந்து + வரிந்து]*

**வரிநகக்கொன்னை** *vari-naga-k-koṉṉai,* பெ.(n.) புலி உகிரி (நக)க் கொன்னைச் செடி வகையு ளொன்று; cassia with re-curved prickles- *Caesalpinia ligulata* - climber (சா.அக.).

**வரிநண்டு** *vari-naṇḍu,* பெ.(n.) நண்டு வகை; a kind of crab, neptunus pelagicus.

*[வரி + நண்டு]*



**வரிநிழல்** *vari-niḻal,* பெ.(n.) செறியாத நிழல்; shade interspersed with light. *"மராஅத்த வரிநிழ லசைஇ" (சிறுபாண். 12).*

மறுவ. கோட்டு நிழல்.

*[வரி[1] + நிழல்]*

**வரிநுணல்** *vari-nuṇal,* பெ.(n.) வரிக் கோடுகளையுடைய தவளை; striped frog. *"உடும்பு கொரீஇ வரிநுணல் அகழ்ந்து" (நற் -59.1).*

*[வரி[1] + நுணல்]*

வரிநுதல்யானை *vari-nudal-yāṉai,* பெ.(n.) அழகிய புள்ளிகள் பொருந்திய நெற்றியை யுடைய யானை; elephant, which has beautiful spotted fore-head. *"வெண்ணெல் அருந்திய வரிநுதல்யானை தண்ணறும் சிலம்பில் துஞ்சும்" (நற்.7-7-8).*

*[வரி¹ + நுதல் + யானை]*

வரிநெல்லி *vari-nelli,* பெ.(n.) அரிநெல்லி; a small tree - *phyllanthus distichus* (சா.அக.).

*[வரி + நெல்லி.]*

வரிக்கோடுகளையுடைய சிறு நெல்லி. பித்த நோய்க்கு உகந்தது. ஊட்டச் சத்துடையது.

வரிப்படலம் *vari-p-paḍalam,* பெ.(n.) கரு விழியின் மீது கயிறு போல் செவ்வரிகளுடன், குத்தல், புகைச்சல், இவைகளை உண்டாக்கும் ஓர் கண்ணோய்; an eye disease affecting the black of the eye (சா.அக.).

*[வரி¹ + படலம்]*

வரிப்படாத்தி *vari-p-paḍātti,* பெ.(n.) வெள் விழியில் வலைக் கண்களைப் போல் சதை வளரும் ஓர் வகைக் கண்ணோய்; an eye disease developing a net work of morbid growth in the pupil of the eye (சா.அக.).

*[வரி¹ + படாத்தி]*

வரிப்படிரம் *vari-p-paḍiram,* பெ.(n.) சந்தனம்; sandal (சா.அக.).

*[வரி¹ + படீரம் →படிரம்]*

வரிப்பணம் *vari-p-paṇam,* பெ.(n.) குடிகள் செலுத்தும் வரி (வின்.); money-tax.

மறுவ. குடியிறை

*[வரி⁵ + பணம்²]*

வரி வகையுளொன்று.

வரிப்பளு *vari-p-paḷu,* பெ.(n.) வரிச்சுமை பார்க்க; see *vari-c-cumai. சில்லறை வணிகர், வரிப்பளுவினால் தொல்லை யுறுகின்றனர் (உ.வ.).*

*[வரி + பளு→பளுவு.]*

அளவிற்கு அதிகமான வரிச்சுமையினால் மக்கள்படும் தொல்லையே வரிப்பளு.

வரிப்பாகுபாடு *vari-p-pāgu-pāḍu,* பெ.(n.) பண்டைக்காலத்தே வழக்கிலிருந்த வரிப் பகுப்பு முறை; classification of tax in ancient days.

*[வரி + பாகுபாடு.]*

பகு→பாகு.

ஒ.நோ. வகு→வாகு, படு→பாடு.

கீழிறைப் பாட்டம் (சிறுவரி), மேலிறைப் பாட்டம் என இரு பாலாய்ப் பகுக்கப்பட்டிருந்தன. ஊர்க்கழஞ்சு, குமரக்க சாணம், வண்ணாரப் பாறை தட்டாரப் பாட்டம் முதலியன கீழிறைப் பாட்டமும், வேலிக்காசு, திங்கள் மேராமு, முத்தாவணம், தறிப்புடவை முதலியன மேலிறைப் பாட்டமும் ஆகும்.

நிலவரி : வரிகளுட் சிறந்தது நிலவரி. அதனால் அது சிறப்பாக இறை அல்லது அரசிறை எனப்படும். அதற்குச் செய்க்கடன், காணிக்கடன் என்னும் பெயர்கள் வழங்கின.

அரசனால் விதிக்கப்பட்டவும், ஊரவையாரால் விதிக்கப்பட்டவும், அறமன்றத்தாரால் விதிக்கப் பட்டவும் கோயிலதிகாரிகளால் விதிக்கப்பட்டவும், சிற்றூர்த் தலைவனால் விதிக்கப்பட்டவும் ஆக

ஐவேறு தொகுதிப்பட்டிருந்தன. அக்காலத்து வரிகள், அரசனுக்குச் செலுத்த வேண்டியவை அரசிறையெனப்பட்டன.

சில வரிகள் காசாகவும், சில வரிகள் கூல (தானிய)மாகவும், சில வரிகள் அவ்விரண்டி லொன்றாகவும் செலுத்தப்பட்டன. காசாகச் செலுத்தப்பட்டவை காசாயம் (காசு கடமை) என்றும், அந்தராயப் பாட்டம் என்றும், கூலமாகச் செலுத்தப்பட்டவை மேலடியென்றும், பெயர் பெற்றன. காசு, பணம், பொன், காணம் என இறும் பெயர்களெல்லாம் முன்வகையையும், அரிசி, நெல், நாழி, குறுணி, பதக்கு என இறும் பெயர்களெல்லாம் பின் வகையையும் குறிக்கும். பெரும்பாலும் தொழில் வரிகள் பணமாகவும், நிலவரி இனமாகவும் செலுத்தப்பட்டன. செக்கிறை, தறியிறை, கடைவரி முதலியன ஆண்டுக்கு ஆறு பணமாகும்.

சந்தை, அங்காடி, தெரு, திருவிழா, முதலியவற்றில் பல வகைப் பொருள்கள் விற்கும் சில்லறைக் கடைகட்கு நாள் வரி வாங்கப்பட்டது.

வரிப்பாட்டு *vari-p-pāṭṭu,* பெ.(n.) இசைப் பாட்டு; tune, melody.

*[வரி + பாட்டு.]*

மூவகை வரிப்பாட்டும்.... இன்ன பிறவுமாகிய நாடகத்தமிழ் பகுதிகளும், சிலப்பதிகாரத்திற் சிறப்பாக அமைந்துள்ளது.

வரிப்பாடல் *vari-p-pāḍal,* பெ.(n.) 1. வரிப் பாட்டு பார்க்க; see *vari-p-pāṭṭu.* 2. இசையோடியைந்த பாக்களிலொரு வகை (சிலப்.6, 35, உரை); one of two classes of musical composition, the other class being known as *iśaiy-aḷavu-pa.*

*[வரி + பாடல். பாடு→பாடல்.]*

வரிப்பாடல், சிலப்பதிகார அரும்பத உரைகாரர் உரைப்பது:-

"வரிப்பாடலாவது, பண்ணும், திறமும், செயலும் பாணியும், ஒரு நெறியன்றி மயங்கச் சொல்லப்பட்ட, எட்டனியல்பும், ஆறனியல்பும் பெற்றுத் தன் முதலும், இறுதியும் கெட்டு, இயல்பும் முடமுமாக, முடிந்து கருதப்பட்ட சந்தியும் சார்த்தும், பெற்றும் பெறாதும் வரும். அதுதான் தெய்வஞ்சுட்டியும், மக்களைப் பழிச்சியும் வரும்" (அரும்.சிலம்பு.7:19).

வரிப்பாரை *vari-p-pārai,* பெ.(n.) செம்பாரை; horse-mackerel.

*[வரி ' + பாரை]*

வரிப்பிடித்தம் *vari-p-piḍittam,* பெ.(n.) அரசு குறித்த வருமானத்திற்கு அதிகமான வருவாயிலிருந்து கழிக்கும் தொகை; tax deduction at the source or income.

*[வரி + பிடித்தம். பிடி→பிடித்தம் = கழிவு.]*

வரிப்பிரோத்தம் *vari-p-pirōttam,* பெ.(n.) சதகுப்பை (மலை.); dill seed (சா.அக.).

வரிப்பிரோதிகம் *vari-p-pirōdigam,* பெ.(n.) வரிப்பிரோத்தம் பார்க்க; see *vari-p-pirōttam*(சா.அக.).

*[வரி ' + பிரோதிகம்]*

வரிப்பிளந்தெழுது-தல் *vari-p-piḷandeḻu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கையெழுத்து வரியில் இடைச்செருகி எழுதுதல்; to inter line, to insert in a line.

*[வரி ' + பிளந்து + எழுது-.]*

வரிப்பிளப்பு *vari-p-piḷappu,* பெ.(n.) ஆவணங்களில் இடைச்செருகி எழுதுவது; interlineation, an addition in between in a sentence, in deeds.

*[வரி ' + பிள→பிளப்பு]*

வரிப்பிளவை *vari-p-piḷavai,* பெ.(n.) வரிப் பிளப்பு பார்க்க; see *vari-p-piḷappu.*

*[வரி + பிள→பிளவை.]*

வரிப்பீகி *varippīgi,* பெ.(n.) பேய்க் கும்மட்டி; a creeper, citnillus colocynthis (சா.அக.).

வரிப்பீர்க்கு *vari-p-pīrkku,* பெ.(n.) வரியுள்ள பீர்க்கங்காய்; ribbed sponge gourd, used as vegetable-*Luffa acutangula.*

*[வரி [1] + பீர்க்கு]*

வரிப்புலி *vari-p-puli,* பெ.(n.) வேங்கைப்புலி (வின்.); bengal tiger.

*[வரி [1] + புலி. வரி = கோடு.]*



வரிப்புறம் *vari-p-puṟam,* பெ.(n.) அணில் வகை (பிங்.); striped squirrel.

*[வரி [1] + புறம் [2]. வரி = கோடு.]*

வரிப்புறா *vari-p-puṟā,* பெ.(n.) ஒரு வகைப் புறா; a kind of dove (சா.அக.).

*[வரி [1] + புறா]*

வரிப்பூச்சு *vari-p-pūccu,* பெ.(n.) செங்கல் வரிசைகளுக்கிடையே பூசப்படும் சாந்துப் பூச்சு; paste of lime or cement, sand water, mortar.

*[வரி [1] + பூச்சு]*

செங்கல் வரியினை மறைக்கும் பூச்சு.

வரிப்பூனை *vari-p-pūṉai,* பெ.(n.) காட்டுப் பூனை வகை; rusty-spotted cat.

*[வரி [1] + பூனை]*

காட்டுப்பூனை. இராக்காலங்களில் கோழிகளைத் தெரியாமல் தூக்கிப் போகும், பூனை வகையே வரிப்பூனையாகும்.

வரிப்பொத்தகக்கணக்கு *vari-p-pottaga-k-kaṇakku,* பெ.(n.) 1. வரிப் பொத்தகத்தில் வரவு – தரவு முதலான விளத்தங்களை யெழுதும் அதிகாரி; revenue officers in ancient times. 2. வரிப் பொத்தகம் பார்க்க; see *varip-pottagam.*

*[வரி + பொத்தகம் + கணக்கு.]*

வரிப்பொத்தகம்[1] *vari-p-pottagam,* பெ.(n.) அரசுக்குரிய வரி முதலானவற்றிற்குரிய கணக்குப் புத்தகம்; a denegab or a register, a kind of village account indicating Good tax or cess, patta, survey no etc. *இப்புத்தகத்தில் வரவு, தரவு விளத்த(விவர)ங்களை எழுதும் அதிகாரி, 'வரிப் பொத்தகக் கணக்கர்' என்று பெயர் பெறுவர். "வரிப்பொத்தகம் சாத்தனூருடையான் குமரன்அரங்கனும், பருத்தியூர்க் கிழவன் சிங்கன் வெண்காடனும் இருந்து, வரியிலிட்டுக் கொடுத்த ஆனைமங்கலம்" (பெரிய லெய்டன் செப்பேடுகள்). "இவ்வூர் ஆயமும் அந்தராயத்தால் காசு நெல் உள்பட தேவதானமாகக் கொடுத்தோமென்று வரியிலார்க்கும், வரிப்பொத்தகஞ் செய்வார் கட்கும் சொன்னோம்"* (S.I.I. Vol. VII-538).

*"வரிநெடும் பொத்தகத்து" (கோயில் நான்மணிமாலை).*

த. பொத்தகம்; **Skt.** புஸ்தக; இந்தி. புஸ்தக்.

*[வரி¹ + பொத்தகம்]*

**வரிப்பொத்தகம்²** *vari-p-pottagam,* பெ.(n.) **1.** அரசிறைக் கணக்குக்குறிப்பு (கல்.); tax register. **2.** ஒரு பழைய அலுவல் (உத்தியோகம்) (T.A.S., i, 166); an ancient office.

*[வரி⁵ + பொத்தகம்¹]*

ஒருகா. நிலவரிக்கணக்கன்

**வரிபரந்தமணல்** *vari-paranda-maṇal,* பெ. (n.) கருமணல்; black sand (சா.அக.).

*[வரி¹ + பரந்த + மணல்]*

**வரிபாதி** *vari-pādi,* பெ.(n.) வரிக் கொன்றை பார்க்க; see *vari-k-koṉṟai* (சா.அக.).

**வரிபுனைபந்து** *vari-puṉai-pandu,* பெ.(n.) வரிகள் நிறைந்த பந்து; striped ball. *"வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்" (நற்–12–6).*

*[வரிபுனை + பந்து.]*

கோடுகள் நிறைந்த பந்து.

**வரிபோடு–தல்** *vari-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) குடியிறை விதித்தல் (வின்.); to impose or levy a tax.

*[வரி⁵ + போடு–.]*

**வரிமணல்** *vari-maṇal,* பெ.(n.) அறலினை யுடைய மணல்; sands on the shore, with streakes formed thereon by the action or movements of waves. *"வரிமண லகன்றிட்டை" (பட்டினப். 60).*

மறுவ. அரிமணல்.

*[வரி¹ + மணல்]*

**வரிமணி** *vari-maṇi,* பெ.(n.) பரவமகளிர் அணியுங் கழுத்தணி வகை; a necklace or neck-ornament, worn by parava-women.

*[வரி¹ + மணி]*

**வரிமப்பு** *vari-mappu,* பெ.(n.) வரிவரியாகத் தோன்றும் மேகம், இது கடுமையான காற்று வீசப்போவதற்கு அறிகுறி; scattered cloud being symptoms for storm or tempest or strong winds.

மறுவ. வரிமுகில்

*[வரி + மப்பு.]*

**வரிமனை** *vari-maṉai,* பெ.(n.) மணல் வீடு; sand house. *"வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவதும் மறுமொழி பெறா அன் பெயர்ந்தனன்" (அகம் – 250 – 8–9).*

*[வரி¹ + மனை]*

**வரியங்கம்¹** *vari-y-aṅgam,* பெ.(n.) வெள் வரியங்கம்; dalbergia paniculata (சா.அக.).

**வரியங்கம்²** *vari-y-aṅgam,* பெ.(n.) பன்றி வாகை (L.); tube-in-tube wood.

*[வரி¹ + அங்கம்]*

**வரியச்சு** *vari-y-accu,* பெ.(n.) எழுதுந் தாளி (காகிதத்தி)னடியில் வைத்துக்கொள்ளும் கறுப்புக் கோடிட்ட தாள் (வின்.); black-lined sheet placed under the writing paper to lime writing.

*[வரி¹ + அச்சு. அட்டு→அச்சு.]*

**வரியணி** *vari-yaṇi,* பெ.(n.) கோடுகள் பொருந்திய அணிகலன்; striped jewells. *"குருதி ஒப்பின் கமழ் பூங்காந்தள் வரியணி சிறகின் வண்டுணை மலரும்" (நற்-399-2-3).*

*[வரி + அண் → அணி.]*

**வரியதிகாரி** *vari-yadigāri,* பெ.(n.) வரி மதிப்பீடு செய்யும் அரசு அதிகாரி; tax officer.

*[வரி + அதிகாரி. அதிகாரம் → அதிகாரி = வலிமை, ஆட்சி.]*

**வரியம்** *variyam,* பெ.(n.) பெருஞ்சூலி; a tree (சா.அக.).

**வரியரிசி** *vari-y-ariši,* பெ.(n.) சீரகம் (மலை.); cumin.

*[வரி[1] + அரிசி]*

**வரியாட்டு** *vari-y-āṭṭu,* பெ.(n.) வரியாத்து, இரேவல் சின்னி; rhubarb root-*Rheum emodi* (சா.அக.).

*[வரி[1] + ஆட்டு]*

**வரியாடல்** *vari-y-āḍal,* பெ.(n.) எழுதுகை (அக.நி.); writing, penning.

*[வள் → வரி + ஆடல்.]*

**வரியாத்து** *vari-y-āttu,* பெ.(n.) வரியாத்துக் கிழங்கு பார்க்க; see *variyāttu-k-kilaṅgu* (சா.அக.).

**வரியாத்துக்கிழங்கு** *vari-y-āttu-k-kiḻaṅgu,* பெ.(n.) இரேவற்சின்னி (யாழ்.அக.); rhubarb.

*[வரியாத்து + கிழங்கு]*

**வரியாரோத்தம்** *variyā-rōttam,* பெ.(n.) வரிப்பிரோத்தம் பார்க்க; see *vari-p-pirōttam* (சா.அக.).

மறுவ. சதகுப்பை

**வரியான்** *variyāṉ,* பெ.(n.) 1. ஆதன் (சீவன்) முத்தருள் பிரமவரியார் வகையினன் (கைவல். தத். 94); person belonging to the pirama *variyār* class of *civaṉ-mutter* or attained saints. 2. ஓகம் இருபத்தேழனு ளொன்று (பஞ்.); a division of time, one of 27 ōgam.

**வரியிலந்தை** *vari-ilandai,* பெ.(n.) இலைச் சாற்றில் வெங்கார வகை; a kind of jujub. It's leaves juice is said to consolidate borax (சா.அக.).

*[வரி[1] + இலந்தை]*

**வரியிலார்** *variyilār,* பெ.(n.) அரசிறை அலுவலர் (கல்.); revenue officers in ancient times. *"நம் வரியிலார் வரியிலேயிட்டு" (S.I.I.iii, 36). "இவ்வூர் ஆயமும், அந்தராயத்தால் காசு, நெல் உள்பட தேவதானமாகக் கொடுத்தோ மென்று வரியிலார்க்கும் வரிப்பொத்தகம் செய்வார்க்கும் சொன்னோம்" (S.I.I. VII.538).*

*[வரி + இல் (இடைச்சொல்) + ஆர்]*

வரிவிதிப்பவர் என்பார் திரு.சி.கோவிந்த ராசனார். ஆனால் மொழிஞாயிறு தமது பழந்தமிழாட்சி என்னும் நூலில், தலைநகரிலும், ஊர்களிலும் தண்டப்பட்டு வந்த வரித் தொகைகளைக் கணக்கிற் பதிவு செய்வோர் என்பார்.

இறை, கடமை, ஆயம் உள்ளிட்ட வரிகளை நேரிற்கண்டு, கணக்கிடும் அதிகாரி.

**வரியிலிடு[1]–தல்** *variyil-iḍu-*, 20 செ. குன்றாவி.(v.t.) சிற்றூரில் (கிராமத்தில்) உள்ள நில அடங்கலிற் புதிய நிலவரிகளைப் பதிவு செய்தல்; to register new taxes in the village land revenue records or accounts. *"இவ்வூர் சபையார்க்குக் காசு கொடுத்து விலைக்கு கொண்டு சில சரணசேகர நல்லூர் என்னுந் திருநாமத்தால் வரியிலிட்டு இந்நிலம் ஐவேலிக்கும்" (திருவாலீசுவரம் கல்வெட்டு).*

*[வரி + இல் + இடு–.]*

**வரியிலிடு[2]–தல்** *variyil-iḍu-*,20 செ.கு.வி. (v.i.) வரிப்பொத்தகத்திற் பதிதல் (S.I.I. Vol. III, 115); to enter in the revenue register.

*[வரி + இல் + இடு]*

**வரியிலீடு[1]** *variyil-īḍu*, பெ.(n.) 1. வரிப் புத்தகம்; tax register. 2. புதிய வரிகளை நிலவரி கணக்கில் சேர்க்கும் அதிகாரி; a revenue officer responsible to add new taxes in law revenue accounts. *"வரியிலீடு உறுவூருடையான் தாழி வீரசோழன்" (பெரிய லெய்டன் செப்பேடுகள்).*

*[வரி + இல் + ஈடு]*

**வரியிலீடு[2]** *variyilīḍu*, பெ.(n.) 1. வரிப் பொத்தகத்திற் பதியும் பதிவு; entry in the revenue register. 2. வரிப் பொத்தகத்திற் பதியும் பழைய பதவி; office of keeping the revenue register. *"வரியிலீடு பாவையுடையானும்" (S.I.I. Vol.i, 16).*

*[வரியிலிடு → வரியிலீடு]*

**வரியுரிமைசெய்–தல்** *vari-y-urimai-šey-*, 1 செ.குன்றாவி.(v.t.) ஊரவை வழிபெறும் வரிமகமைகளை அவ்வூர்க் கோவில் திருப்பணிக்கு உரிமை செய்யும் அரசு ஆணை; a Government order conforming rights to village temples from tax collected by village committee. *பொத்தப்பிச் சோழன் ஆட்சியில் மணிமங்கலம் கோயில் திருப்பணிக்கு விடப்பட்டுள்ளது. "அனைத்து ஆயங்களும் திருப்பணிக்கு உடலாகவிட்டோம். இன்னாள் முதல் இன்னிலத்தால் வந்த அளைத்தாயங்களும் ஊருடன் கூட்டாதொழிவதாகச் சொன்னோம்" (S.I.I. Vol. VI. 256).*

*[வரிகளை + திருப்பணிக்கு + உரிமை + செய்தல்]*

**வரியூமத்தை** *vari-y-ūmattai*, பெ.(n.) ஊமத்தஞ் செடிவகையுளொன்று; a kind of dhatura, a devil's apple variety (சா.அக.).

*[வரி + உன்மத்தம் → ஊமத்தை]*

**வரியெழுச்சிரோகம்** *vari-y-eḻucci-rōgam*, பெ.(n.) வெள் விழியில் தேமலைப் போல் வட்டமாகத் தசையைப் பரவச் செய்யும் ஓர்வகைக் கண்ணோய்; an eye disease affecting the white part of eye ball marked by morbid growth of flesh on the white coat of the eye (சா.அக.).

*[வரியெழுச்சி + **Skt.** rōga> த. ரோகம். வரியெழுச்சி = வெள்விழியில் வரிவரியாக வளரும் தசை வளர்ச்சி.]*

**வரியேய்ப்பு** *vari-y-ēyppu*, பெ.(n.) சட்டப்படி அரசுக்குச் செலுத்தவேண்டிய வரியைச் செலுத்தாமல் ஏமாற்றுதல்; tax evasion. *வரியேய்ப்பு செய்பவர், நாட்டின் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுபவர் ஆவர் (இ.வ.).*

*[வரி + ஏய்ப்பு]*

**வரியொட்டி** *vari-y-oṭṭi,* பெ.(n.) மீன் வகை (வின்.); a kind of fish.

*[வரி¹ + ஒட்டி]*

ஒட்டி = ஒட்டு மீன் வகையைச் சார்ந்தது.

**வரியோரா** *vari-y-ōrā,* பெ.(n.) கரு வெண்மை கலந்த கபிலநிறமும், செந்நிறப் புள்ளிகளுமுடைய கடல்மீன் வகை (யாழ்.அக.); sea fish, dark greyish-brown covered with light orange spots.

*[வரி + ஒரா. 'ஒரா' வெண்ணுங் கடல் மீன்வகையு ளொன்று.]*



**வரியோலை** *vari-y-ōlai,* பெ.(n.) உடன்படிக்கை ஆவணம்; deed of agreement. *"வரியோலை யெழுதி வைத்தபடி" (பெரிய லெய்டன் செப்பேடுகள்).*

*[வரி² + ஒலை]*

**வரிவகைகள்** *vari-vagaigaḷ,* பெ.(n.) பழங்காலத்தில் குடிகள் செலுத்திய வரி வகைகள்; the various kinds of tax in ancient period.

*[வரி + வகைகள்]*

கழகக்காலத்தில், குடிகள் செலுத்திய வரிவகைகளாகப் பாவாணர் பழந்தமிழாட்சி என்னும் பனுவலுள் குறித்துள்ளது வருமாறு :-

அரசியல் வருவாய்களுள் நிலையானதும் முதன்மையானதும் குடிகள் செலுத்தும் வரியே. அது, நிலவரி, நீர்வரி, மனைவரி, தொழில் வரி, ஆள் வரி (Poll tax), விலங்கு வரி, பொருள் வரி, உய்ப்பு வரி, மணவரி, தண்ட வரி, கோயில் வரி, கொடைவரி, ஊழியப்பேற்று வரி, படைவரி, காட்சி வரி, கருவூல வரி, காசடிப்பு வரி எனப் பல திறத்தது.

நீர் வரி, விளைநிலங்கட்கு நீர்நிலைகளி னின்று நீரைப் பாய்ச்சிக் கொள்வதற்குச் செலுத்தும் வரி. அது ஏரிகுளப் பாய்ச்சலுக்குரியதாயின், நிலைநீர்ப்பாட்டம் என்றும், ஆற்றுப் பாய்ச்சற்குரிய தாயின், ஒழுகு நீர்ப்பாட்டம் என்றும் பெயர் பெறும். இனி, நன்னீர், புன்னீர் எனவும் வேறுபாடுண்டு. தொழில் வரி, உழவொழிந்த பிற தொழில்கட்கு வாங்கப்படுவது, விலங்குவரி, ஆடு, பெற்றம் (பசு), எருது, எருமை முதலிய விலங்குகட்கு வாங்கப்படுவது. உய்ப்பு வரி, நிலத்திலும் நீரிலும் பொருள்களை உய்த்தற்குச் செலுத்துவது. அது, ஆயம், உல்கு, சுங்கம் என்னும் பெயர்களாற் குறிக்கப்பெறும். மணவரி, திருமணத்திற்கு விதிக்கப்படுவது. அது அரைக்கால் பணமாகும். தண்டவரி, குற்றவாளிகட்குத் தண்டமாக விதிக்கப்படுவது. கொடைவரி, அரசன் அந்தணர்க்குச் செய்யும் பெருங்கொடைகட்குத் தண்டப்படுவது. ஊழியப்பேற்று வரி, ஊரவையார் பாடி காவலன் முதலியவரின் சம்பளத்திற்காகத் தண்டப்படுவது. பாடி ககாவலன் சம்பளத்தை அவனே தண்டிக் கொள்ள உத்தர விருந்தது. அவன் சம்பளம், நன்செய் விளைவில் மாவிற்கு ஒரு கலமும், புன்செய் விளைவில் மாவிற்கு ஒரு பணமும், கமுகிற்கு மரம் ஒன்றுக்கு வீசம் பணமும், கரும்பு, மருக்கொழுந்து, இஞ்சி, எள், வாழை ஆகிய வெள்ளாண்மையில் மாவிற்கு ஐந்து பணமும், வீட்டிற்கு ஆண்டுக்கு இரண்டு பணமும் ஆகும்.

அக்காலத்துக் குடிகளிடத்தில் வாங்கப்பட்ட வரிகளாகத் தேவநேயர் பழந்தமிழாட்சி என்னும் பனுவலுள் பகர்ந்துள்ளது :–

அங்காடிப் பாட்டம் (அங்காடிக்கூலி), அச்சுவரி, அட்டுக்கிறை, அடிகாசு, அடிமைக் காசு, அணியிடுவான் வரி, அதிகரணத்தண்டம், அதிகாரப்பேறு (அதிகாரப் பொன்), அரிகொழி, அரிநட்டி, அரிவாட்பதக்கு, அருந்தோடு, அரைக்கால்வாசி, அழகெருது, அழகெருது காட்சிக் காசு (காட்சியெருதுகாசு), அழுகற்சரக்கு, அள்ளுக்காசு, அளியிடுவான் வரி, அனுப்பு, ஆசுகவிகள் காசு (ஆசீவக் காசு), ஆசவக் கடமை, ஆட்டைச் சம்மாதம் (ஆட்டைக் காணிக்கை), ஆண்டெழுத்துத் தேவை, ஆத்திறைப் பாட்டம், ஆதிரைப் பிள்ளையார் நோன்பு, ஆள்நெல், ஆற்றுக்குலை, ஆற்றுப்பாட்டம், இடைப்பாட்டம் (இடைப்பூட்சி, இடைவரி), இராசாசுரங் காணிக்கை, இருபதக் கட்டி, இலாஞ்சினைப் பேறு, இறைகாவல், இறைச்சோறு, இனவரி (இனக்காசு), ஈழப்புன்செய் (ஈழம்பூட்சி), ஈழற்கடி வரி, உகப்பார் பொன் (உகவைப் பொன்), உப்பாயம் (உப்புக்காசு, உப்புகோச்செய்கை), உபயம் (உபய மார்க்கம்), உரல்வரி, உல்லியக் கூலி, உலாவு காட்சி, உவச்சவரி, உழுதான் குடி, உள்வரி, உறுபாதை, உறுவுகோல், நிலன்காசு, ஊசிவாசி, ஊத்தைப் பாட்டம், ஊர்க்கணக்கர் சீவிதம் (ஊர்க்கலனை, ஊர்க்கழஞ்சி) ஊர்ச்சரிகை, ஊராட்சி, ஊரிடு வரிப்பாடு, ஊரெட்டு, எட்கடமை (எக்கடமை), எடுத்துக்கொட்டி, எடைவரி, எருமைப் பொன், எழுவை, ஏணிக்காணம், ஏர்க்காடி, (ஏர்ப்பொன், ஏர்க்காணிக்கை), ஏரியாயம், ஏல்வை, ஒட்டிதற் கடமை, ஒட்டச்சு, ஓடக்கூலி, கடையடைக்காய், கடையிறை, கண்காணி, கண்காணி கணக்கர் முதல், கண்கூலி, கண்ணாலக் காணம் (கலியாணக் கானம்), கண்ணிட்டுக் காணம் (கண்ணேட்டுக் காணம்), கணக்கப்பேறு (கணக்கிலக்கை), கதிர்க்காணம், கருவூல வரி, காட்டாள் காசு, காண வட்டம், காணி வெட்டி, காரியவாராய்ச்சி, காலத்தேவை, காவல் பரப்பு (காவற் பேறு), கீழ்வாரப் பச்சை, குசக்காணம், குடநாழிக் குடிமை (குடிக்காசு, குடிக்காணம், குடியிறை), குதிரை வரி, குதிரை விலாடம், குமாரக்கச்சாணம், குலை வெட்டி, கூலம், கூற்று நெல், கெடுபாதை, கேள்விமகமை, கைக் கணக்கு முதல், கையேற்பு, கொடிக் கடமை, கொட்டைக் கூலி, கோள்நிறை கூலி, சண்டாளப் பேறு, சந்திவிக்கிரகப் பேறு, சாட்டு வரி, சிறுபாடி காவல், சூலவரி (சூலவரிப் பொன்), செக்கிறை, செக்கு மன்றாடி, செங்கொடிக் காணம், சென்னீர் வெட்டி, சென்னீரமஞ்சி, சேவகக் காசு, சோறுமாடு, தசவந்தம் தட்டடுவு, தட்டாரப் பாட்டம் (தட்டுக்காயம், தட்டொலி) தடிப்பதக்கு, தண்டல்மேனி (தண்டலிற் கடமை, தண்டவிலக்கை, தண்டற் கடமை), தண்ட நாயகர் மகமை, தண்டாளர் முதல், தரகு (தரகு பாட்டம்), தலையாரிக்கம், தலைவிலை, தறியிறை (தறிப் புடைவை), தனப்பணம், தாட்பிடியரிசி (தாப்படியரிசி), தானமானியம், திருமுன் காட்சி, திருமுகக் காணம், திங்கள் மேராமு, திங்கட் சோறு, திங்கள் நெய், திங்கள் மோகம், திரைக்காசு, துலாக் கூலி, துலாபார வரி, தேவ குடிமை, தோணிக் கடமை, தோரணக் காணிக்கை, தோலொட்டு, நத்த வரி, நல்லா (நற்பசு), நல்லாடு, நல்லெருது, நல்லெருமை, நற்கிடா, நாட்டுக் காணிக்கை (நாட்டு வரி, நாட்டு வினியோகம்), நாட்டு பாதி, நாடு காவல், நாடு தல வாரிக்கை, நிலக்காணிக்கை, நீர்க்கூலி, நீர்நிலக் காசு, நெட்டாள், நெய்விலை, பச்சைப் பணம், பஞ்சுப்பீலி, பட்டடை வரி, பட்டிக்காடி, பட்டிக்கால், பட்டிகைக் காணம், பட்டித் தண்டம் (பட்டிப் பொன்), பட்டோலைக் காசு, படாங்கழி, படைப்பணம் (படையிலார் முறைமை), பண்குறுணி, பண்டவெட்டி, பண்ணிக் கூலி, பணவாசி, பணிக்கொத்து, பதுவாரம், பறைத்தறி, பறையிறை, பன்மை, பாசிப்பாட்டம், பாடி காவல், புத்தகம், புதாநாழி, புட்டக விலை, புரவுநெல், புலவரி, புழுகு

கடமை, புறக்கடமை (புறக்கலனை), புறம்பு, புறவெட்டி (பேர்க் கடமை, பேர் வரி), பொற்பூ, பொன்வரி, மடக்கு வரி, மண்மதில், மதில் தேவை, மந்தைப் பணம், மரமச் சாதி விலை, மனைப் பணம், மாட்டுக்கறை, மாடைக் கூலி, (மாடைக் காசு), மாதப்படி (மாதாரிக்கம்), மாப்பட்டடை, மாப்பணம், மாப் பதக்கு, மாமகம், மாவிறை, முத்தாவணம், முதற்றிரமம், முப்பறமுந்நாழி, முழுவரிமை, முன்னிடும் பணம், மேராழி, வகைப்பேறு, வட்டி நாழி, வண்ணாரப் பாட்டம் (வண்ணாரப் பாறை), வலங்கையிடங்கை மகன்மை, வழி நடடைக்கிடும் பணம், வாசல் பணம் (வாசல் பேறு), வாடாக் கடமை, வாய்க்கால் பாட்டம், வாரக் காணம், விடைப் பேர், வினியோகம், வீட்டுத் தேவை, வீரசேசை, வீரசேலை, வெட்டி (வெட்டிக்காசு, வெட்டிப் பாட்டம், வெட்டி வரி, வெட்டி வேதினை), வெள்ளாண் வெட்டி, வெள்ளை வாரி, வேண்டுகோள் வரி, வேய்நெல், வேலிக்காசு, மடக்கு வரி.

இங்குக் கூறப்பட்ட வரிகளெல்லாம் எல்லாக் காலத்தும், எல்லாவிடத்தும், எல்லாரிடத்தும் வாங்கப்பட்டவையல்ல. வேறு வரி குறிப்பன போல் தோன்றும் பல பெயர்கள் ஒரே வரி குறிப்பனவாகும்.

வரி வகைகள் குறித்துப் பாவாணர் "பழந்தமிழாட்சி" நூலுள் பகரும் ஆய்வுக்கருத்து:-

"சங்ககாலத்து வரிகளினும், பிற்காலத்து வரிகள், மிகப் பலவென்றும், இக்காலத் திலில்லாத ஆள்வரி, மணவரி, துலாபார வரி முதலிய சில விதப்பு வரிகள் அக்காலத்திருந்தன வென்றும் அறிதல் வேண்டும். ஆள்வரி சோழநாட்டில் முன்னியூர் தவிரப் பிறவூர்களில் கூனர், குறளரிடத்தும் வாங்கப்பட்டதாகத் தெரிகின்றது" (பழந்தமிழாட்சி. பக்.67).

**வரிவசிதம்** *vari-vašidam,*பெ.(n.) குற்றேவல் (யாழ்.அக.); personal service, attendance, as on a guru.

*[வரி + **Skt.** vasita → த. வசிதம்]*

**வரிவடிவம்** *vari-vaḍivam,*பெ.(n.) வரிவடிவு பார்க்க; see *vari-vaḍivu.*

*[வரி + வடிவு→வடிவம். மொழியில் உள்ள ஒலிகளை எழுதுவதற்கான வடிவம்.]*

**வரிவடிவு** *vari-vaḍivu,* பெ.(n.) ஒலியெழுத்திற்கு அறிகுறியான கீற்று வடிவு (நன்.97, மயிலை.); written character; written symbol of an articulate sound, dist. fr. *oli-vaḍivu.*

*[வரி¹ + வடிவு]*

செவிப்புலனான, ஒலியைக் கட்புலனாக்கும் குறியே, வரிவடி வென்க.

**வரிவம்** *varivam,*பெ.(n.) தண்ணீர் விட்டான்; a prickly climber; water root - *Asparagus racemosus* (சா.அக.).

**வரிவம்மமௌலி** *vari-vamma-mouli,* பெ.(n.) கற்றாழை; aloe (சா.அக.).

**வரிவயம்** *vari-vayam,*பெ.(n.) புலி; tiger, as stripped. *"வரிவயம் பொருத வயக்களிறு போல" (புறநா. 100).*

*[வரி¹ + வயம்¹]*

ஒ.நோ. வயமா.

**வரிவரி** *vari-vari,*பெ.(n.) தண்ணீர் விட்டான் (தைலவ.) கொடி; climbing asparagus.

**வரிவரிசு** *vari-varišu,*பெ.(n.) சீரகம்; cumin seed - *Cuminum cyminum* (சா.அக.).

**வரிவரிமணலி** *vari-vari-maṇali,* பெ.(n.) கற்றாழை (சங்.அக.); aloe.

*[வரி¹ + வரி¹ + மணலி]*

**வரிவலை** *vari-valai,* பெ.(n.) வலை வகையு ளொன்று (நற்றிணை. 111); a kind of net.

*[வாரிவலை→வரிவலை]*

**வரிவழி** *vari-vaḻi,* பெ.(n.) வரிவம் பார்க்க; see *varivam* (சா.அக.).

மறுவ. தண்ணீர்விட்டான்

*[வரி[1] + வழி]*

**வரிவழுக்கை** *vari-vaḻukkai,* பெ.(n.) ஓர் வகை வழுக்கை; a baldness (சா.அக.).

*[வரி[1] + வழுக்கை]*

**வரிவள்ளி** *vari-vaḷḷi,* பெ.(n.) வெற்றிலை வள்ளிக் கொடி; a climber (சா.அக.).

*[வரி[1] + வள்ளி]*

**வரிவளி** *vari-vaḷi,* பெ.(n.) வரிவம்மமௌலி பார்க்க; see *vari-vamma-mouli* (சா.அக.).

மறுவ. கற்றாழை

*[வரி[1] + வளி]*

**வரிவளை** *vari-vaḷai,* பெ.(n.) வளையல் வகையுளொன்று; a kind of bangles. *“கோல்வளை கழல்வளை வரிவளை யென்னுமா போலே” (திவ். பெரியாழ். 3, 4, 8. வ்யா. பக். 618).*

*[வரி[1] + வள் →வளை]*

**வரிவனம்** *vari-vaṉam,* பெ.(n.) தில்லைமரம் (மலை.); blinding tree.

*[வரி[1] + வனம்]*

**வரிவாளம்** *vari-vāḷam,* பெ.(n.) சுவர் மற்றும் இணைப்புகளிற் பூசப்படும் பூச்சு வேலை; plastering of walls and joints.

*[வரி[1] + வாளம்]*

**வரிவிதி–த்தல்** *vari-vidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வரிபோடு–தல் பார்க்க; see *vari-pōḍu.*

*[வரி + விதி–.]*

**Skt.** vidhi → த. விதி.

**வரிவிதிப்பு** *vari-vidippu,* பெ.(n.) வரி போடுகை; levy. *சென்ற ஆண்டு வரவு–செலவு அறிக்கையில் இன்றியமையாத உணவுப் பொருள்களுக்கு வரிவிதிப்பு தளர்த்தப்பட்டது (உ.வ.).*

*[வரி + விதிப்பு.]*

**வரிவிலக்கு** *vari-vilakku,* பெ.(n.) தண்டுவதான அரசிறை ஒதுக்கம்; tax exemption.

*[வரி[1] + விலக்கு]*

**வரிவிளம்பரம்** *vari-viḷambaram,* பெ.(n.) செய்தித் தாளில் வகைப்படுத்தப்பட்டு, வெளியாகும், இரண்டொரு வரிகளிலான சிறிய விளம்பரம்; brief classified advertisement with a few lines. *வரி விளம்பரப் பகுதிகள் செய்தித்தாள் உரிமையாளருக்கு, அதிகமான வருவாய் ஈட்டித் தருகின்றன (இ.வ.).*

*[வரி + விளம்பரம்]*

**வரிவேர்** *vari-vēr,* பெ.(n.) அதிமதுரவேர்; liquorice root (சா.அக.).

*[வரி[1] + வேர்]*

**வரிவை[1]–த்தல்** *vari-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. குடியிறை விதித்தல் (வின்.); to impose or levy a tax. 2. பொதுநிதி முதலியவற்றிற்காக வீதாச்சாரத் தொகை குறிப்பிடுதல் (இ.வ.); to apportion and levy contributions, as for a common fund.

*[வரி[5] + வை–.]*

**வரிவை²–த்தல்** *vari-vai-,*4 செ.கு.வி. (v.i.) வரிசையாகக் கட்டுதல் (வின்.); to set in a row, as in brick-laying.

*[வரி ¹ → வை–.]*

**வரீக்கு** *varikku,*பெ.(n.) இசைக் கமக வகை (பூர்.சங்.எ.); a kind of grace in music.

**வருக்கம்¹** *varukkam,*பெ.(n.) ஒரு வகை நோய்; a kind of disease (சா.அக.).

**வருக்கரை** *varukkarai,*பெ.(n.) பலா; jack tree - *Hiterophyllus* (சா.அக.).

**வருக்காந்தம்** *varu-k-kāndam,* பெ.(n.) நிலாக்கல்; moon stone (சா.அக.).

**வருக்கிலங்கெட்டவன்** *varukkilaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) பயனில்லாதவன் (நெல்லை.); useless fellow, used in contempt.

*[வரிக்கத்து→வருக்கத்து + கெடு–.]*

ஒ.நோ. வாய்க்கிலை கெட்டவன்.

**வருக்கு** *varukku,*பெ.(n.) கஞ்சி (யாழ்.அக.); gruel.

*[வர்க்கு → வருக்கு]*

**வருக்கை¹** *varukkai,*பெ.(n.) வருக்கைப்பலா பார்க்க; see *varukkai-p-palā. "மதுவிம்மு வருக்கையின் சுளையும்" (தேவா. 628, 9).*

ம. வரிக்க.

**வருக்கை²** *varukkai,*பெ.(n.) 1. இனம், பிரிவு, வகை; class, division, group. 2. உயிர், மெய் முதலிய எழுத்துகளின் இனம் (இலக்.); class of letters of the alphabet, as vowels kindred consonants etc.

*[வருக்கம் → வருக்கை]*

**வருக்கை³** *varukkai,*பெ.(n.) மீன் வகை; a kind of fish. *"திருக்கை வருக்கை" (குருகூர்ப்.7).*



**வருக்கைக்கனி** *varukkai-k-kaṉi,* பெ.(n.) பலாப்பழம்; jack fruit of Artocarpus integrifolia.

*[வருக்கை + கனி. கன்→கன்னு→கன்னி→ கனி = பழுத்தல். நன்கு பழுத்துக் கனிந்த பலா.]*

**வருக்கைப்பலா** *varukkai-p-palā,* பெ.(n.) பலாவகையு ளொன்று (நாமதீப. **294**); a species of jack-tree.

*[வருக்கம்→ வருக்கை ¹ + பலா¹. வருக்கை = ஓரினம்.]*

**வருகம்¹** *varugam,* பெ.(n.) 1. மயிற்றோகை (யாழ்.அக.); peacock's feather. 2. இலை; leaf.

*[பருகம் → வருகம்]*

**வருகம்²** *varugam,*பெ.(n.) பரிவாரம் (யாழ். அக.); train or chain of attendants.

*[அருகம் → வருகம்]*

**வருகம்**[3] *varugam*, பெ.(n.) வருகை; come in. *"உலமந்து வருகம் சென்மோ தோழி" (அகநா.106 : 9). "உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரை" (நற்.88 : 3). 'கண்டனம் வருகஞ் சென்மோ தோழி" (குறுந். 275 : 2).*

*[வா→ வரு→ வருகம்]*

**வருகாலம்** *varu-kālam*, பெ.(n.) வருங்காலம்; future. *"வருகாலஞ் செல்கால மாயினானை" (தேவா. 716, 3).*

மறுவ. எதிர்காலம்.

*[வா→வரு→வரும் + காலம்.]*

**வருகூடம்** *varukūḍam*, பெ.(n.) பித்தளை; brass (சா.அக.).

**வருகை** *varugai*, பெ.(n.) வந்தடைகை, வரவு (இ.வ.); advent.

*[வள்→வர்→வார்→வரு→வருகை.]*

வருகை என்பது வினைப் பெயராகும். இவ்வருகைக் கருத்து தோன்றிய பாங்கினைத் தேவநேயர் வரையறுப்பது வருமாறு:–

"ஒருவன் தன் உறைவிடத்தினின்று அல்லது இருப்பிடத்தினின்று, ஓரிடத்திற்குப் போனபின், அங்கிருந்து உறைவிடத்திற்கு வருவது, முன் பின்னாகத் திரும்பியே யாதலால், திரும்பற் கருத்தினின்றே வருகைக் கருத்துப் பிறந்தது. அதனால் திரும்பற் பொருட் சொல்லினின்றே, வருகைப் பொருட்சொல் தோன்றிற்று" (தேவ.13, பக்.59).

**வருகைதருபேராசிரியர்** *varugai-taru-pērāśiriyar*, பெ.(n.) பல்கலைக் கழகத்தின் அழைப்பின் பேரில், குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும், பணிமேற்கொள்ள வருகை தரும் பேராசிரியர்; visiting professor, guest faculty.

*[வரு→வருகை + தா→தரு + பேராசிரியர்]*

**வருகைதா(வருகைதரு–தல்)** *varugai-tā*, 18 செ.கு.வி.(v.i.) வருதல்; to come, to attend. *நிகழ்ச்சிக்கு வருகை தந்திருக்கும் அனைவரையும் வரவேற்கிறோம்.*

*[வருகை + தா–.]*

**வருகைப்பதிவு** *varugai-p-padivu*, பெ.(n.) மாணவர், ஊழியர் முதலானோர் தங்களின் வருகையைப் பதிவு செய்தல்; marking attendance by students, workers, etc.

*[வருகை + பதிவு]*

**வருகைப்பதிவேடு** *varugai-p-padivēḍu*, பெ.(n.) பணியாளர் தத்தம் வருகையைப் பதிவு செய்வதற்காக உள்ள ஏடு; attendance register. *'அலுவலர்கள் காலையில் வந்தவுடன் வருகைப்பதிவேட்டில் கையெழுத்துப் போட வேண்டும்' (உ.வ.).*

*[வருகை + பதிவு + ஏடு]*

**வருங்கலம்** *varuṅgalam*, பெ.(n.) உணவுப் பொருளற்ற ஏனம்; vessel without food, empty vessel. *"பெருங்களந் தொகுத்த வுழவர்போல விரந்தோர் வருங்கல மல்க வீசி" (அகம்.30–8–9).*

*[வறுங்கலம்→ வருங்கலம்.]*

**வருங்காலம்** *varuṅ-kālam*, பெ.(n.) 1. எதிர் வருங்காலப் பகுதி; future. *"வருங்கால நிகழ்காலங் கழிகாலமாய்" (திவ். திருவாய். 3, 1, 5). "வருங்காலம் சொல்லும் பல்லி,*

*கழுநீர்ப்பானையில் வலியவந்து விழுந்தது போல" (பழ.).* 2. எதிர்காலம் (இலக்.); future tense.

மறுவ. எதிர்காலம்.

*[வா→வரு + காலம்]*

வருங்காலவைப்புநிதி *varuṅgāla-vaippu-nidi,* பெ.(n.) ஊழியரின் மாத ஊதியத்திலிருந்து பிடித்திருக்கும் தொகையும், பணிக்கு அமர்த்திய நிறுவனம் தனது பங்காகச் செலுத்தும் தொகையும் கொண்டு ஏற்படுத்துவதும், பணியிலிருந்து ஒய்வுபெற்ற பின் அளிக்கப்படுவதுமான சேமிப்பு; fund created from out of the contributions of the employee and of the employer payable at retirement (in India), provident fund.

மறுவ. எய்ப்பினில் வைப்பு.

*[வருங்காலம் + வை→வைப்பு + நிதி]*

Skt. nidhi > த. நிதி.

வருங்குறுமாம்புல் *varuṅ-kuṟumām-pul,* பெ.(n.) நெற்பயிரில் காணப்படும் களைப் பயிர்; weeds along with crops in paddy field.

*[வரும் + குறுமாம்புல்.]*

வருசு *varušu,* பெ.(n.) அமுக்கிரா; a medicinal root-*Withania somnifera* (சா.அக.).

வருஞ்சீவியம் *varuñcīviyam,* பெ.(n.) மறுப்பிறப்பு; the future lie-the future state of existence (சா.அக.).

*[வரும் + சீவியம்.]*

Skt. jīvya → த. சீவியம்.

வருட்டம்[1] *varuṭṭam,* பெ.(n.) வேம்பு (மலை.); neem-*Margosa.*

*[அரிட்டம் → வருட்டம்]*

வருட்டம்[2] *varuṭṭam,* பெ.(n.) முட்டை (நாமதீப. 255); egg.

வருட்டு-தல் *varuṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தேற்றுதல்; to assure, convince. *"பின்னும் பலகால் வருட்டி" (பாரத. சம்பவ. 64). (சூடா.).* 2. பார்வையாலேயே தப்பவியலாதபடி ஈர்த்துப் பிடித்தல் (கவர்ச்சித்தல்); to charm, fascinate. *"வயம்வர வருட்டல் வருவித்திடலகற்றல்" (திருக்காளத். பு.33, 23).*

*[முல்→மல்→மர்→மரு→மருட்டு→வருட்டு-.]*

வருடகம் *varuḍagam,* பெ.(n.) 1. முடக்கொற்றான் (மலை.); balloon vine. 2. பெருசெந்தொட்டி a plant (சா.அக.).

வருடகேதுச்சம் *varuḍa-kēduccam,* பெ.(n.) மூக்கிரட்டை; spreading hog-weed-boerhavia pnocumbens (சா.அக.).

வருடபுட்பம் *varuḍa-puṭpam,* பெ.(n.) தாழையெனுஞ் செடிவகை; fragrant screw-pine (சா.அக.).

க. தாழெ.

வருடபுட்பி *varuḍa-puṭpi,* பெ.(n.) பேராமுட்டி; a kind of plant-pavonia odonata (சா.அக.).

வருடாபூ *varuḍā-pū,* பெ.(n.) சாரணை; fragrant medicinal creeper-*Tricanthema monogyna* (சா.அக.).

**வருடு-தல்** *varudu-*,5 செ.குன்றாவி.(v.t.) தடவுதல்; to rub, to massage. *"செம்புனல் வந்தங் கடிவருட" (தேவா. 112, 5).*

மறுவ. தைவருதல், சொரிதல்.

*[வா→வரு→வருடு-.]*

**வருடை[1]** *varudai*, பெ.(n.) அரிமாவையுங் கொல்லும் வலிமையுள்ளதாகக் கருதப்பட்ட (சரபம் என்றழைக்கப்பட்ட) பறவை; fabulous bird capable of killing the lion.

மறுவ. எண்காற்புள்.

*[வரு→வருடை.]*

**வருடை[2]** *varudai*, பெ.(n.) 1. வரையாடு; mountain sheep. *"வரையாடு வருடைத் தோற்றம் போல" (பட்டினப். 139).* 2. ஆடு (திவா.); sheep. *"தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையை" (பதிற்றுப். 6, பதி.). "வேறுவே றினத்த வரைவாழ் வருடை" (அகநா.378 : 6). "போருடை வருடையும் பாயா" (நற். 359 : 8).* 3. மேழவோரை; aries of the zodiac. *வருடையைப் படிமகன் வாய்ப்ப (பரிபா. 11, 5).* 4. சரபம் (பிங்.); a fabulous animal.

*[வரு→வருடை.]*

**வருடை[3]** *varudai*, பெ.(n.) பொறாமை, மாற்சரியம்; envy, jealosy, malice. *"காமச் செற்றக்குரோத லோபமத வருடை" (தேவா. 1054, 8).*

*[வா→வரு→வருடை.]*

**வருடைமான்** *varudai-mān*, பெ.(n.) வரையாடு (சிலப். 25, 81, கீழ்க்குறிப்பு.); mountain sheep. *"செவ்வாரைச் சேக்கை வருடை மான் மறி" (குறுந். 187), 'வருடைமான் குழவிய வளமலை நாடனை (கலித்.43 : 14).*

*[வருடை[1] + மான் : மான் = சொல்லாக்க ஈறு.]*

**வருணகம்[1]** *varuṇagam*, பெ.(n.) திலகமரம்; sanders (சா.அக.).

**வருணகம்[2]** *varuṇagam*, பெ.(n.) 1. சந்தனம் (சங்.அக.); sandalwood. 2. மஞ்சாடிமரம்; red-wood.

**வருணச்சேது** *varuṇa-c-cēdu*, பெ.(n.) மாவிலிங்கம்; a sacred tree (சா.அக.).

*[வருணம் + சேது]*

**வருணம்[1]** *varuṇam*, பெ.(n.) 1. நீர் (பிங்.); water. 2. சதயநாள் (பிங்.); the 24th naksatra.

*[வருண → வருணம்]*

**வருணம்[2]** *varuṇam*, பெ.(n.) மாவிலிங்கம்; sacred tree - garlic pear tree - *Cratacra religiosa* (சா.அக.).

**வருணமண்டலம்** *varuṇa-maṇḍalam*, பெ.(n.) வருணனது உலகம்; region of *varuṇa*.

*[வருணம் + மண்டலம்]*

**வருணமுனி** *varuṇa-muṇi*, பெ.(n.) தண்ணீர் மிட்டான்; a prickly climber-water root (சா.அக.).

**வருணமூலம்** *varuṇa-mūlam*, பெ.(n.) உலிமடி வேர்; root of garlic pear tree-root of crataeva religiosa (சா.அக.).

*[வருணம் + மூலம்]*

**வருணர்பாட்டியல்** *varuṇar-pāṭṭiyal,* பெ.(n.) பாட்டியல் நூல்களில் ஒன்று (இலக். வி. 886, உரை); a work on poetics.

*[வருணர் + பாட்டியல்]*

**வருணவதி** *varuṇa-vadi,* பெ.(n.) மஞ்சள் (சங்.அக.); turmeric.

*[வருண + வதி]*

**வருணவுலிமிடி** *varuṇa-ulimiḍi,* பெ.(n.) கருப்பு உப்பிலாங் கொடி; a twiner black variety of உப்பிலாங் கொடி (சா.அக.).

**வருணன்** *varuṇaṉ,* பெ.(n.) 1. வாரணன் பார்க்க; see *vāraṇaṉ.* *"வருணன் மேய பெருமண லுலகமும்" (தொல். பொருள். 4).* 2. ஆரியருடைய வருண வழிபாடும், தமிழருடைய வருண வழிபாடும் தம்முள் வேறுபாடுடையன. முதற்குடிமக்களாகிய தமிழர்களுடைய வருணன் என்னும் கடவுட் பெயரை, ஆரியர் தம் கடவுளுக்கு இட்டு வழங்கினார்களென்பது மிகவும் பொருத்த மாகின்றது; The Aryan God, Varuna was probably the God of the Dravidian tribes being on the borders of the sea to whom the Aryan Rishis accorded a place in the pantheon (Dravidian India P.96).

*[வாரணம் → வருணன் → வருணம் = கடல் தெய்வம்.]*

வரி → வார் → வாரணம்= நிலத்தைச் சூழ்ந்துள்ள கடல் . வரிதல் = மூடுதல், சூழுதல், வளைதல்.

*"வாரணஞ் சூழ் புவி" (தனிப்பாடல்)*

வாரணன் = கடல் தெய்வம், வருணன் = மழைத் தெய்வம்.

வடவர் வ்ரு (கவி, மறை, சூழ்) என்பதை மூலமாகக் காட்டி, அனைத்தையும் மூடும் வானம் (All-enveloping sky) என்று பொருள் கூறுவர். தொல்காப்பியர் வருணனைக் கடல் தெய்வமாகவே குறித்துள்ளார். ஆனால் வடவர் மழைத் தெய்வமாகக் குறிப்பர்.

வரிதல் என்னும் சொல்லின் உள்ள வரி என்னும் வேரடி வளைதல் பொருளிலும், மூடுதற் பொருளிலும், சூழ்தல் பொருளிலும், தமிழில் ஆளப்பட்டுள்ளது. (எ.கா.) "புண்ணை மறைய வரிந்து" (திவ்.திருவாய்.5:1:5). தமிழர் வாரணனை என்றும் கடல் தெய்வமாகவே கொண்டனர்.

வரி என்னும் மூலத்திலிருந்தே, வாரணன் என்னும் சொல் தோன்றியுள்ளது. வாரணன் என்ற சொல்லிலிருந்தே வருணன் என்னுஞ்சொல் தோன்றியுள்ளது "வருணன் மேய பெரு மணலுலகமும்" (தொல்.951).

**வருணனை** *varuṇaṉai,* பெ.(n.) வண்ணனை[2] பார்க்க; see *vaṇṇaṉai.*

*[வருணா → வருணனை.]*

**வருணாத்தமசை** *varuṇā-t-tamašai,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

**வருணாவரிசி** *varuṇā-varišī,* பெ.(n.) வெட்பாலரிசி; a tree - *Wrightinana tinctoria* (சா.அக.).

**வருணி**[1] *varuṇi,* பெ.(n.) கண்களுக்கு (விகற்பமான) மாறுபட்ட நிறங்களைக் கொடுக்கும் கருத்த விழிக்குள் வட்டித்த

வடிவில் உற்பத்தி சவ்வு; a kind of coloured curtain in the anterior part of the eye perforated by the pupil for the transmission of light Iris (சா.அக.).

*[வரு→ வருணி.]*

**வருணி²** *varuṇi,* பெ.(n.) பொன் (சங்.அக.); gold.

*[வர்ணி → வருணி]*

**வருணியின்மை** *varuṇi-iṉmai,* பெ.(n.) கண்களில் நிறமின்மை; inderemia-absence (சா.அக.).

*[வருணி + இன்மை.]*

**வருத்தக்காரன்** *varutta-k-kāraṉ,* பெ.(n.) நோயாளி (இலங்கை); patient, ailing or sickperson. *'வீட்டில் இரண்டு வருத்தக்காரர்கள்'..*

மறுவ. பிணியாளி, நோவாளி.

*[வருந்து (த.வி.)→வருத்து (பி.வி.)→வருத்தம் + காரன்.]*

**வருத்தம்¹** *varuttam,* பெ.(n.) 1. மனதிற்குப் பிடிக்காத நிகழ்ச்சிகளினால் உண்டாகும் துன்பம்; suffering, pain, grief. *"படுகடுங்களிற்றின் வருத்தஞ் சொலிய" (அகநா.8). "உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி"* (புறநா. 150 : 4). *"உயங்குநடை மடப்பிடி வருத்த நோனாது" (குறுந். 307 : 5). "அலமரல் வருத்தம் தீர" (நற்.9 : 3). வருத்தம் தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்தார் (உ.வ.). அவ்வாறு பேசியதற்காக வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன் (இ.வ.).* 2. கடுமை, இடுக்கண், முட்டுப்பாடு; difficulty, misfortune, bottleneck. 3. மறைவுற்ற உறவினர் குறித்து ஏற்படும் மன உளைவு; regret. *சித்தப்பாவின் எதிர்பாரா மறைவால், குடும்பமே வருத்தத்தில் மூழ்கியது.* 4. ஆற்றல், சுமை, நலிவு, முயற்சிக்கடுமை; stain, impediment. *"மெய்வருத்தம் பாரார்" (நீதிநெறி. 53).* 5. முயற்சி; effort. *"ஆற்றின் வருந்தா வருத்தம்" (குறள், 468).* 6. அரிதில் நிகழ்வது; that which has very little chance of occuring, very rare. *அவன் பிழைப்பது வருத்தம் (இ.வ.).* 7. களைப்பு; exhaustion, weariness, fatigue. *"அசைந்து கடைந்த வருத்தமோ" (திவ். இயற். 3, 64).* 8. நோயாளியின் பாதுகாப்பற்ற நிலை; critical condition, as of a patient. *"அவனுக்கு வருத்தமாயிருக்கிறது". "வலங்குபிணி வருத்தமொடு இயங்கல் செல்லாது" (நற். 47, 2).* 9. ஒருவர்மேல், மற்றவருக்கு மனத்தாங்கல்; complaint, grievance. *கேட்டவுடன் பணம் தராததால், அவனுக்கு என்மேல் வருத்தம் (உ.வ.).*

*[வருந்து (த.வி.)→ வருத்து → வருத்தம் (பி.வி.)]*

**வருத்தம்²** *varuttam,* பெ.(n.) 1. நோய்; உடல் நலிவு (யாழ்ப்.); weakness. 2. கோளாறு; malady. *குழந்தைக்கு என்ன வருத்தம்.*

*[வர்→ வரு →வருத்தம்]*

**வருத்தவுப்பு** *varutta-v-uppu,* பெ.(n.) வறுத்தவுப்பு; fried salt useful for those on diet (சா.அக.).

*[வறுத்தவுப்பு→ வருத்தவுப்பு.]*

வருத்தி *varutti,* பெ.(n.) மணியின் கீழ்ப் பதித்து வைக்கும் வண்ணத்தகடு (யாழ்.அக.); foil.

வருத்து[1]-தல் *varuttu-,* 15 செ.குன்றாவி. (v.t.) 1. வருவித்தல்; to cause to come, to fetch, to get,obtain. 2. ஓவியமெழுதுதல்; to paint, sketch, portrait. *"நினைப்பெனுந் துகிலிகையால வருத்தித்து" (சீவக. 180). "உமையிடத் துர்க்கையை வருத்தி" (உபதேசகா. சூராதி. 132).* 3. மனப்பாடஞ் செய்தல் (இ.வ.); to learn by heart, as a lesson, mug up.

*[வள்→வர்→வரு→வருத்து-.]*

வருத்து[2]-தல் *varuttu-,*5 செ.குன்றாவி. (v.t.) 1. வருந்தச் செய்தல்; to cause, pain, to afflict vex. *"வருத்துந் தெய்வங்களும்" (மதுரைக். 632).* 2. பயில்வித்தல்; to train. *"அன்னான் வருத்து வாளிளைஞர்" (திருவிளை. அங்கம். 6).* 3. துயரங்கொள்ளச் செய்தல்; துன்பப்பட வைத்தல்; to make one sad; to make one feel sorry. *அவரது பேச்சு அவளை மிகவும் வருத்தியது (உ.வ.). அல்லும் பகலும் வருத்தும் சிக்கல் இது (இ.வ.).* 4. ஒருவர், தம்மைக் கடும் முயற்சிக்கு உட்படுத்திக் கொண்டு உழைத்தல்; to strain oneself. *உங்களை இப்படி வருத்திக் கொண்டு இரவு பகலாக உழைக்க வேண்டுமா?*

*[வருந்து- (த.வி.)→ வருத்து (பி.வி.)]*

வருத்து[3] *varuttu,* பெ.(n.) வருகை; advent, coming in, arrival.

*[வா→வரு→வருத்து]*

வருதல் *varudal,* தொ.பெ.(vbl.n.) வரல்; coming.

**T.** rā, **Ka., Tu.** bā, **Ma.** vā.

*[வள்→வர்→வா→வரு→வருதல்.]*

வள் என்னும் முதனிலையினின்றே, வருதல், வருகை என்னும் சொற்கள் முகிழ்த்தன. வளைதல், வட்டமாய் வளைதல், வளைந்து, எழுந்து, நடந்து வருதலே, வருதல் என்னும் சொல்லின் பொருண்மையாகும்.

வளைதற் கருத்தினின்றே வருதற் கருத்து முகிழ்த்ததென்பார் மொழிஞாயிறு. தமிழின்கண் அமைந்த வினைச்சொற்களின் முதனிலை யனைத்தும், பெரும்பாலும் ஏவல் வொருமை வடிவிலேயே யுள்ளதால், வருதல் என்னும் தொழிற் பெயரின் முதனிலையும், 'வா' என்னும் ஏவலொருமை யினின்று தோன்றியது, எனலாம்.

வருதி[1] *varudi,* பெ.(n.) 1. ஆணை; order. 2. அனுமதி; permission. *"வாய்க் கேள்வியர்க்கு வருதி செய்தான்" (தனிப்பா.).*

*[வர்→வா→வரு→வருதி.]*

வருதி[2] *varudi,* பெ.(n.) வருதல்; come in. *"இரவுச் சிறுநெறி தமியை வருதி" (அகநா. 318ே : 4), "பகலும் வருதி பல்பூங் கானல்" (நற். 223 : 3). "மாறி வருதி மலைமறைந் தொளித்தி" (புறநா. 8 : 8).*

*[வர்→வா→வரு→வருதி.]*

வருந்தி *varundi,* கு.வி.எ.(adv.) பணிந்து, மிகவும் வேண்டி; earnestly. *எவ்வளவோ வருந்திக் கூப்பிட்டும் திருமணத்திற்கு அவன் வரவில்லை (உ.வ.).*

*[வருந்து→வருந்தி.]*

**வருந்திக்கழி-த்தல்** *varundi-k-kaḻi-*, 4 செ.குன்றாவி.(v.t.) துன்பத்துடன் காலம் போக்குதல் (வின்.); to pass one's time in suffering or grief or agony.

*[வருந்து→ வருந்தி + கழி-.]*

**வருந்திக்கூப்பிடு-தல்** *varundi-k-kūppiḍu-*, 20 செ.கு.வி.(v.i.) வருந்தி யழை-த்தல் பார்க்க; see *varundi-y-aḻai-*. *வருந்திக் கூப்பிட்டும் புதுமனை புகுவிழாவிற்கு நண்பர் வரவில்லை (உ.வ.).*

*[வருந்து→ வருந்தி + கூப்பிடு-.]*

**வருந்திக்கேட்டல்** *varundi-k-kēṭṭal*, தொ.பெ.(vbl.n.) வருந்திக்கேள்-தல் பார்க்க; see *varundi-k-kēḷ-*.

*[வருந்து→ வருந்தி + கேட்டல்.]*

**வருந்திக்கேள்-தல்** *varundi-k-kēḷ-*, 11 செ.குன்றாவி.(v.t.) கெஞ்சுதல், இறைஞ்சுதல்; to beseech, to beg earnestly, to entreat, to solicit pressingly, to importune.

*[வருந்து→ வருந்தி + கேள்-,]*

**வருந்திப்பிழை-த்தல்** *varundi-p-piḻai-*, 4 செ.கு.வி.(v.i.) வறுமையில் நாட்களைக் கடத்துதல்; to lead life under poverty.

*[வருந்து → வருந்தி + பிழை-.]*

**வருந்தியழை-த்தல்** *varundi-y-aḻai-*, 4 செ.கு.வி.(v.i.) மிகவும் வேண்டிக் கூப்பிடுதல்; to invite emphaticaly. *நண்பர் எவ்வளவோ வருந்தியழைத்தும், உடல் நலிவுற்றதால், அவரது மகன் திருமணத்திற்குச் செல்ல முடியாமற் போய்விட்டது (உ.வ.).*

*[வருந்தி + அழை-.]*

**வருந்தியேங்கு-தல்** *varundi-y-ēṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) ஒருவர்தம் ஈடுசெய்யவியலா இழப்பினை யெண்ணியும், புலம்பியும் துன்பவுணர்வு கொள்ளுதல்; to feel sorry, to bemoan. *ஈடுசெய்யவியலாத நண்பனின் மறைவால், வருந்தியேங்கும் அவருக்கு ஆறுதல் கூறித் தேற்றுவார் யார்?*

*[வருந்தி + ஏங்கு-. ஏ→ஏங்கு = மனம் வாடுதல். ஈடு கட்டவொண்ணா இழப்பினை யெண்ணிப் புலம்புதல்.]*

**வருந்து-தல்** *varundu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. துன்புறுதல்; to suffer, to be distressed, tortured or grieved. *"காமமுழந்து வருந்தினார்க்கு" (குறள், 1131).* *படிக்காமல் ஊர் சுற்றியதற்காக இப்போது வருந்திப் பயனில்லை (உ.வ.). உங்களுக்கு உதவ முடியாததற்காக வருந்துகிறேன் (இ.வ.).* 2. உடல் மெலிதல்; to become emaciated. *"வாணுதன் மேனி வருந்தா திருப்ப" (மணிமே. 23, 62).* 3. மிக முயலுதல்; to take pains make great efforts. *"ஆற்றின் வருந்தா வருத்தம்" (குறள், 468).* 4. வருந்தி வேண்டிக் கொள்ளுதல்; to make a supplication. *'கடவுளை நோக்கி வருந்தினதால் அது கிடைத்தது'.* 5. உடல் வலியினை யுணர்ந்து வருந்துதல்; to strain oneself. *உடல் வருந்த உழைக்கும் வேளாண் தொழிலால் அதிகப் பலன் இல்லை (இ.வ.).*

*[வறள்→வரல்→வரு→வருந்து-.]*

நெஞ்சம் காய்ந்து போதல். நெஞ்சம் குளிர்தலால், மட்டற்ற மகிழ்ச்சியேற்படுவது மாந்தர்தம் இயல்பேயாகும். உள்ளம் வறண்டுபோதலை, அதாவது நெஞ்சம் காய்ந்து வருந்தும் தன்மையை, ஒருவர்தம் முகம்

உணர்த்துவது அனைவரும் அறிந்ததே. வருந்துதல், வருத்துதல், போன்ற சொற்கள் எல்லாம் பண்பினை வெளிப்படுத்தும் வினைச் சொற்களாகும். அதனாற்றான், வள்ளுவரும்,

*"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்*
*கடுத்தது காட்டும் முகம்" – (குறள், 706)*

என்று மொழிந்துள்ளார் எனலாம்.

வருந்துதல் என்னுஞ் சொல், நெஞ்சம் காய்தல், காய்ந்து வறண்டு போதல்; துன்பத்தினால் முகம் சுருங்குதல் என்னும் பண்புப் பொருண்மைகளின் வெளிப்பாடு எனலாம்.

வருந்துரு *varunduru,* பெ.(n.) முள்ளிலவு மரம் (மலை.); red-flowered silk-cotton tree.

வருந்தூரு *varundūru,* பெ.(n.) வருந்துரு பார்க்க; see *varunduru* (சா.அக.).

வருநர் *varunar,* பெ.(n.) 1. புதியதாய் வருபவர்; new comers, stranger. *"வருநர்க்கு வரையா வளநகர்" (குறிஞ்சிப். 202).* 2. விருந்தினர்; guests. *"வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை" (புறநா. 10). "உள்ளி வருந ருலைவு நனி தீர" (புறநா. 158 : 14).*

*[வா→வரு→வருநர்]*

வருநாள் *varu-nāḷ,* பெ.(n.) எதிர்வருங் காலம்; future. *"கூத்தனை யேத்தலர்போல் வருநாள் பிறவற்க" (திருக்கோ. 44).*

*[வா → வரு + நாள்]*

வருபிறப்பு *varu-piṟappu,* பெ.(n.) 1. மறு பிறப்பு (நாமதீப. 690, உரை.); next-birth, rebirth. 2. மறுமை; life after death, reincarnation.

மறுவ. மறுபிறப்பு

*[வா → வரு + பிறப்பு]*

வருபுனல் *varu-puṉal,* பெ.(n.) 1. பெருகி வரும் நீர்; rising, swelling or over flowing water, flood or storm water. *"வருபுனலும் வாய்ந்த மலையும்" (குறள், 737).* 2. ஆறு (பிங்.); river. 3. ஆற்று நீரும் ஊற்று நீரு மல்லாத வேற்றுநீர் (யாழ்.அக.); water other than river or spring water.

*[வரு + புனல்]*

வருபொருள் *varu-poruḷ,* பெ.(n.) 1. எதிர் கால நிகழ்ச்சி; future event. *"மந்திரிக் கழகு வருபொருளுரைத்தல்" (நறுந்.).* 2. வருவதன் கருத்து; purpose or object of one's coming. *"மாமறையாளன் வருபொருளுரைப்போன்" (சிலப். 11 : 34).*

*[வரு + பொருள்]*

வருபோகம் *varu-bōgam,* பெ.(n.) மறுபோக விளைவு; future crop or next seasonal produce. *"பெருங்கடன்கள்..... வருபோகத்துத் தருவல்" (திருவாலவா. 50, 6).*

*[வரு + பூகம் →போகம்]*

வரும் *varum,* பெ.அ.(adj.) 1. இனி வருவது; coming, next, successive or ensuring. 2. எதிர்காலம் குறித்த சொல்; future tense. *'வரும் ஆண்டிலாவது நல்ல மழைப் பெய்யட்டும்" (உ.வ.). வரும் அறிவன் கிழமையன்று (புதன்) நாங்கள் ஊருக்குப் போகிறோம். வரும் செல்வம் எல்லாம் நம்மதன்று (பழ.), வரும்வினை வழியில் நில்லாது (பழ.).*

*[வா→ வர்→வரு→வரும்]*

**வரும்காலம்** *varum-kālam*, பெ.(n.) 1. நிகழ்காலத்தைத் தொடர்ந்து இனிவரும் எதிர்காலம்; future. 2. வருங்காலம் பார்க்க; see *varuṅgālam*. *வருங்காலம் சொல்லும் பல்லி கழுநீர்ப் பானையில் விழுந்தது போல (உ.வ.).* 3. எதிர்காலத்தைக் குறிப்பது; future-tense. *'ஓடுவான்' என்ற வினைமுற்றில், 'வ்', வரும் காலத்தைச் சுட்டும் இடைநிலை.*

*[வருங்காலம்→வரும்காலம்.]*

**வரும்படி** *varumbaḍi*, பெ.(n.) வருவாய், வருமானத்திற்கான ஆதாரம்; income, source of income. *போதிய வரும்படி இல்லாததால் கடையை மூடிவிட்டார் (உ.வ.). வரும்படிக்கு மீறிய செலவால் வறுமையே மிஞ்சும் (இ.வ.).*

*[வரு + படி[3]]*

**வரும்விதி** *varum-vidi*, பெ.(n.) 1. எதிர் காலத்தில் நிகழ்வதன் பொருட்டு உறுதி செய்யப்பட்ட ஊழ்; befalling destiny. *வரும்விதி நன்மை செய்யுமென்றெண்ணி வீணே இருக்கலாமா? (உ.வ.). அவள் வாழ்வில் வரும் விதியை யார் அறிவார்? (இ.வ.).* 2. எதிர்கால நிகழ்விலுள்ள இயற்கை யொழுங்கு; befalling law of nature. *வரும் விதி வந்தால் படும் விதி பட வேண்டும் (பழ.).*

*[வா→வர்→வரு + விதி]*

**Skt.** vidhi > த. விதி.

**வரும்வினை** *varum-viṉai*, பெ.(n.) எதிர் காலத்தில் நிகழ்வதன் பொருட்டு முற்பிறவியிலும், இப்பிறவியிலும் செய்யும் செயற்பாடுகளுக்கு ஏற்றவாறு வரும் வினை; future deeds occuring according to the acitivities of previous birth and present's birth. *முற்பிறவியின் நற்செயல்களே, எதிர்கால வரும்வினையை உறுதி செய்யும் (இ.வ.).*

*[வருவினை→வரும்வினை.]*

**வருமதனம்** *varu-madaṉam*, பெ.(n.) கன்னல் சருக்கரை; cane sugar.

**வருமதி** *varumadi*, பெ.(n.) வரும்படி, வருமானம், வரவு (யாழ்.அக.); income, source of incoem, receipt. *'அவரிடமிருந்து எனக்கு ஆயிரம் ரூபாய் வருமதி இருக்கிறது' (இ.வ.).*

*[வா→வரு + மதி. மதி = மதிப்பு மிக்க வருவாய்.]*

ஒ.நோ. வெகுமதி.

**வருமம்**[1] *varumam*, பெ.(n.) தீராப்பகை; grudge, spite, malevolence. *"என் பேரில் உனக்கு என்ன வருமம்?" (உ.வ.). வருமம் கொண்டவர்க்கு வன்பகைதான் மிஞ்சும (இ.வ).*

*[வர்மம் → வருமம்]*

**வருமன்**[1] *varumaṉ*, பெ.(n.) மன்னர் பூண்டு கொள்ளுஞ் சிறப்புப் பெயர்; title of the kings. *"திண்டிறற் சித்திர வரும னென்பவே" (பிரமோத். 8, 11).*

*[வர்மன் → வருமன்]*

**வருமாறு** *varumāṟu*, பெ.(n.) 1. வருந்தன்மை, வரும்விதம்; which is as follows. 2. நிகழ்ச்சி முறை; order of occurrence.

*[வா→வரு+ஆறு [1]]*

**வருமானம்[1]** *varu-māṉam*, பெ.(n.) 1. பணி, தொழில் முதலியவற்றால் கிடைக்கும் பணம்; professional or salaried income, source of income. *வணிகத்தில் நல்ல வருமானம் கிடைக்கும் என்றுதான் கடையை ஆரம்பித்தேன் (உ.வ.). வீட்டு வாடகையைத் தவிர வேறு வருமானம் எனக்கு இல்லை (உ.வ.). அரசாங்கத்தில் பணிசெய்தால் நல்ல வருமானம் கிடைக்கும்.* 2. வரிகளின் வாயிலாக அரசிற்கு கிடைக்கும் பணம்; revenue. *வரி விதிப்பதன் மூலம் அரசுக்கு வருமானம் கிடைக்கின்றது.*

*[வா → வரு + மானம்.]*

மானம் அளவை குறித்த பெயரீறு.

(ஒ.நோ.) வெகுமானம்.

**வருமானம்[2]** *varu-māṉam*, பெ.(n.) வருவாய், வரவு, வரும்படி; income, source of income.

க. வரமான.

*[வரு + மானம்[1] = மானம் = அளவை குறித்த பின்னொட்டு]*

ஒ.நோ. தேய்மானம்.

**வருமானவரி** *varumāṉa-vari*, பெ.(n.) வரும்படியின் மேல் விதிக்கும் அரசிறை (தற்கா.); income-tax.

*[வருமானம் + வரி[5]]*

ஒருவருடைய ஆண்டு வருமானம், குறிப்பிட்ட அளவிற்கு மேற்படுமானால், அந்த வருமானத்தின் மீது அரசிற்கு செலுத்த வேண்டிய வரி.

**வருமுலையாரித்தி** *varu-mulai-yāritti*, பெ.(n.) கழகக்கால பெண்பாற் புலவர்; an ancient *šaṅgam* poetess. *குறுந்தொகையில் 176-ம் பாடலை பாடியுள்ளார். நெஞ்சத்தின் கலக்கத்துக்கு மழைநீரின் கலக்கத்தை உவமையாக கூறியுள்ளார். "மழைபொழியும் இயற்கை நிகழ்வினை, வாழ்வியல் நிகழ்வுடன் இணைத்துக் கூறியுள்ள", (குறுந்.176)* பாடல் வருமாறு:-

*"ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்*
*பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்*
*நன்னர் நெஞ்சம் நெகிழ்ந்த பின்றை*
*வரைமுதிர் தேனிற் போகி-யோனே*
*ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ*
*வேறுபுல னன்னாட்டுப் பெய்த*
*ஏறுடை மழையிற் கலுழுமென் னெஞ்சே"*
*(குறுந்.176)*

பற்பல நாளும் என்பால் வந்து, பணிவுடைய மொழிகளைக் கூறி, என்னெஞ்சை இளகச் செய்து, மலையின் முதிர்ந்த தேனிறாலைப் போன்று மனமழிந்து சென்றுவிட்டான். அவன் யாண்டுள னென்பதை யறியேன்.

**வருமை** *varumai*, பெ.(n.) மறுபிறப்பு; next or future birth. *"வருமையு மிம்மையு நம்மை யளிக்கும் பிராக்களே" (திவ். திருவாய். 3, 7, 5).*

*[வா → வரு → வருமை]*

**வருமொழி** *varu-moḻi*, பெ.(n.) புணர்ந்த இணைச் சொற்களில் இரண்டாவதாய் நிற்குஞ் சொல் (Gram.); the following or succeeding word in a compound, dist. fr. *nilai-moḻi*. *"நிலைவரு மொழிக ளியல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே" (நன். 151).*

*[வா → வரு + மொழி[2]]*

பணப்பை என்ற சொல்லில் 'பை' என்பது வருமொழி.

**வருவதுபோவது** *varuvadu-pōvadu,* பெ.(n.) மூச்சு, உயிர்ப்பு (வாசி); respiration, breathing, inhalation and expiration (சா.அக.).

*[வருவது + போவது.]*

**வருவாணிதம்** *varu-vāṇidam,* பெ.(n.) இலவங்கப்பூ; clove, eugenia caryop-*Hyllata* (சா.அக.).

**வருவாய்** *varuvāy,* பெ.(n.) 1. வரும்படி, வருமானம் (யாழ்.அக.); income, source of income. *"வருவாயுட் கால்வழங்கி வாழ்தல்" (திரிகடு.21).* 2. தோன்றும் இடம்; origin, source, avenues, means. *"ஆய்தத்திற்குப் பிறப்பதிகாரத்துள் வருவாய் கூறியவழி" (நன். 121, உரை). வருவாய்த்துறைச் செயலாளர் (இ.வ.). வருவாய் இல்லாத திருக்கோயில்கள் தமிழகத்தில் மிகுதியாக உள்ளன (உ.வ.).*

*[வா → வரு →வருவாய்]*

**வருவாழ்வு** *varu-vāḷvu,* பெ.(n.) மறுவாழ்வு; the future span of life rebirth.

*[வா→வரு + வாழ்வு.]*

**வருவாளுண்டிமூலி** *varu-vāḷuṇḍi-mūli,* பெ.(n.) இலந்தை; jujube-a thorny plant-*Zizyphus jujuba* (சா.அக.).

**வருவி-த்தல்** *varuvi-,*4 செ.குன்றாவி. (v.t.) 1. வரச்செய்தல்; to cause to come, to fetch, to bring, to get, obtain. 2. பொருண்முடிபுக்கு வேண்டிய சொல்லைப் பெய்து கொள்ளுதல் (இலக்.); to supply an ellipsis to complete the sense. *"நுவலும் என்றதற்கு உலகம் நுவலும் என வருவிக்க" (பதிற்றுப். 61, உரை).* 3. கொண்டு வருமாறு செய்தல்; to bring from somewhere. *இந்த மருந்து அயல்நாட்டிலிருந்து வருவிக்கப்பட்டது (இ.வ.).* 4. வேண்டாததை ஏற்படுத்துதல்; இயல்பாக இல்லாததை உண்டாக்குதல்; to invite trouble, etc.; to put on a smile. *இயற்கையோடியைந்து வாழும் வகைதெரியார் தங்களுக்குத் தாங்களே அழிவை வருவித்துக் கொள்கின்றனர் (இ.வ.). அவள் முகத்தில் பொய்யான சிரிப்பை வருவிக்க முயன்றான்.*

*[வா → வரு → வருவி-.]*

**வருவிக்குடை** *varuvi-k-kuḍai,* பெ.(n.) முழங்காற்சிப்பி (கரு.அக.); knee-cap.

*[வருவியம் + குடை]*

**வருவியம்** *varuviyam,* பெ.(n.) முழங்கால் (சங்.அக.); knee.

**வருவிளி** *varu-viḷi,* பெ.(n.) தப்பிச்சி மரம்; a kind of tree (un-identified) (சா.அக.).

மறுவ. ஆவிமரம்

**வருவு-தல்** *varuvu-,*5 செ.குன்றாவி.(v.t.) திறத்தல்; to open, as one's mouth. *'கப்பியமே யென்று வாய் வருவுதலின்' (நீலகேசி. 375, உரை).*

*[வரு →வருவு-.]*

**வருவுமுள்** *varuvu-muḷ,* பெ.(n.) மாழையின் மேல் (உலோகம்) கோடுவரையும் உருக்குமுள்; engineer's scriber for marking gange.

*[வரைவு → வருவு + முள்]*

**வரை[1]–தல்** *varai-*,4 செ.குன்றாவி.(v.t.) 1. கோடிழுத்தல்; எழுதுதல் (சூடா.); to write, inscribe, to draw a line. *வருகை தந்தமை குறித்து மடலொன்று வரைந்தான் (உ.வ.).* 2. ஓவியமெழுதுதல்; to draw with paint. *அது யார் வரைந்த படம் (இ.வ.).* 3. உறுதி செய்தல், நிலைநிறுத்துதல்; to fix, appoint, to ensure, to instal. *"புகழொடுங் கழிக நம் வரைந்த நாளென" (மலைபடு.557).* 4. அளவுபடுத்துதல்; to limit. *"வரையாப் பூச லொண்ணுதன் மகளிர்" (புறநா. 25).* 5. அடக்குதல்; to restrain. *"வரைகிலேன் புலன்க ளைந்தும்" (தேவா. 631, 1).* 6. விலக்குதல்; to exclude. *"உருவுகொளல் வரையார்" (தொல். எழுத்து. 41).* 7. கைவிடுதல்; to leave, abandon. *"கொள்கலம் வரைதலின்" (கலித். 133).* 8. ஏற்றத்தாழ்வு படுத்துதல், வேறுபடுத்துதல்; to differentiate or draw distinctions, to make nice discriminations. *"கொடைமட மென்ப தம்ம வரையாது கொடுத்த லாமே" (சூடா. 9, 10).* 9. நேர்மையான வழியில் பொருளீட்டுதல்; to acquire or earn by legitimate or honest means. *"வரைபொருள் வேட்கையேன்" (சிலப். 10, 51).* 10. தனக்குரியதாக்குதல்; to make one's own; to appropriate. *"அறன் வரையான்" (குறள், 150).* 11. மணஞ்செய்தல்; to marry. *"வெளிப்பட வரைதல் படாமை வரைதல்" (தொல். பொருள். 140).* 12. புதிய திட்டம் (நெறிமுறைகள்) செயற்பாடுகளை உருவாக்குதல்; to draft a rule, resolution, etc. *அமைச்சரவை விரைவில் புதிய கல்வித்திட்டத்தினை வரையவிருக்கிறது (இ.வ.).*

தெ. வ்ராயு.

*[வரி[2] → வரை–.]*

**வரை[2]** *varai,* பெ.(n.) 1. கோடு; line. 2. கைவரி (இரேகை) (சூடா.); line, as in palm of hand or on the fingers; wrinkle, as on the body. 3. எழுத்து (பிங்.); letter. 4. முத்துக் குற்றத்தொன்று (S.I.I.Vol.II.78); a defect in pearls. 5. மூங்கில்; bamboo. *"மால்வரை நிவந்த வெற்பின்" (திருமுரு.12).* 6. மலை; mountain. *"பனிபடு நெடுவரை" (புறநா.6). "மால்வரை மிளிர்க்கும் வருமினும் கொடிதே" (நற். 2 :10), "வான்றோய் சிமைய விறல்வரைக் கவாஅற்" (அகநா.3 : 6).* 7. மலைமுகடு, மலையுச்சி; mountain top, peak. *"மந்திவரை வரை பாய" (பரிபா.15, 39).* 8. பக்கமலை; side-hill, slope of a hill. *"வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருந" (மதுரைக். 42).* 9. கல்; stone. *"வரையம்பு காயெரி மாரிகளாய்" (திருநூற். 34).* 10. சிறுவரம்பு (வின்.); small ridge as of a paddy field. 11. நீர்க்கரை (சூடா.); bank, shore. 12. வரையறை, எல்லை; limit, boundary. *"வளவரை" (குறள், 480).* 13. அளவு; measure, extent. *"உளவரை" (குறள், 480).* 14. விரலிறையளவு (இ.வ.); the measure of the distance between the joints of the forefinger. 15. காலம்; time. *"சிறுவரை" (பு.வெ. 12, பெண்பாற். 17).* 16. இடம்; place, location. *"மலைவரை மாலை" (பரிபா. 10, 1).* 17. ஏற்றத்தாழ்வு நோக்குகை (வின்.); discrimination, paying attention to differences. *"அவன் வரைவின்றிக் கொடுப்பான்".*

தெ. வர; ம. வரு; க. பரெ.

*[வரி→வரை (கோடு)]*

**வரை[3]** *varai,* வி.எ.(adj.) வரைக்கும்; as far as, upto, till, until.

**வரை[4]** *varai,* பெ.(n.) 1. திரை; wrinkles in the face. 2. மாசி பத்திரி; a plant. 3. கற்பாசி; rock mass (சா.அக.).

**வரை[5]** *varai,* இடை.(part.) இடம், காலம், அளவு ஆகியவற்றில் குறிப்பிடப்படுவதே, எல்லையாக, இறுதியாக, மேல்வரம்பாக உடையது என்பதைத் தெரிவிப்பது; upto, till. *"சாலைவரை சென்று திரும்பினான்" (இ.வ.). ஏழுமணி வரை காத்திருந்தான் (உ.வ.). நீ செய்ததுவரை போதும் (இ.வ.).*

*[வரு → வரை.]*

**வரைக்கட்டிடம்** *varai-k-kaṭṭiḍam,* பெ.(n.) கட்டிடம் கட்டுவதற்கென்று தெரிவு செய்து சமப்படுத்திய இடம்; levelled plot or land.

*[வரை + கட்டிடம். கட்டு + இடம் = கட்டிடம். கட்டுகின்ற இடம்.]*

வரை = இடம், எல்லை. வரை என்னும் சொல் இடம் என்னும் பொருளில் கழகவிலக்கியங்களில் பதிவு பெற்றுள்ளது.

(எ.கா.) *"மலைவரை" (பரிபா.10, 1).*

கரடுமுரடாகவிருந்த இடத்தைக் கட்டிடங்கள் கட்டுவதன் பொருட்டுச் செம்மைப்படுத்திய இடம் வரைக்கட்டிடமாகும்.

**வரைக்கட்டு** *varai-k-kaṭṭu,* பெ.(n.) மலைப்பக்கத்தில் திருத்திச் சமன்செய்த விளைநிலம் (நாஞ்.); a levelled arable land adjacent to hill or mountain. *"வரைக்கட்டுக் கோணம்" (நாஞ். வழ.).*

*[வரை + கட்டு. கள் → கட்டு = அமைத்தல், தோற்றுவித்தல்.]*

**வரைக்கடந்தாதி** *varai-k-kaḍandādi,* பெ.(n.) கொசு; mosquito (சா.அக.).

**வரைக்காய்ச்சல்** *varai-k-kāyccal,* பெ.(n.) சுரத்தின் வகையுளொன்று; mountain fever (சா.அக.).

*[வரை + காய்ச்சல். காய் → காய்ச்சல் = சுரநோய்.]*

**வரைக்குடிலம்** *varai-k-kuḍilam,* பெ.(n.) வங்கக்கல் (யாழ்.அக.); lead ore.

*[வரை + குடிலம்]*

**வரைக்கும்[1]** *varaikkum,* வி.எ.(adv.) எல்லை வரை முடிய; as far as, upto, till, until.

தெ. வரகு

*[வரை → வரைக்கும்]*

**வரைக்கும்[2]** *varaikkum,* இடை.(part.) பெயரெச்சத்துக்குப் பின் சொற்றொடரில் குறிப்பிடும் செயலுக்குத் தடையாக இருப்பதைக் கூறுவது; after relative participle until, as long as. *அவனாகக் கேட்கும் வரை நீ பணம் தராதே (உ.வ.). நீ இந்தப் பணியை முடிக்காத வரை இங்கிருந்து போக முடியாது (இ.வ.).*

தெ. வரகு

*[வரை → வரைக்கும்]*

**வரைக்கெண்டை** *varai-k-keṇḍai,* பெ.(n.) கெண்டை மீன்வகை; carp.

*[வரை + கெண்டை]*

**வரைகம்பு** *varai-kambu,* பெ.(n.) கம்மாளர் கருவியுள் ஒன்று (யாழ்.அக.); an instrument used by blacksmiths or metal-workers.

*[வரை + கம்பு [1]]*

**வரைச்சிலம்பு** *varai-c-cilambu,* பெ.(n.) மலைச்சாரல்; mountain slope. *"வரைச் சிலம்பு தொட்டு நிலவுப் பரந்தாங்கு" (பரிபா. 11, 32).*

*[வரை + சிலம்பு. சில் → சிலம்பு. சில் = ஒலிக்குறிப்பு.]*

**வரைச்சிறகரிந்தோன்** *varai-c-cirag arindōn,* பெ.(n.) மலைகளின் சிறகுகளை வெட்டிய இந்திரன் (பிங்.); Indiran, as one who clipped the wings of the mountains.

*[வரை + சிறகு + அரிந்தோன். சில்→சிற→ சிறகு.]*

சிறகு = உறுப்பு, வலிமை, பிரிவு. அர் →அரி. அரித்தல் = அறுத்தல், அழித்தல், நீக்குதல். வரிச்சிறகரிந்தோன் என்னும் சொல், ஈங்கு, மலைகளின் சிறகுகளை அல்லது மலைப் பகுதிகளை வெட்டியழித்த இந்திரன் என்னும் பொருள் பற்றியது.

**வரைச்சுண்டி** *varai-c-cuṇḍi,* பெ.(n.) செடி வகையுளொன்று; a kind of plant (சா.அக.).

*[வரை + சுண்டி]*

**வரைத்தாள்** *varai-t-tāḷ,* பெ.(n.) மலை யடிவாரம்; foot of a mountain. *"வரைத்தாள் வாழ்வேன்" (சிலப். 11, 115).*

*[வரை + தாள் [1]]*

**வரைந்தநாள்** *varainda-nāḷ,* பெ.(n.) 1. வரையறைக்குட்பட்ட நாள்; enclosed days. 2. வாணாள்; duration of life time.

*[வரைந்த + நாள்]*

**வரைநீர்** *varai-nīr,* பெ.(n.) மலையருவி (நாமதீப.81); mountain torrent.

*[வரை + நீர்]*

**வரைநெல்** *varai-nel,* பெ.(n.) மலைப்பாங்கான நிலத்தில் விளையும் நெல்வகை (நாஞ்.); a species of paddy raised in hilly tracts or areas.

*[வரை + நெல்]*

**வரைநேமி** *varai-nēmi,* பெ.(n.) உட்புறம் ஒளியும் வெளிப்புறம் இருளுங் கொண்டு நிலவுலகத்தைச் சூழ்ந்துள்ளதாகக் கருதப்படும் மலை; a mythical range of mountains encircling the orb of the earth and forming the limit of light and darkness. *"வரைநேமியளவுஞ் சென்றகன்றன" (தக்கயாகப். 85).*

*[வரை + **Skt.**நேமி]*

**Skt.** nēma > த. நேமி.

**வரைப்பகை** *varai-p-pagai,* பெ.(n.) இந்திரன்; Indiran. *"நான்கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை" (கல்லா. 30, 8).*

*[வரை + பகை]*

**வரைப்பத்திம்** *varaippattim,* பெ.(n.) மாசிப்பத்திரி; a plant (சா.அக.).

**வரைப்பாசி** *varai-p-pāśi,* பெ.(n.) கற்பாசி; lichen (சா.அக.).

*[வரை + பாசி]*

**வரைப்பாலை** *varai-p-pālai,* பெ.(n.) மலைப் பகுதியில் விளையும் பாலை; a tree growing in mountainous region (சா.அக.).

*[வரை + பாலை]*

**வரைப்பு** *varaippu,* பெ.(n.) 1. எழுதுகை; writing. *"வட்டிகை வரைப்பும் வாக்கின் விகற்பமும்" (பெருங். உஞ்சைக். 34, 168).* 2. எல்லை; limit, boundary. *"இடைநில வரைப்பின்" (மணிமே. 28, 24). "தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாக" (புறநா. 198 : 12), "வெம்பா தாக வியனில் வரைப்பென" (பரிபா. 11 : 80).* 3. மதில்; wall of a fort or temple. *"அருங்கடி வரைப்பின் ஊர்கவி னழிய" (பட்டினப். 269).* 4. சுவர் சூழ்ந்த இடம் (சீவக, 949, உரை); enclosed space, courtyard. 5. வரைந்து கொள்ளப்பட்ட இடம்; enclosed place. *"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்" (தொல்.செய்யுள்.78).* 6. மாளிகை; mansion. *"துணையொடு திளைக்குங் காப்புடை வரைப்பின்".* 7. உலகம்; world. *"தண்கடல் வரைப்பில்" (பெரும்பாண். 18). "திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு" (அகநா.63 : 2).* 8. குளம்; tank. *"புனல் வரைப்பகம் புகுந்தோறும்" (பொருந. 240).*

*[வரை → வரைப்பு]*

**வரைபடம்** *varai-padam,* பெ.(n.) தோற்றம், அமைப்பு, முதலியவற்றைக் காட்டும் கோடுகளால் ஆன படம்; map, plan, diagram, graph. *'இந்திய வரைபடத்தில் கிழக்கு நோக்கிப் பாயும் ஆறுகளின் பெயர்களை எழுது' (இ.வ.). கட்டடம் வரைபடத்தில் உள்ளபடிதான் கட்டப்படுகிறது (இ.வ.).*

*[வரை + படம்]*

**வரைபாய்தல்** *varai-pāydal,* பெ.(n.) மலையுச்சியிலிருந்து கீழே விழுகை; falling oneself down from the top of a hill, a mode of committing suicide. *"வாழ்வின் வரைபாய்தல் நன்று" (நாலடி, 369).*

*[வரை + பாய்தல்.]*

**வரைபொருட்பிரிதல்** *varai-poruṭ-piridal,* பெ.(n.) வரைவிடத்துப் பொருள் வயிற்பிரிதலைக் கூறும் அகப்பொருட்பகுதி (அகப். ) (திருக்கோ.); theme treating of the departure of a lover to earn money for his marriage.

*[வரை + பொருள் + பிரிதல்]*

**வரைமா** *varai-mā,* பெ.(n.) மலைமா; mountain mango (சா.அக.).

*[வரை + மா.]*

**வரைமுறை** *varai-muṟai,* பெ.(n.) இப்படி அல்லது இவ்வளவு என்ற அளவில் நடவடிக்கையைத் திட்டமிடும் கட்டுப்பாடு; restriction. *யாரிடம் என்ன பேசுவது என்ற வரைமுறையே உனக்கு இல்லையா? (இ.வ.).* 2. எல்லை; delinitation, boundary. *எதற்கும் ஒரு வரைமுறை வேண்டும்.* 3. வகுக்கப்பட்ட செயல்முறை; constraint.

மறுவ. தடைவரம்பு.

*[வரை + முறை]*

ஒரு செயலைச் செயல்படுத்தும் வரையறுத்த திட்டஅமைப்பு அல்லது வகுக்கப்பட்ட முறையே வரைமுறையாகும்.

**வரையடுக்கம்** *varai-y-aḍukkam,* பெ.(n.) மலைகளின் தொடர்ச்சி; contiguous mountain range. *"குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப் பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்" (நற்.34:3-4).*

*[வரை + அடுக்கம். அடு அடுக்கு+அம் = பன்மலை வரிசை.]*

**வரையமிர்து** *varai-y-amirdu,* பெ.(n.) மலைபடு செல்வம் (சீவக.2110, உரை.); hilly or mountaneous produce.

*[வரை + அமிர்து. அமிழ்து→அமிர்து.]*

**வரையரமகளிர்** *varai-y-aramagaḷir,* பெ. (n.) மலைவாழ் தெய்வப் பெண்டிர்; mountain-*nymphs.* *"வரையர மகளிரிற் சாஅய்" (குறிஞ்சிப். 195).*

*[வரை + அரமகள்→அரமகளிர் = துன்புறுத்தும் தெய்வப் பெண்.]*

**வரையரையன்** *varai-y-araiyaṉ,* பெ.(n.) மலையரசன் (இமவான்); the *Himālayas* personified, as the king of the mountains. *"வரையரையன் மடப்பாவை" (சேதுபு. சருவ. 39).*

*[வரை + அரசன்→அரைசன்→அரையன்]*

**வரையறவு** *varai-y-aṟavu,* பெ.(n.) 1. எல்லை; வரையறை (யாழ்.அக.); limit. 2. அளவு (சங்.அக.); measuring.

*[வரையறு → வரையறவு]*

**வரையறுக்க** *varai-y-aṟukka,* பெ.எ. (adj.) அறுதியிட; உறுதி செய்ய, வகுக்க, define, prescribe. *இந்தக் காசுகள் கிடைத்த இடத்தை அடிப்படையாகக் கொண்டு, இந்த அரசனின் நாட்டு எல்லையை ஒருவாறு வரையறுக்கலாம் (உ.வ.).*

*[வரையறை → வரையறுக்க. அறு→ அறுக்க.]*

**வரையறு-த்தல்** *varai-y-aṟu-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. தீர்மானித்தல், அறுதியிடல், உறுதிசெய்தல்; to settle, decide, determine, ascertain. *இடத்துக்கு இடம், நாட்டுக்கு நாடு ஒழுக்கம் என்பது வேறுபடுவதால், அதை வரையறுத்தல் கடினம் (உ.வ.). நீங்கள் தயாரித்த பொருள்கள் நாங்கள் வரையறுத்த தரத்தில் இல்லை (இ.வ.). "மறைகளெல்லா முடிய வரையறுத் துணர்ந்து புகலினும்" (வெங்கைக்க. 89).* 2. மதிப்பிடுதல் (பிங்.); to estimate. 3. எல்லைப்படுத்துதல் (சங்.அக.); delimit. 4. வளைத்தல் (யாழ்.அக.); surround, encircle.

*[வரை + அறு-.]*

**வரையறுத்தபாட்டியல்** *varai-y-aṟutta-pāṭṭiyal,* பெ.(n.) பாட்டியல்பற்றிய ஒரு நூல்; a treatise on poetics by sambanda muṉivar.

*[வரையறு + பாட்டியல்]*

இதனைச் சம்பந்தப்பாட்டியல் என்றும் கூறுவர். இது சீர் முதலான மங்கலங்களை வரையறுத்துக் கூறினமையால், இப் பெயர் பெற்றதெனலாம். இந்

நூலையியற்றிவர் இன்னாரென அறியமுடியவில்லை. சம்பந்த முனிவரின் மாணவர் ஒருவர் இயற்றினார் என்று கருதுகின்றனர்.

**வரையறுத்தான்** *varai-y-aruttāṉ,* பெ.(n.) பேய்த்தம் பட்டை அவரை; a creeper belonging to field or garden bean family (சா.அக.).

தம்பட்டையவரை வகையு ளொன்று. படர்கொடி வகையைச் சார்ந்தது. கறி சமைத்துண்பதற்கு உகந்தது. மருத்துவக் குணமிக்கது என்று சா.அக. கூறும்.

**வரையறை**[1] *varai-y-aṟai,* பெ.(n.) 1. பொருள் வரையறை அல்லது சொற்பொருள் விளக்கம்; definition. *இலக்கியம் என்பது, பொருள் வரையறைக்கு அப்பாற்பட்டது (உ.வ.). கற்பனைக்கு என்ன வரையறை வகுக்க முடியும்? (இ.வ.).* 2. வரம்பிடுகை; delimitation. *கல்லூரி காலவரையறையின்றி மூடப்பட்டது (இ.வ.).*

*[வரையறு→வரையறை]*

**வரையறை**[2] *varaiyaṟai,* பெ.(n.) 1. எல்லை; limit, boundary. *"நாள் வரையறை நோக்கும்" (திருவானைக். நாட். 83).* 2. அளவு (சங்.அக.); measurement. 3. அடக்கவொடுக்கம் (இ.வ.); restraint in manners or behaviour. 4. கண்டிப்பு (இ.வ.); strictness. 5. திட்டம் (இ.வ.); accuracy, exactness, precision. 6. முடிபு (இ.வ.); termination. 7. வரைமுறை பார்க்க; see *varai-muṟai.*

*[வரையறு → வரையறை]*

**வரையறை**[3] *varaiyaṟai,* பெ.(n.) தான் குறிக்கக்கூடிய பலபொருள்களும் ஒன்றற்கே அல்லது அதன் ஒரு கூற்றிற்கே, சிறப்பாக ஆளப்பெறுதல்; restriction.

*[வரையறு → வரையறை]*

குறிப்பிடப்பட்ட ஒன்றை, இத் தன்மைத்து அல்லது இவ்வளவு என்று, வரையறுத்துக் காட்டுவதே வரையறை.

| சொல் | குறிக்கும் பொருள் | வரையறைப் பொருள் |
|---|---|---|
| மனை | வீடு, மனைவி | வீட்டு நிலம் |
| யாம் | இருவகைத் தன்மைப்பன்மை | உளப்பாட்டுத் தன்மைப்பன்மை |

மணம், குணம், ஒழுக்கம் என்னும் பொதுச் சொற்களை நல்வகைக்கும், நாற்றம், வீச்சம் என்னும் பொதுச் சொற்களைத் தீயவகைக்கும், வழங்குவதும் வரையறையே (தவ.I, பக்.104).

**வரையறைகூறு-தல்** *varai-y-aṟai-kūṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஒன்றன் பண்பை வரையறுத்துக் கூறுதல்; to define or prescribe one's character.

*[வரையறு→வரையறை + கூறு-.]*

குல் → கூல் → கூறு-. குல் = பொருந்து, பொருத்தமாய்ச் சொல். வரையறை கூறுதல் ஒன்றன் பண்பை, அப் பொருளின் தன்மையையொட்டிப் பொருத்தமாக வரையறுத்து மொழிதல். இச்சொல் குறித்து இளம்பூரணர் இயம்பும், சிறப்பு விளத்தம் வருமாறு :-

"வரையறை கூறுதலாவது ஒன்றன் பண்பை வரையறுத்தாற் போலக் கூறுவதாகும். விளக்கிக் கூறுகின்ற தன்மையையும் இதனுள் அடக்கலாம்".

'பரத்தையர்' என்ற சொல்லுக்கு இளம்பூரணர் கூறுகின்ற விளக்கம் அவர்க்குரிய பண்பைச் சுருங்கிய சொற்களால் தெளிவாக விளக்குகின்றது. "ஆடலும் பாடலும் வல்லாராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகிற ஒருவர் மாட்டும் தாங்காதார்" (இளம்.தொல்.பொருள்.149) என்ற அவ்விளக்கம், அதற்குரியாரை ஓவியமாக்கிக் காட்டுகின்றது. இதனால் அவர்களது தோற்றப் பொலிவும், கலைத் திறமையும், காமத்திளைப்பும், உண்மைப் பண்பும் ஒருசேரக் காட்டப் பெறுகின்றன.

வரையாட்டுக்கொம்பு *varai-y-āṭṭu-k-kombu,* பெ.(n.) கம்பளியாட்டுக் கொம்பு; horn of fleec sheep (சா.அக.).

*[வரையாடு + கொம்பு]*

வரையாடு *varai-y-āḍu,* பெ.(n.) 1. மான் வகை (M.M.775); ibex. 2. காட்டாடு; jungle sheep. *"ஓங்குமால்வரை வரையா டுழக்கலி னுடைந்துகு பெருந்தேன்" (சீவக. 1559). "வரையாடு வருடைத் தோற்றம் போல" (பட்டினப்.139).*

மறுவ. வருடை.

*[வரை + ஆடு]*

வரை = மலை. மலைகளில் மேய்ந்து திரியும் ஆடு. மூலிகைகளை மேய்ந்து வளர்வதால், இதன் கறி மருத்துவக் குணமிக்கது (சா.அக.).



வரையாத்தி *varai-y-ātti,* பெ.(n.) மலையாத்தி மரம்; variegated mountain ebony. *"வரையாத்தி நீழல்" (குற்றா. தல. பராசக்தி. 10).*

*[வரை + ஆத்தி.]*

வரையாநுகர்ச்சி *varaiyā-nugarcci,* பெ.(n.) களவுப்புணர்ச்சி; secret union of lovers. *"வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி" (பரிபா. 8, 41).*

*[வரை + ஆ + நுகர்ச்சி. 'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

வரையாப்படங்கு *varaiyā-p-paḍaṅgu,* பெ.(n.) ஒரு வகை மருந்துச் செடி; a kind of medicinal herb (சா.அக.).

வரையால் *varaiyāl,* பெ.(n.) கல்லால மரம்; a variety of banyan, *Ficus infectoria* (சா.அக.).

வரையாலிகம் *varai-yāligam,* பெ.(n.) முல்லை; plant, a species of Jasmine family (சா.அக.).

வரையாவீகை *varaiā-v-īgai,* பெ.(n.) பெருங்கொடை; unstinted liberality, as making no distinction among the recepients. *"வரையாவீகைக் குடவர் கோவே" (புறநா. 17).*

*[வரை + ஆ + ஈகை¹]*

வரையாழி *varai-y-āḻi,* பெ.(n.) 1. சக்கரவாள மலை; a mythical mountain range. *"கடலாழி வரையாழி தரையாழி" (தக்கயாகப். 6).* 2. மலை (தக்கயாகப். 6, உரை); mountain.

*[வரை + ஆழி¹. ஆல்→ஆள்→ஆழ்→ஆழி = ஞாலத்தைச் சுற்றியமைந்த மலைத் தொடர்.]*

**வரையில்** *varai-y-il,* இடை.(part.) வரைமுறை பார்க்க; see *varai-muṟai.*

*[வரை→வரையில்]*

**வரையுடகம்** *varai-yuḍagam,* பெ.(n.) நல்ல மாதுளை; a species of pomogranate (சா.அக.).

வயிற்று நோவினைப் போக்கும். இதன் பழச்சாறு, உடலுக்கு மினுமினுப்பைத் தரும். வயிற்றுக் கழிச்சலைப் போக்கும். வயிற்றுக் கடுப்பினைப் போக்கிச் செரிமானமும், பசியையும் அதிகரிக்கச் செய்யும் என்று சா.அக. கூறும்.

**வரையும்** *varaiyum,* வி.எ.(adv.) வரை, எல்லை, முடிய; as far as, upto, till.

*[வரை → வரையும்]*

**வரையுறுத்து–தல்** *varai-y-uṟuttu-,* 4 செ.குன்றாவி.(v.t.) வரையறு–த்தல் பார்க்க; see *varai-y-aṟu-,*

*[வரை + உறுத்து–.]*

**வரையெருக்கு** *varai-erukku,* பெ.(n.) மலை எருக்கு; mountain madder shrub (சா.அக.).

**வரையோடு** *varai-y-ōḍu,* பெ.(n.) உரலின் வாயோடு (யாழ்ப்.); ring-shaped stone piece placed over a mortar to prevent the grain from scattering while husking.

*[வரை + ஓடு²]*

**வரைவாழை** *varai-vāḻai,* பெ.(n.) மலைவாழை (சிலப்.11, 83, உரை); a kind of plantain grown in mountain regions.

*[வரை + வாழை]*

**வரைவாளர்** *varai-vāḷar,* பெ.(n.) வரைபடம் வரைபவர்; draftsman, draughtsman.

*[வரை → வரைவு + ஆளர்.]*

**வரைவில்லி** *varai-villi,* பெ.(n.) பொதுமகள் (நாமதீப. 5); prostitute, harlot.

*[வரைவு + இல் + இ. 'இ' உடைமைப் பொருளீறு.]*

**வரைவிலக்கணம்** *varai-v-ila-k-kaṇam,* பெ.(n.) வரையறை; definition. *"கலைக்கு வரைவிலக்கணம் கூறமுடியுமா?"* (உ.வ.).

*[வரைவு + இலக்கணம்]*

**வரைவின்மகளிர்** *varaivin-magaḷir,* பெ.(n.) பொது மகளிர் (குறள்.); prostitutes, harlots.

மறுவ. இருமனப்பெண்டிர், கணிகையர், பரத்தையர், விலைமாது, விலைமகள்.

*[வரைவு + இல் → இன் + மகளிர்]*

வரைவின் மகளிர் பற்றி மொழிஞாயிறு கூறுவது :– இல்லறம் புகாதும், கற்பைக் காவாதும், அழகு, துப்புரவு, புனைவு, முத்தமிழ்க்கலை முதலியவற்றால், ஆடவரை மயக்கி, வெளிப்படையான கொடிய நோயும், துப்புரவில்லாது தீ நாற்றம் வீசும் அருவருப்பான தோற்றமுமற்ற ஆடவர்க்கெல்லாம், குலம், மதம், பருவம், நிலைமை முதலான வேறுபாடின்றித் தம் நலத்தைப் பொருட்கு விற்கும் பொதுமகளிர், பலரொடும் வரையாது கூடுதலால் வரைவின் மகளிர் எனப்பட்டனர். (திருக். தமிழ்மரபுரை. பக். 149).

அழியும் பொருள் மேல் அவாவுறும் மகளிர், ஆரா அன்பினை அறியாத பெண்டிர்.

ஒருவரிடத்துள்ள பொருளின் அளவிற்கேற்ற வண்ணம், அன்பு செலுத்தும் பண்பில் மகளிரே இருமனப்பெண்டிர். இம்மாய மகளிரைப் பேரறிவாளர், ஒருபோதும் நாடார். கள்ளநெஞ்சங் கொண்ட இவ் வரைவின் மகளிர், குமுகாய மாந்தர்தம் உள்ளத்தை உற்றுநோக்கார். உடம்பை விற்றுப் பொருள் தேடுவதையே தம் வாழ்வின் முடிந்த முடிபாகக் கொள்வர். மன்பதையில் மாய்ந்தொழியும் பகட்டாரவாரப் பொருளினையே, வாழ்பொருளாக நினைந்து, சுவரினை விற்றுச் சித்திரம் வாங்குவது போல், தம்பேரெழில் தொலைத்துப் பெரும்பொருளீட்டி, வாணாளிறுதியில், அப் பொருளினைத் துய்க்காது, வறிதே மாய்வர். இத்தகைய இழிகுண மங்கையரையே வள்ளுவப் பேராசான் பொருட்பெண்டிர் என்றும், இருமனப் பெண்டிர் என்றும் இடித்துரைக்கின்றார். இத்தகையோரைக் கூடி மகிழ்வோர், பிணத்தைக் கூடும் பேதைமையாளர் எனில் மிகையன்று. இப் பொருண்மை பொதிந்த பொதுமறைப் பாடல் வருமாறு:–

*"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி லேதில் பிணந்தழீ இயற்று" (குறள், 914).*

வரைவின் மகளிர் பற்றிப் பரிமேலழகர் கூறுவது:– "தம் நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது, அதற்கு ஆவார், ஆகாதார் என்னும் வரைவு இல்லாத மகளிர்".

மணக்குடவர் கூறுவது :– "முயக்கத்தில் வரைவின்மையால், வரைவின் மகளிர் என்று கூறப்பட்டது".

**வரைவின்மாதர்** *varaivin-mādar,* பெ.(n.) வரைவின்மகளிர் பார்க்க; see *varaivin-magaḷir.*

*[வரைவு + இல் → இன் + மாதர்]*

**வரைவு¹** *varaivu,* பெ.(n.) **1.** எழுதுகை (திவா.); writing. **2.** ஓவியமெழுதுகை; painting. **3.** எல்லை; limit. *"வரைவின்றிச் செறும் பொழுதின்" (கலித். 8).* **4.** அளவு (வின்.); measurement. **5.** ஏற்றத்தாழ்வு நோக்குகை; discrimination, paying attention to differences. *"வரைவறக் கொடுப்போன்" (சூடா. 2, 48).* **6.** திருமணம்; marriage. *'வரைவுநன் றென்னா தகலினும் அவர் வந்து" (அகநா. 119 : 4). "உரைசா னன்கலம் வரைவில வீசி" (பதிற்று. 54 : 8).* **7.** ஒழுக்கநெறி; the path of good conduct. **8.** நீக்கம் (திவா.); rejection, exclusion, deletion. **9.** பிரிவு (வின்.); separation.

*[வரை → வரைவு]*

வரைவு பற்றி இளம்பூரணர் பொருளதிகாரத்தில் புகல்வது :– "வரைவு என்பது செய்யத்தகுவனவும், தவிரத் தகுவனவும், வரைந்து ஒழுகும் ஒழுக்கம்" (இளம்.தொல். பொருள்.256).

**வரைவு²** *varaivu,* பெ.(n.) திட்டம், சட்டம் முதலியவற்றின் திருத்தத்துக்கு உள்ளாகக் கூடியபடி; முதற்படி; draft of a plan, etc.; proposal. *அடுத்த ஐந்தாண்டுத் திட்ட வரைவு ஒன்று வகுக்கப்பட்டு வருகிறது (உ.வ.).*

*[வரை → வரைவு]*

வரைவுகடாதல் *varaivu-kaḍādal,* பெ.(n.) தலைவியை மணம் புரிந்து கொள்ளுமாறு தோழி தலைமகனை வற்புறுத்தும் அகத்துறை (அகம்.) (திருக்கோ. 130); theme of the female companion of the heroine urging the hero to marry her mistress.

*[வரைவு + கடாவுதல் →கடாதல்.]*

வரைவுடன்படுதல் *varaivuḍaṉ-paḍudal,* பெ.(n.) தலைவியின் சுற்றத்தார் தலைமகற்கு அவளை மணம்புரிவிக்க உடன்படும் அகத்துறை (அகம்.) (கலித்.107, துறைக் குறிப்பு); theme in which the parents of the heroine give their consent to her marriage with the hero.

*[வரைவு + உடன்படுதல்.]*

வரைவுமலி-தல் *varaivu-mali-,* 2 செ.கு.வி. (v.i.) மணநிகழ்வதுபற்றி மகிழ்வுறுதல்; to feel happy at the prospect of marriage. *"அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவு மலிந்து கூறியது" (கலித். 37, துறைக்குறிப்பு).*

*[வரைவு + மலி-.]*

வரைவெழுத்து *varaiveḻuttu,* பெ.(n.) எழுத்தாணி கொண்டு ஏட்டிலெழுதப் பெறும் எழுத்து; stylus for writing on *ēḍu* (palmra leaf).

*[வரைவு + எழுத்து.]*

வரைவெழுத்தும் வெட்டெழுத்தாகிய வட்டெழுத்தும், எழுதப்படும் கருவிக்கேற்ப வெவ்வேறு சொல்லாற் குறிக்கப் பெறும். கையினால் மணலிலும், மையினால் துணியிலும், சுவரிலும், எழுத்தாணியால் ஒலையிலும் வரையும் ஒவ்வொரு வரிவடிவும், ஒரே தொடர்ச்சியாக, கோடிழுத்து வரையும் எழுத்தென்க.

வல்[1] *val,* பெ.(n.) கட்டுக்கொடி; coagulating creeper, cocculus villosus (சா.அக.).

வல்[2] *val,* பெ.(n.) 1. வலிமை (சூடா.); strength, power. *"ஒலிவல் ஈந்தின் உலவைஅம் காட்டு" (நற்.2:2). "வல்லசுரர் ஆகி" (திருவாசகம். சிவபுராணம்).* 2. திறமை; ability, capacity, talent, skill. 3. மேடு (உரி.நி.); hillock. 4. சூதாடுங்கருவி (தொல். எழுத்து. 373); dice. 5. முலைக்கச்சு (யாழ்.அக.); bodice.

வல்[3] *val,* பெ.(n.) விரைவு (சூடா.); quickness, hurriedness, speed, haste. *"எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா" (அகநா. 9: 17). "வழிபடு வோரை வல்லறி தீயே" (புறநா.10 : 1).*

வல்கம் *valgam,* பெ.(n.) மரப்பட்டை (தைலவ.); bark of tree (சா.அக.).

வல்கலம் *valkalam,* பெ.(n.) 1. மரப்பட்டை (தைலவ.); bark of tree. 2. சில உடலுறுப்புகளை மூடியிருக்கும் சவ்வு; cortex.

*[வல்+கலம். குல்→கல்→கலம் - மரத்தில் அல்லது உடலில் இயற்கையாய் பொருந்தியது.]*

வல்கி *valgi,* பெ.(n.) யாழ் (திவா.); lute.

வல்கிதம் *valgidam,* பெ.(n.) வற்சிதம் (யாழ்.அக.); gallop, a pace of horse.

*[வல் + கிதம்.]*

**Skt.** kita > த. கிதம்.

**வல்சி** *valši,* பெ.(n.) 1. உணவு; food. *"வளைகதிர் வல்சிகொண் டளைமல்க வைக்கும்" (புறநா. 190). "குறும்பி வல்சிப் பெருங்கை யேற்றை" (அகநா. 8 : 2). "எறிமட மாற்கு வல்சி ஆகும்" (நற். 6 : 8).* 2. சோறு (பிங்.); boiled or cooked rice. *"கொழுவல்சி" (மதுரைக். 141).* 3. அரிசி (சா.அக.); rice. *"வல்சி காய்களின் வருக்கமும்" (திருவிளை. குண்டோ. 175).* 4. நெல்; paddy. *"வினைஞர் வல்சி நல்க" (மலைபடு. 462).*

*[உல் → வல் → வல்சி]*

**வல்மீகம்** *valmīgam,* பெ.(n.) 1. கறையான் புற்று; ant-hill. 2. ஆனைக்கால்; elephantiasis (சா.அக.).

*[வல்மீக → வல்மீகம்]*



**வல்ல** *valla,* பெ.அ.(adj.) 1. ஆற்றல் மிக்க; வலிமையுள்ள; powerful. *குறிப்பிடப் படுவதை நிகழ்த்தக்கூடிய.* 2. திறமையுள்ள; skilful, capable, talented, efficient. *குளிர் காய்ச்சலை உடனடியாகக் குறைக்கவல்ல மருந்து.*

தெ. வல்ல.

*[வல்[1] → வல்ல]*

**வல்லக்கட்டி** *valla-k-kaṭṭi,* பெ.(n.) வல்லைக் கட்டி; enlargement of spleen.

*[வல்ல + கட்டி.]*

குள் → கள் → கட்டு → கட்டி. கள் = திரளல், பெருகுதல், உருண்டையாதல், உருண்டு கட்டியாதல், வல்லக்கட்டி என்பது திரண்டு பெருகுதலால் ஏற்படும் தோற்றம்.

**வல்லக்காடு** *vallakkāḍu,* பெ.(n.) சுடுகாடு; cremating ground, burial ground. *"வயசோ வல்லக் காடோ?" (இ.வ.).*

தெ. வல்லகாடு

*[வல்ல + காடு.]*

கடு = மிகுதி, செறிவு, அடர்த்தி. மரங்களின் செறிவு மிக்க இடம். இங்கே காடு என்னும் சொல் காடுவெட்டி நிலந்திருத்தியபோது, விளைநிலம் என்னும் பொருண்மையிலும், அடுத்து விளைநிலத்தையடுத்த ஊர் எல்லை யென்னும் பொருளிலும், இறுதியாக ஊரெல்லையின் கண்ணே அமைந்த சுடுகாடு என்னும் பொருள்களில் புடைபெயர்ந்துள்ளது.

**வல்லக்கோட்டை** *valla-k-kōṭṭai,* பெ.(n.) புகழ்பெற்ற முருகன் கோவிலமைந்த ஊர்; a fabulous Lord Murugan temple located in Kāñcipuram Dist.

**வல்லகி** *vallagi,* பெ.(n.) வல்கி பார்க்க; see *valgi.*

*[வல்ல → வல்லகி]*

**வல்லகை** *vallagai,* பெ.(n.) வாழை; plantain (சா.அக.).

**வல்லங்கை** *vallaṅgai,* பெ.(n.) வலதுகை; right hand.

*[வலக்கை→வல்லக்கை→வல்லங்கை.]*

குல் = கூடுதல் கருத்து வேர். குல் →குய் →கய் (செய்தல்) →கெய் →செய். செய் →கெய் →கை.

**வல்லசம்** *vallaśam,* பெ.(n.) மிளகு; pepper- *Piper nigrum* (சா.அக.).

**வல்லடி** *vallaḍi,* பெ.(n.) 1. வல்லபம்[2] (யாழ்.அக.) பார்க்க; see *vallabam*[2]. 2. வலுக்கட்டாயம் (சங்.அக.); force, compulsion. 3. கட்டாயம், வலிமை; compulsion. 4. கொடுமை; oppression, cruelty. 5. நோயின்றித் தற்கொலை முதலியவற்றால் நேரும் இறப்பு; unnatural death. *"வல்லடி வாரிக்கொண்டு போக" (உ.வ.).*

தெ. வல்லடி.

*[வல்[1] + அடி[2]. அடு→ அடி.]*

**வல்லடிக்காரன்** *vallaḍi-k-kāraṉ,* பெ.(n.) 1. வன்முறையால் வினை முடிப்போன்; bully, one who achieves or attains his object forceably. *"வல்லடிக்காரர்க்கு விளக்கேற்றிக் காட்டுமா போலே" (ஈடு. 9, 5, 3).* 2. கொள்ளைக்காரன்; plunderer, robber.

*[வல்லடி + காரன்.]*

(ஒ.நோ.) பணக்காரன், வீட்டுக்காரன்.

கரு→காரன் = வினைமுதல் உடைமைப் பொருளிற் பயின்றுவரும், ஆண்பாற் பெயரீறு. வல்லடிக்காரன் என்னுமிச் சொல்லில், வலிமை அல்லது ஆற்றலைக் கொண்டு, வன்முறையால் வினைமுடிப்போனைக் குறித்து வழங்கிற்று எனலாம். காரி (பெ.பா.). வீட்டுக்காரன் என்பது உரிமையும், பணக்காரன் என்பது உடைமையும், காவற்காரன் என்பது வினையுடைமையும் (குலப் பெயராயின் வினையுரிமையும்), அண்ணன் காரன் என்பது உறவுரிமை உணர்த்தும் பெயர்களாகும். தோட்டக்காரன், வண்டிக்காரன், மாட்டுக்காரன் என்பன உரியவனைக் குறிக்காவிடத்துப் பொறுப்புரிமைக்காரனைக் குறிக்கும். உரியவன் சொந்தக்காரன்.

காரன் காரியீற்றுப் பெயர்கள் நூற்றுக் கணக்கின.

காரன் (kāra)→ வ. கார.

வடமொழியாளர் இவ்வீற்றை வட சொல்லாக்குவதற்கு 'க்ரு' (செய்) என்னும் முதனிலையினின்று திரித்துச் செய்பவன் என்று பொருள் கூறுவர். ஆட்டுக்காரன், கோழிக்காரன், சொந்தக்காரன், தண்ணீர்க்காரன், நாழிமணிக்காரன், புள்ளிக்காரன், முட்டைக்காரன், வெள்ளைக்காரன் முதலிய பெயர்கட்குச் செய்பவன் என்னும் பொருள், பொருந்தாமை காண்க. வேலைக்காரன், கூலிக்காரன் என்பனவும் வினையுடைமையே குறிக்கும்.

**வல்லடியடி[1]–த்தல்** *vallaḍi-y-aḍi-,* 4 செ. F ‹ whÉ (v.t.) வலுக்கட்டாயஞ் செய்தல்; to compel, force.

*[வல்லடி + அடி–. அடு→அடி.]*

**வல்லடியடி[2]–த்தல்** *vallaḍi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கொடுமை யிழைத்தல்; to cause oppression, to enforce cruelty.

*[வல்லடி + அடி–. அடு→அடி.]*

வல்லடிவம்பன் *valladi-vamban,* பெ.(n.) வலக்கட்டாயத்தால் செயலை முடித்துக் கொள்வோன்; bully, one who achieves his object by using force. *"வடிப்பமாய்ப் பேசிவரும் வல்லடிவம்பர்களும்" (ஆதி யூரவதானி. 23).*

*[வல்லடி + வம்பன]*

வல்லடிவழக்கு *valladi-valakku,* பெ.(n.) 1. அழிவழக்கு (இ.வ.); unreasonable insistence, unjust or oppressive claim. 2. நெறிமுறையின்றி வல்லுரத்தைப் பயன்படுத்துகை (வின்.); unjustifiable or unreasonable use of force.

*[வல்லடி + வழக்கு. வழங்கு→வழக்கு.]*

வல்லடை *valladai,* பெ.(n.) கூரைவீட்டில் கூரையின் அடிப்பகுதியில் அமைந்த புல் அல்லது தட்டையாலாகிய கட்டு; a kind of grass or sedge used underneath the thatched roof of a house.

*[வல் + அடை. அடு→அடை.]*

வல்லணங்கு *val-l-anangu,* பெ.(n.) காளி (பிங்.); kāḷi, as powerful.

*[வல்[1] + அணங்கு. உணங்கு→ அணங்கு.]*

உணங்கு = வருந்து, வருத்து.

உண்மைக்குப் புறம்பானவரை பிறருக்கு இன்னல் விளைவிப்போரை, வருத்தும் பெண் தெய்வமென்று, ஊரகத்தார் நம்பினர். பிறரை வருத்துவோருக்கு இன்னல் தருபவள் என்றும், கடுந்துயரங்களைந்து எத்தகு வலிமை வாய்ந்த இன்னல் களைபவளே காளி.

வல்லத்துக்கல் *vallattu-k-kal,* பெ.(n.) வல்லத்துவில்லை பார்க்க; see *vallattu-villai.*

மறுவ. பளிங்கு

*[வல்லம்[3] + அத்து + கல்]*

வல்லத்துக்கிட்டம் *vallattu-k-kittam,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தின் அருகிலுள்ள வல்லம் என்னும் ஊரில் எடுக்கும் சிறந்த கிட்டம்; over burnt brick found at vallam near Tañjore District (சா.அக.).

*[வல்லம் + அத்து + கிட்டம்.]*

வல்லத்துவில்லை *vallattu-villai,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள வல்லம் என்னும் ஊரிற்கிடைக்கும் பளிங்குக் கல்; crystals for spectacles, as obtained from Vallam area in Tañjore District.

*[வல்லம்[3] + அத்து + வில்லை]*

வல்லதம் *valladam,* பெ.(n.) 1. கொலை (யாழ்.அக.); murder. 2. மூடுகை; covering.

*[வல் → வல்ல → வல்லதம்]*

ஒருகா. வல் + அதம் = ஓரீறு என்றுமாம்.

வல்லந்தம் *vallandam,* பெ.(n.) 1. வலுக்கட்டாயம், வலாற்காரம்; compulsion. 2. வன்மை, வலு; might, strength. 3. உரம், வலிமை; power, energy.

*[வல்ல : வலிமையுள்ள, வல்ல → வல்லந்தம்]*

வல்லநாய் *vallanāy,* பெ.(n.) சூதாடு கருவியாகிய நாய் (தொல். எழுத்து. 384, உரை); a piece in gambling.

*[வல்[1] → வல்ல + நாய்]*

**வல்லப்பலகை** *valla-p-palagai,* பெ.(n.) சூதாடுதற்குரிய பலகை (தொல். எழுத்து. 384, உரை); gambling board.

*[வல் 1 → வல்ல + பலகை]*

**வல்லபசத்தி** *vallabašatti,* பெ.(n.) வல்லவ சத்தி பார்க்க; see *vallava-šatti.*

*[வல்லபம் 2 + சத்தி 4]*

**வல்லபடி** *valla-paḍi,* வி.எ.(adv.) முடிந்தபடி; to the best of one's ability. *"தாம் வல்லபடி பாடி" (புறநா. 47, உரை).*

*[வல்ல + படி3]*

**வல்லபம்1** *vallabam,* பெ.(n.) வல்லவம்1 பார்க்க; see *vallavam1.*

**வல்லபம்2** *vallabam,* பெ.(n.) குங்கிலியம்; resin (சா.அக.).

வல்லபம் என்பது வெள்ளைக் குங்கிலியம், கருங்குங்கிலியம் என்னும் இருவகை மரப்பிசினையும் குறிக்கும்.இப்பிசின் நீரில் கரையாது;

இம் மரப்பிசின் பொருள்களை நன்கு இறுக ஒட்டுந் தன்மை மிக்கது.

**வல்லபன்1** *vallaban,* பெ.(n.) வல்லவன்2 பார்க்க; see *vallavan2.*

*[வல்லபம்2 → வல்லபன்]*

**வல்லபன்2** *vallaban,* பெ.(n.) வல்லவன்3 பார்க்க; see *vallavan3.*

*[வல்லபம் 2 → வல்லபன்]*

**வல்லபேதம்** *vallabēdam,* பெ.(n.) ஞாழல்; european saffron.

**வல்லம்1** *vallam,* பெ.(n.) ஆற்றல்; power, strength, energetic capacity. *"வல்லம்பேசி வலிசெய் மூன்றூரினை..... நூறினான்" (தேவா. 380, 6).*

*[வன்–மை → வல்லமை → வல்லம்]*

ஒருகா. வல்→ வல்லம்.

**வல்லம்2** *vallam,* பெ.(n.) வல்லவை, 1 (அக.நி) பார்க்க; see *vallavai.*

**வல்லம்3** *vallam,* பெ.(n.) 1. வேலூர் மாவட்டத்திலுள்ள ஒரு சிவத்தலம்; a Šiva shrine located in Vellore District. 2. தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரு நகரம்; a town situated in the Tañjore district. *"வல்ல மெறிந் தானேந்து வாள்" (பெருந்தொ. 961). "நெடுங்கதிர் நெல்லின் வல்லம் கிழவோன்" (அகநா. 356 : 13).* 3. வல்லத்துவில்லை பார்க்க; see *vallattu-villai.* 4. வாழை (மலை.); plantain. 5. இரண்டு மஞ்சாடி நிறை (நாமதீப. 804); a quality weight 2 *mañjāḍi.*

**வல்லம்4** *vallam,* பெ.(n.) வட்டமான ஓலைக் கூடை (இ.வ.); round shaped Ōla basket.

*[முல் → மல் → வல் → வல்லம்]*

வல்லம் = வட்டவடிவமாக மிடைந்து பின்னப்பட்ட ஓலைக்கூடை.

**வல்லம்5** *vallam,* பெ.(n.) 1. வைப்புநஞ்சு வகையுளொன்று; a kind of arsenic. 2. பருப்பு வகையுளொன்று; a kind of pulse (சா.அக.).

**வல்லம்6** *vallam,* பெ.(n.) வள்ளம் பார்க்க; see *vaḷḷam.*

**வல்லம்கிட்டம்** *vallam-kiṭṭam,* பெ.(n.) இரும்பு முதலியவற்றின் மாழைக்கட்டி; ore lump of metal.

*[வல்லம் + கிட்டம். குள் → கிள் → கிட்டம் = திரட்சி, கட்டி.]*

இந்தக் கிட்டம் தஞ்சைக்கு அருகேயுள்ள வல்லத்தில் மிகுதியாகக் கிடைக்கிறது. இங்கு உற்பத்தியாகும் கிட்டம் ஏனைய பகுதிகளில் கிடைக்கும் கிட்டத்தைவிட மிகச் சிறந்தது. இதன் சிறப்புத் தன்மையை அடிப்படையாகக் கொண்டு, வல்லம்கிட்டம் என்று பெயர்பெற்றது.

**வல்லம்பன்** *vallamban,* பெ.(n.) தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் மாவட்டங்களில், வேளாண் தொழில் செய்து வாழும் ஓர் இனம்; a cultivating caste in Tañjāvūr, Tiruchirāppaḷḷi and Rāmanādapuram Districts.

*[வல்[1] + அம்பு → அம்பன் = வல்லம்பன்]*

**வல்லமை** *vallamai,* பெ.(n.) 1. பெரும் வலிமை; might, power, prowess. *"காதுசிலை வல்லமைகள்" (திருக்கலம். 72). இந்தியா வல்லமை பொருந்திய நாடாக வளர்ந்து வருகிறது (உ.வ.).* 2. திறன்; ability, skill, expertness. *முத்துக் குளிப்பவர்கள் நீண்ட நேரம் நீருக்குள் மூழ்கியிருக்கும் வல்லமை படைத்தவர்கள் (இ.வ.).*

*[வல்[1] → வல்ல → வல்லமை]*

**வல்லயம்** *vallayam,* பெ.(n.) ஈட்டிவகை; a kind of spear. *"வல்லயந் தனிலுடைவாளில்" (கந்தபு. தருமகோ. 24).*

தெ. பல்லமு; க. பல்லக.

*[வல் + அயம் – வல்லயம் = வலிமை பொருந்திய ஈட்டி வகை.]*



**வல்லரசு** *val-l-arašu,* பெ.(n.) பொருளாதாரத்தில் அல்லது வலிமைசான்ற படைத்திறன் மிக்க நாடு; country of predominance in economy or in military; super power country. *வல்லரசுகள் படைக்குறைப்புச் செய்ய முன்வந்தால், மக்கள் அமைதியாக வாழ்வர் (உ..வ.).*

*[வல் + அரசு. அரசன் → அரசு (ஈறுகெட்டது). (ஒ.நோ.) வேந்தன் → வேந்து.]*

**வல்லரட்டன்** *vallaraṭṭan,* பெ.(n.) 1. பெரும் வலிமையாளன்; brave and resolute man. 2. இறுமாப்புடையவன்; man of arrogancy.

மறுவ. மிடுக்கன்.

*[வல் + அரட்டன்.]*

அரள் → அரட்டு → அரட்டன். எவரையும் வெல்லும் திறன் வாய்ந்தவன். அளப்பரும் ஆற்றல் மிக்கவனே வல்லரட்டன்.

**வல்லரி** *vallari,* பெ.(n.) 1. தளிர் (சூடா.); budding tender shoot. 2. பசுங்காய் (சூடா.); green fruit. 3. காய்க்குலை (உரி.நி.); cluster of fruit. 4. பூங்கொத்து (திவா.); bunch of flowers. 5. கொடி (சங்.அக.); creeper.

**வல்லவசத்தி** *vallava-šatti,* பெ.(n.) மிகுவலி; strong and kerile strength.

**வல்லவட்டு**[1] *valla-vaṭṭu,* பெ.(n.) வல்லவன் போடும் மேல் துண்டு; a towel worn by abled capable man.

*[வல்ல + வட்டு]*

மேல் துண்டைக் கழுத்தைச் சுற்றிப் போடுவதும், இடையில் கட்டிக்கொள்வதும் பணிவைக் காட்டும். ஒரே தோளில் தொங்க விடுவது தான் யாருக்கும் பணியேன் என்பதை குறிக்கும். அதைத் தான் 'வல்லவட்டு' என்பர்.

**வல்லவட்டு**[2] *vallavaṭṭu,* பெ.(n.) வல்ல வாட்டு (வின்.) பார்க்க; see *vallavāṭṭu.*

**வல்லவம்**[1] *vallavam,* பெ.(n.) 1. அன்பு, காதல் (யாழ்.அக.); love. 2. உயர் சாதிக் குதிரை வகை (யாழ்.அக.); a good breed of horse species.

*[வல்→ வல்ல → வல்லவம்]*

**வல்லவம்**[2] *vallavam,* பெ.(n.) 1. வலிமை, ஆற்றல்; vitality, strength, might, potentiality. 2. திறமை; ability, capacity, talent. 3. கொடுஞ்செயல்; cruel deed/ harsh action. 4. அருஞ்செயல்; வீரதீரச் செயல்; heroic deed, difficult performance.

*[வல்→ வல்ல → வல்லவம்]*

**வல்லவர்கோன்** *vallavar-kōṉ,* பெ.(n.) சாளுக்கிய நாட்டவர் அரசன்; a king of *Cāḷukkiās* country. *"வல்லவர் கோனை வரவு காணாது".*

*[வல்லவர் + கோன்]*

வல்லவர்கோன் = சாளுக்கிய ஆகவமல்லன் (வீரராசேந்திரன் – மெய்கீர்த்தி)

**வல்லவரையர்வந்தியத்தேவர்** *valla-v-araiyar-vandiya-t-tēvar,* பெ.(n.) கீழைச் சாளுக்கிய மன்னன்; a king of *kiḻai-c-cāḷukkiās.* *"ஸ்ரீராஜ ராஜதேவர் திருத்தமைக்கையார் வல்ல வரையர் வந்தியத் தேவர் மகாதேவியார்" (தெ.கல். தொ. 2 :1, கல்.7). இம்மன்னன் முதலாம் இராசராசனின் தமக்கையான குந்தி தேவியின் கணவன்.*

*[வல்→ வல்ல + அரையர் + வந்தியத்தேவர்.]*

**வல்லவலோட்டி** *vallavalōṭṭi,* பெ.(n.) முட்செடி வகையுளொன்று; a kind of thorny shrub (சா.அக.).

**வல்லவன்**[1] *vallavaṉ,* பெ.(n.) மேலைச் சாளுக்கிய மன்னன்; the western *cāḷukya* king.

**வல்லவன்**[2] *vallavaṉ,* பெ.(n.) 1. கணவன்; husband. *"மலைமாது வல்லவன் வாணன்" (பிங்.) (தஞ்சைவா.164).* 2. இடையன் (வின்.); shepherd, cowherd. 3. இடையர் தலைவன் (யாழ்.அக.); chief herdsman. 4. அன்பிற் குரியவன்; one who is beloved. 5. குதிரைகளை மேற்பார்ப்போன் (யாழ்.அக.); supervisor of horses.

*[வல்லபன் → வல்லவன்]*

**வல்லவன்**[3] *vallavaṉ,* பெ.(n.) 1. வலிமை யுள்ளவன்; strong or heroic man. 2. திறமைசாலி, ஆற்றலுள்ளவன், பொருத்த மானவன்; capable man, suitable man, man of ability. *"வல்லவன் றைஇய பாவைகொல்" (கலித். 56, 7). வல்லலவன் வகுத்ததே வாய்க்கால் (பழ.). வல்லவனுக்கும் வல்லவன் வையத்திலுண்டு (உ.வ.). 'வல்லவன் ஆட்டும் பம்பரம் மணலிலும் ஆடும்' (பழ.).*

*[வல்[1] → வல்லவன்]*

வல்லவன்[4] *vallavan*, பெ.(n.) 1. சமைப்பவன் (வின்.); cook. 2. விராடனகரில் வீமன் கரந்துறைந்த போது, பூண்ட பெயர்; name assumed by Bhīman when he lived incognito in virāḍa.

*[வல் [1] → வல்லவ → வல்லவன்]*

வல்லவாட்டு *vallavāṭṭu*, பெ.(n.) 1. இடத் தோளின் மேலிருந்து அணியும் ஆடை; upper cloth worn loosely over the left shoulder and across the chest. *"சந்திரகாவிச் சேலை வல்லவாட்டுக்குட் டதும்பி" (தனிப்பா. i, 260, 1).* 2. கழுத்தைச் சுற்றித் தொங்க விடும் ஆடை (இ.வ.); scarf gracefully hung round the neck.

தெ. வல்லெ வாடு.

*[வல்ல + வாட்டு → வல்லவாட்டு]*

வல்லவாழ் *vallavāḷ*, பெ.(n.) நாலாயிரத் தெய்வப் பனுவலிற் பாடல் பெற்ற திருப்பதி; sacred Tiruppadi, a place of celebration in *Nālāyira-t-teyva-p-panuval.*

வல்லவாறு *valla-v-āṟu*, வி.எ.(adv.) இயன்றவளவில்; to the best of one's ability or power. *"வல்லவாறு சிவாய நமவென்று..... நாதனடி தொழ" (தேவா. 470: 6).*

*[வல்ல + ஆறு [1]]*

வல்லவி[1] *vallavi*, பெ.(n.) 1. வல்லவை[1] (பிங்.) பார்க்க; see *vallavai*. 2. மலைமகள் (பார்வதி) (நாமதீப.23); malai-magaḷ.

*[வல் → வல்ல → வல்லவி]*

வல்லவி[2] *vallavi*, பெ.(n.) 1. வலிமை யுள்ளவ–ன்–ள் (சங்.அக.); strong and verile person, mighty man. 2. திறமையுள்ளவன் –ள் (யாழ்.அக.); skilful or capable person.

வல்லவை *vallavai*, பெ.(n.) 1. மனைவி (சூடா.); wife. 2. ஆனைமுகனாரின் துணைவி; wife of God Gaṇēšān.

*[வல்லவ → வல்லவை]*

வல்லவைமன் *vallavai-man*, பெ.(n.) ஆனைமுகன் (நாமதீப. 28); *Gaṇēšan*, as the husband of vallavai.

*[வல்லவை + மன்[2]]*

வல்லா *vallā*, பெ.(n.) முடியாதவை; impossibilities, incapabilities. *"வல்லா கூறினும்" (தொல். பொருள். 425). "வல்லாகூறி யிருக்கு முள்ளிலை" (குறுந். 219 : 5), "வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்" (அகநா.53 : 14).*

*[வல்லு + ஆ. 'ஆ' = எதிர்மறை ஈறு.]*

வல்லாகினி *vallāgini*, பெ.(n.) கருங்கொடி; spring creeper - *Hiptage madablota* (சா.அக.).

வல்லாங்கு *vallāṅgu*, கு.வி.எ.(adv.) இயன்றவளவில், முடிந்த வரையில், செய்தவளவில்; to the best of one's ability or power, to the extent possible. *"வல்லாங்குப் பாடி" (புறநா. 47). "வல்லாங்கு வருது மென்னா தல்குவர" (அகநா.79 : 10). "வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்" (புறநா. 163 : 6). "வல்லாங்குச் செய்து" (மணிமே–23, 44).*

*[வல்ல + ஆங்கு]*

வல்லாசி *vallāši*, பெ.(n.) நஞ்சினை நீக்கக் கொடுக்கும் பூடு. இப்பூடு மலையாளத்தில் விளையும்; a Malabar herb given as an antitode for poisons (சா.அக.).

**வல்லாட்சி** *vallāṭci,* பெ.(n.) கொடுங்கோலாட்சி; despotism.

*[வல் + ஆட்சி]*

அடக்கியொடுக்கியும், வன்மையாகவும், தன்போக்கில் ஆட்சி செய்தலுமே, வல்லாட்சியாகும்.

**வல்லாட்டு** *val-l-āṭṭu,* பெ.(n.) குறும்பு; horse-play, rude-pranks, mischief. *"ஐவர் கண்டகர்தம் வல்லாட்டை யடக்கும்" (திருவாச. 40, 8).*

*[வல்¹ + ஆடு →ஆட்டு]*

வல்லாட்டு, வேட்டையாடல் போன்றன அரசன் இன்பமாக பொழுதுபோக்கும் வழிகளாம்.

**வல்லாண்முல்லை** *vallāṇ-mullai,* பெ.(n.) ஒருவனது குடியையும் பிறப்பிடத்தையும் இயல்புகளையும் புகழ்ந்து, அவனது ஆண்மை பெருகச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ.8, 23); theme of appealing to and exciting the manly virtues of a person by praising his family, his native place, and his great qualities.

*[வல்லாண்–மை + முல்லை]*

**வல்லாண்மை** *val-l-āṇmai,* பெ.(n.) பேராற்றல்,; manliness, great ability. *"வல்லாண்மை செல்வமென் றிவ்வெல்லாம்" (திருக்கலம். 76).*

*[வல்¹ + ஆண்–மை]*

**வல்லாதகம்** *vallādagam,* பெ.(n.) வல்லாதி பார்க்க; see *vallādi* (சா.அக.).

**வல்லாததுக்கம்** *vallāda-tukkam,* பெ.(n.) 1. முறைமையின்றி உண்டாகுந் துயரம் (யாழ்.அக.); misery suffered unjustly. 2. தாங்கொணாத் துயரம் (இ.வ.); agony, grief, unbearable distress, woe.

*[வல்லு + 'ஆ' (எதிர்மறை இடைநிலை) + துக்கம்]*

**வல்லாதா** *vallādā,* பெ.(n.) சேமரத்தின் கொட்டை (பதார்த்த. 1066); marking-nut.

மறுவ. சேங்கொட்டை

**வல்லாதி** *vallādi,* பெ.(n.) சேங்கொட்டை; marking nut-*Semi carpus anacardium* (சா.அக.).

**வல்லாதிமூலி** *vallādi-mūli,* பெ.(n.) வழுதலை; brinjal (சா.அக.).

**வல்லாதோர்** *vallādōr,* பெ.(n.) வலிமையற்றோர்; weak or infirm person. *"இரந்தோர் மாற்றல் ஆற்றா இல்லின் வாழ்க்கை வல்லாதோரே" (நற்.84, 11–12).*

**வல்லாமை** *vallāmai,* பெ.(n.) 1. இயலாமை; incapability, incapacity. 2. தள்ளாமை (இ.வ.); physical unfitness.

*[வல்லு + ஆ + மை. 'ஆ' = எதிர்மறை இடைநிலை. மை = பண்புப்பெயரீறு.]*

ஒ.நோ. கொள்ளாமை, செய்யாமை.

**வல்லார்¹** *vallār,* பெ.(n.) 1. வலிமை யுடையவர்; mighty persons. 2. திறமை யுடையவர்; talented, clever, capable persons. *"வடிநாவின் வல்லார் முற் சொல்வல்லேன்" (கலித். 141, 19).*

*[வல்¹ + ஆர்]*

**வல்லார்²** *vallār,* பெ.(n.) 1. வலுவிழந்தவர்; weak person. 2. திறமையில்லாதவர்; incapable persons. *"வல்லாராயினும் வல்லுநராயினும்" (புறநா. 27).*

மறுவ. மாட்டாதவர்

*[வல்லு + ஆர்]*

**வல்லார்கொள்ளை** *vallār-koḷḷai,* பெ.(n.) பாதுகாப்பில்லாது யாவரும் கவர்ந்து கொள்ளக்கூடிய சொத்து; property left unprotected or uncared for, as object of easy plunder by others. *“வல்லார் கொள்ளை வாழைப்பழ மாகும்”.*

*[வல்லார் [2] + கொள்ளை]*

கொள்→கொள்ளை = அச்சுறுத்திச் சூறை கொள்ளும் வழிப்பறி.

**வல்லாரல்** *vallāral,* பெ.(n.) வல்லாரை; Indian penny wort (சா.அக.).

**வல்லாரி** *vallāri,* பெ.(n.) கொக்கு; stork (சா.அக.).

**வல்லாரை[1]** *vallārai,* பெ.(n.) 1. கீரை வகை (பதார்த்த. 359); Indian penny-wort. 2. தழல் (கேட்டை) விண்மீன் (பிங்.); the 18th naksatra.

*[வல்→வல்லாரை]*

உடலுக்கு வலிவைக் கொடுக்கும். இக் கீரையை ஒரு மண்டலம் உண்டுவந்தால், அரத்தக் கடுப்பு அகலும்; வயிற்றுளைவு நிற்கும். அறிவு கூர்மை பெறும் என்று சா.அக. கூறும்.

**வல்லாரை[2]** *vallārai,* பெ.(n.) சூதாடுபவர்; gambler. *“வல்லாரை வல்லார் செறுப்பவும்” (பரிபா. 9 : 74).*

*[வன்→வல்→வல்லால்→வல்லாரை]*

**வல்லாரைக்கிருதம்** *vallārai-k-kirudam,* பெ.(n.) வல்லாரையும் நெய்யுஞ் சேர்த்துச் செய்த கூட்டு மருந்து (வின்.); compound medicine made of pennywort and ghee (சா.அக.).

Skt. krta > த. கிருதம்.

*[வல்லாரை + கிருதம்[2]]*

**வல்லாரைக்கீரை** *vallārai-k-kīrai,* பெ.(n.) வல்லாரை; leaves of vallārai are edible and used as greens (சா.அக.).

*[வல்லாரை + கீரை]*



**வல்லாரைக்கொடிமூலம்** *vallārai-k-koḍi-mūlam,* பெ.(n.) வல்லாரைக் கொடியின் வேர்; root hydrocotyle asiatica (penny wort) (சா.அக.).

*[வல்லாரை + கொடிமூலம்]*

வல்லாரைக் கீரையின் அனைத்துப் பாகங்களும் மருத்துவக் குணம் வாய்ந்தவை. இதன் வேர்ப்பகுதியில் மருத்துவக் குணம் முழுமையாக உள்ளதால் தனியே குறிப்பிடப்பட்டுள்ளது.

**வல்லாரைச்சூரணம்** *vallārai-c-cūraṇam,* பெ.(n.) தூள்; fine powder (சா.அக.).

*[வல்லாரை + சூரணம். சுல்→ சுர்→சூர் →சூரணம் = மருந்தினைச் சுட்டுக் கருக்கிய பொடி.]*

**வல்லாரையடிமூலம்** *vallārai-aḍi-mūlam,* பெ.(n.) வல்லாரை வேரினைச் சுட்டுக் கருக்கிய பொடி; fine powder of Indian penny-wort's root *(Vallārai-k-kīrai)* (சா.அக.).

*[வல்லாரை + அடி + மூலம்]*

**வல்லாவட்டு** *vallāvaṭṭu*, பெ.(n.) கழுத்தைச் சுற்றித் தொங்கவிடும் ஆடை (இ.வ.); scarf or towel gracefully hung round the neck.

*[வல்[1] → வல்லா + வட்டு. வட்டு = வட்டமாகத் தொங்கவிடும் ஆடை]*

வளமும் வல்லாண்மையு முடையவர்கள் தங்களின் தோற்றப் பொலிவு கருதியும், குமுகாயத்தில் தனித்தொரு நிலையை உயர்த்திக் காட்டிக் கொள்ளும் பொருட்டும் மூன்றினொருபகுதி முன்னு மிருபகுதி பின்னுமாக அணியப் பெறும் துண்டு என்றறிக.

**வல்லாளகண்டன்** *vallāḷa-kaṇḍaṉ*, பெ.(n.) 1. பேராற்றலுள்ளவன்; the mightiest of the mighty. *"வல்லாள கண்டா வடுகநாதா" (தனிப்பா.* ii, *47, 112).* 2. மிக்க துணிவுள்ளவன்; man of a venture some and unyielding spirit, very bold man, a man of stamina.

*[வல்லாளன் + கண்டன்]*

**வல்லாளகண்டி** *vallāḷa-kaṇḍi*, பெ.(n.) 1. பேராற்றலுள்ளவள்; the mightiest of the mighty women. 2. மிக்க துணிவுள்ளவள் (இ.வ.); woman of a venturesome and unyielding spirit, very bold woman, a women of physical and mental strength.

*[வல்லாளகண்டன் → வல்லாளகண்டி]*

**வல்லாளர்கண்டன்** *vallāḷar-kaṇḍaṉ*, பெ.(n.) வல்லாளகண்டன் (யாழ்.அக.) பார்க்க; see *vallāḷa-kaṇḍaṉ*.

*[வல்லாளர் + கண்டன்]*

**வல்லாளன்[1]** *vallāḷaṉ*, பெ.(n.) 1. வலிமை மிக்கவன்; mighty man, valiant hero. *"நள்ளாதார் மிடல்சாய்த்த வல்லாள" (புறநா. 125). "அரசுவரிற் றாங்கும் வல்லாளன்னே" (புறநா. 327: 8).* 2. திறமையாளன் (சமர்த்தன்) (வின்.); talented or skilful man, expert, efficient man, an incisive person. 3. விசய நகரத்து மன்னர்களிலொருவன்; a king of vijaya nagar.

*[வல்[1] + ஆளன் : ஒரு ஆண்பாற் பெயரீறு.]*

**வல்லாளன்[2]** *vallāḷaṉ*, பெ.(n.) 1. அரச மரபினன்; king of the *Bellāḷaṉ* dynasty. 2. ஒரு வீரன்; a brave soldier.

*[வெள்ளாளன் → வல்லாளன் = வேளாண் குடியில் வந்த அரச மரபினன்]*

இவன் மதுரையில் குலோத்துங்க பாண்டியன் காலத்தில் வாழ்ந்தவன். பெரும் பொருளை திரட்டிச் சிற்றரசனைப் போற் சிறந்து விளங்கியவன். தன்னிடம் வருவோர்க்கு கொடையளித்து வள்ளலாக வாழ்ந்தவன்.

**வல்லாறு** *vallāṟu*, வி.எ.(adj.) இயன்றவளவில், முடியும் வரையில்; to the best of one's ability or power, to the extent possible. *"தாயரென்னும் பெயரே வல்லாறெடுத்தேன்" (ஐங்குறு. 380).*

*[வல்ல + ஆறு' அறு → ஆறு.]*

**வல்லான்** *vallāṉ*, பெ.(n.) 1. வலிமை யுள்ளவன்; a stronger, mighty man. *"வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு வழக்குக்கு" (தாயு. சுகவாரி. 3). "வல்லா னல்லன் வாழ்கவவன் கண்ணி" (பதிற்றுப். 56:).* 2. திறமையாளன்; capable man. 3. கடவுள்; God, the almighty. *"வல்லான்*

*செயலென வுணர்ந்து தேறி" (திருவாலவா. 56, 6).* 4. சூதாடுபவன்; gambler. *"வல்லானாடிய மணிவட் டேய்ப்ப" (சீவக. 983).*

*[வல்[1] → வல்லான்]*

**வல்லான்வலியான்** *vallāṉ-valiyāṉ,* பெ.(n.) வல்லாளகண்டன் (இ.வ.) பார்க்க; see *vallāḷa-kaṇḍaṉ.*

*[வல்லான் + வலியான்]*

**வல்லி[1]** *valli,* பெ.(n.) சூதாடுபவன்; gambler. *"வல்லினாற் பயன்கொள்வான் வல்லி" (வீரசோ. தத். 3).*

*[வல் [1] → வல்லி]*

**வல்லி[2]** *valli,* பெ.(n.) 1. கொடி (பிங்.); creeper. *"வல்லியனையாள்" (பு.வெ.12, பெண்பாற். 13, உரை).* 2. படர் கொடிவகை; a creeper with bulbous, roots. 3. மருந்துச் செடி (சூடா.); medicinal plant. 4. இளம்பெண்; young woman, lady. *"மாதவி ஈன்றமணி மேகலை வல்லி" (மணிமே.18, 25), "வல்லியை யுயிர்த்த நிலமங்கை" (கம்பரா. கோலங். 24).* 5. முருகக் கடவுளின் தேவியாகிய வள்ளியம்மை (சூடா.); a wife of God Murugaṉ. 6. கால் விலங்கு; fetters. *"கானி மிர்த்தாற் கண்பரிப வல்லியோ" (பெருந்தொ.516).* 7. அறிவம் (உபநிடதம்) (வின்.); upaniḍadam, each of a series of hindu sacred trealise, written in sanskirit and expounding the vedas. 8. பதாகை (உரி.நி.); banner, standard. 9. பலாசமரம்; battle-of-plassey tree. 10. புன்முருக்கு மரம் (மலை.); a plant. 11. திருமணம் (யாழ்.அக.); marriage.

*[த.வல்லி → வ. வல்லீ, முல் → மல் → வல் → வல்லி, வளைதற்கருத்து வேரினின்று கிளைத்த சொல்.]*

வல்லி = கொடி போன்று வளைந்ததும், நெளிவு, சுழிவுகளுடன் கூடியதும், இயல்பாய் வளைக்குந் தன்மையுடன் திகழும் நிலைத்திணைப் பெயர்கள் எல்லாம் வளைவுக் கருத்தினின்று முகிழ்த்தவையே.

வளைதற் கருத்துப் பற்றி மொழிஞாயிறு கூறுங்கால்:–

மொழி இருவகைப்படும். 1. முழைத்தல் மொழி (Natural language). 2. இழைத்தல் மொழி (Articulate-speech).

இழைத்தல் மொழிபற்றிய சொற்கள் பெரும்பாலும் உகரச் சுட்டடியினின்று முகிழ்த்தவையே. உகரமேறிச் சொன்முதலாகாத 'வ'கரமுதற் சொற்களெல்லாம் 'புல்' என்னும் பகர முதலடியினின்றோ, 'முல்' என்னும் மகர முதலடியினின்றோதான் பிறந்துள்ளன.

' (எ–டு) முல் → மல் → வல் → வல்லி = வளைந்தகொடி.

**வல்லி[3]** *valli,* பெ.(n.) இடைச்சேரி (பிங்.); shepherds habilation or colony.

**வல்லி[4]** *valli,* பெ.(n.) 1. விரைவு (சூடா.); quickness, speed, haste, hurriedness. 2. அளவு; a measure (சா.அக.).

*[வல் [2] → வல்லி]*

**வல்லி[5]** *valli,* பெ.(n.) பிரிகை (பிங்.); removal, separation.

**வல்லி[6]** *valli,* பெ.(n.) அளவு வகை (வின்.); a standard measure.

**வல்லி[7]** *valli,* பெ.(n.) 1. முருக்கு; twisting. 2. வள்ளிக்கொடி; the creeper of sweet

potato. 3. இலந்தை; jujube. 4. தண்ணீரைக் கட்டும் ஓர் கொடி; coagulating creeper; Broom creeper-*Coculus villosus* (சா.அக.). 5. சீந்தில்; moon creeper. 6. புனல் முருங்கை; a tree wild moringa (சா.அக.).

*[வல்→வல்லி.]*

**வல்லி**[8] *valli,* பெ.(n.) 1. நன்னாரி; a twiner-*Hemidesmus*. 2. அமுதவல்லி; Tinosphora cordifolia. 3. அமிர்தவல்லி; tino shora cordifolia. 4. சாம்பாரவல்லி; vitis indica. 5. சீரக வல்லி; dioscorea aculeata. 6. ஈருவல்லி; maba buxifolia (சா.அக.).

**வல்லிக்கயிறு** *valli-k-kayiṟu,* பெ.(n.) உடைமேல் அணிந்து கொள்ளும் அரைஞாண் கயிறு; waist-cord worn over the cloth. *"பட்டின் கண்ணே அழகுபடக் கிடந்த வல்லிக் கயிறு விளங்க" (சீவக. 2280, உரை).*

*[வல்லி [2] + கயிறு.]*

கள்→கய்→கயில்→கயிறு. கள் = கட்டுதல், பிணைத்தல்.

**வல்லிக்காய்** *valli-k-kāy,* பெ.(n.) மரவகை; holly-leaved berberry (சா.அக.).

*[வல்லி + கா→காய்.]*

**வல்லிக்கொடி** *valli-k-koḍi,* பெ.(n.) பெருமருந்துக் கொடி (பதார்த்த. 269); Indian birthwort.

*[வல்லி + கொடி. கொடு→கொடி = வளைந்து படரும் நிலைத்திணை வகை (வே.க.167).]*

**வல்லிக்கொடிசெயநீர்** *valli-k-koḍi-šeyanīr,* பெ.(n.) நஞ்சுக் கொடியினின்று உப்பெடுத்து மற்ற சரக்குகளோடு சேர்த்து பனியில் வைத்து அதனால் கசிந்த நீர்; a strong pungent liquid obtained by exposing in the night's dew, the slat extracted fromt he navel-string or the umbilical cord of a new born baby (or) foetus after mixing it with other ingredients (சா.அக.).

**வல்லிக்கோளகம்** *valli-k-kōḷagam,* பெ.(n.) பறங்கி வைப்பு நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

*[வல்லி + கோளகம். கோள்→கோளகம்]*

**வல்லிகம்**[1] *valligam,* பெ.(n.) செவ்வல்லிக் கொடி; water lilly (சா.அக.).



**வல்லிகம்**[2] *valligam,* பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); a kind of creeper.

**வல்லிகம்**[3] *valligam,* பெ.(n.) 1. மிளகு (யாழ்.அக.); pepper. 2. மஞ்சள் (பச்.மூ.); turmeric.

*[வல்லிசம் → வல்லிகம்]*

**வல்லிகை**[1] *valligai,* பெ.(n.) 1. குதிரைக் கழுத்தில் கட்டும் வடம்; halter of a horse. *"நீலமணிக் கடிகை..... வல்லிகை" (கலித்.96).* 2. காதணிவகை (பிங்.); an ear-jewel.

*[வல்லி[2] → வல்லிகை]*

வல்லிகை[2] *valligai,* பெ.(n.) யாழ் (அக.நி.); lute.

*[வல்லகி → வல்லிகை]*

வல்லிசம் *vallišam,* பெ.(n.) மிளகு (தைலவ.); black-pepper.

வல்லிசாதகம் *valli-šādagam,* பெ.(n.) கற்பகத்திற் படரும் கொடிவகை (சங்.அக.); a karpagam-creeper (சா.அக.).

**Skt.** sadaga> த. சாதகம்

*[வல்லி[2] + சாதகம்]*

வல்லிசாதம் *valli-šādam,* பெ.(n.) வல்லி சாதகம் (திருமுரு.101. வேறுரை, பக். 47, கீழ்க்குறிப்பு) (வின்.) பார்க்க; see *valli-šādagam.*

*[வல்லி[2] +* **Skt.** sāda> த. சாதம் *]*

வல்லிசாதி *valli-šādi,* பெ.(n.) தெய்வத் தன்மையுள்ள கொடி; divine creeper. *"கற்பக வல்லிசாதி போல்வாள்" (தக்கயாகப். 77, உரை).*

*[வல்லி[2] + சாதி[6]]*

வல்லிசு *vallišu,* பெ.(n.) முழுமை; that which is whole, full, complete.

*[வல்லி →வல்லிசு]*

வல்லிசுக்கிரன் *valli-šukkiran,* பெ.(n.) மூலிகை வகையு ளொன்று; a kind of herbal medicine (சா.அக.).

*[வல்லி + சுக்கிரன்]*

வல்லிசூரணை *valli-šūranai,* பெ.(n.) புளி வசளை; a kind of greens.

*[வல்லி + சூரணை]*

வல்லிசூரனை *valli-šūranai,* பெ.(n.) கீரை வகை (சங்.அக.); a kind of greens.

*[வல்லி[2] + சூரனை]*

வல்லிசை[1] *vallišai,* பெ.(n.) 1. உச்சவிசை (பிங்.); treble or high note or pitch. 2. வல்லோசை (இலக்.); sound of the hard consonants.

*[வல்[1] + இசை[5]]*

வல்லிசை[2] *vallišai,* பெ.(n.) பாம்பு (அக. நி.); snake.

வல்லிசைவண்ணம் *val-l-išai-vannam,* பெ.(n.) வல்லெழுத்து மிக்கு பயின்றுவரும் இசைப்பாட்டு; a rhythm marked by frequent use of *val-l-eluttu.* *"வல்லிசைவண்ணம் வல்லெழுத்துப் பயிலும்" (தொல். பொருள். 528).*

*[வல்லிசை[1] + வண்ணம்]*

வல்லிதின்[1] *vallidin,* பெ.(n.) வல்லாங்கு பார்க்க; see *vallāṅgu.* *"வல்லிதின் விருந்து புறந்தருதலும்" (தொல். பொருள். 152). "வாழை ஈர்ந்தபடி வல்லிதின் வகைஇப்" (நற்.120 : 5).*

*[வல்[1] → வல்லிதின்]*

வல்லிதின்[2] *vallidin,* வி.எ.(adv.) விரைவாக; rapidly, quickly. *"வல்லிதி னாடி வலிப்பதே" (பழ. 261). "வல்லிதின் வணங்கிச் சொல்லுநர்ப் பெறினே" (நற். 68 : 6).*

*[வல்[2] → வல்லிதின்]*

வல்லிதி *vallidi,* பெ.(n.) வல்லிசு பார்க்க; see *vallišu.*

**வல்லிபஞ்சமூலம்** *valli-pañja-mūlam,* பெ. (n.) வல்லி² பார்க்க; see *valli*.

**வல்லிமண்டபம்** *valli-maṇḍabam,* பெ.(n.) கொடிப்பந்தல்; bower, arbour. *"ஓர் மாதவி வல்லிமண்டபத்தில்" (இறை. 2, பக். 28).*

*[வல்லி ² + மண்டபம்]*

**வல்லிமரம்** *valli-maram,* பெ.(n.) கப்பலின் தலைப் பாய்மரம் (Naut.); main mast.

*[வல்லி ² + மரம்]*

**வல்லிமொடி** *valli-moḍi,* பெ.(n.) பெருமருந்துக் கொடி (மலை.); Indian birthwort.

*[வல்லிக்கொடி → வல்லிமொடி]*

**வல்லியம்¹** *valliyam,* பெ.(n.) 1. புலி (பிங்.); tiger. *"பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய" (அகநா. 362).* 2. கொல்லி மலை (பிங்.); Mount kolli, a hill in the *cēra* country.

*[வல் ¹ → வல்லியம்]*

**வல்லியம்²** *valliyam,* பெ.(n.) 1. வல்லிக் கொடி (பிங்.); creeper. 2. செவ்வள்ளிக் கொடி (மலை.); purple yam. 3. மஞ்சள் (மலை.); turmeric.

*[வல்லி ² → வல்லியம்]*

**வல்லியம்³** *valliyam,* பெ.(n.) இடைச்சேரி (பிங்.); shepherds habitation.

*[வல்லி ³ → வல்லியம்]*

**வல்லியம்குருளை** *valliyam-kuruḷai,* பெ.(n.) புலிக்குட்டி; cub of tiger. *"வல்லியம் பெருந்தலைக் குருளை" (நற்.2–5).*

*[வல்லியம் + குருளை. குல் → குரு → குருள் → குருளை]*

**வல்லியம்பொருப்பு** *valliyam-poruppu,* பெ.(n.) கொல்லிமலை (பிங்.); Mt. kolli, a hill in the cēra country.

*[வல்லியம்¹ + பொருப்பு]*

**வல்லியை** *valliyai,* பெ.(n.) அமுக்கிரா (தைலவ.) Indian winter cherry.

**வல்லிராசன்** *valli-rāsaṉ,* பெ.(n.) பல்லி; lizard.

*[பல்லி → வல்லி + ராசன். அரசு → அரசன் → ராசன்.]*



**வல்லிரு** *valliru,* பெ.(n.) முருக்கு; a tree-Butea frondosa.

**வல்லிருள்** *valliruḷ,* பெ.(n.) கடும் இருள்; deep darkness. *"மாரி நடுநாள் வல்லிருள் மயக்க" (மணிமே.14:3).*

*[வல் + இல் → இர் → இரு → இருள்.]*

**வல்லிலோமம்** *valli-lōmam,* பெ.(n.) வலம் புரிக்காய் பார்க்க; see *valampuri-k-kāy*.

**வல்லிவன்னி¹** *valli-vaṉṉi,* பெ.(n.) கொடுவேலி (தைலவ.); ceylon leadwort.

*[வல்லி + வன்னி]*

**வல்லிவன்னி**[2] *valli-vaṉṉi,* பெ.(n.) சித்திரமூலம்; a plant - *Plumbago zeylanicum* (சா.அக.).

*[வல்லி + வன்னி]*

**வல்லிவனம்** *valli-vaṉam,* பெ.(n.) சமவசரணம் எனுஞ் சைனக் கோயிலின் மூன்றாந் திருச்சுற்று; the third court yard of šamava-šaraṇam Jain temple. *"காதமகல் வல்லிவனத்தைச் சார்ந்தோர்" (மேருமந். 1057).*

*[வல்லி + வனம்]*

**வல்லினநடை** *valliṉa-naḍai,* பெ.(n.) வல்லெழுத்துகள் மிகுதியாகப் பயின்று வருமாறு பாடல் பாடுகை; composing a poem with hard consonants.

*[வல்லினம் + நடை]*

**வல்லினம்** *val-l-iṉam,* பெ.(n.) க், ச், ட், த், ப், ற் என்ற வல்லோசையுள்ள மெய் யெழுத்துகள் (நன். 68); the class of hard consonants, viz., k, c, ṭ, t, p, ṟ.

மறுவ. வல்லெழுத்து, வல்லொற்று.

வன்கணம், வலிவன்மை.

*[வல்[1] + இனம். இல்→இலம்→இனம்.]*

வல்லோசை யெழுத்துகளைச் சார்ந்த இனம். மெய்யெழுத்துகளின் மூன்று பிரிவுகளில், இடையினத்தையும், மெல்லினத்தையும் விட, வன்மையாக ஒலிக்கப் பெறும் ஆறு எழுத்துகளை உள்ளடக்கிய பிரிவு. இவை வலிய உறுப்பாகிய மார்பிற் பிறக்கும். செவி கருவியாக உச்சரித்து வலிவன்மை அறியலாம்.

வல்லினமெய் தமிழ்ச்சொற்கு ஈறாவதில்லை. இறுதியில் வல்லினமெய் வரக்கூடாதென்று விலக்கியது, பண்டைத் தமிழரின் மெல்லொலி வாயியல்பு பற்றியது மட்டுமன்று; எதிர்காலத் தமிழரின் வாழ்நாள் நீடிக்குமாறு, இயன்றவரை மொழியொலிப்பு முயற்சியைக் குறைக்க வேண்டுமெனுங் குறிக்கோளுங் கொண்டதாம்.

**வல்லினவெதுகை** *valliṉa-v-edugai,* பெ.(n.) எல்லாவடிகளின் முதற்சீர்க்கண்ணும் வல்லெழுத்து எதுகையாக ஒன்றிவரும் தொடை (உரை.); rhyme in which the second letter of each line of a stanza is a hard consonant. *"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" (குறள், 2). "கார்க் கரும்பின் கமவாலை தீத்தெருவின் கவின் வாடி" (பட்டினப்பாலை.).*

*[வல்லினம் + எதுகை. எதிர்கை→எதுகை (த.வ.50).]*

திருக்குறளிலும், பட்டினப்பாலை வரிகளிலும் வல்லின வெழுத்துகள் எதுகையாக பயின்று வந்துள்ளமை காண்க.

**வல்லீகம்** *vallīgam,* பெ.(n.) பெருங்காயம் (நாமதீப. 393); asafoefida.

**வல்லீசம்** *vallīšam,* பெ.(n.) மிளகு; black pepper.

**வல்லீட்டுக்குற்றி** *vallīṭṭu-k-kuṟṟi,* பெ.(n.) 1. கொட்டாப்புளி (யாழ்ப்.); mallet. 2. தாங்கற் கட்டை (இ.வ.); log placed under another as a support, supporter. 3. பனை முதலியவற்றைப் பிளக்குங் குற்றி (யாழ்.அக.); a wedge for splitting palmyra stem, etc.

*[வல்[1] + இடு + குற்றி. குறு→குற்றி = மரக்கட்டை.]*

**வல்லீற்று** *vallīṟṟu*, பெ.(n.) பலவாண்டிற்கு ஒருமுறை ஈனும் பெற்றம் (இ.வ.); cow that calves once in several years, dist. fr. *āṭṭīṟṟu*.

*[வல் + ஈத்து → ஈற்று : வல்லீற்று. ஈன் →ஈற்று.]*

**வல்லு-தல்** *vallu-*, 5 செ.குன்றாவி.(v.t.) செய்யமாட்டுதல்; to be able, to be possible. *"வல்லினும் வல்லேனாயினும்" (புறநா. 161).*

*[வல் [1] → வல்லு-.]*

**வல்லுடல்** *valludal*, பெ.(n.) வலிமையான உடல்; strong and verile body, sturdy body.

*[வல் + உடல்.]*

உழல்→உடல் = உடம்பு, உயிர்வாழிடம் (பிங்.). திண்மையும், உறுதியும் வாய்க்கப்பெற்ற கட்டுடல். உடம்பின் கூடு.

**வல்லுதல்** *valludal*, பெ.(n.) ஒழுங்கு (வின்.); propriety, discipline.

**வல்லுநர்** *vallunar*, பெ.(n.) வல்லோர்; experts, capable persons. *"வல்லா ராயினும் வல்லுந ராயினும்" (புறநா. 27). "வாழ்தல் வல்லுந ராயிற் காதலர்" (அகநா. 329:3), வன்கண் கொண்டு வலித்துவல்லுநரே" (குறுந்.395 : 3).* உளவியல் *வல்லுநர் (இ.வ.). இக்கால இசை வல்லுநர், தமது குரல் வளத்தால் அனைவரையும் மெய்மறக்கச் செய்கின்றார் (இ.வ.).*

*[வல்லு → வல்லுநர்]*

ஒ.நோ. இயக்கு→இயக்குநர்.

குறிப்பிட்ட ஒரு துறையில், திண்ணிய திறமையும், தனித்த அறிவும், சிறப்பாற்றலும் வாய்க்கப் பெற்றவர். சட்ட வல்லுநர், இசைக் கலை வல்லுநர் போன்றவை இக்கால வழக்காகும்.

**வல்லுப்பலகை** *vallu-p-palagai*, பெ.(n.) சூதாடுதற்குரிய பலகை (தொல். எழுத்.384, உரை); a plank for gambling. *"வல்லுப்பலகை யெடுத்து நிறுத்தன்ன" (கலித். 94).*

*[வல் [1] + பலகை]*



**வல்லுயிர்** *valluyir*, பெ.(n.) எளிதிலிறவாத உயிர்கள் (யாழ்.அக.); rarely dying person or animal, long living being.

*[வல் + உயிர். உய் →உயிர்.]*

**வல்லுரம்** *valluram*, பெ.(n.) 1. காடு (யாழ்.அக.); jungle, forest. 2. அடவி, அடர்ந்த காடு; desert, thick forest. 3. புற்றரை; grassy surface, lawn turf. 4. வயல்; field. 5. மணல்; sand. 6. பூங்கொத்து; bunch of flowers, bouquet. 7. காட்டுப் பன்றியின் இறைச்சி; flesh of the wild hog. 8. தனிமை; loneliness, solitude.

*[வல்லி [5] →வல்லு→வல்லுரம்]*

**வல்லுருவம்** *valluruvam,* பெ.(n.) மனத்தை யடக்கும் வலிமையற்ற உருவம்; big statured, man who lacks control of his sense. *"வலியி னிலைமையான் வல்லுருவம்" (குறள், 273).*

*[வல் → வல்லு+உருவம்.உரு → உருவு → உருவம்.]*

**வல்லுவப்பை** *valluva-p-pai,* பெ.(n.) 1. வெற்றிலைப்பை (வின்.); large betel-pouch with several sections. 2. அரையிற் கட்டும் பணப்பை (யாழ்.அக.); purse of cloth tied round the waist.

*[வல்லுவம் + பை [4]]*

ஒருகா. வட்டுவப்பை → வல்லுவப்பை.



**வல்லுவம்** *valluvam,* பெ.(n.) வல்லுவப்பை,1 (வின்.) பார்க்க; see *valluva-p-pai.* *"வல்லுவங் கொல்லோ மெல்லிய னாமென" (நற். 33 : 9).*

*[வட்டுவம் → வல்லுவம்]*

**வல்லுளி** *valluḷi,* பெ.(n.) பன்றி (பிங்.); boar, swine, pig.

*[வல் [1] + உள் [2] → உளி = வல்லுளி]*

வலிமை வாய்ந்த உளிகளைப் போன்றே, சிறிய கொம்புகளை உடையதாயிருந்தமை பற்றி ஏனம், வல் + உளி – வல்லுளி என்றும் சுட்டப் பெற்றது.

**வல்லுறை** *vallurai,* பெ.(n.) வலுவூட்டு மருந்து; tonic (சா.அக.).

*[வல் + உறை. உறு → உறை.]*

உடலுக்கு ஆற்றலையும், வலிமையையும் தரும் ஊட்டமருந்து.

**வல்லூகம்**[1] *vallūgam,* பெ.(n.) 1. கரடி (உரி.நி.); bear. 2. புலி (அக.நி.); tiger.

*[வல்[1] + ஊகம்.]*

உகு → ஊகு → ஊகம். உகுத்தல் = அழித்தல், கொல்லுதல்.

வல்லூகம் என்பது, பிறரைத் தமது கூரிய உகிராற், கொன்றழிக்கும் தன்மை வாய்ந்த புலி அல்லது கரடி.

**வல்லூகம்**[2] *vallūgam,* பெ.(n.) 1. ஆண் குரங்கு (வின்.); male monkey. 2. மூசு; large ape.

*[வல் [1] + ஊகம்[1]. உகு → ஊகு → ஊகம்.]*

ஒருகா. வல்[1] + உலுமம் → உலுகம் → ஊகம். உலுமம் = கரிய மயிர். வல்லூகம் என்பது அடர்ந்த கரிய மயிர்களையுடைய ஆண் குரங்கு.

**வல்லூரம்** *vallūram,* பெ.(n.) 1. இறைச்சி (யாழ்.அக.); flesh. 2. அடவி, அடர்ந்தகாடு; desert, thick forest. 3. பாழ் நிலம்; uncultivated field, barren land.

*[வல் + ஊரம்.]*

ஊர் + அம் – ஊரம் = உயரமானது. வல்லூரம் என்பது உயரமான அடர்ந்த மரங்களுள்ள காடு.

**வல்லூரி** *vallūri,* பெ.(n.) பன்றி; pig.

*[வல் + ஊர் → ஊரி.]*



சிவப்பு வல்லூறு



பொரி வல்லூறு



சிறிய வல்லூறு



வல்லூறு

**வல்லூற்று** *vallūṟṟu,* பெ.(n.) பாறையிடை யினின்று வரும் நீருற்று; mountain spring. *"வல்லூற்றுவரில் கிணற்றின்கட் சென்றுவப்பர்" (நாலடி, 263).*

*[வல் [1] + ஊற்று[2]. ஊறு→ஊற்று = சுரந்து வரும் ஊற்று நீர்.]*

**வல்லூற்றுக்குருவி** *vallūṟṟu-k-kuruvi,* பெ.(n.) வல்லூறு[1] (வின்.) பார்க்க; see *vallūṟu.*

*[வல்லூறு + குருவி]*

**வல்லூறு[1]** *vallūṟu,* பெ.(n.) கழுகைவிடச் சிறியதும், கூர்மையான இறக்கை நுனியும், சாம்பல் நிறமுதுகுப் பகுதியும் கொண்ட பறவை; falcon.

*[வல் + உறு→ஊறு.]*

**வல்லூறு[2]** *vallūṟu,* பெ.(n.) பெருந்தீனி கொள்ளும், கூரிய பார்வையுடைய கலுழன் வகையைச் சார்ந்த பறவை; shikar accipiter.

இப்பறவை 36 செ.மீ. உயரம் வரை வளரும் தன்மைத்து. கருஞ்சாம்பல் நிறத்தைக் கொண்டது. நீண்டவாலுடன் தெண்படும். 4 அல்லது 5 குறுக்குப் பட்டைகளைக் கொண்டது. மா, வேம்பு, புளி, தென்னை முதலிய மரங்களில் கூடமைத்து, 3 முதல் 4 வரையிலான முட்டைகள் இடும். தமிழகம் எங்கிலும் பரவலாக காணப்படும் இப்பறவையானது, சிட்டு, காடை, கௌதாரி, தத்துக்கிளி, ஈசல், அணில் முதலியவற்றை இரையாகக் கொண்டு வாழும் தன்மைத்து.

சிறிய வல்லூறு என்னும் பறவையும், வல்லூறு இனத்ததே. சிறிய தோற்றத்தின் அடிப்படையில் அமைந்த பெயராகும்.

**வல்லூறு[3]** *vallūṟu,* பெ.(n.) இராசாளிக் கழுகு; royal falcon. *"கொக்கு வல்லூறு கண்டென்ன விலவிலத்து" (தனிப்பா.i, 171, 23).*

*[வல் [1] + ஊறு [1]]*



**வல்லெழுத்து** *val-l-eḻuttu,* பெ.(n.) வல்லின மெய்யெழுத்துகள்; the class of hard consonants. *"வல்லெழுத் தென்ப கசட தபற" (தொல். எழுத். 19).*

*[வல் [1] + எழுத்து.]*

ஒருகா. வல்லினம்.

இழு→எழு→எழுது→எழுத்து= எழுதப்படுவது; இழு = கோடிழுத்தல். வல்லின ஒலிகளைக் கோடிட்ட எழுத்துருவத்தாலுரைப்பது.

வல்லெழுத்துப் பற்றி இளம்பூரணர் இயம்புவது :-

"வல்லென்று இசைத்தலானும், 'வல்' என்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்து எனப்பட்டது" (இளம்.தொல்.எழுத்து.19).

வல்லெழுத்து பற்றி நச்சினார்க்கினியர் நவில்வது :-

"வல்லென்றிசைத்தலானும் வல்லென்ற தலைவளியாற் பிறத்தலானும் வல்லெழுத்தாயிற்று" (தொல்.எழுத்து.19, நச்.).

**வல்லெனல்**[1] *val-l-eṉal,* பெ.(n.) வன்மையாதற் குறிப்பு; expr. signifying hardnes or severity. *"வல்லென்ற நெஞ்சத்தவர்" (நான்மணி. 33).*

**வல்லெனல்**[2] *val-l-eṉal,* பெ.(n.) விரைதற் குறிப்பு; expr. signifying speed.

**வல்லே** *vallē,* வி.எ.(adv.) விரைவாக; promptly, speedily. *"ஒன்றின வொன்றின வல்லே செயிற் செய்க" (நாலடி, 4). "செல்லினிச் சிறக்கநின் னுள்ளம் வல்லே" (அகநா. 19:8). "அடுபோர்ச் செழிய விகழாது வல்லே" (புறநா. 18 : 27).*

*[வல்[2] → வல்லே]*

**வல்லேறு** *vallēṟu,* பெ.(n.) இடி; thunderbolt. *"விசும்பின் வல்லேறு சிலைப்பினும்" (பெரும்பாண். 135).*

*[வல்[1] + ஏறு[3]]*

**வல்லேன்** *vallēṉ,* பெ.(n.) இணங்குகை, ஏற்கை; agreeing, yielding. *"அறனி லாளன் புகழ்என் பெறினும் வல்லேன்மன் தோழி யானே" (நற்–275–8–9).*

**வல்லை**[1] *vallai,* பெ.(n.) 1. வலிமை (சூடா.); strength, power, energy. *"அருள வல்லை யாகுமதி யருளிலர்" (புறநா. 27 : 17). "வல்லை யாகுதல் ஒல்லுமோ நினக்கே" (நற். 162 : 12).* 2. பெருங்காடு (பிங்.); extensive thicket, big forest. *"வல்லையுற்றவேய்" (கம்பரா. வனம்புகு. 42).* 3. மேடு (திவா.); hillock, mound. 4. கோட்டை (வின்.); fort, fortress. 5. வயிற்றுக்கட்டி (சீவரட்.); ovarian tumour.

*[வல்[1] → வல்லை]*

**வல்லை**[2] *vallai,* பெ.(n.) வல்லே பார்க்க; see *vallē. "வல்லைக் கெடும்" (குறள், 480).*

*[வல்[2] → வல்லை]*

**வல்லை**[3] *vallai,* பெ.(n.) 1. ஓர் நோய்; a disease. 2. புன்முருக்கு; a wild species of Butea frondosa. 3. முருக்கு; Erythrina indica (சா.அக.).

**வல்லை**[4] *vallai,* பெ.(n.) 1. புனமுருங்கை; battle of plassey tree. 2. முருக்கு; palas-tree.

**வல்லைக்கட்டி** *vallai-k-kaṭṭi,* பெ.(n.) வயிற்றுக் கட்டிவகை (சீவரட்.); ovarian tumour.

*[வல்லை[1] + கட்டி]*

**வல்லையம்** *vallaiyam,* பெ.(n.) ஈட்டி வகை; a kind of spear. *"வல்லையப் போருக் கொதுங்கேன்" (கூளப்ப. 181).*

*[வல்லயம் → வல்லையம்]*



**வல்லைவாதம்** *vallai-vādam,* பெ.(n.) வீங்கி காணப்படும் ஊதை நோய் வகையுளொன்று; enlargement of spleen. *"வாளது குறுக்கே வளர்ந்து தான் கிடக்கும் போது நீளமாய் உழக்கோல் போலும் நேரதாய்க் கிடக்குங் கண்டீர். மாளவே அன்னந்தன்னை வாங்காது செறிந்திடாது நாளது கேளாய் வல்லை நவின்றிடும் வாதந்தானே" (யூகி. 1200).*

*[வல்லை + **Skt.** vāta > த.வாதம்.]*

**வல்லொட்டு** *val-l-oṭṭu,* பெ.(n.) 1. போதும் போதாதென்றிருப்பது; that which is satiable or insatiable or barely sufficient. 2. அருமையா யிருப்பது; rarity, that which is rare.

*[வல் [1] + ஒட்டு]*

**வல்லொற்று** *vallorru,* பெ.(n.) வல்லினம் (இலக்.) பார்க்க; see *val-l-iṉam.* *"வல்லொற்றுத் தொடர்மொழி" (தொல். எழுத். 409).*

*[வல் [1] + ஒற்று. ஒற்று = மெய்யெழுத்து.]*

**வல்லோன்** *vallōṉ,* பெ.(n.) வல்லான், வலிமையுள்ளவன் (பிங்.); mighty-man, valiant man. *"வல்லோன் சூருளிக் குயின்ற" (நெடுநல். 118). "வல்லோன் றைஇய வரிவனப் புற்ற" (புறநா. 33 : 16), "மெல்லவி ழுஞ்சினை புலம்ப வல்லோன்" (அகநா. 21: 10). "ஊரலஞ் சேரிச் சீறூர் வல்லோன்" (நற். 77 : 8).*

*[வல்லான் → வல்லோன்]*

**வல்வரவு** *valvaravu,* பெ.(n.) மிகு வேகத்துடன் வருதல்; speedy return. *"மற்றுநின் வல்வரவு வாழ்வார்கு உரை" (குறள், 1151).*

*[வல் [3] + வரவு.]*

'வல்' என்னும் வேரடி ஈங்கு விரைவுக் குறிப்பினையுணர்த்திற்று.

**வல்வருத்தம்** *val-varuttam,* பெ.(n.) கடு வருத்தம் (யாழ்.அக.); excessive pain.

*[வல் [1] + வருத்தம்]*

**வல்வழக்கு** *val-vaḻakku,* பெ.(n.) வல்லடி வழக்கு, அழிவழக்கு (கொ.வ.); unreasonable insistence.

*[வல் [1] + வழக்கு]*

**வல்வாயசரணன்** *val-vāya-šaraṇaṉ,* பெ.(n.) பாம்பு வகை (யாழ்.அக.); a kind of snake.

*[வல் [1] + வாய் + அசரணன். **Skt.** அசரண.]*

**வல்வாயன்** *val-vāyaṉ,* பெ.(n.) வாக்கு வன்மையுள்ளவன் (வின்.); one who is tongue-doughty, eloquent proficient man; orator.

மறுவ. சொல்வல்லன்.

*[வல் [1] + வாயன்]*

**வல்விடம்** *val-viḍam,* பெ.(n.) கடுநஞ்சு (யாழ்.அக.); deadly poison.

*[வல் [1] + விடம்]*

**வல்விரை-தல்** *val-virai-,* 2 செ.கு.வி. (v.i.) மிக வேகமாதல், விரைதல்; to hurry, speed up. *"வள்ளலை வல்விரைந் தெய்த" வக. 328).*

*[வல் [2] + விரை-.]*

**வல்வில்** *val-vil,* பெ.(n.) ஒரே காலத்திற் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி ஓரம்பை எய்யுந் திறமை; the skill of piercing many objects by a single arrow. *"வற்பார் திரடோளைந் நான்குந் துணித்த வல் விலிராமன்" (திவ். பெரியதி. 5, 1, 4) (புறநா. 152, 6, அடிக்குறிப்பு).*

*[வல் [1] + வில்]*

**வல்வில்ஓரி** *val-vil-ōri,* பெ.(n.) கடை வள்ளல்களுள் ஒருவன் (புறநா. 158, 5); name of a liberal chief, one of *kaḍaivaḷḷalgaḷ.*

*[வல்வில் + ஓரி]*

கடைக்கழகக் காலத்தில் வள்ளலாகச் சிறந்து விளங்கிய குறுநில மன்னர் எழுவரு ளொருவன், ஓரி.

**வல்வில்லி** *val-villi,* பெ.(n.) ஒரே காலத்திற் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி, ஓரம்பை எய்யுந் திறனுடையவன் (புறநா. 150, அடிக்குறிப்பு); skilful archer, able to pierce many objects at a time, by a single arrow.

மறுவ. வில்லாளன்.

*[வல்வில் → வல்வில்லி]*

**வல்விலங்கு** *val-vilaṅgu,* பெ.(n.) யானை (பிங்.); elephant.

*[வல்[1] + விலங்கு]*

**வல்வினை** *val-viṉai,* பெ.(n.) 1. வலியதாகிய ஊழ்; the law of karma, as irresistible mighty destiny. *"தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்" (தேவா. 4, 4).* 2. தீவினை; bad karma, evil-doing. *"ஒழிகென வொழியா தூட்டும் வல்வினை" (சிலப். 10, 171).* 3. கொடுஞ் செயல்; wicked deed. *"வாளிற் றப்பிய வல்வினை யன்றே" (மணிமே. 21, 60).* 4. வலிதாகிய தொழில்; mighty act or deed. *"நீ வல்வினை வயக்குதல் வலித்திமன்" (கலித். 17).*

*[வல்[1] + வினை]*

**வல்வினைநோய்** *valviṉai-nōy,* பெ.(n.) கொடிய நோய்; wicked disease. *"வாராத வல்வினைநோய் வந்தாலும்" (திருவருட்பா.).*

*[வல்வினை + நோய்.]*

**வல[1]-த்தல்** *vala-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. சுற்றுதல்; to encircle, surround. *"புலவுநாறு நெடுங்கொடி..... வாங்குசினை வலக்கும்" (புறநா. 52).* 2. பின்னுதல்; to spin, as a spider its thread; to plait; to weave or knit. *"இழைவலந்த பஃறுன்னத்து" (புறநா. 136).* 3. தொடுத்தல்; to string in a series. *"உரைத்தேம்..... வலந்து" (பரிபா. 3, 10 – 11).* 4. பிணித்தல், கட்டுதல்; to tie, bind. *"குடர்வலந்த வேற்றின்முன்" (கலித். 103).* 5. வளைத்தல் (வின்.); to bend.

*[மல் → வல் → வல → வலம் = சுற்று, வல → வலத்தல்.வலத்தல் = வளைத்தல், சூழ்தல், சுற்றுதல்.]*

**வல[2]-த்தல்** *vala-,* 4 செ.கு.வி.(v.i.) கொழுத்தல் (திவா.); to grow fat, to become bulky.

*[பல → வல-.]*

**வல[3]-த்தல்** *vala-,* 4 செ.குன்றாவி.(v.t.) கேட்போர் மனத்தைப் பிணிக்கச் சொல்லுதல், உரைத்தல்; to say, tell; to narrate or converse. *"மருமகன் வலந்ததும்" (சீவக. 187).*

**வலக்கச்சம்** *vala-k-kaccam,* பெ.(n.) குமிழ்; a tree-*Gmelina arborca* (சா.அக.).

**வலக்கட்டாயம்** *vala-k-kaṭṭāyam,* பெ.(n.) வலக்காரம்; compulsion, force, coercion.

தெ. பலகட்டாயமு

*[வலம்[1] + கட்டாயம்]*

வலக்கணி *vala-k-kaṇi,*பெ.(n.) ஓர் வகை நாடி; a kind of pulse (சா.அக.).

வலக்கம் *valakkam,*பெ.(n.) மூக்கறா; a medicinal root (சா.அக.).

வலக்காய் *valakkāi,* பெ.(n.) வலம்புரிக்காய் பார்க்க; see *valam-purikkāi.*

வலக்காரம்[1] *valakkāram,*பெ.(n.) 1. கட்டாயம்; force, compulsion, coercion. 2. அதிகாரம், வலிமை; authority, power, might. *"வலக்காரம் பேசுகிறான்" (வின்.).* 3. வெற்றி; success, victory, triumph. *"வலக்கார முற்றாய்" (திருப்பு. 386).*

*[பலக்காரம் → வலக்காரம்]*

வலக்காரம்[2] *valakkāram,*பெ.(n.) 1. சூழ்ச்சி; wile, trick. *"சிறுவலக்காரங்கள் செய்த வெல்லாம்" (திருக்கோ. 227).* 2. பொய் (சூடா.); falsehood, lie, untruth.

*[வல[1] + காரம்[2]]*

வலக்காரம்[3] *vala-k-kāram,* பெ.(n.) இறக்கியம் (சர்வ திராவகம்); a kind of acid (சா.அக.).

வலக்கால்வாத்துவாதனம் *vala-k-kāl-vāttu-v-ādaṉam,* பெ.(n.) வலக்காலை மாத்திரம் நீட்டி நெஞ்சம் நிலத்திலே தோயக் கிடக்கும் இருக்கை வகை (தத்துவப். 108, உரை); a posture in which the right leg is stretched out and the chest is made to touch the ground.

*[வலம்[1] + கால்[1] + வாத்து + ஆதனம்- (ஆதனம் = இருக்கை) வாத்துவாதனம்]*

**Skt.** āsana த. ஆசனம்.

வலக்கை *vala-k-kai,*பெ.(n.) 1. வலது கை; right hand. *"வலக்கையின் மலைந்தான்" (கம்பரா. சம்புமா. 25).* 2. வலப்பக்கம்; right side. *"அது வலக்கையிலுள்ளது".*

*[வலம்[1] + கை[7]. குல்→குய்→கய்→கெய்→செய்→கெய்→கை→கய் (செய்தல்)→கெய்→கை.]*

ஒ.நோ. வலங்கை→வலக்கை என்றுமாம்.

கை யென்னும் பெயர், செய் என்னும் வடிவில் குமரி நாட்டில் வழங்கியிருத்தல் வேண்டும் (செல்வி.435/1974).

தமிழில் உள்ள 'செய்' எனும் வடிவமே, கன்னடம், குடகு, துளு, கோத்தம், துடவம், படகு, கொலாமி, கடபா, கோண்டி, கொண்டா, கூய், குவி, பிராகுவி ஆகிய மொழிகளில் கை, கெய், gey, biy, கீ எனும் வடிவங்களில் ஆட்சி பெற்றுள்ளது.

மாந்தக்கை போன்றிருக்கும் தும்பிக்கையும் கை எனப்பட்டது. ஒளிக்கற்றையைக் கதிரவனின் கையாக உருவகப்படுத்தியுரைப்பதால், அதுவும் கை எனலாயிற்று.

வலக்கைகொடு-த்தல் *valakkai-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உதவியளித்தல்; to help or support, as by extending the right hand. 2. உறுதி கூறுதல் (இ.வ.); to make a solemn affirmation, as by striking hands.

*[வலக்கை + கொடு-.]*

வலக்கைச்சி *vala-k-kaicci,* பெ.(n.) வலக்கணி பார்க்க; see *vala-k-kaṇi.*

வலக்கைதா-தல் *valakkai-tā-,*18 செ.கு.வி. (v.i.) வலக்கைகொடு-, பார்க்க; see *valakkai-koḍu-,* *"வலக்கை தந்து நிலத்தில் வந்தவதரித்த" (இராமநா. உயுத். 3).*

*[வலக்கை + தா-. ]*

தள்→தர்→தரு→தா = ஒத்தோனுக்குக் கொடுத்தல். 'தா' என்பதை வடமொழியாளர், வடசொல் என்பர். "தா என்கிளவி ஒப்போன் கூற்றே" (தொல்.சொல்.929). இலவயமாகக் கொடுத்தல் என்பதே வடமொழிப் பொருளாகும். ஆனால் மொழிஞாயிறு, "தன்னிலையில் ஒத்த தன்மையனுக்குத் தருதல் என்னுஞ் சிறப்புப் பொருளினையே, பழந்தமிழ் வடிவமான 'தா' குறிக்கும். தமிழின் தலைமைத் தன்மையை, நிலைநிறுத்தும் சொற்களுள் 'தா'வும் ஒன்று" என்று கூறியுள்ளார்.

புதுப்பெருக்கு நீரைக் குறிக்கும் 'வெள்ளம்' என்னும் சொல், தன் சிறப்புப் பொருளையிழந்து 'நீர்' என்னும் பொதுப்பொருளில் மலையாளத்தில் வழங்குவது போன்று, ஒத்தோனுக்குக் கொடுத்தல் என்னும் சிறப்புப் பொருளை இழந்து, 'தா' என்னும் சொல், 'கொடுத்தல்' என்னும் பொதுப்பொருளில் ஆரிய மொழிகளில் வழங்குகிறது.

**வலக்கையடி-த்தல்** *valakkai-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) உறுதி கூறுதல் (இ.வ.); to make a solemn affirmation, as by striking hands, asseveration, euphatic assurance.

*[வலக்கை + அடி-. அடு→அடி.]*

**வலக்கொன்னை** *vala-k-koṉṉai,* பெ.(n.) குப்பையில் வளரும் ஒருவகைக் கீரை; Indian acalypha. It is a vermifuge (சா.அக.).



மறுவ. குப்பைமேனி.

**வலகுடியஞ்சாலி** *valakuḍi-y-añjāli,* பெ.(n.) வரிவகை (நாஞ்.); a petty cess.

*[வலகுடி + அஞ்சாலி. (அஞ்சாலி = பழைய வரிவகை).]*

**வலங்கம்** *valaṅgam,* பெ.(n.) பெருங்குடும்பம்; large or big family. *வலங்க முடையான்* *(வின்.).*

தெ. பலங்கமு; க., து. பலக.

**வலங்கமத்தார்** *valaṅgamattār,* பெ.(n.) பறையர்தம் சிறப்புப் பெயர் (வின்.); title of the right-hand section of the paṟaiya caste.

*[வலங்கை → வலங்கமத்தார்]*

ஒருகா. வலங்குலத்தார்→வலங்கமத்தார்.

**வலங்கமர்** *valaṅgamar,* பெ.(n.) வலங்கமத்தார் (யாழ்.அக.) பார்க்க; see *valaṅgamattār.*

*[வலம் + அமர். உம்→அம்→அமல்→அமர்.]*

அமர்தல் = பொருந்துதல். பொருந்துதல் என்பது கூடுதல். போர்க்களத்தில் இருபகைப் படைகள் கலத்தல் அல்லது கூடுதல். இங்கு வலங்கமர் என்பது, அமர்க்களத்தில் அரசனுக்கு வலப்புறம் இருந்து போர் செய்தோரைக் குறித்ததெனக.

**வலங்காரம்** *valaṅgāram,* பெ.(n.) மத்தளத்தின் மார்ச்சனை பூசிய பக்கம் (யாழ்.அக.); that side of a mirudaṅgam, to which *mārccaṉai* is applied.

*[வலம்[1] + காரம்[1]]*

**வலங்குலத்தார்** *valaṅ-kulattār,* பெ.(n.) தமிழ்நாட்டு வலங்கை இனத்தாருள் ஒருசார் கூட்டத்தினர்; a segment among the right-hand castes in Tamil country.

*[வலங்குலம் → வலங்குலத்தார்.]*

குல்→ குலம். குல் = வளைவு, சூழ்தல். மன்னனின் வலப்பக்கம் அமர்ந்து பணியாற்றும், ஆற்றல் மிக்கவர்.

**வலங்குலம்** *valaṅgulam,* பெ.(n.) வலங்கை இனத்தார் (யாழ்.அக.); the right hand castes among the Tamils.

*[வலம்[1] + குலம்]*

குல்→ குலம். குலம் = வளைவு, சூழ்தல். வலங்குலத்தார். வலங்குலம் போன்ற அமைப்புகள் சோழராட்சிக் காலத்தே தோன்றியவை. சோழராட்சியில் மன்னருக்குப் போர்க்களத்திலும், அவைக்களத்திலும் (அரண்மனையிலும்) வலதுபுறம் இருந்து செயலாற்றும் திறன் மிக்க குலம்.

வீரராசேந்திரம் (கி.பி.1063–1069) ஆட்சிக் காலத்தில், வலங்கை இனத்தார் பற்றிய செய்திகள் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன. வலங் குலத்தில் இடம்பெற்ற இனத்தார் வருமமாறு:– 1. வேளாளன்; 2. அகம்படியான்; 3. இடையன்; 4. சாலியன்; 5. பட்டணவன்; 6. சான்றான்; 7. குறவன்; 8. குறும்பன்; 9. வள்ளுவன்; 10. பறையன்.

**வலங்கை** *valaṅgai,* பெ.(n.) 1. வலப் பக்கத்துக் கை; right hand. 2. தமிழ் நாட்டு வலங்கையினத்தாருள் ஒரு பிரிவினம்; a sect among the right hand castes in Tamil country. *"படைவீட்டு ராஜ்யம் நாட்டவர் வலங்கையும் இடங்கையும் மஹா ஜனமும்" (தெ. இ. கல். தொ. i, III).*

*[வலம்[1] + கை[5]]*

**வலங்கைஇடங்கைப்படைகள்** *valaṅgai-iḍaṅgai-p-paḍaigal,* பெ.(n.) பகைவரின் அரணை வலதுபுறமாகவும், இடதுபுறமாகவும் வளைத்துச் சென்று போரிடும் வெட்சி வீரர்கள்; warriors who combat enemis fort surrounding on both right and left directions.

*[வலங்கை + இடங்கை + படைகள்.]*

முதலாம் இராசராசன் காலத்தில் இப்படைகள் சிறந்த வளர்ச்சி அடைந்திருந்தன. சோழர் படையில் வளர்ச்சியடைந்திருந்த இப்படைகள், முதலாம் குலோத்துங்கன் ஆட்சியில், சோழ நாட்டில் காவிரிக்கு வடகரையில், கஞ்சனூரில் படைவீடிருந்து, ஆட்சிக்குப் பகையாயிருந்த குறும்பொன்றை அழித்து, ஆநிரைகளைக் கவர்ந்து வந்தமையை, திட்டைக்குடிக் கல்வெட்டு புலப்படுத்துகிறது. குறும்பெறிந்து ஆநிரை கவர்தலை வெட்சி திணையின் செயலாக *"வேந்து விடு முனைஞர் வேற்றுபுலக்களவின் ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்."* என்று கூறும் தொல்காப்பிய இலக்கண மரபுடன் வெட்சியாரின் செயல்களாகக் கூறப் பெறும். *'தந்து நிறை' பாதீடு ஆகிய துறைகட்கமைந்த நிகழ்ச்சிகள், சோழர் காலத்தில் கி.பி. 11–ம் நூற்றாண்டில் நிகழ்ந்திருப்பதனை கல்வெட்டொன்று புலப்படுத்துகின்றது. "இத் தேவர்க்கு மூன்றாவது நாளிலே, சோழ மண்டலம் இடங்கை வலங்கையாய் இன்னாயனார்க்குக் குறும்பெரிய காவேரிக்கு* வடகரையில் கஞ்சனூரகத்திலே விட்டுக் கொடு இருந்து, குறும்பெறிந்து, நிறைகொண்ட ஆடும், மாடும், கிடாவும், எருமையும் இன்னாயனார் விளக்குக்கு குடுத்த உருக்களில் திருநுன்தா விளக்கு இரண்டுக்கு உடலாக நீக்கின பசு நாற்பதும் நீக்கி, ஆடும், மாடும், எருமையும், முதலான காசு கள அய" (தொல்பொருள் ஆய்வுத்துறை அறிக்கை 1903). கி.பி. 1070ல் சோழ

நாட்டில் அரசுக்கு வாரிசு இல்லாமையால் ஏற்பட்ட குழப்பத்தைக் கீழைச் சாளுக்கிய மரபினனாகிய குலோத்துங்கன் அறிந்து, சோழர் பெண் கொடுத்த தன்தாய் வழி முறையால் விரைந்து வந்து அரசேற்றான். ஆட்சியேற்ற மூன்றாவது நாளிலேயே இந் நிகழ்ச்சி நிகழ்ந்திருப்பது இச் செய்திக்கு உறுதுணையாகும். இச் செயலை விரும்பாத நிலையில், சோழநாட்டில் பகைவர்கள் அமைந்திருந்ததையே, இக் கல்வெட்டு தரும் குறும் பெறிந்த நிகழ்ச்சி புலப்படுத்துகிறது. "ஸ்ரீ ராஜ ராஜ தேவர் வலங்கைப் பழம்படை" (தெ.கல். தொ. 2 : 2 கல். 35).

**வலங்கைஇடங்கைமகன்மை** *valaṅgai-iḍaṅgai-magaṉmai,* பெ.(n.) வலங்கை, இடங்கை படைகளுக்கு மக்கள் விருப்புடன் அளிக்கும் வரி; a tax paid oy people voluntarily for worriors of valour called right and left armis. *"வலங்கை இடங்கை மகன் உள்ளிட்ட அந்தராயத்துக்கு" (தெ.கல். தொ.8. கல்.4).*

*[வலங்கை + இடங்கை + மகமை → மகன்மை = வரிவகையுளொன்று.]*

**வலங்கைஇடங்கைவழக்காரம்** *valaṅgai-iḍaṅgai-vaḻakkāram,* பெ.(n.) வலங்கை இடங்கைப் பிரிவினர்க்கிடையே ஏற்பட்ட வழக்கு; a dispute between *vaḻaṅgai* (right) and *iḍaṅgai*(left) sects.

*[வலங்கை → வலங்கையார்]*

கரிகாலன் என்னும் பெயர்கொண்ட வீர ராசேந்திரச் சோழன் காலத்தே (கி.பி.1063–1069), வலங்கைக் குலத்தார்க்கும், இடங்கைக் குலத்தார்க்கும் இடையே ஏற்பட்ட வழக்கினையும், அப் பிணக்கினைத் தீர்த்து, ஒவ்வொரு குலத்தார்க்கும் உரிய முறைமையினை வரையறை செய்த, வாழ்வியல் செய்தியினைப் பற்றி, பாவாணர் தமிழர் வரலாறு (பக்.310–311) என்னும் நூலில் நுவல்வது :–

குலப் பட்டம், குடை கொடி பந்தம் முதலிய விருதுச் சின்னங்கள், வெண்கவரி வீச்சு, சிவிகை குதிரை முதலிய ஊர்தி, மேளவகை, தாரை வாங்கா முதலிய ஊதிகள், வல்ல வாட்டு, செருப்பு ஆகியவை பற்றிக் குலங்கட்கிடையே பிணக்கும் சச்சரவும் ஏற்பட்டதனால், கரிகாலன் என்னும் பெயர் கொண்டிருந்த வீர ராசேந்திரச் சோழன் (1063–1069) அவ் வழக்கைத் தீர்த்து வைத்ததாகத் தெரிகின்றது.

*"காவிய மாகிய காமீகங் கண்டுகங்*
*காகுலத்தோர்*
*ஓவிய பாத்திர ராக விருபத்து நான்குயர்ந்த*
*மேவிய கோட்டத் திலுங்கரி கால*
*வளவன்மிக்க*
*வாவிய மேன்மை கொடுத்தளித்*
*தான்றொண்டை மண்டலமே"*

என்பது, கஎ–ஆம் கஅ–ஆம் நூற்றாண்டிலிருந்த படிக்காசுப் புலவர் பாடியது.

சோழனுக்கு வலக்கைப் பக்கம் அமர்ந்திருந்த குலத்தார் வலங்கையர் என்றும், இடக்கைப் பக்கம் அமர்ந்திருந்த குலத்தார் இடங்கையர் என்றும், பெயர் பெற்றதாக உய்த்துணரலாம். பகைகொண்ட இருசாரார் ஒரே பக்கத்தில் இருந்திருக்க முடியாது.

இருகையிலும் பல குலத்தார் சேர்ந்திருப்பினும், வலங்கையில் வேளாளரும் இடங்கையிற் கம்மாளருமே தலைமையானவர் என்று கருத இடமுண்டு.

சோழராட்சிக்குப்பின் பல்வேறரசுகள் ஏற்பட்டதனாலும், பல புதுக் குலங்கள் தோன்றியதனாலும், ஆங்கிலர் அரசாட்சிக்

காலத்தில் மீண்டும் வலங்கை யிடங்கைச் சச்சரவு கிளர்ந்தெழுந்தது கஅ0கூ-ஆம் ஆண்டு சூலை மாதம் உரு -ஆம் பக்கல், செங்கழுநீர்ப்பட்டு மாவட்ட நயன்மைத் தீர்ப்பாளர் சார்சு கோல்மன் (George Colman) துரை, அவ் வழக்கைத் தீர்த்து ஒவ்வொரு குலத்தார்க்கும் உரியவற்றைத் திட்டஞ் செய்தார்.

வலங்கைக் குலங்கள் :- வேளாளன், அகம்படியான், இடையன், சாலியன், பட்டணவன், சான்றான், குறவன், குறும்பன், வள்ளுவன், பறையன் முதலியன.

இடங்கைக் குலங்கள் :- கம்மாளன், பேரிச்செட்டி, நகரத்துச்செட்டி, கைக்கோளன், பள்ளி (வன்னியன்), வேடன், இருளன், பள்ளன், இரட்டைமாட்டுச் செக்கான் முதலியன.

இடங்கையினும் வலங்கை பெருங்கை. மேளகாரன், கணிகை (தாசி), பணி செய்வோன் முதலிய குலங்களில் இருகையுமுண்டு. ஒரு சில குலங்களில் ஆடவர் ஒரு கையும், பெண்டிர் ஒரு கையும் ஆவர். வடுக கன்னடநாடுகளிலும் இவ்வகுப்புக்கள் இருப்பதால், அந்நாட்டுப் பகுதிகள் கக-ஆம் நூற்றாண்டிலும் தமிழ்நாடாயிருந்தமை அறியப்படும்.

"இத்தமிழ்நாட்டில் ஒவ்வொரு நகரத்திலும், சிற்றூரிலும், இடங்கை வலங்கையார் வசிப்பதற்கு வீதிகள் தனித்தனியே ஏற்பட்டிருக்கின்றன. ஒருவர் வசிக்குந் தெருவில் மற்றொருவர் வசிப்பதில்லை. சுபாசுபப் பிரயோசனங்களிலும் ஒருவரிருக்கும் வீதி வழியாக மற்றொருவர் ஊர்வலம் வருவதில்லை. பிரேதங்கொண்டு போவதில்லை. கருமாதியிலுமப்படியே. இருவருக்கும் பொதுவாயுள்ள வீதியில் போவதற்குத் தடையிராது. சுவாமிகளுக்கு உற்சவாதிகளும் அந்தந்தக் கட்சிகளிலுள்ள வீதிகளிலே தான் நடத்துவார்கள்" என்று கா.சு.பிள்ளை ககூ0க-ஆம் ஆண்டில் எழுதியுள்ளார் (வருண சிந்தாமணி, பக்.502-3).

**வலங்கைப்பழம்படை** *valaṅgai-p-paḻam-paḍai,* பெ.(n.) முதலாம் இராசராசன் ஆட்சியில் அமைக்கப்பட்டிருந்த படைகளுள் பழமையாக வரும் வலங்கைப் படை. வலங்கை, இடங்கை என்பது படைகளின் பாகுபாட்டிற்கமைந்த குறிப்புப் பெயராகும்; a right wing of army formed during Raja Raja cōḻa-region. Right, left are two classifications of said army.

**வலங்கைமத்தர்** *valaṅgai-mattar,* பெ.(n.) வலங்கமத்தார் (சினேந்.140) பார்க்க; see *valaṅga-mattār.*

*[வலங்கமத்தார் → வலங்கைமத்தர்]*

**வலங்கைமீகாமன்** *valaṅgai-mīgāmaṉ,* பெ.(n.) 18-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த இவர், கும்பகோணத்துக்கு அருகில் வலங்கைமானில் வாழ்ந்தவர்; he lived before 18C and a native of *valaṅgaimāṉ* near *Kumbakōṇam.*

இவர் 'அறிவானந்தர்' எனவும் அழைக்கப் படுகின்றார். அறிவானந்த சித்தியார் என்னும் நூலினை இயற்றியவர்.

**வலங்கையார்** *valaṅgaiyār,* பெ.(n.) 1. வலங்கை யினத்தார் (வின்.); the right-hand castes among the Tamils. 2. வலங்குலம் பார்க்க; see *valaṅgulam.*

*[வலங்கை → வலங்கையார்]*

**வலங்கையிடங்கைமகன்மை** *valaṅgai-iḍaṅkai-magaṉmai,* பெ.(n.) பழைய வரி வகை; an ancient tax or levy.

*[வலங்கை + இடங்கை + மகன்மை = வரி, ஆயம்.]*

**வலங்கையுயர்வுகொண்டார்** *valaṅgai-y-uyarvu-koṇḍār,* பெ.(n.) சாணார்தம்

சிறப்புப் பட்டப்பெயர் (நாஞ்.); a title assumed by a section of *cāṇār* caste.

*[வலங்கை + உயர்வு + கொண்டார்]*

**வலங்கையுற்றார்** *valaṅgai-y-uṟṟār,* பெ.(n.) வலங்கையார் (வின்.) பார்க்க; see *valaṅgaiyār.*

*[வலங்கை + உறு- (உற்று) → உற்றார்.]*

**வலங்கொள்[1](ளு)-தல்** *valaṅ-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி.(v.i.) வெற்றியடைதல்; to be victorious, triumphant. *"வலங்கொள் புகழ்பேணி" (தேவா. 668, 8).*

*[வலம் + கொள்-. வல → வலம் = வெற்றி.]*

**வலங்கொள்[2](ளு)-தல்** *valaṅ-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி.(v.t.) 1. இடவலமாக வருதல்; circumambulation from left to right. *கடவுட் கடிநகர்தோறு மிவனை வலங்கொளீஇ (கலித்.84).* 2. வெல்லுதல்; to conquer.

*[வலம்[1] + கொள்-.]*

**வலசத்து** *vala-šattu,* பெ.(n.) சிலாசத்து; bitumen (சா.அக.).

**வலசல்** *valasal,* பெ.(n.) வலசை[4], 1 பார்க்க; see *valašai.*

**வலசாரி[1]** *vala-šāri,* பெ.(n.) கிளிஞ்சில்; bivalve-shell (சா.அக.).

**வலசாரி[2]** *valašāri,* பெ.(n.) கூத்து முதலியவற்றில் வலமாகச் சுற்றி வருகை (யாழ்.அக.); turning or wheeling to the right as in dancing.

*[வலம்[1] + சாரி[1]]*

**வலசி** *valaši,* பெ.(n.) சோறு; cooked rice (சா.அக.).

*[வல்சி → வலசி]*

**வலசு** *valašu,* பெ.(n.) வலசை[1], 2 (யாழ்.அக.) பார்க்க; see *valašai.*

**வலசுத்தி** *vala-šutti,* பெ.(n.) கழிமாசுக் (மல) கட்டை வெளியேற்றுதல்; to evacuate/ void/ as excreta.

**வலசெழுமை** *vala-šeḻumai,* பெ.(n.) கொம்பு; one of the nine gems-ruby (சா.அக.).

**வலசை[1]** *valašai,* பெ.(n.) உட்கிடைச் சிற்றூர்; hamlet.

மறுவ. தொட்டி.

**வலசை[2]** *valašai,* பெ.(n.) வரிச்சல்; lath. *"மூங்கில் வலசைகள் 25 விழுக்காடு சுமை கட்டி" (மதி. க. ii, 173).*

**வலசை[3]** *valašai,* பெ.(n.) பறவைகள், விலங்குகள் தக்க சூழலைத் தேடி இடம் பெயர்தல்; migration of birds, beasts etc. for better environment.

**வலசை[4]** *valašai,* பெ.(n.) 1. வேற்று நாட்டுக்குக் குடியோடுகை; emigration flight from home to alien country. *"திவ்யதேசத் தெம்பெருமான்களும் நம்மாழ்வாரும் அங்கே வலசையாக வெழுந்தருள" (யதீந்த்ரப். 12).* 2. கூட்டம் (யாழ்.அக.); crowd.

தெ. வலச; க. வலசெ.

குடிகள் வலசை போராதினால் சில ஊர்கள் குடிப்பாழாயின.

வலசை[5] *valašai,* பெ.(n.) வடுக வினத்தாருள் ஒரு பிரிவினர் (இ.வ.); the Balija segment in vaduga caste.

தெ. பலிசெ.

வலசைவாங்கு-தல் *valašai-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) வேற்றூர்க்குக் குடியோடுதல் (வின்.); to emigrate, to fly from home to alien region or village.

மறுவ. புலம்பெயர்-தல்

*[வலசை + வாங்கு-.]*

வலசோர் *valašōr,* பெ.(n.) நகரம்; town.

வலஞ்சக்கியன் *valañ-cakkiyan,* பெ.(n.) நாகமணல்; zinc ore (சா.அக.).

வலஞ்சால்ஓட்டு-தல் *valañjāl-ōṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ஏர் கொண்டு உழவு செய்தலில் ஒருமுறை நீள் வட்டமாக வருதல்; ploughing lands lengthwise or longitudinally.

*[வலம்சால் + ஓட்டு-.]*

வலஞ்சியர் *valañjiyar,* பெ.(n.) வணிகர்; the vaisya or trade community.

வலஞ்சுரி-தல் *valañ-curi-,* 2 செ.கு.வி. (v.i.) இடமிருந்து வலமாகச் சுற்றுதல்; to whirl to the right. *"வலஞ்சுரி மராஅம் வேய்ந்து" (ஐங்குறு. 348).*

*[வலம்[1] + சுரி-.]*

வலஞ்சுழி[1]-த்தல் *valañ-culi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வலமாகச் சுற்றச் செய்தல்; to cause to whirl to the right. 2. வலப்புறமாகச் சுழியும்படிக் கீறுதல்; to draw to the right, as a circle.

*[வலம்[1] + சுழி[2]-.]*

வலஞ்சுழி[2]-த்தல் *valañ-culi-,* 4 செ.கு.வி. (v.i.) வலஞ்சுழி[1]-தல் பார்க்க; see *valañ-culi-. "வலஞ்சுழித் தெழுந்து வந்து" (கம்பரா. பிரமாத். 166).*

*[வலம்[1] + சுழி[1] -.]*

வலஞ்சுழி[3]-தல் *valañ-culi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. வலமாகச் சுழலுதல்; to whirl to the right. 2. வலப்புறமாகச் சுழிந்திருத்தல்; to curl to the right.

*[வலம்[1] + சுழி[1]]*

வலஞ்சுழி[4] *valañ-culi,* பெ.(n.) 1. வலமாகச் சுழலுகை (யாழ்.அக.); to curling or whirling to the right. 2. வலப் புறமாகச் சுழியுஞ் சுழி; curl winding to the right. 3. குதிரையின் நற்சுழி வகை (வின்.); right-hand curl on a horse's forehead, considered to be a good mark. 4. தஞ்சை மாவட்டத்திலுள்ள பாடல்பெற்ற சிவத்தலம் (தேவா.); a siva shrine in the Tañjore district.

*[வலம்[1] + சுழி[1]]*

வலஞ்செய்-தல் *valañ-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) இடவலமாகச் சுற்றி வருதல்; to go round from left to right. *"மும்முறை மலைவலஞ் செய்தால்" (சிலப். 11, 107).*

*[வலம்[1] + செய்-.]*

வலஞ்சைமணிக்கிராமம் *valañjai-maṇik kirāmam,* பெ.(n.) ஒருசார் வணிகர் குழுமம்; a merchant guild.

வலட்டி *valaṭṭi,* பெ.(n.) வல்லமை யுள்ளது (யாழ்.அக.); that which is dominant or powerful.

*[வலாட்டியம் → வலட்டி]*

வலத்தபாடுவோர் *valatta-pāḍuvōr,* பெ.(n.) வில்லுப்பாட்டுப் பாடுவோரின் வலப்புறம் அமர்ந்து பாடுவோர்; a singer sitting the right side on *villu-p-pāṭṭu*singer. *வில்லுப்பாட்டு இசைப்பவருடன் ஒத்திசைந்து பாடுவோர்.*

*[வலத்த + பாடுவோர் = புகழ், வீரம், வெற்றிச் சிறப்புகளைப் பாடுவோர்.]*

வலத்திடு-தல் *vala-t-tiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) சொல்லுதல்; to speak.

*[வலத்து + இடு-.]*

வலத்தை *valattai,* பெ.(n.) நுகத்தின் வலப் பக்கத்து எருது (இ.வ.); bull yoked on the right.

*[வலம்[1] → வலத்தை]*

வலதம் *valadam,*பெ.(n.) சுக்கு; dried ginger (சா.அக.).

வலது *valadu,*பெ.(n.) 1. வலப்பக்கம்; right side. 2. வெற்றி; victory, triumph. *“மணவாளருடனே வழக்காடி வலது பெற்றேன்” (அருட்பா, vi, தலைவிவருந். 12).* 3. திறமை; efficiency, skill, talent. *“வாயுள்ளார் பேசவும் வலதுள்ளார் கொழிக்கவும்”.* 4. ஒருவன் வலதுக்குள் ளடங்கியது; that which is within one's power or ability. *“அது என் வலத்ல்ல” (வின்.).* 5. யாதொரு குறைவுமின்றி வாழும் வாழ்க்கை; life of ease and comfort. 6. செயல் (யாழ்.அக.); deed.

*[வல→வலம் → வலது]*

வலதுகுண்டை *valadu-kuṇḍai,* பெ.(n.) நுகத்தின் வலப்பக்கத்து எருது (வின்.); bull yoked on the right.

*[வலது[1]+குள்→குண்டு→குண்டை= எருது.]*

வலதுகுறைந்தோர் *valadu-kuraindōr,* பெ.(n.) உடல் உறுப்பு குறைந்தோர்; physically handicapped people. *வலது குறைந்தோருக்கான நிலையம் ஒன்றை அமைச்சர் திறந்து வைத்தார்.*

மறுவ. ஊனமுற்றோர்.

*[வலது + குறைந்தோர்]*

வலதுகை[1] *valadu-kai,*பெ.(n.) ஆலோசனை வழங்குதல், மந்தணம் (இரகசியம்) காத்தல், குறிப்பறிந்து நம்பிக்கையாக நிறைவேற்றுதல், முதலானவற்றில் ஒருவருக்கு உறுதுணையாக; one's right hand, a confident who supports one in all respects. *சிறப்புச் செயலர்தான் முதலமைச்சரின் வலது கை.*

வலதுகை[2] *valadu-kai,*பெ.(n.) வலக்கை பார்க்க; see *vala-k-kai.*

*[வலது + கை]*

வலதுசடரம் *valadu-šaḍaram,* பெ.(n.) இதமனியிலிருக்கும் நான்கு அறைகளுள் வலது பக்கத்தில் உள்ள காரி யரத்தப் பகுதி; one of the four chambers of the heart situated on the right bottom-right ventricle (சா.அக.).

*[வலது + சடரம்]*

வலதுசாரி *valadu-šāri,* பெ.(n.) முதலாளித் துவத்தை ஆதரிக்கும் இயக்கம்; rightist. *தேர்தலில் வலதுசாரிகள் வெற்றி.*

*[வலது + சார்→ சாரி.]*

வலதுபுப்புசம் *valadu-pupušam,* பெ.(n.) வலது பக்கத்திலுள்ள நுரையீரல்; the right lung (சா.அக.).

*[வலது + புப்புசம்]*

வலந்தம்[1] *valandam,* பெ.(n.) வளைவு (யாழ். அக.); curve, bend, arch.

*[வல[1] → வலந்தம்]*

வலந்தம்[2] *valandam,* பெ.(n.) சொல் (யாழ். அக.); word.

*[வல[3] → வலந்தம்]*

வலந்தரை *valandarai,* பெ.(n.) வலங்காரம் (இ.வ.) பார்க்க; see *valaṅgāram.*

*[வலம்[1] + தரை[2]]*

வலந்தழைத்தமூலி *valandaḻaitta-mūli,* பெ.(n.) பிரண்டை; a climber square -stalked vine- vitis quadrangularis (சா.அக.).

வலந்தானை *valandāṉai,* பெ.(n.) ஆடவர் வட்டமாகச் சுற்றிவந்து கோல் அடித்தாடும் ஆட்டவகை (G.Tp.D.I.86); a dance in which men move in a circle beating sticks together.

*[வலம்[1] + தானை]*

வலந்திரி *valandiri,* பெ.(n.) வலப் பக்கமாய்ச் சுற்றியேறுங் கொடிவகை (யாழ்.அக.); a creeper which winds to the right.

*[வலம் + திரி]*

வலநாடு *vala-nāḍu,* பெ.(n.) ஓர் ஊர்; a country.

*[வல + நாடு. (நாடு = மருத நிலம்)]*

வலநாள் *vala-nāḷ,* பெ.(n.) வலவோட்டு நாள் (விதான. கால. 2) பார்க்க; see *vala-v-ōṭṭu-nāḷ.*

*[வலம்[1] + நாள்]*

வலப்பம் *valappam,* பெ.(n.) 1. மரப்பலகையில் எழுதும் ஒருவகைக் கல் (வின்.); a kind of soft stone, used to write on wooden boards. 2. கரும்பலகையில் எழுதும் பலப்பக்குச்சி; slate pencil.

மறுவ. பலப்பம், மாக்குச்சி.

*[பலப்பம் → வலப்பம்]*

வலப்பாசிசம் *vala-p-pāśiśām,* பெ.(n.) வலது பார்க்க; see *valadu.*

வலப்பாரிசம் *vala-p-pāriśam,* பெ.(n.) வலப்பக்கம் (யாழ்.அக.); right side.

*[வலம்[1] + பாரிசம்]*

வலம்[1] *valam,* பெ.(n.) 1. சேனை, படை (வின்.); army. 2. வலி, வலிமை; strength, energy. *“வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த” (புறநா. 24).* 3. வெற்றி; victory, triumph. *“வலந்தரிய வேந்திய வாள்” (பு.வெ.9, 35).* 4. ஆணை; command, authority. *“நின் வலத்தினதே” (பரிபா. 5, 21).* 5. வலப்பக்கம்; right side. *“இடம் வல மேழ்பூண்ட விரவித்தேர்” (திவ். இயற். 3, 73). “துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி” (அகநா. 3:7).* 6. இடவலமாக வருகை; circumambulation from left to right. *“மாலிருஞ் சோலை வலஞ்செய்து நாளும் மருவுதல் வழக்கே” (திவ். திருவாய். 2, 10, 8).* 7. சுமை, பாரம், கனம் (அக.நி.); luggage, weight. 8. மேலிடம் (திவா.); high place or locality. 9. இடம் (மலைபடு. 549, உரை) (சூடா.); locality.

*[வல்→வல→வலம்]*

வலம்[2] *valam,* இடை.(part.) ஏழனுருபு; sign of the locative. *"கைவலத்தியாழ் வரை நின்றது" (நன். 302, உரை).*

*[பலம் → வலம்]*

வலம்[3] *valam,* பெ.(n.) கழிமாசுக்கட்டு; faeces.

*[மலம் → வலம்]*

வலம்[4] *valam,* பெ.(n.) நேர்த்தியானவை; that which is excellent or matured.

*[வல → வலம்.]*

வலம்நோக்கிநிலை-த்தல் *valam-nōkki-nilai-,* 4 செ.குன்றாவி.(v.t.) மூச்சை வலது மூக்குத் துளை வழியாக விடல்; exhaling or breathing through the right nostril.

*[வலம் + நோக்கி + நிலை-.]*

வலம்படு-தல் *valam-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வெற்றியுண்டாதல்; to be victorious or triumphant. *"வலம்படு முரசின்" (பதிற்றுப். 78, 1).* 2. இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கஞ் செல்லுதல்; to pass across one's path from left to right. *"கரிக்குருவி வலம்பட்டது" (உ.வ.).*

*[வல→வலம் [1] + படு-.]*

வலம்பம் *valambam,* பெ.(n.) நேர்கோடு (யாழ்.அக.); straight line.

*[வலம்பை → வலம்பம்]*

வலம்பாய்-தல் *valam-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) வலம்படு-தல் 2 பார்க்க; see *valampaḍu.*

*[வலம் + பாய்-.]*

வலம்புரநாதர் *valambura-nādar,* பெ.(n.) திருவலம்புரத்திலே கோயில் கொண்டிருக்கும் இறைவன்; the God enshrined at Tiruvalampuram.

வலம்புரி[1] *valamburi,* பெ.(n.) 1. வலமாகச் சுழிந்திருப்பது; that which curls to the right. *"வலம்புரி யாழியனை" (திவ். பெரியதி. 9, 9, 9).* 2. வலம்புரிச்சங்கு; conch whose spirals always turn to the right. *"திருமுத் தீன்ற வலம்புரிபோல்" (சீவக. 2702). "அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து" (அகநா. 201 : 5). "துணை புணர்ந் தெழுதரும் தூநிற வலம்புரி" (கலித்.135 : 1). "ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி" (புறநா. 225 : 12). "இரங்குகுரல் முரசமொடு வலம்புரி யார்ப்ப" (புறநா. 397).* 3. வலம்புரிச் சங்கு போன்று கைவரி (இரேகை); lines in the palm of the hand resembling *valamburi-c-caṅgu,* considered auspicious. *"வலம்புரி பொறித்த வண்கை மதவலி" (சீவக. 204).* 4. வலம்புரிச் சங்கின் வடிவமைந்த தலைக் கோலவகை; a head-ornament, shaped like *valampuri-c-caṅgu. "உத்தியொடு.... வலம்புரி வயின் வைத்து" (திருமுரு. 23).* 5. இடவலமாகத் திருக்கோயிலைச் சுற்றுகை (வின்.); circumambulation from left to right, as of a temple.

தெ. வலமுரி; ம. வலம்பிரி.

*[வலம் [1] + புரி]*

வலம்புரி[2] *valamburi,* பெ.(n.) 1. நந்தியாவட்டச்செடி (பிங்.); East Indian rose bay, wax-flower crape Jasmine. *"பாரிசாத மென் கொழுந்தொடு வலம்புரி பலவும்".* 2. நீண்ட செடிவகை (சூடா.); Indian screw-tree.

*[வலம் [1] + புரி]*

**வலம்புரி³** *valamburi,* பெ.(n.) சிறு விரலும் பெருவிரலும் நிமிர்ந்து, சுட்டுவிரலின் அகம் வளைந்து, ஒழிந்த இரண்டு விரலும் நிமிர்ந்து இறைஞ்சி நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which the little finger and the thumb are held upright while the forefinger is folded and the other two fingers are held up slightly bent, one of 33 *iṇaiyā-v-iṇaikkai.* 2. இட வலமாகத் திருக்கோயிலைச் சுற்றி வருதல்; circumambulation from left to right, as of a temple.

*[வலம்¹ + புரி]*

**வலம்புரிக்காய்** *valamburi-k-kāy,* பெ.(n.) வலம்புரிச் செடியின் காய் (இங். வை. 52); cone of the Indian screw-tree, used medicinally.

*[வலம்புரி¹ + காய்³]*

**வலம்புரிக்கொடி** *valamburi-k-koḍi,* பெ.(n.) கொடிவகை (மலை.); a climber.

*[வலம்புரி + கொடி]*

**வலம்புரிச்சங்கம்** *valamburi-c-caṅgam,* பெ.(n.) வலம்புரிச்சங்கு பார்க்க; see *valamburi-c-caṅgu.* *"வலம்புரிச் சங்கம் வறிதெழுந் தார்ப்பம்" (மணிமே. 7:113).*

*[வலம்புரி + சங்கம்.]*

**வலம்புரிச்சங்கு** *valam-buri-c-caṅgu,* பெ.(n.) இடமிருந்து வலமாக உள் வளைந்த சங்கு; conch whose spirals always turn to the right.

*[வலம்புரி ¹ + சங்கு]*



**வலம்புரிப்புல்** *valamburi-p-pul,* பெ.(n.) புல்வகை (M.M.853, 934); spear-grass.

*[வலம்புரி ² + புல்]*

**வலம்பை** *valambai,* பெ.(n.) கம்பு, கழி (இ.வ.); pole, stick, rafter.

*[வல்→வல→வலம்பை.]*

**வலம்வருவாண்டி** *valamvaruvāṇḍi,* பெ.(n.) விச்சுளி; a swift little bird (சா.அக.).

**வலம்வா—தல்** *valam-vā-,* 15 செ.குன்றாவி. (v.t.) இடவலமாகத் திருக்கோயிலைச் சுற்றி வருதல்; to go round from left to right, as of a temple. *"திருமலையே வலம் வந்தனள்" (தக்கயாகப். 321).*

*[வலம்¹ + வா—.]*

**வலமன்¹** *valamaṉ,* பெ.(n.) நந்தியாவட்டம்; a flower plant, wax flower, crape jasmine, East Indian rosebay.

**வலமன்²** *valamaṉ,* பெ.(n.) வலப்பக்கம் (யாழ். அக.); right side.

*[வலம் ¹ → வலமன்]*

**வலமா—தல்** *valam-ā-,* 8 செ.கு.வி.(v.i.) வலம் படு—தல் 2 (இ.வ) பார்க்க; see *valam-paḍu-2-.*

*[வலம் ¹ + ஆ— ⁶]*

**வலமாய்வாங்கு-தல்** *valamāi-vāṅgu-*, 5 செ.குன்றாவி.(v.t.) வயல் வரப்பின் அருகில் உழுவதற்கேற்ப மண்வெட்டியால் வெட்டி யெடுத்து, உழவுக்கு ஏற்ற வாறாக்குதல்; to dredge with spade that portion of the field near its ridge as ploughing is not feasible.

*[வலமாய் + வாங்கு-.]*

**வலமுறைத்திரிவுக்குறி** *valamuṟai-t-tirivu-k-kuṟi*, பெ.(n.) சொல்லின் வலப்புறம் ஏற்படும் மாற்றத்தைச் சுட்டும் அடையாளம்; a symbol representing a change in the right side of a word (←).

*[வலமுறை + திரிவுக்குறி]*

**வலயக்கிரகணம்** *valaya-k-kiragaṇam*, பெ.(n.) வலயம் போலத் தோன்றும் சூரிய கிரகணம் (வின்.); annular eclipse of the sun.

*[வலயம் + கிரகணம்]*

**Skt.** grahaṇa → த. கிரகணம்.



**வலயம்** *valayam*, பெ.(n.) 1. வளையம், வட்டம் (பிங்.); circle, round. 2. சக்கரப்படை (சூடா.); discus. 3. கடல் (பிங்.); sea. 4. பூகோளத்தின் மண்டலாகாரமான பகுதி; zone of earth. 5. கைவளையம்; bracelet, armlet. *"நிரைநில முழ வலயங் களினலைய" (பெரியபு. திருநாவுக். 6).* 6. தாமரையின் சுருள்; involute petal of a lotus. 7. சுற்றிடம்; surrounding region. *"கடல்வலயத் தயலறிய" (கம்பரா. சடாயுகாண். 23).* 8. நீர்நிலை(பிங்.), குளம்; tank, pool. 9. பாத்தி; plot, division in a field. 10. தோட்டப்பாத்தி; garden plot. *"மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்து" (சிலப்.10, 74).* 11. தோட்டம் (சிலப்.10, 74, அரும்.); garden. 12. எல்லை (யாழ்.அக.); limit, ambit.

*[வளையம் → வலயம்]*

**வலர்வடிமாரன்** *valarvaḍimāraṉ*, பெ.(n.) எருமை முன்னை; a kind of tree (சா.அக.).

**வலரி** *valari*, பெ.(n.) அலரி; a small tree - *Nerium odorum* (சா.அக.).

**வலவந்தம்** *vala-vandam*, பெ.(n.) கட்டாயம்; compulsion, force, coercion.

*[வல → வலவந்தம்]*

**வலவந்தரம்** *vala-vandaram*, பெ.(n.) கட்டாயம், வலவந்தம் (வின்.); compulsion, force, coercion.

*[வலவந்தம் → வலவந்தரம்]*

**வலவந்தன்** *vala-vandaṉ*, பெ.(n.) வன்கண்மையன் (பலவந்தன்) (வின்.); forceful or coercive man.

மறுவ. முரடன்.

*[வலவந்தம் → வலவந்தன்]*

**வலவலத்ததுணி** *vala-valatta-tuṇi*, பெ.(n.) சல்லடைத் துணி; gause-a thin slight transparent-linen, a cloth woven loosely.

*[வலவலத்த + துணி]*

வலவன்[1] *valavan*, பெ.(n.) 1. திறமையாளன் (வின்.), சமர்த்தன்; capable man, expert. 2. வெற்றியாளன் (சூடா.); conqueror. 3. நுகத்தின் வலப்பக்கத்து எருது (இ.வ.); bull yoked on the right.

*[வலம் = வெற்றி, வலம்[1] + அன்.]*

வலவன்[2] *valavan*, பெ.(n.) 1. தேர்ப்பாகன்; charioteer. *"விசும்பின் வலவ னேவா வானவூர்தி" (புறநா. 27). "வலவ னாய்ந்த வண்பரி" (அகநா. 20 : 15), "புலவு நா றகன்றுறை வலவன் தாங்கவும்" (குறுந். 311: 2).* 2. திருமால் (பிங்.); *vishṇu.*

*[வல்லபன் → வலபன் → வலவன்]*

வலவன்[3] *valavan*, பெ.(n.) இந்திரனால் கொல்லப்பட்ட அரக்கன் (திருவிளை. மாணிக்கம். 19); an *Asuran* slain by indiran. *"வாசவன் வேள்விக் கிரங்கியோர் பசுவாய் வந்திடும் வலவனை" (திருவாலவா. 25, 9).*

*[வல → வலவன்]*

வலவன்[4] *valavan*, பெ.(n.) வலப்பக்கத்துள்ளவன்; person on the right side, a helpful person.

*[வலம்→ வலவன்.]*

வலவன்பாடி *valavan-pāḍi*, பெ.(n.) 1. வில்லுப் பாட்டில் வீசுகோற்காரனுக்கு வலப் பக்கத்திலிருந்து பாடுவோன்; one who accompanies the singer playing the vil in *villu-p-pāṭṭu*, sitting on his right side. 2. ஒத்துப் பாடுவோன்; sycophant.

*[வலவன் + பாடி.]*

வலவாய் *valavāy*, பெ.(n.) வலப்பக்கம்; right-side. *"அஃது இடவாய் வலவாய் பெயரும்படி" (கலித். 140, உரை).*

*[வலம்[1] + வாய்]*

வலவை[1] *valavai*, பெ.(n.) ஆனை முகத்தோன் தேவி; consort of *Gaṇēšan*. *"வலவை கேள்வனும்" (உபதேசகா. சிவவிரத. 192).*

*[வல்லபை → வல்லவை → வலவை]*

வலவை[2] *valavai*, பெ.(n.) 1. திறமை, ஆற்றல், வல்லபம் (சிலப். 5, 74, உரை); ability, skill, expertise. 2. திறமையாளன், வல்லவன்–ள் (பிங்.); powerful capable person, energetic man. *"வலவைப் பார்ப்பான்" (சிலப். 23, 61).* 3. காளி (பிங்.); *kāḷi.* 4. காளியின் ஏவலாளியான இடாகினி (பிங்.); a female attendant on *kāḷi.*

*[வல்[1] → வல →வலவை]*

வலவை[3] *valavai*, பெ.(n.) 1. நாணிலாதவ–ன்–ள்; shameless. *"வலவைக ளல்லாதார்" (நாலடி. 268). "மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கும்" (சிலப். 5, 74).* 2. வஞ்சப் பெண் (பிங்.); deceitful woman, grileful lady.

*[வல[1] → வலவை]*

வலவை[4] *valavai*, பெ.(n.) பிறர் ஏற்றுக் கொள்ளும் படி பேசுபவன்; uncontraversel person, infalliable man.

*[வல → வலவை]*

வலவோட்டம் *vala-v-ōṭṭam*, பெ.(n.) வல வோட்டுநாள் பார்க்க; see *vala-v-ōṭṭu-nāḷ.*

*[வலம்[1] + ஒடு → ஓட்டம்]*

வலவோட்டுநாள் *vala-v-ōṭṭu-nāḷ*, பெ.(n.) இரலை, தாழி, ஆரல், கழை, கொடிறு, கவ்வை, கைம்மீன், நெய்ம்மீன், விளக்கு, குருகு, முற்குளம், கடைக்குளம், முற்கொழுங்கல், பிற்கொழுங்கல், தொழுபஃறி ஆகிய

நாண்மீன்கள் (சோதிட. சிந். 155); alternate group of three nāṉmīṉgaḷ, commencing with the group *iralai, tāḻi, āral, kaḻai, koḍiṟu, kavvai, kaimmīṉ, neymmīṉ, viḷakku, kurugu, muṟkuḷam, kaḍaikkuḷam, muṟkoḷuṅgal, piṟkoḷuṅgal, toḻupakṟi,* dist. fr. *iḍa-v-ōṭṭu-nāḷ.*

*[வலம் + ஒடு + நாள்]*

வலற்காரம் *valaṟkāram,* பெ.(n.) பொய் (நாமதீப.655); falsehood, lie.

*[வலக்காரம் → வலற்காரம்]*

வலன்[1] *valaṉ,* பெ.(n.) 1. வெற்றி; victory, triumph. *"வலனாக வினையென்று" (கலித். 35).* 2. வலப்பக்கம்; right side. *"மேழி வலனுயர்ந்த வெள்ளை நகரமும்" (சிலப். 14, 9). "சுடர் நிமிர் மின்னொடு வலனேர் பிரங்கி" (அகநா. 43 : 2).* 3. மேலிடம் (திவா.); high place or locality, higher authority. 4. வலம்[1]1, 2, 4, 6, 7, 9 பார்க்க; see *valam.*

*[வலம்[1] → வலன்]*

வலன்[2] *valaṉ,* பெ.(n.) 1. வலப்பக்கத்தி லிருப்பவன்; man on the right. *"இடவல" (பரிபா. 3, 83).* 2. வெற்றியாளன் (சூடா.); conqueror, winner.

*[வலம்[1] → அன்]*

வலன்[3] *valaṉ,* பெ.(n.) இந்திரனால் கொல்லப்பட்ட அரக்கன் (திருவிளை. மாணிக்கம். 19); an *Aśura* slain by *Indiraṉ.*

*[வலம் → வலன்]*

வலனா-தல் *valaṉ-ā-,* 6 செ.கு.வி.(v.i.) இடப் பக்கத்திலிருந்து வலப்பக்கஞ் செல்லுதல்; to pass across one's path from left to right.

*[வலன்[1] + ஆ-.]*

வலனேர்பு *valaṉērbu,* பெ.(n.) வலது பக்கம்; right side. *"அணங்கடை அருந்தலை உடலி வலனேர்பு" (நற்-37, 9). "உலகமுவப்ப வலனேர்பு திரிதரு" (திருமுருகா.).*

*[வலன் → வலனேர்பு.]*

வலாகம்[1] *valāgam,* பெ.(n.) கொக்கு (பிங்.); common crane, field bird.

*[பலாகம் → வலாகம்]*

வலாகம்[2] *valāgam,* பெ.(n.) நீர் (யாழ்.அக.); water.

*[வளாகம் → வலாகம்]*

வலாகு *valāgu,* பெ.(n.) வலாகம்[1] (யாழ்.அக.) பார்க்க; see *valāgam*[1]. *"வாரி யோட்டில் வலாகரித் திட்டபோல்" (மேருமந். 652).*

*[வலாகம் → வலாகு]*

வலாகை *valāgai,* பெ.(n.) கொக்கு (யாழ். அக.); crane.

*[வலாகு → வலாகை]*



**வலாசகம்** *valāsagam,* பெ.(n.) 1. குயில் (யாழ்.அக.); koel. 2. தவளை; frog.

**வலாட்டிகன்** *valāṭṭigaṉ,* பெ.(n.) திண்ணியோன், வலுமிக்கவன்; strong man, valiant man.

*[வலாட்டியன் → வலாட்டிகன்]*

**வலாட்டியம்** *valāṭṭiyam,* பெ.(n.) பலம், வலிமை; strength.

*[வலாட்டியன் → வலாட்டியம்]*

**வலாட்டியன்** *valāṭṭiyaṉ,* பெ.(n.) வலிமிக்கோன், திண்ணியோன்; strong man, man of valour.

*[வலாட்டிகன் → வலாட்டியன்]*

**வலார்** *valār,* பெ.(n.) வளார்; twig, switch. *"வலாஅர் வல்விற் குலாவரக் கோலி" (புறநா.324).*

*[மலார்→ வலார்.]*

**வலாரி** *valāri,* பெ.(n.) இந்திரன் (வலன் என்னுமசுரனின் பகைவன்); Indra, as the enemy of the *Aśura valaṉ.* *"வலாரி யாதி விண்ணோார்" (தணிகைப்பு.சீபரி.20).*

**வலாற்காரம்** *valāṟ-kāram,* பெ.(n.) வலக்கட்டாயம் (யாழ்.அக.) பார்க்க; see *vala-k-kaṭṭāyam.*

**வலி¹-த்தல்** *vali-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கட்டாயப்படுத்துதல்; to force, compel. *"வலித்தாண்டு கொண்ட" (திருவாச. 11, 7).* 2. பற்றிக்கொள்ளுதல்; to seize. *"கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின் யானே" (அகநா. 76).* 3. இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளுதல் (வின்.); to understand with great difficulty, to strain, as an interpretation. 4. மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்குதல் (இலக்.); to become hard in sound, as a soft consonant. *"வலிக்கும் வழி வலித்தலும்" (தொல். சொல். 403).* 5. துணிதல்; to decide, foldly. *"வல்வினை வயக்குதல் வலித்திமன்" (கலித். 17).* 6. வற்றச் செய்தல் (வின்.); to dry, scorch, parch, reduce. 7. அழுத்திப் பலுக்குதல் (வின்.); to stress, as words.

*[வலி¹ → வலி-.]*

**வலி²-த்தல்** *vali-,* 4 செ.கு.வி.(v.i.) 1. திண்ணியதாதல்; to become hard or strong and verile. *"கல்லென வலித்து நிற்பின்" (கம்பரா.வருண. 84).* 2. வற்றுதல்; to become dry, to reduce. *"நீர் நுங்கின் கண்வலிப்ப" (புறநா.389).* 3. நோவுண்டாதல்; to ache; to pain; to be painful. *"வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்" (தேவா. 946, 7).* 4. முயலுதல் (வின்.); to make efforts, to attemper. 5. கொழுத்தல் (திவா.); to become stout, fat.

*[வலி¹ → வலி-.]*

**வலி³-த்தல்** *vali-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சொல்லுதல் (சூடா.); to say, tell, state, narrate, speak. 2. கருதுதல் (பிங்.); to think, consider. *"வலியா தெனக்கு வம்மீ னீரென" (பெருங். வத்தவ. 3, 99).* 3. கருத்தோடு செய்தல்; to do delightly, to execute with undivided attention, as a work. *"திங்கள் வலித்த காலன் னோனே" (புறநா. 87).* 4. உடன்படுதல் (பிங்.); to agree to, to consent, to be consonant with. *"செல்லல் வலித்தேனச் செம்மன் முன்" (பு.வெ.11, பெண்பாற். 12).*

*[வல்³ → வலி-.]*

**வலி[4]–த்தல்** *vali-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. துடுப்பு, கயிறு முதலியவற்றை இழுத்தல்; to draw, pull; to attract. *"புலித்தோல் வலித்து வீக்கி" (தேவா. 910, 3). "சார்ங்கம் வளைய வலிக்கும்" (திவ். நாய்ச். 5, 8). படகுத் துடுப்பு வலிப்பதற்குப் பழக்கம் இருந்தால்தான் முடியும் (உ.வ.). கயிற்றை இடது பக்கமாக வலித்துவிடுங்கள் (இ.வ.).* 2. வளைத்தல் (சூடா.); to bend, curve. 3. அழகு காட்டுதல் (திருநெல்.); to mimic; to make a face at. *தம்பி என்னைப் பார்த்து வலிக்கிறான் (இ.வ.).* 4. தண்டாற் படகு தள்ளுதல்; to row, tug. 5. கப்பற்பாய் தூக்குதல்; to hoist, as the sails of a vessel or ship. 6. புகை குடித்தல் (இ.வ.); to smoke, as tobacco.

*[வல் → வலி–.]*

**வலி[5]–த்தல்** *vali-,* 4 செ.கு.வி.(v.i.) 1. இசிவு காணுதல்; to have contortions or convulsions. 2. ஏங்குதல் (வின்.); to pine, droop, languish, to yearn, crave, desire. 3. உடம்பில் துன்பம் தரும் உணர்வு உண்டாதல்; to pain; to hurt. *மருத்துவர் ஊசி குத்தும்போது எறும்பு கடிப்பது போலத்தான் வலிக்கும் (உ.வ.). பல் கூசுகிறதா? வலிக்கிறதா? (இ.வ.). பேருந்து நிறுத்தத்தில், கால் வலிக்க நிற்க வேண்டியிருந்தது (இக்.வ.).*

*[வல் → வலி–.]*

**வலி[6]–தல்** *vali-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. கட்டாயப்படுத்துதல்; to behave with emel and rough manner, to coerce, to force cruelly, compel. *"வலிந்து பற்றினான்" (உ.வ.).* 2. மீறுதல்; to transgress, transcend, surpass. *"அருளினை வலிய மாட்டாமை" (பெரியபு. திருநீலக். 34).*

*[வன் → வலி[1] → வலி–.]*

**வலி[7]–தல்** *vali-,* 2 செ.குன்றாவி.(v.t.) இழுத்தல்; to draw, pull, to attract, to influence. *"காந்தம் வலியு மிரும்பு போல்" (பிரபுலிங். மாயையினுற். 45).*

*[வல் → வலி–.]*

**வலி[8]–தல்** *vali-,*பெ.(n.) 1. வன்மை; strength, power. *"வலியி னிலைமையான்" (குறள், 273).* 2. வலாற்காரம் பார்க்க; see *valāṟ-kāram. "வலிசெயா தாணையை நினைந்து" (திருவாலவா.57, 5).* 3. தன் முனைப்பு (அகங்காரம்); arrogance. *"கேள்வி யனைத்தினும் வலியினும் மனத்தினு முணர்வினும்" (பரிபா.3, 49).* 4. வல்லெழுத்து; hard consonant. *"ஈற்று மெய் வலிவரி னியல்பாம்" (நன்.159).* 5. தொகை நிலைத் தொடர் மிக்கு வருஞ் செய்யுட் குணம் (தண்டி.24); vigour of style, achieved by introducing compounds in quick succession, a merit of poetic composition. 6. பற்றுக்கோடு; Prop, support. *"தண்ட வலியாக நனி தாழ்ந்து" (சீவக.2012).* 7. பற்றிரும்பு (பிங்.); cramp-iron, pincers. 8. துன்பம்; trouble, difficulty. *"அதைச் செய்வதில் உனக்கென்ன வலி".* 9. நோவு; pain, ache. *"யான்பட்ட வலிகாண வாராயோ" (கம்பரா.சூர்ப்ப.102).*

*[வல் → வலி–.]*

**வலி[9]** *vali,*பெ.(n.) 1. ஒலி (பிங்.); sound. 2. சூளுரை, வஞ்சினம்; vow, oath. *"போக்கரும் வலிபுகன்று போய் வரு மாயை" (பிரபுலிங். வசவண். 31).* 3. வஞ்சம் (பிங்.), ஏமாற்று; deceit, fraud, guile, cheat, craftiness.

*[வல் → வலி[7]]*

வலி[10] *vali,* பெ.(n.) 1. இழுக்கை; pulling, dragging; attracting. 2. அமரகண்டம், குமரகண்டம், பிரமகண்டம், காக்கை வலி, முயல்வலி என்று ஐவகைப்பட்ட இசிவு நோய் (தைலவ. தைல. 75); cramp, spasm, convulsion, fit, of five kinds, viz., *amara-kaṇḍam, kumara-kaṇḍam, pirama-kaṇḍam, kākkai-vali, muyal-vali.* 3. கப்பற்காரர்க்குக் கொடுக்கும் முத்துக் குவியலில், எட்டிலொரு பகுதி (வின்.); remuneration to the owners of the boats used in pearl-fishery being one day's gathering in one eighth share.

*[வல் → வலி.]*

வலி[11] *vali,*பெ.(n.) வலியன், ஆற்றலுடையவன்; strong, powerful man, with stamine. *"காய மனவசி வலிகள்" (மேருமந். 1097). வலிபடைத்த தோள் (உ.வ.).*

*[வன் →வல் → வலி.]*

வலி[12] *vali,* பெ.(n.) அடையாளம், குறி (யாழ். அக.); mark, trace, fold, crease.

*[வரி → வலி]*

வலி[13] *vali,*பெ.(n.) குரங்கு (யாழ்.அக.); monkey.

வலி[14] *vali,*பெ.(n.) நறுவிலி (மலை.); sebesten.

*[விலி → வலி]*

வலிக்கட்டாயம் *vali-k-kaṭṭāyam,* பெ.(n.) வலுக்கட்டாயம் பார்க்க; see *valu-k-kaṭṭāyam.*

*[வலி [1] + கட்டாயம்]*

வலிக்கட்டு *vali-k-kaṭṭu,* பெ.(n.) யாழ் நரம்பின் வலிந்த கட்டு (பிங்.); tight fastening of the strings of a lute.

*[வலி [1] + கட்டு]*

வலிக்கயிறு *vali-k-kayiṟu,*பெ.(n.) வண்டியில் வைக்கோல், இன்னபிற ஏற்றிச் செல்லும் பொழுது அவை கீழே விழாமல் இழுத்துக் கட்ட உதவும் கயிறு; a long thick rope used to tighter straw heap or gumy sock's loads. *வல்லி கவுறு, வலி கவுறு (பே.வ.).*

*[வலி[10] + கயிறு. வலித்தல் = இழுத்தல், கட்டுதல்.]*

வலிக்கெனல் *vali-k-keṉal,* பெ.(n.) தெளிவாயிருத்தற் குறிப்பு (யாழ்.அக.); expr. signifying clearness.

வலிகுன்மம்[1] *vali-kuṉmam,* பெ.(n.) 1. செரிமானமின்மையால் உண்டாகும் ஓர் நோய்; a disease due to indigestion-gastragia. 2. பித்தம் மிகுதியாகி செரியாமையினால் ஏப்பத்தோடு வலியை உண்டாக்கும் ஒரு நோய்; dyspepsia arising from chronic enlargement of the spleen. 3. வயிறு பலவிதமாய் வலித்து, உணவினை ஏற்க மறுத்து, தேகத்தை வற்றச் செய்யும் ஓர் நோய்; a disease marked by burning in the chest, vomitting nauses with pains in the abdomen, causing emaciation.

வலிகுன்மம்[2] *vali-kuṉmam,*பெ.(n.) வலிப்பு முதலியவற்றோடு கூடிய வெப்பு நோய் (சீவரட். 108); a kind of fever, attended with convulsion and pains all over the body.

*[வலி [1] + குன்மம்]*

வலிகுன்மவாயு *vali-kuṉma-vāyu,* பெ.(n.) வலிகுன்மம் பார்க்க; see *vali-kuṉmam.*

*[வலி + குன்மவாயு.]*

**Skt.** vāyu த. வாயு

வலிங்கம் *valiṅgam,* பெ.(n.) வலாற்காரம் (யாழ்ப்.); compulsion, coercion, force.

*[வலி [3] → வலிங்கம்]*

ஒருகா. வலுவந்தம்→வலிங்கம்.

வலிச்சம்[1] *valiccam,* பெ.(n.) வலிப்புக் காட்டுகை; grimace.

*[வலிச்சு → வலிச்சம்.]*

வலிச்சம்[2] *valiccam,* பெ.(n.) முகச்சைகை; grimace.

*[வலிச்சு → வலிச்சம்.]*

முதற்கால குமரிநாட்டு மாந்தனின் உடற்சைகை உறுப்புச் சைகையென்ற இருதிறத்த சைகைமொழியுள், முகச்சைகையாகிய வலிச்சமும் சைகையு ளடங்கும்.

வலிச்சல் *valiccal,* பெ.(n.) 1. கட்டு வரிச்சல் (வின்.); reeper of a roof, transverse lath. 2. பனையின் கடுங்காய் (யாழ்ப்.); palmyra fruit not fully ripe. 3. தசை முதலியவற்றின் கடினத் தன்மை (இ.வ.); toughness, as of flesh che. 4. காய்ந்தது (யாழ்.அக.); anything dried.

*[வலி [4] → வலிச்சல்]*

வலிச்சலன் *vali-c-calaṉ,* பெ.(n.) 1. மிகவும் மெலிந்தவன்; extremely emaciated man. 2. பிடிவாதக்காரன்; obstinate or adamant man.

*[வலிச்சல் → வலிச்சலன்]*

குச்சி போன்று, மெல்லிய உருவினன்.

வலிச்சலாணி *vali-c-calāṇi,* பெ.(n.) வரிச்சலாணி; nail for fastening creepers-with rafter.

*[வலிச்சல் + ஆணி [1]]*

வலிச்சற்கொடி *valiccaṟ-koḍi,* பெ.(n.) கொடிவகை (யாழ்.அக.); a kind of creeper.

வலிச்சை *valiccai,* பெ.(n.) கட்டுவரிச்சல்; reeper.

*[வலிச்சல் → வலிச்சை]*

வலிசம் *vališam,* பெ.(n.) தூண்டில் (யாழ். அக.); fish-hook.

வலிசன்னி *vali-saṉṉi,* பெ.(n.) நரம்பிழுப்பு; convulsions.

*[வலி + சன்னி.]*

**Skt.** sanni > த. சன்னி.

வலிசெய்–தல் *vali-šey-,*1 செ.கு.வி.(v.i.) 1. மிறுக்குச் செய்தல்; to be stiff in manners. *"அடிமைக் கணவன் வலிசெய்ய" (திவ். நாய்ச். 5, 10).* 2. வல்வழக்குரைத்தல்; to make an unjust or oppressive claim. *"தாரான் வலி செய்கின்றான்" (பெரியபு. திருநீலகண்ட. 32).*

*[வலி [1] + செய்–.]*

வலித்தல் *valittal,* பெ.(n.) செய்யுட்டிரிபு ஆறனுள் மெல்லொற்றை வல்லொற்றாக மாற்றுகை (நன். 155); a poetic licence which consists in the change of a soft consonant into a hard one, one of six *ceyyuḷ-vigāram.*

*[வல்→ வலி [3] → வலித்தல்]*

**வலித்திரும்பு** *valittirumbu,* பெ.(n.) காந்தம் (வின்.); loadstone, magnet.

மறுவ. பற்றிரும்பு.

*[வலி ³ + இரும்பு]*

பற்றியிழுக்கும் ஈர்ப்பு ஆற்றலுள்ள இரும்பு.

**வலித்துக்கட்டு-தல்** *valittu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) கயிற்றை இழுத்துக் கட்டுதல்; to tie after tightening the rope. *வலிச்சி கட்டுதல் (உ.வ.).*

*[வல்→வலி→வலித்து + கட்டு-.]*

**வலித்துக்காட்டு-தல்** *valittu-k-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) பிறரை நக்கல் செய்யும் வகையில் விரலை ஆட்டுதல்; வாயைக் கோணிப் பேசுதல்; to make faces at someone.

*[வலித்து + காட்டி (த.வி.)→காட்டு (பி.வி.).]*

பிறரை வேண்டுமென்றே சினமூட்டு முகத்தாயினும், நக்கல் பேச்சுப் பேசும் பான்மையிலும் வக்காணித்தும், அழகுக்காட்டியும் பேசுதல் வலித்துக்காட்டுதல் எனலாம்.

**வலிதம்** *validam,* பெ.(n.) 1. சுற்றுவட்டம் (யாழ்.அக.); environment, surroundings. 2. அசைவு; shaking, movement.

*[வலி ³ → வலிதம்]*

**வலிதாங்காமை** *vali-tāṅgāmai,* பெ.(n.) வலி பொறுக்காமை; unbearable pain.

*[வலி + தாங்காமை.]*

**வலிதின்** *validiṉ,* வி.எ.(adv.) விரைவாக; by force, forcibly. *"கையாலே வலிதிற் பிடித்துக் கொள்ளும்" (கலித். 62, உரை).*

*[வல்லிதின்→வலிதின்]*

**வலிதீர்க்குமருந்து** *vali-tīrkku-marundu,* பெ.(n.) வலிநீக்குமருந்து பார்க்க; see *vali-nīkku-marundu.*

**வலிது** *validu,* பெ.(n.) வலிமையுள்ளது; that which is strong and sturdy. *"நம்மினும் வலிதாத் தூக்கிய பொருளே" (அகநா. 265 : 23).* 2. வலவந்தம்; force, compulsion, coercion.

*[வல்¹ → வலி →வலிது]*

**வலிதை** *validai,* பெ.(n.) நாட்டிய விணைக்கை வகை (சிலப். 3, 12, உரை, பக். 81, கீழ்க்குறிப்பு); a kind of hand-pose.

**வலிந்தரசம்** *valinda-rašam,* பெ.(n.) கட்டியரசம்; consolidated mercury.

**வலிந்து** *valindu,* வி.அ.(adv.) 1. வலுக் கட்டாயமாக, வேண்டுமென்றே செய்தல்; to do forceably and wontonly, deliberately. *"ஒரு மொழியில் பிற மொழிச் சொற்களை வலிந்து புகுத்துவது தவறு". எதிலாவது வலிந்து ஈடுபட்டால், கவலை தானே மறையும் (இ.வ.).* 2. வலிய; without being invited or asked. *அவன் வலிந்து வலிந்து பேசினும், நான் அவனோடு பேசமாட்டேன் (உ.வ.).*

*[வலி → வலிந்து]*

**வலிந்துகொள்(ளு)-தல்** *valindu-koḷ(ḷu)-,* 16 செ.குன்றாவி.(v.t.) 1. வலு கட்டாயமாய்க் கைப்பற்றுதல்; to annex by force. 2. இடர்ப்பட்டுப் பொருள் கொள்ளுதல்; to strain, as in interpretation, to understand with great difficulty.

*[வலி ² + கொள்-.]*

வலிந்துவந்துபேசு-தல் *valindu-vandu-pēšu-*,5 செ.கு.வி.(v.i.) பிறர் வேண்டுதலின்றித் தானாகவே முன்வந்து பேசுதல்; to speak, voluntarily to a person who is not willing to talk. *நன்றி மறந்த நண்பர், வலிந்து வந்து பேசியவுடன், எல்லாவற்றையும் மறந்து இன்முகத்துடன் பேசினார்.*

*[வலிந்துவந்து + பேசு-.]*

வலிந்துவலிந்துபேசு-தல் *valindu-valindu-pēšu-*,5 செ.கு.வி.(v.i.) ஒரு திட்டத்தை அல்லது கருத்தை வற்புறுத்திப் பேசுதல்; to talk a subject or plan emphaticaly. *மகளிர்க்கான இட ஒதுக்கீட்டைப் பாராளுமன்றத்தில் அமைச்சர் வலிந்து வலிந்து பேசினார் (இ.வ.).*

*[வலிந்துவலிந்து + பேசு-.]*

வலிநிறம் *vali-niṟam,* பெ.(n.) மாந்துளிர்க் கல்; a kind of stone coloured like the tender leaf of mango tree.

வலிநீக்குமருந்து *vali-nīkku-marundu,* பெ.(n.) உறக்கத்தை உண்டாக்கி, அதன் வாயிலாக வலியை நீக்கும் மருந்து; a pain killer drug that gives relief from pain-anodyne.

*[வலி + நீக்கு + மருந்து]*

வலிநோய்[1] *vali-nōi,* பெ.(n.) இவை 46 வகை கொண்டது; convulsions, they are of 46 kinds.

*[வலி + நோய்]*

வலிநோய்[2] *vali-nōy,* பெ.(n.) காக்கைவலி; epilepsy. *"வலி நோயொடு முடைநாற்ற நோயாளர்" (கடம்ப. பு. இலீலா. 107).*

*[வலி[7] + நோய்]*

வலிப்படு-தல் *vali-p-paḍu-*,20 செ.கு.வி. (v.i.) வன்முறைக்கு ஆட்படுதல்; to undergo for violence or coercion.

*[வலி + படு-.]*

வலிப்பற்று *vali-p-paṟṟu,* பெ.(n.) பற்றுக் குறடு (பிங்.); smith's tongs.

*[வலி[1] + பற்று]*

நழுவுந் தன்மை வாய்ந்த பொருளையோ அல்லது ஏனைய வத்தன்மையவற்றை பிடித்துக் கல்வி எடுப்பதற்குக் கம்மப் பணியாளர் பயன்படுத்துவது. பொருளைப் பிடித்து எடுக்கப் பயன்படும் இடுக்கி அல்லது இடுக்கி போன்ற கருவி.



வலிப்பிடிப்பு *vali-p-piḍippu,* பெ.(n.) ஒரு வகை நோய்; a kind of disease, stiffness of limbs with pain.

*[வலி + பிடிப்பு]*

வலிப்பித்தம் *vali-p-pittam,* பெ.(n.) அடிவயிற்று இசிவு, மூட்டுவலி, மாரடைத்தல், உடலம் துடித்தல் முதலிய குணங்களைக் காட்டும் நோய்; a disease marked by pain joints, pulling pain in the lower abdomen, choaking of the chest, tumour of the body etc.

*[வலி + பித்தம்.]*

பே→பேத்து→பீத்து→பித்து→பித்தம்.

(ஒ.நோ.) தீம்→தித்தி. தேஞ்சுவை→தீஞ்சுவை.

வலிப்பித்தம் என்பது பித்த நீரின் மிகுதியால் உண்டாகும், மிகுபித்தம். இதுவே பல்வகை வலிகளுக்கு மூலமாகும். உடம்பில் பித்த நீர் மிகுதியாகச் சுரப்பதால், அடிவயிற்று வலி, மூட்டுவலி, மார்வலி போன்ற நோய்கள் உண்டாகின்றன என்று சா.அக. கூறும்.

பித்து = மயக்கம், மதிமயக்கம்.

வலிப்பித்து = மிகு பித்த நீரினால், உடம்பிலுண்டாகும் வலி.

பித்து = தலைச் சுற்றை யேற்படுத்தும் நீர் (bile).

மா.வி. அகரமுதலி பித்தம் என்ற சொல்லிற்கு etm. unknown என்று கூறுதல் காண்க.

வடவர் பித்த என்னுஞ் சொல்லினின்று, "பைத்ய" என்னுஞ் சொல்லைத் திரித்துள்ளனர் (வ.வ.2:37).

பித்து→பித்தம் = பித்தநீர், பித்தநாடி.

வலிப்பித்தம் என்பது யாதெனின், பித்த நீர் சுரக்கும் உறுப்பில், மிகுபித்தம் சுரந்து, அச்சுரப்பின் விளைவாலேற்படும் அடிவயிற்று வலி, மார்வலி முதலானவை எனலாம்.

**வலிப்பிரமை** *vali-p-piramai,* பெ.(n.) நரம்பு வலியேற்படுவது போன்ற மருட்சி; hallucinatory neuralgia.

*[வலி + பிரமை]*

**Skt.** bhrama > த. பிரமை.

**வலிப்பீனிசம்** *vali-p-pīṇišam,* பெ.(n.) மூக்கினில் உண்டாகுமோர் நோய்; a disease of the nose.

*[வலி + **Skt.** பீனிசம்]*

**Skt.** pīṇaša > த. பீனிசம்.

**வலிப்பு**[1] *valippu,* பெ.(n.) **1.** நிலைபேறு; firmness; permanence, stability. *"வல்லே வலிப்புறீஇ" (சீவக. 1143).* **2.** மெல்லொற்று வல்லொற்றாகை (இலக்.); change of a soft consonant into a hard one. *"மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும்" (தொல். எழுத்து. 157).* **3.** நோவு, வலி; pain, aching. *"மலட்டாவைப் பற்றிக் கறவாக் கிடப்பர்..... தங்கள் கைவலிப்பே" (சடகோபரந்.37).* **4.** வருத்தம், துன்பம்; trouble, difficulty. *அதைச் செய்ய என்ன வலிப்பு?*

*[வலி[6] → வலிப்பு]*

**வலிப்பு**[2] *valippu,* பெ.(n.) **1.** இசிவு; convulsion, fit. **2.** இழுக்கை (யாழ்.அக.); pulling, dragging, attracting. **3.** தண்டு வலிக்கை; rowing. **4.** அழகு காட்டுகை (திருநெல்.); making faces at a person.

*[வலி [6] → வலிப்பு]*

நோயின் காரணமாகத் திடீரென்று, கட்டுப்படுத்த இயலாதவாறு வெட்டிவெட்டி இழுக்கும் வலியுடன் கூடிய நரம்பிழுப்பு.

**வலிப்புவகைகள்** *valippu-vagaigaḷ,* பெ.(n.) இசிவுநோய் வகைகள்; some varieties of convulsions.

சாம்பசிவ மருத்துவ அகரமுதலி வரையறுக்கும் வலிப்பு வகைகள் வருமாறு:

1. குமரகண்டம், 2.காக்கைவலிசன்னி, 3. முகவலிப்பு, 4. முகசன்னி, 5. முயல் வலிப்பு, 6. மாந்த வலிப்பு, 7. காக்கை வலிப்பு, 8. அள்ளு வலிப்பு, 9. புற இசிவு, 10. வளிபரி வலிப்பு முதலியனவாகும்.

**வலிப்புவாங்கு-தல்** *valippu-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) இசிவு நோயினை நீக்குதல்; to cure convulsion.

*[வலிப்பு + வாங்கு-.]*

**வலிப்புறு-த்தல்** *valippuṟu-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. தோற்றுவித்தல், நிலை பெறுத்துதல், நிறுவுதல்; to establish, make firm, to demonstrate, prove, to instal. *“வலிப்புறீஇ” (சீவக. 1143).* 2. வற்புறுத்துதல்; to assure, make sure of, to compel. *“நங்களன்பென நாட்டி வலிப்புறீஇ” (சீவக. 1334).*

*[வலிப்பு [1] + உறு-.உல் →உறு-. ]*

வலிப்புறுத்துதல் என்பது, ஒரு கொள்கையையோ, நிறுவனத்தையோ தோற்றுவித்து, நிலைநிறுத்துதல்.

**வலிபடு[1]-தல்** *vali-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. வலிமையுறுதல்; to become strong, firm. 2. மாறுபடுதல்; to compete, rival; to match, to differenciate. *“செங் குவளைகளே யிவை..... நின்..... நயனங்களின் வலிபட்டன” (தக்கயாகப். 317).*

*[வலி [1] + படு-.]*

**வலிபடு[2]-தல்** *vali-paḍu-,*20 செ.கு.வி. (v.i.) பற்றியிழுக்கப்படுதல்; to be drawn, dragged, to be attracted, influenced. *“நீடு முதலையின் வாயில் வலிபடு நீல கிரியை” (பாரத. ஆறாம். 25).*

*[வலி [7] → படு-.]*

**வலிபதம்** *valipadam,*பெ.(n.) பாகு முதலியன கட்டியாகும் நிலை; state of a liquid hardening into a solid mass.

*[வலி [2] + பதம் [1]]*

**வலிபற்றிரும்பு** *vali-paṟṟirumbu,* பெ.(n.) பற்றுக்குறடு (பிங்.); smith's tongs.

*[வலிபற்று + இரும்பு]*

இர் →இரு →இரும்பு (மு.தா.197).

நழுவும் வழுவும் பொருளைப் பொதுவாகப் பற்றிப் பிடித்து எடுப்பதற்குப் பயன்படுத்தும் இரும்பினாலாகிய, கம்மாளர் கருவி.

**வலிபொறுக்கமுடியாமை** *vali-poṟukka-muḍiyāmai,*பெ.(n.) வலிபொறுக்காமை பார்க்க; see *vali-poṟukkāmai.*

*[வலி + பொறுக்கமுடியாமை]*

**வலிபொறுக்காமை** *vali-poṟukkāmai,* பெ.(n.) வலிதாங்காமை; excessive sensitiveness to pain, hyperalgesia.

*[வலி + பொறுக்காமை]*

**வலிமருந்து** *vali-marundu,*பெ.(n.) வலிமை யூட்டுகிற மருந்து; a medicine with invigorating effect, tonic.

*[வலி + மருந்து]*

**வலிமாகுன்மம்** *vali-mā-kuṉmam,*பெ.(n.) வயிற்றுப் பகுதியில் ஏற்படும் வலி; a disease of the stomach with unbearable stabbing pain.

*[வலி + மா + குன்மம். குல் →குல்மு →குன்மம்]*

**வலிமாந்தம்** *vali-māndam*, பெ.(n.) எண் வகை மாந்தத்துளொன்று (யாழ்.அக.); convulsions, one of *en-vagai-māndam*.

*[வலி [7] + மாந்தம். மந்தம்→ மாந்தம்.]*

வலிமாந்தம் என்பது குழவி நோய் வகையைச் சார்ந்தது. செரியாமையின் விளைவாகக் குழந்தைகளுக்கு ஏற்படும் இசிவு நோய் என்று சா.அக. கூறும்.

**வலிமுகம்** *vali-mugam*, பெ.(n.) குரங்கு (பிங்.); monkey.

*[வாலி→வலி + முகம்]*

**வலிமுன்பு** *vali-munbu*, பெ.(n.) மிக்கவலி; great strength. *"வலிமுன்பின் வல்லென்ற யாக்கை" (கலித். 4, 1).*

*[வல்→வலி [1] + முன்→முன்பு]*

**வலிமை** *valimai*, பெ.(n.) 1. ஆற்றல், வன்மை (வின்.); strength, power. *அவன் வலிமையும் திறமையும் உள்ளவன் (உ.வ.). நாம் வலிமை மிக்க நாடுகளோடு, பல துறைகளில் போட்டிபோட வேண்டியிருக்கிறது (இக்.வ.).* 2. திறமை, கெட்டிக்காரத்தனம்; skill, expertise, cleverness. *"வலிமை பாராட்டல்" (யாழ்.அக.). வலிமையுடன் போராடுபவரே, வாழ்வில் வளம் பெறுவர் (இ.வ.). படைவலிமை பெருக்குவது அமைதிக்கு ஊறு பயக்கும் (இ.வ.).* 3. திண்மை (வின்.); hardness, thickness. 4. வலவந்தம் (யாழ்.அக.); force, compulsion. 5. ஒன்றின் அமைப்பில் அல்லது நிலைப்பாட்டில் உள்ள உறுதி; firmness. *இந்தப் பற்பசை பற்களுக்கு ஒளியும் வலியும் தரும் (இ.வ.).*

*[வலி [1] → வலிமை]*

அகக்கரண வாற்றலாகிய உளவலி, புறக்கரண வாற்றலாகிய உடல்வலி ஆகிய இரண்டனுள், முதலில் தோன்றியது உடல்வலியே. பொதுவாக உடற்பருமனே உடல் வலிக்குக் காரணமாகும். உடல்வலியால் ஒருவன் ஒரு பொருளைக் கைப்பற்றி யாளலாம். அவ் ஆட்சியே அவனுக்கு அப்பொருள்மேல் அதிகாரத்தைக் காட்டும். அவ் அதிகாரமே உரிமையாம். ஒருவன் தன் வலிமை மிகுதியால், இன்னொருவன் பொருளிற்குக் கூட அதிகாரியாகலாம். 'வலிமைக்கு வழக்கில்லை' என்பது இன்றும் உண்மையான பழமொழியாகும்.

**வலிமைசெய்-தல்** *valimai-šey-*, 1 செ. குன்றாவி.(v.t.) வலவந்தப் படுத்துதல் (வின்.), கட்டாயப்படுத்துதல்; to force, compel.

*[வலி→வலிமை + செய்-.]*

ஒரு திட்டத்தினை அல்லது பணியினைத் தமது அளப்பரிய ஆற்றல் அல்லது அதிகாரத்தின் வாயிலாக வல்லந்தமாகச் செயற்படுத்துதலே, வலிமை செய்தலாம்.

**வலிய[1]** *valiya*, பெ.எ.(adj.) வலிமையுள்ள; strong. *"வலிய வாகுநின் றாடோய் தடகை" (புறநா.14 : 11), "வலிய கூறவும் வல்லையோ மற்றே" (அகநா.191 : 17), "எருத்து வலிய எறுழ்நோக் கிரலை" (கலித்.15 : 5).*

*[வலி [1] → வலிய]*

**வலிய[2]** *valiya*, வி.எ.(adv.) 1. வலவந்தமாக, கட்டாயமாக; forcibly, coercibly. *"அரும்பை வலிய அலர்த்திக் கட்டின கழுநீர் மாலை" (சீவக. 1466, உரை). மனத்திட்பத்தை வலிய வரவழைத்துக் கொண்டான் (உ.வ.). வலிய வரவழைத்துக் கொண்ட சிரிப்பு (இ.வ.).* 2. பெரிய; big.

*[வலி [2] → வலிய]*

வலிய[3] *valiya,* வி.எ.(adv.) பிறர்தம் வேண்டுகோளின்றித் தானாகவே (பெரியபு. தடுத்தாட்.68); voluntarily, freely, spontaneously, gratuitously, volitionally. *அவர் வலிய வந்து பேசினார் (உ.வ.).*

*[வலி² → வலிய]*

வலியகொடிவேலி *valiya-koḍi-vēli,* பெ.(n.) பெருங்கொடி வேலி; a large plumbago- *Pupalia atorpurpurea.*

வலியச்செய்–தல் *valiya-c-cey-,* 1 செ. குன்றாவி.(v.t.) 1. ஒரு செயலை வலுக்கட்டாயமாகச் செய்தல்; to do an action forcefully. 2. வலிமைசெய்–தல் பார்க்க; see *valimai-šey-.*

*[வலிய + செய்–.]*

வலியச்சென்றுபேசு–தல் *valiya-c-ceṉṟu-pēšu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவர் பேசாத சூழலிலும் தானாகச் சென்று பேசுதல்; to speak voluntarily to a person, who is not willing to talk. *இயக்குநரிடம் மேலாளர் வலியச் சென்று பேசினால்தான் இயக்ககத்தின் பணிகள் இனிது முடியும் (இ.வ.).*

*[வலிய + சென்று + பேசு–.]*

வலியசர்ப்பம் *valiya-sarppam,* பெ.(n.) பெரும்பாம்பு (வின்.); dragon.

*[வலிய¹ + **Skt.** சர்ப்பம்]*

**Skt.** sarpa > த. சர்ப்பம்.

வலியநஞ்சு *valiya-nañju,* பெ.(n.) அச்சந் தரும் கொடிய நஞ்சு; dreadful poison.

*[வலிய + நஞ்சு]*

நை → நைஞ்சு → நஞ்சு=உயிர்க்கொல்லி. உண்டவுடன் உயிரைக் கொல்லும் ஆற்றல் பொருந்தியது. உடலை வருத்தி, உயிரைப் போக்குந் தன்மையது.

வலியப்பனம் *valiyappaṉam,* பெ.(n.) மூலிகை வகையுளொன்று; a kind of herbal medicine.

உடலுக்கு வலிமையும், ஆற்றலும் நல்கும் மருந்து.

வலியபி *valiyabi,* பெ.(n.) கார்போகியின் விதை; seeds of psorolia corlifolia.

மறுவ. கார்போகரிசி

வலியபுடம்போடு–தல் *valiya-puḍam-pōḍu-,* 19 செ.குன்றாவி.(v.t.) நெருப்பிலிட்டுத் தூய்மையாக்குதல்; to refine or calcinate metals voluntarily.

*[வலி→வலிய + புடம் + போடு–.]*

வலியம் *valiyam,* பெ.(n.) வலியபி பார்க்க; see valiyabi.

வலியவன் *valiyavaṉ,* பெ.(n.) 1. வலிமையுள்ளவன்; strong and sturdy man. 2. திறமையாளன்; capable or able man, expert, a dept. *"வலியவன் வெட்டினது வாய்க்கால்".*

*[வலி¹ → வலியவன்]*

வலியறிதல் *vali-y-aṟidal,* பெ.(n.) பகைவனுடைய வலிமையைத் தெரிந்து கொள்ளுகை (குறள், அதி. 48); judging or sensing the strength of one's enemy.

*[வலி + அறிதல்]*

வலியன் *valiyaṉ,* பெ.(n.) 1. வலிமையுள்ளோன்; strong, powerful man, mighty man. *"வலியரல்லோர் துறை துறை யயர" (பரிபா.6, 39), "கல்லினும் வலியன் தோழி" (குறுந். 187 : 4).* 2. திறமைசாலி; skilful or capable man, expert. 3. நல்ல நிலைமையிலுள்ளவன், கட்டுடலோன்; one

who is in good health, hale and healthy man. *"வலியனென் றவர்கூற மகிழ்ந்தனன்" (கம்பரா. பள்ளி. 3).* 4. வலியான், 4, 5 (திவா.) பார்க்க; see *valiyāṉ.* 5. வலிபதமானது (யாழ்.அக.); that which has been hardened into a mass.

*[வலி → வலியன்.]*

**வலியாடு-தல்** *vali-y-āḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) துன்பப்படுத்துதல்; to torment, afflict, to be in missery to torture. *"மயிலே யெனைநீ வலியாடுதியோ" (கம்பரா. கார்கா. 55).*

*[வலி + ஆடு-.]*

ஆல் → ஆள் → ஆளு → ஆடு → ஆடு-தல் = செயற்படல், அசைதல். வலியாடுதல் = பிறரைத் துன்பப் படுத்துதல்.ஆள் = முதனிலைத் தொழிற்பெயர்.

*[வலி[1] + ஆடு-.]*

**வலியான்** *valiyāṉ,* பெ.(n.) 1. வலிமை யுள்ளோன்; sturdy, strong, powerful man. *"வலியார்முற் றன்னை நினைக்க" (குறள், 250).* 2. வலியன் 2, 3 பார்க்க; see *valiyaṉ.* 3. கலுழன் (பருந்து) (யாழ்.அக.); kite. 4. கரிக்குருவி; king-crow, raven. *"வல்லூறாந்தை வலியான் குருகே" (பன்னிருபா. 80).* 5. கரிக்குருவி வகை; red wagtail.

*[வலியன் → வலியான்]*

**வலியில்லாக்காலம்** *valiyillā-k-kālam,* பெ.(n.) உடல் வலி போன்றவற்றில் உணரும் இடைப்பட்ட நோவில்லா நேரம்; in between attacks.

*[வலியில்லா + காலம்.]*

**வலியின்மை** *valiyiṉmai,* பெ.(n.) வலி இல்லாமை; painlessness, anodynia.

*[வலி + இன்மை.]*

இல் → இன்மை = இல்லாமை. வலியின்மை. நோயினாலுண்டாகும் வலியில்லாமையைக் குறித்து நின்றது.

**வலியுங்காசம்** *valiyuṅ-kāšam,* பெ.(n.) குமரிகாசம்; நோவினை உண்டாக்கும் காசம்; cataract of the eyes.

மறுவ. கண்காசம்

*[வலி → வலியுங்காசம்.]*

கால் → கார் → காய் → காசம் (வெளிவருவது). வலி = நோவு, நோய்.

கண்களில் ஏற்படும் சதை வளர்ச்சி. வலியுங்காச மென்பது, கண் பார்வையைப் போக்கும் தன்மைத்து. இந் நோயினால் முதற்கண் கண்கள் கலங்கும். மிகுவலியுடன் கூடிய குத்தலின் விளைவால், கண்களில் நீர் வடியும்.

இக் காச நோயுற்றோர் தம் கண்களில் ஏற்படும் சதை வளர்ச்சியால், கருமணிப்படலம் மறைந்து பார்வை மங்கும் அல்லது முற்றிலும் ஒழியும்.

சில நேரங்களில் கண்மணி பெருத்து, நீர்க்கோத்துக் காணப்படுவதுடன், அளவிற்கு அதிகமான நோவினையும் ஏற்படுத்துமென்று சா.அக. கூறும்.

**வலியுணர்ச்சி** *vali-y-uṇarcci,* பெ.(n.) வலி மிகுதியான் உடலிலேற்படும் நோவுக்குறி அல்லது வலியுணர்வு; bodily sensation of pain - *Hyperalgesia.*

*[வலி + உணர்ச்சி. உணர் → உணர்ச்சி = உணர்கை.]*

**வலியுளைவு** *vali-y-uḷaivu,* பெ.(n.) வலியுணர்கை அல்லது நோவில் அழுந்துகை; painful experience.

*[வலி + உளைவு. உள்→உளை→உளைவு]*

**வலியுற்றவிருமல்** *vali-y-uṟṟa-v-irumal,* பெ.(n.) இடை விட்டு நிகழ்கிற வலியுடன் கூடிய இருமல்; spasmodic cough, cough occuring intermittently.

*[வலி + உறு→உற்ற – வலியுற்ற + இருமு→ இருமல்.]*

**வலியுறுத்து-தல்** *vali-y-uṟuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கருத்து, எண்ணம் முதலியவற்றை உறுதிப்படுத்துதல்; to strengthen, to emphasize or stress. *தன் கருத்தை வலியுறுத்த பல எடுத்துக் காட்டுகளைக் கூறினார் (உ.வ.). முதல் மூன்று பத்திகளும் ஒரே கருத்தைத்தான் வலியுறுத்துகின்றன (உ.வ.). "நெஞ்சை வலியுறீஇ" (கலித். 142).* 2. உறுதி கூறுதல்; to affirm, assure. 3. கோரிக்கையை வற்புறுத்துதல் (வின்.); to emphasise, insist on, force. *தொழிலாளர் கூட்டமைப்பு பத்துக் கோரிக்கைகளை வலியுறுத்திப் போராட்டம் நடத்தி வருகிறது (இ.வ.).* 4. கஞ்சத்தனஞ் செய்தல்; to be close-fisted, to be miserly. *"வளன் வலியுறுக்கு முளமிலாளரொடு" (புறநா.190).*

*[வலி + உறுத்து. உல்→உறு→உறுத்துதல்]*

ஒருவர் தம், கருத்து, செயற்பாடு போன்றவற்றை உறுதிப்படுத்துதல் அல்லது வற்புறுத்துதல்.

**வலிவடிவு** *vali-vaḍivu,* பெ.(n.) வலிமை சேர்த்தல்; form of energy.

*[வலி + வடிவு]*

**வலிவலை** *vali-valai,* பெ.(n.) 1. வலை வகையுளொன்று; driftnut. 2. வலைவகை பார்க்க; see *valai-vagai.*

*[வலி + வலை.]*

வல்→வல→வலை = மீன் அல்லது விலங்குகளை அகப்படுத்துங் கருவி. பெரிய மீன்களை அகப்படுத்தும் வலை.

**வலிவாதகுன்மம்**[1] *vali-vāda-kuṉmam,* பெ.(n.) வயிற்றுப்பகுதியில் வலியை யுண்டாக்கும் கட்டி; a tumour like growth in the stomach, causing with stabbing pain.

*[வலி + வாதம் + குன்மம்.]*

**Skt.** vata > த. வாதம்.

குல்→குல்மு→குன்மு→குன்மம்.

அடிவயிற்றின் உட்பகுதியில் உண்டாகும் உள் கட்டி அல்லது வயிற்றுக் கட்டி.

**வலிவாதகுன்மம்**[2] *vali-vāda-kuṉmam,* பெ.(n.) பித்தம் அதிகரித்துச் செரியாமை யினால், ஏப்பத்தோடு வலியை உண்டாக்கும் நோய்; dyspepsia arising from chronic enlargement of the spleen.

*[வலி + வாதம் + குன்மம்.]*

**Skt.** vata > த. வாதம்.

குல்→(குத்தல், வலி)→குன்மம்.

எட்டு வகை குன்ம நோய்களுள் வலி வாத குன்மமும் ஒன்று.

**வலிவாதம்** *vali-vādam,* பெ.(n.) இசிவுடன் கூடிய ஓர் வகை ஊதை (வாத) நோய்; a kind of rheumatism accompanied by fits.

*[வலி + **Skt.** வாதம்.]*

**Skt.** vāta > த. வாதம்.

**வலிவாயு** *vali-vāyu,* பெ.(n.) இரைப்பை அழற்சி; gastritis.

*[வலி + வாயு.]*

**Skt.** vāyu > த. வாயு.

இரைப்பையில் வளியினை யுண்டாக்கும் உணவுகளை உண்பதாலுண்டாகும், அழற்சி.

**வலிவின்** *valivin,* பெ.(n.) கடுகு; mustard seeds, brassica juncea.

**வலிவு** *valivu,* பெ.(n.) 1. வன்மை, ஆற்றல்; strength. *அவனுடைய கால்கள் வலிவிழந்து தளர்ந்தன (இ.வ.).* 2. உடல் உறுதி; vigour. 3. உச்சவிசை (இசை); high pitch. *"வலிவும் மெலிவும் சமனுமாக" (பொருந. 55, உரை).*

*[வலி [2] → வலிவு]*

**வலிவுகொடு[1]-த்தல்** *valivu-kodu-,* 4 செ. குன்றாவி.(v.t.) வலிமை உண்டு பண்ணுதல்; to give tone or vigour to the system.

*[வலிவு + கொடு-. கொள் → கொடு.]*

உள்ளத்திலும், உடலிலும் இழந்த ஆற்றலை உருவாக்குதல்.

**வலிவுகொடு[2]-த்தல்** *valivu-kodu-,* 4 செ.குன்றாவி.(v.t.) நோயினால் உடல் வலிமை குன்றியபொழுது ஆற்றலூட்டும் சொற்களைக் கூறுதல்; to speak gentle and warm words to reoccupate one's illness.

*[வலிவு + கொடு-.]*

**வலிவுதருமருந்து** *valivu-taru-marundu,* பெ.(n.) ஆற்றல் அல்லது வலுவுண்டாக்கும் மருந்து; a tonic, invigorating medicine.

*[வலிவு + தரு + மருந்து.]*

**வலிவூட்டு-தல்** *vali-v-ūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒருவர் தம் கருத்து, செயற்பாடு, கொள்கை முதலானவற்றை உறுதிப்படுத்தி உரைத்தல் அல்லது வலியுறுத்திக் கூறுதல்; to reiterate strongly in one's policy, views, opinion and action etc. *என் கருத்துகள் அல்லது செயற்பாடுகளுக்கு வலிவூட்டும் வகையில் தரவுகள் கிடைத்துள்ளன (உ.வ.).*

*[வலிவு + ஊட்டு-.]*

ஊடு (பி.வி.)→ஊட்டு (செயப்.வி.)

ஒ.நோ. வாடு→வாட்டு

கூடு→கூட்டு.

**வலினம்** *valinam,* பெ.(n.) பொறித்தேற்றா; a tree.

**வலீநகம்** *valī-nagam,* பெ.(n.) தாழை (அரு. அக.); fragrant screw-pine - Aloe.

**வலீபலிதம்** *valī-palidam,* பெ.(n.) முகத்திற் காணும் ஓர் தோல் நோய்; a skin disease affecting the face.

**வலீமுகம்** *valī-mugam,* பெ.(n.) திரைந்த முகமுள்ள குரங்கு; monkey, as having a wrinkled face. *"ஒரு திறத்த வலீமுகங்கள்" (பாரத. பதின்மூ. 37).*

*[வலி→ வலீ + முகம்.]*

**வலு[1]-த்தல்** *valu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வன்மையாதல்; to be strong or hard. 2. திரப்படுதல் (யாழ்.அக.); to be firm or sustained. 3. அதிகரித்தல்; to become heavy. *மழை வலுத்துவிட்டது (உ.வ.).*

*[வலு [1] → வலு-.]*

வலு[2] *valu*, பெ.(n.) 1. வலிமை (வின்.), ஆற்றல்; strength, sturdiness. 2. திறமை; expertise, skill, ability. 3. கனம் (யாழ். அக.); weight. 4. எடைக்கு மேற்பட்டுள்ள காசு (வின்.); coin above standard weight, opp. to melu. 5. பெருங் கொசுகு வகை (வின்.); a species of big mosquito. 6. எட்டென்னும் எண்ணைக் குறிக்கும் குழூஉக்குறி (வின்.); a cant term for eight. 7. பற்று (யாழ்.அக.); prop. 8. ஒரு வகைப் பசை மருந்து (யாழ்.அக.); a medicinal paste.

க. பலு.

*[வல்[1] → வலு]*

வலு[3] *valu*, இடை.(part.) படு, மிகவும் (யாழ்ப்.); very. *"அவன் வலுவேகமாக மிதிவண்டி ஓட்டுகிறான். அவன் வலு கெட்டிக்காரன் (இலங்கைவழக்கு).*

*[வல் → வலு]*

வலு[4] *valu*, பெ.அ.(adj.) 1. வலமான; strong. 2. அளவு கடந்த, அதிகமான, பெரிய; great, much, more, surplus. *வலுகடினம்.*

*[வல்[1] → வலு]*

வலுக்கட்டாயம் *valu-k-kaṭṭāyam*, பெ.(n.) 1. வலவந்தம்; force, coercion. *சாப்பிடுவதற்கு வலுக்கட்டாயமாக அழைத்துச் சென்றார் (உ.வ.).* 2. வல்லந்தம்; compulsion.

*[வலு+கட்டாயம். கட்டு→கட்டாயம் (வே.க.136)]*

ஒன்றைச் செய்வதில் ஒருவருக்கு விருப்பம் இல்லாவிட்டாலும், தவிர்க்கவியலாத சூழலில், மற்றொருவரால் வற்புறுத்தப்பட்டுச் செயல்புரிவதே வலுக்கட்டாயம்.

வலுக்காரி *valu-k-kāri*, பெ.(n.) திறமையுள்ளவள் (வின்.); skillful woman. *"தெண்டிக்கு மன்னவனைச் சேர்ந்த வலுக்காரியை" (கூளப்ப. 356).*

*[வலு[1] + காரி[5]]*

வலுக்கிடு-தல் *valu-k-kiḍu-*, 20 செ.கு.வி. (v.i.) விறைத்தல் (இ.வ.); to become stiff.

*[வலு→வலுக்கு+இடு-.இல்→இள்→ இடு-.]*

வலுக்குவலுக்கெனல் *valukku-valukkeṉal*, பெ.(n.) எளிதில் அறாதபடி வலுத்திருத்தற் குறிப்பு (இவ.); onom. expr. of toughness.

*[வலு → வலுக்கு + வலுக்கு + எனல்]*

வலுக்கொள்ளு-தல் *valu-k-koḷḷu-*, 10 செ.குன்றாவி.(v.t.) வலுக்கட்டாயமாக எடுத்துக் கொள்ளுதல்; to take forcibly. *'நிலத்தை வலுக்கொண்டு' (சரவண. பணவிடு. 184).*

*[வலு + கொள்ளு-. குல்→ குள்→கொள்ளு.]*

வலுக்கொள்ளுதல் என்பது, தமது ஆற்றலாலும், வலிமையாலும் வலக்காரத்தாலும், முடியாது என்று யார் எவ்வளவு மறுத்துக் கூறினும், அவற்றையெல்லாம் பொருட்படுத்தாது, ஒன்றை தன்னகப்படுத்துதல்.

வலுகாரி *valu-kāri*, பெ.(n.) வலுக்காரி பார்க்க; see *valu-k-kāri.*

*[வலு + காரி.]*

கரு→கருத்தல். கருத்தல் = செய்தல். கரு→ கார் + இ → காரி. இங்கு வலுகாரி என்பது, வேலைக்காரி, பணக்காரி என்பவற்றிற் போல, வலுவுடைமைப் பொருளில் வரும், ஒரு பெண்பாற் பெயரீறு.

**வலுகிழம்[1]** *valu-kilam,* பெ.(n.) மிகக்கிழம்; very old person.

மறுவ. படுகிழம்

*[வலு + கிழம்.]*

**வலுகிழம்[2]** *valu-kilam,* பெ.(n.) 1. வலமிகு கிழம், ஆற்றல் வாய்ந்த கிழம்; strong, old person or animal, energetic aged being. 2. மிக்க கிழத்தனமுள்ள–வன்–வள்–து (வின்.); decrepit, old person or animal, very old infirm being.

*[வலு + கிழம்.]*

கீழ்→கிழம் = முதுமை, முதியோர், முதுமையடைந்தது. வலுகிழம் என்பது, ஈங்கு ஆற்றலும், வலிமையும் வாய்ந்த, முதுமைப் பருவத்தைக் குறித்தது.

**வலுச்சண்டை** *valu-c-candai,* பெ.(n.) குறிப்பிட்டுச் சொல்லுதற்குரிய கரணியமேது மின்றி வலியத் தொடங்குஞ் சண்டை; voluntarily picked up quarrel. *வலுச்சண்டைக்குப் போகாதே, வந்த சண்டையை விடாதே.*

*[வலு + சண்டை.. சள்→ சண்டு→சண்டை = பூசல், போர்.]*

தமது வலிமையை அல்லது ஆற்றலைக் காட்டுமுகத்தான் உருவாகும் சண்டை; வலுவுள்ள பேரரசன், வலிமையற்ற குறுநில மன்னன் மீது தொடுக்குஞ் சண்டையும் வலுச்சண்டையெனலாம்.

**வலுசர்ப்பம்** *valu-sarppam,* பெ.(n.) 1. பெரும்பாம்பு; dragon. 2. கொடும்பாம்பு வடிவமான பிசாசு (கிறித்.); satan, the infernal serpent.

*[வலு + சர்ப்பம்.]*

த. சருப்பம் > **Skt.** sarpa.

சர்→ சருப்பம்→சர்ப்பம்.

சர்ரெனல் விரைந்து செல்லுதலை யுணர்த்தும் ஒலிக்குறிப்புச் சொல் .

பாம்பு, மாந்தன் பார்வையினின்று மிக விரைந்து சென்று (சர்ரென்று) மறையும் இயல்பினைக் கொண்டது. மா.வி. அகரமுதலி, சருப்பம் என்ற தமிழ்ச் சொல்லிற்கு ஊர்ந்து செல்லும் பொருண்மையினை அடிப்படைப் பொருளாகச் சுட்டியுள்ளது.

ஊர்ந்து செல்லுதலைக் காட்டிலும் கண்ணிமைக்கும் நேரத்தில் சர்ரென்று விரைந்து சென்று மறையுந் தன்மையை அனைவரும் அறிவர்.

பாம்பினது நஞ்சு, கடித்தவரைக் குறிப்பிட்ட பொழுதில் கொல்லும் வலுவினை உடையது. வலுசர்ப்பம் என்றவிடத்து, விரைந்து மறையும் பாம்பினது தன்மையையும், நஞ்சினது வலுவினை (ஆற்றலை)யும் உணர்த்திற்று எனலாம்.

**வலுசுருதி** *valu-surudi,* பெ.(n.) வன்மை, வலுவந்தம்; might, compulsion, coercion.

*[வலு + சுருதி]*

**Skt.** Sruti > த. சுருதி.

**வலுச்செய்–தல்** *valu-c-cey-,* 1 செ. குன்றாவி. (v.t.) உறுதிப்படுத்துகை; invigorate.

*[வலு + செய்–.]*

**வலுத்தவள்** *valuttaval,* பெ.(n) அழகு, செருக்கு இன்னபிறவற்றில் மீக்கூர்ந்து உடல்வலிமையுடன் திகழ்பவள்; mightly woman with imposing and inspiring, enterprising personality. *வலுத்தவள் பேச்சுக்கு மறுபேச்சில்லை (உ.வ.).*

*[வலு→வலுத்தவள் = ஆற்றல், திறம் பெற்றவன்.]*

அழகு, செல்வம் போன்றவற்றாலுண்டாகும் தன்முனைப்பு அல்லது செருக்கு மற்றும் உடல் வலிமையுமாம்.

**வலுத்தவன்** *valuttavaṉ,* பெ.(n.) செல்வாக்கு, உடல்வலிமை போன்றவற்றில் மிக்கூர்ந்தவன்; mighty man such as an eminent and physical valour etc. *வலுத்தவன் சொல்வதெல்லாம் சட்டமாகுமா? (உ.வ.). வலுத்தவன் செயலுக்குத்தான் மதிப்பு அதிகம்.*

*[வல்→வலி → வலிமை = ஆற்றல், திறன். வல் → வலு → வலுத்தல் = வலிமையுடைத்தாதல்; திறனுடைத்தாதல். வலு → வலுத்தவன் = செல்வாக்கிலும், சொல் வாக்கிலும் சிறந்தவன், ஆற்றலுடையவன்.]*

வலுத்தவன் என்னும் இச்சொல், குமுகாயத்தில் மூவகைப் பொருண்மையில் வழக்கூன்றியுள்ளது.

1. உடல் ஆற்றலில் வலுத்தவன்

2. பணச்செழிப்பில் கொழுத்து, வன்முறையில் வலுத்தவன்.

3. பெரும் பதவி வகிப்பதால், வலிமை பெற்றவனும், வலுத்தவனே யாவான்.

**வலுத்துப்போ-தல்** *valuttu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) கெட்டியாகுதல்; to grow strong solid. *வழுவழாக இருந்த பொரிவிளங்காய் உருண்டை (இனிப்பு), வெல்லப்பாகு பதங் கூடியதால், மேலும் வலுத்துப் போனது (உ.வ.).*

*[வலுத்து + போ-.]*

வழுவலாகவும், நழுவலாகவும் இருந்த பொருள் வலுத்துக் கெட்டித் தன்மையுடைத்தாதல்.

**வலுப்பு** *valuppu,* பெ.(n.) 1. நிலைபேறு (யாழ்.அக.); firmness, permanence. 2. ஆற்றல்; strength.

*[வலு → வலுப்பு]*

**வலுமை** *valumai,* பெ.(n.) 1. வலம், ஆற்றல், திறன், வலிமை; strength, power, energy. *"வலுமைக்கு வழக்கில்லை (வின்.).* 2. வன்முறை, வலாற்காரம் (தொல்.எழுத்து. 154, இளம்பூ.); force, violence. *"மன்னவனே யிந்த வலுமைசெய்தா லார்க்குரைப்போம்" (கூளப்ப. 353).*

*[வலிமை → வலுமை]*

வரையிறந்த உடல்வலிமையின் காரணமாக, அனைவரையும், அடக்கி வைத்தலும், வன்முறையில் ஈடுபடுதலும், வலுமை யெனலாம்.

**வலுமோசம்** *valu-mōšam,* பெ.(n.) பெருங் கேடு (வின்.); great deception, big cheating.

*[வலு + மோசம்]*

**வலுவடை-தல்** *valu-v-aḍai-,* 2 செ.கு.வி. (v.i.) வலிமை கூடுதல் அல்லது ஆற்றலுடைத்தாதல்; to get strength or vigour. *புயல்சின்னம் வலுவடைந்ததால், அதிகமழை பெய்து, பயிர்கள் வெள்ளத்தில் மூழ்கின (இ.வ.).*

*[வலுவு + அடை-. அடு→அடை.]*

**வலுவந்தம்[1]** *valu-vandam,* பெ.(n.) 1. வலாற்காரம்; compulsion, coercion. 2. வன்மை; might, power.

*[வலு→ வலுவந்தம்]*

**வலுவந்தம்**[2] *valu-vandam,* பெ.(n.) வலுக்கட்டாயம் பார்க்க; see *valu-k-kaṭṭāyam.*

*[ஒருகா. வலவந்தம்→ வலுவந்தம்]*

**வலுவந்தரம்** *valuvandaram,* பெ.(n.) வலுவந்தம் (யாழ்.அக.) பார்க்க; see *valuvandam.*

*[வலுவந்தம் → வலுவந்தரம்]*

**வலுவந்தன்** *valuvandaṉ,*பெ.(n.) உப்பு; salt.

**வலுவன்** *valuvaṉ,*பெ.(n.) வலுவுள்ளவன், ஆற்றல் வாய்ந்தவன்; powerful person, strong and verile person. *"வலுவர் கருணீகர் மிகு பாகஞ்செய் தன்னமிடு மடையர்" (அறப். சத. 92).*

*[வலு → வலுவன்]*

**வலுவாய்ச்செய்-தல்** *valuvāi-c-cey-,* 1 செ.குன்றாவி.(v.t.) காற்று புகாதபடி கெட்டியாய் மண்சீலை செய்தல்; to lute well so that no air can enter, to make air proof solid statue.

*[வலுவாய் + செய்-.]*

**வலுவாயன்** *valu-vāyaṉ,*பெ.(n.) 1. நா வன்மையுள்ளவன் (வின்.); one who is tongue-doughty, eloquent man, an adept in speaking. 2. நாவலர்; a good orator.

*[வல் → வலு + வாய் + அன்]*

**வலுவிழ-த்தல்** *valu-v-iḻa-,*3 செ.கு.வி. (v.i.) வலிமை குறைதல் அல்லது செயலிழத்தல்; to loose the strengthen or vigour. *காற்றழுத்தத் தாழ்வுமண்டலம் வலுவிழந்தது (இ.வ.).*

*[வலிவு → வலுவு + இழ-. இழி→இழ.]*

**வலுவு** *valuvu,*பெ.(n.) வலு பார்க்க; see *valu.*

*[வலு → வலுவு.]*

**வலுவுயரம்** *valu-v-uyaram,*பெ.(n.) மிக்க உயரம் (வின்.); great or very height, zenith, peak.

*[வலு + உயரம்]*

வலு = "மிகுதி"ப் பொருள் குறித்தது.

**வலுவூட்டு-தல்** *valu-v-ūṭṭu-,*5 செ.கு.வி. (v.i.) 1. வலிவூட்டு- பார்க்க; see *vali-v-ūṭṭu-.* 2. நோயினால் வலுவிழந்த அல்லது ஆற்றல் குன்றிய உடலுக்கு வலிவூட்டும் ஊக்க மருந்தினைக் கொடுத்தல்; to offer tonic, to energize physical condition.

*[வலு + ஊட்டு.]*

ஆற்றலூட்டும் மருந்துகளை உட்கொளச் செய்தல்.

உண் → ஊண் →ஊடு(தவி.)→ஊட்டு (பி.வி.) (செயப்.வி.). (ஒ.நோ.) வாடு→வாட்டு. கூடு→கூட்டு. தொடு→தோண்டு.

**வலூகம்** *valūgam,*பெ.(n.) தாமரைக் கிழங்கு (யாழ்.அக.); the root or tuber of the lotus-plant.

**வலை** *valai,* பெ.(n.) 1. உயிரிகளை யகப்படுக்குங் கருவி; net, trammel. *இரும்புவலை வைத்து அடிக்கப்பட்ட பலகணி (உ.வ.). மீன் பிடிக்கும் வலை (இ.வ.). மேலிருந்து விழுந்தாலும் அடிபடாதபடி கீழே*

*வலை கட்டப்பட்டிருந்தது (இ.வ.). "புலிகொண்மார் நிறுத்த வலையுள்" (கலித். 65).* 2. சூழ்ச்சி; trick, fraud. *"அகப்பட்டேன்.... வாசுதேவன் வலையுளே" (திவ். திருவாய். 5, 3, 6).* 3. வேள்வித் தலைவியர் நெற்றியி லணிந்து கொள்ளும் அணிவகை; ornament worn on the forehead by the wife of the chief sacrificer. *"அறம் புகழ்ந்த வலை சூடி..... நிலைக் கோத்த நின்றுணைத் துணைவியர்" (புறநா. 166).*

தெ., ம. வல; க. பலெ.

*[வல் → வல[1] →வலை]*

விலங்குகள், மீன்கள் முதலானவற்றை அகப்படுத்தற் பொருட்டுக் கயிறு, இழை போன்றவற்றால், ஒரே அளவிலான வலைக்கண்ணிட்டுப் பின்னப்பட்ட அல்லது இடைவெளியோடு செய்யப்பட்ட கருவி.

**வலைக்கண்[1]** *valai-k-kaṇ,* பெ.(n.) வலையில் காணப்படும் இடைவெளி; net hole.

*[வலை + கண்.]*

**வலைக்கண்[2]** *valai-k-kaṇ,* பெ.(n.) வலையின் சிறுதுளை (வின்.); mesh of a net.

*[வலை + கண். குல்→குள்→கள்→கண் = துளை, சிறுதுளை.]*

**வலைக்கண்கட்டி** *valai-k-kaṇ-kaṭṭi,* பெ.(n.) சிறு கட்டி எழும்பி, மரத்தின் வேரினைப் போலப் பரவி, அரத்தமும், சீழும் வடியும் ஒரு கட்டி வகை; an abscess studded with slender vegetations of flesh and attended with intolerable burning sensation, it has many small openings.

*[வலை + கண் + கட்டி.]*

குள்→கள்→கட்டு→கட்டி (மு.தா.244). கள் = திரளல், பெருகுதல், உருண்டையாதல், உருண்டு கட்டியாதல்.

**வலைக்கத்தி** *valai-k-katti,* பெ.(n.) வலை பின்னும்போதும், பழுதுபார்க்கும் போதும், வலைநூல் அறுக்கவும், இன்னபிற தேவைக்கும் வலைஞர் பயன்படுத்தும் கத்தி; a knife used for cutting loops of yarn, thread etc., while knitting or felling of net.

*[வலை + கத்தி. கள்→கட்டு→கத்து→கத்தி.]*

கத்தி = வெட்டுதல், அறுத்தல்.



**வலைக்கம்பி** *valai-k-kambi,* பெ.(n.) வலை போன்று அமைந்த கம்பி; welded mesh.

*[வலை + கம்பி.]*

கொம்பு→கம்பு→கம்பி = மரக்கிளையின் சிறு வளார் போன்று மெலிந்து நீண்டது.

**வலைக்கயிறு** *valai-k-kayiṟu,* பெ.(n.) விலங்குகளை யகப்படுக்குங் கருவி; net, trammel. *"புலிகொண்மார் நிறுத்த வலையுள்" (கலித்–65).*

*[வலை + கயிறு.கள்→கய்→கயில்→கயிறு.]*

கள் = கட்டுதல், பிணைத்தல்.

**வலைக்காசு** *valai-k-kāšu*, பெ.(n.) செம்படவர் கொடுக்கும் கோயில் மகமைப் பணம் (இ.வ.); net-money, a contribution paid by fishermen to a temple.

*[வலை + காணி. காண்→காணி.]*

செம்படவர் பயன்கொண்ட நிலத்தையும், அந் நிலத்திற்குச் செலுத்தப்பட்ட வரியின் பெயரும் வலைக்காணியே ஆகும்.

**வலைக்காரன்** *valai-k-kāraṉ*, பெ.(n.) வலைத் தொழில் செய்பவன்; net manufacturer.

*[வலை + காரன். கரு→காரன்.]*

வலைக்குரியவனையும் வலையைச் செய்பவனையும் குறிக்கும். ஆண்பால் உடைமைப் பெயரீறு. வலைக்காரன் என்னுமிச்சொல்லில் பயின்று வரும் இப் பெயரீறு வேலைக்காரன், பணக்காரன், மாட்டுக்காரன், தோட்டக்காரன், வண்டிக்காரன் போன்ற சொற்களில் வருவது போன்று உடைமைப் பொருளிலும், உரியவனைக் குறிக்காவிடத்துப் பொறுப்புரிமைக் காரனைக் குறிக்கும்.

உரியவன் = சொந்தக்காரன்.

காரன், காரியீற்றுப் பெயர்கள் உலக வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் நூற்றுக் கணக்கில் வழக்கூன்றியுள்ளன.

த. காரன் > வ. கார.

வடமொழியாளர், இப் பெயரீற்றை வட சொல்லாக்குதற் பொருட்டுக் 'கரு' (செய்) என்னும் முதனிலையினின்று திரித்துச் செய்பவன் என்று பொருள் கூறுவர். இது பொருந்தப் பொய்த்தலின்பாற்பட்டது. செய்வானைக் குறிக்கும் வடமொழியீறுகள் கார, காரு, காரி, காரன் (செய்பவன்), காரி (செய்பவள்) எனப்படும் வடிவில் நிற்கும் (வே.க.189).

**வலைக்கால்** *valai-k-kāl*, பெ.(n.) கடலில் வீசிய வலையினை, வலைத்திழுக்கும் போது வெளித்தோன்றும் வலையின் அடிப்பாகம்; an adjoining net, while pulling the net spread in the sea already. *"வலைக்காலில ஏலேலோ ஒரு கடி கடிச்ச மாதிரி கிடக்கு ஏலேலோ" (நாட்டுப்புறப் பாடல்).*

*[வலை + கால். குல்→கல்→கால் = வலையின் ஒரு கூறு, வலையின் அடிப்பாகம்.]*

குல் = தோன்றல் கருத்து வேர்.

**வலைக்காளான்** *valai-k-kāḷāṉ*, பெ.(n.) வலைக்கண்ணுருவமாயுள்ள மஞ்சள் நிற காளான்; an edible yellow mushroom.

*[வலை + காளான். காள்→ காளான்.]*

காளான் வகை இருபத்தொன்றில், வலைக்காளானும் ஒன்று. இன்சுவை மிக்கது. சமையலுக்கு உகந்தது என்று சா.அக. கூறும்.

**வலைக்குணுக்கு** *valai-k-kuṇukku*, பெ.(n.) வலையை நீருள் தாழச்செய்யும் மாழை (உலோகம்)யுருண்டை (வின்.); metal weight attached to a net.

*[வலை + குணுக்கு. குள்→குணுக்கு.]*

வலைக்குணுக்கு என்பது, மீன் வலையை நீருள், அமிழ்த்தும் மாழையிற் செய்த ஈயக்குண்டு.

**வலைக்கூண்டு** *valai-k-kūṇḍu*, பெ.(n.) கடற்கரையில் வலைகளை வைக்கும் பாதுகாப்பு சிறுகுடில்; a small nest to store nets.

*[வலை + கூண்டு. குள்→குண்டு→கூண்டு.]*

கடற்கரையில் வலைகளைப் பாதுகாத்து வைப்பதற்குப் பயன்படும் கூண்டு போன்ற அமைப்புடைய சிறுகுடில்.

**வலைகட்டபத்தல்** *valai-katta-pattal,* தொ.பெ.(vbl.n.) வலையை வீசுவதற்கு அணியமாக வைத்தல்; to keep ready the net.

*[வலைகட்ட + பற்றல் →பத்தல்.]*

**வலைகட்டல்** *valai-kattal,* தொ.பெ. (vbl.n.) 1. வலை பின்னுதல்; to knit or manufacture net. 2. பழுதான வலைகளைச் சரிபடுத்துதல்; felling of net.

*[வலை + கட்டல். கள்→கட்டு + அல் – கட்டல்.]*

**வலைகப்பி** *valai-kappi,* பெ.(n.) வலையைக் கடலில் இறக்கவும், மீன்பிடி கலத்தினில் ஏற்றவும் பயன்படுத்தும் உருளை; gallows.

*[வலை + கப்பி. கழி→கழிப்பு→கழிப்பி→கப்பி.]*

கப்பி = மீன்பிடி வலைஞர் பயன்படுத்தும் உருளை.

**வலைகாயவை-த்தல்** *valai-kāya-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) அழுக்கடைந்த ஈர்ங்கண் வலையை தூய்மை செய்து வெயிலிற் காய வைத்தல்; to wash dirty nets and dry up.

*[வலை + காயவை-.]*

**வலைகாரம்** *valai-kāram,* பெ.(n.) வெடிகாரம் (மூ.அ.); a kind of salt.

மறுவ. வெடியுப்பு

*[வலை + காரம். கரி→கார்→காரம்.]*

ஒருகா. கரி + அம் – காரம். கரி என்னும் வினையடியால் பிறந்த தொழிற்பெயரே காரம். முதனிலை திரிந்து ஈறுபெற்ற தொழிற்பெயர். வெடிகாரம் என்பது வெடிமருந்து செய்வதற்குப் பயன்படும் உப்பு என்றுங் கூறுவர். வெடிமருந்தின் வேகத்தையும் உறைப்பையும், வலைகாரம், ஒருங்கே உணர்த்திற்று எனலாம்.

**வலைகாரன்** *valai-kāran,* பெ.(n.) மீன் பிடிப்போன் (வின்.); fisherman.

மறுவ. வலைஞன்

*[வலை + காரன்[1]. கரு→காரன்.]*

உடைமையையும், உரிமையையும் ஒருங் குணர்த்தும், ஆண்பாற் பெயரீறு.

**வலைகாவு-தல்** *valai-kāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வலையைத் தோளிலிட்டுத் தூக்கிச் செல்லுகை; to carry the net with one's shoulder.

*[வலை + காவு-. கா→காவு. கா = சுமத்தல், காத்தல்.]*

**வலைகிளப்பு-தல்** *valai-kilappu-,* 5 செ. குன்றாவி.(v.t.) வலையைப் பற்றி மேலிழுத்தல்; to drag the net a top.

*[வலை + கிளப்பு-. கிளம்பு→கிளப்பு = எழுப்புதல்.]*

**வலைகொள்(ளு)-தல்** *valai-kol(lu)-,* 7 செ.குன்றாவி.(v.t.) சூழ்தல்; to surround, to encircle. *"வலைகொண்ட மானம் வேறென்" (இரகு. இரகுவு. 50).*

*[வலை+கொள்-.குல்→குள்→கொள்(ளு)-.]*

வட்டவடிவமாகச் சுற்றி வளைத்து, வளை வீசுதலே, வலை கொள்ளுதலாகும்.

**வலைச்சாளரம்** *valai-c-cālaram,* பெ.(n.) பலகணி; latticed window.

*[வலை + சாளரம்.]*

கம்பி வலையிட்ட பலகணி.

**வலைச்சி** *valaicci,* பெ.(n.) 1. செம்படவப் பெண்; fisher woman. 2. நெய்தனிலப் பெண் (யாழ்.அக.); woman of the maritime tract or coastal areas woman who lives in sea shore.

*[வலையன் (ஆ.பா.) → வலைச்சி (பெ.பா.)]*

ஒ.நோ. : புலையன்→புலைச்சி.

**வலைச்சியார்** *valaicciyār,* பெ.(n.) கலம்பக வுறுப்பினுள் தலைவன் ஒரு வலைச்சியிடம் காமக்குறிப்புப்படக் கூறும் பகுதி (குமர. பிர. மதுரைக்கலம். 66); a section in kalambagam, which describes the hero as making love fisher woman.

*[வலைச்சி → வலைச்சியார்]*

**வலைச்சேரி** *valai-c-cēri,* பெ.(n.) வலைஞர் வாழிடம்; fishermen's Quarters.

*[வலை + சேரி. சேர்→சேரி.]*

வலைஞர் சேர்ந்து வாழுமிடம் வலைச்சேரி என்றழைக்கப்பட்டது.

**வலைசவ்வு** *valai-cavvu,* பெ.(n.) சன்னல் பின்னலான சவ்வு; cellular tissue or texture.

*[வலை + சவ்வு. சவ்→சவ்வு.]*

மெல்லிய வலைபின்னுதற்குப் பயன்படும் இழைமம்.

**வலைசிகா** *valai-sigā,* பெ.(n.) செந்தினை; red italian millet-*Setaria italica.*

**வலைசுத்து-தல்** *valai-šuttu-,* 5 செ. குன்றாவி.(v.t.) மீன்பிடித்து முடித்த உடன் வலையை சுற்றுகை; to roll up the net immediately after fishing operation.

*[வலைசுற்றுதல்→வலைசுத்துதல் (பே.வ.).]*

**வலைஞன்** *valaiñan,* பெ.(n.) மீன் பிடிப்போன்; fisherman. *"கொடிமுடி வலைஞர்" (மதுரைக். 256).*

*[வலை + அன்→வலையன்→வலைஞன்]*

தொன்முது தமிழில் ஞ், ந் என்பன உடம்படு மெய்களாக இருந்திருக்கின்றன. வலைஞர், வினைஞர் முதலாய சங்ககாலச் சொற்கள் இவ்வுடம்படுமெய்யினைப் பெற்றுவருதல் காண்க.

**வலைத்துணி** *valai-t-tuṇi,* பெ.(n.) 1. மருந்து வடிகட்டும் கொசுவலையைப் போன்ற சீலைத் துணி; filter cloth. 2. சல்லடைத்துணி; sieve - cloth.

*[வலை + துணி.]*

**வலைதட்டல்** *valai-taṭṭal,* தொ.பெ. (vbl.n.) கடற்பரப்பில் வீசிய வலையைக் கொணர்ந்து, கையால் தட்டுதல்; to bring and landing the net spreads.

*[வலை + தட்டல். தட்டு→தட்டல்.]*

தட்டல் = கையாலும், கருவியாலும் தட்டல். தட்டல் கருத்து முட்டல் கருத்தினின்று முகிழ்த்தது.

(ஒ.நோ.) ஒட்டு→ஒட்டல். இங்கு வலைதட்டல் என்பது வலைகளைச் சேர்த்து கொணர்ந்து தரையில் வைத்துத் தட்டலாம்.

**வலைதடு-த்தல்** *valai-taḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) பகைமை நிமித்தம் மந்திரம் செய்து, மீன்கள் வலையில் அகப்படாம லிருக்கச் செய்தல்; to make no harvesting

of fish due to specific magic or enchantment by foes.

*[வலை + தடு-. துல்→தல்→தள்→தடு-த்தல் = தடைசெய்தல்.]*

மந்திரத்தின் மூலமாக, மீன்கள் வலைப்படாதவாறு, தடைசெய்தலே வலை தடுத்தலாகும்.

**வலைதப்பல்** *valai-tappal,* தொ.பெ. (vbl.n.) அழுக்கடைந்த நிலையில் இருந்த வலையினைத் தூய்மை செய்து உலர வைத்தல்; to dry the net after removing the dust. *வலையைத் தப்புத் தப்பென்று தப்பி உலர வைத்தல்.*

*[வலை + தப்பு→தப்பல்.]*

மீன்பிடித்து, அழுக்குடன், முடைநாற்றம் வீசும் வலையைத் தண்ணீரில் தப்புத்தப்பென்று தப்பி அலசுதலே, வலைதப்பல் என்க.

**வலைதப்பு-தல்** *valai-tappu-,* 5 செ.கு.வி. (v.i.) கடலில் இளக்கிய மீன்பிடிவலை அறுபட்டோ அல்லது காணாமலோ போயொழிதல்; to lose fishing net, at fishing - spot.

*[வலை + தப்பு-.]*

**வலைதள்ளு-தல்** *valai-taḻḻu-,* 5 செ. குன்றாவி.(v.t.) கலத்திலிருக்கும் வலையை, மீன் மற்றும் கடல்வாழ் உயிரிகளை வலைக்குமாறு கடலில் தள்ளுதல்; to throw the net in the sea, placed in the boat or catamaram.

*[வலை + துள்→தள்→தள்ளு-.]*

**வலைநாள்செய்-தல்** *valai-nāḷ-šey-,* 1 செ.கு.வி.(v.i.) புதிய வலை வாங்கியவுடன், அதனை கடலுக்குக் கொண்டு செல்லாமல், உரிய சடங்குகளைச் செய்த பின்னரே கடற்றொழிலுக்கு வலையை எடுத்துச் செல்வர். பழைய வலையை வைத்துக் கடலை, அரிசி, வெல்லம் ஆகியன படைத்து, தெய்வங்களைத் தங்களின் வலைகளுக்குக் காவலாக இருக்க வேண்டும் என்று வேண்டுவர். அதன் பின்னரே கடலுக்குக் கொண்டுச் செல்வர்; to be the day of performance of rites after purchasing new net and before going for fishing, prayig deitis to be with fishermen.

*[வலை + நாள் + செய்-.]*

**வலைநாற்றம்** *valai-nāṟṟam,* பெ.(n.) முடை நாற்றம்; foul stench, very unpleasant smell. *"துணி வலை நாற்றம் நாறுகிறது" (மீனவழ.).*

மறுவ. கவுச்சுவலை.

*[வலை + நாற்றம். நாறு→நாற்று→ நாற்றம்.]*

நாற்றம் = முடை நாற்றம் அல்லது மீன் வலைக்கும் மீன்பிடி வலையின் நாற்றம். நாறுதல் = தோன்றுதல், தோன்றி மணம் பரப்புதல்.

உலக வழக்கில் நாற்றம் என்னுஞ் சொல், முடைநாற்றத்தையே குறிக்கும். இலக்கிய வழக்கில் நல்லது, தீயது ஆகி இரண்டிற்கும் பொதுவாம் முதற்கண் நறுநாற்றத்தை மட்டும் குறித்த இச் சொல், காலப்போக்கில் வேறுபட்ட அல்லது மாறுபட்ட மணத்தையும் குறிக்கலாயிற்று.

வலைநாற்றம் என்னும் சொல், மீனவரிடையே, கவுச்சு நாற்றம் அல்லது முடைநாற்றம் என்னும் பொருண்மையில், வழக்கூன்றியுள்ளது. அடிக்கடி மீன் வலைத்தலால் உண்டாகும் முடைநாற்றமே, வலைநாற்றம் எனலாம்.

**வலைப்படு-தல்** *valai-p-paḍu-*,20 செ.கு.வி. (v.i.) 1. வலையில் மீன் மற்றும் கடல்வாழ் உயிரிகள் அகப்படுதல்; to be caught in a net. 2. சூழ்ச்சிக்குட்படுதல்; to be cheated by a trick, to subject to cheat. *"பரமன் வலைப் பட்டிருந்தேனே" (திவ். நாய்ச். 13, 2).*

*[வலை + படு-.]*

**வலைப்பரதவர்** *valai-p-paradavar,* பெ.(n.) மீன் பிடி தொழில் செய்வோர்; fishermen. *"உரவுக் கடல் உழந்த பெருவலைப் பரதவர்" (நற். 63 – 1).*

*[வலை + படவர்→பரவர்→ பரதவர். பரதவர் = மீன்பிடி தொழில் செய்வாருள் ஒரு வகுப்பினர்.]*

**வலைப்பாடு** *valai-p-pāḍu,*பெ.(n.) வலையால் மீன் பிடிக்கை (யாழ்.அக.); fishing with nets.

*[வலைப்படு→ வலைப்பாடு.]*

**வலைப்பூச்சி** *valai-p-pūcci,*பெ.(n.) சிலந்தி (வின்.); spider.

*[வலை + பூச்சி. புல்→பூள்→பூய்→பூய்ச்சி→ பூச்சி = சிற்றுயிரி (செந்து).]*

வலைப்பூச்சி = உட்டுளையுள்ள சிலந்திப் பூச்சி. புல்→புர்→புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள்.



**வலைப்பை** *valaippai,*பெ.(n.) வலைபோற் கண்களுள்ள பை; netting, net-bag.

*[வலை + பை]*

**வலைப்பொத்தல்** *valai-p-pottal,* பெ.(n.) அறுந்த வலையை, வலைப்பகுதியை, (கடல்வாழ் மீன் மற்றும் பிற உயிரிகளை அகப்படுத்துமாறு) மூடுகை; tearing of net with holes.

*[வலை + பொத்தல். பொத்தல் = மூடுகை.]*

**வலைபற்றல்** *valai-parṟal,*பெ.(n.) வலையைப் பற்றி எடுத்தல்; to pick up net.

*[வலை + பற்றல்.]*

**வலைபொத்து-தல்** *valai-pottu-,* 5 செ. குன்றாவி.(v.t.) அறுந்த வலையினைத் தைத்தல்; to stitch or repair the damaged net.

*[வலை + பொத்து-.]*

**வலைமண்டலி** *valai-manḍali,*பெ.(n.) கரு நொச்சி; a plant justica gendarussa.

**வலைமால்** *valai-māl,*பெ.(n.) வலைகளின் இணைப்பு; jointing together of nets.

*[வலை + மால்.]*

**வலைமாலடி** *valaimāl-aḍi,*பெ.(n.) வலையின் கீழ்ப்புற விளிம்பு; the lower edge of net.

*[வலைமால் + அடி.]*

**வலைமாலிணை** *valaimāl-iṇai,* பெ.(n.) வலைகளை ஒன்று சேர்த்தல்; mounting or fixing of nets.

*[வலைமால் + இணை.]*

வலைமுடி–தல் *valai-mudi-,* 2 செ.குன்றாவி. (v.t.) வலை கட்டுகை; braiding.

*[வலை + முடி–.]*

வலையகட்டு–தல் *valaiya-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சுற்றிக்கட்டுதல்; to coil up, as a rope.

*[வலைய + கட்டு–.]*

வலையசேரி *valaiya-cēri,* பெ.(n.) 1. நெய்தல் நிலம் (யாழ்.அக.); maritime tract. 2. செம்படவர் வாழிடம்; fishermen's quarters or colony,habitats.

*[வலையர் + சேரி. சேர் → சேரி.]*

வலையர் சேரி வலையசேரி என்றானது. இங்கு, மீன்பிடிதொழில் புரியும் செம்படவர் சேர்ந்து வாழிடம் என்னும் பொருள் வந்துள்ளது.

வலையடி–த்தல் *valai-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) பலகணி முதலானவற்றில் வலையினைப் பொறுத்துதல்; to fix net in windows, doors, etc.

*[வலை + அடி–.]*

வலையப்பறையன் *valaiya-p-paṟaiyaṉ,* பெ.(n.) வலைகளாற் பறவைகளைப் பிடிக்கும் பறையர் இனத்தினன்; a sect of *paṟaiyas* who live by netting birds.

*[வலையன் + பறையன்]*

வலையம்[1] *valaiyam,* பெ.(n.) படிக்கல்; quartz, crystal pebble.

*[வளையம் → வலையம்]*

வலையம்[2] *valaiyam,* பெ.(n.) வலயம் (வின்.), கை வளையம், வாகுவலயம் (வின்.); bracelet, armlet. *"நிரைநில முழவலயங்களினலைய"* *(பெரியபு. திருநாவுக்.6).*

*[வளையம் → வலையம்]*

வலையர் *valaiyar,* பெ.(n.) 1. மீன் பிடிக்கும் தொழில் செய்வோர்; fisherman or women. 2. நாட்டின் பூர்வீகக் குடிமக்கள்; ancient inhabitants of a nation or country or region.

*[வலை → வலையர்.]*

வலையரோகம் *valaiya-rōgam,* பெ.(n.) கண்டத்திற்கு உள்ளும், வெளியிலும் நீளமாக உயர்ந்து, அதிக நோயில்லாமலும், கழுத்தைச் சுற்றிலும் வீங்கும் ஓர் நோய்; a measles like disease causing swelling around neck and a projection in front portion.

*[வளை → வலை → வலையம் + **Skt.**ரோகம்.]*

வலையன் *valaiyaṉ,* பெ.(n.) 1. நெய்த னிலத்தான் (பிங்.); inhabitant of maritime tracts. 2. குடிமக்கள் பதினெண்மருள் மீன், புள் முதலியன பிடித்து வாழும் இனத்தாருள் ஒரு பிரிவினன்; fisherman, person of a caste which lives by netting fish, birds and beasts, one of 18 *kuḍi-makkaḷ.* 3. சாமை வகை (யாழ். அக.); a species of poor man's millet.

*[வலை → வலையன்]*

வலையன்சாமை *valaiyaṉ-sāmai,* பெ.(n.) சாமைவகை (வின்.); a species of poorman's millet.

*[வலையன் + சாமை. சமை → சாமை.]*

வலையிடையர் *valai-yiḍaiyar,* பெ.(n.) பரதவருள் ஒரு பிரிவினர்; a sect of fishing tribes.

*[வலை + இடையர். இடை + அர் – இடையர்.]*

கடல் வளத்தையையே, வாழ்க்கைத் தொழிலாக மேற்கொண்ட பரதவருள் ஒரு பிரிவினர்.

**வலையிழுப்புப்பாடல்** *valai-yiluppu-p-pāḍal,* பெ.(n.) மீன் பிடிப்போர் வலை இழுக்கும் போது பாடும் பாடல்கள்; a song sung by fishermen while pulling net.

*[வலையிழுப்பு + பாடல்.]*

வலையிழுப்புப் பாடல்கள் மீனவர்தம் வாழ்வியல் துன்பத்தை விளக்குவனவாகும். மீனவர்கள் மீன்வலைக்குங்கால், படும் இன்னலையும், அம் மீனை விற்குங்கால், பெறும் இழப்புகளையும், எடுத்தியம்புவன. அவர்தம் அகவாழ்வினைக் காமச்சுவை மிளிரும் பாங்கினில் படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளன எனலாம்.

**வலையிளக்கு-தல்** *valai-y-iḷakku-,* 5 செ. குன்றாவி.(v.t.) வலையைப் பிரித்துக் கடலுள் நழுவவிட்டு இறக்குதல்; to put into the sea after unfolding the net.

*[வலை + இளக்கு. இளகு→இளக்கு.]*

வலையைப் பிரித்து, நெகிழும் வண்ணம் அசைத்தல் வலையிளக்குதலெனப்படும்.

**வலையிள-த்தல்** *valai-y-iḷa-,* 4 செ.கு.வி. (v.i.) கட்டுமரம் கலத்திலிருந்து வலையைக் கடலிற் விரித்து நழுவவிட்டு இறக்குதல்; to spread net from catamaram and go for fishing.

*[வலை + இள-. இல்→இள்→இள-.]*

**வலையூசி** *valai-yūši,* பெ.(n.) வலை பின்னுவதற்குப் பயன்படும் ஊசி; a needle used of knitting nets.

*[வலை + ஊசி. உள்→உசி→ஊசி.]*

வலைபின்னுவதற்குப் பயன்படும் மெல்லிய ஊசி.



**வலையேறு-தல்** *valai-yēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பெருவலையைப் படகில் அல்லது கலத்தில் ஏற்றுகை; to load fishing boat or catamaram with big laughty net.

*[வலை + ஏறு-. ஏ→ஏல்→ஏறு-.]*

**வலைவகை** *valai-vagai,* பெ.(n.) வலைகளின் பருப்பு; classifications of nets.

*[வலை + வகை]*

வலை வகைகள் : 1) களவலை, 2) கரைவலை, 3) கைவலை, 4) வடுவலை, 5) வீச்சுவலை, 6) பாச்சுவலை, 7) தெவ்வலை, 8) வரிவலை, 9) கொண்டைவலை, 10) மணி வலை, 11) சிக்குவலை, 12) வீச்சுவலை, 13) மடிவலை, 14) கரைவலை, 15) இழுவலை, 16) பொடிவலை, 17) பருவலை, 18) தூரிவலை, 19) சாளவலை எனப் பரதவர் பல்வேறாகப் பகுக்கின்றனர்.

**வலைவடம்** *valai-vaḍam,* பெ.(n.) மாசு, தூது (நாமதீப. 448); dirt.

*[வலை + வடம்]*

**வலைவரி** *valai-vari,* பெ.(n.) மீன் பிடிப்போர் செலுத்தும் வரி; a tax on fishing.

*[வலை + வரி [5]]*

**வலைவளம்** *valai-vaḷam*, பெ.(n.) அரியவும் விலைமதிப்பு மிக்கவுமாய வஞ்சிரம், இறால் மற்றும் இன்னபிற கடல்வாழ் உயிரிகள் வலைப்படுகை; costly and rare fishes, sea species caught with one net. *"வேட்டம் பொய்யாது வலை வளம் சிறப்ப" (நற். 38, 1).*

*[வலை + வளம்]*

**வலைவளை¹-த்தல்** *valai-vaḷai-*, 4 .செ. குன்றாவி.(v.t.) கிழிந்த வலைகளைச் சரிசெய்து, மீண்டும் கடலுக்கு கொண்டு செல்கை; to take to the sea after mending the torn nets.

*[வலை + வளை-]*

**வலைவளை²-த்தல்** *valai-vaḷai-*, 4 செ. குன்றாவி.(v.t.) வலையை உப்பங்கழியில் அரைவட்டம் போலிட்டு, மீன்கள் தப்பி ஓடிவிடாதவாறு வளைக்கும் தன்மை; an exercise to arrest fishes from escaping by putting the net in encircled fashion.

*[வலை + வளை-]*

**வலைவளைப்பு** *valai-vaḷaippu*, பெ.(n.) 1. வலையை வீசுகை, போதிய அளவு மீன்பிடிபட வேண்டுமென்பதற்காக ஒருபாடு வளைப்பு, இருபாடு வளைப்பு, மூன்றுபாடு வளைப்பு என்று வளைப்பதுண்டு; encircling in thee categories of one, two or three to get sufficient fish catch. 2. வலை வளை-த்தல் பார்க்க; see *valai-vaḷai-*.

*[வலை + வளைப்பு]*

**வலைவன்** *valaivaṉ*, பெ.(n.) வலையன், 1, 2 பார்க்க; see *valaiyaṉ 1, 2*. *"வலைவர்க் கமர்ந்த மடமான் போல" (கலித். 23).*

*[வலையன் → வலைவன்]*

**வலைவாங்கு-தல்** *valai-vāṅgu-*, 5 செ. குன்றாவி.(v.t.) கடலில் வீசிய வலையை மீண்டும் கலத்திற்குள் இழுத்தல்; to withdraw net spread in the sea into boat or catamaraw.

*[வலை + வாங்கு-.]*

**வலைவாணன்** *valai-vāṇaṉ*, பெ.(n.) வலையன் 1, 2 பார்க்க; see *valaiyaṉ*. *"காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்" (திருவாச. 48, 3).*

*[வலை + வாணன்]*

**வலைவாழ்நன்** *valai-vāḻ-naṉ*, பெ.(n.) வலையன் 1, 2 பார்க்க; see *valaiyaṉ 1, 2*. *"வலைவாழ்நர் சேரி" (சிலப். 7, கட்டுரை, 10).*

*[வலை + வாழ்நன்]*

**வலைவிரி-த்தல்** *valai-viri-*,4 செ.கு.வி. (v.i.) அகப்படும்படி தகுந்த ஏற்பாடு செய்தல்; to lay a snare; to trap somebody. *திருடர்களைப் பிடிக்க வலை விரிக்கப் பட்டிருக்கிறது (உ.வ.).*

*[வலை + விரி-.]*

நேர்மையான வழியில் ஒன்றை அகப்படுத்தற் பொருட்டு, முறையாக அல்லது முன்னேற்பாடாக எடுத்துக் கொள்ளும் முயற்சியே வலை விரித்தலாகும்.

**வலைவீசு-தல்** *valai-vīsu-*,5 செ.கு.வி. (v.i.) 1. மீன் முதலியன வலைக்க கடற்பரப்பில் வலையை யெறிதல்; வலிமை சேர்த்தல்; form of energy to spread the net, as in fishing activitis. *"வலைவீசின படலம்" (திருவிளை.).* 2. வயப்படுத்த முயலுதல்; to try to ensnare or influence a person. *'நடிகை மறுமணம் செய்ய முத்தழகனுக்கு காம வலைவீசினாள்' (உ.வ.).*

*[வலை + வீசு-.]*

வலைவீசுதல்-அகப்படுத்துதல் :- வலை வீசுதல் என்பது மீன் பிடிப்பதற்காகச் செய்யப்படுவது. வலைவீசல், வலைபோடல், தூண்டில் போடல் என்பனவும், மீனை அகப்படுத்துவதற்கு அல்லது சிக்கவைப்பதற்குச் செய்யும் செயலேயாகும். அதே போல் ஒருவர் தாம் விரும்பிய ஒருவரை அகப்படுத்துதற்குச் செய்யும் முயற்சி, சூழ்ச்சி, பேச்சு கண்ணோக்கு என்பவை, வலைவிரித்தலாக வழக்கில் சொல்லப்படும்.

வலை விரித்தல் என்பதும் அகப்படுத்த எடுத்துக் கொள்ளும் முயற்சியையே குறிக்கும். நேரிய வழியால் அகப்படுத்துதலை வலைவீசுதல் என்னும் வழக்கம் இல்லை (வழக்குச்சொல் அகரமுதலி).

**வலைவை-த்தல்** *valai-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) கடலில் வலையை போடுகை; to spread or throw net in sea.

*[வலை + வை-]*

**வவ்வடி** *vavvaḍi,* பெ.(n.) வழுக்குந்தன்மை மிகுதியாகவுள்ள சேற்று மண் நிறைந்த பகுதி; slippery region.

**வவ்வரிகொட்டு-தல்** *vavvari-koṭṭu-,* 5 செ.கு.வி(v.i.) வவ்வலிடு-தல் (வின்.) பார்க்க; see *vavval-iḍu-.*

*[வவ்வல் → வவ்வரி + கொட்டு-. கொள் → கொட்டு→கொட்டுதல்.]*

கொட்டுதல் = அறைந்து கொள்ளுதல். குளிரினால் பற்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளுதலே வவ்வரி கொட்டுதலாகும்.

**வவ்வல்கொட்டு-தல்** *vavval-koṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) வவ்வலிடு-தல் (இ.வ) பார்க்க; see *vavval-iḍu-.*

*[வவ்வல் + கொட்டு-. கொள்→ கொட்டு→ கொட்டுதல்.]*

**வவ்வலிடு-தல்** *vavval-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) குளிர்மிகுதியாற் பற்கள் ஒலியுண்டாக விரைந்து மோதிக் கொள்ளுதல்; to chatter with cold, as teeth. *"அறவவ்வலிடுதல் வேர்த்தல் செய்யா திருக்கை" (திவ். பெரியதி. அவ. பக். 12).*

*[வவ்வல் + இடு-. இல்→இள்→இடுதல் = குத்துதல், பொருத்துதல்.]*

பல் வரிசைக்ளிரண்டும் அளவிற்கதிகமான குளிரினால் ஒன்றோடொன்று பொருந்தியடித்துக் கொள்ளுதல்.

**வவ்வலொட்டி** *vavva-loṭṭi,* பெ.(n.) வவ்வாலோட்டி எனும் நீண்ட செடி (யாழ்.அக.); cockspur.

*[வவ்வாலோட்டி →வவ்வலொட்டி.]*

உடம்பெங்கும் ஒட்டுந்தன்மையுள்ள முட்செடி வகை.



வவ்வலோட்டி *vavvalōṭṭi,* பெ.(n.) ஓர் முட்செடி; a thorny shrub.

வவ்வாதிலொட்டி *vavvādi-loṭṭi,* பெ.(n.) வவ்வலோட்டி பார்க்க; see *vavva-lōṭṭi.*

வவ்வால் *vavvāl,* பெ.(n.) 1. ஒருவகைப் பறவை; bat. *"மரம்பழுத்தால் வவ்வாலை வாவென்று கூவி" (நல்வழி. 29).* 2. கடல் மீன்வகை (யாழ்.அக.); pomfret, sea-fish.

க. பாவல்; ம. வாவல்; து. பாவலி.

*[வாவல் → வவ்வால்]*

வவ்வால்நத்தி *vavvāl-natti,* பெ.(n.) மண்டபக் கட்டடத்தின் முகட்டுவகை (இ.வ.); quadrangular turret of a maṇḍapam.

*[வவ்வால் + நத்து→நத்தி.]*

வவ்வால்மீன் *vavvāl-mīṉ,* பெ.(n.) வவ்வால், 2 (யாழ்.அக.) பார்க்க; see *vavvāl,* 2.

*[வவ்வால் + மீன் ²]*

வவ்வால்விளக்கு *vavvāl-viḷakku,* பெ.(n.) விளக்குக் கொத்து வகைகளு ளொன்று (யாழ்.அக.); a cluster of lamps, candelabrum.

*[வவ்வால் + விளக்கு]*

வவ்வாலெலும்பு *vavvāl-elumbu,* பெ.(n.) மண்டையோட்டிற்கு, அடிப்புறத்துள்ளதோர் எலும்பு (இங்.வை.6); sphenoid bone, irregularly-shaped bone in front of the occipital in the base of the skull of the higher vertebrates.

*[வவ்வால் + எலும்பு= மண்டையோட்டின் அடிப்பகுதியிலமைந்த வெண்மையான எலும்பு. எல் →எலு→எலுமு→எலும்பு. எல் = வெண்மை.]*

வவ்வாலொட்டி *vavvā-loṭṭi,* பெ.(n.) வவ்வாலோட்டி பார்க்க; see *vavvāl-ōṭṭi.*

வவ்வாலோட்டி *vavvāl-ōṭṭi,* பெ.(n.) நீண்ட செடிவகையு ளொன்று (மலை.); cockspur, a kind of long shrub.

*[வவ்வால் + ஓட்டி.]*

வவ்வாற்குறடு *vavvāṟ-kuṟaḍu,* பெ.(n.) மரக்கட்டையிலான காலணிக் குறடு வகையு ளொன்று (யாழ்.அக.); a kind of knob on wooden sandals.

*[வவ்வால் + குறடு ¹]*

வவ்வாற்பந்தம் *vavvāṟ-pandam,* பெ.(n.) 1. தீவட்டி வகையுளொன்று (யாழ்ப்.); rod supporting a row of pendent torches, carried in a procession. 2. வவ்வால் விளக்கு (யாழ்.அக.); a cluster of lamps, candelabrum.

*[வவ்வால் + பந்தம்]*

வவ்வானாற்றி *vavvāṉ-āṟṟi,* பெ.(n.) அடிப்படையற்றது, பிடிபாடில்லாதது (யாழ். அக.); that which is without basis or support.

வவ்வி¹ *vavvi,* பெ.(n.) சமயக்குறியிடாத வெறுமை (சூனிய) நெற்றியுடையவ–ன்–ள் (வின்.); one wearing no sectarian marks on the forehead.

*[வெளவி→வெவ்வி→வவ்வி]*

வவ்வி² *vavvi,* பெ.(n.) கவர்கை; snatch, take hold of. *"கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வி" (அகநா. 346 : 23).*

*[வவ்வு→வவ்வி.]*

வவ்வியம் *vavviyam,*பெ.(n.) மணிமுத்து வேங்கை; a species of East Indian kino, a tree.

வவ்வு[1]-தல் *vavvu-,*5 செ.குன்றாவி.(v.t.) 1. கவர்தல்; to snatch, take hold of, to take poseession of. *"அரசர் செறின் வவ்வார்" (நாலடி, 134),* 2. பற்றிக் கொள்ளுதல்; to carry off. *"வவ்வித் துழாயதன்மேற் சென்ற" (திவ்.பெரியதி.9, 4, 4).* 3. வாருதல் (யாழ். அக.); to sweep away.

*[அவ்→அவ்வு→கவ்வு→வவ்வு-.]*

வவ்வு[2] *vavvu,* பெ.(n.) 1. கவர்கை; snatching, taking hold of. *"வவ்வு வல்லார்" (பரிபா.6, 80).* 2. சுவருக்கும் கூரைக்கும் இடையிலுள்ள வெளி; the space between the wall and the sloping roof on it.

*[கவ்வு→வவ்வு-.]*

வவக்கானி *vava-k-kāṉi,* பெ.(n.) 1. யானை மலம்; extreta of elephant. 2. செம்படவர் கொடுக்குங் கோயில் மகமைப் பணம் (இ.வ.); net-money, a contribution paid by fishermen to a temple.

வவா *vavā,*பெ.(n.) தசைநீர்; lymph.

ஒருகா. உனீர்.

வவி *vavi,*பெ.(n.) வவ்வி (வின்.) பார்க்க; see *vavvi.*

வவுலம் *vavulam,*பெ.(n.) கருவேல் மரம்; Indian gum tree - arabica tree - *Acacia arabica.*

வழக்கச்சொல் *vaḻakka-c-col,* பெ.(n.) உலக வாழ்க்கைப் பயன்பாட்டில், வழங்குஞ் சொல் (யாழ்.அக.); word in popular or colloquial use.

மறுவ. வாழ்வியற்சொல்

*[வழங்கு→வழக்கம் + சொல்]*

பேச்சு வழக்கில், பொதுவாகப் பயன்படுத்துஞ் சொல்.

வழக்கடிப்பாடு *vaḻakkaḍippāḍu,* பெ.(n.) தொன்றுதொட்டு வரும் பயிற்சி; ancient usage. *"தொழிற்படக் கிளத்தலும் வழக்கடிப்பாட்டிற் குரித்து" (நன். 399, மயிலை).*

*[வழங்கு→வழக்கு + அடிப்படு →அடிப்பாடு]*

வழக்கநிலை *vaḻakka-nilai,*பெ.(n.) உறுதித் தன்மை; confirmation.

*[வழக்கம் + நிலை]*

வழக்கப்பசி *vaḻakka-p-paši,* பெ.(n.) பசியார்வம் சற்றே குறைவாயிருந்தாலும் நேரப்படி உண்ணுகை; to eat in time regularly even when there is no appetite.

*[வழக்கம் + பசி.]*

வழக்கப்படி *vaḻakka-p-paḍi,*பெ.(n.) முறைப்படி; as usual, according to custom.

*[வழக்கம் + படி.]*

வழக்கபழக்கம் *vaḻakka-paḻakkam,*வி. (v.) வாழ்வின் செயல்பாடு; habits of life. *'அது அவர்களின் வழக்கபழக்கம்'.*

*[வழக்கம் + பழக்கம்]*

வழக்கம்[1] *vaḻakkam,*பெ.(n.) 1. பழக்கம், நடைமுறை; usage, practise, habit. *அவர் காலை எழுந்தவுடன் கடவுளை வணங்குவது வழக்கம் (உ.வ.).* 2. மரபு; custom. *"முந்நீர் வழக்கம் மகடூவோ டில்லை"*

*(தொல்.பொருள்.34).* 3. பொதுவானது (வின்.); that which is ordinary or common. 4. ஈகை; giving, gift, chanty. *திருக்கை வழக்கம்.* 5. பயன்படுத்துகை; use, employment, as of a weapon or missile. 6. நாள்தொறும் செய்வது; routine work.

க. பழகெ (6).

*[வழங்கு → வழக்கம் (வே.க.3-152).]*

வழக்கம்² *vaḻakkam,* பெ.(n.) 1. கை, கால் முதலியவற்றின் இயக்கம் (யாழ்ப்.); functioning. *அவருக்குக் கால் ஒன்று வழக்கம் இல்லை (இலங்.).* 2. புழக்கம்; use. *எனக்கு இடதுகைதான் வழக்கம்.*

*[புழங்கு → ம..ழங்கு → வழக்கம்.]*

வழக்கமாய் *vaḻakkamāy,* கு.வி.எ.(adv.) 1. முன் வழக்கப்படி; usually, habitually, conventionally. 2. பெரும்பாலும்; generally, mostly.

*[வழக்கம் + ஆய்]*

வழக்கமான *vaḻakkamāṉa,* கு.வி.எ.(adv.) குறிப்பிட்ட முறையில், பலமுறை தொடர்ந்து செய்வதால் பழக்கமாகிப் போவது; that which is usual, customary. *வழக்கமான பாதையிலேயே இன்றும் போவோம் (இ.வ.).*

*[வழக்கம் + ஆன.]*

வழக்கமுறைமை *vaḻakka-muṟaimai,* பெ.(n.) மருந்தைப் பயன்கொள்ளும் முறை; prescription.

*[வழக்கம் + முறைமை.]*

வழக்கர் *vaḻakkar,* பெ.(n.) 1. நீள் வழி (அரு.நி.); long passage. 2. வழக்கம்; habit, convention.

*[வழங்கு → வழக்கு → வழக்கர் (வே.க.3-152).]*

வழக்கழிவு *vaḻakkaḻivu,* பெ.(n.) முறை (நீதி) தவறுகை; injustice. *"வழக்கை வழக்கழிவு சொல்லின்" (தமிழ்நா. 35).*

மறுவ. அழிவழக்கு, இழிவழக்கு, நேர்மைக் கேடு.

*[வழக்கு + அழிவு]*

வழங்கு (த.வி.)→ வழக்கு (தொ.பெ.) + அழிவு.

அழி → அழிவு (தொ.பெ.தொ.ஆகு.) = 'வு' வழக்கழிவு என்பது வழக்காறு.

வழக்கு பற்றியசச் சரவு என்னும் பொருண்மைத்து.

வழக்கறி-தல் *vaḻakkaṟi-,* 2 செ.கு.வி. (v.i.) 1. பழக்க வழக்கங்களை யறிதல்; to have a knowledge of manners and customs. 2. சட்டமறிதல்; to be versed with law or statute.

*[வழக்கு + அறி-. அள்→அறு→அறிதல்.]*

அள்ளுதல் = பொருந்தியறிதல், பொருந்துதல்.

(ஒ.நோ.) பள்→ பள்ளம்→பறு→பறி.

வழக்கறிதல் என்பது, சட்ட நுணுக்கங்களை, வழக்கறிஞர் தமது மதியினாற் பொருத்தியறிதல்.

வழக்கறிஞர் *vaḻakkaṟiñar,* பெ.(n.) முறை தவறாது வழக்குரைப்போன்; lawyer, barrister, advocate.

*[வழக்கு + அறிஞர்.]*

அறு→அறிஞர் = கூர்த்த மதிநுட்பமுடையோர். 'அர்' பலர்பாலீறு.

ஒருகா.அறி→அறிகின்றான்→அறிகுந்நான்.

அறிகுந்நான்→அறியுந்நான்→அறியுநன்

அறியுநன்→அறிநன்→அறிஞன்

அறிஞன்→அறிஞர்.

அனைத்துச் சட்ட நுணுக்கங்களையும், அறிந்து தாம் மேற்கொண்ட வழக்கிற் பொருத்தி, வழக்காடுபவரே வழக்கறிஞர் என்க.

முறைமன்றத்தில், ஒருவர் சார்பாக அல்லது ஒரு அமைப்பின் சார்பாக வழக்காடும் தகுதியும், அதற்கான அனுமதியும் பெற்றவர்.

**வழக்கறு[1]–தல்** *vaḻakkaṟu-,*2 செ.கு.வி. (v.i.) வழக்கத்தினின்று கிளவியம் மறைந்து போதல்; to become obsolute, as a word, to fall into desuetude.

*[வழக்கு + அறு–. அர்→ அறு– (த.வி.)]*

ஒருசொல், உலகவழக்கினின்று, அழிந் தொழிதல்.

**வழக்கறு[2]–த்தல்** *vaḻakkaṟu-,* 4 செ. குன்றாவி.(v.t.), செ.கு.வி.(v.i.) 1. போக்கைத் தடுத்தல்; to felter or hinder one's movement. *"வழி வழக்கறுக்கும்" (குறுந். 324).* 2. வழக்கைத் தீர்த்து விடுதல் (வின்.); to decide, as a case, to settle, as a dispute. *உன்னோடு வழக்காடிக் கொண்டிருந்தால், என்வேலை கெட்டுவிடும் (உ.வ.).*

*[வழக்கு + அறு–. அறு–தல் (த.வி.)→ அறு–த்தல் (பி.வி.)]*

**வழக்கன்** *vaḻakkaṉ,* பெ.(n.) 1. வழக்குத் தொடுத்தவன் (வின்.) (யாழ்.அக.); plaintiff. 2. செலவிடுதற்குரியது; that which is intended for free distribution. *"வழக்கனாயிருக்கிற சந்தனத்தைக் கொடுத்தான்" (ஈடு. 4, 3, 1).*

மறுவ. வழக்காளி.

*[வழக்கு → வழக்கன் (வே.க.3–152)]*

இலவயமாகப் பகிர்ந்தளிக்கும் பொருள்.

**வழக்காட்டு** *vaḻa-k-kāṭṭu,* பெ.(n.) 1. வன்மையாக வழக்காடுகை, சொற்போர் புரிகை; disputation, arguement, averment. 2. ஊடல்; sulks, flown. *"வழக்காடிய வழக்காட்டுப் போக" (பு.வெ.9, 51, உரை).*

மறுவ. சொல்லாட்டு.

*[வழக்காடு (த.வி.)→ வழக்காட்டு (பி.வி.) = போராட்டு (வே.க.3–153).]*

**வழக்காடி[1]** *vaḻa-k-kāḍi,* பெ.(n.) விளக்குக் கூடு; light house.

மறுவ. வழிகாட்டு விளக்கு.

*[விளங்கு→ வழங்கு→வழக்கு + ஆடி. ஆடு+இ – ஆடி.]*



வழக்காடி[2] *vaḻakkāḍi,* பெ.(n.) வழக்காளி (வின்.); plaintiff.

*[வழக்கு → வழக்காடி. 'இ' சொல்லாக்க ஈறு.]*

(ஒ.நோ.) மன்று → மன்றாடி.

வழக்காடு-தல் *vaḻakkāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சொற்போராடுதல்; to dispute, wrangle. 2. நயன்மை (நீதி)க்காகப் போராடுதல்; to litigate. *உச்ச (நீதி) முறை மன்றத்திலும் வழக்காடிப் புகழ்பெற்றவர் (இ.வ).* 3. ஊடுதல்; to sulk. *"தோளினை யுடையாள் வழக்காட்டிடத்துக் குழைந்தது" (பு.வெ. 12, பெண்பாற். 15, கொளு, உரை).*

*[வழக்கு + ஆடு-. ஆல் → ஆள் → ஆளு- → ஆடு-தல் = வினையாற்றுதல், செயற்படுதல்.]*

வழக்கிற் போடுதல் (வே.க.3-153).

வழக்காடுமன்றம் *vaḻakkāḍu-maṉṟam,* பெ.(n.) கொடுக்கப்பட்ட தலைப்புப்பொருளை ஆதரித்து, ஒருவரை எதிர்த்து மற்றொருவர், அற(நீதி) மன்றத்தில் வழக்காடுவது போன்று நடத்தும் நிகழ்ச்சி; a debating forum with scholars, as of argument in court. *சிறப்பு விழா நாட்களில், வழக்காடு மன்றம் என்ற நிகழ்ச்சி. தொலைக்காட்சியில் ஒளிபரப்பப்படுகிறது (இ.வ.).*

*[வழக்காடு + மன்றம்]*

தகுதி சான்ற ஒருவரை நடுவராகக் கொண்டு, குறிப்பிட்டதொரு பொருள் குறித்து, ஒன்றை எடுத்து மொழிந்தும், எதிர்மறுத்தும் (ஒட்டியும் வெட்டியும்) இருவர் அல்லது இருவேறணியர் சொற்போரிடுதல்.

வழக்காரம் *vaḻakkāram,* பெ.(n.) மறுப்புரை, சொற்போர்; dispute. *"மணவாளப் பிள்ளையுடன் வழக்காரம் நன்றாச்சே" (வள்ளி கதை.). அறமன்றத்தில் வழக்கின் வெற்றிக்கு, வழக்காரம் இன்றியமையாதது (உ.வ.).*

*[வழக்கு + ஆரம் – வழக்காரம்.]*

(ஒ.நோ.) ஒட்டாரம். 'ஆரம்' = ஓர் ஈறு.

வழக்காரை *vaḻa-k-kārai,* பெ.(n.) கக்கலைத் தடுக்கும் கொட்டைப் பருப்பு; grey emetic nut - *Randia Uligirosa.*

வழக்காளி *vaḻakkāḷi,* பெ.(n.) 1. வழக்குத் தொடுத்தவன்; plaintiff. 2. சொற்போர் புரிவோன் (யாழ்.அக.); disputant, wrangler, counsel. 3. சட்ட நுணுக்கத்தையும், வழக்கின் தன்மையும் அறிந்தவன் (இ.வ.); one who is well-versed in laws and case details (customs).

*[வழக்கு + ஆளி]*

ஒ.நோ. கூட்டாளி = பாட்டாளி, முதலாளி = தொழிலாளி, போராளி.

'ஆளி' = உடைமை குறித்த ஈறு

வழக்காறு[1] *vaḻa-k-kāṟu,* பெ.(n.) மக்களின் வாழ்க்கையில் காலம் காலமாக எல்லோராலும் பகிர்ந்து கொள்ளப்பட்டு, நடைமுறையில் வழங்கி வருபவை; custom and usage, lore (of the folk) from time to time. *சொற்களின் வழக்காறுகள் மாந்தர்தம் பண்பாட்டுச் சின்னங்களாகும் (உ.வ.).*

மறுவ. உலக வழக்கு, வழக்கியல்.

வழக்காறு பற்றி இளம்பூரணர், கல்லாடனார் போன்ற உரையாசிரியர் வரைந்துள்ளது வருமாறு:

இளம்பூரணார்:- வழக்காறு இரு வகைப்படும். இலக்கண வழக்கும், இலக்கணத்தோடு பொருந்தின மரூஉ வழக்கும் என.

(எ.டு.) "இல் முன் என்பதனை முன்றில் என்று தலைதடுமாறச் சொல்லுதல், இலக்கணத்தோடு பொருந்திய மரூஉ வழக்கு."

கல்லாடனார் :- இனிச் சோழணாடு என்பதனைச் சோணாடு என்பது மரூஉ வழக்கு (இளம்.தொல்.சொல்.17). இலக்கணத்தொடு பொருந்தின மரூஉ வழக்கும், மரூஉ வழக்குமென இருவகைப்படும் (கல்.தொல்.சொல்.17).

"வழக்காறென்பது வழங்கற்பாடே மேற்கொண்டு, ஒரு காரணமும் நோக்காது, வாய்பாடு பகுத்துப் பயிலச்சொல்லி வருவது". "வழக்காறு வழங்குதல் பற்றி வருவது" (கல்.தொல்.சொல்.7).

வழக்காறு[2] *vaḻakkāṟu,* பெ.(n.) 1. வழக்கு; usage. 2. பழக்கவொழுக்கம்; customs, manners, ancient practice. *“வாய்மையுடையார் வழக்கு” (திரிகடு. 37).*

மறுவ. நடைமொழி.

*[வழக்கு + ஆறு [1]]*

வழக்கிடு-தல் *vaḻakkiḍu-,*20 செ.கு.வி. (v.i.) 1. சொற்போர் புரிதல், சொல்லாடுதல்; to dispute, to argue. 2. வன்மையாய் வழக்குரைத்தல், பூசலிடுதல்; to wrangle, argue vehemently.

*[வழக்கு + இடு-.]*

வழக்கியல் *vaḻakkiyal,* பெ.(n.) 1. வழக்காறு; usage. *“எனமுத் தகுதியோ டாறாம் வழக்கியல்” (நன்.267).* 2. உலக வழக்கிலுள்ள கொச்சை நடை (வின்.); conventional colloquial style.

*[வழக்கு + இயல் [2]]*

வழக்கு[1]-தல் *vaḻakku-,*5 செ.குன்றாவி. (v.t.) போக்குதல்; to cause to go. *"வழக்குமாறு கொண்டு" (கலித்.101).*

*[வழங்கு (த.வி.)→வழக்கு-, (பி.வி.)]*

வழக்கு[2] *vaḻakku,*பெ.(n.) 1. மாநகர் முறை மன்றம் ஊரக ஐவராயம் (ஊர்ப்பஞ்சாயத்து) போன்றவற்றில் தீர்வுக்காக முன் வைக்கப்படுவது; suit, case. *கொலை வழக்கு (உ.வ.). உங்கள் வழக்கு நாளை உசாவலுக்கு வருகிறது (விசாரணைக்கு வருகை) (இ.வ.). பொய்வழக்குப் போடுவது தற்காலத்தில் வாடிக்கையாகிவிட்டது (உ.வ.).* 2. இயங்குகை; moving, passing to and from. *“வழக்கொழியா வாயில்” (பு.வெ.10, முல்லைப். 4).* 3. உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்ற இருவகை வழக்குகள்; usage, of two kinds, viz., ulaga-vaḻakku, ceyyuḷ-vaḻakku. *“வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே” (தொல்.பொருள்.647).* 4. இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என்ற இருவகை வழக்குகள் (நன். 266, மயிலை.); usage in respect of words in lit. and in speech, of two classes, viz., iyalbu-vaḻakku, tagudi-vaḻakku. *“இலக்கண முடைய திலக்கணப் போலி மரூஉ வென்றாகும் மூவகை யியல்பும் இடக்கரடக்கல் மங்கலம் குழூஉக்குறி எனுமுத் தகுதியோ டாறாம் வழக்கியல்”(நன்.207).* 5. பழக்கவொழுக்கம்;

customs, manners, ancinet practise. *"வாய்மையுடையார் வழக்கு" (திரிகடு. 37).* **6.** நெறி முறை, வழி; way, method. *"அன்புற் றமர்ந்த வழக்கென்ப" (குறள், 75).* **7.** நயன்மை (நீதி), முறைமை; justice. *"வழக்கன்று கண்டாய்" (திவ். இயற். 2, 19).* **8.** அற மன்றத்தில் தொடுக்கப்பட்ட முறையான வழக்கு (தற்கா.); litigation. *கொலை வழக்கு (உ.வ.). உங்கள் வழக்கு நாளை (விசாரணைக்கு) உசாவுதலுக்கு வருகிறது (இ.வ.). 'வழக்குத்தீர்ப்பதில் மரியாதைராமன்தான்' (பழ.).* **9.** முறை மன்ற வழக்கு; appeal. **10.** கருத்து வேறுபாடு, சொற்போர் புரிகை; controversy dispute. **11.** வண்மை; bounty, liberality. *"உடையான் வழக்கினிது" (இனிய. நாற். 3).*

*[வழங்கு → வழக்கு]*

வழக்கு எனப்படுவது உலகவழக்காகிய மக்கள் வழக்கிலும், கற்றுத் துறைபோகிய பாவலர் இயற்றும் இலக்கிய வழக்கிலும், தொன்றுதொட்டுப் பயின்று வருவது. இது பற்றித் தொல்காப்பியர், "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல்சான்ற புலனெறி வழக்கம் கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும் உரியதாகும் என்மனார் புலவர்" (தொல். 999) என்று குறிப்பிட்டுள்ளது ஓர்ந்துணரத்தக்கது. அகரமுதலியில் வழக்கு என்னும் சொற்கு, செ.அக.குறிக்கப்பட்டுள்ள 7-ஆம் பொருள் (litigation) முறை (நீதி) மன்றத்தில் செய்யும் வியாச்சியம்" என்றுள்ளது. இஃது எங்ஙனம் இக்காலத்தது (mod) என்பது விளங்கவில்லை (வே.க. 3. பக்.152).

ஆனால் ஒல்காப் புகழ் தொல்காப்பியர், தமது நூலுள், தொன்முது வழக்குகளையும், கல்லாதார் நாவில் பயிலும், உலகியல் வழக்குகளையும் கற்றறிந்தார் ஏத்தும் புலனெறி வழக்குகளையும், தமிழர்தம் வாழ்வியலுள் இணைத்துக் கூறியுள்ளார். கிறித்துவிற்கு முன்னரே, அனைத்து வழக்குகளையும், வாழ்வியலுடன் இணைத்துக் கூறியுள்ள நுண்மாண் நுழைபுலம் இன்றளவும் பொருட் பொருத்தப்பாடாயுள்ளது உய்த்துணரத் தக்கவொன்றாகும்.

சொற்கள் வழக்கு மிகுதி பற்றிப் பொருளறியப்படுவதும், வழக்கின்மை பற்றிப் பொருளறியப்படாமையுமுண்டு. வழக்கு காலந்தோறும் மாறிக்கொண்டேயிருக்கும். தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய பூசை என்பது, இக் காலத்துப் பூனை என வழங்குகின்றது.

வழக்கு என்னுஞ் சொல்குறித்து உரையாசிரியர்களின் கருத்து வருமாறு :-

சேனாவரையர் செப்புவது :- வழக்கு என்பது காரணமின்றி வழங்கற்பாடே பற்றி வருவது (சேனா.தொல்.சொல்.17).

பரிமேலழகர் பகர்வது :- ஒரு பொருளைத் தனித்தனியே எனது, எனதென்றிருப்பார், அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு, அப் பொருள் மேல் செல்வது. அது கடன் கோடல் முதல் பதினெட்டு பதத்தது ஆம் (பரிமே.திருக்.உரைப்பா.).

தெய்வச்சிலையார் மொழிந்தது :- ஒப்புமையின்றி உலகத்தார் பயில வழங்கப்படுவது (தெய்.தொல்.சொல்.17).

சுப்பிரமணிய தீட்சதர் சொன்னது :- வழக்காவது உலக வழக்கு செய்யுள் வழக்கென இருவகைப்படும். அவற்றை வடநூலார் லௌகிகப் பிரகரியை, வைதிகப் பிரகரியை என்பர் (சுப்பி. பிரயோ.18).

**வழக்கு**[3] *vaḷakku,* பெ.(n.) **1.** மொழி வழங்கிவரும் முறை; use of language, variety of style. பேச்சுவழக்கு (உ.வ.). எழுத்து வழக்கு (இக்.வ.), வட்டார வழக்கு (இ.வ.). **2.** மக்களால் பின்பற்றப்படுவதாகவும்

பயன்படுத்தப்படுவதாகவும் இருப்பது, புழக்கம்; that which is current in usage. *நீங்கள் குறிப்பிடும் பல சொற்கள் இப்போது வழக்கில் இல்லை (உ.வ.). வழக்கில் உள்ள நடைமுறை இதுதான் (இ.வ.).*

*[வழங்கு → வழக்கு]*

**வழக்கு**[4] *vaḻakku,* பெ.(n.) கணக்கு என்பதனோடு இணைத்து வரும் சொல்; a word which occurs in combination kaṇakku (கணக்கு).

**வழக்குக்கேட்டல்** *vaḻakku-k-kēṭṭal,* பெ.(n.) வழக்குக்கேள்–தல் பார்க்க; see *vaḻakku-k-kēḷ-,*

*[வழக்கு + கேட்டல்]*

**வழக்குக்கேள்–தல்** *vaḻakku-k-kēḷ-,* 11 செ.குன்றாவி.(v.t.) உண்மை(நீதி)யறிதற் பொருட்டு வழக்கினை ஆய்வு செய்தல்; to hear or try a case to render justice.

*[வழக்கு + கேள்–.]*

**வழக்குச்செய்–தல்** *vaḻakku-c-cey-,* 1 செ.கு.வி. (v.i.) வழக்காடு–தல் 1, 2 (யாழ்.அக.) பார்க்க; see *vaḻakkāḍu-.*

*[வழக்கு + செய்–.]*

**வழக்குச்சொல்** *vaḻakku-c-col,* பெ.(n.) வழக்கச்சொல் பார்க்க; see *vaḻakka-c-col.*

*[வழக்கு + சொல்[3]]*

**வழக்குத்தீர்–த்தல்** *vaḻakku-t-tīr-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. வழக்கினை ஆய்ந்து (நீதியினை) மெய்ம்மையை(நீதியினை) முடிவு செய்தல்; to decide, settle, as a law-suit or after or trial dispute. *"வழக்குத் தீர்ப்பில் மரியாதைராமன் தான்" (பழ.).* 2. நடு நிலையிலிருந்து சந்து செய்தல் (இ.வ.); to arbitrate.

மறுவ. வழக்கறுத்தல், முறைசெய்தல்.

*[வழக்கு + தீர்–.]*

**வழக்குத்தொடர்–தல்** *vaḻakku-t-toḍar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. அற (நீதி) மன்றத்திற்கு வழக்கினை எடுத்துச் செல்லுதல்; to avail court of law, to file a law suit in court. 2. சொற்போரிடுதல்; to carry on a dispute, to aver or argue.

*[வழக்கு + தொடர்–.]*

**வழக்குத்தொடு–த்தல்** *vaḻakku-t-toḍu-,* 4 செ.கு.வி. (v.i.) வழக்குத்தொடர், 1 பார்க்க; see *vaḻakku-t-toḍar,*

*[வழக்கு + தொடு–,]*

**வழக்குத்தோல்–தல்** *vaḻakku-t-tōl-,* 13 செ.கு.வி.(v.i.) 1. வழக்கில் தோல்வியுறுதல்; to lose a suit or ease. 2. எதிர் வழக்குரைத்தலில் தோல்வியுறுதல்; lapse or deceat in counter arguement.

*[வழக்கு + தோல்–.]*

**வழக்குத்தோற்றல்** *vaḻakku-t-tōṟṟal,* பெ.(n.) வழக்குத்தோல்–தல் பார்க்க; see *vaḻakku-t-tōl-,*

*[வழக்கு + தோற்றல்]*

**வழக்குப்பேசு–தல்** *vaḻakku-p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வழக்குரைக்கும் போது முறைமையை (நீதியை) நிலை நாட்டுதல் (யாழ்.அக.); to argue ethically in a case.

2. சட்ட நுணுக்கங்களை யெடுத்துக் கூறி வழக்காடுதல்; to dispute, wrangle, aver with legal facts.

*[வழக்கு + பேசு-.]*

**வழக்குப்பொருள்** *vaḻakku-p-poruḷ,* பெ.(n.) ஒரு சொற்குப் பேச்சுவழக்கிலுள்ள பொருள் (வின்.); popular meaning of a word.

மறுவ. நடைமொழிப்பொருள்.

*[வழக்கு + பொருள்]*

வழக்குப் பொருள் காலந்தோறும் மாறிக்கொண்டேயிருப்பதை 'நாற்றம்' என்னும் சொல்லா லறிக.

**வழக்குப்போடு-தல்** *vaḻakku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) வழக்குத்தொடர்-தல் பார்க்க; see *vaḻakku-t-toḍar-,*

*[வழக்கு + போடு-.]*

**வழக்குமுறி** *vaḻakku-muṟi-,* பெ.(n.) முறையீடு (புகார்); complaint.

**வழக்குமொழி** *vaḻakku-moḻi,* பெ.(n.) வழக்குச்சொல் பார்க்க; see *vaḻakku-c-col.*

மறுவ. உலகவழக்கு.

*[வழங்கு→வழக்கு + மொழி.]*

பொதுமக்கள் வழங்கும் சொற்கள், வழக்குச் சொற்கள் அல்லது வழக்குமொழிகள் எனப்படும்.

**வழக்குரைஞர்** *vaḻakkuraiñar,* பெ.(n.) வழக்கறிஞர் பார்க்க; see *vaḻa-k-kaṟiñar.*

*[வழக்கு + உரைஞர்.]*

**வழகம்** *vaḻagam,* பெ.(n.) பவளம் (சங்.அக.); coral.

*[வளகம் → வழகம்]*

**வழகு** *vaḻagu,* பெ.(n.) 1. வழவழப்பு, பளபளப்பு; smoothness, brightness. 2. மென்மை; softness, gloss. *"வழகிதழ்க் காந்தண்மேல் வண்டிருப்ப" (பதினொ. திருவீரந். 70).*

*[வழுவு = வழுக்குந்தன்மை. வழுவு → வழகு]*

**வழங்கல்** *vaḻaṅgal,* பெ.(n.) உண்டாக்குகை; to be productive, to supply.

*[வழங்கு → வழகல்.]*

**வழங்காத்தேர்** *vaḻaṅgā-t-tēr,* பெ.(n.) பேய்த்தேர்; mirage. *"களிறு...... வழங்காத்தேர் நீர்க்கவா அங்கானம்" (கலித்.7).*

*[வழங்காத்தேர் = வழக்கிலில்லாத் தேர். வழங்கு + ஆ (இ.நி.) + தேர்]*

**வழங்காதொழி-தல்** *vaḻaṅgā-doḻi-,* 2 செ.கு.வி.(v.i.) மக்கள் பேச்சு வழக்கிலில்லாது போதல்; to out of usage as of words.

*[பழங்கு→வழங்கு→வழங்காது + ஒழி-.]*

காலதர், சாளரம், பலகணி என முச்சொல் லிருக்கவும் சன்னல் என்னும் போர்த்துக்கீசியச் சொல்லை வேண்டாது வழங்கியதால் அம் முச்சொல்லே போல் எத்துணையெத்துணை அருந்தமிழ்ச் சொற்கள் வழங்காதொழிந்தன. அவை எண்ணத் தொலையா.

**வழங்காப்பொழுது** *vaḻaṅgā-p-poḻudu,* பெ.(n.) உச்சி வேளை; midday, noon. *"வழங்காப் பொழுது நீ கன்று மேய்ப் பாய்போல்" (கலித். 112).*

*[வழங்கு + ஆ (எ.ம.இ.நி.) + பொழுது]*

**வழங்காவழி** *vaḻaṅgā-vaḻi*, பெ.(n.) புதுவழி, மக்கள் செல்லா வழி; new track, unused passage.

மறுவ. காட்டுவழி

*[வழங்கு + ஆ (எ.ம.இ.நி.) + வழி]*

**வழங்கி** *vaḻaṅgi*, பெ.(n.) 1. தன் மனைவியைக் கூட்டிக் கொடுப்பவன் (வின்.); pimp, one who prostitutes one's wife. 2. விலைமாது; harlot, prostitute.

க., து. வள; ம. வழநமிய.

*[வழங்கு → வழங்கி]*

**வழங்கு¹–தல்** *vaḻaṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. இயங்குதல், நகர்தல்; to move, proceed, advance. *"முந்நீர் வழங்கு நாவாய்" (புறநா. 13).* 2. உலாவுதல்; to walk about. *"சிலம்பில் வழங்க லானாப் புலி" (கலித். 52).* 3. தொன்று தொட்டு நடைபெற்று வருதல்; to be in existence from the past. 4. புழக்கத்தி லிருத்தல்; to be in usage, as money, words, etc. 5. அசைந்தாடுதல்; to swing one's body backwards and forwards, as an elephant. *"மழகளிறு கந்து சேர்பு...... வழங்க" (புறநா. 22).* 6. கூத்தாடுதல்; to dance. *"பேய் மகள் வழங்கும் பெரும்பா ழாகும்" (பதிற்றுப். 22, 37).* 7. நிலைபெறுதல்; to last, to be static, to endure, to stand established. *"வானின் றுலகம் வழங்கி வருதலான்" (குறள், 11).* 8. பயிற்சி பெறுதல் (வின்.); to be accustomed, practised, to under go training. 9. கொண்டாடப் படுதல்; to be esteemed, honoured, respected, celebrated. *"வழங்கு தாரவன்" (சீவக. 2504).* 10. பொருத்தமாதல், ஏற்றதாதல், தகுதியுடையதாதல்; to be fit, suitable. *"வாய்க்கு வழங்காத கறி" (வின்.).*

க. பழகு

*[பழங்கு → வழங்கு-.]*

**வழங்கு²–தல்** *vaḻaṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) மொழி, கதை முதலானவை மக்களது பயன்பாட்டில் அல்லது புழக்கத்திலிருத்தல்; to be current. *நல்லதங்காள் கதை இன்றும் மக்களிடையே வழங்குகிறது. அழகர்வரணிப்பு மதுரை மாவட்டத்தில் வழங்குகிறது (இ.வ.).* 2. குறிப்பிடுதல்; to call. *நாவலந்தேயத்தை (இந்தியாவை) பாரதம் என்றும் வழங்குகிறோம் (இ.வ.).*

**வழங்கு³–தல்** *vaḻaṅgu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. பயன்படுத்துதல், கையாளுதல்; to use, practise. *தமிழ்ப்புலவர் தனித்தமிழ்ச் சொற்களையே, வழங்குதல் வேண்டும் (உ.வ.).* 2. கொடுத்தல், அளித்தல், வழங்குதல், பகிர்தல்; to give, supply, distribute. *"வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி" (பெரும்பாண்.26). இந்தப் பகுதியில் அன்றாடம் குடிநீர் வழங்கப்படுகிறது. குற்றவாளிக்கு உரிய தண்டனை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன் (இ.வ.).* 3. அனுப்புதல், உரிய காலத்தே, பொருத்தமானதைப் பயன்படுத்துதல்; to cause to move, to send, to discharge. *"சாபநோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்" (புறநா. 14).* 4. சொல்லுதல், முணுமுணுத்தல்; to tell, speak, utter, to murmur or whisper. *"யானோ தேறேனவர் பொய் வழங்கலரே" (குறுந். 21).*

க. பழகு (g.)

*[புழங்கு→பழங்கு → வழங்கு-.]*

**வழங்கு⁴-தல்** *vaḷaṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) நடமாடுதல் (இ.வ.); to frequent.

**வழங்கு⁵-தல்** *vaḷaṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. நிகழ்ச்சி, படைப்பு முதலியவற்றை புதியதாக உருவாக்கி முன்வைத்தல்; to present entertainments. 2. தொலைக் காட்சி, வானொலி முதலியவற்றில் ஒரு நிறுவனமோ, அல்லது நன்றறியவரப் பெற்றவரோ, நிகழ்ச்சியொன்றைத் தன் செலவில் நடத்த முன்வருதல்; to sponsor a programme on T.V., radio etc. *இந்த நிகழ்ச்சியை உங்களுக்கு வழங்கியவர்கள் பகட்டு (ஆடம்பர)ப் பொருட்கள் தயாரிப்பவர்கள்.* 3. கால், கை முதலியவை இயங்குதல் (இலங்.); to function of limbs. *கால், கை வழங்காமல் போயிற்று (இலங்கை வழக்கு).*

*[புழங்கு→பழங்கு → வழங்கு-.]*

**வழங்குநர்** *vaḷaṅgunar*, பெ.(n.) கொடுக்குநர், தருபவர்; distributor, supplier, donor. *"மான்ற மாலை வழங்குநர்ச் செறீஇய" (நற்-29.4).*

*[வழங்கு → வழங்குநர்.]*

கொடையளிப்பவர், ஒன்றை அனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் பான்மையர்.

**வழட்டல்** *vaḷaṭṭal*, பெ.(n.) தோல் நழுவச் செய்கை; scratching the skin from the body.

*[வழுட்டல் → வழட்டல்.]*

**வழட்டு-தல்** *vaḷaṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) வழற்றுதல் (வின்.); to cause the skin to peel off.

மறுவ. வழற்றுதல்

*[வழல்→வழற்று→வழட்டு-.]*

**வழண்டு-தல்** *vaḷaṇḍu-*, 5 செ.கு.வி.(v.i.) கழலுதல், தோல் உரிதல் (இ.வ.); to be abraded, to peel off.

*[வழட்டு→வழண்டு-.]*

**வழப்பம்** *vaḷappam*, பெ.(n.) 1. பழக்கம், வழக்கம்; usage, practice, habit, custom. 2. வழக்கம் (யாழ்.அக.) பார்க்க; see *vaḷakkam*.

**வழமை** *vaḷamai*, பெ.(n.) 1. வழக்கம்; habit, habitual act. 2. இயல்பு நிலை; normalcy, actuality. *"நகரம் வழமைக்குத் திரும்பி விட்டது".*

*[பழமை→வழமை.]*

**வழல்(லு)-தல்** *vaḷal(lu)-*, 13 செ.கு.வி. (v.i.) தோல் உரிதல், கழலுதல்; to be abraded, to peel off.

*[வழி→வழல்→வழல்(லு)-.]*

**வழலகரம்** *vaḷa-lagaram*, பெ.(n.) நாய் வேளை, நாய்க் கடுகு; a plant-cleome niscosa.

**வழலம்** *vaḷalam*, பெ.(n.) நாள்; day.

**வழலிக்கை** *vaḷalikkai*, பெ.(n.) இளைப்பு (வின்.), களைப்பு; weariness, fatigue, tiredness.

தெ. படலிக; க. பளகெ.

*[வழல்→வழலி→வழலிக்கை.]*

**வழலை** *vaḷalai*, பெ.(n.) 1. பாம்பு வகையு ளொன்று (சீவரட். 344); ground snake. *"வேனில் ஓதிப் பாடுநடை வழலை" (நற்.92:2).* 2. ஒருவகை முப்பு (மூ.அ.); a kind of medicinal salt. 3. சவர்க்காரம் (பதார்த்த. 1106); soap. 4. புண்ணினின்று வடியும் ஊனீர்; exudation from a sore. *"புண்*

*வழலை வடியும் பெரிய தலை" (புறநா.22, உரை).* **5.** கோழை (சது.); phlegm. **6.** பூநீர்; salt.

*[வழு→(வழல்)→வழலை.]*

வழுவுதல் = நழுவுதல். வழவழப்பாதல். வழலைப் பாம்பு, சவர்க்காரம், கோழை போன்றவை கைக்கு அடங்காது, வழுவிச்செல்லுந் தன்மையாதலால், வழலை என்றாயிற்று.

**வழலைக்கடி** *vaḻalai-k-kaḍi,* பெ.(n.) வழலைப் பாம்பின் நச்சுக் கடி; poisonous bite of the vaḻalai or ground snake.

*[வழலை + கடி. கடு→கடி.]*

த. கடி > **Skt.** khad.

கடி என்னும் தமிழ்ச்சொல்லே, வடமொழிச் சொல்லான "khad"-யின் மூலமாகும். நஞ்சுத் தன்மை செறிந்த வழலைப் பாம்பின் நச்சுக்கடி.

**வழலைக்கொக்கு** *vaḻalai-k-kokku,* பெ.(n.) கருங்கொக்கு; black stork.

*[வழலை + கொக்கு]*



**வழலைச்சத்து** *vaḻalai-c-cattu,* பெ.(n.) பல கல்லு சத்து; strength of several stones.

*[வழலை + சத்து]*

**வழலைச்சுண்ணம்** *vaḻalai-c-cuṇṇam,* பெ.(n.) முப்பூச்சுண்ணம், சரக்கை எல்லாம் சலவையாக்கி அல்லது நீற்றிப் புகையையடக்கி பழுக்காத சரக்குகளையெல்லாம் பழுக்க வைக்கும்; calcified powder of three salts, universal salt, this aids to calcify various other drugs.

*[வழலை + சுண்ணம். சுள்→சுண்→சுண்ணம்.]*

கடைச்சரக்குகளை நீற்றித் தூய்மையாக்கும் முப்பூத்தூள். நாட்பட்ட எல்லா நோய்களையும் நீக்கும்.

**வழலைச்சுத்தி** *vaḻalai-c-cutti,* பெ.(n.) தொண்டையிலுள்ள கோழையை நீக்கல்; to remove the mucous or phlegm from the throat.

*[வழலை + சுத்தி]*

**வழலைச்செய்நீர்** *vaḻalai-c-ceynīr,* பெ.(n.) நளினம், உடம்பு நடுக்கம், தடுக்க உட்கொள்ளும் மருந்து, நச்சுயிரிகளின் வாயிலிருந்து வெளிப்படும் நஞ்சுவிலிருந்து உருவாக்கப்படும் செய்நீர் (திராவகம்); a liquid taken in during the practice of yoga to prevent tremor and other diseases, an acid obtained from the fluid emitted by poisonous creatures. When dropped on the skin vesicles are formed.

*[வழலை + செய்நீர்]*

**வழலைத்திறவுகோல்** *vaḻalai-t-tiṟavukōl,* பெ.(n.) வெடியுப்புச் சுண்ணம்; calcified powder of potassium nitrate.

*[வழலை + திறவுகோல்]*

**வழலைதள்ளல்** *vaḻalai-taḷḷal,* தொ.பெ. (vbl.n.) கோழை வாயினின்று வெளி வருதல்; discharge of phlegm from mouth.

*[வழலை + தள்ளல்]*

வழலைதொட்டாடல் *vaḻalai-toṭṭāḍal,* தொ.பெ.(vbl.n.) முப்பூவை முதன்மையாக வைத்துக் கொண்டு, மருந்துகளைக் கையாளுதல்; preparing medicine having universal salt on hand.

*[வழலை + தொட்டாடல்]*

வழலைநீர் *vaḻalai-nīr,* பெ.(n.) 1. தலைப் பிண்டச் செயநீர்; a liquid extracted from the head of the first foetus of a woman. 2. சவுக்காரநீர்; pungent liquid extracted from *vaḻalai.* 3. பனிக்குடத்து நீர்; liquor amni.

*[வழலை + நீர்]*

வழலைநோய் *vaḻalai-nōy,* பெ.(n.) கோழை; phylegmatic disease.

*[வழலை + நோய்]*

வழலைப்பச்சை *vaḻalai-p-paccai,* பெ.(n.) வழுக்குப்பாசி; lichen or emerald.

*[வழலை + பச்சை]*

வழலைப்பாம்பு *vaḻalai-p-pāmbu,* பெ.(n.) ஓர் வகைப் பாம்பு; a kind of ground snake.

*[வழலை + பாம்பு]*

வழலைமார்க்கம் *vaḻalai-mārkkam,* பெ.(n.) முப்பு வடிக்கும் முறை; the process of making and using the universal three salt.

*[வழலை + மார்க்கம்]*

**Skt.** mārga > த. மார்க்கம்.

வழலைமுப்பு *vaḻalai-muppu,* பெ.(n.) வழலை பார்க்க; see *vaḻalai.*

*[வழலை + முப்பு]*

வழலையாதி *vaḻalai-yādi,* பெ.(n.) முதிர்கரு; foetus.

வழலையுப்பு[1] *vaḻalai-y-uppu,* பெ.(n.) 1. சவுக்கார உப்பு; a salt extracted from dhoby's earth-fuller's earth. 2. மூப்பு; universal salt.

*[வழலை + உப்பு]*

வழலையுப்பு[2] *vaḻalai-y-uppu,* பெ.(n.) வழலை, 2 (யாழ்.அக.) பார்க்க; see *vaḻalai, 2.*

*[வழலை + உப்பு]*

வழலையுப்புசெயநீர் *vaḻalai-y-uppu-šeyanīr,* பெ.(n.) வாலையுப்பு செயநீர், மதிசெயநீர்; a pungent liquid preparation from salts (சா.அக.).

வழலைரசம் *vaḻalai-rašam,* பெ.(n.) இதளியம் கலந்த மருந்துச்சாறு; a medicinal preparation of mercury.

*[வழலை + ரசம்]*

**Skt.** rasa > த. இரசம்.

வழலைவங்கம் *vaḻalai-vaṅgam,* பெ.(n.) வங்கக்கட்டு (கொங்கணவர்–வாத காவி யத்தில் சொல்லிய முறைப்படி செய்யப் படுவது); consolidation of lead as told in koṅgaṇavar vātha kaviyam.

*[வழலை + வங்கம்]*

**வழவழ–த்தல்** *vaḻavaḻa-*,4 செ.கு.வி. (v.i.) 1. வழுக்குந் தன்மையதாதல்; to be slippery, as mire, a polished surface. *வழவழத்த உறவைக் காட்டிலும் வைரம் பாய்ந்த பகை நன்று (பழ.).* 2. உறுதியற்றிருத்தல்; to be slack, loose or unsteady. 3. மழமழத்தல்; to be smooth. 4. தெளிவின்றிப் பேசுதல்; to babble, to wishy-washy in talk, to speak without clarity.

*[வழ + வழ–.]*

**வழவழப்பு** *vaḻavaḻappu,* பெ.(n.) 1. வழுக்குந் தன்மை (வின்.); slipperiness. 2. மழமழப்பு; smoothness. 3.உறுதியின்மை; looseness, unsteadiness, negligence.

*[வழவழ → வழவழப்பு]*

**வழவழவெனல்** *vaḻa-vaḻa-v-eṉal,* பெ.(n.) 1. வழுக்குதற் குறிப்பு; expr. signifying slipperiness. 2. தெளிவின்றிப் பேசுதற் குறிப்பு; wishy-washy talk, speaking unclearly, infirmity in talking.

*[வழவழ + எனல்]*

**வழற்சிங்கி** *vaḻaṟ-siṅgi,* பெ.(n.) ஆறாத சீழ்ப் புண்ணோய்; a kind of ulcer disease.

**வழற்று–தல்** *vaḻaṟṟu-*,5 செ.குன்றாவி. (v.t.) தோல் வழலச் செய்தல், கழலச் செய்தல்; to cause the skin to peel off.

*[வழல் → வழற்று (பி.வி.)]*

ஒ.நோ. கழல்→ கழற்று.

**வழாஅல்** *vaḻāal,* பெ.(n.) 1. தவறுகை; an act of turbling, failure. 2. வழுக்குகை; slipping. *"வழூஉ மருங்குடைய வழாஅ லோம்பி" (மலைபடு. 215).*

*[வழு→வழால்→வழாஅல் (மு.தா.பக்.112).]*

**வழாநிலை** *vaḻā-nilai,* பெ.(n.) சொற்கள் அல்லது தொடர்கள் இலக்கண வரம்பினின்றும் விலகாது அமைகை (நன். 374); grammatical correctness, as of a word or sentence, dist. fr. vaḻūu-nilai.

*[வழுவு + ஆ (எ.ம.இ.நி.) + நிலை]*

சொற்கள் பொருட்டொடர்புபட்டுத் தொடர்ந்து நிற்கும்பொழுது, முடிக்கப்படுஞ் சொற்களோடு முடிக்குஞ் சொற்கள் திணை, பால், எண், இடம், காலம் முதலியவற்றில் ஒத்து, இலக்கணப்பிழை யில்லாதிருப்பின் வழாநிலையாம்.

**வழாறு** *vaḻāṟu,* பெ.(n.) நீர் நிறைந்த ஆறு அல்லது குளம் (சூடா.); surplusing water river or tank.

*[முழு–மை → வழு–மை + ஆறு¹]*

**வழி¹–தல்** *vaḻi-*, 2 செ.கு.வி.(v.i.) 1. நிரம்பி வடிதல் (இ.வ.); to overflow, to surplus. *"வழிந்த கார்விடம்" (கம்பரா. சூர்ப்பண. 72).* 2. வடிதல்; to flow, drain.

ம. வழியுக (vaḻiyuka, vaḻikka.)

*[வடி → வழி–.]*

**வழி²–தல்** *vaḻi-*,2 செ.கு.வி.(v.i.) தோல் வழலுதல் (நெல்லை.); to be abraded.

*[வழல் → வழி–]*

**வழி³–த்தல்** *vaḻi-*,4 செ.குன்றாவி.(v.t.) வடித்தல்; to shed, let flow. *"வழிக்குங் கண்ணீரமுவத்து" (கம்பரா. கடல்காண். 5).*

*[வடி → வழி–.]*

**வழி⁴–த்தல்** *vaḻi-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. அரைத்த மாவு சந்தன முதலியவற்றைத் திரட்டியெடுத்தல்; to wipe, scrape, to

gather together, as a puply mass. *“மூக்கை வழித்து” (தனிப்பா. II, 383).* 2. பூசுதல்; to rub in with the hand, as an ointment, to smear, as sandal paste. *“மார்பின் விரை வழித்து” (சீவக. 699).* 3. ஆடையைத் திரைத்தல்; to roll up, as one's cloths. *ஆடையை வழித்துக் கொண்டு ஆற்றில் இறங்கினான்.*

க., ம. பளி.

*[மல்→மழி→வழி–.]*

வழி[5]–த்தல் *vaḻi-,* 4 செ.குன்றாவி.(v.t.) மழித்தல் (இ.வ.); to shave.

*[முல்→மல்→மழி→வழி–.]*

வழி[6] *vaḻi,*பெ.(n.) 1. வழி, பாதை, சாலை; way, road, path. *“வாழ்நாள் வழியடைக்குங் கல்” (குறள், 38).* 2. மூலகாரணம், அடிப்படை (யாழ்.அக.); origin, source. 3. செயற்படுத்தும் வழி; means for implemenation. *“அதற்கு ஒரு வழி சொல்லு” (உ.வ.).* 4. தீமையைக் குறைக்கும் மாற்று வழி; remedy. *“அந்தத் தப்புக்கு என்ன வழி செய்தான்” (உ.வ.).* 5. வழிபாடு; homage. *“வையங் காவலர் வழிமொழிந்தொழுக” (புறநா.8).* 6. ஒழுக்கம் (பிங்.); course of conduct or behaviour. 7. முறைமை (பிங்.), மாதிரி; manner, method, mode. 8. வழித்தோன்றல்; posterity, descendants. *“வாழ்க்கை வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்” (குறள், 44).* 9. இனம், கொடிவழி, குடும்பம், மரபு (பிங்.); family convention or heritage. 10. மகன் (சூடா.); son. 11. சார்ந்த உறவு, சுற்றம்; relation, dependant. *“மகனை முறைசெய்த மன்னன் வழியோர்” (மணிமே.22, 210), “செற்றோரை வழி தபுத்தனன்” (புறநா. 239).* 12. தமையன் (அரு.நி.); brother. 13. கொடிவழி, பரம்பரை; traditions, series, line, succession. *“வழித் தொண்டர்” (பெரியபு. திருநாவுக். 333).* 14.சிறப்புப்பாயிரம் பதினொன்றனுள் ஒன்றாகிய நூல் வந்த நெறி (நன்.46); history or origin of a literary work, one of 11 širappu-p-pāyiram. 15. அடிச்சுவடு, பதிவு; impression, foot-print, trace. *“யானைக்கால் வழியன்ன” (புறநா. 368).* 16. பின்னானது; that which is subsequent. *“வழிநாட் கிரங்கு மென்னெஞ்சம்” (புறநா. 176).* 17. வழக்கு (வின்.); usage. 18. பழைமை (வின்.); antiquity. 19. இடம்; place. *“தலைநாளன்ன புகலொடு வழி சிறந்து” (மலைபடு. 565).* 20. மலைப் பக்கம் (சீவக. அரும்.); mountainous region. 21. திரட்சி (பிங்.); roundness. 22. பேறு, கொடை, வரம்; boon, gift. *“எவ்வழி நினக்கு வேண்டும்” (உபதேசகா. சிவத்துரோ. 115).*

க. பளி (baḷi); ம. வழி (vari); து. பரி (baḷi), (baḷika); கோத. baypo; தெ. vaḷaṅku(வழங்கு).

*[மழி → வழி.]*

வழி[7] *vaḻi,*வி.எ.(adv.) பின்பு; afterwards. *“வழிபயக்கு மூதியமும்” (குறள், 461).*

வழி[8] *vaḻi,*இடை.(part.) 1. வினையெச்ச விகுதி (தொல்.சொல். 231); an adverbial particle meaning in case, under certain circumstances. 2. ஏழனுருபு (நன். 302); sign of the locative.

**வழிஅலகு** *vaḻi-alagu,* பெ.(n.) நீளம், நிறை, காலம் என்னும் அலகுகளில் இருந்து பெறப்படும் பிற அலகு; derival unit.

*[வழி + அலகு]*

சுற்றளவு, கொள்ளளவு போன்றவை. வழி அலகிற்குச் சான்றாகும்.

**வழிக்கண்ணார்** *vaḻi-k-kaṇṇār,* பெ.(n.) வழித்தோன்றல், வழிமரபினர்; descendants, progeny. *"இவரும் இவர் வழிக் கண்ணாரும்" (S.I.I.ii, 352).*

*[வழி + கண்ணார்]*

**வழிக்கரை** *vaḻi-k-karai,* பெ.(n.) வழிப் பக்கம் (யாழ்.அக.); wayside.

*[வழி + கரை]*

**வழிக்குக்கொண்டுவா** *vaḻikku-k-koṇḍu-vā,* 18 செ.கு.வி.(v.i.) உரிய முறையை அல்லது ஒழுங்கைப் பின்பற்றச் செய்தல்; to bring some one into line, to discipline some one. *"சரியாகப் படிக்காத மகனை எப்படி வழிக்குக் கொண்டுவருவது என்று சிந்தித்தார்" (இ.வ.).*

*[வழிக்கு + கொண்டு + வா-.]*

**வழிக்குவரு-தல்** *vaḻikku-varu-,* 18 செ.கு.வி. (v.i.) வழிக்குவா-தல் பார்க்க; see *vaḻikku-vā-.*

*[வழி + வரு-.]*

**வழிக்குவா-தல்** *vaḻikku-vā-,* 18 செ.கு.வி. (v.i.) 1. இணங்குதல்; to submit, yield, to surrender. *அவன் எப்படியும் நம் வழிக்கு வந்துதான் ஆக வேண்டும் (இ.வ.).* 2. நல்வழிப்படுதல்; to reform to revert to the right way.

*[வழி + வா-.]*

**வழிக்கொள்(ளு)-தல்** *vaḻi-k-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) 1. பின்பற்றிச் செல்லுதல்; to follow, go after. *"மஞ்சனை வைதுபின் வழிக்கொள்வா யென" (கம்பரா. உருக்காட்டுப். 17).* 2. பயணப்படுதல்; to start or travel on a journey. *"இசைவலான்..... இருள்வழிக் கொண்டான்" (திருவிளை. விறகு. 48).*

*[வழி + கொள்(ளு)-.]*

**வழிகட்டி** *vaḻi-kaṭṭi,* பெ.(n.) வழி மறிப்பவன் (இ.வ.); way-layer, foot-pad, a person who obstructs.

*[வழிகட்டு → வழிகட்டி]*

**வழிகட்டு-தல்** *vaḻi-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வழி மறித்தல் (யாழ்.அக.); to lie in wait, to obstruct. 2. ஏற்பாடு செய்தல்; to prepare, arrange. 3. வழிவகை கூறுதல்; to suggest suitable ways and means.

*[வழி + கட்டு-.]*

**வழிகாட்டி[1]** *vaḻi-kāṭṭi,* பெ.(n.) வாணிகஞ் செய்வார் பற்றியும், வாணிகத்தைப் பற்றியும் விளக்கும் நூல்; directory of traders and commerce or trade.

*[வழி + காட்டி]*

**வழிகாட்டி[2]** *vaḻi-kāṭṭi,* பெ.(n.) 1. செல்லுதற்குரிய வழியைக் காட்டுபவ-ன்-ள் (வின்.); guide, leader, one who shows the way. *வழிகாட்டிப் பறிப்பவன் திருடன் வரதன் ஏறுவது கழுலன் (பழ.)* 2. பிறர் பின்பற்றுதற்குரிய முன்மாதிரியாக இருப்பவ-ன்-ள்; one who sets an example, to emulate by others, exemplar.

*என்கலையுலக வாழ்க்கையில் வழிகாட்டி என்று சொல்லத் தக்கவர் இவர் (இக்.வ.). ஆய்வுநூல் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு, இந்த நூல் நல்ல வழிகாட்டி (இ.வ.).* 3. வழிகாட்டிமரம் (தற்கா.) பார்க்க; see *vaḻikāṭṭi-maram.*

*[வழிகாட்டு → வழிகாட்டி]*

வழிகாட்டிமரம் *vaḻi-kāṭṭi-maram,* பெ.(n.) வழி பிரியுமிடங்களில் பிரிந்து செல்லும் பாதையை அறிவிக்கும் மரம் (வின்.); guide-post, sign-post at cross roads, indicating direction.

மறுவ. கைகாட்டிமரம்

*[வழிகாட்டி + மரம்]*

சாலைகள் பிரியுமிடங்களில் அல்லது சேருமிடங்களில் அவ்வச்சாலை செல்லும் ஊர்ப்பெயர் அறிவிக்கும் (வழிகாட்டி) மரங்கள்.




வழிகாட்டு-தல் *vaḻi-kāṭṭu-,*5 செ.கு.வி. (v.i.) 1. செல்லும் நெறியை அறிவித்தல்; to show the way, to give guide line. *மாணவர்களுக்கு வழிகாட்ட வேண்டிய ஆசிரியர்கள் (உ.வ.).* 2. நன்னெறியுணர்த்துதல்; to direct one in the right path moral or religious, to teach ethics. 3. உரிய பாதையைக் காட்டுதல்; to suggest right ways and means. 4. உதவியாக இருத்தல்; to be of help. *ஏதேனும் ஒரு தொழிலைக் கற்றுக் கொள்ள இந்த நூல் வழிகாட்டும் (இ.வ.).*

*[வழி + காட்டு-.]*

வழிகாட்டுமரம் *vaḻi-kāṭṭu-maram,* பெ.(n.) வழிகாட்டிமரம் பார்க்க; see *vaḻikāṭṭi-maram.*

*[வழிகாட்டு + மரம்]*

வழிகெடு-தல் *vaḻi-keḍu-,*20 செ.கு.வி. (v.i.) அடிச்சுவடு தெரியாமல் அழிதல்; to erase impression of steps to leaving no trace behind. *"வந்த குற்றம் வழிகெட வொழுகலும்" (தொல். பொருள். 146).*

*[வழி + கெடு-.]*

வழிகோலு-தல் *vaḻi-kōlu-,*5 செ.கு.வி. (v.i.) 1. வழிவகுத்தல்; to pave the way, to find way out. 2. மூலமாக; to be instrumental. *இவை அழிவிற்கு வழிகோலும். தேர்தலில் தான் வெற்றி பெற வழிகோலிய தொண்டர்களுக்கு நன்றி தெரிவித்தார் (இக்.வ.).*

*[வழி + கோலு-.]*

வழிச்சந்தி *vaḻi-c-candi,* பெ.(n.) தெருக்கள் கூடுமிடம்; junction of roads.

*[வழி + அந்து→அந்தி→சந்தி.]*

வழிச்சந்தி என்னும் சொல், ஈங்கு குறைந்தது, மூன்று தெருக்கள் கூடுமிடத்தைக் குறித்தது எனலாம்.

சந்தி என்னும் சொல் சொற்புணர்ச்சி யென்னும் பொருண்மையில், எவ்வகைத் தமிழ் வழக்கிலும், இதுகாறும் பயிலாது போயினும், தெருப்புணர்ச்சி என்னும் பொருளில், சந்திக்கிழுத்தல், சந்தி சிரித்தல், சந்தியில் நிற்றல், சந்தி மறித்தல், சந்தியில் விடுதல் என்று உலக வழக்கில், மக்களிடையே இன்றும் வழக்கூன்றியுள்ளது. சந்தி என்னுஞ் சொல் தூய தென்சொல்லென்று மொழிஞாயிறு வடமொழி வரலாறு என்னும் நூலில் (வ.வ.68-69) நிறுவியுள்ளார்.

பலதெரு அல்லது, முத்தெரு கூடுமிடம் என்னும் பொருண்மையில், "சதுக்கமும் சந்தியும்" என்று திருமுருகாற்றுப்படையிலும், பலவழி கூடுமிடம் என்னும் பொருண்மையில் "சந்து நீவி" என்று மலைபடுகடாத்திலும், செய்யுள் வழக்காகப் பயின்று வந்துள்ளமை காண்க.

**வழிச்சாரி** *vaḻi-c-cāri,* பெ.(n.) 1. நடையுள்ள வழி; beaten road, foot path with trace. 2. சுங்கஞ் செலுத்தாது, பொருள்களைக் கடத்துவோரைப் பிடிப்பதற்கான கள்ளப்பாதை (வின்.); secret track of custom officers to apprehend the evaders of customs and hoarders.

மறுவ. சுருங்கைவழி

*[வழி + சார்→சாரி ]*

**வழிச்சாரியை** *vaḻi-c-cāriyai,* பெ.(n.) வரி; a kind of tax. *"நம் நாட்டில் வழிச்சாரியை கொள்ளும் துறைகளிலே, தலைச் சுமைக்கும் எருத்துப் பொதிக்கும் பேர் ஒன்றுக்கு இரண்டாக வந்த காசும்" (S.I.I.Vol.XVII.141).*

*[வழி + சாரியை. சார்→சாரியை.]*

விற்பனைப் பொருள்களை மாட்டின் மீதும், தலைச் சுமையாகவும் கொண்டு, சாலைவழியே வேற்றிடம் செல்லும் வணிகர்களிடம் ஆள் சுமைக்கு இவ்வளவு காசு என்று, அரசு பெறும் கட்டணம்.

**வழிச்செல்வோன்** *vaḻi-c-celvōṉ,* பெ.(n.) சுற்றுலாச் செல்வோன் (பயணி) (பிங்.); traveller, one who takes a journey. *வழிச் செல்வோன் வார்த்தை நீர்மேல் எழுத்தாகும் (இ.வ.).*

மறுவ. வழிநடையாளன்.

*[வழி + செல்-.]*

**வழிச்செலவு** *vaḻi-c-celavu,* பெ.(n.) 1. யாத்திரை (பிங்.), சுற்றுலா; jouney, tour. 2. சுற்றுலாச் செலவு; journey or travelling expenses. *"சுற்றுலாவில் வழிச்செலவு செய்வதற்குத் தந்தை மகனுக்கு நானூறு உருபா கொடுத்தான்" (இக்.வ.).*

*[வழி + செல்→செலவு]*

**வழிச்செவ்வை** *vaḻi-c-cevvai,* பெ.(n.) சாலை; road. *"போகிற வழிச் செவ்வைகளில்" (தெ.இ.கல்.தொ.5, 138).*

*[வழி + செவ்வை. செவ்வை = வழி முதலியவற்றின் செப்பம்.]*

**வழிச்சொல்லு-தல்** *vaḻi-c-collu-,* 8 செ. குன்றாவி.(v.t.) வகை செய்தல்; to make arrangements, as for payment of debts. *'கடனுக்கு வழி சொன்னாற் கைச்சாதமுண்பேன்' (கோவ. க. 52).*

*[வழி + சொல்லு-.]*

**வழிச்சோறு** *vaḻi-c-cōṟu,* பெ.(n.) 1. கட்டுச் சோறு; boiled rice prepared and bundled up for a journey, viaticum. 2. இறந்த

பன்னிரண்டாநாள் இறந்தவர் செல்வழிக்கு உதவியாகக் கொடுக்கப்படும் பாதேயம்; the viaticum, offered for a deceased person on the 12th day of his death.

*[வழி + சோறு [1]]*

வழிசீ-த்தல் *vaḻi-cī-*, 4 செ.கு.வி.(v.i.) செல்லும் வழியைச் செப்பனிடுதல்; to repair or clear the path or roadways. *"வழி சீத்து" (ஏலா. 44).*

*[வழி + சீ-.]*

வழிசெய்[1]-தல் *vaḻi-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) வகை செய்தல்; to provide a way of disposal, to find a way out. *அனைவருக்கும் வீடு கிடைக்க வழிசெய்ய வேண்டும் (இ.வ.).*

*[வழி + செய்-,]*

நிகழ வேண்டிய செயற்பாட்டிற்கு வகை செய்தல்.

வழிசெய்[2]-தல் *vaḻi-šey*,1 செ. குன்றாவி. (v.t.) வழி வகுத்தல்; to devise a method or guideline. *வெள்ள (நிவாரண) உதவி உரியோருக்குச் சென்று சேர அரசு வழி வகை செய்ய வேண்டும்.*

*[வழி + செய்-.]*

வழிஞ்சி *vaḻiñji*,பெ.(n.) இளமை (அக.நி.); youth, adolescence.

வழித்தடை *vaḻi-t-taḍai*,பெ.(n.) வழிநடையில் நிகழும் இடையூறு; hindrance or obstacle to a journey, as by an evil omen etc.

*[வழி + தடை. தள்→தடு→தடை.]*

வழிச்செலவின் கண்ணே, எதிர்கொள்ளும் இன்னல்.

வழித்திண்ணை *vaḻi-t-tiṉṉai*, பெ.(n.) வீடு கோபுரம் முதலியவற்றின் வெளித் திண்ணை (நாமதீப. 493); outer pial, as of a house.

*[வழி + திண்ணை]*

வழித்திருடன் *vaḻi-t-tiruḍaṉ*, பெ.(n.) வழிப்பறி செய்பவன்; high way robber.

மறுவ. ஆறலைக் கள்வன்.

*[வழி + திருடு→ திருடன்.]*

வழித்துணை *vaḻi-t-tuṇai*, பெ.(n.) 1. வழி நடையில் உடன் வருவோன்; fellow, traveller, a companion on a journey. 2. வழிக்குத் துணையாவோன்; guide, escort. *"வழித்துணையா மழபாடி வயிரத் தூணே" (தேவா. 322, 7).* 3. தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து, உதவிவரும் குடும்பத்துணை (யாழ்.அக.); a friend of the family who helps from generation to generation.

*[வழி + துணை[1]]*

வழித்துணைநாதர் *vaḻi-t-tuṇai-nādar*, பெ.(n.) விரிஞ்சி புரத்தில் கோயில் கொண்டிருக்கும் இறைவனின் பெயர்; a name of god is who have temple in viriñji puram.

*[வழித்துணை + **Skt.** nātha> த.நாதர்]*

குடகு நாட்டிலிருந்து தொண்டைநாட்டுக்கு மிளகு விற்க வந்த சிவநேசன் என்னும் வணிகனுக்கு வழித்துணையாக வந்து, வழிப்பறி செய்ய வந்த கள்ளர்களை விரட்டியடித்தமையால் "வழித் துணைநாதர்" என்னும் பெயர் பெற்றார்.

**வழித்துணைமருந்து** *vaḻi-t-tuṇai-marundu*, பெ.(n.) 1. வழிப்போக்காக நெடுந்தொலைவு செல்வோர் முதலுதவியின் பொருட்டுக் கொண்டு செல்லும் மருந்து; first aid box carried during journey. 2. வாழ்க்கைப் பாதையை இனிது வழி நடத்திச் செல்லும் இறைவன்; God.

*[வழித்துணை + மருந்து.]*

அற்றை நாளில் நெடுந்தொலைவு செல்வோர் வழித்துணை மருந்தாகச் சுக்கு, மிளகு, திப்பிலி போன்றவற்றை உடன்கொண்டு சென்றனர். தலைவலி போக்கும் மருந்தாகவும், மிகுசளி, வளிப்பிடிப்பு நீக்கும் மருந்தாகவும், சுக்கு, மிளகு, திப்பிலி, அதிமதுரம் போன்றவை அன்று பயன்பட்டது போன்று, ஆங்கில மருத்துவம் மிக்கு விளங்கும் இற்றை நாளிற், சுற்றுலா செல்வோர் முதலுதவிப் பெட்டியினை உடன் கொண்டு செல்கின்றனர்.

முதலுதவிப் பெட்டியில், தலைவலி, உடம்புவலி, வளித்தொல்லை (வாயுப்பிடிப்பு), குளிர்சுரம் போக்கும் குளிகைகளும், வளிப்பிடிப்பு, சுளுக்கு போக்கும் மருந்துகளும், நெய்மங்களும் (தயிலங்களும்) கொண்டு செல்லாத சுற்றுலாக் குழுமங்களே இல்லையெனலாம்.

அனைத்து மாந்தர்தம் வாழ்க்கைச் செலவினையும், எஞ்ஞான்றும் நலிவின்றி, நலத்துடனும், வளத்துடனும் நடத்திச் செல்பவன், எல்லாம்வல்ல இறைவனாகையால், திருஞான சம்பந்தப் பெருமான், திருவானைக்காப் பதிகத்தில் திருவருட் சிறப்பினை விளக்குமுகத்தான், "வானநாடனே வழித்துணை மருந்தே" என்று பாடியருளிய பாங்கும் ஈங்கு கருதத்தக்கதாகும்.

**வழித்தெய்வம்** *vaḻi-t-teyvam*, பெ.(n.) குல தெய்வம்; family deity, tutelary deity. *"எங்கள் வழித்தெய்வம் போல்வான்" (சூடா. பாயி. 6).*

*[வழி + தெய்வம். வழி = வழிவழி]*

**வழித்தொண்டு** *vaḻi-t-toṇḍu*, பெ.(n.) வழிவழியடிமை; hereditary slavery or subservience especially to a deity. *"வழித்தொண்டு செய்திடக் கச்சை கட்டிக்கொண்ட" (குற்றா. குற. 91, 1).*

*[வழி + தொண்டு]*

*மரபுவழித் தொடர்ந்து, தலைமுறைதோறும் தொண்டாற்றுகை. இறைவனுக்குத் தலைமுறை தோறும் தொடர்ந்து செய்யும் அடிமைத் தொண்டு.*

**வழித்தோன்றல்** *vaḻi-t-tōṉṟal*, பெ.(n.) கொடி வழியுதித்த பிள்ளை (பிங்.); male descendant. *இவரும் இவரது வழித் தோன்றல்களும் வடக்கிலிருந்து வந்து தெற்கில் குடியேறினர் (உ.வ.).*

மறுவ. பிறங்கடை.

*[வழி + தோன்றல்]*

**வழிதட்டு-தல்** *vaḻi-taṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) செல்வழி தெரியாது மயங்குதல்; to get puzzled or perplexed by losing one's way or tract.

*[வழி + தட்டு-. துள்→தள்→துட்டு→தட்டு]*

**வழிதவறு-தல்** *vaḻi-tavaṟu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒழுக்கம் தவறி நடத்தல்; go astray. *வழிதவறியவர்களுக்கு வாழ வழிகாட்டும் அமைப்பு.*

*[வழி + தவறு. தாவு→தவல்→தவறுதல் = பிழை செய்தல், நெறிதவறுதல்.]*

வழிதவறுதல் என்பது வாழ்க்கைப் பாதையில் நெறி பிழைத்தலாகும். பிறன்மனை விழைதல், பிறர்பொருள் கவர்தலும், வழி தவறுதலாகும்.

வழிதிகை-த்தல் *vaḻi-tigai-*,4 செ.கு.வி. (v.i.) 1. செல்வழி தெரியாது மயங்குதல்; to get puzzled by losing one's way. 2. செய்வகை தெரியாது கலங்குதல்; to be confused in mind not knowing what to do. *"வழிதிகைத் தலமர்கின்றேன்" (திவ். திருவாய். 3, 2, 9).*

*[வழி + திக்கு→திகை-.]*

வழிதுறை *vaḻi-tuṟai,* பெ.(n.) 1. வழியும் துறையும்; road and ford. 2. வழிமுறை methodalogy, way, expedient. *"வழிதுறை யீதென்றறியாய்" (அருட்பா.* vi, தான்பெற்ற. 6, பக்.707). *'இயலா தென்பதில்லவே யில்லை வழிதுறை தெரியா தென்பதே உண்மை'.* 3. பக்கத்துணை (வின்.); means to an end, auxiliary aid.

*[வழி + துறு→துறை]*

வழிந்தோடு-தல் *vaḻindōḍu-*,5 செ.கு.வி. (v.i.) பெய்த மழைநீர் நிலத்தின் மீது புரண்டோடுதல்; to overflow on the surface as storm or rain water.

*[வழி ² + ஓடு-. ]*

வழிநட-த்தல் *vaḻi-naḍa-*,3 செ.கு.வி. (v.i.) ஏவல் செய்தல்; to serve as a call boy, to carry-out orders. *"செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப" (*மதுரைக். *189).*

*[வழி + நெடு→நெட→நட.]*

வழிநடத்து-தல் *vaḻi-naḍattu-*,5 செ.கு.வி. (v.i.) 1. முன்னின்று நடத்துதல்; to lead. 2. தலைமை தாங்கி நடத்துதல்; to guide, in forefront. *விடுதலைப் போரில் நம்மை வழிநடத்திச் சென்றவர்கள் இன்று இல்லை. நம்மை வழிநடத்தும் பொறுப்பு தலைவருக்கே உரியது.*

*[வழி + நட→நடத்து-.]*

வழிநடை *vaḻi-naḍai,* பெ.(n.) 1. வழிச் செல்லுகை; journey, travel. *"வழிநடைச் சேறல் வலித்திசின் யானே" (அகநா. 303).* 2. நடைபாதை (இ.வ.); foot path.

*[வழி + நடை]*

வழிநடைக்களைப்பு *vaḻi-naḍai-k-kaḷaippu,* பெ.(n.) வழிநடையிளைப்பு பார்க்க; see *vaḻi-naḍai-y-iḷaippu.*

*[வழிநடை + களைப்பு.]*

நீணெடுந்தூரம் நடந்து செல்வதால், ஏற்படும் உடற்களைப்பு மற்றும் மனச்சோர்வு.

வழிநடைக்கிடும்பணம் *vaḻi-naḍai-k-kiḍum-paṇam,* பெ.(n.) வரி வகை; road cess or levy. *நாட்டின் ஓரிடத்தினின்று, மற்றொரு பகுதிக்குச் செல்வோர் செலுத்திய நெடுஞ்சாலைத் தீர்வை.*

*[வழிநடை + இடும்பணம்.]*

வழிநடைச்செலவு *vaḻi-naḍai-c-celavu,* பெ.(n.) 1. தரை வழிச்செலவு (பயணம் (வின்.)); journey. 2. சுற்றுலா (பயண)ச் செலவு (இ.வ.); expenses incured doing a journey, travel expenses.

*[வழிநடை + செலவு]*

வழிநடைச்சோர்வு *vaḻi-naḍai-c-cōrvu,* பெ.(n.) வழிநடையிளைப்பு பார்க்க; see *vaḻinaḍai-y-iḷaippu.*

*[வழிநடை + சோர்வு.]*

**வழிநடைப்பதம்** *vaḻi-naḍai-p-padam,* பெ.(n.) வழி நடக்கும்போது கண்ட காட்சியை வரணித்துப்பாடும் பாட்டு; song of a traveller, describing the scenery on the way.

*[வழிநடை + பதம்²]*

**வழிநடையிளைப்பு** *vaḻi-naḍai-y-iḷaippu,* பெ.(n.) வழி நடையால் ஏற்பட்ட சோர்வு; fatigue due to long journey by walk.

*[வழிநடை + இளைப்பு]*

வழிநடை = வழிச்செலவு. இளை→இளைப்பு = மெலிவு, சோர்வு.

நெடுந்தொலைவு நடப்பதனால் ஏற்படும் சோர்வு அல்லது களைப்பு.

**வழிநாள்** *vaḻi-nāḷ,* பெ.(n.) பின்னாள்; succeeding or next day. *"வழிநாட் கிரங்கு மென்னெஞ்சம்" (புறநா. 176).*

*[வழி + நாள்]*

**வழிநில்-தல் (வழிநிற்றல்)** *vaḻi-nil-,* 14 செ.கு.வி.(v.i.) ஏவல் செய்தல்; to act as a call boy, to carry-out or implement orders. *"மருவிப் பிரிய மாட்டேனான் வழிநின் றொழிந்தேன்" (தேவா. 301, 3).*

*[வழி + நில்-.]*

**வழிநிலை** *vaḻi-nilai,* பெ.(n.) 1. பின்னின்றேவல் செய்கை; sub-servience, subservient attitude. *"வழிநிலை பிழையாது" (தொல். பொருள். 114).* 2. பின்னிகழ்வது; that which immediately succeeds or follows, subsequent happening. *வழிநிலைக்காட்சி.* 3. அணி வகை (பிங்.); a figure of speech.

*[வழி + நிலை]*

**வழிநிலைக்காட்சி** *vaḻi-nilai-k-kāṭci,* பெ.(n.) இயற்கைப் புணர்ச்சியை யடுத்த இடந்தலைப் பாட்டில், தலைவன் தலைவியைக் காணுங்காட்சி (தொல்.பொருள்.16, உரை); subsequent meeting of lovers after their first meeting (Agap.).

*[வழிநிலை + காட்சி]*

காண் + சி – காட்சி. 'சி' பண்புப்பெயரீறு.

எழுவகைக் காட்சியுளொன்று. தலைவனும் தலைவியும் தம்முள் முதன் முதலாகக் காணுதலைக் கூறும் கைக்கிளைத் துறையென்று புறப்பொருள் வெண்பாமாலை புகலும் (பு.வெ.11, ஆண்பால்).

இருவரும் தம்முள் முதற்கண் கண்ணுறும் முதற்காட்சியே வழிநிலைக் காட்சி. என்று இறையனார் இளவியலுரை இயம்பும்.

"தலைமகளைத் தலைமகன் முதற்கண் கண்ணுற்று, இஃதொரு வியப்பென்றெனல்" என்றது பேராசிரியர் தம் விளக்கமாகும் (பேரா.திருக்.1;1).

**வழிநூல்** *vaḻi-nūl,* பெ.(n.) நூல் மூவகையுள் முதனூலின் முடிபைப் பெரும்பான்மை யொத்துச் சிறுபான்மை மாறுபடும் நூல் (தொல். பொருள். 650); secondary work, agreeing for the most part with its original or mudanūl and deviating from it wherever the author considers it proper or necessary, one of three kinds of nūl.

*[வழி + நூல்]*

அகத்தியம் தொல்காப்பியம் வழிநூலாதலின் அதிலுள்ள தென்சொற்களெல்லாம் தலைக்கழக முதனூலைச் சேர்ந்தவையாம்.

முதலில் தோன்றிய நூலில் சொல்லப்பட்டவற்றை ஏற்றுத் தேவையான மாற்றங்களைச் செய்து எழுதப்படும் நூல்.

வழிநூல் பற்றி இறையனார் களவியலுரை இயம்புவது :– முதல் நூலோடு ஒத்த மரபிற்றாய் ஆசிரிய மத விகற்பம் படக்கிளப்பது (இறை.1).

யாப்பருங்கல விருத்தி கூறுவது :– முதல் நூலோடு ஒத்த முடிவிற்றாய்த் தனது ஓர் விகற்பம் படக் கிளப்பது (யாப்.பாயி.).

வழிப்படு¹–தல் *vaḻi-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பயணமாதல்; to travel, to go on one's way. 2. நேர்படுதல் (யாழ்.அக.); to be reformed or mended. 3. சந்தித்தல்; to meet. *"அவன் எங்காவது வழிப்பட்டால் என்னிடம் வரச்சொல்லு" (உ.வ.)*

*[வழி + படு ¹–.]*

வழிப்படு²–தல் *vaḻi-p-paḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.). 1. வழிபடு¹, 2 பார்க்க; see *vaḻi-paḍu. "அமரர் கோன் வழிப்பட்டால்" (திவ். திருவாய். 3, 1, 8).* 2. வழிபடு¹, 1 பார்க்க; see *vaḻi-paḍu.*

*[வழி + படு ¹–.]*

வழிப்படு²–த்தல் *vaḻi-p-paḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. பயணப்படுத்துதல்; to send on a journey, to despatch. *"மதிநுதலியை வழிப்படுத்து" (திருக்கோ. 214, கொளு).* 2. நல்ல வழியிற் செலுத்துதல் (சூடா.); to set on the right path. 3. சீர்திருத்துதல்; to regulate, to reduce to order, to reform. *"இருமொழியும் வழிப்படுத்தார்" (காஞ்சிப்பு. தழுவக். 249).* 4. வயப்படுத்துதல் (யாழ்.அக.); to bring under control, to entice. 5. வணக்கஞ் செய்வித்தல் (வின்.); to casue one to reverence, to cause to salute.

*[வழிப்படு¹ → வழிப்படு–.]*

வழிப்பணி *vaḻi-p-paṇi,* பெ.(n.) குற்றம் செய்தோர்க்குத் தண்டனையாக, பாதை செப்பனிடும் வேலை தருகை; laying and repairing roads being the labour of a personer sentenced to rigorous imprisonment, engaging convicts or prisoners for road improvement works as a measure of punishment.

*[வழி + பணி]*

வழிப்பயணம் *vaḻi-p-payaṇam,* பெ.(n.) வழிச்செலவு (இ.வ.); journey.

மறுவ. நடைச்செலவு

*[வழி + பயணம்]*

**Pkt.** payaṇa > த. பயணம்.

வழிப்பறி¹–த்தல் *vaḻi-p-paṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) இடைவழியிற் கொள்ளை யிடுதல் (சூடா.); to way lay and rob.

*[வழி + பறி¹–.]*

வழிப்பறி² *vaḻi-p-paṟi,* பெ.(n.) வழிக் கொள்ளை (பிங்.); highway robbery. *இந்தப் பகுதியில் அடிக்கடி வழிப்பறி நடக்கிறது (உ.வ.).*

*[வழி + பறி]*

நெடுந்தொலைவு சுற்றுலா செல்வோரிடமிருந்து, பணம், நகை போன்றவற்றைக் கொள்ளையடித்தல்; இதுபோன்று வழிப்பறி செய்வோர் கழகக் காலத்தே, ஆறலைத்துண்போர் எனப்பட்டனர்.

**வழிப்பாடு** *vaḻi-p-pāḍu*, பெ.(n.) 1. வழியிற் செல்லுகை; proceeding on the way. 2. பின்பற்றுகை; following. 3. வணக்கம்; reverence, adoration. *"பூசித்துப் பணியும் வழிபாடு பாரீர்" (ஏகாம். உலா. 371).* 4. பூசனை (பிங்.); ritual, worship. இத்தளி வழிபாடு செய்வார்க்கு (கோயி.கல்வெ.தொ.1, 150). 5. வழக்கம் (வின்.), பயன்பாடு, மரபு; use, custom, habit. 6. சமயக் கோட்பாடு (வின்.); religious system.

*[வழிப்படு → வழிப்பாடு.]*

**வழிப்பாம்பு** *vaḻi-p-pāmbu*, பெ.(n.) எப்பொழுதும் கடிப்பதற்காகவே வழிகட்டிக் கொண்டிருக்கும் ஒரு வகைப் பாம்பு; a kind of snake exclusively awaiting to bite passers-by.

*[வழி + பாம்பு]*

**வழிப்பிரிவு** *vaḻi-p-pirivu*, பெ.(n.) வழிபல ஒன்று கூடும் இடம் (வின்.); cross ways; place where two or more roads meet, road junction.

*[வழி + பிரிவு]*

**வழிப்புண்** *vaḻi-p-puṇ*, பெ.(n.) 1. எரு (ஆசன) வாய்ப்புண்; anal sore. 2. குறி வாய்ப்புண்; vaginal sore or ulcer (சா.அக.).

*[வழி + புண்]*

புல்→புள்→பிள்→பிழம்பு = திரட்சி. புல்→புள்→புண் = தோலில் திரண்டு காணப்படும் ஊறு. தோலில் எழும்பும் கட்டி. இங்கு வழிப்புண் என்பது, எருவாயிலிலோ அல்லது பெண்குறிவாயிலோ எழும்பியுள்ள புண்கட்டி.

அல்குல் அல்லது ஆண்குறியில் தோன்றும் இணைவிழைச்சின் விளைவாகத் தோன்றும் புண்கட்டிகளும் வழிப்புண் வகையைச் சார்ந்தனவே.

**வழிப்புப்புழுகு** *vaḻippu-p-puḻugu*, பெ.(n.) புனுகுப் பூனையின் பிருட்டப் பையினின்று வழித்தெடுத்த புழுக்கை (புனுகு) (வின்.); civet taken out of the ventricle of the civet cat.

*[வழி[1] + புழுகு ]*

வழி = வாயில். புள்→புழு→புழுக்கை. பிள்→பீள்→பீளை→பூளை. புள்→புழு→புழுகு. புனுகுப் பூனையின் குறிவாயிலினின்று வெளிப்படும் நறுமணப் பொருளே, வழிப்புழுகு என்றறிக.

**வழிப்புரை** *vaḻi-p-purai*, பெ.(n.) வழிப் போக்கர் வழிநடைக் களைப்பாறத் தங்குமிடம் (ஏலாதி. 2); rest-house; traveller's bungalow.

*[வழி + புரை[6]]*

புல்→புர்→புரை = வீடு, அறை, சாலை, இடம்.

வழிநடைச் செலவினை மேற்கொள்வோர் வழிநடை வருத்தம் தீருதற் பொருட்டுத் தங்கி களைப்பாறிச் செல்லுமிடம்.

**வழிப்பெருந்தேவி** *vaḻi-p-perundēvi*, பெ.(n.) அரசிளங்குமரி; junior queen. *"சேதியர் பெருமகன் வழிப்பெருந் தேவியொடு" (பெருங். வத்தவ. 3, 110).*

*[வழி + பெருந்தேவி]*

வழிப்பொதி *vaḻi-p-podi,* பெ.(n.) வழிச்சோறு, 1 (இ.வ.) பார்க்க; see *vaḻi-c-cōṟu.*

*[வழி + பொதி]*

வழிப்போ¹–தல் *vaḻi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) வழிப்படு¹–, பார்க்க; see *vaḻi-p-paḍu-.*

*[வழி + போ–.]*

வழிப்போ²–தல் *vaḻi-p-pō-,* 8 செ.குன்றாவி. (v.t) வழிபடு¹–, 1 பார்க்க; see *vaḻi-paḍu-.*

*[வழி + போ–.]*

வழிப்போக்கர்வாழை *vaḻi-p-pōkkar-vāḻai,* பெ.(n.) நீர்வாழை (தற்கா.); traveller's palm.

*[வழிப்போக்கன் + வழு→வாழை. வாழை = வழுவழுப்பான மரம்.]*

வழிப்போக்கன் *vaḻi-p-pōkkaṉ,* பெ.(n.) வழிச்செல்வோன்; wayfarer, traveller, journeyer. *"வழிப்போக்கர் புகுந்தாடா நிற்பர்களே" (ஈடு. 4, 4, 6).*

*[வழிப்போக்கு → வழிப்போக்கன்]*

வழிப்போக்கு *vaḻi-p-pōkku,* பெ.(n.) 1. வழியிற் போகை; going along the path, proceeding on the way. 2. பாதை, வழி; path, track. *"வழிப்போக்கிலே அவனைக் காண்பாய்" (வின்.).* 3. வயல்களிலுள்ள வழிப்பாதை; foot-path in the cultivable field. 4. பாழ்நிலம் (இ.வ.); waste land.

*[வழி + போ→போக்கு.]*

வழிப்போவான் *vaḻi-p-pōvāṉ,* பெ.(n.) வழிச்செல்வோன், யாத்திரையாளன்; wayfarer, traveller, journeyer.

*[வழி + போ→போவான்.]*

ஒருகா. வழிச்செல்வோன்.

வழிபடு¹–தல் *vaḻi-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. பின்பற்றுதல்; to follow, adhere to. *"வழிபடுதல் வல்லுதலல்லால்" (நாலடி, 309).* 2. வணங்குதல்; to reverence, worship. *"வழிபடு வோரை வல்லறி தீயே" (புறநா. 10), "வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்கு" (நற்.9:2).*

*[வழி + படு–.]*

வழிபடுதல் என்பது கடவுள் நெறியைப் பின்பற்றுதலைக் குறிக்கும். "பொய்தீர் ஒழுக்க நெறிநின்றார்" என்று வள்ளுவர் கூறுவது காண்க. அது ஒவ்வொரு சமயத்தார்க்கும் வேறுபட்ட வழிமுறைகளையும், நெறிமுறைகளையும், கொண்டதாயினும், ஒவ்வொரு சமய நம்பிக்கைக் கூட்டத்தாரும், தமக்கென ஒரு தலைமை வழிபாட்டுநெறி வகுத்துக் கொண்டு, ஒன்றுபட்டு இயங்க வழிவகுத்தது.

காலப்போக்கில் முழுமுதற் கடவுளை வழிபடுதலே உயர்ந்தது, என்னும் எண்ணம், மாந்தர்தம் வாழ்வில் வழக்கூன்றியது. வாழ்வியலில் அச்சந்தரும் பொருட்களை வழிபடத் தொடங்கிய மாந்தன், நெறியின் வயப்பட்ட கடவுளை, வகுத்துக்கொண்டு, அதுவே முழுமுதல் இறைவழிபாடென்று எண்ணினான்.

நாள் செல்லச்செல்ல, தன்னுள்ளத்தே உறையும் மனச்சான்றாகிய உண்மையிறைவனை உணராது, இம்மைப் பயன் விளையுமென்றெண்ணி, வழிபடுதலை, பலநிலைகளில் மேற்கொண்டதனால், கடவுள் வழிபாட்டின் உயரிய நிலையை மறந்தான்.

இன்று கடவுள் வழிபாடு, தன்பொருள் இழந்து கடவுளைப் போற்றி வணங்குகின்ற கடவுள் வாழ்த்துப் பொருளில் மட்டும் ஆளப்படுகின்றது.

தேவாரக் காலத்தில், வழிபடுதலென்பது கூட்டுவழிபாட்டையே குறித்தது.

(எ.டு.) "கூடிநின் அடியார்" என்னும் திருவாசகக் கருத்தை நோக்குக.

**வழிபடு²–தல்** *vaḻi-paḍu-,*20 செ.கு.வி. (v.i.) வழிப்படு¹–, 1 (வின்.) பார்க்க; see *vaḻi-p-paḍu.*

*[வழி + படு–.]*

**வழிபடு³–த்தல்** *vaḻi-paḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) வழிப்படு²– (வின்.) பார்க்க; see *vaḻi-p-paḍu-.*

**வழிபடுகடவுள்** *vaḻipaḍu-kaḍavuḷ,*பெ. (n.) ஒருவன் தன் குலத்திற்கும், தமக்கு முரித்தாக வணங்கும் கடவுள்; tutelary deity; the deity which a man worships as his own God or the God of his family or caste, dist. fr. *ēṟpuḍai-k-kaḍavuḷ.* *"வழிபடு கடவுளை யாதல்...... ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல்"* *(குறள், அவ.).*

*[வழிபடு + கடவுள். கடவுதல் = செலுத்துதல். கடவு→கடவுள் = இயக்குபவன், செலுத்துபவன்.]*

(ஒ.நோ.) இயவு →இயவுள். கடவுள் என்னும் பெயர்க்கு எல்லாவற்றையும் இயக்குபவன் அல்லது செலுத்துபவன் என்றும் பொருளுரைக்கலாம். மனமொழி மெய்களைக் கடந்து நின்றிலங்கும் முழுமுதற் கடவுளைக் குறிக்க எழுந்த சொல்லென்பது, அதன் பகுதியாலேயே விளங்கும் (சொ.ஆ.க.31).

த. கடவுள் > E. God.

**வழிபடுதவசி** *vaḻi-paḍu-tavaśi,* பெ.(n.) காது வலிக்காக பயன்படுத்தும் ஓர் வகைக் கற்றாழை; a kind of aloes used in ear ache.

**வழிபடுதெய்வம்** *vaḻipaḍu-deyvam,* பெ.(n.) 1. வழிபடுகடவுள் பார்க்க; see *vaḻipaḍu-kaḍavuḷ.* *"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப"* *(தொல்.பொருள்.422).* *"அழிவில முயலும் ஆர்வ மாக்கள் வழிபடுதெய்வம் கட்கண்டாங்கு"* *(நற்.9–1–2).* 2. நிலையாக எஞ்ஞான்றும் உள்ளத்திலிறுத்தி வணங்குந் தெய்வம்; favourite deity, chosen by him for worship from among all the deities.

*[வழிபடு + தெய்வம்]*

இம் மன்பதையில், மாந்தர் வணங்குந் தெய்வம், பற்பலவாயிருப்பினும், ஒருவன், தன் உள்ளத்தை குறிப்பிட்டதொரு தெய்வத்திடம் முழுமையாக ஒப்படைத்து, அத் தெய்வத்தையே நெஞ்சார நினைந்து வணங்குதல்.

**வழிபண்ணு–தல்** *vaḻi-paṇṇu-,*5 செ.கு.வி. (v.i.) வகை செய்தல்; to provide a way of disposal, way out, sorting out.

*[வழி + பண்ணு–.]*

**வழிபய–த்தல்** *vaḻi-paya-,*3 செ. குன்றாவி. (v.t.) 1. பிற்பயத்தல் (தொல். பொருள்.424); to result ultimately in. 2. மறுக்காது கொடுத்தல் (வின்.); to give without refusal.

*[வழி + பய–.]*

**வழிபறி¹–த்தல்** *vaḻi-paṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) இடைவழியிற் கொள்ளை யிடுதல் (சூடா.); to waylay and rob.

*[வழி + பறி–,]*

வழிபறி[2] *vaḻi-paṟi,* பெ.(n.) வழிப்பறி, வழிக் கொள்ளை (பிங்.); highway robbery. *"வழிபறியுண்ட விடத்தே தாய்முகங் காட்டி னாற்போலே"* *(ஈடு. 6, 1, 1).*

*[வழி + பறி.]*

வழிபாடு *vaḻi-pāḍu,* பெ.(n.) 1. வழியிற் செல்லுகை; proceeding on the way. 2. பின்பற்றுகை; following. 3. ஒரு தெய்வத்தையேனும் முழுமுதற் கடவுளை யேனும் வணங்கும் வணக்கம்; reverence, adoration. *"பூசித்துப் பணியும் வழிபாடு பாரீர்" (ஏகாம். உலா, 371).* 4. பூசனை (பிங்.); ritual, worship. *"இத்தளி வழிபாடு செய்வார்க்கு" (S.I.I. Vol.i, 150).* 5. வழக்கம், பயன்பாடு, மரபு (வின்.); use, custom, habit. 6. சமயக் கோட்பாடு (வின்.); religious system.

*[வழிபடு→வழிபாடு.]*

மொழிஞாயிறு, தமிழர்தம் கடவுள் வழிபாடு அறிவியல் தழுவியதென்பார். தொல்காப்பியர் அறிவியல் நோக்கில், இறைவழிபாட்டினை முதற்பொருளுள் அடக்கியுள்ளார். தொல்காப்பியர் முதற்பொருளென்று மொழிந்தது, எல்லாக் கருப் பொருள்களும் தோன்றுதற்கு நிலைக்களனாகிய காலமும் இடமுமேயாகும். இம் முதற்பொருளே, இறைவன் என்னும் உருவகச் சொல்லிற்குரிய இயல்வரையறையாகும். மணிவாசகரும், "போற்றி என்வாழ் முதலாகிய பொருளே" என்று குறித்துள்ளது, இறைமறுப்பாளரும், இறைப் பற்றாளரும் ஏற்கும் வண்ணம் அமைந்துள்ளது. அறிவியல் அறிஞர் ஐன்சுடீனும், ஒருபொருளின், (நீள, அகல, உயரம்) கனத்தோடு, காலத்தையும் இணைத்தே, கணக்கிட வேண்டும் என்றார்.

இம் முதற் பொருள் கருத்தினைத் தொல்காப்பியர் "காலமும் இடமும் முதற் பொருளென்ப" என்று கூறியுள்ளதால், தமிழர்தம் வழிபாட்டுக் கொள்கையும், சமயவழிபாடும் வாழ்வியலின் வழிப்பட்ட அறிவியல் சார்ந்தது என்பதில், யாதொரு ஐயமில்லையென்க.

வழிபாடுசெய்–தல் *vaḻipāḍu-šey-,*1 செ.கு.வி. (v.i.) கருத்தறிந்து அவர் ஏவாமல் அவர் விரும்பியன செய்தல் (திவ்.திருப்பள்ளி. 5, வ்யா, பக்.31); to serve a great person, guessing his wishes.

*[வழிபாடு + செய்–.]*

வழிபார்[1]–த்தல் *vaḻi-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) எதிர்பார்த்தல்; to expect, to look forward to. *"நாடோறும் வழிபார்த்திரங்கி மனந்தளர்ந்தேன்" (அருட்பா. 5. வேட்கை. 3)*

*[வழி + பார்–.]*

வழிபார்[2]–த்தல் *vaḻi-pār-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வழிவகை தேடுதல்; to find a way out; to devise means. 2. உரியகாலம் பார்த்தல் (வின்.); to watch for an opportunity, to wait for an opportune time.

*[வழி + பார்–.]*

வழிபார்[3]–த்தல் *vaḻi-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) நோயாளிகள் வாசற்படியை நோக்கும், இறத்தற்குறி; staring at the gate way by a patient, it is a symptom of death.

*[வழி + பார்–.]*

**வழிபோ–தல்** *vaḻi-pō-*,8 செ.குன்றாவி. (v.t.) & செ.கு.வி.(v.i.) வழிப்போ– பார்க்க; see *vaḻi-p-pō-*. *"வழிபோன வருத்தத்தை" (பொருந. 93).*

*[வழி + போ–.]*

**வழிபோவார்** *vaḻi-pōvār*, பெ.(n.) வழிச் செல்வோன்; travellers, journeyers. *"வழி போவார் தம்மொடும் வந்து" ( தேவா. 916: 2).*

மறுவ. வழிப்போக்கன்.

*[வழிபோ–. → வழிபோவார்]*

**வழிமடக்கு[1]–தல்** *vaḻi-maḍakku-*, 5 செ. குன்றாவி. (v.t.) வழிமறி–த்தல் பார்க்க; see *vaḻi-maṟi-*. *மேய்ச்சல்நிலங் கண்டறிந்த இடையன், ஆநிரைகளை வழி மடக்கினான் (உ.வ.).*

*[வழி + மடக்கு–.]*

**வழிமடக்கு[2]** *vaḻi-maḍakku*, பெ.(n.) அணி வகை (பிங்.); a figure of speech.

*[வழி + மடக்கு]*

**வழிமறி–த்தல்** *vaḻi-maṟi-*,4 செ. குன்றாவி. (v.t.) செல்வதைத் தடுத்தல்; to stop, obstruct, hinder or prevent, as a person from going.

*[வழி + மறி–.]*

**வழிமார்க்கம்** *vaḻi-mārkkam*, பெ.(n.) நல்லொழுக்கம்; good behaviour, civility, character, conduct.

*[வழி + மார்க்கம்]*

**Skt.** mārga > த. மார்க்கம்.

**வழிமுட்டு** *vaḻi-muṭṭu*, பெ.(n.) செல்ல முடியாத வழி; blind track or path, dead end. *"வழி முட்டா யிருக்கும் இடங்களும்" (குறிஞ்சிப். 258, உரை).*

*[வழி + முட்டு]*

**வழிமுட்டு–தல்** *vaḻi-muṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) (வழித் தோன்றல்) கொடிவழி யற்றுப் போதல் (இ.வ.); to terminate or extinct of a line of heirs or successors.

*[வழி + முட்டு–.]*

**வழிமுதல்** *vaḻi-mudal*, பெ.(n.) 1. குல முதல்வன்; progenitor, original head of a family or dynasty. *"அனபாயன் றிருக்குலத்து வழி முதலோர் (பெரியபு. புகழ்ச். 8).* 2. வழிபடுகடவுள் பார்க்க; see *vaḻi-paḍu-kaḍavuḷ*. *"வாழு நாள் கொடுத்தாய் வழிமுதலே" (தேவா. 485,5).*

*[வழி + முதல்.]*

வழி = குடிவழி, மரபு. பிறங்கடை தோறும், வாழையடி வாழையென வந்த மரபுவழி, வணங்கும் இறை.

**வழிமுரண்** *vaḻi-muraṇ*, பெ.(n.) ஒரு செய்யுளில் முரண்டொடை மிகுதியாகப் பயில்வது (காரிகை. ஒழிபி. 6, உரை, பக். 157); to learn contradictory nature in a poem.

*[வழி + முரண்]*

**வழிமுறை[1]** *vaḻi-muṟai*, பெ.(n.) 1. வழித் தோன்றல்; descendant, pedigree. *"தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை தீரா விடும்பை தரும்" (குறள், 508).* 2. படித்தர வரிசை, படித்தர வரிசையொழுங்கு; gradation, graduated scale. *"அன்பு*

*வழிமுறையாற் சுருங்காது" (திருக்கோ. 275, உரை).*

*[வழி + முறை]*

**வழிமுறை[2]** *vaḻi-muṟai,* வி.எ.(adv.) பின்பு; afterwards, subsequently. *"வழிமுறைக் காயாமை வேண்டுவல்யான்" (கலித். 82). "நாற்பத் தொன்பது வழிமுறை வந்த" (புறநா. 201 : 11).*

*[வழி + முறை]*

**வழிமுறைத்தாய்** *vaḻi-muṟai-t-tāy,* பெ.(n.) தகப்பன் முதல் திருமணத்திற்குப் பின், மணந்துகொண்ட தாய்; step mother. *"வழிமுறைத் தாயுழைப் புக்காற்கு" (கலித். 82).*

மறுவ. சிற்றன்னை.

*[வழிமுறை + தாய்]*

தா→ தாய்.

ஒருகா. தம் + ஆய் → தாய். பிள்ளை நிலையில், புகுந்தகுடிக்கு, மகவினைக் கொடுக்காது போயினும், தமது கணவன் மணந்து கொண்டவளது குழந்தையை தாய் முறையில் வளர்த்துப் பாதுகாப்பவ ளென்றறிக. உறவு வழியில் தாயாகுந் தன்மையுடையவளே, வழிமுறைத்தாய்.

**வழிமுறைத்தாரம்** *vaḻi-muṟai-t-tāram,* பெ.(n.) முதல் மணத்துக்குப் பின் மணந்து கொண்ட தாரம்; second wife, wife married after the death of the previous wife. *"தன் காதலியை இழந்தபின் வழிமுறைத்தாரம் வேண்டின்" (தொல். பொருள். 79, உரை, பக். 186).*

*[வழிமுறை + தாரம்]*

தள்→ தரு→ தார்→தாரம்.

தள் என்னும் வினை தருதற் பொருளில் தரு எனத் திரிந்தது. அதன்பின் எதிர்மறை வினையில் தார் அல்லது 'தா' என்றானது. தாரம் என்னும் சொல் தார் என்னும் திரிபடியாகப் பிறந்தது.

முதற்கண் ஆடவர்க்குத் தரப்பட்டவள் மனைவி. பிள்ளையைப் புகுந்தகுடிக்குத் தருவதற்பொருட்டு, வழிமுறையில் முதற்கண் கணவனுக்குத் தரப்பட்ட தாரமே, வழிமுறைத்தாரம் எனலாம்.

**வழிமொழி[1]-தல்** *vaḻi-moḻi-,* 2 செ. குன்றாவி.(v.t.) 1. வழிபாடு கூறுதல்; to praise. *"வலியரென வழிமொழியலன்" (புறநா. 239, 7).* 2. மொழிந்ததைத் திரும்பக் கூறுதல்; to reiterate, as a statement already made.

*[வழி + மொழி.]*

வழிமொழிதல் பற்றிப் பேராசிரியர் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் புகல்வது, "தன் தன்மையென வேறின்றித் தன்கைப்படுத்தல்" (தொல். பொருள்.307 பேரா.உரை).

**வழிமொழி[2]** *vaḻi-moḻi,* பெ.(n.) இசைப் பாட்டு வகையுளொன்று; a kind of rhythmic verse. *"தமிழ் விரகன் வழிமொழிகள்" (தேவா. 149:12).*

*[வழி + மொழி]*

**வழிமொழி[3]** *vaḻi-moḻi,* பெ.(n.) அணிவகை (யாப்.வி.பக்.511); a figure of speech.

*[வழி + மொழி.]*

**வழிமோனை** *vaḻi-mōṉai,* பெ.(n.) இன வெழுத்தால் வரும் மோனைத் தொடை (தொல். பொருள். செய். 94, பேரா. உரை); vowel and consonantal assonance in metrical alliteration.

*[வழி + மோனை]*

**வழியசை** *vaḻi-y-aśai,* பெ.(n.) கலிப்பாவில் வரும் ஓர் உறுப்பு (கலித். 90, உரை); a member of kali verse.

*[வழி + அசை. அல்→அலை→அசை.]*

**வழியட்டு-தல்** *vaḻi-y-aṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வழிய விடுதல்; to cause to overflow or overspread, to be brimmed. *"நெருப்பை வழியட்டினாற் போல்" (ஈடு,4, 6, 2).*

*[வழி + அட்டு-.]*

**வழியடியார்** *vaḻi-y-aḍiyār,* பெ.(n.) வழிவழித் தொண்டர்; hereditary worshippers or devotees. *"வழியடியோம் வாழ்ந்தோங்காண்" (திருவாச. 7, 11).*

*[வழி + அடியார்]*

**வழியடை[1]-த்தல்** *vaḻi-y-aḍai-,* 4 செ. குன்றாவி.(v.t.) 1. செல்லவொட்டாது வழித் தடை செய்தல்; to obstruct or hinder or present or wall the way. *"வாழ்நாள் வழியடைக்குங் கல்" (குறள், 38).* 2. தடுத்தல் (வின்.); to raise obstacles in the way of; to impede, to felter, to stop, prevent, hinder.

*[வழி + அடை-.]*

**வழியடை[2]** *vaḻi-y-aḍai,* பெ.(n.) இடையூறு, தடை; obstruction, obstacle, felter, hindrance. *"அறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்" (பதிற்றுப். 22,4).*

**வழியடை[3]** *vaḻi-y-aḍai,* பெ.(n.) தாயத்தின் பின்னுரிமை யுடையான்; presumptive heir. *"தாயத்து வழியடையாகிய இளங்கோ நம்பியும்" (பெருங். உஞ்சைக். 37, 222).*

*[வழி + அடு[1] →அடை. ]*

**வழியம்பலம்** *vaḻi-y-ambalam,* பெ.(n.) வழிப்போக்கர் தங்குவதற்குரிய விடுதி (நாஞ்.); wayside inn or rest house.

*[வழி + அம்பலம். அம்பு→அம்பல்→அம்பலம் = பலர் கூடுமிடம்]*

**வழியல்[1]** *vaḻiyal,* பெ.(n.) வழிந்தோடுவது (யாழ்.அக.); that which overflows or drains off, surplusing.

*[வழி[2] →வழியல்]*

**வழியல்[2]** *vaḻiyal,* பெ.(n.) வழித்தெடுக்கப் பட்டது (யாழ்.அக.); that which is gathered together by wiping, scraping, etc.

*[வழி[4] →வழியல்]*

**வழியலை-த்தல்** *vaḻi-y-alai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆறலைத்தல் (பொருந. 21, உரை); to rob on the highway.

மறுவ. வழிப்பறித்தல்.

*[வழி + அலை-த்தல். அலை-த்தல் = அடித்தும் துன்புறுத்தியும் பறித்தல்]*

அலைத்தல் = வருத்துதல். அல்→ அலை. அலை-தல் (த.வி.)→அலை-த்தல் (பி.வி.)

வழிப்போக்கரைத் துன்புறுத்தி, அவர்தம் உடைமைகளைத் தன்வயப்படுத்தல். ஆறலைக் கள்வர்தம் வழியலைத்தல் தொழில், சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை போன்றவற்றில் மிகுதியாகப் பேசப்படுகிறது.

**வழியளவை** *vaḻi-y-aḷavai,* பெ.(n.) கருதலளவை; inference, as a mode of proof, derivation, deducing. *"ஆன்றோராற் செய்யப்பட்ட மிருதி முதலியவற்றிற்கு, மூலவேதம்*

*உண்டென்று வழியளவையா லுணரப்படுதலின்" (சி.போ. பா.அவையடக். பக். 16).*

*[வழி + அளவை. அள்→அள→அளவை.]*

காட்சி, கருத்து, ஒப்பு, உரை என்னும் நால்வகை ஏரண அறிவழி யளவைகளுள், வழியளவையும் ஒன்று.

வழியன்[1] *vaḻiyaṉ*, பெ.(n.) பெருநோயாளன் (யாழ்.அக.); leper.

மறுவ. தொழுநோயாளன்.

*[அழியன்→வழியன்]*

இப் பெருநோயின் விளைவால் உடலுறுப்புகள் குறையும். கை, கால் விரல்கள் அழுகும். அருவருக்கத்தக்க நிலையினைத் தோற்றுவிக்கும்.

வழியன்[2] *vaḻiyaṉ*, பெ.(n.) அரியவன்; a man of incognito. *"இன்று சென் றெய்தும் வழியனு மல்லன்" (புறநா. 389 : 7).*

வழியனுப்பு-தல் *vaḻi-y-aṉuppu-*, 5 செ. குன்றாவி.(v.t.) 1. செலவு மேற்கொள்ள விடுதல்; to see one off, send some one to. 2. சென்று வருதற்கு விடைகொடுத்து அனுப்புதல்; to bid farewell. *வெளிநாடு செல்லும் தலைவரை வழியனுப்பத் தொண்டர்கள் பன்னாட்டு வானூர்தி நிலையத்தில் திரளாகக் கூடினர்.*

*[வழி + அனுப்பு-. வழியனுப்புதல் = விடைகொடுத்தனுப்புதல், போகச் செய்தல்.]*

வழியனுப்புதல் மக்களிடையே பரவலாக, இன்று வழக்கில் உள்ளது. வீட்டிற்கு வந்த விருந்தினரை வாசல்வரை சென்று வழியனுப்புவதும், நண்பரை அல்லது உறவினரை பணியின் பொருட்டோ அல்லது படிப்பிற்காகவோ, வெளிநாட்டிற்கு வழியனுப்புவதும், விழா முடிந்தவுடன் தலைவரை, அவர்தம் மகிழ்வுந்தில் ஏறும்வரை உடன்சென்று வழியனுப்புவதும், இன்று காணப்படும் நிகழ்வாகும்.

வழியனுப்புவிழா *vaḻi-y-aṉuppu-viḻā*, பெ.(n.) விடைகோடல் விழா; farewell function.

*[வழியனுப்பு + விழா. விழு + ஆ (ஆ = தொழிற் பெயரீறு).]*

வழியாக *vaḻiyāga*, இடை.(part.) 1. மூலம்; through, by. 2. வேற்றுமை உருபு 'இன்' என்பதற்கு பின் வருகின்ற சொல்; after the case suffix. *பலகணியின் வழியாகத் தென்றல் வீசியது (உ.வ.).*

*[வழி→வழியாக.]*

வழியாமணக்கு *vaḻi-y-āmaṇakku*, பெ. (n.) புல்லாமணக்கு; a eastor plant, *Sebastiana chamaelea.*

*[வழி + ஆமணக்கு. அவிழ்→அவிழம்→ அவிணம்→ ஆவிணம்→ ஆவணம்→ ஆமணம் →ஆமணக்கு.]*

அவிழ் = முளையவிழும், வித்து. எண்ணெய் வித்தாகப் பயன்படும் முதற்காரணம் கருதி, 'அவிழ்' அடியாக இச் சொல் தோன்றியது. ஆமணக்கு வகை பதினேழுள் வழியாமணக்கும் ஒன்று. இஃது மிகுதியாக எண்ணெய் நல்கும் வித்தென்று, நிலைத்திணை இயல் வல்லுநர் கூறுவர்.

வழியாயம் *vaḻiyāyam*, பெ.(n.) வரி (சுங்கம்) (கல்.); toll, excise.

*[வழி + ஆயம்[3]]*

வழியிரங்கு-தல் *vaḻiy-iraṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) பின்னிரங்குதல்; to repent. *"கற்றொறுங் கல்லாதே னென்று வழியிரங்கி" (பழமொ. 2).*

*[வழி + இரங்கு-.]*

இரங்குதல் = மனமிரங்கிக் கூறுதல். இள → இர →இரங்கு.

நடந்து முடிந்த, செயலை நினைந்து மனமழுந்துதல் அல்லது உள்ளங் குமைதல் வழியிரங்குத லாகும்.

**வழியிலார்** *vaḻiyilār,* பெ.(n.) கொடி வழியினர்; descendants, pedigee. *"சாத்தனும் இவன் வழியிலாரும் பெறக்கடவதாகவும்" (புதுக்.கல். 11).*

*[வழி → வழியிலார். வழி = தலைமுறை, வழியிலார் = வழித்தோன்றல் அல்லது மரபினர்.]*

**வழியீற்றுப்பசும்பால்** *vaḻi-y-īṟṟu-p-pašum-pāl,* பெ.(n.) தானீன்ற கன்றிற்குப் பலமுறை கொடுக்கும் பால் அல்லது, நெடுங்காலமாக ஈன்ற கன்றிற்குக் கொடுத்து வரும் பால்; milk of of the cow that has calfed many times or that has calfed a long time before.

*[வழி + ஈன் →ஈனு →ஈற்று + பசு + பால்.]*

**Skt.** pasu > த. பசு.

**வழியுங்காந்தி** *vaḻiyuṅ-kāndi,* பெ.(n.) அப்பிரக நஞ்சு; a kind of arsenic.

**வழியுணவு** *vaḻiyuṇavu,* பெ.(n.) வழிச்சோறு, 1 (பிங்.) பார்க்க; see *vaḻi-c-cōṟu, 1.*

*[வழி + உணவு.]*

**வழியுரை-த்தல்** *vaḻi-y-urai-,* 4 செ.கு.வி. (v.i.) தூது சொல்லுதல்; to speak as an ambassador. *"வழியுரைப்பான் பண்பு" (குறள், 688).*

*[வழி + உல் → உர → உரை-.]*

**வழியுரைப்பான்** *vaḻi-y-uraippāṉ,* பெ.(n.) தூதன் (பிங்.); ambassador.

*[வழி + உரைப்பான். உல் → உர → உரை →உரைப்பான்.]*

ஒரு நாட்டின் சார்பாகச் செய்தி யறிவிப்பாளனாக அல்லது நிகராளியாக, மற்றொரு நாட்டிற்கு அனுப்பப்படும் உயரதிகாரி - நிலைத்தூதன்.

ஒரு நாட்டின் அரசியல், பொருளாதாரம், பண்பாடு தொடர்பான செய்திகள், மற்றொரு நாட்டிற்குத் தூதன்வழி யுரைக்கப்படுவதால், வழியுரைப்பான் என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றான்.

**வழியெச்சம்** *vaḻi-y-eccam,* பெ.(n.) குடும்ப வழி தொடர்தற்குரிய மகப்பேறும், சுற்றமும்; descendants, offspring and kith an kin. *"இத்தர்மம் அழிவு செய்வான் வழியெச்ச மறுவான்" (S.I.I. Vol. V. 224).*

மறுவ. வழிமரபு, உற்றார் உறவினர்.

*[வழி + எச்சம். எஞ்சு → எச்சு → எச்சம். வழியெச்சம் = வழித்தோன்றல், பிறங்கடை.]*

**வழியெச்சமறு-தல்** *vaḻi-y-eccam-aṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வழியெஞ்சு-.தல் பார்க்க; see *vaḻi-y-eñju-. "இத்தர்மம் அழிவு செய்வான் வழியெச்சமறுவான்" (S.I.I. Vol. V. 83)*

*[வழி + எச்சம்' + அறு-.]*

*அர் → அறு. ஒ.நோ. உர் → உறு.*

**வழியெஞ்சு-தல்** *vaḻi-y-eñju-,* 5 செ.கு.வி. (v.i.) கொடிவழியற்றுப் போதல்; to become extinct, as a family. *"வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள், 44).*

*[வழி + எஞ்சு-.]*

வழியெதுகை *vaḻi-y-edugai,* பெ.(n.) ஒரு செய்யுளில் அடிதோறும் முதன்மூன்று சீர்க்கண்ணும் வரும் எதுகை வகை (காரிகை, ஒழிபி. 6, உரை, பக். 158); an agreement in rhyme of the first, the second and the third foot in every line of a stanza.

*[வழி + எதுகை. எதிர்க்கை→எதுகை.]*

வழியொழுகு-தல் *vaḻi-y-oḻugu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பின் செல்லுதல்; to follow, to repeat. 2. நேர்வழியிற் செல்லுதல்; to go along the right path, to be upright. *"வழியொழுகாச் சலதரன்" (காஞ்சிப்பு. கடவுள். 5).* 3. ஏவலின்படி நடத்தல்; to obey, as a direction or command. *"வாய்மையான் வழியொழுகின்று" (பு.வெ.8, 11, கொளு.).*

*[வழி + ஒழுகு-.]*

வழியோன் *vaḻiyōṉ,* பெ.(n.) வழித்தோன்றல் (பிங்.) பார்க்க; see *vaḻi-t-tōṉṟal.*

*[வழி → வழியோன்.]*

வழிவகு-த்தல் *vaḻi-vagu-,* 4 செ.கு.வி. (v.i.) வழிகோலு பார்க்க; see *vaḻi-kōlu.*

*[வழி + வகு-]*

வழிவகை *vaḻi-vagai,* பெ.(n.) 1. இடம் பொருளேவல்கள்; theatre or place, resources and conveniences. *வழி வகையுள்ளவன்.* 2. வழிமுறை, தகுமுறை; expedients, means. 3. ஒரு செயல் நடைபெறுவதற்கான ஏற்பாடும், திட்டமும்; way or method. *பொருளாதாரத்தில் பின்தங்கியவர் முன்னேற அரசியல் சட்டத்தின் வாயிலாக வழிவகை செய்யப் பட்டது (உ.வ.).*

*[வழி + வகை]*

வழிவந்தான் *vaḻi-vandāṉ,* பெ.(n.) 1. கொடி வழிப்பிறந்தவன்; descendant. 2. பின்பற்றி யொழுகுவோன்; follower. *"மறையின் வழிவந்தார்கண்ணே" (ஏலாதி,1).* 3. நற் குடியிற் பிறந்தோன்; one born of a good family. *"என்றும் வழி வந்தார்" (ஏலாதி, 1).*

*[வழிவா → வழிவந்தான்]*

வழிவருத்தம் *vaḻi-varuttam,* பெ.(n.) இருக்கும் ஊர், நகரம் முதலியவற்றிலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லுவதால் ஏற்படும் வழிநடைக் களைப்பு; tiredness, fatigue or weariness from journey. *"வழிவருத்தந் தீர்ந்திருந்த இரவல" (சிறுபாண்.40, உரை).*

மறுவ. வழிநடைத்துன்பம்.

*[வழி + வருத்தம்]*

வழிநடைத்துணையின்றி தன்னந்தனியே நெடுந்தொலைவு செல்லுதலால், ஏற்படும் மெய் வருத்தம்.

வழிவரு-தல் *vaḻi-varu-,* 18 செ.கு.வி. (v.i.) வழிவா-தல் பார்க்க; see *vaḻi-vā-.*

*[வழி + வரு-. ]*

வழிவலியுடையோன் *vaḻi-vali-y-uḍaiyōṉ,* பெ.(n.) ஓணான்; a species of lizard family. *'வேலிக்கு ஓணான் சான்று' (பழ.).*



[வழி + வேலி→ வலி + உடையோன்.]

**வழிவழி** *vaḻivaḻi,* பெ.அ.(adj.) தலைமுறை தலைமுறையாய்; from generation to generation. *"பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து" (தொல். பொருள். 422). "அழிவி லுள்ளம் வழிவழிச் சிறப்ப" (அகநா. 47 : 1), "வழிவழிச் சிறக்க எனவேட் டேமே" (ஐங்குறு. 2 : 6).*

மறுவ. சரவடி.

*[வழி + வழி = தொடரும் தலைமுறை.]*

வழிவழி வந்ததும், நீண்ட தொடர்பினை யுடையதுமாய் அமைந்த, குழு அல்லது இனம்.

**வழிவழிப்படு-தல்** *vaḻi-vaḻi-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) மரபுவழிப்படுதல்; to follow customs or norms. *"புல் லிலை ஓமைய புலிவழங்கு அத்தம் சென்ற காதலர் வழிவழிபட்ட நெஞ்சே" (நற்.107 : 6–7).*

*[வழிவழி + படு-.]*

**வழிவழியாக** *vaḻi-vaḻiyāga,* கு.வி.எ. (adv.) மரபு; from genaration to generation, conventionally. *இது வழிவழியாக இப்படித்தான் நடந்து வருகிறது (இ.வ.). வழிவழியாகத் தொடரும் மரபினை மாற்றுவது கடினம் (உ.வ.).*

மறுவ. கொடிவழி, கொடிவழியாக.

*[வழிவழி + ஆக.]*

தலைமுறை கடந்து நீண்ட நெடுந் தொடர்பினை வழிவழியாகக் கொண்டதோரினம். மரபு, செய்தி முதலியவை தொடர்வதைக் குறிக்கையில், முதல் தலைமுறைக்கு அடுத்தது, என்ற பொருண்மையைக் குறிக்கப் பயன்படுத்தும் கூட்டுச் சொல்லாகும்.

**வழிவழியாய்ப்போ-தல்** *vaḻi-vaḻi-y-āy- p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) வெவ்வேறு வழியாகப் பிரிந்து போதல் (வின்.); to disperse in different directions.

*[வழி + வழி + ஆ + போ-.]*

**வழிவா-தல்** *vaḻi-vā-,* 8 செ.கு.வி.(v.i.) 1. மரபுவழி வருதல்; to be hereditary. *"வழிவருகின்ற வடியரோர்க்கருளி" (திவ். திருவாய், 9, 2, 2).* 2. தொன்று தொட்டு வருதல்; to be handed down from generation to generation. *"வழிவந்த கேண்மையார்" (குறள், 809).* 3. நற்குடிப் பிறத்தல்; to hail from a good family. 4. பின்பற்றியொழுகுதல்; to follow, to abide by. *"மறையின் வழிவந்தார்" (ஏலாதி, 1).* 5. அறநூல்களிற் கூறியவாறு, பிறழாது நடத்தல்; to follow or adhere strictly the precepts of the sāstras. *"குடிகுடி வழிவந்தாட்செய்யுந் தொண்டரோர்க் கருளி" (திவ். திருவாய். 9,2,1).*

*[வழி + வரு→வா-.]*

**வழிவிடு[1]-தல்** *vaḻi-viḍu-,* 20 செ. குன்றாவி. (v.t.) 1. புறப்பட்டுப்போகச் செய்தல், விடுதல்; to see one off. *"நேச வெகுமானங்கள் செய்தெழுதல் வழிவிடுதல்" (திருவேங். சத.*

*58).* 2. பாதையிலிருந்து விலகுதல்; to make way for somebody. *தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்த பெண்கள், பெரியவர் எதிர்ப்பட்டதும் வழிவிட்டார்கள் (இ.வ.). புகழ்பெற்ற ஆட்டக்காரர், தாம் இனிப் போட்டிகளிற் கலந்துகொள்ளப் போவதில்லை என்றும், புதுவதாய்க் களமிறங்கவிருக்கும் இளம் வீரர்களுக்கு வழிவிட விரும்புவதாகவும், தொலைக்காட்சி நேர்காணலிற் கூறினார் (இ.வ.). வாழ்க்கைப் பாதையில் முன்னேறிச் செல்பவர்களுக்குத் தடையாக இல்லாமல், விலகி வழிவிடுதல்.*

*[வழி + விடு-.]*

வழிவிடு²–தல் *vaḻi-viḍu-,*20 செ.கு.வி. (v.i.) 1. செல் வழி திறத்தல்; to make or open a way. 2. நெறிதவறுதல் (வின்.); to stay from the right ways or path. 3. மாற்று வழியின் வாயிலாகச் செயல் முடிக்க ஏற்பாடு செய்தல்; to devise means, to find a way out, as from a difficult situation. 4. இடையூறுகளைப் போக்குதல்; to mitigate or remove obstacles or obstructions. 5. இறக்குந் தறுவாயில் கழுவாயாகச் (பிராயச்சித்தமாக) சடங்குகளைச் செய்தல் (இ.வ.); to perform certain rituals when a person is at the point of death.

*[வழி + விடு-.]*

வழிவை–த்தல் *vaḻi-vai-,*4 செ.கு.வி. (v.i.) 1. சுற்றுலா அல்லது புறப்பாடு தொடங்குதல் (யாழ்.அக.); to start or commence a journey. 2. முன் செய்து காட்டுதல்; to begin first, to set an example to be a model. 3. கேடு சூழ்தல்; to plot one's ruin. *அவனுக்கு வழி வைக்கிறான்.*

*[வழி + வை-.]*

வழு¹ *vaḻu,* பெ.(n.) கன்று முதலியன பிறக்கும்போது காணப்படும் சவ்வு முதலியன; dirt or mucus, as on the body of a calf just yeaned. *"வழு நுகர்ந்தா தரவொடு கன்றுகள்' (நூற்றெட்டு. திருப்பு. 67).*

*[வழ→வழு.]*

வழு² *vaḻu,* பெ.(n.) 1. தவறு, குற்றம் (தக்கயாகப். 7); error, mistake, fault, flaw, lapse. 2. இழப்பு, கேடு, சூடா.); damage, loss. 3. கரிசு (பாவம்); sin. *"வழுவாய் மருங்கிற் கழுவாயுமுள" (புறநா. 34).* 4. பழிப்புரை; scandal, ill-repute. *"வழுவெனும் பாரேன்" (சிலப். 16, 69).* 5. திணை, பால் முதலியன தத்தம் இலக்கணநெறி மயங்கி வருவதாகிய குற்றம் (நன். 375); solecism, impropriety in language; deviation from rule. *"எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்" (புறநா. 61 : 16), "வழுவிலன் அம்ம தானே குழீஇ" (நற். 143 : 6).*

*[முழு→மழு→வழு]*

வழு என்னும் சொல்லின் பொருட் பொருத்தப்பாடு குறித்து, யாப்பருங்கல விருத்தி, இளம்பூரணர், சேனாவரையர் முதலானோர் கூறும், உரைக்குறிப்புகள் வருமாறு:–

1. வழு என்பது குற்றம். அது நான்கு வகைப்படும். எழுத்து வழுவும், சொல் வழுவும், யாப்பு வழுவும் என (யாப்.95).

2. செய்ததன்கண் முடிய நில்லாது, தப்பி ஒழுகுதல் (தொல்.பொருள்.143, இளம்.).

3. சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகுதல் (தொல்.பொருள்.145, நச்.).

4. வழு எழுவகைப்படும் (தொல். சொல்.11, சேனா.).

5. எழுவகை வழுவாவன : திணைவழு, பால்வழு, இடவழு, காலவழு, செப்புவழு, வினாவழு, மரபு வழு என்பன (தொல். சொல்.1, இளம்.).

6. வழு ஏழுவகைப்படும் (தொல். சொல்.11, சேனா.).

7. சொல்லுதலே அன்றி ஒழுக்கத்து இழுக்கி ஒழுகுதல் (தொல்.பொருள்.145, நச்.).

**வழுக்கட்டை** *vaḻu-k-kaṭṭai,* பெ.(n.) 1. உருண்டு திரண்டிருக்கை; plumpness. "*வழுக்கட்டை பயல்.* 2. மூடத்தனம் (வின்.); stupidity. 3. சிறுபிள்ளை (இ.வ.); child, young person, an adolescent in comtempt.

*[மழுக்கு → மழுக்கட்டை → வழுக்கட்டை (மு.தா.3, பக்.105).]*

**வழுக்கம்** *vaḻukkam,* பெ.(n.) 1. தவறு; error, slip, flew, mistake. *"வாய்மை வழுக்க முறுதலஞ்சி" (பெருந்தொ.994).* 2. ஒழுக்கத் தவறு; lapse of conduct. *"மறைநூல் வழுக்கத்துப் புரிநூன் மார்பர்" (சிலப்.13,38).*

*[வழு →வழுக்கு → வழுக்கம்]*

**வழுக்கல்** *vaḻukkal,* பெ.(n.) 1. சறுக்குகை; slipperiness. 2. சறுக்கலான தரை (திவா.); slippery ground. 3. தெங்கினிளங்காய்; tender coconut.

*[வழு → வழுக்கு → வழுக்கல் = வழுக்கைத் தேங்காய் (தேவநேயம்.12, 260).]*

வழுக்கையான இடமும் பொருளும் வழுக்கும் தன்மைத்து.

வழுக்கல் = வழுவழுப்பு, வழுக்கைத் தேங்காய்.

**வழுக்கா-த்தல்** *vaḻu-k-kā-,*4 செ. குன்றாவி. (v.t.) 1. குறித்த பொருளை அதற்குரிய சொல்லாற் கூறுதல்; to utter proper word to mention a partcular theme or thing. 2. வழுவமை-த்தல் பார்க்க; see *vaḻu-v-amai-.*

*[வழு+கல்→கள்→கவ்(வு)→கா–.]*

கவ்வுதல் = பிடித்தல், காத்தல். தீங்கு வராமல் தடுத்தல், விலக்குதல், பேணிக்காத்தல் என்னும் பொருண்மைகளில், இலக்கியத்திலும், மக்களிடையேயும் வழக்கூன்றியுள்ளது. 'கா' என்னும் வினையடி, பாதுகாத்தல் என்னும் பொருள் தரும். வழுக்காத்தல் என்னுஞ்சொல், ஒரு பொருளின் தன்மையைப் பேணிக்காத்தல் என்னும் பொருள் பயத்தல் காண்க. இச் சொல் குறித்து, சேனாவரையரும், சுப்பிரமணிய தீட்சிதரும் கூறியுள்ளமை வருமாறு :–

*"வழுவற்க என்றலும் வழு அமைத்தலும் என*
*வழுக்காத்தல் இருவகைப்படும்"*

*(தொல். சொல். 11, சேனா.)*

குறித்த பொருளை அதற்குரிய சொல் அன்று ஆயினும், ஓராற்றான் அப்பொருளை விளக்குதலின் அமைக என்றல், வழுக்காத்தலாம் (சுப்பி. பிரயோ.44).

**வழுக்காய்** *vaḻukkāy,* பெ.(n.) வழுக்கலுள்ள இளந்தேங்காய் (வின்.); tender coconut in which the pulpy matter has just begun to form.

*[மழுக்கு→வழுக்கு + காய்[3]]*

வழுக்குந்தன்மையுள்ளதும், இளம் பதத்திலுள்ளதுமான தெங்கினிளங்காய்.

வழுக்காறு *valukkāru*, பெ.(n.) தீய நெறி; evil way or method. *"வழுக்காறனைத்து முறுவிக்கும்" (விநாயகபு. 2, 32).*

*[வழு→வழுக்கு + ஆறு. அறு→ ஆறு = வழி.]*

வழு = குற்றம். வழுக்காறு = தீயவழி.

வழுக்கிவிழு-தல் *valukki-vilu-*, 2 செ.கு.வி. (v.i.) வாழ்க்கை நெறியிலிருந்து பிறழ்ந்து போதல்; to astray.

*[வழு→வழுக்கு→வழுக்கி + வீழ்→விழு-.]*

வழுக்கு[1]-தல் *valukku-*, 5 செ.கு.வி.(v.i.) 1. சறுக்குதல்; to slip; to slide, as in slippery lands. *"வழுக்கி வீழினுந் திருப்பெயரல்லான் மற்றியா னறியேன்" (தேவா. 1110, 1). வேடிக்கை பார்த்துக் கொண்டே நடந்தவன் வாழைப் பழத்தோலில் கால் வைத்ததால், வழுக்கி, விழுந்தான் (இ.வ.). வாழ்க்கைப் பாதையில் வழுக்கி விழுந்தவர் மீள்வது கடினம் (உ.வ.). பாசி படர்ந்த குளத்துப் படி வழுக்கும் (உ.வ.).* 2. தவறு செய்தல்; to err, to commit a mistake or wrong. *"கோள் வழுக்கி" (கலித். 104).* 3. தப்புதல்; to escape. *"வழுக்கிக் கழிதலே நன்று" (நாலடி, 71).* 4. மறத்தல்; to be forgetful. *"வழுக்கியும் வாயாற் சொலல்" (குறள், 139).* 5. அசைதல் (வின்.); to move back and forth, as the eyes.

ம. வழுக்குக.

*[மழு→வழு→ வழுக்கு-.]*

ஒருகா. வழுவழுத்தல் என்றுமாம்.

ஈளை நிலப்பரப்பில் பிடிப்பு இல்லாமல் நழுவிச் சரிதலும், வாழ்க்கைப் பாதையில் பொருளாதாரச் சீர்குலைவுக்காளாகி நிலைகுலைதலும், பாசி படர்ந்த படிக்கட்டில் சறுக்கிச் சாய்தலும், வழுக்குதல் எனலாம்.

வழுக்கிவிழுதல் என்பதும் அது. 'வழுக்கி விழுந்தவள்' எனப் பெண்ணைப் பழிக்கும் ஆணுலகம் - ஏன் பெண்ணுலகமும் கூட, ஆணை வழுக்கி விழுந்தவனாகச் சொல்வது இல்லை. வழுக்கி விழுந்தவர்கள் கடைத்தேறவென்றே அரும்பாடு பட்டார் முத்துலக்குமி அம்மையார். காந்தியடிகள் தம் தொண்டில் ஒரு பகுதி வழுக்கி விழுந்தவர் கடைத்தேற்றத்திற்கு உரிமை கொண்டது. ஒருவர் வழுக்கினால், இன்னொருவரும் வழுக்குதலுக்கு அடிப்படையாக இருந்திருக்க வேண்டுமே! அவரைத் தப்பவிட்ட வழுக்குதலே வழுக்குதலாம். 'அவள் வழுக்கி விழுந்தவளாமே' எனப் பார்வை பார்ப்பது பரிவாக இருந்தால் நலம்! எரிவாக இருந்தால்? எய்தவன் இருக்க அம்பை நோவதாம் பழியே. வழுக்கி விழுதல், வழிதவறல், கைவிடல் என்பனவும் இச் சார்புடையனவே (வழுக்குச்சொல். அகராதி. ப.114, 115).

வழுக்கு[2]-தல் *valukku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஒழிதல்; to exempt, to keep out of account. *"ஒன்னார் வழுக்கியுங் கேடீன் பது" (குறள், 165).* 2. அடித்தல்; to beat, to thrash. 3. மோதுதல் (வின்.); to dash against.

*[வழுவு → வழுக்கு-.]*

(ஒ.நோ.) நழுவு→நழுக்கு.

வழுக்கு[3] *valukku*, பெ.(n.) 1. சறுக்குகை; slipping. 2. தவறு; error, mistake. 3. குற்றம்; fault. 4. பிழை; mistake or wrongness. 5. தோல்வி; failure. 6. மறதி (பிங்.); forgetfulness. 7. பயன்படாது கழிவது; that which comes useless. *"வழுக்கினுள் வைக்குந்தன் னாளை" (குறள், 776).* 8. கொழுப்பு; grease. 9. சளிச்சவ்வு, சளி, சளியால் மூடப்பட்ட நீர்ப்பொருள்;

mucous, mucus. *"நிணம் பொதி வழுக்கிற் றோன்றும்" (ஐங்குறு. 207).*

*[முல்→மல்→மழு→வழு→வழுக்கு.]*

**வழுக்குநிலம்** *vaḻukku-nilam,* பெ.(n.) சறுக்கலான தரை (திவா.), (குறிஞ்சி. 288, உரை); slippery ground.

மறுவ. ஈளைத்தரை

*[மழுக்கு→வழுக்கு + நிலம்]*

**வழுக்குப்பாசி** *vaḻukku-p-pāši,* பெ.(n.) நீர்ப்பாசி வகை (வின்.); a kind of moss, Lichen.

*[வழுக்கு + பாசி]*

**வழுக்குமரம்** *vaḻukku-maram,* பெ.(n.) விளையாடற்குரிய சறுக்கு மரம்; greased pole to climb on, in sports.

*[வழு→வழுக்கு + மரம்]*

நுனிக்கொம்பிலிருக்கும் பரிசுப் பொருளைக் கைப்பற்றுதற் பொருட்டுப், போட்டியிட்டு ஏறும் எண்ணெய் தடவப்பட்ட வழுவழுப்பான நீண்டுயர்ந்த கம்பமே, வழுக்கு மரமாகும். வழுக்குமர விளையாட்டுப் போட்டி ஊரகத்தே இன்றும் காணப்படுகிறது.



**வழுக்குவெண்டி** *vaḻukku-veṇḍi,* பெ.(n.) வழவழப்பான வெண்டைக்காய்; okra, ladies finger which is viscous-Hibiscus esculentus.

*[வழு→வழுக்கு + வண்டை→வெண்டை→வெண்டி]*

**வழுக்கெண்ணெய்** *vaḻu-k-keṇṇey,* பெ.(n.) கொழுப்பும், எண்ணெயுங்கலந்த கலவை வகை (யாழ்.அக.); a mixture of grease and oil.

*[வழுக்கு + எண்ணெய்]*

எள் + நெய் = எண்ணெய்.

எண்ணெய் என்னுஞ்சொல் முதற்கண் நெய்ப் பொருள் எல்லாவற்றிற்கும் பொதுப்பெயராயிருந்து, காலப்போக்கில் சிறப்புப் பெயராயிற்று. முதன்முதலாக எள்ளின் நெய்யைக் குறித்த எண்ணெய் என்னுஞ் சொல், மிகப்பெருவழக்காய் வழங்கியதால், நாளடைவில் தன்சிறப்புப் பொருளை யிழந்து, நெய்யல்லாத நெய்மப் பொருள்களின், பொதுப்பெயராயிற்று. வழுக்கும் இயல்புள்ள, கொழுப்பு மிகுதியாகக் கலந்த எண்ணெய் வழுக்கெண்ணெய் என்று மக்களிடையே வழக்கூன்றியது.

**வழுக்கை[1]** *vaḻukkai,* பெ.(n.) 1. இளவழுக்கை; the tender kernal or pulp inside- a tender cocoanut. 2. மூன்று மாதத்திய பிண்டக்கரு; foetus of 3 months old. 3. உகிர் உண்டாகும் பொருள்; proximal end of the nailbed. 4. (பிரமி) வழுக்கைப்பூடு; a plant-gratiola monera. 5. மொட்டை; shaven head. 6. வட்ட வழுக்கை; a tree. 7. மயிர் முளையாமை; a skin disease which destroys the hair fex manges.

*[முல் → மொழு → மொழுக்கை → மழுக்கை → வழுக்கை = இளந் தேங்காய் (தேவநேயம்.12, பக்.260).]*

இளமை, புதுமைப் பொருளைக் குறிக்கும் முல் என்னும் முதனிலையினின்று முகிழ்த்த சொல். காலப்போக்கில் இச் சொல்லே முதிராத இளங்கருவினையும், மொழுமொழுவென்று, மழித்தாற் போலுள்ள வழுக்கைத் தலையினையும், குறிக்கலாயிற்று.

வழுக்கும் இடமும், வழுக்கும் பொருளும் வழுக்கையாம். முன்னது வரப்பு வழுக்கல்; பின்னது இளநீரில் வழுக்கை. தலை வழுக்கை, வழுக்கையுமாம் மழுக்கையுமாம். முழுக்க வழிந்தது, மழுக்கை; மயிர் உதிர்ந்து முளைக்காதது வழுக்கை. வழுக்கைக் கல் போல, பொருள் போல அமைந்தது என உவமைப் பொருளதாம்.

இங்குக் காணும் வழுக்கை அப் பருப்பொருள் நீங்கிய நுண்பொருள் வழுக்கையாம். ஒன்றைச் சொன்னால், 'ஆம்' என ஏற்காமல், 'அன்று' எனவும் மறுக்காமல், வழுக்கிக் கொண்டு போய்விடலாம். 'அவனே வழுக்கை; அவன் எப்படி எள்ளுக்காய் பிளந்தது போலத் தீர்த்து வைக்கப் போகிறான்' என்னும் தெளிவு, வழுக்கைப் பொருள் விளக்கும் (வழக்குச் சொல் அகராதி.ப.114).

**வழுக்கை²** *vaḻukkai,* பெ.(n.) 1. வழு வழுப்பான இளந் தேங்காயின் உள்ளீடு; pulp of a tender cocounet. *"முதிரா வழுக்கை யிளநீர்"* (குமரே. சத. 19). 2. தலைமயிர் உதிர்ந்து வளராத நிலை; baldness.

*[முல் → முழு → மொழு → மொழுக்கை → மழுக்கை → வழுக்கை]*

மொட்டையான பொருள்கள், சிறப்பாக மழித்த தலை, வழுக்கையாயிருப்பதால் மழுக்கைக் கருத்தினின்று, வழுக்கைக் கருத்துப் பிறந்தது.

**வழுக்கைக்கெளிறு** *vaḻukkai-k-keḻiṟu,* பெ.(n.) 1. நீலநிறமும் ஆறு அடி வளர்ச்சியுமுள்ள ஆற்று மீன் வகை; a fresh water fish, bluish, attaining 6 ft. or more in length. 2. நீலநிறமும் நீண்ட முள்ளுமுள்ள ஆற்றுமீன்; a fresh-water fish with long maxillary barbels, bluish.

*[வழுக்கை + கெளிறு]*

குள் → கெள் → கெளிறு. கெளுத்திமீன் வகையு ளொன்று.



**வழுக்கைத்தலை** *vaḻukkai-t-talai,* பெ.(n.) பொட்டலாயிருக்கும் தலை; bald head.

*[மழுக்கை → வழுக்கை + தலை]*

**வழுக்கைத்தேங்காய்** *vaḻukkai-t-tēṅgāy,* பெ.(n.) தெங்கினிளங்காய் (வின்.); tender cocoanut.

*[வழுக்கை + தேங்காய்]*

**வழுக்கைப்பசலை** *vaḻukkai-p-paśalai,* பெ.(n.) பசலை வகையுளொன்று; a kind of puslane.

மறுவ. வழுவற்றேங்காய்

*[வழுக்கை + பசலை]*

**வழுக்கைப்பசளை** *vaḻukkai-p-pašaḻai,* பெ.(n.) ஓர் வகைச் செடி; a prostate plant - portulaca oleracea.

*[வழுக்கை + பசளை]*

**வழுக்கைப்பயல்** *vaḻukkai-p-payal,* பெ.(n.) சிறுவன்; young boy, an adolescent.

*[மழு→மழுக்கை→வழுக்கை + பயல் = சிறுபயல் (தேவநேயம்.12, பக்.260).]*

ம→ வ = திரிபு

(ஒ.நோ.) மிஞ்சு→விஞ்சு.

**வழுக்கைப்பலா** *vaḻukkai-p-palā,* பெ.(n.) சுவை குன்றிய பலாவகை (வின்.); an inferior variety of jack tree.

*[வழுக்கை + பலா[1]]*

**வழுக்கைப்பள்ளம்** *vaḻukkai-p-paḻḻam,* பெ.(n.) பல்லின் சவ்வுப் பள்ளம்; pulp cavity.

*[வழுக்கை + பள்ளம்]*

**வழுக்கைப்புல்** *vaḻukkai-p-pul,* பெ.(n.) புல்வகையுளொன்று; a kind of grass-*Cyanotis axillaris.*

*[வழுக்கை + புல். புல்லுதல் = துளைத்தல். உல் →புல்.]*

பதினெண் வகைப் புல்வகையுளொன்று. புல்லுதல் என்னும் வினைச்சொல் வழக்கிறந்தது. புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகை.

பிடிக்குங்கால் சறுக்குந் தன்மையுள்ள புல்லே, வழுக்கைப்புல் எனலாம்.

**வழுக்கைமரம்** *vaḻukkai-maram,* பெ.(n.) கட்டிடப் பணிகளுக்குப் பயன்படும் மர வகைகளுள் ஒன்று; a kind of tree intended to building works.

*[வழுக்கை + மரம்]*

**வழுக்கைவிளநீர்** *vaḻukkai-viḻanīr,* பெ.(n.) முதிராத் தன்மையதும், இளம் பதத்திலுள்ளதும், நீர்மிகுந்துள்ளதுமான தெங்கினிளங்காய்; tender cocoanut with pulp kernal.

*[மழுக்கை→வழுக்கை (வழுவழுப்பான இளம்பருப்புள்ளீடு) + இளநீர்.]*

இளம் + நீர் = இளநீர். முதிராத வழுக்கைத் தெங்கினிளநீர்.

**வழுக்கோபிகம்** *vaḻu-k-kōbigam,* பெ.(n.) முளைக்கீரை; a greens-*Amaranthus gangeticus tender.*

**வழுங்கல்** *vaḻuṅgal,* பெ.(n.) அறிவற்றவன்; insensate person, senseless idiot, stupid, fool. *அவன் சுத்த வழுங்கல், அவனோடு யார் பேசுவார்? (இ.வ.).*

*[மழுங்கல் → வழுங்கல்]*

**வழுத்தரல்** *vaḻu-t-taral,* பெ.(n.) இறந்து போகை; (Jaina) dying, death. *"பின்னை வழுத்தரல் மரபிதென்றார்" (மேருமந். 567).*

*[வழுவு + தரு→தா-.]*

**வழுத்தரவு** *vaḻuttaravu,* பெ.(n.) வழுவி வீழ்கை; declining fall.

*[வழு+தரவு.]*

வழுத்து-தல் *vaḻuttu-*,5 செ.குன்றாவி. (v.t.) 1. வாழ்த்துதல்; to bless, to grace. *"வழுத்தினாள் தும்மினேனாக" (குறள், 1317).* 2. வணங்குதல்; to praise. *"வழுத்தியுங் காணாமலரடி" (திருவாச. 4, 9) (சூடா.).* 3. மந்திரம் சொல்லுதல்; to mutter chant, as mantras. *"மந்திர நாவிடை வழுத்துவராயினர்" (சிலம்பு.16:172).*

வழுத்தேமா *vaḻu-t-tēmā*,பெ.(n.) மலைமா; a kind of mango tree, grown in hilly areas.

வழுதலங்காய் *vaḻutalaṅ-gāy*, பெ.(n.) கத்தரிக்காய்; brinjal- *Dischrostachys cineria. இது கொடி வழுது துணைக்காய்.*

வழுதலை[1] *vaḻu-talai*,பெ.(n.) 1. கத்தரிக்காய் (பிங்.); brinjal; egg-plant-*Solanum* (சா.அக.). 2. கண்டங்கத்தரி வகை (மூ.அ.); Indian night shade.

வழுதலை[2] *vaḻu-talai*,பெ.(n.) 1. புல்லுருவி (அக.நி.); scarecrow made of straw. 2. புனத்திடும் பொய்க்கழு (சது.); dummy stake set up in corn fields as a warning to thieves.

வழுதலைக்கியாழம் *vaḻu-talai-k-kiyāḻam*, பெ.(n.) கண்டங்கத்திரியுடன், மருந்துச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சி வடித்த, கருக்குநீர்; decoction of Solanum jacquini.

*[வழுதலை + கியாழம்.]*

வழுதி[1] *vaḻudi*,பெ.(n.) பாண்டிய மன்னர்களின் புனை பெயர்களுள் ஒன்று; one of the nick names of Pāṇḍiyā kings. *'வழுத்தத் தக்கவன் வழுதி எனப்பட்டான்'*

*[வழுத்தி→வழுதி. வழுத்து = புகழ்]*

வழுதி[2] *vaḻudi*,பெ.(n.) பாண்டியமன்னன் (பிங்.); Pāṇḍiyaṉ king. *"பெரும்பெயர் வழுதி" (புறநா. 3).*

வழுதி என்பதையே இயற்பெயராய்க் கொண்டவன்.

வழுதிநாடு *vaḻudi-nāḍu*,பெ.(n.) வழுதி வளநாடு (திவ். திருவாய். **3:6:11**) பார்க்க; see *vaḻudi-vaḷanāḍu.*

*[வழுதி + நாடு]*

வழுதியச்சுவருக்கம் *vaḻudiya-c-cuvarukkam*,பெ.(n.) பாண்டியர் காசு வகை (S.I.I.V.90); a Pāṇḍiyar coin.

*[வழுதி + அச்சு +* ***Skt.*** *வர்க்கம்]*

**Skt.** varga > த. வருக்கம்.

வழுதியர் *vaḻudiyar*,பெ.(n.) பாண்டிய மரபின் ஐந்து கிளைக் குடிகளுளொன்று; one of five classes of Pāṇḍiya ancestery.

*[வழுதி→வழுதியர். 'அர்' பலர்பால் ஈறு.]*

வழுதிவளநாடு[1] *vaḻudi-vaḷa-nāḍu*, பெ.(n.) தென்பாண்டி நாட்டில் திருச்செந்தூர் மான வீரப்பட்டினம், வரகுணமங்கலம் முதலிய பகுதிகளடங்கிய நாடு; a region comprising Tiruchendūr, maṉa-vīrap-paṭṭiṉam in south Pāṇḍiya kingdom or country.

*[வழுதி + வளநாடு.]*

வழுதிவளநாடு[2] *vaḻudi-vaḷa-nāḍu*, பெ.(n.) ஆழ்வார் திருநகரியைச் சூழ்ந்த நாடு; the region around *āḻvār-tiru-nagari.* *"வண்டலம்புஞ்சோலை வழுதி வளநாடன்" (திவ். திருவாய். 2:8:11).*

*[வழுதி + வளநாடு.]*

வழுது[1] *vaḻudu,* பெ.(n.) பொய் (பிங்.); lie, falsehood.

*[வழு→வழுது.]*

வழுது[2] *vaḻudu,* பெ.(n.) வைக்கோல் (பிங்.); straw.

*[வய்→வை→வைது→வழுது.]*

ஒருகா. பழுது→ வழுது.

வழுதுணங்காய் *vaḻutuṇaṅgāy,* பெ.(n.) கத்தரியின் காய் (மதுரைக். 529, உரை); unripe fruit of brinjal.

*[வழுதுணை + காய்]*

வழுதுணை[1] *vaḻu-tuṇai,* பெ.(n.) முள்ளுக் கத்திரி; brinjal with prickles.

வழுதுணை[2] *vaḻutuṇai,* பெ.(n.) வழுதலை[1], 1 பார்க்க; see *vaḻutalai. "வட்டும் வழுதுணையும் போல்வாரும்" (நாலடி, 264).*

வழுதுணைத்தழும்பன் *vaḻu-tuṇai-t-taḻumbaṉ,* பெ.(n.) தழும்புள்ளதால் ஒருவனுக்குண்டாகிய பெயர்; named after a smudge, causitive name after a smudge. *"பிடிமிதி வழுதுணைப் பெரும் பெயர்த்தழும்பன் கடிமதில் வரைப்பின் ஊனூர் உம்பர்" (அகநா. 227:17 – 18).*

*[வழுதுணை + தழும்பன்.]*

வழுந்தல் *vaḻuntal,* பெ.(n.) 1. காய்ப்பேறல்; excoriation. 2. வழுவுறல்; abrasion.

வழுந்து–தல் *vaḻundu-,* 5 செ.கு.வி.(v.i.) தோலுரிதல் (வின்.); to be excoriated, wear off, as the skin.

*[அழுந்து → வழுந்து–.]*

வழுநிலை *vaḻu-nilai,* பெ.(n.) சொல் முதலியன இலக்கணத் தவறாக வருகை (நன். 374, மயிலை.); (Gram.) erroneous use, as of a word, dist. fr. *vaḻā-nilai.*

தமிழுக்கு எது வழுநிலையோ, அது பிற மொழிகட்கு வழாநிலையாம். தமிழுக்குச் செம்மை இன்றியமையாத பண்பாயிருத்தலினாலேயே, அது செந்தமிழ் எனப்பட்டது. பொதுமக்களோடு எத்துணைக் கொச்சையாகப் பேசினும் ஏடெடுத் தெழுதும் போதும், மேடையேறிப் பேசும்போதும், இலக்கண நடையைக் கையாள வேண்டுமென்பதே தமிழ்மரபு.

வழுநீர் *vaḻu-nīr,* பெ.(n.) கண்ணினின்று ஒழுகும் பீளை; rheum in the eye. *"கழுநீர்க் கண்காண் வழுநீர் சுமந்தன" (மணிமே. 20:47).*

*[வழு + நீர்.]*

வழுப்பாசி *vaḻu-p-pāśi,* பெ.(n.) பயிர்க்குக் கேடு புரியும் பாசிவகை (இ.வ.); lichen which causes injury to crops.

*[வழு + பாசி.]*

வழும்பு[1] *vaḻumbu,* பெ.(n.) 1. குற்றம்; fault. *"வழும்பில் சீர்நூல்" (நாலடி, 352).* 2. தவறு, பிழைபாடு; error, mistake. 3. தீங்கு; evil, harm. *"வழும்பு கண்புதைத்த...... பாசி" (மலைபடு. 221).*

*[வழு→வழும்பு.]*

வழும்பு[2] *vaḻumbu,* பெ.(n.) 1. கொழுப்பு, நீர்மக்குழம்பு (பிங்.); fat. *"வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள்" (நாலடி, 46). "அழுந்து விழுப்புண் வழும்புவாய் புலரா எவ்வ நெஞ்சத்து எஃகெறிந் தாங்கு" (நற்–97–1–2.).* 2. நிணம் முதலியவற்றின் மேலுள்ள வழவழப்பான நீர்ப் பண்டம்; slimy

substance, mucus, as on fat or on new - born calf. *"வழும்பறுக்க கில்லாவாந் தேரை" (நாலடி, 352).* 3. அழுக்கு (வின்.); filth, impurity.

*[முழு→மழு→வழு→வழும்பு.]*

வழுமூட்டு[1]–தல் *va/u-mūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தோலுரிதல் (வின்.); to be excoriated, wear off, as the skin.

*[வழு + மூட்டு–.]*

வழுமூட்டு[2]–தல் *va/u-mūṭṭu-,* 5 செ. குன்றாவி.(v.t.) 1. இணங்கச் செய்தல்; to reconcile. 2. மென்மையாக்குதல்; to smoothen. 3. வெளிவராமல் அடக்கி விடுதல்; to hush up, as an affair.

*[வழு + மூட்டு–,]*

வழுமெனல் *va/um-enal,* பெ.(n.) 1. வழு வழுப்புக்குறிப்பு; smoothness. 2. தெரிந்தும், தெரியாதவர் போல் அடக்கமாயிருப்பது; being silent and secretive.

*[வழும் + எனல். என் + அல் = எனல்.]*

வழுவநாதி *va/uva-nādi,* பெ.(n.) (சுழுத்தி) அறிதுயில்; a kind of trance.

வழுவமை–த்தல் *va/u-v-amai-,* 4 செ. குன்றாவி.(v.t.) இலக்கண வழுவாயினும் அமைவதாகக் கொள்ளுதல் (தொல். சொல். 31, சேனா.); (Gram.) to treat certain grammatical errors as permissible.

*[வழு + அமை–.]*

ஒரு பொருளின் தன்மையை முழுமையாக ஒரு சொல் விளக்காதமையினும், ஒருவாற்றான், அப் பொருளை விளக்கும் பாங்கினில் அமைத்துக் கொள்ளுதல். வழுவமைத்தல் குறித்துச் சுப்பிரமணிய தீட்சிதர், தமது பிரயோக விவேகத்தில் விளக்குவது வருமாறு :– "குறித்த பொருட்கு உரிய சொல் அன்று ஆயினும், ஓராற்றான் அப்பொருளை விளக்குதலின் அமைக என்றல் வழுவமைத்தலாம்" (சுப்பி.பிரயோக.44).

வழுவமைதி *va/-v-amaidi,* பெ.(n.) இலக்கண வழுவாயினும் ஒரு பயன்நோக்கி ஆன்றோரால் அமைக வென்று கொள்ளுகை (தொல்.சொல்.41, சேனா.); (Gram.) sanctioned deviation from grammatical rules, as in tense, person, gender, recognised anomaly.

*[வழு + அமை→அமைதி]*

வழுவமைதி குறித்துச் சேனாவரையர் செப்புவது :– குறித்த பொருட்குரிய சொல்லன்றாயினும், ஒருவாற்றான் அப் பொருள் விளக்குதலின் அமைக வென்றல் (தொல். சொல்.11, சேனா.).

வழுவமைதிவினை *va/uvamaidi-vinai,* பெ.(n.) வழுவாயினும் வழுவற்றது போல் இலக்கணியரால் அமைக்கப்பெற்ற வினை (த.வ.180); (Gram.) sanctioned deviation from grammatical rules, as in verb, recognised anomaly.

*[வழுவமைதி + வினை.]*

உண்டு என்னும் குறிப்பு வினைமுற்று முதற்கண் படர்க்கை ஒன்றன்பால் வினையாயிருந்து பின்பு ஐம்பால் மூவிட ஈரெண் பொது வினையாய் வழங்குகின்றது.

வழுவல் *va/uval,* பெ.(n.) 1. நழுவுகை (வின்.); sliding down, letting slip. 2. வழு, 1, 2 பார்க்க; see *va/u. (காரியத்துக்கு) தொழிலுக்கு வழுவல் வாராமல் பார் (வின்.).* 3. இளந்தேங்காயின் வழுக்கல் (யாழ்.அக.); soft pulp in a tender coconut.

*[வழு→வழுவு→வழுவல்]*

வழுவழு–த்தல் *va*l*u-va*l*u-*,4 செ.கு.வி. (v.i.) 1. வழுக்குதல்; to slip. *"வாளமர் நீந்தும் போழ்தின் வழுவழுத் தொழியு மென்றான்".* 2. வழுவழுப்பாதல்; to be slippery, smooth or polished. 3. உறுதியறுதல்; to be infirm or unsteady. *"வழுவழுத்த வுறவதனின் வயிரம்பற் றியபகையே வன்மையாமே" (தண்டலை. 83).*

*[மழு→மழுமழு→வழுவழு→வழுவழு–.]*

வழுவழுக்கு *va*l*u-va*l*ukku,* பெ.(n.) வழுவழுப்பு பார்க்க; see *va*l*u-va*l*uppu.*

*[வழு→வழுக்கு.]*

வழுவழுத்தபண்டம் *va*l*u-va*l*utta-pa*n*dam,* பெ.(n.) வழவழப்பான பொருள்; mucous substana, unctuous.

*[வழுவழுத்த + பண்டம்]*

வழுவழுத்திறங்குகை *va*l*u-va*l*u-t-tira*ṅ*gugai,* பெ.(n.) அருவருப்பான பொருளைக் கண்டவிடத்துண்டாகும், குமட்டலுணர்வு; a feeling on facing unwanted or undesinable thing, as of exereta.

*[வழுவழுத்து + இறங்குகை. இறங்கு→ இறங்குகை. 'கை' சொல்லாக்க ஈறு.]*

வழுவழுப்பு *va*l*u-va*l*uppu,*பெ.(n.) 1. கொழுகொழுப்பு; clamminess, sliminess. குட்டியாடு கொழுத்தாலும், வழுவழுப்புத் தீராது (உ.வ.). 2. வழுக்குந் தன்மை; slipperiness. *"நிலம் பாசி படர்ந்து வழுவழுப்பாயுடைமை (வின்.).* 3. உயவுத் தன்மை; lubricity, oiliness. 4. மென்மை; smoothness. 5. பளபளப்பு (இ.வ.); gloss.

*[வழுவழு → வழுவழுப்பு (எண்ணெய்ப் பிசுக்கு).]*

வழுவழுப்புள்ளவை *va*l*u-va*l*upp-u*ll*avai,* பெ.(n.) நெய்மக் குழை வுடையவை; unctuous substance.

*[வழுவழுப்பு + உள்ளவை]*

வழுவழுப்பு = எண்ணெய்ப் பிசுக்கு.

வழுவழெனல் *va*l*uva*l*e*n*al,* பெ.(n.) 1. மென்மைக் குறிப்பு; smoothness, soft-natured altitude. 2. விரைவுக் குறிப்பு (நாமதீப. 687); swiftness, quickness, hurriedness.

*[வழுவழு + எனல்]*

வழுவற்றேங்காய் *va*l*uvarrēṅgāy,* பெ.(n.) வழுக்கலுள்ள இளந்தேங்காய் (வின்.); tender coconut in which the pulpy matter has just begun to form.

*[வழுவல் + தேங்காய்]*

வழுவன் *va*l*uva*n*,*பெ.(n.) 1. மீன்வகை; a kind of fish. 2. தன் உடற்கொழுப்பைக் கடல் மேற்பரப்பில் மிதக்கவிட்டு, செத்தது போல் இருக்கின்ற மீன்; pretention of the fish as if dead.

*[வழுவு→வழுவன்]*



பறவையின் கவனத்தைக் கவர கொழுப்பினை யுமிழ்ந்து நீரின் மீது பரப்பி, இறந்ததைப் போல் இருக்கும். பறவை அதன் மீதமர, உடனே வாரிச்சுருட்டி வாயிலிட்டு விழுங்குந் தன்மை கொண்ட மீன்.

**வழுவன்சுறா** *valuvan-šurā*, பெ.(n.) கரு வெண்மை நிறமும், 12 அடி வளர்ச்சியுமுள்ள சுறாமீன் வகை (வின்.); man eating shark, dark grey, attaining 12 ft. in length.

*[வழுவன் + சுறா]*



**வழுவாங்கி** *valu-vāṅgi*, பெ.(n.) மருந்திலை வகையுளொன்று; a kind of medicinal shrub.

**வழுவாடி**[1] *valuvāḍi*, பெ.(n.) வாழ்வுதருந் தொழிலை நழுவ விடுபவன் (சங்.அக.); one who is careless or negligent in one's affairs, indifferent person.

*[வழுவாளி→ வழுவாடி.]*

**வழுவாடி**[2] *valuvāḍi*, பெ.(n.) பாலைத் தீவுக்கண்மையில், அதிகம் பிடிபடும் ஒருவகைத் திருக்கைமீன்; a kind of fish caught in sea bed of desert islands.

*[வழுவாளி→ வழுவாடி.]*

**வழுவாதநாழி** *valuvāda-nāli*, பெ.(n.) சரியான அளவுபடி; correct or accurate measure. *"நாலு உழக்கு வழுவாத நாழியால்..... அட்டுவேனானேன்" (S.I.I.i. 115).*

*[வழுவாத + நாழி = குற்றமற்ற, சரியான நிறைநாழி.]*

**வழுவாமை** *valuvāmai*, பெ.(n.) 1. நேர்மை (வின்.), முழுமை, வாய்மை; integrity. 2. நடுநிலை பிறழாமை; rectitude, uprightness of heart. 3. பிழைபடாமை; absence of error, inerrancy.

*[வழுவு + ஆ + மை]*

நெறிபிறழாமையே வழுவாமையாம். 'ஆ'– எதிர்மறை இடைநிலை, 'மை' சொல்லாக்க ஈறு.

**[ஒ.நோ.]** நழுவாமை, கழுவாமை

**வழுவாய்** *valuvāy*, பெ.(n.) 1. தப்புகை; escape. *"வழுவாயுண்டென மயங்குவோள்" (மணிமே. 11 : 130).* 2. கரிசு (பாவம்.); sin. *"வழுவாய் மருங்கிற் கழுவாயு முண்டென" (புறநா. 34,4).*

*[வழுவு → வழுவாய்]*

**வழுவி** *valuvi*, பெ.(n.) அத்தி (சங்.அக.); country fig.

**வழுவிச்சம்** *valuviccam*, பெ.(n.) நத்தைச் சூரி; a kind of plant.

**வழுவிலாஅடிமை** *valuvilā-aḍimai*, பெ.(n.) 1. குற்றம் இழைக்காத பணியாளன்; unflemished employee. 2. குற்றமற்றவன்; white-hearted man, flawless person.

*[வழு→ வழுவு + இல் + ஆ + அடிமை. 'இல்' எதிர்மறை இடைநிலை. 'ஆ' பெயரெச்ச ஈறு.]*

**வழுவு[1]–தல்** *vaḻuvu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தவறுதல்; to err, to swerve from the right, to go astray. *"தன்னியல் வழாஅது" (புறநா. 25).* 2. நழுவுதல்; to miss, as a step, to sway down, as a load, to be turned out of a course. *"முகில் வழுவி வீழ்வன" (சூளா. அரசி. 386).* 3. சறுக்குதல்; to slip. *"வழூஉ மருங்குடைய வழாஅ லோம்பி" (மலைபடு. 215).* 4. குறைவுடையதாதல்; to be inaccurate, to be deficient. *"வழுவாத நாழி" (S.I.I.i,115).*

*[வழு → வழுவு–.]*

**வழுவு[2]** *vaḻuvu*, பெ. (n.) வழு பார்க்க; see *vaḻu.*

*[வழு → வழுவு.]*

**வழுவுடைக்காமம்** *vaḻuvuḍāi-k-kāmam*, பெ. (n.) அகத்திணை ஏழனுள் ஒன்றானதும் ஒத்த இனமல்லாதவளுடனாவது, இயற்கைக்கு (விதிக்கு) மாறாகவாவது, தன்னை விட அகவையில் முதிர்ந்தவ ளோடாவது, மனம் ஒவ்வாதவ ளோடாவது கூடும் காதல் (அகப்.); improper love, as when it is in violation of customary rules or when the woman is older than the man or is of a different caste or does not consent, one of seven *aga-t-tiṇai.* *"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்" (தொல்.947).*

மறுவ. பெருந்திணை.

*[வழு→வழுவு + உடை + காமம். கமம்→ காமம்.]*

கமம் = நிறைவு, மகிழ்வு, விருப்பம்.

*"கமம் நிறைந் தியலும்" (தொல்.938).*

வடமொழியாளர் 'காம்' என்னும் சொல்லுக்கு 'கம்' என்பதை மூலமாகக் காட்டுவர். இஃது பொருட் பொருத்தப்பாடற்றது.

வடமொழியில் "கம்" இடைச் சொல்லாகவும், நான்காம் வேற்றுமையுருபாகவும், வழங்குகிறது. ஆம், நலம் என்னும் பொருண்மை பயப்பது.

ஆனால் தமிழின் கண்ணே நிறைவுப் பொருண்மையில் வழங்குவதாகத் தொல்காப்பியர் குறித்துள்ளது, பொருட்பொருத்தப்பாடுடையது.

வழுவுடைக்காமம் என்பது இங்கு குறைவுடைய நிறைவினைக் குறித்ததென்க.

தலைவன், தலைவியர் அகவை, இனம் போன்றவற்றுள், ஏதேனுமொன்று குறைவுள்ள தன்மையில் கூடுங்காலுண்டாகும் காமமே வழுவுடைக் காமமாகும்.

**வழுவுண்டகாயம்** *vaḻuvuṇḍa-kāyam*, பெ. (n.) சுவர் முதலியவற்றில் உராய்வதாலோ அல்லது கயிற்றைக் கையில் அழுத்திப் பிடித்திழுப்பதனாலோ ஏற்பட்ட புண்; a wound caused by violent rubbing of friction as by rubbing against a wall or by a rope pulled through the hands-brush burn.

*[வழு + உண்ட + காயம். கள்→கய்→காய் →காயம்.]*

**வழுவுண்டபுண்** *vaḻuvuṇḍa-puṇ*, பெ. (n.) தேய்வுண்டபுண், உராய்ந்த புண்; abrasion.

*[வழு + உண்ட + புண்]*

**வழுவுண்ணல்** *vaḻu-vuṇṇal*, தொ.பெ. (vbl.n.) தேய்தல், குறைதல்; getting abrasion.

*[வழு→வழுவுண்ணல்.]*

அழுத்த மிகுதியாலுண்டாகும், தேய்மானம் அல்லது குறைபாடு.

வழுவை[1] *valuvai,* பெ.(n.) 1. மலையெருக்கு; mountain madar, calotropis gigantia. 2. நாய்ப்பாகல்; a kind of bitter gourd.

வழுவை[2] *valuvai,* பெ.(n.) யானை (சூடா.); elephant.

*[வழு → வழுவை]*

வழூஉ *valūu,* பெ.(n.) வழு பார்க்க; see *valu.* *"வழூஉச் சொற் கோவலர்" (கலித். 106).*

*[வழு → வழூஉ]*

வழூஉச்சொற்புணர்த்தல் *valūu-c-corpunarttal,* பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள், பிழையுள்ள சொற்றொடர்களை அமைக்குங் குற்றம் (நன்.12); employment of improper or inappropriate phrases or words and terms, one of ten nūr-kurram.

*[வழூஉ + சொல் + புணர்த்தல்]*

வழூஉநிலை *valūu-nilai,* பெ.(n.) வழுநிலை (வின்.) பார்க்க; see *valunilai.* erroneous use of (gram.) words.

வழை *valai,* பெ.(n.) 1. சுரபுன்னை; long-leaved two-sepalled gamboge. *"வழைவளர் சாரல் (கலித். 50). (தேவ நேயம்.12, பக்.259).* 2. வழைச்சு பார்க்க; see *valaiccu.* *"பாகரிறை வழை மதுநுகர்பு" (பரிபா. 11:66).*

*[முல் → முள் → மள் → மழ → (வழ்) → வழை.]*

இளமை, புதுமை போன்ற பொருண்மையைக் குறிக்கும் "மழ" என்னும் முதனிலையினின்று தோன்றிய சொல்.

வழைச்சு *valaiccu,* பெ.(n.) புதுமை; freshness, as of palm juice, raw or unripe condition. *"சாடியின் வழைச்சற விளைந்த..... நறும்பிழி" (பெரும்பாண். 280).*

*[முல் → முள் → மள் → மழ → (வழ) → வழை → வழைச்சு]*

ம → வ மெய்யினத் திரிபு.

ஒ.நோ.மிஞ்சு → விஞ்சு.

"முல்" என்னுமுதனிலை, இளமை, சிறுமை, புதுமை போன்ற பொருண்மை பொதிந்த சொற்களை உருவாக்கும் வேர் மூலமாகும்.

வீரம் போன்ற பொருட்பொருத்தப்பாட்டில், இம் முதனிலை கழக இலக்கியத்துள் பயின்று வந்துள்ளது.

(எ.கா.) "சாடியின் வழைச்சற விளைந்த" (பெரும்பாண்.280).

முல் → முள் → மள் → மள்ளன் = இளைஞன்.

"பொருவிறல் மள்ள" (திருமுருகு.262). மள் → மழ → வழ = இளமை, புதுமை, புதியதாகத் தோன்றிய குழவி.

"மழவும் குழவும் இளமைப் பொருள" (தொல்.796).

மழ → மழலை + தேன் = மழலைத்தேன்.

மழலைத்தேன் = புதியதாகத் தோன்றிய தேன்.

முள் → (மள்) → மழ → வழ → வழை → வழைச்சு

புதுமை, சிறுமை, அழகு, இளமை போனற் பொருட்களைச் சுட்டும். முல் → மள → மழ என்னும் போன்ற பொருண்மைகளைக் குறிக்கும். ஏரணமுறை வளர்ச்சியில் வழை, வழைச்சு போன்ற சொற்கள் தோன்றின.

**வழைமது** *vaḻai-madu,* பெ.(n.) புளிப்புச் சுவையற்ற இளமது; unfermented liquor.

*[வழை + மது. வழை = இளமை, புதிது.]*

**வள்**[1] *vaḷ,* பெ.(n.) 1. வளம்; fertility, abundance, profitable, increase. *"வள்ளிதழ் மாலை" (சீவக. 2732).* 2. பெருமை; largeness, nobility. 3. மேன்மை; greatness. 4. நெருக்கம் (வின்.); narrowness, little-mindedness.

*[முல்→மல்→வல்→வள்.]*

**வள்**[2] *vaḷ,* பெ.(n.) 1. கூர்மை (பிங்.); sharpness, pointedness. *"வள்வாயமதி" (தேவா.209, 1).* 2. வாள் (பிங்.); sword. 3. வார் (சூடா.); thong, lash. 4. வாளுறை (அக.நி.); sheath. 5. கடிவாளம்; bridle. *"புரவி..... வாங்குவள் பரிய" (அகநா. 4).* 6. காது (பிங்.); ear. 7. படுக்கை; bed. *"வள்ளே துணியே யிவற் றொடு" (ஏலாதி. 50).*

*[வல்→வள்.]*

**வள்**[3] *vaḷ,* பெ.(n.) 1. வலிமை (பிங்.); strength, being strong, physically powerful. *"வள்வார் முரசு" (பு.வெ.3, 2, கொளு.).* 2. வலிப்பற்றிரும்பு (பிங்.); cramp-iron, iron-band.

*[வல்→வள். வல் = வன்மை, வலிமை. வலிமையுடன் வலித்துக் கொள்ளும் பற்றிரும்பு.]*

**வள்பு** *vaḷpu,* பெ.(n.) வள்[2], 3 பார்க்க; see *vaḷ*[2], *3. "மாசற விசித்த வார்புறு வள்பின்" (புறநா. 50). "வலவன் வள்பு ஆய்ந்து ஊர" (நற்–11.8), "வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்பு" (நற்–82, 9).*

*[வல்→வள்→வள்பு.]*

**வள்வாய்ஆழி** *vaḷ-vāy-āḻi,* பெ.(n.) பெருமை வாய்ந்த தேருருள்; royal wheel. *"வள்வாய் ஆழி உள்வாய் தோயினும் புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா" (நற்.78:8–9).*

*[வள்வாய் + ஆழி.]*

**வள்வு** *vaḷvu,* பெ.(n.) வள்[2], 3 பார்க்க; see *vaḷ*[2], *3. "வள்வாய்ந்து பண்ணுக" (பு.வெ.12, இருபால். 3).*

*[வள்→வள்வு.]*

**வள்ளக்கடவு** *vaḷḷa-k-kaḍavu,* பெ.(n.) தோணியில் ஏறியிறங்கும் துறை (நாஞ்.); jetty.

*[வள்ளம் + கட→கடவு]*

**வள்ளக்களி** *vaḷḷak-kaḷi,* பெ.(n.) தோணி செலுத்தும் போட்டி (நாஞ்.); boat-race.

*[வள்ளம் + களி]*

**வள்ளக்கால்** *vaḷḷa-k-kāl,* பெ.(n.) 1. வளைந்த கால் (இ.வ.); bow-leg. 2. பரம்புப் பலகையை நுகத்தோடு சேர்ப்பதற்குரிய மூங்கிற் பிளவு (நாஞ்.); the bamboo lath connecting the levelling wood plant and the yoke of a field-leveller.

*[வள்ளம் + கால்]*

**வள்ளங்குதி-த்தல்** *vaḷḷaṅ-kudi-,* 4 செ. குன்றாவி.(v.t.) வள்ளம், கடல் அலைகளில் முன்னேறும் போது குதித்துத் தாவுகை; jumping by a leap while canoe is progressing among tides.

*[வள்ளம் + குதி–.]*

**வள்ளச்சி** *vaḷḷacci,* பெ.(n.) உருள்கடலை (பட்டாணி); pea pulse.

வள்ளடி valladi, பெ.(n.) காதினடி (தைலவ.); lobe of ear.

*[வள்[2] + அடி]*

வள்ளப்போட்டி valla-p-pōtti, பெ.(n.) கடலில் வள்ளங்களை போட்டி போட்டுக் கொண்டு செலுத்துகை; to canol in sea competiting a water sports.

*[வள்ளம் + போட்டி.]*

வள்ளம்[1] vallam, பெ.(n.) 1. உண்ணுங் கலமாக உதவும் வட்டில் வகை (பிங்.); a dish for use in eating or drinking. *"வள்ளத் தவனேந்த ...... மது மகிழ்ந்தார்" (சீவக. 2700).* 2. நாழிகை வட்டில் (சூடா.); hour-glass, clepsydra. 3. மரக்கால் (பிங்.) பார்க்க; see *marakkāl.* 4. நான்கு மரக்கால் கொண்ட அளவு (வின்.); a measure of grain = 4 *marakkāl.* 5. இரண்டு அல்லது நான்கு படிகொண்ட அளவு (G.Sm.D.I, i, 286) (G.Tp.D.I, 178); a measure of capacity = 2 or 4 *padi.* .

க. பள்ள; ம. வள்ளம்.

*[வல் → வள் → வள்ளம்.]*

வள்ளம்[2] vallam, பெ.(n.) 1. சிறுதோணி; boat made trunk of a tree. 2. துடுப்பு வட்டின் உதவியால் செலுத்தப்படும்; தோணி அல்லது சிறு படகு; canoe, catamaram.

*[மல் → வல் → வல்லம் → வள்ளம். வட்ட வடிவுடன் அமைக்கப்பட்டதும், துடுப்பு வட்டின் உதவியால் செலுத்தப்படுவதுமான, தோணி வகை]*

வள்ளமாட்டம் vallam-āttam, பெ.(n.) கடல் அலை பேரளவில் எழும்போது வள்ளம் தத்தளிப்பது; shaking of canoe due to floating waves.

*[வள்ளம் + ஆட்டம்]*

வள்ளல்[1] vallal, பெ.(n.) வள்ளக்கீரை; a kind of greens.

வள்ளல்[2] vallal, பெ.(n.) 1. வரையாது வாரி வழங்குபவன்; person of unbounded liberality, liberal donor. 2. வண்மை, ஈகம், அருளியற்கொடையில் ஆர்வமுடைமை; benevolence.

*[வண் → வள் → வள்ளல்.]*

வள்ளல்[3] vallal, பெ.(n.) 1. திறமை, ஆற்றல், வல்லமை; ability, power. 2. மந்தணத் தொழில், தனி நடவடிக்கைகள்; private or personal affairs. *"அவன் வள்ளல் வெளிப்பட்டுவிட்டது" (வின்.).*

*[வல் → வள் → வள்ளல்.]*

வள்ளல்[4] vallal, பெ.(n.) கஞ்சன் என்னும் எதிர்மறைப் பொருளில் வழங்கும் மக்கள் வழக்கு; a common peoples usage in negative meaning as miser. *நீ பெரிய வள்ளல்; தெரியாதா? உன் வள்ளல் ஊர் அறியுமே? (இவறன் என்னும் எதிர்மறைப் பொருள் பயக்கும், வழக்குச் சொல்).*

*[வல் → வள் → வள்ளல்.]*

வள்ளல் = கருமி. இல்லை என்று கூறாமல், எல்லை இன்றி வழங்குவது வள்ளன்மை எனப்படும். நீயே என் கொடைப் பொருள் என ஒரு கோடு போட்டால் அக் கோட்டைக் கடந்து வரமாட்டானாம் பாரி. "வாரேன் என்னான் அவர் வரையன்னே" என்பது புறப்பாடல். அத்தகைய வள்ளன்மையைக் குறியாமல் அதற்கு எதிரிடைப் பொருளையும் வள்ளல் என்பது தருதல் வழக்கில் உண்டு. நீ பெரிய வள்ளல்; தெரியாதா? என்பதில் கருமி என்பது வள்ளற் பொருளாம், 'உன் வள்ளல் ஊரறியுமே' என்பது எள்ளலென எளிதல் புரியுமே. 'நீ பிறந்ததால்

தானே பாரி செத்தான்' என்பது இனிக் கொடையால் புகழ்பெற முடியாதென இறந்தான் என்பதைக் குறித்து, புகழ்வது போலப் பழிப்பதாம்.

வள்ளல்[5] *vaḷḷal*, பெ.(n.) தழுவு கொடிவகை; creeping bind-weed.

மறுவ. படர்கொடி

*[வல்→வள்→வள்ளல்.]*

வள்ளலார்[1] *vaḷḷalār*, பெ.(n.) திருவருட்பா முதலான அருளியல் நூல்களை இயற்றியவர்; a modern sage author of the *Tiruvaruṭpā* and some other pious works both prose and poetry.

மறுவ. இராமலிங்கர், இராமலிங்க அடிகள்.

*[வள்→வள்ளல் + ஆர்–வள்ளலார். 'ஆர்' சிறப்புப் பெயரீறு.]*

உயிர்கள்மாட்டு எல்லையில்லாப் பேரருள் பூண்டவர். அருட்பேரொளி ஆண்டவனை அனைவரிடத்தும் கண்டவர். எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணி, வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியவர். மன்பதையின் பசிப்பிணி போக்கும், மருத்துவனாகப் பிறந்தார். மனிதநேய ஒருமைப்பாடு மண்ணுலகில் நிலைபெற்று ஓங்குவதற்காக, 05.10.1823 (புரட்டாசி) கன்னி, 21, ஞாயிறு)ஆம் நாளன்று, கடலூர் மாவட்டத்திலுள்ள, வடலூரிலிருந்து 7 கல் தொலைவிலமைந்துள்ள மருதூரில், இராமையா–சின்னம்மை இணையருக்கு, அருட்பேரொளி ஆண்டவர்தம் அருளின் திருவுருவாகத் தோன்றினார்.

தை மாதம் 19–ஆம் நாள், வெள்ளிக்கிழமை (30.01.1874) அருட்பேரொளி ஆண்டவருடன் இணைந்தார்.

இயற்பெயர் : இராமலிங்கம்

சிறப்புப் பெயர் : திருவருட் பிரகாச வள்ளலார்.

உறைந்த இடங்கள் : சென்னை (1825–1858)
கருங்குழி 1858–1867
வடலூர் 1867–1870
மேட்டுக்குப்பம் 1870–1874

இயற்றிய நூல்கள் : 1. மனுமுறை கண்ட வாசகம்
2. சீவகாருணிய ஒழுக்கம்

பதிப்பித்த நூல்கள் : 1. ஒழிவிலொடுக்கம் – 1851
2. தொண்டைமண்டல சதகம் 1855
3. சின்மய தீபிகை–1857

அருளிய பாடல்கள் : திருவருட்பா ஆறு திருமுறைகள்

பாடல்களின் எண்ணிக்கை : 5818 மற்றும் ஆறு திருமுறைகளிலும் சேராத உரைநடைப் பகுதி. இதில் வாழ்விற்குத் தேவையான நெறிமுறைகள் விளக்கப்பட்டுள்ளன. குமுகாயத்திற்கு இன்றியமையாது வேண்டப்படும் உணவு, மருத்துவம், தவம் முதலான செய்திகள் செறிந்துள்ளன.

நிறுவிய நிலையங்கள் :

1. மெய்ந்நெறி பொதுநிலைக் கழகம் – 1865 (சமரச சன்மார்க்க சத்திய சங்கம்)
2. அறவுணவுச்சாலை (தருமச்சாலை) – 1867
3. மெய்யறிவுப் பேரவை (சத்திய அருள் ஞான அவை) – 1872
4. சித்தி வளாகம் – 1870

அன்பே அனைத்தையும் அளிக்கும் : இறைவன் அன்பெனும் பிடியுள் அகப்படும் அருளாளன். அனைத்துயிர்களிடத்தும் அருளறம் பூண்டு, ஏழை எளியவர்தம் இன்னலகற்றி, இன்சொல் பயிற்றிப் பசிப்பிணி களைபவர்தம் அருட்செயலில் அருட்பேரொளி ஆண்டவன் ஒளிர்கின்றான் என்பது, வள்ளலார்தம் பேரருட் கொள்கையாகும்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் பேதையரே, அகத்தே கறுத்தவராவார். கள்ளமனக் குரங்கின் வயப்பட்டு, தஞ்சமடைந்தவர்க்கு வஞ்சமிழைக்கும் வன்பு நெஞ்சத்தாரையும் வாழ்விக்கும் அளப்பெரும் அருளாளனின் அன்பின் மாட்சிமையை விளக்கும் வள்ளலார் பாடல் :

*"அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே*
*அன்பெனும் குடில்புகும் அரசே*
*அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே*
*அன்பெனும் கரத்தமர் அமுதே*
*அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே*
*அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே*
*அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே*
*அன்புரு வாம்பர சிவமே"*

வள்ளலார் வகுத்த மெய்ம்மை நெறி (சன்மார்க்கம்) : வள்ளலார், இவ்வையம் உய்யும் பொருட்டு, இறவாப் பெருநெறியாம், அனைத்துயிர்கள் மாட்டும் அன்பு செலுத்தும் அருள் நெறியை (ஜீவகாருண்யம்) உரைத்த பேரருளாளர். அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த மன்பதையர் (மக்கள்)தம் நெற்றிப் பொட்டில் (புருவமத்தியில்) அனைவருக்கும் அருள் வழங்கும் ஆண்டவன், அருட்பேரொளிப் பிழம்பாய் மிளிர்கின்றான் என்னும் மெய்யுணர்வை, உலகத்தவர்க்கு உணர்த்தியவர், வள்ளலார் ஒருவரே யெனலாம்.

ஞால மக்கள் அனைவருள்ளும், அருட்பேரொளி ஆட்சி செலுத்தும், மாட்சியை வள்ளலாரின் திருநெறிய திருவருட்பாக்கள் தெளிவுறுத்துகின்றன. "ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" என்னும் திருமூலரின் தீந்தமிழ்க் கொள்கையைச் செயற்படுத்தியவர் நம் வள்ளற் பெருமான். தெய்வம் ஒன்று என்னும் ஞாலந்தழீஇய நற் கொள்கைக்கு வித்திட்டவர், வள்ளலார். எங்கும் நிறைந்து ஒளிரும் அருட்பேரொளி ஆண்டவன், அனைவர் உள்ளத்திலும் மிளிர்கின்றான். மன்பதை மக்கள் அனைவரையும், அருட்பேரொளி இறைவனின் மறுபதிப்பாய்க் காணும் பாடல்கள் :

*"மாயையால் கலங்கி வருந்திய போதும்*
*வள்ளல் உன்தன்னையே மதித்து உன்*
*சாயையாய்ப் பிறரைப் பார்த்ததே அல்லால்*
*தலைவ! வேறு எண்ணியது உண்டோ?"*

கொலை–புலால்–தவிர்த்தலே வாழ்வியல் அருளறம்: ஞாலத்துவாழ் மக்களனைவரும் தொழத்தக்க நிலையில், வள்ளுவத்தின் வழிநின்று, தாமும் ஒழுகி, பிறரையும் வழிநடாத்தி வாழ்வில் ஓங்கச் செய்த பெருமை வள்ளலாரையே சாரும்.

*"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி*
*எல்லா உயிரும் தொழும்" (குறள், 260).*

உற்ற நோய் நோன்றலையும், அஃதாவது தன்துயர் பொறுத்துப் பிறருக்குப் பேரருள் புரிவதையுமே வள்ளலார் வாழ்வாகக் கொண்டார். பசியினால் இளைத்து, வீடு தோறும் இரந்துண்டு இன்னலுறுவோரைக்கண்டு வருந்தும் வள்ளலார் சிறுதெய்வ வழிபாட்டில், ஆடு, பன்றி வெட்டியுண்ணும், இழிதகையர் தமைக்கண்டு நெஞ்சு நடுக்குற்றுக் கூறுவது:–

*"நலிதரு சிறிய தெய்வமென் றையோ நாட்டிலே*
*பலபெயர் நாட்டிப்*
*பலிதர ஆடுபன்றிக் குடங்கள் பலிக்கடா முதலிய*
*உயிரைப்*
*பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே புந்தி*
*நொந்து உளநடுக்குற்றேன்" (அருட்பா.3471).*
*"துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் சொல்லத்*
*தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்*
*கண்ணினால் ஐயோ பிறவுயிர் பதைக்கக் கண்ட*

*காலத்திலும் பதைத்தேன்*
*மண்ணினில் வலையும் தூண்டிலும் கண்ணி வகைகளும்*
*கண்ட போதெல்லாம்*
*எண்ணிஎன் உள்ளம் நடுங்கிய நடுக்கம் எந்தைநின்*
*திருவுள்ளம் அறியும்" (அருட்பா,3473)*

என்னும் அருட்பாக்கள் வாயிலாக உயிர்க்கொலை புரியுங்கால், அவருள்ளம் பதைத்த பாங்கினைத் தெள்ளிதில் அறியலாம். ஒவ்வொரு மனிதனும் தம் வாழ்வில் கொல்லாமை என்னும் அருளறத்தின் வழிநின்று, அனைத்துயிர்கள் மாட்டும் அன்பு செயின், மன்பதை வாழ் மக்களுள் தெய்வமாக மதிக்கப்படுவான் என்பதற்கு வள்ளலாரே எடுத்துக்காட்டாகத் திகழ்கிறார். அங்கிங்கு என்றில்லாது எவ்வுயிரிடத்தும் நீக்கமற நின்றொளிரும், இறைவனைக் காண வேண்டுமானால், எல்லோரிடத்தும் ஆரா அன்பு பூண்டொழுக வேண்டும் என்பதே வள்ளலாரின் வாழ்வியற் கொள்கையாகும்.

திருநெறிய தீந்தமிழின் செழுமையைப் பாடும் பாங்கு :

திருநெறிய தீந்தமிழின் அருளியற் சிறப்பை வள்ளலார், பாடியுள்ள பாங்கு, அனைவருக்கும் அருளை வாரி வழங்கும் வகையில் அமைந்துள்ளது.

(எ.டு.)

*"மடிக்குறும் நீர்மேல் எழுத்தினுக் கிடவே*
*மைவடித் தெடுக்குநர் போல*
*நொடிக்குளே மறையும் உடம்பினை வளர்க்க*
*நொந்தனன் நொந்ததும் அல்லால்*
*படிக்குளே மனத்தால் பரிவுறுகின்றேன்*
*பாவியேன் தனக்கருள் புரியாய்*
*வழக்குறும் தமிழ் கொண்டன்பருக்கு*
*அருளும் வள்ளலே ஒற்றியூர் வாழ்வே"*
*(அருட்பா, 875).*

*"எந்தை உனைப்பாடி மகிழ்ந்தின்புறவே*
*வைத்தருளிச் செந்தமிழின்*
*வளர்க்கின்றாய்" (அருட்பா, 4802)*
*"தண்டமிழ்க் கவிதைபோல் சாந்தமிக்கது"*

(குடும்பகோஷம்–19) (அருட்பா–உரைநடைப் பகுதி) என்னும் மேற்கோள்கள் வாயிலாக, அருள் நலம் கெழுமிய, தெய்வத்தமிழின் திருவருட் சிறப்புகளைத் தெளிவுறுத்தியுள்ளார். தமிழென்னும் திருவருட் பெருங்கடலில் வள்ளலார் முக்குளித்து, அருளில் திளைத்த பான்மையினை திருவருட்பா 6 தொகுதிகளும், குமுகாயத்திற்கு உணர்த்துகின்றன.

இறவாப் பெருநெறி–எல்லாம்வல்ல அருட்பேரொளி : இறைவனின் இன்னருளால் மனிதப் பிறவியை அடைந்த ஆதன் (ஆன்மா) ஆண்டவர் ஒருவரே என்றுணர வேண்டும். அவன் அருட்பேரொளிப் பிழம்பாய் அனைவரிடத்தும் ஒளிர்கின்றான். அருட்பெருங்கடவுளின் தண்ணருட் பெருங் கொள்கையினைத் தன்னுள்ளே கொண்டொழுக வேண்டும். அனைத்துயிர் களிடத்தும் அன்புபூண்டு, அருள் வளர்க்க வேண்டும். இரக்கம் காட்ட வேண்டும்.

இறவாப்பெருநெறி : "யாம் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்" என்னும் திருமூலரின் திருப்பாட்டினை மெய்ப்பித்துக் காட்டிய பெருமை வள்ளலாரையே சாரும். "அரிதரிது மானுடராய்ப் பிறத்தலரிது" என்பது அவ்வையின் அருள்வாக்கு. "வாய்த்தது இப்பிறவி மதித்திடுமின்" என்பது நாவரசரின் நல்வாக்கு. வாய்த்தற்கரிய இம் மனிதப் பிறவியிலேயே, தம்முள் ஒளிரும், அருட்பேரொளி ஆண்டவரின் இன்னருளைப் பெற்று, இறவாப் பெருநெறியில் திளைத்தவர் வள்ளலார்.

எல்லாம்வல்ல இறைவனின் இன்னருள் இருந்தால்தான், தம்முள்ளே நெற்றியின் நடுவே, நின்றொளிரும் அருட்பேரொளி ஆண்டவனை அறியலாம். இறவாப் பெருநெறியினை ஈந்து

புரக்குந் தன்மையாளனாகிய, இவனே, வள்ளுவர் காட்டும் வாலறிவன். மாசுமருவற்றவன். பேரருட் பிழம்பினன். கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பு. வல்லார்க்கும், மாட்டார்க்கும் வரமளிக்கும் வரம். நல்லார்க்கும் பொல்லார்க்கும் இடையே நடுநின்றொளிரும் அருட்பிழம்பாம், முழுமுதற் கடவுள். இவ்வாறு அருட் பேரொளி இறைவன் எல்லோரிடத்தும் இலங்குவதால், அனைவரும் அனைத்துயிர் மாட்டும், அன்புபூண்டு அருள்நலம் பரவ வேண்டுமென்று இறைஞ்சுகின்றார் வள்ளலார். மேலும் பசியால் வாடும் வயிற்றிற்குச் சோறிட வேண்டும். வாடும் மாந்தர்தம் வாட்டத்தை யகற்றுபவனே, மன்பதையில் அனைவர்தம் உள்ளத்தேயும் உறைபவன் ஆவான். இறவா வாழ்வினை எளிதில் அடைவான். உறுபசி களைதலே, உயர்பேரறமாகும். அருட்பெருங் கடவுள் தமக்கு, இறவா நிலையளித்த செய்தியினை,

*"இறவாத பெருநிலையில் இணைசொலா இன்புற்றிருக்க எனை வைத்த குருவே" (அருட்பா. 3673)*

அருட்பேரொளி (சோதி)க் கடவுள் என்னுள் ஒளிர்கையில், எமன் என்னை அணுகவே மாட்டான் என்று கூறும் பாடல் (அருட்பா, 3702) எல்லோர் நெஞ்சிலும் எஞ்ஞான்றும் நின்று நிலவும்.

(எ.கா.)

*"எமன் எனும் அவன்இனி இலை இலை மகனே*
*எய்ப்பற வாழ்கஎன் றியம்பிய அரசே"*
*"ஈனமறுத்தென்றும் இறவாமைநல்கும் என்றே*
*ஞானமணி மன்றிடத்தே நண்பு வைத்தேன்*
*ஐயாவே" (திருவருட்பா.2950).*

மேற்குறித்த கண்ணியின் கண்ணே எஞ்ஞான்றும் இறவாப் பெருநெறியினை அருட்பெருங் கடவுளிடம் வள்ளலார் வேண்டுவது காண்க. கீழ்க்காணும் திருவருட்பா பாடல்களில், தண்ணளிமிக்க, அருட்பெருங்கடவுள், தமக்கு என்றும் இறவாப் பெருவாழ்வு தந்தமையைக் கூறியுள்ளார்.

திருவருட்பாப் பாடல் எண்கள் :– 126, 157, 1105, 3673, 3630, 3692, 3702, 3703, 3708, 4333, 4615, 4638, 4907, 4953, 4954, 5278, 5412, 5486, 5806.

சாகாவரம் பெற்றமையைக் குறிக்கும் திருவருட்பாப் பாடல் எண்கள் : 30308, 3208, 3709, 3848, 3893, 3910, 4328, 4464, 4543, 4583, 4615, 209, 1568, 4627, 4631, 4534, 4635, 4694, 4707, 4731, 4754, 4791, 4796, 4815, 4817, 4828, 4903, 4956, 5417, 5510, 5624.

(எ.டு.)

*"உள்ளம் தளிர்த்திடச் சாகாவரங் கொடுத்து" (திருவருட், 3848)* என்றும் மேற்குறித்த அருட்பா வரியில், அருட்பேரொளி ஆண்டவன், வள்ளலாருக்குச் சாகாவரம் தந்ததினால், அவர்தம் உள்ளம் தளிர்த்தோங்கிச் சிறந்தென்று குறித்துள்ளமை காண்க.

மரணமில்லாப் பெருவாழ்வு : அருட்பெருங் கடவுளான அருட்பேரொளி ஆண்டவர், மரணமில்லாப் பெருவாழ்வில், வாழச்செய்த திறத்தினை, 3074, 4952, 4957, 5295, 5576, 5598 முதலான திருவருட்பாப் பாடல்களில் பாடியுள்ளார். ஒன்றிரண்டு எடுத்துக்காட்டு :–

*"மரணமற்று வாழ்கவெனத் திருவார்த்தை*
*அளித்தாய்" – 3074.*
*"மரணத்தை விடுவித்துவிட்டேன்" – 4957.*
*"வம்மின் உலகியலீர், மரணமிலாப் பெருவாழ்வில்*
*வாழ்ந்திடலாம் கண்டீர்" – 5576.*

தாம் வாழ்ந்த மரணமில்லாப் பெருவாழ்வை மன்பதை மக்களனைவரும் பெற்றுய்யும் பொருட்டு

ஆண்டவரை அழைக்கும், வள்ளலாரின் அருள் பண்பை எடுத்துரைப்பார் எவருமில்லை. "இறைவனின் அருளே உலகை ஆள்வது" என்னும் வாழ்வியல் கொள்கை வகுத்தவரன்றோ? வள்ளலார்.

வள்ளலாரும் – வள்ளுவரும் :

அற்றார் அழிபசி தீர்த்தலிலும் (குறள், 226), கொல்லா நோன்பிலும், தன்னூன் பெருக்கத்துப் பிறவுயிர்களின் ஊனினை உட்கொள்ளும் மாந்தர்தமைக் கண்டு வெகுளும் வேகத்திலும் – வள்ளலாரும் வள்ளுவரும் ஒத்த கருத்துடையவராகத் திகழ்கின்றனர் எனலாம். பிறவுயிர்கள்மாட்டு பேரன்பு செலுத்தும், பெருநெறிக் கொள்கையில், வள்ளுவமும்– வள்ளலாரும், இணைந்தே செல்வதைக் காட்டும் பாடல்கள்:–

*"அன்பிற்கு உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்*
*புன்கணீர் பூசல் தரும்" (குறள், 71).*

*"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து*
*நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே*
*நிறைந்து நிறைந்து ஊற்றெழுங் கண்ணீர்*
*அதனால் உடம்பு*
*நனைந்து நனைந்து" (அருட்பா, 5576)*

*"தன்னூன் பெருக்கத்திற்குத்தான் பிறிதுஊன்*
*உண்பான்*
*எங்ஙனம் ஆளும் அருள்"*

கொல்லா நோன்பினையும், புலால் மறுத்தலையும் மாந்தர் கொண்டொழுக வேண்டிய தலையாய வாழ்வியற் கொள்கையாக – அருட்பா முழுவதிலும் பாடியுருகியுள்ளமை கண்டு தெளிக.

வள்ளலாரும் – திருமூலரும் :

திருமூலர் ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்று உரைத்தது போன்று, வள்ளலாரும், தம் வாணாள் இறுதியில் அருட்பேரொளிக் கடவுளை, முழுமுதற் கடவுளாகக் கொண்டார். தமது ஆறாம் திருமுறையில் அருட்பேரொளி ஆண்டவரையே முழுமுதற் கடவுளாக ஏற்றுப் பாடிய பாடல்கள், ஏராளமாகவுள்ளன. அருட்பேரொளி யகவலில் (அருட்பெருஞ்சோதி அகவல்) அருட்பெருங்கடவுள், வள்ளலாருக்கு அனைத்து ஆற்றலையும் தந்து, மகனே என்று மாறாக்காதலுடன் அழைத்துச் செங்கோலும், கணையாழியும் அளித்து, மணிமுடிசூட்டி, அருளாட்சி செய்யப் பணித்த பான்மையினைத் திருவருட்பாப் (4139, 4521, 5447, 3672, 4615, 4177, 4589, 4150–4153, 4156) பாடல்களில் தெளிவுறுத்தியுள்ளார்.

படமாடக் கோயிலிலுள்ள இறைவனுக்குப் பூசை செய்வதைவிட, நடமாடுங் கோயிலாக, நாட்டினில் உலாவரும், ஏழை எளியவர்க்கு உதவுவதும், அவர்தம் அழிபசி போக்குவதுமே, உயர்பேறமாக வள்ளலாரும் – திருமூலரும், ஏன் வள்ளுவப் பெருந்தகையும், வலியுறுத்துவது காண்க.

*"அற்றார் அழிபசி தீர்த்தல்; அஃதொருவன்*
*பெற்றான் பொருள் வைப்புழி" (குறள், 226).*

மன்பதையில் பொருளுள்ளவனின் கடமை, ஏதுமற்ற ஏழைகளின் வயிற்றுப் பசி தவிர்த்தலே யாகும்.

*"உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்"*

என்னும் திருமூலர் வாக்கினுக்கு ஏற்ப, வள்ளலார் இலக்கியம் படைத்துள்ளார் எனலாம்.

ஐந்தொழில் ஆற்றும் ஆற்றல் பெற்றமை :

அருட் பெருங்கடவுள் வள்ளலாருக்கு ஐந்தொழில் புரியும் ஆற்றல் அளித்தமையை,

*"ஆக்கி அளித்தல்முதல் ஆந்தொழில் ஓர்*
*ஐந்தினையும்*
*தேக்கி அமுதொருநீ செய் என்றான்"*

*(அருட்பா.4045)*

என்னும் பாடலிலும், (திருவருட்பாடல் எண்கள் 3948, 4045, 4139, 4150–4152, 4519, 4580, 4591, 4797–4807, 5034, 5383, 5509) ஆறாம் திருமுறை முழுவதிலும், விரிவாக விளக்கியுள்ளமை காண்க.

தன்னையறியு அறிவே தனிப்பெரும் அறிவு : ஒவ்வொருவரும் முதற்கண் வெந்ததைத் தின்று மடிவதையே, வாழ்வின் பொருளாகக், கொள்ளாது, தனது வளமையை, அறிவை, ஆற்றலை, விளக்கமறத் தெரிந்து, தேர்ந்து தெளிய வேண்டும் என்பதே வள்ளலார் வாக்கு.

*"தன்னையறிந்து இன்பமுற வெண்ணிலாவே ஒரு தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே" (அருட்பா.2847)* என்னும் இன்னிசைச் சிந்தில் இசைக்கின்றார்.

அறிவியல் உண்மை – அணு பற்றிய செய்தி :

*"தாய் கருப்பையினுள் தங்கிய உயிர்களை ஆய்வறக் காத்தருள் அருட்பெருஞ்சோதி"* என்னும் அருட்பெருங்கடவுட் பாடல் வரிகளில், கருவாய் வயிற்று, இருட்டறையில் இருக்கும் பான்மை யினையும், கருப்பையில் உள்ள குழவியைக் கண்ணுங் கருத்துமாய்க் காப்பது – அருட் பேரொளிக் கடவுளின் உள் ஒளியென்று உரைத்துள்ளமையுங் காண்க.

கருவாயினிலே இறைவன் இருந்து, கருவினைக் காக்கும் அறிவியலுண்மையை அப்பரடிகள்,

*"கருவாய்க்கிடந்து உன் கழலே நினையும் கருத்துடையேன்"* என்று கூறியமை அறிக.

அருட்பெருங் கடவுள், நமதுடலில் உள்ள ஒவ்வொரு அணுவிலும் ஒளிர்கின்ற நிலையினை,

*"அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே எங்கும்*
*ஆகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே"*
என்று தெளிவுறுத்தியதறிக.

தமிழ் நாட்டிலிருந்து, அமெரிக்காவிற்குச் சென்ற தவத்திரு சச்சிதானந்த அடிகளார், மெய்ந்நெறிப் பொதுநிலைக் கழகத்தை வர்சீனியா நாட்டில் உருவாக்கியுள்ளார். இங்குள்ளவர்களுக்கு முதலில் ஊழ்கம் (தியானம்) கற்றுக் கொடுத்தார். வள்ளலார் கொள்கையாகிய, 'புலால் மறுத்தல்' அமெரிக்காவெங்கும், நன்கு பரவியுள்ளது. அருட்பேரொளி ஆண்டவருக்கு, அமெரிக்காவில் அருட்பேரொளிக் கோவிலைக் கட்டி, அருட்பெருங் கடவுளின் அருட்கொள்கைகளைப் பரப்பி வருகிறார். பல ஆயிரக்கணக்கான மாணவர்கள், மெய்ந்நெறிப் பொதுநிலைக் கழகத்தில் சேர்ந்து (சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்) திருவருட்பா ஓதி பயன்பெற்று வருகின்றனர்.

மூடவழக்கங்களை ஒழித்த சீர்திருத்தச் செம்மல் :–

அருட்பேரொளிக் கடவுளிடம் அவர் வேண்டுவதெல்லாம் அருட்பண்பையும், ஆண்டவரை அறியும் மெய்யறிவினையுமேயாகும். தொன்மத்தைத் தகர்க்கிறார். கலையுரைத்த கற்பனையால் புனையப்பட்ட, கட்டுக் கதைகளை உடைத்துத் துகள்துகளாக்குகிறார். நம்பவியலாக் கதைகளும், கற்பனைகளும் கலந்த தொன்மங்களை கண்மூடித்தனமாகக் குமுகாயத்தார் ஏற்றுக் கொள்ளலாகாது என்று தெளிவுறுத்துகின்றார்.

மன்பதையில் கூறுகின்ற சமயங்களும், மதங்களும், மக்களைக் கூறுபோடுந் தன்மையன. பிரித்தாளும் சூழ்ச்சியன. சமயக்கொள்கைகள் அனைத்தும் அருட்பேரொளி (சோதி) ஆண்டவரை உணர்த்துவனவல்ல. மெய்ந்நெறியுண்மைக் கழகம் (சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம்) ஒன்றே, மக்களை நன்னெறியில் வாழ்விக்கும். தொன்மங்களும் (புராணங்களும்) மறவனப்புகளும் (இதிகாசங்களும்) சூது நிறைந்தவை.

உண்மையினை உள்ளபடி, உணர்த்தாதவை. அருட்பெரு நெறிச் (சன்மார்க்க) சமயமே அனைவருக்கும் உகந்தது என்று வள்ளலார் உணர்த்தும் பாடல்:

*"கலையுரைத்த கற்பனையே*
*நிலையெனக் கொண்டாடும்*
*கண்மூடி வழக்கம் எல்லாம் மண்மூடிப்போக*

*மலைவறு சன்மார்க்கம் ஒன்றே*
*நிலைபெற மெய்யுலகம்*
*வாழ்ந்தோங்கக் கருதியருள்*
*வழங்கினை என்தனக்கே"(அருட்பா, 3768).*

அருட்பேரொளி (சோதி)க் கடவுள் கண்மூடி வழக்கங்களை ஒழித்த முழுமுதற் கடவுள் என்று மேற்குறித்த பாடல்வரிகளில் குறித்துள்ளது, உணர்ந்து இன்புறத் தக்கது. மெய்யருட் பொதுநெறி ஒன்றே, இறைவன் வள்ளலாருக்கு உணர்த்திய உயர்நெறி. வையகம் வாழ்வதற்கும், அருள் பெற்று உய்வதற்கும், வள்ளலார் அருட்பெருங் (சோதிக்) கடவுளின் மறு அருள் வடிவமாகத் தோன்றி மக்களை வாழ்வித்தார் என்பது, மெய்ந்நெறிக் கழகத்தினர்தம் (சன்மார்க்கச் சங்கத்தினர்) கொண்முடிபாகும்.

**வள்ளலார்[2]** *vaḷḷalār*, பெ.(n.) வள்ளலார் சாத்திரம் என்ற நூலியற்றிய ஆசிரியர்; a poet and philosopher, author of *vaḷḷalār šarittiram.*

*[வள்ளல்→வள்ளலார்.]*

**வள்ளலார்[3]** *vaḷḷalār*, பெ.(n.) ஒழிவி லொடுக்க நூலாசிரியர்; name of *oḻivil-oḍukkam*, a *šaivite*, philosophical work of the 15th C.

*[வள்ளல்→வள்ளலார்.]*

**வள்ளற்றனம்** *vaḷḷaṟṟaṉam*, பெ.(n.) வள்ளன்மை பார்க்க; see *vaḷḷaṉmai*. *"வள்ளற்றனமும் வகுத்தனன் கூறி" (பெருங். நரவாண. 8, 6).*

*[வள்ளல் + தனம்.தனம் = சொல்லாக்க ஈறு.]*

(ஒ.நோ.) கஞ்சத்தனம், மடத்தனம்.

**வள்ளன்மை** *vaḷḷaṉmai*, பெ.(n.) 1. கொடையுடைமை; liberality. 2. வாரி வழங்குந் தன்மை; munificence. *"வள்ளன்மை பூண்டான்கண் ஒண் பொருள்" (நாலடி, 386).*

*[வள்ளல் + மை. 'மை' பண்புப் பெயரீறு.]*

**வள்ளாங்கை** *vaḷḷāṅgai*, பெ.(n.) இடக்கை; left hand.

*[வள்→வள்ளாம் + கை]*

**வள்ளி[1]** *vaḷḷi*, பெ.(n.) 1. கொடி வகை; a kind of creeper. *"வாடிய வள்ளி முதலரிந் தற்று" (குறள், 1304).* 2. கொடி; a medicinal creeper, convolvulus balatas. 3. நிலத்திற் படரும் பூசணி (M.M); panicled bindweed. 4. தண்டு; stalk, stem. 5. கொடிபோன்று தொடர்ந்திருப்பது; streak, line, row. *"மேகவள்ளி" (தொல்.பொருள்.88, உரை).*

*[வல்→வல்லி→வள்ளி]*

**வள்ளி[2]** *vaḷḷi*, பெ.(n.) 1. கைவளை; bracelet. 2. காப்பு வளை; armlet. *"ஆம்பல் வள்ளித் தொடிக்கை" (புறநா.63).* 3. தொய்யிற் கொடி; figures drawn on the breasts and arms of young women. *"வண்டே யிழையே வள்ளி பூவே" (தொல். பொருள்.).* 4. வள்ளித் தண்டை (வின்.); rattan shield.

*[வல்→வல்லி→வள்ளி]*

வள்ளி[3] *vaḷḷi,* பெ.(n.) 1. குறிஞ்சிநிலப் பெண்; woman of the hilly tracts. *"வள்ளி மருங்குல்" (திருக்கோ. 128).* 2. முருகக் கடவுளின் துணைவி; a wife of Lord *Murugaṉ. "குறவர் மடமகள்.... வள்ளியொடு" (திருமுரு.101).* 3. முருகக் கடவுட்கு மகளிர் மனநெகிழ்ந்து வெறியாடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.9, 41); (Puṟap.) theme describing the *veṟi-y-āḍal* of hill women possessed by *Murugaṉ.* 4. குறிஞ்சி மகளிர் கூத்து வகை (தொல். பொருள். 60, உரை); a kind of dance of hill women.

*[வல் → வல்லி → வள்ளி = வளைந்த கொடி போன்ற பெண், குறிஞ்சிநிலப் பெண், முருகன் தேவி (தேவ.13, பக்.48).]*

(ஒ.நோ.) கொடு → கொடி = வளைந்த தண்டு (வ.வ.256).

கொடி → கொடிச்சி = குறிஞ்சி நிலப் பெண்.

*"முருகவேளைக் குறித்தது" (வீர.104), "தண்கதிர் மண்டிலம்" (தொல்.பொருள்.88, நச்.)* என்று உரையாசிரியர்கள், வள்ளி குறித்துக் கூறியதறிக.

வள்ளிக்கண்டம் *vaḷḷi-k-kaṇḍam,* பெ.(n.) 1. சீந்தில் (மலை.); gulancha. 2. வள்ளிகா பார்க்க; see *vaḷḷigā.*

*[வள்ளி + கண்டம்]*

வள்ளிக்கிழங்கு *vaḷḷi-k-kiḻaṅgu,* பெ.(n.) வள்ளி; sweet potato.

*[வள்ளி + கிழங்கு]*

இதன் வகைகளாக, சாம்பசிவ அகராதி கூறுவன :- 1. வள்ளிக்கிழங்கு; root tuber - Impomoea batatas. 2. மரவள்ளிக்கிழங்கு; root tuber, topioca-manihot utilissima. 3. சருக்கரை வள்ளிக் கிழங்கு; tuber, Impomoea batatas. 4. சீனவள்ளி. 5. சிவப்பு வள்ளி; red in colour. 6. மஞ்சள் மரவள்ளி; yellow indian, shot-canna flacida. 7. சீமை மரவள்ளி; mendoza arrow root.

வள்ளிக்கூத்து *vaḷḷi-k-kūttu,* பெ.(n.) குறிஞ்சி நிலத்து மக்களின் கூத்து வகை (பெரும்பாண். 370, உரை); a masquerade dance among the people of the hilly tracts.

*[வள்ளி + குத்து → கூத்து.]*

குறிஞ்சிநில மக்கள், முருகனின் வள்ளி திருமண நிகழ்வைத் தாளவொத்துக்கு இயையக் கூத்தாக, இன்றும் ஆடி வருகின்றனர்.

வள்ளிக்கொடி *vaḷḷi-k-koḍi,* பெ.(n.) காட்டு வள்ளி; five leaved yam.

*[வள்ளி + கொடி]*

வள்ளிகா *vaḷḷigā,* பெ.(n.) 1. சீந்திற் கொடி; moon creeper. 2. வெண்திணை; Italian millet-*Sectoria italica.*

வள்ளிகாத்திணை *vaḷḷigā-t-tiṉai,* பெ.(n.) வெண்டினை; Italian millet-*Setoria italica.*

வள்ளிகேள்வன் *vaḷḷi-kēḷvaṉ,* பெ.(n.) முருகக்கடவுள் (வள்ளிக்கணவன்); lord Murugaṉ.

மறுவ. குறிஞ்சிக் கடவுள்

*[வள்ளி + கேள்வன். கேள் → கேள்வன் = கணவன்.]*

வள்ளிகொழுநன் *vaḷḷi-koḻu-naṉ,* பெ.(n.) வள்ளிகேள்வன் பார்க்க; see *vaḷḷi-kēḷvaṉ.*

*[வள்ளி + கொழுநன். கொள் → கொளுவு → கொழுவு → கொழுநன்.]*

கொழுநன் = மணந்து கொள்பவன். கொழுவுதல் = அணைத்துக் கொள்ளல்.

**வள்ளிசாக** *vaḷḷisāga,* வி.அ.(adv.) 1. முழுமையாக; fully, round sum. 2. கூடுதலாக; even a little bit. *"வீட்டில் வள்ளிசாகத் தண்ணீர் இல்லை".*

*[வள்ளிசு→வள்ளிசாக]*

**வள்ளிசாய்** *vaḷḷisāy,* குவிஎ.(adv.) 1. முழுவதும்; entirely, completely, fully. 2. நேர்த்தியாய்; neatly. 3. சரியாய்; exactly, correctly, precisely.

*[வள்ளிசு→வள்ளிசாய்]*

**வள்ளிசு**[1] *vaḷḷisu,* பெ.(n.) நெற்றி; forehead.

**வள்ளிசு**[2] *vaḷḷisu,* பெ.(n.) 1. நேர்த்தி; neatness, beauty. 2. துல்லியம்; correctness, exactness, preciseness, accuracy.

*[வல்→வள் + இது – வள்ளிது→வள்ளிசு]*

**வள்ளித்தண்டு** *vaḷḷi-t-taṇḍu,* பெ.(n.) வள்ளித் தண்டை (சங்.அக.) பார்க்க; see *vaḷḷi-t-taṇḍai.*

*[வள்ளி + தண்டு]*

**வள்ளித்தண்டை** *vaḷḷi-t-taṇḍai,* பெ.(n.) பிரப்பங் கேடகம்; rattan shield. *"வார்மயிர்க் கிடுகொடு வள்ளித் தண்டையும்" (சீவக. 22, 18).*

*[வள்ளி + தண்டை]*

**வள்ளிதிருமணக்கதை** *vaḷḷi-t-tirumaṇa-k-kadai,* பெ.(n.) வள்ளிநாடகம் பார்க்க; see *vaḷḷi-nāḍagam.*

*[வள்ளி + திருமணம் + கதை.]*

வள்→வள்ளி = வளைந்த கொடி போன்ற பெண், குறிஞ்சிநிலப் பெண், முருகன் தேவி.

கழல்→கழறு→கதல்→கதை.

கதை = சிறப்பித்துச் சொல்லுதல். குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகன், வள்ளி திருமண நிகழ்வைச் சிறப்பித்துச் சொல்லும் கதையே வள்ளிதிருமணக் கதை.

**வள்ளிது** *vaḷḷidu,* பெ.(n.) முழுமை; whole.

*[வள் + இது.]*

ஒ.நோ. E. round = whole.

இச் சொல் வட்டம் என்னும் சொல்போல 'வள்' என்னும் பகுதியினின்று பிறந்ததாகும். உலக வழக்கில் இச் சொல் முழுமைப் பொருளில் வழங்கி வருகிறது. வள்ளிதாய்ச் செலாயிற்றென்றால், முழுதும் செலவாயிற்றென்பது பொருள். 'வள்ளிசாய்' என்பது கொச்சைப்போலி.

இதுபோன்ற பல சொற்கள், நெல்லை வழக்கிற்குச் சிறப்பாகும். ஆதலால் தமிழை செவ்வையாய் அறிய வேண்டின், பாண்டி நாட்டுலக வழக்கை முழுமையாய் ஆராயவேண்டும்.

**வள்ளிநாய்ச்சியார்** *vaḷḷi-nāycciyār,* பெ.(n.) வள்ளியம்மை (திருமுரு.பக்.47, கீழ்க்குறிப்பு); consort of lord *murugaṉ.*

*[வள்ளி + நாய்ச்சியார்.]*

**வள்ளிநாயகம்பிள்ளை** *vaḷḷi-nāyagam-piḷḷai,* பெ.(n.) 20–ஆம் நூற்றாண்டில் தில்லைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் நூலை, இயற்றிய புலவர்; a poet, who composed a work titled *'tillai-patiṟṟu-p-pathandādi'* in 20C.

**வள்ளிநாடகம்** *vaḷḷi-nāḍagam,* பெ.(n.) குறிஞ்சிநிலத் தெய்வம் முருகன் வள்ளி திருமண நிகழ்வை நாடகமாக நடித்துக் காட்டுகை; drama of *vaḷḷi* (story).

*[வள்ளி + நடி + அகம்→நாடகம்.]*

நடம் (பிங்.) கதை தழுவி வரும் கூத்து. வள்ளி திருமணக் கதையே, வள்ளி நாடகமாகவும், வள்ளிக் கூத்தாகவும், பன்னெடுங்காலமாக நடிக்கப்பட்டு வருகிறது.

**வள்ளிநாயகி** *vaḷḷi-nāyagi,* பெ.(n.) வள்ளியம்மை; a consort of lord Murugaṉ. *"முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல நின் உருவுகண் எறிப்ப நோக்கல் ஆற்றலனே" (நற்.82, 4–5).*

*[வள்ளி + நாயகி]*

**வள்ளிபங்கன்** *vaḷḷi-paṅgaṉ,* பெ.(n.) முருகக் கடவுள்; lord *Murugaṉ.*

*[வள்ளி + பங்கன்]*

**வள்ளிப்புரி** *vaḷḷi-p-puri,* பெ.(n.) நெல்லைச் சேர்கட்டும்போது சுற்றிப்பிடித்துக் கொள்ள அமைக்கும் வைக்கோற்புரி; straw ropes used in the collection of paddy.

*[வள்ளி + புரி. புல்→புர்→புரி.]*

**வள்ளிமணவாளன்** *vaḷḷi-maṇavāḷaṉ,* பெ. (n.) வள்ளியின் கணவன்; as the consort or husband of *vaḷḷi.*

*[வள்ளி + மணவாளன்]*

**வள்ளிமணாளன்** *vaḷḷi-maṇāḷaṉ,* பெ.(n.) வள்ளிமணவாளன் பார்க்க; see *vaḷḷi-maṇavāḷaṉ.*

*[வள்ளி + மணாளன்]*

**வள்ளிமலை** *vaḷḷi-malai,* பெ.(n.) ஒரு மலை; a mountain, hill.

*[வள்ளி + மலை]*

**வள்ளிமாதரை** *vaḷḷi-mātarai,* பெ.(n.) வெங்காயம்; onion-*Allium cepa.*

*[வள்ளி + மாதரை]*

ஒருகா. ஈருள்ளி

**வள்ளியம்**[1] *vaḷḷiyam,* பெ.(n.) மிளகு (மலை.); black pepper.

*[வல்→வல்லி→வள்ளி→வள்ளியம்]*

**வள்ளியம்**[2] *vaḷḷiyam,* பெ.(n.) 1. மரக்கலம் (சது.); ship, catamaran. 2. ஊது குழல்; musical pipe. 3. மெழுகு; wax.

*[வள்ளி→வள்ளியம் (வே.க.4, பக்.95)]*

**வள்ளியம்மை** *vaḷḷi-y-ammai,* பெ.(n.) முருகக் கடவுளின் தேவி; a consort of lord *Murugaṉ.*

*[வள்ளி + அம்மை]*

**வள்ளியம்மைகூட்டம்** *vaḷḷi-y-ammai-kūṭṭam,* பெ.(n.) குறவர் இனம்; the kuṟava caste.

மறுவ. குறக்கூட்டம்

*[வள்ளியம்மை + கூட்டம்]*

**வள்ளியன்** *vaḷḷiyaṉ,* பெ.(n.) வள்ளியோன்; liberal generous person, munificent, donor. *"வள்ளிய ராக வழங்குவ தல்லலால்" (கம்பரா.வேள்விப். 29).*

*[வள்[1]→வள்ளி→வள்ளியன்]*

**வள்ளியோர்** *vaḷḷiyōr,* பெ.(n.) வண்மையுடையோர்; generous, liberal person. *"வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளின் போகிநெடிய என்னாது சுரம் பல கடந்து" (புறம். 47 – 1–2).*

*[வல்→வள்ளி→வள்ளியோர்.]*

**வள்ளியோன்** *vaḷḷiyōṉ,* பெ.(n.) வள்ளியோர் பார்க்க; see *vaḷḷiyōr.* *"வள்ளியோர்ப் படர்ந்து" (புறநா. 47).*

*[வள் →வள்ளியோன்]*

**வள்ளுகிர்** *vaḷḷu-kir,* பெ.(n.) கூரிய உகிர்; sharpened nail. *"வள் உகிர வயல் ஆமை வெள் அகடு கண்டன்ன" (புறம்–387–1–2).*

*[வல் →வள் + உகிர்]*

**வள்ளுயிர்** *vaḷḷuyir,* பெ.(n.) பேரொலி; noise, shout.

*[வள் + உயிர்]*

**வள்ளூரம்** *vaḷḷuram,* பெ.(n.) 1. ஆட்டிறைச்சி; mutton, meat. 2. சூட்டிறைச்சி; roasted meat. 3. மாட்டிறைச்சி; beaf. 4. புலால்; flesh-meat. *"முழூஉ வள்ளூர முணக்கு மள்ள" (புறநா. 219). "ஆயிடை யறிந்தும் வள்ளூர மருந்தலால்" (பிரமோத். 3, 34).*

*[வள் + உரம். வள் = திண்மை.]*

**வள்ளுவசாத்திரம்** *vaḷḷuva-cāttiram,* பெ. (n.) கணியம் (சோதிடம்) (வின்.); the art of foretelling, as practised by the vaḷḷuvaṉ caste.

*[வள்ளுவன் + **Skt.**சாத்திரம்]*

**Skt.** Sastra > த. சாத்திரம்

**வள்ளுவநாடு** *vaḷḷuva-nāḍu,* பெ.(n.) திருவிதாங்கூர்ச்சீமையைச் சார்ந்த ஒரு நாடு; a region in the then travancore state.

*[வள்ளுவம் + நாடு.]*

**வள்ளுவப்பண்டாரம்** *vaḷḷuva-p-paṇḍāram,* பெ.(n.) வள்ளுவ இனத்திற் குறி சொல்வோன்; a soothsayer of the *vaḷḷuva* caste.

*[வள்ளுவம் + பண்டாரம்]*

**வள்ளுவப்பயன்** *vaḷḷuva-p-payaṉ,* பெ.(n.) திருக்குறள் (நன். 274, மயிலை.); *tiru-k-kuṟaḷ.*

*[வள்ளுவம் + பயன்.]*

**வள்ளுவப்பறையன்** *vaḷḷuva-p-paṟaiyaṉ,* பெ.(n.) வள்ளுவசாதியிற் குறி சொல்வோன்; a sooth sayer of the *vaḷḷuva* caste.

*[வள்ளுவம் + பறையன்.]*

**வள்ளுவப்பை** *vaḷḷuva-p-pai,* பெ.(n.) நாட்டுக் கோட்டைச் செட்டிகளுள், மணமகன் தோள் மேல் இட்டுச் செல்லும் பட்டுப்பை; long silk purse or red cloth carried on the shoulders by a *nāṭṭu-k-kōṭṭai chetti,* bridegroom to receive betel and other gifts (E.T.V. 268).

*[வள்ளுவம் + பை.]*

**வள்ளுவம்** *vaḷḷuvam,* பெ.(n.) வள்ளுவ ரியற்றிய திருக்குறள் தெளிவுறுத்தும் வாழ்வியல் நெறிமுறைகள் அல்லது கோட்பாடுகள் (தத்துவம்); principles or philosophy of life, written by *Vaḷḷuvar,* the author of *Tirukkuraḷ.*

மறுவ. அறம்; தமிழ்மறை; முப்பால்; உலகப் பொதுமறை.

*[வள் →வள்ளுவன் →வள்ளுவர் → வள்ளுவம்]*

வள்ளுவம் என்பது ஆசிரியனை நோக்கி அமைத்துக்கொண்ட பெயராகும்.

வள்→வள்ளுவன் = மதிக்கூர்மையன்.

மதிக்கூர்மை மிக்க சீரிய செஞ்சொற்கள் வாயிலாக, எந்நாட்டவர்க்கும், எக்காலத்தவர்க்கும் ஏற்றவண்ணம், 2000 ஆண்டுகட்கு முன்னரே, தெள்ளிய மனமும், ஒள்ளிய அறிவும், திண்ணிய நெஞ்சும், நுண்ணிய மதியும் கொண்ட திருவள்ளுவர் இயற்றிய நூலே திருக்குறளாகும். இந்நூலுள் பொதிந்துள்ள ஞாலந்தழீஇய வாழ்வியற் கருத்துகளே வள்ளுவமாகும்.

ஞால மாந்தர் அனைவரும் குமுகாயத் துறையிலும், சமயத்துறையிலும், வாழ்வியல் துறைகள் அனைத்திலும், துன்பமின்றி, தொல்லைகளின்றி, நன்னெறிபூண்டு, பொந்திகை யடைந்து நலத்துடனும், வளத்துடனும் வாழ வழிகாட்டும் திருக்குறளே வள்ளுவ மென்றறிக.

வள்ளுவனாரின் வாழ்வியற் கோட்பாடுகளே வள்ளுவம் ஆகும். உலகத்திலுள்ள அனைத்து மறைகளின் கருத்துகளும், பொதிந்துள்ளதால், உலகப் பொதுமறையாயிற்று. உலக முழுமைக்கும் ஏறத்தாழ 30க்கும் மேற்பட்ட மொழிகளில், மொழி பெயர்க்கப்பட்ட நூலாகவும் வள்ளுவம் திகழ்கிறது.

மக்கள்–மாக்கள்–பகுப்பு :– ஆறாம் அறிவாகிய பகுத்தறிவு அல்லது பண்பாடு நிறைந்தவரை மக்கள் என்றும், அஃதற்றவரை மாக்கள் என்றும், மாந்தரை இருவகுப்பினராகத் தொல்காப்பியர் பகுத்துள்ளார். "மாவும் மாக்களும் ஐயறிவினவே" (தொல்.1531).

(எடு) *"மக்கள் தாமே ஆறறிவுயிரே" (தொல்.1532).*

வள்ளுவரும், பண்பட்ட மாந்தரை மக்கள் என்று கீழ்க்கண்ட குறட்பாக்களிற் குறித்துள்ளது காண்க.

1. *"விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல் கற்றாரோடு ஏனை யவர்" (குறள், 410).*

2. *"மரம் போல்வர் மக்கட்பண்பு இல்லாதவர்" (குறள், 997)*

3. *"மக்களே போல்வர் கயவர்" (குறள், 1071).*

பண்படா மாந்தரை மாக்கள் என்று வள்ளுவம் வரையறுத்ததற்கான சான்றுகள் :–

*"கொலை வினையராகிய மாக்கள் புலைவினையர்*
*புன்மை தெரிவா ரகத்து" (குறள், 329).*

*"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்*
*அவியினும் வாழினு மென்" (குறள், 420).*

*"கொலை வினையர் மக்கட் பண்பில்லாதவரென்று கருதி"*, அவர்களை மாக்கள் என்று தொல்காப்பியர் கூறுவது போல், வள்ளுவர் குறித்துள்ளமையால், வள்ளுவத்தின் காலம் கி.மு.7–ஆம் நூற்றாண்டிற்கும், கடைக்கழக முடிவாகிய கி.பி.3–ஆம் நூற்றாண்டிற்கும், இடைப்பட்டது. கிறித்துவிற்கு முந்தியதென்பார் மொழிஞாயிறு (தமிழியற் கட்டுரைகள் பக்.148).

மறைமொழி – மந்திரம் – வள்ளுவத்தின் – தனிச்சிறப்பு :–

தொல்காப்பியர் கூறும் மக்கட் பகுப்பானது – வள்ளுவர் வகுத்தளித்த திருக்குறளாம், வள்ளுவத்தின், உலகளாவிய உயர்கொள்கைக்கு, எடுத்துக்காட்டு என்பார் பாவாணர்.

திருவள்ளுவர்,

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப"*
*(தொல்.1434)* என்னுந் தொல்காப்பிய நூற்பாவை,

*"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்" (குறள், 28)*
என்னுங் குறளிற் கூறியுள்ளது. உயத்துணரத்தக்கது. வாழ்வியலுக்கு ஏற்ற வண்ணம் அமைந்த வள்ளுவத்தின் சிறப்பினை வரையறுப்பது அரிது. பிறமதத்தினரின் மறைமொழி, மறை (வேத)த்

தன்மையது. வள்ளுவம் கூறும் மறைமொழி, மனத் திண்மைக்குச் சான்றாகத் திகழ்வது. கருதியதைச் செயலாக்கும் அல்லது நிறைவேற்றும் ஆற்றல் மிக்கது.

மந்திரம் பற்றி மொழிஞாயிறு:- "மறை மொழி அல்லது மந்திரம் என்பது, வாய்மொழியும் சாவிப்புமென இருவகைப்படும். திருமூலரின் திருமந்திரமும், நம்மாழ்வாரின் திருவாய்மொழியும், வாய்மொழி போல்வன. கவுந்தியடிகள் காவிரித் தென்கரைச்சோலை யொன்றில், வம்பப் பரத்தையையும், வறுமொழியாளனுமான இருவரை நரிகளாக்கியது சாவிப்பு" (திருக்குறள் தமிழ்மரபுரை, பக்.56).

ஆனால் வள்ளுவம் கூறும் மறைமொழி ஆற்றல் மிக்கது. திண்ணிய தன்மையது. எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றும் திறம் வாய்ந்தது.

முன்→மன் + திரம் = மந்திரம்; திரம்→திறம்.

முன்னுதல் = எண்ணுதல், கருதுதல்.

(ஒ.நோ.) மன்று→மந்து→மந்தை; முரி→முறி.

அன்பற்றவர் - என்பற்ற புழுபூச்சிகளை யொப்பர்:- பிறர்மாட்டு அன்புசெலுத்தாதவர்களை - எலும்பற்ற புழுபூச்சிகளுக்கு ஒப்பான ஓரறிவுயிர்கள், என்று இகழ்கிறது வள்ளுவம். இக் கோட்பாடு, வள்ளுவத்தின் வையந்தழுவிய வாழ்க்கைக் கோட்பாடு எனலாம். அன்பற்ற மாக்களை, அறத்தெய்வம் எரித்துக் கொல்லும் என்பதை,

*"என்பிலதனை வெயில் போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்" (குறள், 77)* என்று குறித்துள்ளமை காண்க. வெயில் வந்த ஞான்று, எலும்பில்லா உடம்பு இன்னலுறுவது போல், தீவினைக் காலத்தே, பிறர்க்குத் தீமை செய்பவர் தீராத் துயருள் ஆழ்வர்.

வள்ளுவம் காட்டும் நாற்பொருள் பாகுபாடு :

அறம், பொருள், இன்பம், வீடென்னும், நான்மை நன்னெறியினை, நானிலத்தாரின், வாழ்க்கையில், இணைத்து இயம்பிய பெருமை, வள்ளுவத்திற்கே உரிய சிறப்பாகும்.

அறம் : ஆரியர் சிந்து வெளியில் தங்கியிருந்தபோது, இயற்கைத் தோற்றங்களையும், ஐம்பூதங்களையும், உணவுப் பொருள்களையுமே, தெய்வங்களாக வணங்கினர். சோமம் என்னும் ஒருகொடிச் சாற்றுமதுவும் தெய்வமாக வணங்கப்பட்டது. விடியற்கால ஒளி முதல் அந்திமாலைக் கதிரவனின் சுடர் வரை, சூரியனின் ஒரே சுடரை, அறு நிலைகளில் தெய்வமாக வணங்கியது, அவரின் மதியில்லா வளர்ச்சி நிலையைக் காட்டும் என்பார் பாவாணர்.

வடவருக்குக் கோயிலுமில்லை; குளமுமில்லை. விலங்கை காவு கொடுக்கும் வேள்வித்தூணே கோயில். இறந்தபின் உயிர்கள் பல்வேறு உலகில் வதியும் என்பது வடவர் கொள்கை.

முழுமுதற் கடவுட் கொள்கையும், வீடுபேற்றுக் கொள்கையும் வள்ளுவத்தில் பரவலாகக் காணப்படுகிறது. இதுவே தமிழர் கொள்கை; வள்ளுவம் காட்டும் உறுதிப் பொருள்கள் நான்கனுள் தலையாயது அறம். உள்ளத்தில் கள்ளத்தைக் களைதலே உயர்பேரறம். அறந்தொடர்பான முயற்சிகள் அனைத்தும் மனத்தைப் பக்குவப் படுத்தும் திறத்தன. அதனால்தான் வள்ளுவம்,

*"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற" (குறள், 34)* என்றழைக்கிறது.

*"வறியார்க்கொன்று ஈவதே, ஈகை"- வள்ளுவம்.*

வள்ளுவ மென்றழைக்கப்படும் திருக்குறளின், சிறப்புமிகு வாழ்வியல் கோட்பாடாகக்

குறிக்கப்படுவது யாதெனின், ஏதுமற்ற ஏதிலிகட்கும், திருப்பிச் செய்யுந் திறனற்ற ஏழையர்க்கும், அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பதே, ஈகையென்று குறித்துள்ளமையாகும்.

இத்தகைய ஈடிணையில்லாப் பேரறத்தை, வள்ளுவம் கூறுவதாலேயே – திருக்குறள், அறம் என்றழைக்கப்பட்ட தென்க. வள்ளுவம் கூறும் வாழ்வியலறப் பாடல் வருமாறு:–

*"வறியார்க்கொன் றீவதே ஈகை மற்றெல்லாங்*
*குறியெதிர்ப்பை நீர் துடைத்து" (குறள், 221).*

பொருள்: பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்பதனைவரும், அறிந்ததே. இல்லறத்திலிருந்து, இயல்புடைய மூவரைக் காத்து, நன்மக்களைப் பெற்று, கற்றோர் போற்றும் அவையில் அவர்தமை முந்தியிருக்கச் செய்வதற்கு இன்றியமையாதது, பொருளேயாகும். உலகியல் வாழ்விற்கு உறுதுணையாயிருக்கும், இப் பொருளைக் கொண்டுதான், வேந்தன்,

*"படைகுடிகூழ் அமைச்சு நட்பரண் ஆறும்*
*உடையான் அரசருள் ஏறு" (குறள், 381)*

முதலான, ஆறு உறுப்புகளின் வாயிலாக, மக்களுக்குப் பாதுகாப்பான வாழ்க்கையைத் தரவியலும், இங்கு "கூழ்" என்பது குடிகள் அல்லது நாட்டிலிருந்து பெறும் பொருளைக் குறித்தது.

இன்பம்: இன்பத்துப் பாலென்பது வெளிப்படையாகச் சிற்றின்பத்தையும், குறிப்பாகப் பேரின்பப் பொருளையும் குறிக்கும் என்பது ஆன்றோர் கொள்கை.

மனைத்தக்க மாண்புடையவளாகிய மனைவியிடம், இல்வாழ்க்கை நடாத்தி, அறத்தின்வழி ஈட்டிய பொருளை, தாமும் உண்டு, பிறர்க்கும் கொடுத்துப் பல்லுயிரோம்புங்கால் பெறும் இன்பமே, பெருமைக்குரிய பேரின்பமாகும். துறக்கவுலகாம் வீட்டின்பத்தைவிடச் சிறந்த இன்பமாகும். இவ்வின்பத்தை "இல்லறஞ்செய்தார் எய்தும் துறக்கவின்பம்" என்பார் பரிமேலழகர். இத்தகைய பொருள்பொதிந்த குறள் வருமாறு:–

*"தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்*
*அம்மா அரிவை முயக்கு" (குறள், 1107).*

*"சிற்றின்பமே, பேரின்பத்தின் திறவுகோல்"* என்னும் கோட்பாட்டினை, இக் குறளின் வழியாக, வள்ளுவர் குறித்துள்ளார். இது பற்றிய திருச்சிற்றம்பலக் கோவை,

*"பெற்ற சிற்றின்பமே பேரின்பமாய் ஆங்கே*
*உற்றபரிசென்று உந்தீபற"* என்று

கூறியுள்ளதறிக.

4. வீடு: "ஆசையறுமின்கள், ஆசையறுமின்கள் ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்", என்பது தமிழர்தம் வாழ்வியற் கோட்பாடாகும். ஆசையை யொழித்தலே, வீடுபேறடைவதற்குரிய எளிய வழி; இது குறித்து, வள்ளுவம் வகுத்துள்ளது வருமாறு. இவ்வுலக வாழ்க்கையிலேயே ஆசையை அறுத்து, உயர்ந்த வீட்டின்பத்தை அனைவரும் அடையலாம், என்பதே வள்ளுவம் காட்டும் வழியாகும்.

*"ஆராவியற்கை அவா நீப்பின் அந்நிலையே*
*பேராவி யற்கை தரும்" (குறள், 370).*

ஆசைக்கோர் அளவில்லையென்பார் தாயுமானவர், ஆசையும் அன்பும் அறுத்த வாழ்வே, ஈசனை அடையும் எளிய வாழ்வென்று, திருமூலர் (2613) கூறியுள்ளது, இங்கு உற்றுநோக்கற்குரியது. எஞ்ஞான்றும், பொந்திகை (போதுமென்ற மனம்)யடையாத பேராசை இயல்பினை, வள்ளுவம் ஆராவியற்கை யென்று கூறுவதறிக.

எள்ளளவுந் துன்பங் கலவாததாய், எல்லையில்லா இன்பத்தை எஞ்ஞான்றும் வாரிவழங்குவதாய் அமைந்த வீட்டின்பமே "பேராவியற்கை" யென்னும் பேரின்பமாகும்.

எடுத்தயிப் பிறவியிலேயே, ஆசையை யொழித்துப் பெறும் பேரின்பமே, "உடலோ டிருந்த வீடு" (சீவன் முத்தி) என்றும், இறந்தபின் பெறுவது உடலிறந்த வீடு (விதேகமுத்தி) என்றும், சொல்லப்பெறும்.

வள்ளுவத்தில் கூட்டுடைமையாட்சி : தெய்வப் புலவரியற்றிய வள்ளுவத்தில் மக்கள் தொகை மிக்க இன்றையக் குமுகாயத்திற்கு மிகவும் இன்றியமையாததும், எக் காலத்தும் நிலைத்து நிற்பதுமான, கூட்டுடைமையாட்சியின் கருத்துப் பதிவுகள், கீழ்க்கண்ட குறள்களில் மிளிர்கின்றன.

*"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை*
*வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்" (குறள், 44)*

*"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" (குறள், 322)*

என்னுங் குறட்பாக்களிலும், மேலும், 227, 1107, 1062 போன்ற பாக்களும் கூட்டுடைமை குறித்தனவே. இனி,

*"பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப் பொருத்தலும் வல்ல தமைச்சு" (குறள், 633)* என்னும் குறள், எக் காலத்திற்கும் ஏற்றவண்ணம் அமைந்துள்ளது.

வள்ளுவமும் – மனுதருமமும்

உழு தொழிலையும், உழவரையும் மனு தருமம் இழிவாகக் குறித்துள்ளது (எ.கா. மனுதருமசாத்திரம் 10:84ஆம் பக்கம் காண்க).

ஆனால் வள்ளுவம் *"சுழன்றும் ஏர்பின்னது உலகம்" (1031)* என்றும், *"உழுவார் உலகத்தார்க்கு ஆணி" (குறள், 1032)* என்றும், *"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" (குறள், 1033)*, *"உழவினார் கைம்மடங்கின் இல்லை" (குறள், 1036)* என்றும், உழுதொழிலின் இன்றியமையாமையும், வேளாண் தொழிலாளர்தம் சிறப்புக்களையும் குறிக்கு முகத்தான், உலகப் பொதுமறையாகத் திகழ்கிறது.

ஓய்வின்றி உழைத்தால் ஊழையும் வெல்லலாம் வள்ளுவம் :

ஊழ்வினைக் கொள்கையை ஓயாது உழைப்பதன் வாயிலாக ஒழித்துக் கட்டுகிறார் வள்ளுவர் (குறள், 620). மடியின்றி உழைத்தால் குடி உயரும் (குறள், 602). "தெய்வத்தால் முடியாத செயலையும், முயற்சியுடன் அயராது உழைத்தால், இனிது முடிக்கலாம்". வாழ்வில் வளங்காணலாம், என்பதே வள்ளுவத்தின் உயரிய வாழ்வியற் கொள்கையாகும்".

(எ–கா)

*"தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்" (குறள், 619).*

வள்ளுவம் – வாழ்க்கை வழிகாட்டி :

கீழே குறிக்கப்பட்டுள்ள குறட்பாக்கள், வள்ளுவம் எங்ஙனம் வாழ்விற்கு வழிகாட்டுகின்றது, என்பதனைத் தெளிவுறுத்தும், கலங்கரை விளக்கமாக இலங்குகின்றன.

(எ–கா)

*"கோளில் பொறியில் குணமிலவே யெண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை" (குறள், 9).*

*"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்*
*கண்ணென்ப வாழும் உயிர்க்கு" (குறள், 392).*

*"கற்றிலனாயினும் கேட்க" (குறள், 414).*

*"எண்ணித் துணிக கருமம்" (குறள், 467).*

*"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமும் ஆற்ற லரிது" (குறள், 101)*

போன்றனவும், ஒருவன் செம்மையாகவும்,

சிறப்பாகவும், இன்பமாகவும் வாழச் சிறந்த வழிகாட்டுவனவாகக் கீழ்க்கண்ட குறளெண்களுள்ள பாக்களைக் குறிக்கலாம். குறள், 27, 30, 251, 1062, 60, 904, 920, 146, 67, 70, 760, 616, 675, 467, 625, 33, 642, 293, 282, 314, 101, 460, 792, 523, 443, 942, 236.

*"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண*
*நன்னயம் செய்து விடல்" (குறள், 314)*

என்னுங் குறட்பாவின் வழியொழுகினால், எல்லோர்க்கும் வாழ்வில் எஞ்ஞான்றும் இன்பமே, துன்பமில்லை யென்று துணியலாம்.

வள்ளுவம் – இறைப்பொதுமை – சமயப்பொதுமை :

வள்ளுவம் எந்தவொரு இறைவனையும் பெயர்சுட்டி அழைக்கவில்லை. இறைவனின் தன்மைகளைப் பொதுவாகவே, வரையறுத்துள்ள பாங்கு போற்றி வணங்கத் தக்கது.

இறைவனை "ஆதி பகவன்" (குறள், 1) என்றும், "வாலறிவன்" (குறள், 2) என்றும், "மலர்மிசை யேகினான்" என்றும், "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்றும், "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்றும், "தனக்குவமை யில்லாதான்" என்றும், "அறவாழியந்தணன்" என்றும், குறிப்பிட்டு, ஒரு பெயர், ஓர் உருவம், இல்லாத இறைவனுக்கு, வள்ளுவம் அருட்பெயர் பலவற்றைச் சூட்டுவதன் வாயிலாக, இறைவனை ஞாலப் பொதுமைப் பொருளாக அமைத்துக் காட்டியமையால், நானிலத்தில் நிலைத்தவிடத்தைப் பெற்றுள்ளது..

வள்ளுவர் *valluvar*, பெ.(n.) 1. கீழ்க்கணக்கு நூல்களிலொன்றாகிய திருக்குறள் செய்தவர், காலம் கி.மு.1–ம் நூற்றாண்டு என்ற கருத்தும் உண்டு; a saintly poet who composed *tiru-k-kuṟaḷ*, one of *kīḻ-k-kaṇakku* works, I.B.C. 2. உலகப்பொது மறையாம் திருக்குறளை இயற்றியவர்; the world renowned patron *Šaint* and the eminent poet *vaḷḷuvar*, who wrote Tirukkuraḷ. *"வள்ளுவர் செய்திருக்குறளை மறுவற நன்குணர்ந்தோர்" (மனோன்மணிய ஆசிரியர்). "வாய்மொழி வள்ளுவர் முப்பால்" (திருவள்ளுவமாலை).*

*[வள்→வள்ளுவன்→வள்ளுவர். வள் = கூர்மை. வள்ளுவர் = கூர்மதியர், வல்லவர், வண்மையாளர்.]*

வரணப் பாகுபாட்டைக் கடிந்த தமிழர் மீட்பர் :– நால்வரணக் கூண்டிலடைபட்டிருந்த தமிழரை மீட்டவர் வள்ளுவரென்பார், பாவாணர். "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்" (புறம்.183). "பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும்" (சிலப்.22:109) என்று கழக இலக்கியமும் அந்தணர், அரசர், வணிகர், சூத்திரரென்று காப்பிய இலக்கியமும் பேசிய நால்வரணப் பகுப்பிலிருந்து, நந்தமிழரை விடுவித்த தமிழர் மீட்பராக; வள்ளுவர் விளங்குவதைக் காட்டும் குறட்பாக்களும், பாடல் எண்களும் (972, 973, 978, 133, 134, 1033, 1035) வருமாறு :–

*"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்" (குறள், 972).*

*"மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்*
*கீழல்லார் கீழல் லவர்" (குறள், 973).*

*"ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்*
*இழிந்த பிறப்பாய் விடும்" (குறள், 133).*

*"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்*
*பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்" (குறள், 134).*

நல்லொழுக்கமுடைமையே உயர்ந்த குலத் தன்மையாகும். ஒருவர் உயர்ந்த இனத்தில் பிறந்து, தீயொழுக்கம் புரிந்தால், தாழ்ந்த குலத்தவராகவே, அவர் மதிக்கப்படுவாரென்பது, வள்ளுவரின் வாய்மொழியாகும்.

அறத்திலும், கடமையிலும் பிறழாதவர் எச் சாதியினராயினும், உயர்ந்தவரென்பது வள்ளுவர் வாக்காகும்.

குடி என்னும் சொல், தலைக்கட்டு, குடும்பம், சரவடி (கோத்திரம்), குலம், குடிகள் (நாட்டினம்) என்னும், ஐவகை மக்கட் கூட்டத்தையுங் குறிக்கும். இங்குக் குடியென்றது குலத்தை. குலமாவது ஒரே தொழில் செய்யும் மக்கள் வகுப்பு. வரணம் என்பது, நிறம் குறித்தும், பிறப்புக் குறித்தும் ஏற்படுத்தப்பட்ட ஆரியப் பகுப்பென்பார் பாவாணர் (திருக்குறள், தமிழ் மரபுரை, 109).

துறவென்பது, இவ்வுலகில் வாழும் அனைத்து மாந்தருக்கும் பொதுவானது. அனைவரிடத்தும், தண்ணளிபூண்டு, செந்தண்மையுடன் அன்பு செலுத்துவதே துறவு. எந்தவொரு குறிப்பிட்ட இனத்தவரும், உரிமை கொண்டாட முடியாதது. எல்லாவுயிரிடத்தும் அன்பு செலுத்துவதே, தமிழர்தம் வாழ்வியலறமென்று பாடி, தமிழரை மீட்டவர் வள்ளுவர்.

(எ–டு)

*"அந்தண ரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்*
*செந்தண்மை பூண்டொ ழுகலான்" (குறள், 30).*

2. இல்வாழ்க்கையிலும் வீடுபேறு பெறலாம் :–

துறவறத்தால் மட்டும் வீடுபெறலாம் என்பர் சிலர். அனைத்துலகியற் பற்றைவிட்டொழித்து, அமைதியாய் இருந்து, பிறர்பழி தூற்றாவாறு இல்வாழ்க்கை நடாத்துதலே, நல்லறமாகும். உயர்ந்த வீடுபேறும், இஃதேயென்றுரைத்த வாழ்க்கை வழிகாட்டியே, வள்ளுவர், இல்வாழ்வே பேரறமாகும். அஃதும், மாற்றார் பழிப்பிற்கிடமின்றி இருந்துவிட்டால், உயர்பேரறம் என்பதை,

(எ–டு)

*"அறத்தாற்றினில் வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்*
*போஒய்ப் பெறுவ தெவன்" (குறள், 46).*

*"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்*
*பிறன்பழிப்ப தில்லாயி னன்று" (குறள், 49)*

போன்ற குறட்பாக்கள் வாயிலாகவும், குறள், 1032, 41, 42, 545, 559–ஆம் எண்ணுள்ள பாக்களின் வாயிலாகவும், தமிழர்தம் வாழ்வியல் நெறிமுறைகளைப் பாடித் தமிழரையும், தமிழர் பண்பாட்டையும் வள்ளுவர் மன்பதையில் நிலைநிறுத்தினாரெனலாம்.

3. வாழ்க்கை வழிகாட்டியார் – வள்ளுவர்:–

ஒருவன் உலகில் செம்மையாகவும், சிறப்பாகவும், இன்பமாகவும் வாழச் சிறந்த வழிகாட்டும் குறட்பாக்களும், பாடல் எண்களும் வருமாறு:–

*"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை" (குறள், 9).*

*"மங்கல மென்ப மனைமாட்சி மற்றத*
*னன்கல நன்மக்கட் பேறு" (குறள், 60).*

*"முயற்சி திருவினையாக்கும்" (குறள், 616).*

*"எண்ணித் துணிக கருமம்" (குறள், 467).*

*"தன்னெஞ்சு அறிவது பொய்யற்க" (குறள், 293).*

*"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்*
*கள்ளத்தால் கள்வேம் எனல்" (குறள், 282).*

*"மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்தியது*
*அற்றது போற்றி உணின்" (குறள், 942).*

பாடல் எண்கள் :– 392, 414, 904, 920, 146, 760, 616, 675, 467, 625, 67, 70, 33, 642, 293, 282, 314, 101, 460, 792, 523, 443, 942, 236 போன்ற குறட்பாக்களின் வழியாக, வாழ்வாங்கு வாழ்வதற்குரிய நெறிமுறைகளை, வாழ்வியலில் இணைத்துக் கூறியவர், வள்ளுவர்,

(எ–டு)

*"தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்*
*தோன்றலின் தோன்றாமை நன்று" (குறள், 236).*

அறத்துப்பாவில் இல்லறவியலில் அமைந்துள்ள இக் குறட்பாவில் (236), வாழ்க்கை வழிகாட்டியான வள்ளுவர் வாய்மொழியாகப் பாவாணர் கூறவது:–

"பிறத்தலும், பிறவாமையும், இறைவன் ஏற்பாட்டின்படி, அல்லது ஊழின் அமைப்புப்படியே நிகழ்வதால், அவை பிறப்பவரின் உணர்ச்சியொடு கூடியனவும், விருப்பிற்கு அடங்கியனவுமல்ல. ஆதலால், இங்குத் "தோன்றுக", "தோன்றற்க" என்று கூறியதெல்லாம், "*புகழுக்கேற்ற நல்வினை செய்வானைப் பாராட்டியதும், அது செய்யாதானைப் பழித்ததுமேயன்றி, வேறல்ல என அறிக*" புகழ் என்பது இங்கு ஆகுபொருளது.

4. திருமுறை யாசிரியர்:– வள்ளுவர் தமது நூலின் வாயிலாக, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்மை நன்னெறிகளை நவின்றதன் மூலம், உலகத் திருமுறையாசிரியர்களுள் ஒருவராக, ஒப்பாரும் மிக்காருமின்றி ஒப்பற்றவராகத் திகழ்கிறார். எல்லாம் வல்ல இறைவன் வழிபாட்டையும், இல்வாழ்க்கைக்குரிய அறங்களையும், துறவு அதிகாரத்தில், துறந்தாருக்குரிய அறவொழுக்கங் களையும், திருக்குறளுள் முழுமையாகக் கூறி யுள்ளமை காண்க.

வள்ளுவர், இன்பத்துப் பாலின் கண்ணே, மணிவாசகரின் திருக்கோவை போல், உவமை வாயிலாகப் பேரின்பத்தை யுணர்த்தும் திருமுறையாகத் திருக்குறளை அமைத்துள்ளார்.

திருமுறையாசிரியராகவும், தெய்வப் புலவராகவும் திகழும் வள்ளுவரின் திருவருட் சிறப்பினை மாமூலனார் பெயரிலுள்ள திருவள்ளுவ மாலைப் பாடல் பகர்வது வருமாறு:–

*"அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்*
*திறந்தெரிந்து செப்பியதேவை – மறந்தேயும்*
*வள்ளுவன் என்பானோர் பேதை அவன்*
*வாயச்சொற் கொள்ளாற் அறிவுடையார்"*

இப் பாடலின்கண்ணே, அறம், பொருள், இன்பம், வீடெனும், தமிழர்தம் நான்மை நன்னெறியினைத் திருமுறையாசிரியரான தெய்வப் புலவர் வள்ளுவர், தமது உலகப் பொதுமறையில், உணர்த்தும் பாங்கினைத் தெளிவுறுத்துவதாகக் கொள்ளலாம்.

5. உழவின் பெருமையும் வள்ளுவரும்:– வையகம் வளமுடனனும், நலமுடனும் வாழ்வாங்கு வாழ்தற்கு, இன்றியமையாது தேவைப்படுவது உணவு. இவ்வுணவை விளைவிக்கும் உழவனே தலைமைக் குடிமகன் என்பார் வள்ளுவர். இவனே அனைத்துத் தொழில் முனைவோரிலும் ஒப்பற்றவன் உயர்ந்தவன். நாடு பசியும் பிணியுமற்றுச் சிறந்தோங்கி வாழ்வதற்கு, கடுங்கோடையிலும், புயல்மாரியிலும், இரவென்றும் எண்ணாது, பகலும் பாராது, இன்னலை யேற்று, உடலை வருத்தி யுழைப்பவனே உழவன். இவனே, உலகமாகிய தேரைச் செம்மையாகச் செலுத்துபவன். இது பற்றியே, வள்ளுவர், தம் ஒப்புயர்வற்ற உலகப் பொதுமறையில், குடிசெயல் வகையின் பின் உழவதிகாரத்தை வைத்தார்.

*"உழுவார் உலகத்தார்க்கு ஆணி" (குறள், 1032)* என்றுவியந்தோதுகிறார்.

பாருய்யப் பாடுபடும் பழுதற்ற தொழிலாளியே உழவன் என்பார், மொழிஞாயிறு.

**6. உழவன் இரப்போர் சுற்றத்தான்:–** விருந்தோம்புதற் பொருட்டு வேளாண்மை செய்பவனே உழவன். வேளாண்மை செய்வதிற் சிறந்ததினாலேயே, உழவர் வேளாளர் எனப் பெயர் பெற்றனர். வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான் என்று, கழகப்புலவர் நல்லாதனார் நவின்றுள்ளார். இக் கருத்தினை வள்ளுவர்,

*"இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது*
*கைசெய்தூண் மாலை யவர்" (குறள், 1035)*

என்னுங் குறளில் கூறுவது காண்க.

**7. வேளாளன் புரப்போர் கொற்றத்தான்:–** அரசன் நல்லாட்சி நல்குதற்கும், அனைத்துத் தொழிலாளரும், ஊக்கமுடன் உழைப்பதற்கும், நாட்டை வளத்துடன் வாழ்விப்பதற்கும், வேளாண் பெருமக்களே கரணியமென்பார் வள்ளுவர்.

*"பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்*
*அலகுடை நீழ லவர்" (குறள், 1034)*

பார் போற்றும் பழுதற்ற முதற்றொலாளியே உழவன். பிற தொழிலாளர்போல் பிறர்முன் கைகட்டி வாழவேண்டிய கடப்பாடற்ற, தன்னுரிமையாளனே, வேளாளன் என்பார் வள்ளுவர்.

பண்டைநாளில், சிற்றூர்வாணனாயினும், பேரூர்வாசியாயினும், கொல்லன், தச்சன், கற்றச்சன், கன்னான், தட்டான், கொத்தன், குயவன், வண்ணான், மஞ்சிகன் (நாவிதன்), வாணியன், பாணன், பறையன் முதலிய பதினெண் தொழிலாளரும், குடிமக்கள் எனப்பட்டு, உழவர்க்குப் பக்கத்துணையாயிருந்து, தத்தம் தொழிலைச் செய்து, கதிரடிக்களத்தில் அவ்வக் காலத்துக் கூலதைக் கூலியாகப் பெற்று வாழ்ந்ததால்தான், அக் காலக் கூட்டரவுக் குமுகாயத்தில் தலைமைக் குடிவாசியாக உழவன் திகழ்ந்தான் என்பார் பாவாணர். இக்கருத்தினை,

*"சுழன்றும் ஏர்ப்பின்ன துலகம் அதனால்*
*உழந்தும் உழவே தலை" (குறள், 1031)*

என்னுங் குறட்பாவில் வள்ளுவர் கூறியுள்ளமை காண்க.

**8. மெய்ப்பொருளறிஞர்:–** தன்வயத்தம், தூய்மை, இயற்கை, முற்றறிவு, இயல்பாகக் கட்டினமை, பேரருள், முடிவிலாற்றல், வரம்பிலின்பம், எங்குமுண்மை பகாமை என்னும் தொண்குணத்தனாய், தனக்குவமை யில்லாத முழுமுதற் கடவுள், எல்லாம் வல்லனாதலின், அவனை எழு கூறாகப் பகுக்கும் ஆரிய முறையை மறுத்து, ஐம்பூதமும், ஐம்பூதத் தன்மையும், அறிவுப்பொறியைந்தும், கருமப்பொறியைந்தும், அவற்றையறியும் ஆதனும் (புருடனும்) அவன் அறிதற் கருவியாகிய மதியுள்ள மன நானுணர்வுகளும் ஆகிய இருபத்தைந்தோடு, காலம், இறைவன் என்னும் இரண்டையுங் கூட்ட, மெய்ப்பொருள் மொத்தம் இருபத்தேழேயெனும் கருத்துப்பட,

*"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்*
*வகைதெரிவான் கட்டே யுலகு" (குறள், 27)*

திருவள்ளுவர் கூறியிருப்பது, அவர் ஒருவரே, உண்மையான தெளிந்த மெய்ப்பொருளறிஞர் என்பதைக் காட்டும்

ஊழ் என்பது வினையுள் அடங்கும்.

**9. செந்தண்மை அந்தணர்:–** கீழ்க்காணும் குறட்பாக்கள், அனைத்துயிர்கள் மாட்டும் அன்பு பூண்டொழுகும் வள்ளுவர்தம் அருள் உள்ளத்தை, உணர்த்துவனவாக உள்ளன.

*"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்*
*எங்ஙனம் ஆளும் அருள்" (குறள், 251).*

தன் உடம்பைப் பெரிதாக்குவதற்காகத் தான் வேறோர் உயிரின் உடம்பைக் கொன்று தின்பவனிடத்தில், அருள் வீற்றிருப்பதெங்ஙனம்?

உடம்பைப் பருக்க வைத்தற்குக் கொலையில்லாத உணவு நிரம்பவிருத்தலானும், உடம்பை எங்ஙனம் பேணினும், அது அழிந்து போவதாதலானும், ஊனுணவு பெறுதற்கு ஓர் உயிரை எள்ளளவும் இரக்கமின்றிக் கொல்ல வேண்டியிருத்தலானும், குற்றமற்ற வுயிரிகளை, மேல்மேலுங் கொல்வது, கொடுமையினுங் கொடுமையாதலானும் "எங்ஙனம் ஆளும் அருள்?" என்றார்.

*"அந்தணரென்போர் அறவோர் மற்றெவ் வுயிர்க்குஞ்*
*செந்தண்மை பூண்டொழு கலான்" (குறள், 30).*

அந்தணர் என்னுஞ் சொல், அழகிய குளிர்ந்த அருளையுடையவர் என்னும் பொருளது. வள்ளுவர், ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர்வரையுள்ள எல்லாவுயிர்களிடத்தும் இரக்கம் கொண்டு ஒழுகியதால், அருளுடைமையை வாழ்வியலின் முதலறமாகக் குறித்தார்.

10. முதற்பாவலர்:– வள்ளுவர் குறள்வெண்பா பாடியதுபோல், எவரும் பாடவில்லை. திருக்குறள் போல் குறள்வெண்பாவிற்குச் சிறந்தநூல் முன்னுமில்லை பின்னுமில்லை.

(எ–டு)

*"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்*
*பெய்யெனப் பெய்யு மழை" (குறள், 55).*

*"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலம் நன்மக்கட் பேறு" (குறள், 60)* என்பன, இன்னோசையுள்ளன.

*"கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்*
*ஒண்டொடி கண்ணே யுள" (குறள், 1101).*

கீழ்காணும் எண்ணுள்ள, குறட்பாக்களும்,

(எ–டு) "குறள், 385, 751, 1032, 1062, பொருட் சிறப்புள்ளன. வள்ளுவரின் முதற்பாவன்மையைச் சிறப்பாகக் காட்டும், பாடலாக பாவாணர் குறித்துள்ளது வருமாறு :

*"நத்தம் போற்கேடு முளதாகும் சாக்காடும்*
*வித்தகர்க்கு அல்லால் அரிது" (குறள், 235)*

இதனைக் கபிலர் பெயரிலுள்ள,

*"தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட*
*பனையளவு காட்டும் படித்தால் – மனையளகு*
*வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்*
*வள்ளைக் குறட்பா விரி"*

என்னும் வள்ளுவமாலைப் பாவுந் தெரிவிக்கும்.

11. தமிழ்நாட்டுத் திருப்புரவலர் (Patron Saint):– ஒவ்வொரு நாட்டிற்கும் திருப்புரவலர் அல்லது காவல்தூயர் ஒருவர் உளர். தமிழ்நாட்டுத் திருப்புரவலர் திருவள்ளுவரே. அவர் முக்கால அரசியல் அறிஞராதலால் மக்கள் தொகை மிக்க இக் காலத்திற்குப் பொதுவாக ஏற்ற கூட்டுடைமையாட்சியை, எக் காலத்திற்கும் பொருந்தும் கருத்துகளாகக் கீழ்க்காணும், குறட்பாக்களில் விளக்கியுள்ளார்.

*"பகுத்துண்டு பல்துயிர் ஓம்புதல் நூலோர்*
*தொகுத்தவற்றுள் எல்லாந் தளை" (குறள், 322).*

பாடல் எண்கள் :– (குறள், 44, 227, 322, 1107, 1062) மேற்குறித்தவை கூட்டுடைமைப் பொருண்மை பொதிந்தவை.

*"பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்*
*பொருத்தலும் வல்ல தமைச்சு" (குறள், 633)*

என்னும் குறள், எக் காலத்திற்கும் ஏற்றதெனலாம்.

**வள்ளுவர்கோட்டம்** *vaḷḷuvar-kōṭṭam*, பெ.(n.) திருவள்ளுவர் 2000-ஆம் ஆண்டு நிறைவைக் குறிப்பதற்காகவும், திருக்குறளைச் சிறப்பிப்பதற்காகவும், சென்னையில் தமிழக அரசால் எழுப்பப்பெற்ற கோயில் போன்ற அமைப்புடைய கோட்டம்; on completion of 2000 years of *Tiruvaḷḷuvarāṇḍu*, the government of Tamiḻ Nāḍu constructed a magnificient monument called *Vaḷḷuvar Kōṭṭam* located in Chennai. *சென்னையில் உள்ள கவின்மிகு சுற்றுலாத் தலங்களுள் வள்ளுவர் கோட்டமும் ஒன்றாகும் (இ.வ.).*

*[வள்ளுவர் + கோட்டம். கோண்→கோடு→ கோட்டம்.]*

ஒ.நோ. பாண் →பாடு.

கோட்டம் :- மதில் சூழ்ந்த கோயில்; கோயில். மா.வி. அகரமுதலி கோஷ்ட்ட (koshta) என்ற சொல்லிலிருந்து, கோட்டம் என்ற சொல் வந்ததாகக் காட்டுவது தவறு, என்பார் மொழிஞாயிறு. கோயிலைக் குறிக்கும் கோட்டம் என்னும் சொல் 'உல்' என்னும் மூலவேரினின்றும், 'குல்' என்ற அடிவேரினின்றும் கிளைத்த தூய தென்சொல் (மறுப்புரை மாண்பு, பக்.163). இச் சொல் சிலப்பதிகாரம், மணிமேகலையில் கோயில், கோட்டம், நகரம், குடிகை என்னும் பெயரிலும், வளைந்த மாளிகை என்னும் பெயரிலும் ஆளப்பட்டுள்ளதறிக.

**வள்ளுவர்வாய்மொழி** *vaḷḷuvar-vāymoḻi*, பெ.(n.) வள்ளுவர் பார்க்க; see *vaḷḷuvar*. *"உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம் உருக்குமே வள்ளுவர் வாய்மொழி" (திருவள்ளுவமாலை. மாங்குடி மருதனார்).*

*[வள்ளுவர் + வாய்மொழி.]*

**வள்ளுவன்** *vaḷḷuvaṉ*, பெ.(n.) 1. பறையருள் குருவாகவும் அரசன் ஆணையைத் தெரிவிப்போனாகவும், உள்ள ஒரு சாதியான்; a paṟaiyar caste, the members of which are royal drummers and priests for paṟaiyās. 2. வருவதுரைப்போன் (நிமித்திகன்); one who foretells events by omens. *"வள்ளுவன் சொனான்" (சீவக. 419).* 3. அரசர்க்கு உள்படு கருமத் தலைவன் (பிங்.); an officer who proclaims the king's commands. 4. திருவள்ளுவர்; the author of the *Tiru-k-kuṟaḷ*. *"வள்ளுவன் வாயதென் வாக்கு" (வள்ளுவமா.2).*

*[வள் + உ + அன் →வள்ளுவன். உ= சாரியை, அன் = ஆண்பாற் பெயரீறு.]*

அரச கட்டளையை முரசறைந்து அறிவிப்பவன் (தி.ம.5). "வள்" என்னும் வேர்ச்சொல்லினின்று தோன்றிய சொல். "வள்" என்னும் அடிச்சொற்கு கூர்மை, வலிமை, வண்மை என்னும் பொருள்களுண்டு.

வள்ளுவன் = கூர்மதியன், வல்லவன், வள்ளியோன்.

வள்ளுவன் என்னும் பெயரின் வரலாறு குறித்துப் பாவாணர் கூறுவது வருமாறு:- வள்ளுவன் எனும் முதன் முதல் பறையருள், ஒரு பிரிவாராய், அரசன் ஆணையை, அவரது நகர மக்கட்கு யானை மீதேறிப் பெரும்பறை (பேரிகை)யறைந்தறிவிக்கும் விளம்பரத்

தலைவனைக் குறித்தது. இத் தலைவன் அரசாணையை மக்கட்கறிவிக்கும் அளவில், இற்றை விளம்பர மந்திரி போல்வான்.

வள்ளுவர் பறையர் குலத்தொரு பிரிவினரென்பது, அவரது பறையறையும் தொழிலாலும், வள்ளுவப் பறையன் என்றோர் சொல்லுண்மையாலும், இக் காலத்தும் அவர் பறையரினும் உயர்ந்தவராயிருப்பினும், பிற உயர் குலத்தாரால் இழிவாயெண்ணப்படுவதாலும், பறையர்க்குக் குருவாயிருப்பதாலும் அறியப்படும்.

பண்டைக்காலத்தில் குலப்பிரிவினை பிற்காலத்திற்போல் மிகக் கொடிதா யிராமையானும், வள்ளுவர் அரசர் வினையைச் செய்து வந்தமையாலும், அவர்க்கு இழிவு இருந்திலது.

அச்சு வித்தை மிகச் சிறந்து பத்திரிகைகளாலும், துண்டறிக்கைகளாலும் விரைந்து செய்தி பரப்பும் இக் காலத்தும், வேத்தியல், பொதுவியல் ஆகிய இருவகைச் செய்திகளையும் பறையறைந்து விளம்பரஞ் செய்யும் வழக்கு வீழ்ந்திலது. பண்டைக்காலத்தில் பறையறைத லொன்றே, செய்தி பரப்பும் சிறந்த வாயிலாகும். இதனால், பறையறைதல் என்னும் தொழிற் பெயருங்கூட விளம்பரத்தைக் குறிப்பதாகும். "நாக்கடிப்பாக வாய்ப்பறை யறைந்து சாற்றக் கேண்மின்" என்றார் கபிலரும்.

பொது மக்கட்குப் பறையறைபவர் அல்லது விளம்பரஞ் செய்பவர், பறையரெனும் பொதுப் பெயராலும், அரசர்க்கு அவ் வினைகளைச் செய்பவர், வள்ளுவர் எனும் சிறப்புப் பெயராலும், அழைக்கப்பட்டனர். ஒரே வினையை, அது எத்துணை இழிந்ததாயினும், அரசர்க்குச் செய்பவர் உயர்வாகவும், பொதுமக்கட்குச் செய்பவர் இழிவாகவும், எந்நாட்டிலும் எண்ணப்படுதல் இயல்பாம். உதாரணமாக, அரசர்க்கு மயிர்வினை செய்பவன் சாதாரண அம்பட்டரினும் உயர்வாயெண்ணப்படுவான். அவர் பொதுமக்கட்கு வினை செய்வதும், அங்ஙனம் செய்பவருடன் உறவு கலப்பதுமில்லை; தன்போன்ற பிற அரச வழி அம்பட்டருடனேயே, கொள்வினை கொடுப்பனையும் வைத்துக் கொள்வான். இங்ஙனமே பொதுக் குலமான பறையரினின்றும் வள்ளுவர் தனிக்குலமாகப் பிரிய நேர்ந்தது.

பண்டை நூல்களில் வள்ளுவன் தொழில், அரசராணையைப் பறையறைந் தறிவிப்பதாகவே கூறப்பட்டுள்ளது.

"வள்ளுவார் முரசமூதூர ரறைகென வருளினானே" என்றார் சீவகசிந்தாமணி யாசிரியர் திருத்தக்கதேவர் (செய்.2149). இதில் வள்ளுவன் என்பது இசைப் பற்றி வள்ளுவார் என நீண்டது. இனி வள்ளுவன் என்னும் பெயரின் மூலத்தை ஆராயினும், அது பறையறையும் தொழிலுக்கு ஏற்ற பொருளையே தராநிற்கும்.

வள்ளுவன் எனும் சொல், 'வள்' என்னும் மூலத்தினின்றும் பிறந்தது. 'வள்' என்பது பறைக்கு வேண்டிய தோலையும் வாரையும் அவற்றாற் செய்யப்படும் பல பொருள்களையுங் குறிப்பதாகும்.

வள் = வார் (சூடா.நிக.).

வள் = வாளுறை (அக.நிக.).

வள் = கடிவாளம் (அகநா.4).

'வள்' என்னும் மூலம் புவ்வீறு பெற்றும், இப் பொருள்களை உணர்த்தும்.

*வள்பு தெரிந்தூர் மதிவலவநின்*

*"புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே" (486)* என ஐங்குறு நூற்றில் கடிவாளத்தையும்,

*"மாசற விசித்த வார்புற வள்பின்... உருகெழு முரசம்" (50)* எனப் புறநானூற்றில் வாரையும், "வள்பு" என்னும் சொல் குறித்தது.

'வள்' என்னும் மூலத்தினின்றும், பிறந்த வள்ளூரம் என்னுஞ் சொல், தோலின் இனப் பொருளான ஊனை (மாமிசத்தை)க் குறிக்கும்.

'வள்' என்னுஞ்சொல் உகரச்சாரியையும், அன் ஈறும் பெற்று வள்ளுவன் என்றாயது.

வள்ளுவன், அரச சம்பந்தமான தொழிலைச் செய்பவனாதலின், பிங்கல நிகண்டில்.

*வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் அரசர்க்*
*குள்படு கருமத் தலைவர்க் கொன்றும்.*

என்று கூறப்பட்டுள்ளது. இதில் 'வள்ளுவன்' என்பதற்கு எதுகையாயும், சம்பந்தப்பட்ட என்னும் பொருளிலும் வந்த 'உள்படு' என்னும் சாமானியத் தொடரை, மிகச்சிறந்த பொருளதாகக் கொண்டு 'அரசர்க் குள்படு கருமம்' என்பது ஆங்கில நாட்டுச் சேம்பர்லேன் (Chamberlain) போன்ற ஓர் அதிகாரத்தைக் குறிக்குமென்பர். இது எமக்கு உடன்பாடன்று.

இனிச் சார்பினாலும் வள்ளுவன் தொழில் யாங் கூறியதே என்பது போதரும், மேற்கூறிய சூத்திரத்தில், 'வள்ளுவன்' என்பதை அடுத்து நிற்கும் 'சாக்கை' யெனும் பெயர், வெற்றிக் காலத்தும், அமைதிக்காலத்தும், அரசர்க்குக் கூத்தாடி மகிழ்ச்சியை யுண்டுபண்ணும் வேத்தியற் கூத்தரைக் குறிக்கும். வள்ளுவரும் சாக்கையரும் தமக்குக் கீழ்ப்பட்ட பல துணைவரையும், தத்தம் தொழிற்கு முழுப்பொறுப்பு முடைமையான், கருமத் தலைவரெனப்பட்டார்.

10–ஆம் நூற்றாண்டி லியற்றப்பட்ட சீவகசிந்தாமணியில், வள்ளுவன் அரசாணையைப் பறையறைந்து விளம்பரஞ் செய்பவனாகக் கூறப்படுவதலால், அதற்கு இரண்டொரு நூற்றாண்டிற்கு முந்திய பிங்கலத்திலும் அதுவேயாதல் வேண்டும்.

பண்டைக்காலத்திற் பாணர்க்கு, இசைத் தொழிலே குலத் தொழிலாயினும், அவருட் பலர் அதில் பிழைப்பின்மைபற்றிப் பிற தொழிலை மேற்கொண்டது போல், வள்ளுவரும் அரச வினையில்லாரெல்லாம் கணி (சோதிட)த் தொழில் புரிந்து வந்தனர். சாதகங் கணித்தலும் குறி சொல்லுதலும், இக் காலத்தும் வள்ளுவர்க்குரிய.

பண்டைக்காலத்திலேயே வள்ளுவர் நிமித்திகத் தொழிலுஞ் செய்துவந்தமையின், வள்ளுவர் எனும் பெயர் நிமித்திகன் எனும் பொருளையுந் தழுவியது (சிந்தாமணி 419). நிமித்திகன் நிமித்தம் (சகுனம்) கூறுபவன். வள்ளுவன் குறி சொல்லுவதனால், அத் தொழிற்கு வள்ளுவ சாத்திரமென்றும், அவனுக்கு வள்ளுவப் பண்டாரமென்றும் பெயர் உண்டு. பண்டாரமென்பது முற்காலத்தில் நூலகங்கட்கும், பல நூல் பயின்ற புலவர்க்கு அல்லது ஞானிகட்கும் வழங்கிய பெயர். அது பின்பு முறையே துறவு பூண்ட அறிஞர்க்கும், போலித் துறவிகளுக்கும், பெயராயிற்று.

புறநானூற்றில் சில பாடல்களில் நாஞ்சில் என்னும் மலைக்குத் தலைவனான ஒருவன், வள்ளுவன் என்னும் பெயராற் கூறப்படுகிறான். அவன் ஒருகாற் சேரனுக்கும், பின்பு பாண்டியனுக்கும், படைத்தலைவனாயிருந்ததாகத் தெரிகின்றது. அவன் 137, 140, 380–ஆம் புறப்பாட்டுகளில் பொருநன் என்று விளிக்கப்படுகின்றான். பொருநன் என்னும் பெயர் ஏர்க்களம் பாடுவோன், போர்க்களம் பாடுவோன், பரணி பாடுவோன் என்னும் மூவகைப் புலவருள்

அல்லது பாடகருள் ஒருவரையாவது, போர் வீரனையாவது குறிக்கும். இங்குக் கூறப்பட்ட நாஞ்சில் வள்ளுவன், ஓர் படைத் தலைவனாதலின் போர்த்தொழிற் பற்றியே பொருநன்* எனப்பட்டான்.

வள்ளுவக் குலத்தானொருவனுக்கு, ஓர் அருஞ்செயல்பற்றியோ அல்லது சிறந்த போர்த் தொழில்பற்றியோ, நாஞ்சில் என்னும் மலையைக் கொண்ட ஒரு சிறு நாடு, (சேரனால் அல்லது பாண்டியனால்) கொடுக்கப்பட்டிருக்கலாம். பண்டைக் காலத்தில் போர் வீரர் பெரும்பாலும், மறவரும் கள்ளரு மாயிருந்தாரேனும், பிற குலத்தாரும், அத் தொழிற்கு எத்துணையும் விலக்கப்பட்டில ரென்பது தேற்றம். ஆதலால் நாஞ்சில் வள்ளுவனை வள்ளுவக் குலத்தானாகக் கூறுவதற்குப் பெரிதுந் தடையில்லை. திருவிதாங்கூர்ச் சீமையைச் சேர்ந்த ஒரு நாடு வள்கூள நாடெனப்படுகின்றது. அது ஒருவேளை நாஞ்சில் வள்ளுவன் நாடாயிருந்திருக்கலாம்.

இனி, வள்ளுவன் என்னும் பெயரே, வள்ளல் என்னும் பெயரின் மறுவடிவமாகக் கொண்டு, அதற்கு உபகாரி என்னும் பொருளும் உரித்தாக்குவர். வள்ளல் என்னும் பெயரும் 'வள்' என்னும் மூலத்தினின்றே பிறந்ததாயினும், அம் மூலம், உபகாரி யென்னும் பொருளில் வரும்போது, வள்ளல், வள்ளியன், வள்ளியான், வள்ளியோன், என்ற வடிவுகளை ஏற்பதல்லது, வள்ளுவன் என்னும் வடிவை எவ்விடத்தும் ஏலாமையின், அது போலியுரையென மறுக்க.

இதுகாறுங் கூறியவற்றால், வள்ளுவன் என்பது குலப்பெயரே யென்றும், அது நிமித்திகனையும் குறிக்குமென்றும், உபகாரி யென்னும் பொருளில் வாராதென்றும், அறிந்து கொள்க (The Putturian, Feb.1939).

**வள்ளுவன்வாய்ச்சொல்** *vaḷḷuvaṉ-vāy-c-col*, பெ.(n.) வள்ளுவர் பார்க்க; see *vaḷḷuvar*. *"மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல்" (திருவள்ளுவமாலை-இறையனார்).*

*[வள்ளுவன் + வாய்ச்சொல்]*

**வள்ளூரம்** *vaḷḷūram*, பெ.(n.) 1. வள்ளுரம், 1 பார்க்க; see *vaḷḷuram*. 2. சூட்டிறைச்சி (வின்.); roasted flesh-meat. *"கழுகுண்ண வள்ளூர மேசுமந்து" (சீவக. 1552).*

*[வள்ளுரம்→வள்ளூரம்.]*

**வள்ளெனல்** *vaḷḷeṉal*, பெ.(n.) குரைக்கும் ஒலிக்குறிப்பு (வின்.); Onom, expr. of barking sound.

*[வல்→வள் + எனல்]*

**வள்ளை** *vaḷḷai*, பெ.(n.) 1. கொடிவகை; creeping bindweed, I pomaea aquatica. *"மகளிர் வள்ளை கொய்யும்" (பதிற்றுப்.29, 2).* 2. மகளிர் நெற்குத்தும்போது ஒரு தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு; song sung by women when husking or hulling grain in praise of a hero. *"மனையளகு வள்ளைக் குறங்கும் வளநாட" (வள்ளுவமா. 5), "வள்ளைத் தாள்போல் வடிகாதிவைகாண்" (மணிமே.20–53).*

*[வல்→வள்→வள்ளை. வள்ளை = உரற்பாட்டு (தொல்.பொருள்.63, நச்.)]*

**வள்ளைக்கீரை** *vaḷḷai-k-kīrai,* பெ.(n.) கொடி வகை (பதார்த்த.596); swamp cabbage-*Ipomoea aquatica.*

*[வள்ளை + கீரை]*



**வள்ளைப்பாட்டு** *vaḷḷai-p-pāṭṭu,* பெ.(n.) மகளிர் நெற்குத்தும் போது ஒரு தலைவனைப் புகழ்ந்து பாடும் பாட்டு, (சிலப். 29); song sung by women in praise of a hero when husking or hulling grain.

*[வள்ளை + பாட்டு.]*

இயலுமிடமெல்லாம் மகளிர் தம் வினைகளை இசையொடு செய்து வந்தமையை வள்ளைப் பாட்டால், அறியலாம்.

**வள்ளையுப்பு** *vaḷḷai-y-uppu,* பெ.(n.) ஓர் வகை உப்பு; a kind of salt.

*[வள்ளை + உப்பு.]*

**வளக்காற்று** *vaḷa-k-kāṟṟu,* பெ.(n.) நேர் காற்று; a tree wind.

*[வள்ளை + காற்று.]*

**வளக்குவெல்லி** *vaḷakku-velli,* பெ.(n.) பூடு வகை (தெய்வச். விறலிவிடு. 405); a plant.

**வளகடா** *vaḷa-kaḍā,* பெ.(n.) வளர்கிடாய் பார்க்க; see *vaḷar-kiḍāy.*

*[வளர்கிடாய் → வளகடா. மக்களின் பேச்சுவழக்கில் வளர்கிடாய், என்பது வளகடா என்று வழக்கூன்றியுள்ளது. இவ் வழக்கு கொச்சை வழக்கென்றும் கூறுவர்]*

**வளகம்** *vaḷagam,* பெ.(n.) பவளம், தொண் மணியுள் ஒன்று; red coral, one of *nava-maṇi.* *"பவளத் தன்ன மேனி" (குறுந். 1).*

**வளகிலவணம்** *vaḷagilavaṇam,* பெ.(n.) வளையலுப்பு; a salt used in the manufacture of bangles.

**வளகு** *vaḷagu,* பெ.(n.) நீண்ட மரவகை; woman sebesten. *"வளகின் குளகமர்ந்துண்ட" (கலித். 43).*

**வளங்காலவணம்** *vaḷaṅgā-lavaṇam,* பெ.(n.) வளையலுப்பு; a kind of mineral salt capable of calcining zinc (சா.அக.).

இதில் நாகம் நீறும். இதனால் நீரிழிவு அதிமூத்திரம் போம் என்று சா.அக. கூறும்.

**வளங்கோலு-தல்** *vaḷaṅ-kōlu-,* 5 செ.கு.வி. (v.i.) காரிய முடிவிற்கு வழி தேடுதல்; to devise ways and means to achieve an object.

*[வளம் + கோலு-.]*

குல்→கொல்→கோல்→கோலு-.

ஒரு செயல் அல்லது வினை இனிதே நலமாய் முற்றுப் பெறுதற்கு, அனைவருடனும் கலந்தாய்வு செய்து வழிகோலுதலே, வளங்கோலுதாகும்.

**வளச்சகட்டை** *valacca-kaṭṭai,* பெ.(n.) வளைக்கப்பட்ட சிறிய இரும்புக்கம்பி; a little bendy iron rod.

*[வளைத்த→ வளச்ச + கட்டை.]*

வளச்சுக்கட்டு-தல் *vaḷaccu-k-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) வளைத்துக்கட்டுதல் பார்க்க; see *vaḷaitt-k-kaṭṭu-*.

வளஞ்சியர்[1] *vaḷañjiyar*, பெ.(n.) வாணிகத்தால் நாட்டின் செல்வ வளத்தினைப் பெருக்கியவர்கள்; a community classified as '*vaišiyās*' to enrich the country by trade and commence. *இவர்கள் 'நானாதேசி வளஞ்சியர்' என்று கூறப் பெறும் வணிகக் குழுவினராவர். சித்திரமேழி பெரிய நாட்டுக் குழுவிலும், பதினெண்பூமி திறலாயிரத்தைந் நூற்றுவராய வாணிபக் குழுவிலும், இடம் பெற்றிருந்த வணிகராவர். "திருவேள்விக்குடி உடையார்க்கு திருக் கற்றளி எடுக்கின்ற வளஞ்சியரும் நானா தேசியத் திசையாயிரத்தைஞ் ஞூற்று வரும்" (S.I.I.Vol.XIX.459).*

வளஞ்சியர்[2] *vaḷañjiyar*, பெ.(n.) ஒரு வகை இனத்தினர்; a sect.

சோழர் காலத்தில் வாழ்ந்த தோரினத்தவர் இவர்களைப் பற்றிய செய்திகள் விரிவாக இல்லை.

வளத்தக்காள் *vaḷattakkāḷ*, பெ.(n.) வருவாய்க்கு ஏற்றவண்ணம் வாழ்க்கையை நடத்துபவள்; leading an economical life. *"வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" (குறள், 51).*

*[வளம் + தகு →தக்கு →தக்காள்]*

கணவனின் வருவாய்க்குத் தக்கவாறு வாழ்க்கை நடத்துபவளே, வளத்தக்காள் என்பார் மொழிஞாயிறு. 'வருவாய்க்குத் தக்க வாழ்க்கை யென்பது, முதலை அறிந்து, அதற்கு இயைய செலவு அழித்தல்' என்பார் பரிமேலழகர்.

செலவழித்தலென்பது, இல்வாழ்வில் ஏற்படும் இன்றியமையாத அடிப்படைச் செலவுகள் எனலாம்.

வளந்து *vaḷandu*, பெ.(n.) பெரிய மிடா (யாழ். அக.); big pot or vessel.

வளநாடு *vaḷa-nāḍu*, பெ.(n.) செழிப்புள்ள தேசம்; fertile tract or region. *"நேராதார் வளநாட்டை" (பு.வெ. 3, 14, கொளு).*

*[வளம் + நாடு.]*

இடையறவுபடாத வருவாயினை, அரசிற்கு அளிக்கும் செழிப்பான நாடு.

வளப்பக்கல் *vaḷa-p-pakkal*, பெ.(n.) மருந்துக் குப்பியை மூடுகின்ற மூடி; a stone, stopper or cork for closing bottle top.

வளப்பம்[1] *vaḷappam*, பெ.(n.) வளம், செழுமை; fertility, productiveness. *"வளமுடி நடுபவர்" (சீவக. 49).*

*[வள →வளப்பம்.]*

வளப்பம்[2] *vaḷappam*, பெ.(n.) 1. வழக்கம்; customs, peculiarties. *"கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்?" (வின்.).* 2. வளம், 1 பார்க்க; see *vaḷam*.

*[வழ→வள →வளப்பம்.]*

வளப்பாடு *vaḷappāḍu*, பெ.(n.) பெருக்கம்; profitable increase gain. *"வளப்பாடு கொளலும்" (பரிபா.2).*

*[வளம் + பாடு.]*

வளப்பிணி *vaḷappiṇi*, பெ.(n.) வளி (வாத) நோய்; disease caused by wind humour.

வளபூதம் *vaḷa-būdam*, பெ.(n.) கெம்பு; ruby.

வளம்[1] *vaḷam*, பெ.(n.) வலிமை; strength.

*[வல்→வள→வளம்.]*

வளம்[2] *vaḷam*, பெ.(n.) 1. செழுமை, வளமை; fertility. *"வளமுடி நடுபவர்" (சீவக. 49).*

2. அளவிற்கு அதிகமாக உற்பத்தி செய்கை; luxuriance, excessive productiveness. 3. மிகுதி; abundance, fullness. *"தொழுதெழுவார் வினைவள நீறெழ" (திருக்கோ. 118).* 4. பயன்; gain, profit, advantage. *"பயன் றூக்கி" (குறள், 912).* 5. செல்வம்; wealth, riches. *"வளவரை வல்லைக் கெடும்" (குறள், 480).* 6. வருவாய்; income. *"தற்கொண்டான் வளத்தக்காள்" (குறள், 51).* 7. நன்மை; goodness. *"உலவா வளஞ் செய்தான்" (பு.வெ. 8,7).* 8. தகுதி (பிங்.); suitability, fitness. 9. மாட்சிமை; greatness, excellence. 10. அழகு; beauty. *"இளவளநாடுபுல்லி" (சீவக.751).* 11. பதவி (சூடா.); dignity, station. 12. புனல்; water. *"சுனைவளம் பாய்ந்து" (திருக்கோ. 118).* 13. உணவு; food. *"பல் வளம் பகர்பூட்டும்" (கலித். 20).* 14. வணிகப் பண்டம்; article of merchandise. *"முந்நீர்வளம் பெறினும்" (பு.வெ.8. 31).* 15. வலம் (மறுவ.). 16. வெற்றி; victory, success. *"வளந்தரும் வேலோய்" (பு.வெ.9.9).* 17. வழி (வின்.); path, track. 18. பக்கம் (வின்.); part, side.

தெ. வளமு; ம. வளம்.

*[முல்→மல்→மல்லல் = வளம், பருமை, மிகுதி, செல்வம், வலிமை, மற்போர்.மல்→வல்→வள் + அம்→வளம்.]*

ஒ.நோ. நல் + அம் – நலம்

முல்[4] பொருந்துதற் கருத்து வேர் என்பார், மொழிஞாயிறு. இப் பொருந்து தற் கருத்து வேரிலிருந்து திரளுதல், பருத்தல், விரிதல், மிகுதல், செழித்தல், அழகாதல் முதலாய கருத்துகள் தோன்றும்.

வளமாகச் செழித்து வளர்ந்த பொருள் பருக்குந் தன்மைத்து. இப் பருத்தல் கருத்தினின்றே, மொத்தமாதல், வலுத்தல் முதலான கருத்துகள் முகிழ்க்கும். வலுத்தற் கருத்திலிருந்து பொருந்துதற் கருத்துப் பிறக்கும். இது குறித்துப் பாவாணர் கூறுவது வருமாறு :–

"பல அணுக்கள் அல்லது உறுப்புகள் அல்லது பொருள்கள், பொருந்துவதால் (ஒன்று சேர்வதால்) திரட்சி அல்லது பருமை உண்டாகும். (எ.கா.) "சேரே திரட்சி" (தொல்.உரி.65). செல்வம் அல்லது நீர் மிகையால் வளமும், பருமையால் வலிமையும் உண்டாகும்.

**வளம்பெறு-தல்** *vaḷam-peṟu-,* 18 செ. குன்றாவி.(v.t.) செழிப்படைதல் (சா.அக.); to become stronger and healthy to become prosperous.

*[வளம் + பெறு-.]*

**வளமடல்** *vaḷa-maḍal,* பெ.(n.) சிற்றிலக்கியம் தொண்ணூற்றாறனுள் அறம், பொருள், வீடு ஆகியவற்றினும், காமமே சிறந்தது என்றுந் தலைவனது பெயரை எதுகையிலமைத்துங் கலிவெண்பா வாற் பாடும் நூல்வகை (இலக். வி. 856); a poem in *kali-veṇbā,* praising kāmam as excelling *aṟam, poruḷ* and *vīḍu* and mentioning in *edugai* the name of the hero, one of 96 *Śiṟṟilakkiyam.*

*[வளம் + மடல்.]*

**வளமலைநாடன்** *vaḷa-malai-nāḍaṉ,* பெ.(n.) குறிஞ்சி நிலத் தலைவன்; fertile, hilly ruler. *"பொன்னுரை கல்லின் நன்னிறம் பெறூஉம் வளமலை நாடன் நெருநல் நம்மொடு" (நற்.25–4–5).*

*[வளமலை + நாடன்.]*

**வளமனமுடையோன்** *vaḷa-maṉamuḍai yōṉ,* பெ.(n.) துறவி; Šaint.

**வளமனை** *vaḷa-maṉai,* பெ.(n.) அரண்மனை; royal palace. *"வளமனை பாழாக வாரி" (புறப்.பொ.மா.வஞ்சிப்.15).*

[வள்→வளம் + மனை.]

"பெருஞ்செல்வர் வாழும் சிறந்த உறையுள்" எனப் பொருள் செய்வார், பாவாணர்.

வளமுறுமொழியாள் *vaḷamuṟu-moḻiyāḷ,* பெ.(n.) சாயா மரம்; tree that does not cast its shadow.

வளமை[1] *vaḷamai,* பெ.(n.) கொழுப்பு; fatness, nutrition.

[வழ→வள→வளமை.]

வளமை[2] *vaḷamai,* பெ.(n.) 1. பொருள்; property, money. *"வளமை கொணரும் வகையினான்" (திணைமாலை. 85).* 2. உதவி, நலன், பயன் (அக.நி.); benefit, kindness, help, favour. 3. வளம்[1], 6 பார்க்க; see *vaḷam*[1], 6.

[வளம் → வளமை.]

வளமை[3] *vaḷamai,* பெ.(n.) 1. வழக்கம்; customs. 2. வளப்பம்[2] பார்க்க; see *vaḷappam.*

[வழ→ வழமை→ வளமை.]

வளமைகொழி-த்தல் *vaḷamai-koḻi-,* 4 செ.கு.வி.(v.i.) தன் பெருமையைத் தானே கூறிக் கொள்ளுதல்; to blow one's own trumpet, to brag.

[வளமை + கொழி-.]

ஒருகா. தற்பெருமை கொள்ளுதல்.

வளமைநீட்டு-தல் *vaḷamai-nīṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வளமை கொழி; to brag.

[வளமை + நீட்டு-,]

வளமையர் *vaḷamaiyar,* பெ.(n.) 1. வேளாளர் (பிங்.); agriculturists. 2. மண்டிய பொருள் வளமுள்ளவர்; wealthy, prosperous persons, rich man. 3. மாட்சிமையுள்ளோர்; great or excellent persons, man of character.

[வளம்→வளமை→வளமையர்.]

வளயம் *vaḷayam,* பெ.(n.) வளையம் பார்க்க (வின்.); see *vaḷaiyam.*

[வலயம்→வளயம்.]

வளர்[1]-தல் *vaḷar-,* 8 செ.கு.வி.(v.i.) 1. பெரிதாதல்; to grow. *"வளர்வதன் பாத்தியுள்" (குறள், 718).* 2. நீளுதல்; to lengthen, to be elongated. 3. மிகுதியாதல்; to increase, to wax, as the moon. *"துன்பம் வளர வரும்" (குறள், 1223).* 4. களித்தல்; to rejoice. *"வேனல் வளரா மயில்" (திணைமாலை. 111).* 5. கண்டுயிலுதல்; to sleep. *"ஆலிலையின் மேலன்று நீ வளர்ந்தது" (திவ். இயற். 1. 69).* 6. தங்குதல்; to dwell, rest. *"வளர் தாமரை" (திருக்கோ. 1).*

க. மலெ; ம. வளருக.

[முல்→மல்→வல்→வள்→வளர்-.]

வளர்[2]-த்தல் *vaḷar-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. பெருக்குதல்; to cause to increase, to enhance. 2. போற்றிவளர்த்தல்; to cherish, bring up, as a child, animal, plant etc. 3. வளர்த்து-தல் பார்க்க; see *vaḷarttu-.*

[வல்→வள்→வளர்-.]

வளர்[3]-த்தல் *vaḷar-,* 4 செ.கு.வி.(v.i.) வளரச் செய்தல்; to make grow.

[வள்→வளர்-.]

வளர்[4] *vaḷar,* பெ.(n.) 1. ஒருவமச் சொல்; a particle of comparison. *"இழை வளர் நுண்ணிடை" (தேவா. 991. 6).* 2. வளார் பார்க்க; see *vaḷār.*

வளர்கடா *vaḷar-kaḍā,* பெ.(n.) வளர்கிடாய் (வின்.) பார்க்க; see *vaḷar-kiḍāy.*

[வளர் + கடா.]

**வளர்கிடாய்** *vaḷar-kiḍāy,* பெ.(n.) வீட்டில் வளர்த்த ஆட்டுக்கிடாய்; domestically reared ram.

*[வளர் + கடாய்→கிடாய்.]*



**வளர்ச்சி** *vaḷarcci,* பெ.(n.) 1. வளருகை; growth, increase, enrichment. 2. உயரம்; stature, height. *"அவன் வளர்ச்சியுள்ளவன்".* 3. நீட்சி; elongation, lengthening. 4. உறக்கம்; sleep. *"வளர்ச்சியும்...... புணரார் பெரியா ரகத்து" (ஆசாரக். 71).*

*[வள்→வளர்→வளர்ச்சி.]*

**வளர்சடையோன்நாதவிந்து** *vaḷar šaḍai yōn-nāda-vindu,* பெ.(n.) கந்தகம்; sulphur.

**வளர்த்தகாடு** *vaḷartta-kāḍu,* பெ.(n.) தானே முளைத்த மரங்களைப் பாதுகாத்து வளர்க்கும் பணியாளர்களுக்கு நிலவுடைமை யாளர் கொடுக்கும் கொடைப் பொருள்; remuneration or grant paid by a land lord to his tenants for maintaining properly trees of spontaneous natural growth.

*[வளர்→வளர்ந்த→வளர்த்த + காடு.]*

**வளர்த்தாள்** *vaḷarttāḷ,* பெ.(n.) 1. செவிலித் தாய்; foster-mother, wet nurse. 2. கைத் தாய்; governess. *செவிலித்தாய் என்பவள் (பண்டைய இலக்கியங்களில்) தலைவியின் வளர்ப்புத் தாய்.*

*[வளர்→வளர்த்தாள்.]*

**வளர்த்தி** *vaḷartti,* பெ.(n.) வளர்ச்சி; growth, development. *"உன் வளர்த்தி யூடே வளர்கின்றதால்" (திவ். பெருமாள். 6, 3).*

*[வளர்→வளர்த்தி.]*

**வளர்த்து[1]-தல்** *vaḷarttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கிடத்துதல்; to stretch as a thing, on the ground. *"தயிலத்தோணி வளர்த்துமி னென்னச் சொன்னான்" (கம்பரா. யுத்த. இராவணன் சோகப். 61).*

*[வள்→வளர்→வளர்த்து-.]*

**வளர்த்து[2]-தல்** *vaḷarttu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. வளரச் செய்தல்; to cause to grow. 2. உறங்கச் செய்தல்; to put to sleep. *"அன்னம்..... வளர்த்திய மழலைப் பிள்ளை" (கம்பரா. நாட்டுப். 13).* 3. நீட்டுதல்; to lengthen, to prolong, as talk. 4. பொன் முதலியவற்றைத் தகடாக அடித்தல் (வின்.); to beat into thin plates, as gold.

*[வளர்→வளர்த்து-.]*

**வளர்ந்தெழுரோகம்** *vaḷarndeḻu-rōgam,* பெ.(n.) கண்ணில் புண் தோன்றி, கண் சிவந்து, நீர் வடிதலோடு பார்வை குறைந்து காணப்படுமோர் கண்ணோய்; an eye disease marked by ulcerated fleshy growth in the corner of the eye and white coat, redness, watering, dimness of vision etc.

**வளர்ப்பாளன்** *vaḷarppāḷaṉ,* பெ.(n.) வளர்ப்புப் பிள்ளை பார்க்க; see *vaḷarppu-p-piḷḷai.*

*[வளர்ப்பு + ஆளன்]*

வளர்ப்பு[1] *vaḷarppu,* பெ.(n.) ஊண்; nutrition.

*[வளர்→வளர்ப்பு.]*

வளர்ப்பு[2] *vaḷarppu,* பெ.(n.) 1. வளர்க்கை; bringing up, fostering. 2. நடனக்காரியின் மகவேற்பாக வந்த பெண்மகவு; girl adopted by a dancing-girl. 3. பிறனைச் சார்ந்து வாழ்பவன்; dependant. *"வளர்ப்பு வக்கணையறியாது" (வின்.).*

*[வளர்→வளர்ப்பு.]*

வளர்ப்புணி *vaḷarppuṇi,* பெ.(n.) வளர்ப்புப் பிள்ளை (யாழ்.அக.) பார்க்க; see *vaḷarppu-p-piḷḷai.*

*[வளர்ப்பு + உண்→உணி.]*

வளர்ப்புத்தாய் *vaḷarppu-t-tāy,* பெ.(n.) 1. செவிலித்தாய்; foster-mother. 2. வளர்த்தாள் பார்க்க; see *vaḷarttāḷ.*

*[வளர்ப்பு + தாய்]*

வளர்ப்புப்பிள்ளை *vaḷarppu-p-piḷḷai,* பெ.(n.) 1. மிகவும் விரும்பி வளர்க்கப்படும் பிள்ளை; foster-child. 2. தத்துப்பிள்ளை; adopted child.

*[வளர்ப்பு + பிள்ளை]*

வளர்பிறை *vaḷar-piṟai,* பெ.(n.) 1. வளர்மதி; cresent moon, waxing moon. *"மங்குல் விசும்பின் வளர்பிறை" (பெருங்.நரவாண.1, 67).* 2. வளர் பக்கம்; the bright half of the lunar month.

*[வளர் + பிறை.]*

வளர்மயிர் *vaḷar-mayir,* பெ.(n.) மயிர்க் குழற்சி; tuft, knot of hair.

*[வளர் + மயிர்]*

வளர்முகநாடு *vaḷar-muga-nāḍu,* பெ.(n.) பொருளாதாரம் அல்லது தொழில் முறையில் வளர்ந்து வரும் நாடு; economically or industrially developing country. *'இந்தியா ஒரு வளர்முக நாடு' (உ.வ.).*

*[வளர் + முகம் + நாடு]*

வளர்மேகம் *vaḷar-mēgam,* பெ.(n.) சிறுநீரக நோய்; increasing urinary venereal disease.

*[வளர் + மேகம்]*

வளர்வு *vaḷarvu,* பெ.(n.) வளர்ச்சி (வின்.) பார்க்க; see *vaḷarcci.*

*[வளர்→வளர்வு.]*

வளரறம் *vaḷararam,* பெ.(n.) மிகுமறம் (வின்.); increasing virtue.

*[வளர் + அறம்]*

வளரி *vaḷari,* பெ.(n.) 1. வளரித்தடி பார்க்க; see *vaḷari-t-taḍi. "மறவன் கொடுப்பது வளரிப் பிரசாதம்".* 2. வயலில் முளைக்குங் களை வகை (நாஞ்.); a kind of weed, growing in the field.

*[வள→வளர்→வளரி = பிறைபோல் வளைந்த வளரித்தடி (வே.க.4, பக்.95).]*

வளரிக்கை *vaḷarikkai,* பெ.(n.) வளர்த்துப் பேசுகை; prolonging talkativeness. *'வளரிக்கையாலே வம்பிலே போகுதென் வாணாள்' (வள்ளி. கதை).*

மறுவ. வாயாடு.

*[வளர்→வளரி→வளர்க்கை.]*

வளரித்தடி *vaḷari-t-taḍi,* பெ.(n.) ஒரு புறம் கனமாகவும், மற்றொரு புறம் எடையற்றதாகவும், கூர்மையாகவும் மரம்

அல்லது இரும்பினாற் பிறை வடிவாகச் செய்த ஒரு வகை எறிகருவி; boomerang, short weapon of hard wood or iron, crescent-shaped, one end being heavier than the other and the outer edge sharpened.

*[வளரி + தண்டி →தடி = பிறைபோல் வளைந்த வளரித்தடி (வே.க.4, பக்.95)]*

**வளருப்பு** *valaruppu,* பெ.(n.) கோவானூர் உவர் மண்ணுப்பு; effiorescence gathered from the soil of fuller's earth found in kōvanūr *(சா.அக.).*

**வளவள[1]த்தல்** *vala-vala-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சுருக்கமின்றி பயனற்றச் சொற்களைப் பேசுதல்; to be talkative, to be wondy, speaking of rain words, indulge in vain speaking. 2. வீணே பிதற்றுதல் (வின்.); to babble.

*[வள →வளவள-.]*

**வளவள[2]-த்தல்** *vala-vala-,* 4 செ.கு.வி. (v.i.) வளுவளு (வின்.) பார்க்க; see *valu-valu.*

*[வழவழ →வளவள-.]*

**வளவளப்பு[1]** *vala-valappu,* பெ.(n.) பிசுபிசுப்பு; musilaginous pasty and smooth, slippery.

*[வழவழ →வளவள →வளவளப்பு.]*

**வளவளப்பு[2]** *vala-valappu,* பெ.(n.) 1. பயனற்றச் சொற்களை அதிகமாகக் கூறுதல்; talkativeness, wordiness, excessive talk of vain words. 2. வீண் பிதற்று; vain talk, babbling.

*[வளவள →வளவளப்பு.]*

**வளவன்[1]** *valavan,* பெ.(n.) சோழர்களின் பட்டப் பெயர்களுள் ஒன்று; one of the titles of Cōlās. *'வளவன்'* என்ற பெயர், சோழரின் மரபில் வந்தோர்க்கு வழங்கும் பெயராகும். *'வள நாட்டின் தலைவன்'* என்பதே *'வளவன்'* என்பதின் பொருளாகும். *'மாவளத்தான்' (புறம் - 43-44), 'திருமாவளவன்' (பட்டி-299), 'கரிகால் வளவன்' (அகம்-55-10), 'கிள்ளிவளவன்' (பிறம்-70, 10, 346, 22, 399, 13).*

**வளவன்[2]** *valavan,* பெ.(n.) 1. சோழன்; *Cōla* king. *"இயறேர் வளவ" (புறநா. 7).* 2. வேளாளன்; agriculturist. *"அரசர்கள் வணிகர் குறைவறு வளவர்கள்" (திருப்போ. சந். திருப்பள்ளி.8).*

*[வளம் →வளவன்.]*

**வளவன்மாதேவி** *valavan-mādēvi,* பெ.(n.) பராந்தகச் சோழனின் மனைவி; wife of *parāndaga-c-cōlan.*

*[வளவன் + மாதேவி.]*

இவளுடைய பெயரால் அமைந்த ஊர் 'வளையமாதேவி' என்பதாகும். இவ்வூர் தென்னாக்காடு மாவட்டத்தில் உள்ளது.

**வளவி** *valavi,* பெ.(n.) வீட்டிறப்பு (பிங்.); sloping roof, caves.

*[வள →வளவி.]*

**வளவு[1]-தல்** *valavu-,* 5 செ.குன்றாவி.(v.t.) வளர்த்தல்; to bring up, rear. *"வெட்டுணியுன் மகனை மெல்ல வள வாக்கால்" (ஆதியூரவதானி. 38).*

*[வளவி→வளவு-.]*

**வளவு[2]** *valavu,* பெ.(n.) 1. வீடு; house. *"வளவிற்கமைந்த வாயிற்றாகி" (பெருங். இலாவாண.6, 77).* 2. வீட்டுப்புறம் (வின்.); house hold premises.

தெ. வெளவு (velavu).

*[வள் →வள →வளவு = வீட்டுச் சுற்றுப்பரப்பு, வீட்டுத்தொகுதி (வே.க.4, பக்.95).]*

வளவுதடி *vaḷavu-taḍi,* பெ.(n.) ஆண்குறித் தண்டு; penis.

*[வளவு + தடி]*

வளன் *vaḷaṉ,* பெ.(n.) வளம் பார்க்க; see *vaḷam.* *"பெருவளனெய்தி" (பெரும்பாண். 26).*

வளா[1] *vaḷā,* பெ.(n.) பரப்பு; circuit, area, spread, as a tank. *"குளவளாக் கோடின்றி நீர் நிறைந்தற்று" (குறள், 523).*

*[வள் → வள → வளா = சுற்றுப்பரப்பு (வே.க.4, பக்.95).]*

வளா[2] *vaḷā,* இடை.(int.) பளாபளா (வின்.); exclamation meaning 'bravo'.

க. பளா.

வளாகச்சுவர் *vaḷāga-c-cuvar,* பெ.(n.) கட்டடத்தைச் சுற்றியமைந்த சுவர்; compound wall.

*[வளாகம் + சுவர்]*

வளாகம் *vaḷāgam,* பெ.(n.) 1. இடம் (பிங்.); place, complex, premises. *"புலன்களைந்தும் வென்றவர் வளாகந் தன்னுட் சென்றிலேன்" (தேவா. 1193:1).* 2. வளைக்கை (சூடா.); enclosing, surrounding, fencing. 3. உலகம்; globe, earth. *"முந்நீர் வ்ளாக மெல்லாம்" (கலித்.146).* 4. பூகண்டம்; continent. *"ஏழ்பெரு வளாக வேந்தர்" (கம்பரா. திருமுடி.6).* 5. நாடு; country. *"வேறோர் வளாகம துற்றான்...... வணிகன்" (கந்தபு. மார்க். 142).* 6. தினைப்புனம் (பிங்.); millet-field. *"குன்றும் யாறுங்குவடும் வளாகமும்" (குற்றா. தல. வேடன் வலம். 28).* 7. தோட்டம்; garden. 8. வளா[1] பார்க்க; see *vaḷā*[1].

*[வள் → வள → வளா → வளாகம்.]*

வல்[1] வளைவுக் கருத்தினின்று முகிழ்த்த சொல். வளைந்து சூழ்ந்த இடம், வளைந்து சூழ்ந்த கடல், வளைந்து சூழ்ந்த நிலப்பரப்பு வளைந்து சூழ்ந்த வளாகம் போன்ற பொருண்மை பொதிந்த சொற்கள், வளைவுக்கருத்தினின்று முகிழ்த்தன என்பார், மொழிஞாயிறு.

வளாஞ்சி *vaḷāñji,* பெ.(n.) வளார் பார்க்க; see *vaḷār.*

*[வள் → வளா → வளாஞ்சி (இ.வ.) (வே.க.4, பக்.95).]*

வளாய்க்கொள்ளுதல் *vaḷāy-k-koḷḷudal,* பெ.(n.) சூழ்ந்து கொள்ளுதல்; encircled fenced.

*[வளாய் + கொள்ளு–,]*

வளார் *vaḷār,* பெ.(n.) இளம் கொம்பு; twing, tender branch. *"புளியம் வளாரால் மோதுவிப்பாய்" (தேவா.1039,1).*

தெ.மளாரமு.

*[வல் → வலார் → வளார்.]*

வளால் *vaḷāl,* பெ.(n.) 1. தரைக்கூறுவகை (செந். xiii, 172); a kind of soil. 2. வளா[1] பார்க்க; see *vaḷā*[1].

*[வளார் → வளால்.]*

வளாலை *vaḷālai,* பெ.(n.) முட்டைக் காளான்; oval shaped mushroom.

*[வளால் → வளாலை.]*

வளாறு *vaḷāṟu,* பெ.(n.) வளார் பார்க்க; see *vaḷār.*

*[வளார்→வளாறு.]*

வளாவு[1]-தல் *vaḷāvu-,*5 செ.குன்றாவி.(v.t.) 1. சூழ்தல் (பிங்.); to surround. *"இள வெயில் வளாவ" (பரிபா. 15, 27). "மகோததி வளாவும் பூதலம்" (கம்பரா. தேரேறு. 42).* 2. மூடுதல்; to cover, jacket. *"பைந்துகில்..... வெம்முலை மேல் வளாய்" (சீவக. 2634).*

*[வள→வளா→வளாவு-.]*

வளாவு[2]-தல் *vaḷāvu-,*5 செ.குன்றாவி. (v.t.) 1. கலத்தல்; to mix, as hot water with cold, to dilute. *"தேன் வளாவியும்" (கம்பரா. ஆற்றுப். 8), "கடல் வெதும்பின் வளாவு நீரில்லாது போலவும்" (இறை. 3. பக். 47).* 2. அளவளாவுதல் (பிங்.); to be sociable, intimate.

*[வளா→வளாவு-.]*

வளி[1] *vaḷi,*பெ.(n.) 1. ஓதம்; moisture. 2. பிதுக்கம்; production. 3. குடலிறக்கம் (அண்டவாதம்); hernia. 4. சூதம்; hydrocele. 5. ஆசன வளையம்; rings in the rectum. 6. வளிம (வாதம்); wind humour.

*[வள்→வளி]*

வளி[2] *vaḷi,*பெ.(n.) 1. காற்று; wind, air. *"வளிவழங்கு மல்லன்மா ஞாலங்கரி" (குறள், 245).* 2. சுழல்காற்று (பிங்.); whirl wind. 3. உடலிலுள்ள வாதக்கூறு; windy humour in the body. *"வளி முதலா வெண்ணிய மூன்று" (குறள், 941).* 4. அண்டவாத நோய்; rupture, hernia.

தெ., ம.வளி.

*[வல்→வள்→வளி.]*

*"வளி = வளைந்து வீசுங் காற்று" (வேர்ச் சொல்.4, பக்.95).*

வளி[3] *vaḷi,*பெ.(n.) சிறிய காலவளவு வகை; a small duration of time. *"கணம் வளி யுயிர்ப்புத் தோவம்" (மேருமந். 94).*

*[வள்→வளி.]*

வளிச்செல்வன் *vaḷi-c-celvaṉ,* பெ.(n.) (வாயுக்) காற்று கடவுள்; the wind god.

*[வளி + செல்வன்]*

வளிசம் *vaḷišam,*பெ.(n.) தூண்டில் (பிங்.); fishing rod.

*[வள்→வளி→வளிசம் = வளைந்த தூண்டில்.]*



வளிதரும்செல்வன் *vaḷidarum-šelvaṉ,* பெ.(n.) வளிச்செல்வன் பார்க்க; see *vaḷi-c-celvaṉ.*

*[வளிதரும் + செல்வன்.]*

வளிதூக்கல் *vaḷi-tūkkal,* தொ.பெ.(vbl.n.) வேகமாகக் காற்றடித்தல்; to speed wind. *"கொடிறுபோல் காயவால் இணர்ப்பாலை செல்வளி தூக்கலின் இலைநீர் நெற்றம்" (நற்-107-3-4).*

*[வள்→வளி + தூக்கல்]*

**வளிநிலை** *vaḷi-nilai,* பெ.(n.) மூச்சுக் காற்றினை உடம்பினுள் தேக்கி வைக்கும் அல்லது நிறுத்தும் ஓகநிலை; retention, holding in of breath, suspension of breath, a part of *ōgam (pirāṇāyāmam).*

மறுவ. காற்றியக்கம்

*[வளி + நிலை]*

வளிநிலை (பிராணாயாமம்), இழுக்கை (பூரகம்), விடுகை (இரேசகம்), நிறுத்தம் (கும்பகம்) என்னும் மூவகையால் மூச்சை யடக்கி யாள்கை. வளிநிலை (பிராணாயாமம்) ஓகத்தின் எண்ணுறுப்புகளு ளொன்று.

வளிநிலை குறித்து அடியார்க்கு நல்லார் உரைத்துள்ளது வருமாறு :- "உந்தியொடு புணர்ந்த விருவகை வளியும், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை" (சிலம்பு.14:11, உரை.).

**வளிப்பிடுக்கன்**[1] *vaḷi-p-piḍu-k-kaṉ,* பெ.(n.) வளியிறங்கினவன்; one who is afflicted with rupture.

*[வளி + பிடுக்கன்]*

**வளிப்பிடுக்கன்**[2] *vaḷi-p-piḍukkaṉ,* பெ.(n.) வளியன் பார்க்க (வின்.); see *vaḷiyaṉ.*

*[வளி + பிடுக்கன்]*

**வளிப்பிடுக்கு** *vaḷi-p-piḍukku,* பெ.(n.) காற்றுச் சேர்ந்த ஆணின் இனப்பெருக்கச் சுரப்பி உறுப்பு; rupture hernia.

மறுவ. ஓதப்பிடுக்கு.

*[வளி + பிடுக்கு.]*

புல் →புள் →பிள் →பிழம்பு = திரட்சி (வே.க.3:81).

பிள் → பிண்டு = திரட்சி (வே.க.3:81).

புள் →பிள் →பிடு →பிடுக்கு.

வளிமம் மிகுதியாகச் சேர்ந்து, திரண்டு திகழும் ஆணின் விதைக்கொட்டை.

**வளிமகன்** *vaḷi-magaṉ,* பெ.(n.) 1. அனுமான்; *haṉumāṉ.* 2. வீமன்; *vīmaṉ.* *"அரக்கில்லை வளிமகனு டைத்து" (கலித். 25).*

*[வளி + மகன்]*

**வளிமறை** *vaḷi-maṟai,* பெ.(n.) 1. வீடு; house. *"என்னல் கூர்வளிமறை" (புறநா. 196).* 2. கதவு; door. *"வளிமறையு மின்றி வழக் கொழியா வாயில்" (பு.வெ.10, முல்லைப். 4).*

*[வளி + மறை]*

**வளியன்** *vaḷiyaṉ,* பெ.(n.) பருத்த விதைகளை யுடையவன்; one afflicted with a big scrotum, one afflicated with rupture.

*[வளி + அன் – வளியன்]*

**வளியிறங்கினவன்** *vaḷi-y-iṟaṅginavaṉ,* பெ.(n.) வளியன் பார்க்க (வின்.); see *vaḷiyaṉ.*

*[வளி + இறங்கினவன்]*

**வளு**[1] *vaḷu,* பெ.(n.) கருப்பையிலிருந்து குழவி (பிண்டம்) வெளிவருமுன் வெளிப்படும் வழவழப்பான ஒரு பொருள்; a slight discharge of mucus with or without blood called 'show' indicating the delivery of the child, a discharge of blood and mucus from the rigina of the onset of labour.

**வளு**[2] *vaḷu,* பெ.(n.) 1. இளமை; youth. 2. இளைது; that which is tender or young.

**வளுந்து-தல்** *vaḷundu-,* 5 செ.கு.வி.(v.i.) வழுந்து (வின்.) பார்க்க; see *vaḷundu.*

**வளும்பு** *va|umbu,* பெ.(n.) வழும்பு[2] பார்க்க (யாழ்.அக.); see *va|umbu.*

மறுவ. கொழுப்பு.

*[வழும்பு→வளும்பு.]*

**வளுவளு–த்தல்** *va|u-va|u-,*4 செ.கு.வி. (v.i.) 1. வழுக்குத் தன்மையாதல்; to be slimy, slippery. 2. பேச்சு முதலியவற்றில் தெளிவின்றியிருத்தல் (வின்.); to be uncertain or indecisive as in speaking or language, unclear.

*[வளு + வளு–.]*

**வளுவளெனல்** *va|u-va|enal,* பெ.(n.) நொளுநொளுப்பு; plastic.

*[வளு + வளெனல்]*

**வளுவாதியர்** *va|u-vādiyar,* பெ.(n.) புதுக்கோட்டைச் சீர்மையிலும், திருச்சி மாவட்டத்திலும் வாழ்கின்ற, வலையருள் ஒரு பிரிவினர் (E.T.vii, 311); a subsect of the *va|aiyar* caste in the erstwhile *Pudukōṭṭai* state now district and in the Trichy district.

**வளை[1]–தல்** *va|ai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. கோணுதல்; to bend, to become crooked. 2. தாழ்தல்; to lower down. *"முற்றமூத்துக் கோல்துணையா முன்னடி நோக்கி வளைந்து" (திவ். பெரியதி. 1, 3, 1).* 3. தோற்றல்; to be defeated. *"வளையா வயவரும்" (பு.வெ.7, 18).* 4. திடமறுதல் (சீவக.1068, உரை); to yield, give way, surrender. 5. நேர்மையினின்று விலகுதல்; to deviate, as from rectitude. *"வளையாத செங்கோல் வளைந்ததிது வென்கொல்" (சிலப்.19, 16).* 6. வருந்துதல்; to suffer, regret. *"வளையார்பசியின்" (பதினொ திருவிடை–மும்மணிக்.21).* 7. சுற்றுதல்; to move or round about, as foetus in the womb. *'குழந்தை வயிற்றில் வளைய வருகிறான்' (உ.வ.).*

*[வள்→ வள→வளை– (வே.க.4, பக்.95).]*

**வளை[2]–தல்** *va|ai-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. சூழ்தல்; to surround, encompass, besiege. *"வளைகடல் வலையிற் சூழ்ந்து" (சீவக. 1115).* 2. சுற்றி வருதல்; to hover round, to walk around. *"வையக முழுதுடன் வளைஇ" (புறநா. 69), "செறிவளை நல்லார் சிலர் புறஞ் சூழ" (மணிமே.18–39).*

*[வள்→வள→வளை–. (வே.க.4, பக்.95)]*

வளைதல் = பயன் கருதிச் சுற்றி வருதல். தனக்கு ஆக வேண்டிய ஒன்றைக் கருதிப் பன்முறை வந்து பார்த்தலும், பேசுதலும், வளைதல் என்றும், வளைய வருதல் என்றும் சொல்லப்படும்.

வீட்டைச் சுற்றுதலும், ஆளைச் சுற்றுதலும், வளைதல். அவ்வளைதலும் பல்கால் வருதல், தற்பயன் கருதியதேயன்றிப் பிறிதன்றாம். வாலைக் குழைக்கும் நாய் வளைய வரும். வாயைக் குழைக்கும், இவரும் வளைய வருவர். இத்தகையவரே, 'சுடக்குப் போட்டால் வருவார்' என்று சொல்லப்படும், இழிவு உடையவராம். அன்பால் தாய், சேயையும், சேய், தாயையும் வளைய வருதல் ஈதன்றாம். "வளைய வருகிறானே, என்ன புதுநாடகம்" என்பது வளைய வருதலை விளக்கும்.

**வளை[3]–த்தல்** *va|ai-,*4 செ.குன்றாவி.(v.t.) 1. வளையச் செய்தல்; to bend, inflect. 2. சூழ்தல்; to surround. *"இடுமுட் புரிசை யேமுற வளைஇ" (முல்லைப். 27).* 3. தடுத்தல்; to hinder, obstruct, prevent. *"வள்ளனீங்கப் பெறாய் வளைத்தே னென" (சீவக. 889).* 4. பற்றுதல்; to grasp, seize. 5. கவர்தல்; to carry off, sweep away, to steal. *'திருடர் வந்து எல்லாவற்றையும் வளைத்துக் கொண்டு விட்டார்கள்' (இ.வ.).*

6. பேச்சு முதலியவற்றை திருப்புதல்; to reiterate, to revert again and again. *'வளைத்து வளைத்து பேசுகிறான்' (இ.வ.).* 7. எழுதுதல்; to paint, delineate. *"உருவப்பல்பூ வொருகொடி வளைஇ" (நெடுநல். 113).* 8. அணிதல்; to wear, put on. *"சடை முடிமேல் முகிழ்வெண்டிங்கள் வளைத்தானை" (தேவா. 871.1).*

*[வள்→வள→வளை- (வே.க.4, பக்.95)]*

**வளை[4]** *vaḷai,* பெ.(n.) வளையம்; ring, circle, circuit. *"கோபுரகலச அமைப்பினால் இவ்விணைப்பினை அறியலாம்" (தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு), "கண்களி பெறூஉம் கவின்பெறு காலை எல்வளை ஞெகிழ்ந் தோற்கு அல்லல்" (நற்-56-3-4). "ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே" (நற்-60-11).*

க. பளெ (b)

*[வள்→வள→வளை (வே.க.4, பக்.95)]*

பல பகுதிகளாக அமைக்கப் பெற்று, ஒன்றாக, ஓருருவாக அமைக்கப்படும் மாழையாலான பாத்திரங்கள், ஒன்றற் கொன்று அடுக்கிச் செருகி உருவாக்கும் சுரையிடங்களே வளை என்று பெயர் பெறும்.

**வளை[5]** *vaḷai,* பெ.(n.) 1. சுற்றிடம்; circle, circuit, surrounding region. *"பரமேச்சுர மங்கலத்து ளகப்பட்ட வளையில்"* (S.I.I.i, 151, 72). 2. சங்கு; conch. *"வளையொடு புரையும் வாலியோற்கு" (பரிபா. 2, 20).* 3. கைவளை; bangle, bracelet. *"முன்கை யிறையிறவா நின்ற வளை" (குறள், 1157).* 4. ஆழி, எறி வளையம்; discus. *"தாங்கணைப் பணிலமும் வளையுந் தாங்கரா வீங்கணைப் பள்ளியான்" (கம்பரா. உருக்காட்டுப். 43).* 5. துளை; hole. 6. எலி முதலியவற்றின் பொந்து (இ.வ.); rat-hole burrow. 7. சிறிய உத்திரம் (வின்.); small beam. 8. நீண்ட மரத்துண்டு; long piece of wood.

க. பளெ (b.).

*[வள்→வளை]*

**வளை[6]** *vaḷai,* பெ.(n.) தூதுவளை (சங்.அக.); a thorny climbing brinjal.



**வளைக்கழுந்து** *vaḷai-k-kaḻundu,* பெ.(n.) சுவருட் செலுத்தும் உத்திரத்தின் பகுதி; tenon in the end of the lower beam in a building.

*[வளை + கழுந்து]*

**வளைக்காச்சுமணி** *vaḷai-k-kāccu-maṇi,* பெ.(n.) சங்குமணி; a kind of bead.

*[வளை + காச்சுமணி. காய்ச்சுமணி→ காச்சுமணி]*

**வளைகாப்பு** *vaḷai-kāppu,* பெ.(n.) முதலாவதாகக் கருவுற்ற பெண்ணுக்கு, ஐந்தாவது அல்லது ஏழாவது மாதத்தில் வளையணியும் நிகழ்வு; bangle wearing ceremony in the fifth or seventh month of a married woman's first pregnancy.

*[வளை + காப்பு. கா = காத்தல். கா→ காப்பு.]*

முதன்முதல் கருவுற்ற பெண்களுக்கு, ஏழாம் மாதத்தில் செய்யப்படும் நிகழ்வு.

கருவுற்ற மகளிரை, நோய்நொடியிலிருந்து காத்தற்பொருட்டு நிகழ்த்தப்பெருஞ் சடங்கு. பேயச்சத்திலிருந்தும், கண்ணேறுபடுதலிலிருந்தும் காப்பதற்காகப் போடப்படும் வளையே, வளைகாப்பென்று, ஊரகத்தார் நம்புகின்றனர்.

ஏழாம் மாதத்தில் செய்யவியலாதவர், ஒன்பதாம் மாதத்தில் செய்வர்.

தாயைக் காத்தற் பொருட்டு, முதற்கண், வேம்பின் ஈர்க்காலாகிய வளையை அணிவிப்பர். பின்பு அவரவர்தம் செல்வ வளமைக்குத் தக்கவாறு, தங்கவளையல், சங்கு வளையலை அணிவித்துத் தாயை மகிழ்விப்பர்.

**வளைகாப்புபோடல்** *vaḷai-kāppu-pōḍal,* பெ.(n.) வளைகாப்பு பார்க்க; see *vaḷai-kāppu.*

*[வளைகாப்பு + போடல்.]*

முதற்சூலுற்ற பெண்களுக்கு பெண்வீட்டார் நிகழ்த்தும் வளையணி விழாவே, வளைகாப்புப் போடலாகும்.

வளைகாப்புபோடல் – மகப்பேற்றுக்கு அழைப்பு விழா.

வளையலும் காப்பும் போடுதல் பிறந்த குழந்தைப் பருவந்தொட்டே நடக்கத் தொடங்குவது. அதனைக் குறியாமல், "வளைகாப்புப்போடல்" – கருக்கொண்ட மகளை ஏழாம் மாதத்திலோ, ஒன்பதாம் மாதத்திலோ – தாய் வீட்டுக்கு, மகப்பேற்றுக்காக அழைக்கும் போது, விழாவாக நிகழ்த்தப்படுகின்றது.

வளைகாப்பு விழா அல்லது வளையணி விழா நாளில், பல்வகைச் சோறுகள், பண்டங்கள் ஆக்கிப் படைத்தலும், அவ் விழாவுக்கு வந்த மங்கல மகளிர், கன்னியர், குழந்தைகள் ஆகிய அனைவருக்கும் வளயல் போடுதலும் வழக்காம். வளையல் அணிவிக்கும் நாளை, வளயணிவிழா நாளாக இன்றும், தமிழர் கொண்டாடுகின்றனர்.

வளையல் மகளிர் அணி. மணிக்கட்டை வளைத்து வளையல் போடுதல் போல் ஆதனை, அஃதாவது, கருவுற்ற மகளிரையுஞ், சேயினையும், இறைவன் வளைத்துக் காப்பதாகவும் சிவனியத்தார் பொருள் கூறுவர்.

கா→காப்பு. ஆடவர் அணியுமாகும். ஆனால் வளைகாப்பு, சேயையும், தாயையும் காக்கும் காப்பாகும்.

ஆனால் வளைகாப்பிலுள்ள காப்பு, அணி குறியாமல், காவல் பொருளையே சுட்டுதலறிக. 'காப்புக்கட்டல்' என்னும் ஊர் வழக்கை நோக்குக.

**வளைகுடா** *vaḷai-kuḍā,* பெ.(n.) விரிகுடாவை விடக் குறைந்த பரப்பைக் கொண்ட கடல் பகுதி; gulf. *"வளைகுடா நாடுகள்".*

*[வளை + குடா]*

**வளைகூட்டு-தல்** *vaḷai-kūṭṭū-,* 5 செ. குன்றாவி.(v.t.) கூந்தலை உலர்த்தி அள்ளி முடிதல்; to dry and to make into a knot. *"மா இருங் கூந்தல் மடந்தை ஆய்வளைக் கூட்டும் அணியுமார் அவையே" (நற்–60–10–11).*

*[வளை + கூட்டு–.]*

**வளைகொள்ளல்** *vaḷai-koḷḷal,* பெ.(n.) சங்கு எடுப்பதற்காகக் கடலில் முக்குளித்தல்; to swim into deep sea to cull out conch-shell.

*[வளை + கொள்ளல்.]*

**வளைச்சல்** *vaḷaiccal,* பெ.(n.) கழித் துண்டுகளை இணைக்கும் மரச்சட்டம், வலிச்சல்; reeper.

*[வரிச்சல் → வலிச்சல் → வலைச்சல் → வளைச்சல்.]*

**வளைச்செட்டி** *vaḷai-c-cetti,* பெ.(n.) வளைவிச் செட்டி பார்க்க; see *vaḷaivi-c-cetti.*

*[வளை + செட்டி.]*

**வளைசல்** *vaḷaical,* பெ.(n.) 1. வளைவு; crookedness, curve, curvature, bend. 2. வீடு முதலியவற்றின் சுற்றுப்புறம்; courtyard, compound, enclosure. 3. வளையல் பார்க்க; see *vaḷaiyal.*

*[வளை → வளைசல்]*

**வளைசலுளி** *vaḷical-uḷi,* பெ.(n.) வளைவுப் பகுதிகளில் செதுக்கப் பயன்படும் உளி; chisel used to englave bend portion of wood.

*[வளைசல் + உள் → உளி = குறுகிய வளைவுப் பகுதிகளில் செதுக்கப் பயன்படுவது.]*



**வளைத்துப்போடு-தல்** *vaḷaittu-p-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) தன் வயப்படுத்துதல்; win over, bring one's control or influence, to entice. *'ஊரில் வாய்மடையிலிருக்கும் நஞ்சை நிலத்தை யெல்லாம் வளைத்துப் போட்டு விட்டார்' (இ.வ.).*

*[வளைத்து + போடு-.]*

**வளைத்துவைத்தல்**[1] *vaḷaittu-vaittal,* பெ.(n.) 1. தடையிடுகை; felter, restriction, obstruction. 2. பிணித்து வைக்கை; binding.

*[வளைத்து + வைத்தல்]*

**வளைத்துவை**[2]**-த்தல்** *vaḷaittu-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அப்பாற் போகவொட்டாது மடக்குதல்; to restrain one from going away or escaping. *"வளைத்து வைத்தேனினிப் போகலொட்டேன்" (திவ். பெரியாழ்.5,3,2).* 2. சிறையகப் படுத்துதல்; to imprison, to intern. *"சிறையறை வளைத்து வைத்தார்" (திருவாலவா. 29, 19).* 3. இடையூறு செய்தல்; to obstacle.

*[வள் → வள → வளை → வளைத்து + வை-.]*

**வளைதடி** *vaḷai-tadi,* பெ.(n.) குறுந்தடி வகை; a kind of curved cudgel, used as a weapon.

*[வளை + தடி = படைக்கலனாகப் பயன்படும் எறிதடி.]*

**வளைதடிச்சம்பா** *vaḷai-dadi-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of *cambā* paddy.

*[வளைதடி + சம்பா]*

**வளைதொளை** *vaḷai-toḷai,* பெ.(n.) 1. வளைந்த செலவு; winding hole. 2. தொடர்பில்லாத வற்றிலே தலையிட்டு வினவுதலை யுணர்த்துங் குறிப்புச் சொல் (வின்.); a term indicative of inquisitiveness.

*[வளை + தொளை, துளை → தொளை]*

**வளைந்தகால்** *vaḷainda-kāl,* பெ.(n.) நெளிந்த கால்; bow leg.

*[வளைந்த + கால்]*

**வளைந்தலகுச்சிலம்பன்** *vaḷaindalagu-c-cilambaṉ,* பெ.(n.) சிலம்பன் என்னும் பறவை வகையுள் ஒன்று; Indian scimitar babbler-*Pomatorhinus horsfieldi.*

*[வளைந்தலகு + சிலம்பன்]*

கிழக்கு, மேற்கு தொடர்ச்சி மலைச்சார்ந்த, ஏலத் தோட்டம், மூங்கில் காடு, பசுங்காடு, இலையுதிர்காடு முதலிய பகுதிகளில் காணப்படுவதும், 22 விரலம் உயரம் வளர்வதும், பசுமை தோய்ந்த கரும்பழுப்பு நிறமும், வெண்புருவம் கொண்டும், தொண்டை, மார்பு, வயிறு ஆகிய வெண்நிறமாயும் காணப்படும். இவை, பூச்சிகளை உண்ணும் தன்மை கொண்டது. 2 அல்லது 3 முட்டைகளிட்டு தன் இனத்தைப் பெருக்கும்.

**வளைந்துகொடுத்தல்** *vaḷaindu-koḍuttal,* தொ.பெ.(vbl.n.) நடைமுறை வாழ்க்கையில் விடாப்பிடியின்றி, சற்று நெகிழ்வாயிருத்தல்; being fluctuous in a particular deed. *நாணல்போல் வளைந்து கொடுக்கப்பழகிடு வளமான வாழ்விற்கு ஏற்புடையதோடன்றி வரவேற்புடையதுமாகும் (உ.வ.).*

*[வளைந்து + கொடுத்தல்.]*

**வளைந்தெழுரோகம்** *vaḷainteḻu-rōgam,* பெ.(n.) புருவம், கீழிமை, கடைக்கண் போன்றவற்றில் சதை வளர்ந்து, மேல்நோக்கி பார்க்க முடியாமல் துன்புறுத்தும் ஓர் நோய்; an eye disease affecting the lower lid, corner of eyes and inability to look upwards due to fleshy growth.

*[வளைந்தெழு + **Skt.** rōga>த. ரோகம்.]*

**வளைநரல்** *vaḷai-naral,* பெ.(n.) சங்கொலி; conch sound. *"வளைநரல் பௌவம் உடுக்கை ஆக" (நற்–க.வா.1–2.).*

*[வளை + நரல். வளை = உள்வளைந்துள்ள சங்கு, நரல் = ஒலி.]*

**வளைநரி** *vaḷai-nari,* பெ.(n.) நரிவகை (வின்.); a kind of fox.

*[வளை + நரி]*

அடர்ந்த காடு மற்றும் மண்டிக் கிடக்கும் புதர்களிற் காணப்படுவது, வளைநரி.



**வளைநீர்** *vaḷai-nīr,* பெ.(n.) கடல்; sea, as surrounding the earth. *"வளை நீரோசை தனின் மிகுமால்" (திருவாலவா. திருநகரச்.6). "வளைநீர் மேய்ந்து கிளைமுதல் செலீஇ" (நற்–54–1).*

*[வளை + நீர்]*

பெரும்பாலான நிலப்பரப்பை வளைத்துச் சூழ்ந்த உவர்நீர்ப்பரப்புடையதே, வளைநீராகும்.

**வளைப்பு** *vaḷappu,* பெ.(n.) 1. வளைக்கை; bending. 2. வளைவு; bend, flexure, crookedness. 3. சூழ்கை; encircling, surrounding, besieging. *"வளைப்பகம் வகுத்துக் கொண்டிருந்தேன்" (திவ்.*

*பெரியாழ்.5, 1, 5).* 4. முற்றுகையிடுகை; besieging. *"சேனையை வளைப்புறப் போக்கி" (கம்பர.மீட்சி.139).* 5. குடியிருப்பிடம்; house-premises, compound. 6. சிறை; jail, prison, place of confinement. *"வளைப்பினூடு நிற்கு நற்குணத்தினாரை" (திருவாத.பு. மண். 12).* 7. காவல்; guard, protection, policing. *"பெருவளைப்பிட்டுக் காத்த கற்பிது" (சீவக. 2077).* 8. உழவுச் சால் (யாழ்.அக.); round or turn of ploughing.

*[வளை→வளைப்பு.]*

வளைப்புக்கிட—த்தல் *vaḷaippu-k-kiḍa-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. வெளியிலே தப்ப விடாது, சூழ்ந்து கொள்ளுதல்; to besiege, to pester a person by surrounding him and not allowing him to escape. 2. பழி கிடத்தல்; to lie down, vowing not to get up unless one's request is granted, to sit dharna.

*[வளைப்பு + கிட—.]*

வளைபோழ்நர் *vaḷai-pōḻnar,* பெ.(n.) வளைபோழுநர் பார்க்க; see *vaḷai-pōḻunar.* *"விலங்கரம் பொரூஉம் வெள்வளை போழ்நரோடு" (மணிமே.28, 44).*

*[வளை + போழ்நர்]*

வளைபோழுநர் *vaḷai-pōḻunar,* பெ.(n.) சங்கறுப்போர்; makers of conch-ornaments. *"அணிவளை போழுநர்" (சிலப். 5:47).*

*[வளை + போழுநர்]*

வளைமணி *vaḷai-maṇi,* பெ.(n.) அக்குமணி (பிங்.); bead made of conch-shell.

*[வளை + மணி]*



வளைமணிவடம் *vaḷai-maṇi-vaḍam,* பெ.(n.) அக்குவடம்; a string of beads. *'திருவரையிற் சாத்தின வளை மணிவடமானது' (திவ். பெரியாழ். 1, 7, 8).*

*[வளை + மணி + வடம்]*

வளைமுகப்புசாளரம் *vaḷai-mugappu-šāḷaram,* பெ.(n.) மூக்குத்துளை; nostril.

*[வளை + முகப்பு + சாளரம்]*

வளைமுற்றம் *vaḷai-muṟṟam,* பெ.(n.) வீட்டின் முன் பகுதியில் நடப்பதற்காகப் பயன்படுத்தப்படும் பாதை; the path which is used to walk in front of the house.

மறுவ. நடை.

*[வளை + முற்றம்]*

வளையக்கொடி *vaḷaiya-k-koḍi,* பெ.(n.) அண்ணந்தாள்; a kind of torture.

*[வளையம் + கொடி]*

வளையக்கோலுகை *vaḷaiya-k-kōlugai,* பெ.(n.) 1. சுற்றுகை; encompassing, surrounding. 2. தனக்கு மட்டும் உரிமையாக்கிக் கொள்ளுகை (வின்.); monopolizing.

*[வளையம் + கோலுகை]*

**வளையகம்** *vaḷaiyagam,* பெ.(n.) சங்கு (அக.நி.); conch, as curved.

*[வளையம் + அகம்]*



**வளையணிதல்** *vaḷaiyaṇidal,* தொ.பெ. (vbl.n.) வளைகாப்புபோடல் பார்க்க; see *vaḷai-kāppu-pōḍal.*

*[வளை + அணிதல்]*

**வளையநோய்** *vaḷaiya-nōy,* பெ.(n.) கண்டத்திற்கு உள்ளும், வெளியேயும், கழுத்தைச் சுற்றி வீங்கி, தொண்டை வரை அடைந்து துன்புறுத்துமோர் நோய்; a circular or ring shaped raised swelling obstructing or closing up the upper end of the oesophagus, it is incurable and hence should be given up.

*[வளையம் + நோய்.]*

**வளையம்**[1] *vaḷaiyam,* பெ.(n.) 1. சீதாங்க நஞ்சு; a kind of arsenic. 2. சீனக்காரம்; alum. 3. தவளை; frog. 4. தாமரைச்சுருள்; coil of lotus stalk.

**வளையம்**[2] *vaḷaiyam,* பெ.(n.) 1. தாமரைச் சுருள் (பிங்.); the involuted petals of a lotus. *"இப்போதாயிற்று வளையஞ் செவ்வி பெற்றதும்" (ஈடு. 2, 6, 11).* 2. வட்டம்; ring, circle. 3. கைவளை (வின்.); bracelet. 4. குளம் (வின்.); tank. 5. எல்லை (வின்.); ambit. 6. வளையமாலை பார்க்க; see *vaḷaiya-mālai.* 7. வட்டம்[1], 7, 8 பார்க்க; see *vaṭṭam.*

த. வளையம் > **Skt.** vaḷaya.

*[வள் → வள → வளை → வளையம் (வே.க.4, பக்.96).]*

**வளையம்போடு-தல்** *vaḷaiyam-pōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வட்டமிடுதல்; to draw a circle, to en circle. 2. சூதாட்டத்தில் வளையமெறிதல்; to throw an iron ring, in gambling. 3. கெட்ட நோக்கத்துடன் ஒருவனைச் சுற்றித் திரிதல்; to hover round a person with bad motives or degraded approach.

*[வளையம் + போடு-.]*

**வளையமாடு-தல்** *vaḷaiyam-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கயிறு சுருட்டுதல் (வின்.); to wind up a rope, coil a cable. 2. வளையம் போடு-, 2,3 பார்க்க; see *vaḷaiyam-pōḍu.*

*[வளையம் + ஆடு-. ஆல் → ஆள் → ஆளு → ஆடு = வளைதல், சுற்றுதல், சுழலுதல்.]*

கயிற்றை வளையமாகச் சுற்றுதல் அல்லது சுருட்டுதல்.

**வளையமாலை** *vaḷaiya-mālai,* பெ.(n.) முடியில் வளைத்துச் சூடும் மாலை; garland worn round the head. *"தேன் மிக்க மாலையை வளைய மாலையுடனே சிறப்பச் சூடி" (புறநா. 76, 7, உரை).*

*[வளையம் + மாலை]*

**வளையமிடல்** *vaḷaiyamiḍal,* பெ.(n.) கண்களைச் சுற்றி உண்டாகும் கருப்பு; searching eyes - looking all round.

*[வளையம் + இடல். இடு→இடல்.]*

**வளையமுடி-த்தல்** *vaḷaiya-muḍi-,*4 செ. குன்றாவி.(v.t.) திரளக் கூட்டி முடித்தல்; to tie up, as the hair in a know. *"மணிநூற்றனை வைம்பால் வளைய முடித்து" (சீவக. 2693).*

*[வளையம் + முடி-.]*

**வளையல்[1]** *vaḷaiyal,* பெ.(n.) நஞ்சு; poison.

**வளையல்[2]** *vaḷaiyal,* பெ.(n.) 1. மகளிரது கையணிவகை; bangle, bracelet. *"வளையல் விற்ற படலம்".* 2. கண்ணாடி (வின்.); glass. 3. வளைவுள்ளது (யாழ்.அக.); that which is bent or curved.

*[வளை + அல் → வளையல்.]*



**வளையல்[3]** *vaḷaiyal,* பெ.(n.) வங்கி பார்க்க; see *vaṅgi.*

*[வள்→வள→வளை + அல் → வளையல்.]*

**வளையல்[4]** *vaḷaiyal,* பெ.(n.) ஆலையில் இழைகள் அடுத்தடுத்து வரிசையாகச் செல்லப் பயன்படுத்தப்படும் சிறுவளையம்; a ring to regulate the thread in a row.

*[வளை + அல்→ வளையல்.]*

**வளையல்[5]** *vaḷaiyal,* பெ.(n.) கைவிலங்கு; fetters.

*[வளை + அல் → வளையல் = கைகளைச் சுற்றி வளைந்த பான்மையில் அமைந்த கைவிலங்கு.]*

**வளையல்கொம்பு** *vaḷaiyal-kombu,* பெ.(n.) வளையல்கள் கட்டப்பட்ட நான்கு கொம்புகள்; முதல் கொம்பில் 30 வளையல்களும், இரண்டாம் கொம்பில் 30 வளையல்களும், மூன்றாம் கொம்பில் 10 வளையல்களும், நான்காம் கொம்பில் 10 வளையல்களுமாக எண்பது வளையல்கள் கட்டப்பட்ட கொம்புகள்; four sticks tied with bangles, 30 each in first and second sticks and 10 each in third and fourth sticks.

*[வளையல் + கொம்பு]*

**வளையல்மண்** *vaḷaiyal-ma[illegible]* [illegible]பெ.(n.) வளையல் செய்தற்குரிய மணல்; [illegible]neral sand of which glass bangles are [illegible]de, bangle-earth.

*[வளையல் + மண்]*

**வளையலுப்பு[1]** *vaḷaiya-luppu,* பெ.(n.) 1. வளையலுக்காக பயன்படுத்துவதும், உவர் மண்ணிலிருந்து எடுப்பதுமான ஓர் வகை உப்பு; a kind of salt extracted from fuller's earth used in the manufacture of bangles. *இவ்வுப்பினால் (வாத) ஊதை, வளி, பித்தம், இரைப்பு, வயிற்றுவலி, மூட்டுப்பிடிப்பு ஆகியவை நீங்கும்.* 2. ஆறுமுறை காய்ச்சி யெடுத்த வெடியுப்பு; nitre boiled and filtered 6 times (சா.அக.).

*[வளையல் + உப்பு]*

**வளையலுப்பு**² *vaḷaiyal-uppu,* பெ.(n.) ஒரு வகை மருந்துப்பு (பதார்த்த. 1095); a kind of medicinal salt.

*[வளையல் + உப்பு]*

**வளையவளைய** *vaḷaiya-vaḷaiya,* வி.எ. (v.part.) திரும்பத் திரும்ப; again and again. *ஆவின்மடியில் பால் குடிக்கக் கன்றுவளைய வளைய வந்தது (உ.வ.).*

*[வளைய + வளைய.]*

**வளையவா** *vaḷaiya-vā-,*18 செ.கு.வி.(v.i.) 1. வளைந்து திரும்புதல்; to bend and move about, circle. *'வயிற்றில் குழந்தை வளைய வருவதை அவளால் உணர முடிந்தது'.* 2. சுற்றி வருதல்; to go around. *'புது மனைவியை வளைய வந்து கொண்டிருந்தான்' (உ.வ.).*

*[வளை→வளைய + வா-.]*

**வளையற்காப்பு** *vaḷaiyaṟ-kāppu,* பெ.(n.) வளையல்¹ பார்க்க; see *vaḷaiyal*¹

*[வளையல் + காப்பு]*

**வளையற்காரன்** *vaḷaiyaṟ-kāṟāṉ,* பெ.(n.) வளையல் விற்பவன்; bangle seller.

*[வளையல்+காரன். காரன்=உடைமைப் பெயரீறு.]*

**வளையற்செட்டி** *vaḷaiyaṟ-cetty,* பெ.(n.) வளைவிச்செட்டி பார்க்க; see *vaḷaivi-c-ceṭṭi.*

*[வளையல் + செட்டி]*

**வளையற்பச்சை** *vaḷaiyaṟ-paccai,* பெ.(n.) கண்ணாடியாற் செய்த போலிப் பச்சை மணிவகை; false or duplicate emerald, made of glass.

*[வளையல் + பச்சை]*

**வளையற்பூச்சி** *vaḷaiyaṟ-pūcci,* பெ.(n.) கம்பளிப்பூச்சி வகை; a kind of caterpillar.

*[வளையல் + பூச்சி]*

விட்டில் பூச்சியினத்தைச் சார்ந்தது. வளையல் போன்று, சுருண்டு கொள்ளுந் தன்மையது.



**வளையாகாரம்** *vaḷaiyā-kāram,* பெ.(n.) சுற்றோலை; circular.

**வளையாபதி**¹ *vaḷaiyāpadi,* பெ.(n.) சிந்தாமணிக்கு முற்பட்ட நூல்; a work or epic belonging to period before cindāmaṇi. *இந்நூலின் ஆசிரியர் இன்னாரென்று அறியப்படவில்லை. ஆனால் இவர் சமணராக இருக்கலாம் என்ற கருத்து நிலவுகிறது. இவர் 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்ற கருத்தும் உண்டு.*

**வளையாபதி**² *vaḷaiyā-pati,* பெ.(n.) ஐவகை காப்பியங்களுள் ஒன்று. சில பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளது (குறள், 107, உரை); an ancient epic poem, of which only a few stray stanzas are extant one of pañja-kāviyam, (q.v.).

**வளையாமாலி** *vaḷaiyā-māli,* பெ.(n.) மருதாணி; a tree-nail dye-*Lawsonia alba.*

**வளையில்** *vaḷaiyil*, பெ.(n.) வளையல் (வின்.) பார்க்க; see *vaḷaiyal*.

*[வளை→வளையில்.]*

**வளையிற்சுற்று** *vaḷaiyiṟ-cuṟṟu*, பெ.(n.) ஊரைச் சூழ்ந்த பகுதிகள்; sorrounding region. *'ஊரைச் சுற்றி வளைந்ததாக அமைந்த நில புலங்கள்' (உ.வ.).*

*[வளையில் + சுற்று]*

**வளையோர்** *vaḷaiyōr*, பெ.(n.) வளையல் அணிந்தவர்; to wear ornament of bangle. *"நகர நம்பியர் வளையோர் தம்முடன்" (மணிமே.19:24).*

*[வளை→வளையோர்.]*

**வளைவண்ணத்தன்** *vaḷai-vaṇṇattaṉ*, பெ.(n.) சங்குபோன்று வெண்மை நிறத்தன்; a man with conch- shell whiteness.

*[வளை + வண்ணத்தன்]*

**வளைவணன்** *vaḷaivaṇaṉ*, பெ.(n.) திருமாலின் தோற்றத்துளொருவனான பலராமன்; Bala raman, one of incarnates of *Tirumāl*. *"மாரி மாக்கடல் வளைவணற் கிளையவன்" (திவ். பெரியதி.8:5:2).*

**வளைவள-த்தல்** *vaḷai-vaḷa-*, 4 செ.கு.வி. (v.i.) நிலத்தை அளவிடுதல் (வின்.); to measure or survey a field.

*[வளைவு + அள-.]*

குறிப்பிட்ட நிலம் மற்றும் நிலஞ்சூழ்ந்த பகுதியை அளத்தலும், அளந்து வரம்பு, எல்லை, செய்தலுமாம்.

**வளைவாணன்**[1] *vaḷai-vāṇaṉ*, பெ.(n.) நாக நாட்டின் மன்னன்; as king of the *Nāga-nāḍu*.

மணிமேகலையில் 24, 25, 29 ஆகிய காதைகளில், நாகநாட்டு மன்னன் குறித்த செய்தி இடம் பெற்றுள்ளது.

**வளைவாணன்**[2] *vaḷai-vāṇaṉ*, பெ.(n.) 1. பலராமன்; *balarāmā*, as white in colour like the conch. 2. வளைவணன் பார்க்க; see *vaḷai-vāṇaṉ*. 3. நாக நாட்டரசருள் ஒருவன்; a king of nāga-nāḍu. *"வளைவணன்றேவி" (மணிமே. 24. 55).*

**வளைவாணி** *vaḷai-vāṇi*, பெ.(n.) கொக்கி (வின்.); hook.

*[வளைவு + ஆணி]*



**வளைவாயுதம்** *vaḷaivāyudam*, பெ.(n.) உள் வளைந்த இடங்களையிழைக்கும் இழைப்புளி வகை; inshaver, plane for shaving the concave faces of barrel staves.

*[வளைவு + **Skt.** āyudha > த. ஆயுதம்]*

**வளைவி** *vaḷaivi*, பெ.(n.) 1. வீட்டிறப்பு; sloping roof. 2. வளையல்[1] பார்க்க; see *vaḷaiyal*[1].

*[வளை → வளைவு → வளைவி (வே.க.4, பக்.96)]*

**வளைவிச்செட்டி** *vaḷaivi-c-ceṭṭi*, பெ.(n.) வளையல் விற்கும் இனத்தான்; person belonging to the caste that trades in bangles.

*[வளைவி + செட்டி]*

**வளைவில்லாமரம்** *vaḷaivillā-maram*, பெ. (n.) பாக்குமரம்; arecanut tree.

*[வளைவில்லா + மரம்]*

**வளைவிற்பொறி** *vaḷaiviṟ-poṟi*, பெ. (n.) தானே அம்பு எய்யும் எந்திர வில்; engine device for shooting arrows automatically. *"வளைவிற் பொறியுங் கருவிர லூகமும்" (சிலப். 15, 207).*

*[வளை + வில் + பொறி.]*

**வளைவு** *vaḷaivu*, பெ. (n.) 1. சுற்று; circumference. 2. வட்டம்; circle. 3. கோணல்; crookedness, bend. 4. கட்டடத்தில் அமைக்கும் வில் வடிவு (C.E.M.); arch in a building. 5. வீட்டுப் புறம் (வின்.); house-premises. 6. பணிவு (யாழ்.அக.); reverence, humility, modesty.

*[வளை→வளைவு (வே.க.4, பக்.96)]*

**வளைவுஅழுத்தம்** *vaḷaivu-aḻuttam*, பெ. (n.) செங்கல் சுவர்களில் ஏற்படும் விரிசல்; crack in brick wall.

*[வளைவு + அழுத்தம்]*

**வளைவுஇழைப்புளி** *vaḷaivu-iḻaippuḷi*, பெ. (n.) வளைசல்உளி பார்க்க; see *vaḷaišal-vuḷi*.

*[வளைவு + இழைப்புளி]*

கலை நுணுக்கப் பணிகட்குப் பயன்கொள்ளும் சிறிய இழைப்புளி.

**வளைவுக்கல்** *vaḷaivu-k-kal*, பெ. (n.) கட்டட வில்வடிவுக்கு இடும் கல்; arch brick. (C.E.M.).

*[வளைவு + கல்]*

**வளைவுக்கூரை** *vaḷaivu-k-kūrai*, பெ. (n.) வளைவாக அமைத்த மேற்கூரை; arched roof, vaulted roof.

*[வளைவு + கூரை]*

**வளைவுச்செருகுகல்** *vaḷaivu-c-cerugu-kal*, பெ. (n.) வளைவில் சாய்வாகவும், ஆப்புப் போலவும் அமைக்கப்படும் கல்; a curved stoping stone, shaped-like peg.

*[வளைவு + செருகு + கல்]*

**வளைவுதடி** *vaḷaivu-taḍi*, பெ. (n.) வளவுதடி பார்க்க; see *vaḷavu-taḍi*.

*[வளைவு + தடி.]*

**வளைவெடு[1]-த்தல்** *vaḷai-v-eḍu-*, 4 செ. குன்றாவி. (v.t.) வளைவை நிமிர்த்துதல் (வின்.); to straighten the bend.

*[வளைவு + எடு-.]*

**வளைவெடு[2]-த்தல்** *vaḷai-v-eḍu-*, 4 செ.கு.வி. (v.i.) வளைவு கட்டுதல்; to form or construct an arch.

*[வளைவு + எடு-.]*

**வளைவெழுதகம்** *vaḷai-v-eḻudagam*, பெ. (n.) எழுத்து வகை; spiral moulding, a letter or character in writing (C.E.M.).

*[வளைவு + எழுது→எழுதகம்]*

**வளைவெளவல்** *vaḷai-vouval*, பெ. (n.) வெள்ளிய வேலைப்பாடு அமைந்த ஒளியுடைய வளை; an arch with glittering architectural designs creating bright light. *"வான்கோல் எல்வளை வெளவிய பூசல்" (நற்.100-5.).*

*[வளை + வெளவல்]*

**வற்கசஞ்சீவி** *vaṟga-šañjivi*, பெ. (n.) கருங்குன்றி; black jeweller's bead.

வற்கடம் *varkadam*, பெ.(n.) 1. வறட்சி; drought. *"நீ........ செல்லும் நீண்ட வழியில் வற்கடமான காலத்தை நினைக்கை யினாலும்" (கலித்.3, உரை).* 2. பஞ்சக்காலம்; famine. *"பாண்டி நன்னாடு பன்னிரு யாண்டு வற்கடஞ் சென்றது" (இறை, 1, உரை, பக்.6).*

*[வல்→வன் + கடம்]*

வற்கம்[1] *vargam*, பெ.(n.) 1. பரியின் (குதிரை) கடிவாளம் (சூடா,); bridle, rein. 2. பரி (குதிரை) மீதிவர்தற்குரிய கலணை முதலியன; saddle and other trapings used for a horse. *"வற்கம்மிட்ட வண்பரிமாவின்" (சீவக. 1060).*

*[வன்கம்→வற்கம்.]*

வற்கம்[2] *vargam*, பெ.(n.) மரப்பட்டை; bark of tree.

*[வல்கம்→வற்கம்]*

வற்கமார்க்கம் *varga-mārkkam*, பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

சிறுநீர்க்கடுப்பு, அரத்தமூலம், நச்சுக்கடி போன்றவற்றைப் போக்கும்.

வற்கராடம் *varkarādam*, பெ.(n.) நகக்குறி; nail mark.

*[வற்கம் + இராடம்]*

**Skt.** *rāda* > *த. இராடம்.*

வற்கரி[1] *varkari*, பெ.(n.) கரகம் (சூடா.); pitcher, jug.

வற்கரி[2] *varkari*, பெ.(n.) வற்கம்[1], 1 பார்க்க (வின்.); see *vargam.*

வற்கலம் *varkalam*, பெ.(n.) வற்கம்[2] பார்க்க; see *vargam.*

வற்கலை *varkalai*, பெ.(n.) மரவுரி; garment made of bark. *"திருவரை யெய்தி யேமுற வற்கலை நோற்றன" (கம்பரா. சூர்ப்ப. 22).*

வற்காலம் *var-kālam*, பெ.(n.) வறட்காலம் பார்க்க; see *varat-kālam*. *"சில நாளில் வற்கால முற்றலும்" (பெரியபு. கோட்புலி. 5).*

க. பற்கால.

*[வல்→வன் + காலம்]*

வற்காலி *varkāli*, பெ.(n.) 1. வெள்ளாடு; goat. 2. ஆடு; sheep.



வற்கிதம் *varkidam*, பெ.(n.) ஐந்து பரியினுள் ஒன்று (பு.வெ.ஒழிபு.13, உரை); bound or leap of a horse, one of five *ašuva-kadi.*

வற்கு *varku*, பெ.(n.) 1. ஆடு; sheep. 2. கஞ்சி; gruel, rice conjee. 3. அழகு; beauty, charm.

வற்குசா *varkušā*, பெ.(n.) கார்போகி (மலை.); scurvy pea.

வற்குணம் *vargunam*, பெ.(n.) கொடுமை; hardness or callousness of heart, stone or iron-heartedness. *"வற்குண வலிய தண்டும்" (பிரபோத. 30, 4).*

*[வல்+வன்+குணம்.]*

வற்குலிகம் *var-kuligam,* பெ.(n.) கரிக் குருவி (மூ.அ.); king-crow.



வற்கெனல் *varkenal,* பெ.(n.) வலிதாதற் குறிப்பு; signifying, becoming hard, hardening. *"வற்கென்ற நெஞ்சம் வணங்காய்" (பு.வெ. 12, பெண்பாற். 17), "வற்கென்ற செய்கை" (பழ. 222).*

*[வன்கு→ வற்கு + எனல்.]*

வற்கெனவு *varkenavu,* பெ.(n.) அழகு; beauty, handsome, excellence. *'வற்கெனவும் வசஞ் செய்தலு முதலாயின' (நீலகேசி, 380, உரை).*

வற்சகம் *varšagam,* பெ.(n.) 1. பிள்ளை; child. 2. பசுங்கன்று; calf (சா.அக.).

வற்சநாவி *varša-nāvi,* பெ.(n.) வச்சநாபி பார்க்க (வின்.); see *vacca-nābi.*

வற்சம் *varšam,* பெ.(n.) குடசப்பாலை (மலை.); conessi-bark.

வற்சமம்[1] *var-šamam,* பெ.(n.) குடசபாலை; a tree-*Hollarrhena antidysenterica.*

வற்சமம்[2] *varsamam,* பெ.(n.) வற்சம் பார்க்க (மூ.அ.); see *varšam.*

வற்சலமணி *var-šala-mani,* பெ.(n.) கோரோசனை; bezoar concretion found in cow or ox.

வற்பம் *varpam,* பெ.(n.) 1. வன்மை; hardness, as of the earth. *"வற்பமாகி யுறுநிலம்" (மணிமே. 27, 120).* 2. வறட்சி; drought. *"வற்பத்தால்...... புல் மேயாதாகும் புலி" (பழ. 119).*

*[வன்→ வற்பு→ வற்பம்.]*

வற்பனை *var-panai,* பெ.(n.) கேழ்வரகு வகை; a species of ragi.

வற்பு *varpu,* பெ.(n.) 1. உறுதிப்பாடு; firmness, hardness. 2. வலிமை; strength. *"அரக்கர் தலைவன் றன் வற்பார் திரடோள்" (திவ். பெரியதி. 5, 1, 4).*

க. பல்பு

*[வல்பு→வன்பு→ வற்பு]*

வற்புலம் *varpulam,* பெ.(n.) மேட்டு நிலம்; plateau, high ground. *"வற்புலஞ் சேருஞ் சிறுநுண் ணெறும்பின்" (புறநா. 173).*

*[வன்புலம்→வற்புலம்]*

வற்புறு-தல் *varpuru-,* 1 செ.கு.வி.(v.i.) 1. வலிமையடைதல்; to become strong. 2. திடப்படுதல்; to be courageous or firm. 3. ஆறுதல் அடைதல்; to console, to take heart. *"சொல்லமிர்தினால் வற்புற்றானே" (சீவக.1122).*

*[வன்பு→வற்பு + உறு-.]*

வற்புறுத்து-தல் *varpuruttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. உறுதிப்படுத்திச் சொல்லுதல் (திவா.); to asseverate, affirm, assure. 2. வலிமைப் படுத்துதல் (வின்.); to strengthen, fortify.

*[வற்புறு-→வற்புறுத்து-.]*

வற்மம் *varmam*, பெ.(n.) வன்மம் பார்க்க; see *vanmam*.

வற்றக்காய்ச்சல் *varra-k-kāiccal*, பெ.(n.) மெலிந்தவன்; emaciated man.

*[வற்றல் + காய்ச்சல்]*

வற்றம் *varram*, பெ.(n.) 1. வற்றல், 1 பார்க்க; see *varral*¹. 2. கடலின் நீர் வடிகை; ebb of tide. *'ஏற்றம் வற்றம்' (வின்.).* 3. வறட்சி (வின்.); dryness.

*[வற்று → வற்றம்]*

வற்றல்¹ *varral*, பெ.(n.) 1. வடிகை; subsiding. 2. வறளுகை; drying up. 3. உலர்ந்தது; that which is withered, shrunk or dried up. *"வற்றன் மரந்தளிர்த் தற்று" (குறள், 78).* 4. உலர வைத்த காய், இறைச்சி முதலியப் பொருள்; dried vegetables, flesh, etc.

*[வற்று→வற்றல்]*

வற்றல்² *varral*, பெ.(n.) 1. அடைக்காய்; dried vegetable. 2. மெலிதல்; becoming lean. 3. உலறல்; drying.

வற்றல் வகைபற்றிச் சா.அக. கூறுவது வருமாறு:– 1. நெல்லி வற்றல், 2. சுண்டை வற்றல், 3. கத்தரி வற்றல், 4. மணித்தக்காளி வற்றல்.

வற்றலோகம் *varralōgam*, பெ.(n.) உருக்கு; steel.

*[வற்றல் + உலோகம்]*

Skt. lōka> த. உலோகம்.

வற்றற்சூடு *varrar-šūdu*, பெ.(n.) நலம் வற்ற சுடுகின்ற சூடு; extreme heat, scorching charring.

*[வற்றல் + சூடு]*

வற்றனோய் *varra-nōy*, பெ.(n.) குருதி அளவிற் குன்றி உடலை மெலிவிக்கும் நோய்; anaemia. *"அத்திமயமாக்கும் வற்றனோயர்" (கடம்ப.பு. இலீலா. 97).*

*[வற்றல் + நோய்]*

வற்றாதமேனி *varrāda-mēni*, பெ.(n.) துருசு; copper sulphate.

வற்றாலை *varrālai*, பெ.(n.) ஓர் கிழங்கு; a kind of root.

வற்று¹–தல் *varru-*, 5 செ.கு.வி.(v.i.) 1. சுவறுதல்; to grow dry; to dry up, as water; to evaporate. *"காமர் பூம்பொய்கை வற்ற" (சீவக. 2075).* 2. கடல் நீர் முதலியன வடிதல் (வின்.); to subside; to ebb, as the tide. 3. புண் முதலியன உலர்தல்; to become absorbed, as matter in an ulcer. 4. வாடுதல்; to wither, become dry and shrivelled, as the body. *"வற்றிய வோலை கலகலக்கும்" (நாலடி, 256).* 5. மெலிதல்; to become emaciated, as the body. *"வற்றிமற் றாற்றப் பசிப்பினும்" (நாலடி, 78).* 6. பயனற்றுப் போதல்; to become worthless or purposeless. *"அது நின்று வற்றுமெனின்" (நன். 375, மயிலை.).*

க.பத்து; ம.வரலி; து.வரு.

*[வல் + து→வற்று–.]*

வற்று² *varru-*, பெ.(n.) வற்றம், 2 (வின்.) பார்க்க; see *varram*, 2.

வற்று³ *varru-*, பெ.(n.) கூடியது; that which is possible or able. *"நேருரைத்தாக வற்றே" (கம்பரா. மாரீச. 74).*

*[வல் + து → வற்று.]*

**வற்று**[4] *varru-*, இடை.(part.) ஒரு சாரியை (பிங்.); an expletive.

**வற்றுப்பாடு** *varru-p-pāḍu*, பெ.(n.) வற்றுகை; ebbing, decreasing, draining. *"அந்த வயலுக்கு நீர் வற்றுப் பாடில்லை" (நாஞ்.).*

*[வற்று + படு →பாடு]*

**வற்றுபதம்** *varru-padam*, பெ.(n.) சரியான பதம் தோன்றும் நிலை; a state of dryness, for hulling as of boiled paddy.

*[வற்று + பதம்]*

**வற-த்தல்** *vara-*, 4 செ.கு.வி.(v.i.) 1. காய்தல் (பிங்.); to dry up. 2. வறங்கூர், 1 பார்க்க; see *varaṅkūr-*. *"வானம் வறக்குமேல்" (குறள், 18).* 3. குறைந்து மெலிதல் (வின்.); to grow lean; to shrink.

க.பறு, பரி; ம.வரு; து.வரெ.

*[வல்→வர்→வர→வற-.]*

**வறக்கடை** *vara-k-kaḍai*, பெ.(n.) தீ முதலியவற்றால் உண்டாகும் வறட்சி; dryness due to heat, fire, etc., *"விடத்தை யிறையவன் பருகக் காட்டிய வறக்கடை தணப்ப" (காஞ்சிப்பு. பதி. 4).*

*[வறம் + கடு→கடை ]*

ஒன்று இன்னொன்றை முட்டும் முனை அதன் கடையாதலால், முட்டற் கருத்திற் கடைமைக் கருத்துத் தோன்றிற்று. பக்கம் நோக்கியதும் மேனோக்கியதும் எனக் கடை இருவகை. பக்கம் நோக்கியது முனை அல்லது கடை; மேனோக்கியது உச்சி. தலை என்பது இவ்விரண்டிற்கும் பொது (மு.தா.பக்.100).

**வறக்கணம்** *vara-k-kaṇam*, பெ.(n.) வரட்கணம் பார்க்க; see *varaṭ-kaṇam*.

**வறக்கனி** *vara-k-kaṉi*, பெ.(n.) பசளை; spinach-*Spinach oleracea*.

**வறக்காலன்** *vara-k-kālaṉ*, பெ.(n.) தன் குடும்பத்திற்கு போகூழ் ஏற்படும் வகையில் வந்தவன் (வின்.); one who brings adversity to his family.

*[வறம் + காலன். காலன் = காலமறிந்து உயிர்களைக் கவர்வோன்]*

**வறக்காலி** *vara-k-kāli*, பெ.(n.) தன் குடும்பத்திற்குத் தீங்கு உண்டாக வந்தவள் (வின்.); one who brings adversity to her family.

**வறக்கு-தல்** *varakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) வறங்கூர்-தல் பார்க்க; see *varaṅkūr-*. *"வானம் வறக்குமேல்" (குறள், 18).*

*[வற→வறக்கு-.]*

ஒ.நோ. இல →இலக்கு.

கல →கலக்கு.

**வறகாலி** *vara-kāli*, பெ.(n.) வெள்ளாடு; goat.

**வறகுசா** *varaguśā*, பெ.(n.) காரபோகவரிசி; seeds psoralea corylifolia.

**வறகுலி** *varaguli*, பெ.(n.) வறகுசா பார்க்க; see *vara-guśā*.

**வறங்கூர்-தல்** *varaṅ-kūr-*, 2 செ.கு.வி. (v.i.) 1. மழை பெய்யாது போதல்; to fail, as the rain, failure of monsoon. *"மாரி வறங்கூரின் மன்னுயி ரில்லை" (மணிமே.7, 10).* 2. வறட்சி மிகுதல்; to become famine-stricken. *"நாடுவறங்கூரினுமிவ் வோடுவறங் கூராது" (மணிமே. 14, 13). "கோள்நிலை திரிந்திடின்*

*மாரிவறங் கூரும்" (மணிமே.7, 9).* 3. வறுமை மிகுதல்; to become utter poverty.

*[வறம் + கூர்-,]*

வறசமம் *vaṟa-šamam,* பெ.(n.) குடசப் பாலை; a tree - *Nerium antidysentricum.*



வறசுண்டி *vaṟa-šuṇḍi,* பெ.(n.) செங் கருங்காலி; catechu or cutch tree-*Acacia catechusundra.*

வறட்கஞ்சா *vaṟaṭ-kañjā,* பெ.(n.) ஆரணிக் கஞ்சா; a variety of Kañjā.

இதைப் பிடிப்பவர் நலக்கேடுறுவர்.

வறட்கண்டி *vaṟaṭ-kaṇḍi,* பெ.(n.) ஆடு தின்னாப்பாளை; a bitter plant *Aristolochia bracteata.*

வறட்கணம்[1] *vaṟaṭ-kaṇam,* பெ.(n.) கணை நோய் வகை; a kind of wasting disease.

வறட்கணம்[2] *vaṟaṭ-kaṇam,* பெ.(n.) குழந்தைகளுக்கு உடம்பு வறண்டு, நிறம் மாறி, வயிறிரைந்து, இருமல் ஏற்படுகின்ற கணைச்சூடு; a disease among children, caused by congenital heat and market, by dryness of the body, varying complexion, cough, gurgling in the abdomen etc.

*[வறள் + கணம். கணம் = குழந்தை நோய் வகை.]*

வறட்கணரோகம் *vaṟaṭ-kaṇa-rōgam,* பெ.(n.) வறட்கணம் பார்க்க; see *vaṟaṭ-kaṇam.*

*[வறட்கணம் + ரோகம்]*

**Skt.** rōga > த. ரோகம்.

வறட்காசம் *vaṟaṭ-kāšam,* பெ.(n.) வறட்சியினால் ஏற்படும் ஈளை நோய் வகையில் ஒன்று; a kind of consumption or asthma due to dryness.

*[வறள் + காசம். காசம் = நுரையீரலைத் தாக்கி உடலை இளைக்கச் செய்யும் ஈளை நோய்.]*

**Skt.** kāša > த. காசம்.

வறட்காமாலை *vaṟaṭ-kāmālai,* பெ.(n.) 1. உடம்பு, சிறுநீர் மஞ்சள் நிறமாகி, கை, கால் வறட்சி காணுகின்ற ஒரு வகைக் காமாலை நோய்; a variety of jaundice marked by dry swollen body with other symptoms of jaundice. 2. பித்தம் அதிகமாவதால் ஏற்படும் காமாலை வகை (சீவரட். 135); a kind of jaundice.

*[வறள் + கமம்→காமம் + ஆலை = காமாலை. காமாலை = பித்தம், மிகுவதா லேற்படும் ஒருவகை நோய்.]*

வறட்காய்ச்சல்[1] *vaṟaṭ-kāyccal,* பெ.(n.) கடுங் காய்ச்சல்; burning fever with thirst.

*[வறள் + காய்→காய்ச்சல். காய்ச்சல் காய்ச்சல் நோய்.]*

வறட்காய்ச்சல்² *varaṭ-kāyccal,* பெ.(n.) வறட்சியுண்டாக்கும் சுர நோய் வகை (வின்.); a kind of emaciating fever.

மறுவ. கடுங்காய்ச்சல்.

*[வறள் + காய்ச்சல்]*

வறட்காலம் *varaṭ-kālam,* பெ.(n.) 1. மழையில்லாக்காலம்; drought period. 2. வறட்சிக் காலம்; period of famine.

*[வறள் + காலம்]*

ஒருகா. வறண்ட காலம்→வறட்காலம்.

வறட்காற்று *varaṭ-kāṟṟu,* பெ.(n.) ஈரப் பசையற்ற காற்று; dry wind.

மறுவ. மேல்கால், மேல்காற்று, கோடைக் காற்று.

*[வரள் →வறள் + காற்று]*

வறட்கேடு *varaṭ-kēḍu,* பெ.(n.) மழையின்மை யாலுண்டாகுந் துன்பம்; distress due to failure of monsoon or from want of rain. *"வெள்ளக்கேடும் வறட்கேடு மின்றிக்கே" (திவ். திருப்பா. 3, வ்யா. பக். 56).*

*[வறல்→வறள் + கேடு]*

வறட்கோதம் *varaṭ-kōdam,* பெ.(n.) மரத்துப் போதல்; dry gangrene.

*[வரள் + கோதம்]*

வறட்சாவி *varaṭ-cāvi,* பெ.(n.) மழை யின்மையாலான பயிர்ச்சாவி; withered or blighted crop (புதுக்.கல்.323).

*[வறள் + சாவி]*

வறட்சி *varaṭci,* பெ.(n.) 1. நீர்ப்பசை யறுகை; drought, dryness. *நா வறட்சி (இ.வ.).* 2. உடலனல்; low temperature of the body. 3. உடலை மெலியச் செய்யும் நோய் (வின்.); a wasting disease. 4. சொறி (வின்.); eruption on the skin, enzema.

*[வறள்→வறட்சி]*

வறட்சிகரப்பான் *varaṭci-karappāṉ,* பெ.(n.) குழந்தைகளுக்கு உடம்பு முழுவதும் சொறி, சிரங்கு உண்டாகி வெடிக்கின்ற ஓர் கரப்பான் நோய்; a kind of disease with symptoms of enzeme among children.

*[வறட்சி + கரப்பான். கரப்பான் = குழந்தைகட்குண்டாகும் சொறிபுண் வகை.]*

வறட்சித்திமிரம் *varaṭci-t-timiram,* பெ.(n.) கண்ணோய் வகை (சீவரட். 264); a kind of eye disease.

*[வறட்சி + திமிரம்]*

வறட்சிமேகம் *varaṭci-mēgam,* பெ.(n.) சிறுநீரக நோய்; a kind of venereal urinary affection.

*[வறட்சி + மேகம்]*

**Skt.** mēga > த. மேகம்.

வறட்சியிருமல் *varaṭci-y-irumal,* பெ. (n.) வறட்டிருமல் பார்க்க; see *vara-ṭ-irumal.*

*[வறட்சி + இருமு→இருமல்]*

வறட்சிவாதக்கரப்பான் *varaṭci-vāda-k-karappāṉ,* பெ.(n.) இசிவுக்கரப்பான் வகை; a kind of dry exzema.

*[வறட்சி + வாதம் + கரப்பான்]*

**Skt.** vāda > த. வாதம்.

வறட்சிவாதம் *varaṭci-vādam,* பெ.(n.) உடம்பு கடுத்து சதை துடித்து, எலும்பு நொந்து நாடி விழுந்து காணும் ஓர் ஊதை நோய்; a kind of rheumatic disease marked by weak pulse, twitching of the muscles, pain in the bones, etc.

*[வறட்சி + வாதம்]*

**Skt**. vāda > த. வாதம்.

வறட்சுண்டி *varaṭ-cuṇḍi,* பெ.(n.) 1. ஆடு தின்னாப் பாளை (மலை.); worm-killer. 2. சுண்டிவகை (வின்.); floating sensitive-plant.

*[வறள் + சுண்டி]*

வறட்சூலை *varaṭ-cūlai,* பெ.(n.) குடலைச் சுருட்டிப் பிடிக்கும் நோய் வகை (இ.வ.); a disease causing shooting or stabing pain in the intestines.

*[வறள் + சூலை]*

வறட்சேதம் *varaṭ-cēdam,* பெ.(n.) மழையின்மையால் பயிர் விளையாமை; crops failure due to drought.

*[வறள் + சேதம்]*

வறட்சேம்பு *varaṭ-cēmbu,* பெ.(n.) சேம்பு வகை (வின்.); a garden plant, a kind of india kales.

*[வறள் + சேம்பு]*

வறட்சை *varaṭcai,* பெ.(n.) வறட்சி பார்க்க; see *varaṭci.*

வறட்சொறி *varaṭ-coṟi,* பெ.(n.) சொறி வகை (இராசவைத். 105); a kind of itch, enzema.

*[வறள் + சொறி]*

வறட்சோகை *varaṭ-śōgai,* பெ.(n.) உடல் வறண்டுபோகச் செய்யுமோர் நோய்; anaemia, with swelling and dryness of the body.

*[வறள் + சோகை]*

வறட்டடை *varaṭṭaḍai,* பெ.(n.) இரும்புச் சட்டியில் சுடப்படும் ஒருவகை அடை; a kind of rice-cake or ragi-cake baked in iron pan.

*[வறடு → வறட்டு + அடு → அடை. அடை = அப்பவகை.]*

வறட்டடைப்பான் *varaṭṭaḍaippāṉ,* பெ. (n.) மாட்டு நோய் வகை (பெ.மாட்); a cattle-disease.

*[வறடு → வறட்டு + அடைப்பான். அடைப்பான் = கால்நடை நோய் வகை.]*

வறட்டல் *varaṭṭal,* பெ.(n.) உலரச் செய்கை; drying, withering.

*[வறடு → வறட்டு → வறட்டல்]*

வறட்டவளை[1] *varaṭṭa-vaḷai,* பெ.(n.) தவளை ஏற்படுத்தும் ஒலி; a frog's harsh noise or squawking.

*[வறள் + தவளை]*

வறட்டவளை[2] *varaṭṭa-vaḷai,* பெ.(n.) நீர் நிலைகளில் வாழாமல் நிலப்பரப்பில் வாழும் தவளை; a frog which is lived in landpart.

*[வறள் + தவளை]*

வறட்டாடு *varaṭṭāḍu,* பெ.(n.) பால் கறவாத ஆடு (இ.வ.); dry or barren sheep.

மறுவ. மலட்டாடு.

*[வறள் → வறட்டு + ஆடு]*

ஒ.நோ. வறட்டை

**வறட்டாமரை** *varaṭṭāmarai,* பெ.(n.) பாறைப் பகுதிகளில் வளர்ந்த தாமரை; lotus growing in the crevices of rocks.

*[வறள் + தாமரை]*

**வறட்டி** *varaṭṭi,* பெ.(n.) அடைபோல் தட்டிக் காய வைத்த ஆப்பி; bratty, dried cow-dung cake.

தெ.வரட, வரடி; க.பறடி, ம.வரதி; து.வரடி.

*[வறள்→வறட்டு→வறட்டி]*

**வறட்டிருமல்** *varaṭṭirumal,* பெ.(n.) தொண்டையை வறளச் செய்யும் இருமல் வகை (சீவரட். 18); dry-cough.

*[வறடு→வறட்டு + இருமல்]*

**வறட்டு-தல்** *varaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வற்றச் செய்தல்; to cause to dry up, to wither. 2. காயச் செய்தல்; to parch, scorch. 3. வறுத்தல்; to fry, roast.

*[வறள்→வறடு→வறட்டு-.]*

**வறட்டுச்சாணை** *varaṭṭu-c-cāṇai,* பெ.(n.) ஒரு வகைச் சாணைக் கல்; grindstone of black sand and gum lac.

*[வறடு + சாணை ']*

**வறட்டுச்சொறி** *varaṭṭu-c-coṟi,* பெ.(n.) ஓர் வகைச் சொறி; a kind of itch

*[வறட்டு + சொறி]*

**வறட்டுச்சோகை** *varaṭṭu-c-cōgai,* பெ.(n.) சோகை நோய் வகை; (M.L.) bright's disease.

*[வறள்→வறட்டு + சோகை]*

**வறட்டுப்பசு** *varaṭṭu-p-pašu,* பெ.(n.) பால் கறவாத ஆமா (பசு); dry or barren cow. *"வறட்டுப் பசுக்க ளென்றுந் தீபற" (திருவுந்தி. 43).*

மறுவ. வறட்டை.

*[வறள்→வறடு→வறட்டு + பசு]*

**Skt.** pašu>த. பசு.



**வறட்டுப்பாக்கு** *varaṭṭu-p-pākku,* பெ.(n.) வெட்டி, அவித்துலர்த்திய முற்றாத பாக்கு; tender arecanut cut, boiled and dried.

*[வறட்டு + பாக்கு ']*

**வறட்டுப்பிரசவம்** *varaṭṭu-p-pirašavam,* பெ.(n.) மிகக் கடினமான பிள்ளைப்பேறு; dry labour.

*[வறட்டு + பிரசவம்]*

**Skt.** pra-sava>த. பிரசவம்.

**வறட்டுப்புழுக்கை** *varaṭṭu-p-puḻukkai,* பெ.(n.) தீய்ந்து வெளிப்படும் பிழுக்கை; over dried faeces.

*[வறள்→வறட்டு + புழுக்கை]*

**வறட்டுமஞ்சள்** *varaṭṭu-mañjaḷ,* பெ.(n.) வறளிமஞ்சள் பார்க்க (நாஞ்.); see *varaḷi-mañjaḷ.*

*[வறட்டு + மஞ்சள்]*

வறட்டை *varaṭṭai,* பெ.(n.) வறடு, 2 பார்க்க; see *varaḍu,* 2. *"கோல வறட்டை" (திருமந். 505).*

*[வறள்→வறடு→வறட்டு→வறட்டை.]*

வறட்பசிரி *varaṭ-paširi,* பெ.(n.) பசளை வகை (மூ.அ.); a species of purslane.

*[வறள் + பசிரி]*

வறட்பனி *varaṭ-paṉi,* பெ.(n.) ஈரமில்லாப் பனி; less moist fog.

*[வறள் + பனி.]*

வறட்பால் *varaṭ-pāl,* பெ.(n.) காய்ந்து கட்டியான பால்; milk boiled into a mass. *"மேதி...... கல்லறைப் பொழிந்த வறட்பால்" (கல்லா. 95, 22).*

*[வறள் + பால்[1]]*

வறட்புள்தோடம் *varaṭ-puḷ-tōḍam,* பெ.(n.) குழந்தை நோய் வகை (பாலவா. 69); a children's disease.

*[வறள் + புள் + தோடம்[1]]*

Skt. dōsa> த. தோடம்.

வறட்பூல் *varaṭ-pūl,* பெ.(n.) வறட்பூலா (வின்.) பார்க்க; see *varaṭ-pūlā.*

*[வறள் + பூல்]*

வறட்பூலா *varaṭ-pūlā,* பெ.(n.) 1. வெள்ளைப் பூலா வகை; Indian snowberry. 2. புல்லாந்தி; a plant flueggia.

*[வறள் + பூலா]*

வறட்போக்கிரி *varaṭ-pōkkiri,* பெ.(n.) வெட்கங் கெட்டவன் (இ.வ.); impudent or impertinent rogue, immodest person.

*[வறள் + போக்கிலி→போக்கிரி]*

வறடன் *varaḍaṉ,* பெ.(n.) 1. உடல் மெலிந்தவன்; lean man. 2. வலுவிலி; impotent man.

தெ.வரடு; க.பரட; ம. வரடெ.

*[வறள்→வறடு → வறடன்]*

ஒருகா. வறட்டன்→ வறடன்.

ஆற்றலற்றவன். உடலால் மெலிந்தும் மனவலிமையற்றும் இருப்பவன்.

வறடி *varaḍi,* பெ.(n.) 1. உடல் மெலிந்தவள்; lean woman. 2. மலடி; barren or infertile woman.

*[வறடன் (ஆ.பா.)→வறடி (பெ.பா.)]*

வறடு *varaḍu,* பெ.(n.) 1. வறட்சி; dryness, meagreness. 2. கன்றீனா ஆமா முதலியன; barren or infertile animal, as cow etc. *"வறட்டைக் குனிந்து குளகிட்டும் பாலைக்கறந்து" (திருமந். 505).*

க. பறடு.

*[வறள் → வறடு]*

வறண்டல் *varaṇḍal,* பெ.(n.) உலர்த்துகை; hot and dry or wither.

வறண்டி *varaṇḍi,* பெ.(n.) 1. குப்பை வாருங் கருவி; rake, harrow. 2. வழிக்குங் கருவி; a kind of spatula.

*[பறண்டு→வறண்டு→வறண்டி.]*



வறண்டு-தல் *vaṟaṇḍu-*,5 செ.குன்றாவி. (v.t.) 1. தெள்ளுதல் (பிங்.); to sift by means of winnowing fan, to winnow by tapping the fan. 2. பிறாண்டுதல் (வின்.); to scratch, as with finger-nails, claws, or spikes. 3. திருடுதல்; to rob, steal.

தெ.பருகு; க.பர்கட; ம.வரண்டுக.

*[பறண்டு→வறண்டு-.]*

வறண்முள்ளி *vaṟaṉ-muḷḷi*,பெ.(n.) செம்முள்ளி; a thorny plant.

*[வறள் + முள்ளி]*



வறதாரு[1] *vaṟadāru*,பெ.(n.) முள்ளிக்கீரை; thorny spinach - *Amaranthus spinosis* (சா.அக.).

வறதாரு[2] *vaṟadāru*,பெ.(n.) முள்ளி (மலை.); Indian nightshade. 2. முள்ளி[1], 2 பார்க்க; see *muḷḷi*.

வறந்தலை *vaṟandalai*,பெ.(n.) வறுமை; poverty, indigence. *"வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்க"* *(மணிமே.10-9).*

வறப்பு *vaṟappu*,பெ.(n.) குறைவு; deficiency, shortage, a lack.

வறப்பீகம் *vaṟappīgam*,பெ.(n.) 1. மிளகாய் வகையுளொன்று; a species of chilly. 2. காய்ந்த மிளகு; dry pepper.

வறப்போக்கி *vaṟa-p-pōkki*,பெ.(n.) இவறன்; stingy person, miser.

*[வறள் + போக்கு→போக்கி]*

ஒருகா. ஈயாயத்தன்

வறம் *vaṟam*,பெ.(n.) 1. வற்றுகை; drying up, withering. *"நாடு வறங் கூரினுமிவ் வோடு வறங்கூராது" (மணிமே.14, 13), "பெருவறங் கூர்ந்த கானம்" (பெரும்பாண். 23).* 2. நீரில்லாமை; drought. *"கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது தழைக்கும்" (புறநா. 137).* 3. கோடைக்காலம்; summer or hot season. *"வறந்தெற மாற்றிய வானம்" (கலித். 146).* 4. பஞ்சம்; famine. 5. வறுமை; poverty, barrenness. *"மாரி வறங்கூர்ந் தனைய துடைத்து" (குறள், 1010).* 6. வறண்ட நிலம்; parched land, dry soil. *"வறனுழு நாஞ்சில்" (கலித். 8.).*

தெ.வரது; க.பர, வரே, வர, வரடு; ம. வரடி; து.வரடெ.

*[வரம்→வறம்.]*

வறமுள்ளி[1] *vaṟa-muḷḷi*, பெ.(n.) வறண் முள்ளி பார்க்க; see *vaṟaṉ-muḷḷi*.

*[வறம் + முள்ளி]*

வறமுள்ளி[2] *vaṟa-muḷḷi*,பெ.(n.) செம்முள்ளி (வின்.); a thorny plant.

*[வறம் + முள்ளி]*

வறல் *vaṟal*,பெ.(n.) 1. உலர்கை; drying up. *"வறற்குழற் சூட்டின்" (சிறுபாண். 163).* 2. வறட்சியான நிலம்; dry soil ground. *"கரிவறல் வாய்புகுவ" (கலித். 13).* 3. சுள்ளி;

dried twig. *"வெண்கிடை யென்றூழ்வாடு வறல் போல" (புறநா. 75).* 4. நீரில்லாமை; drought. *"அருவியற்ற பெருவறற் காலையும்" (பதிற்றுப். 43. 14).* 5. வறுக்கை (பதார்த்த. 1369); frying, roast. 6. வற்றல் 4 (வின்.) பார்க்க; see *vaṟṟal*.

**Ma.** vaṟam, varavu, vaṟaṭu; **Te.** vaṟapu, vaṟaṭu; **Tu.** baranṭuni.

*[வரல்→வறல்.]*

வறலாரை *vaṟal-ārai,* பெ.(n.) வறளாரை (சங்.அக.) பார்க்க; see *vaṟaḷ-ārai.*

*[வறல் + ஆரை. ஆரை = புன்செய் நிலத்தில் முளைக்கும் கீரை.]*

வறவறப்பு *vaṟa-vaṟappu,* பெ.(n.) பனித் திவலைப்போல் தோலில் ஏற்படும் மாற்றம்; state of skin in dew season.

*[வறவற→வறவறப்பு.]*

வறவறெனல் *vaṟa-vaṟeṉal,* பெ.(n.) உலர்ந்து கடினமாதற்குறிப்பு; onom expr. of becoming dry and hard. *"பூசிய மருந்துப் பற்று வறவறென்றிருக்கிறது". "எண்ணெய் தேய்க்காமல் தோல் வறவறவென்றிருக்கிறது" (பே.வ.).*

*[வறவற + எனல்.]*

வறவாரை *vaṟa-vārai,* பெ.(n.) வறளாரை (வின்.) பார்க்க; see *vaṟaḷ-ārai.*

*[வறல் + ஆரை [1]]*

வறவு *vaṟavu,* பெ.(n.) கஞ்சி (சங்.அக.); gruel.

வறவொட்டி *vaṟa-v-oṭṭi,* பெ.(n.) பூடுவகை (வின்.); a kind of pot-herb.

*[வறல் + ஒட்டு → ஒட்டி]*

வறவோட்டுச்சட்டி *vaṟa-v-ōṭṭu-c-caṭṭi,* பெ.(n.) வரையோடு, 1 பார்க்க; see *varai-y-ōḍu.*

*[வறு→வற + ஓடு→ஓட்டு + சட்டி.]*

வறள்[1](ளு)-தல் *vaṟaḷ-,* 16 செ.கு.வி.(v.i.) 1. வற்றுதல் (பிங்.); to dry up, to become dry. 2. உடம்பு மெலிதல் (வின்.); to become slim, lean or emaciated.

*[வறல்→வறள்→வறளு.]*

வறள்[2] *vaṟaḷ,* பெ.(n.) 1. வறல் 1, 2 பார்க்க; see *vaṟal,* 1, 2. *"வாவியடங்கலும் வறளாக" (சேதுபு. தேவி. 62).* 2. வெறுமையாகை; emptiness, vacuum. *"வற்றிய வேலையென்ன விலங்கையூர் வறளிற்றாக" (கம்பரா. தேரேறு. 2).* 3. மணற்பாங்கு; sandy soil. *"வறளடும்பின் மலர்மலைந்தும்" (பட்டினப்.64).*

*[வரல்→வறல்→வறள் = வறளுகை; ஒன்று மில்லாமற் போகை.]*

வறள்மாந்தம் *vaṟaḷ-māndam,* பெ.(n.) குழந்தைகளுக்கு, முன்னுண்டது அறாமையா னேற்படும் ஓர் நோய்; a disease caused by indigestion among children.

*[வறள் + மந்தம்→மாந்தம்]*

வறள்முள்ளி *vaṟaḷ-muḷḷi,* பெ.(n.) செம்முள்ளி; a thorny plant.

*[வறள் + முள்ளி]*

வறள்வலிப்பு *vaṟaḷ-valippu,* பெ.(n.) வயிற்று வலி வகை; colic.

*[வறள் + வலிப்பு]*

வறள்வாயு *vaṟaḷ-vāyu,* பெ.(n.) வயிற்றி லுண்டாகும் ஊதை நோய் வகை; a disease of the stomach due to wind mostly in indestinal region.

*[வறள் + **Skt.** வாயு]*

**Skt.** Vāyu > த. வாயு.

**வறள்விதை** *varal-vidai,* பெ.(n.) ஊறவையாது, தெளிக்க வைக்கப்பட்ட காய்ந்த விதை; dried seed sown without being soaked in water.

மறுவ. வற(ட்டு)விதை.

மானாவாரி அல்லது புன்செய் நிலங்களில் விதைப்பதற்கான காயவைத்த விதை நெல், சோளம், கம்பு, துவரை, குதிரைவாலி போன்ற தவசங்களை குறித்ததென்க.

*[வறள் + விதை]*

**வறளாங்குளம்** *varalāṅ-gulam,* பெ.(n.) நீர் வற்றின குளம்; dried tank.

**வறளாரை** *varalārai,* பெ.(n.) காய்ந்த நிலத்தில் உண்டாகும் செடிவகை (வின்.); a plant growing on dry soils, used for fodder.

*[வறள் + ஆரை]*

**வறளி** *varali,* பெ.(n.) 1. உலர்ந்தது; anything dried or without moisture. *"வறளி னழல் வசமருவார்" (சிவதரு. சுவர்க்க நரக.54).* 2. வறட்டி பார்க்க; see *varatti.*

*[வறள்→வறளி.]*

**வறளித்தனம்** *varali-t-tanam,* பெ.(n.) ஏழைமை; poverty, pecunary.

மறுவ. வறுமை

*[வெறு→வறு→வறி→வறள். வறளி + தனம் = வெறுமை. "தனம்" = சொல்லாக்க ஈறு.]*

**வறளிமஞ்சள்** *varali-mañjal,* பெ.(n.) மஞ்சள் வகை; a kind of saffron.

*[வறளி + மஞ்சள். விரலிமஞ்சள் → வறளிமஞ்சள்.]*

**வறற்காலை** *varar-kālai,* பெ.(n.) நீரில்லாத காலம்; drought season. *"அருவியற்ற பெருவறற் காலையும்" (பதிற்றுப். 43, 14).*

*[வறள் + கால்→காலை]*

**வறன்** *varan,* பெ.(n.) வறம் பார்க்க; see *varam.* *"வறனுண் டாயினு மறஞ்சா லியரோ" (ஐங்குறு, 312), "வறனோ டுலகின் மழைவளந் தரூஉம்".*

*[வறம்→வறன்]*

**வறன்மூலம்** *varan-mūlam,* பெ.(n.) மலம் தீய்ந்து வெளிவரும் ஓர் மூலம்; a variety of visible piles, marked by very hard stools.

*[வறம்→வறன் + மூலம்]*

**வறனுழ-த்தல்** *varan-ula-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நீரின்றி வருந்துதல்; to suffer by drought; to wither due to deficient rain, as crops. *"வறனுழக்கும் பைங்கூழ்க்கு" (இனி. நாற். 16).* 2. வறுமையுறுதல்; to be poverty stricken.

*[வறம்→வறன்+உழ-. உழ-த்தல் = வருந்துதல்.]*

**வறிஞன்** *variñan,* பெ.(n.) நல்குரவாளன்; வறியவன்; poor man, destitute or poverty sticken person. *"வறிஞராய்ச் சென்றிரப்பர்" (நாலடி, 1).*

*[வறு→வறி→வறியன்→வறிஞன்]*

ஏதுமற்ற ஏதிலி; வெறுமையாளன்.

**வறிது** *varidu,* பெ.(n.) 1. சிறிது (தொல். சொல். 336); that which is little, small or insignificant. *"வறிது சிறிதாகும்" (தொல். 819).* 2. பயனின்மை; worthlessness; purposelessness. 3. அறியாமை (பிங்.); ignorance. 4. குறைவு (பிங்.); defect,

deficiency. 5. வறுமை; poverty, indigence, destitution. *"எம்பிரா னிரங்கி வறிது நீத்தனன்" (உபதேசகா. சிவபுண். 316).* 6. உள்ளீடற்று வெறுவிதாகை; emptiness, hollowness, vacuum. *"வறிதாகின்றென் மடங்கெழு நெஞ்சே" (ஐங்குறு.17).* 7. இயலாமை (பிங்.); impossibility, inability.

க.பறிது, பறெ; ம.வரு; து.பரெ.

*[வெள்→வெறு→வறு→வறிது (மு.தா.153).]*

வறியன் *varịyaṉ,* பெ.(n.) வறிஞன் (சூடா.) பார்க்க; see *varịñaṉ.*

*[வெறு→வறி→வறியன்.]*

வறியான் *varịyāṉ,* பெ.(n.) 1. வறிஞன்; destitute person. *"வறியார்க் கொன் றீவதே யீகை" (குறள், 221).* 2. வறியோன் 2 பார்க்க; see *varịyōṉ* .

*[வறியன்→வறியான்.]*

வறியோன் *varịyōṉ,* பெ.(n.) 1. வறிஞன் பார்க்க; see *varịñaṉ.* 2. அறிவிலான்; man devoid of sense, idiot, muff, fool, stupid. *"வறியோ னொருவன்" (சிலப். 15, 77).*

*[வறியன்→வறியான்→வறியோன்.]*

வறு[1]–த்தல் *varu-,*4 செ.குன்றாவி.(v.t.) 1. பொரியச் செய்தல்; to dry, grill, fry, parch, toast. *"வெயில் வறுத்த வெம்பரன்மேல்" (திவ். இயற். பெரிய. ம. 50).* 2. தொந்தரவு படுத்துதல்; to annoy, distress, disturb. *"இரவு முழுவதும் அவனுக்குள் சுரம் வறுத்தெடுத்து விட்டது" (பே.வ.).*

**Te.** ṉaṉḍu; **Ma.** vaṟa, vaṟavu, vaṟal, vaṟukka, vaṟattuka, vaṟaḷuga; **To.** paṟf (part); ḷoḍ. bare, bara; **Pa.** vedp; **Kui.** vaja; **Kuwi.** vwajali.

*[வரல்→வறள்→வற→வறு–.]*

வறு[2]–தல் *varu-,*4 செ.கு.வி.(v.i.) வறுபடுதல் (வின்.); to be fried, parched or grilled, roasted.

வறுகடலை *varu-kaḍalai,* பெ.(n.) வறுத்த கடலை; fried pulse or gram.

மறுவ. பொரிகடலை.

*[வறு[1] + கடலை]*

வறுகறி *varu-kari,* பெ.(n.) வறுத்தகறி (நாமதீப. 403); fried curry, roasted meat.

மறுவ. வறுவல், உப்புக்கறி.

*[வறு + கறி]*

வறுகிப்பிடி–த்தல் *varugi-p-piḍi-,*4 செ. குன்றாவி. (v.t.) இறுகப் பற்றுதல் (வின்.); to clasp, to hold fast and firm.

*[வறுகு + பிடி–,]*

வறுகு–தல் *varugu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. இறுகப் பிடித்தல்; to cling to claspfirmly. 2. பிறாண்டுதல்; to scratch, paw.

தெ.பறுகு.

*[வறுகி → வறுகு–.]*

வறுகுமுள் *varugu-muḷ,* பெ.(n.) மரத்தில் கோடு கிழிக்கும் தச்சுக் கருவி வகை; carpenter's instrument for nailing lines in wood.

*[வரைவு→வருவு→வருகு→வறுகு + முள்]*

வறுங்காலம் *varuṅ-kālam,* பெ.(n.) 1. வறுமைக் காலம்; period of destitution. 2. நீரில்லாக் காலம்; drought season. 3. வறட்சிக்காலம் (வின்.); times of scarcity or famine, drought season.

*[வறுமை + காலம்]*

**வறுங்கோட்டி** *varuṅ-kōṭṭi,* பெ.(n.) அறிவிலார் கூட்டம்; ignorant assembly, foolish crowd. *"புல்லா வெழுத்தாற் பொருளில் வறுங்கோட்டி" (நாலடி, 155).*

*[வெறு→வறு→வறுமை + கோட்டி. கோள்→ கோட்டி.]*

**வறுங்கோடை** *varuṅ-kōḍai,* பெ.(n.) 1. வறுங் காலம் பார்க்க; see *varuṅ-kālam.* 2. முதுவேனிற்பருவம் – கடுங்கோடை (வின்.); very dry season, severe or acut summer.

*[வறு→வறுமை + கோடை. கொடு→கோடு →→காடை.]*

**வறுத்தவுப்பு** *varutta-vuppu,* பெ.(n.) மருந்து செய்ய பயன்படுத்தும்படி, வறுக்கும் உப்பு; fried salt used when on diet, fried salt used to manufacture medicine.

*[வறுத்த + உப்பு. உ→உப்பு.]*

**வறுத்திடி–த்தல்** *varuttiḍi-,* 4 செ.கு.வி. (v.i.) உணவிற்காகச் சில தவசங்களை, வறுத்து இடித்தல்; to fry and pound. *கருஞ்சோளம், கம்பு, ஊற வைத்த விதை நெல் போன்றவற்றை சிற்றூர்களில் வாழுநர் வறுத்து இடித்து உணவாகப் பயன்படுத்துவர். வறுத்திடித்துச் செய்யும் திண்பண்டத்தின் மணமுஞ் சுவையும் சொல்லி மாளாது. துவரப் பசித்துண்டார் ஓராங் கெய்துவர்.*

*[வறுத்து + இடி–. இல்→இள்→இடு→இடி.]*

**வறுத்துப்பேரி** *varuttu-p-pēri,* பெ.(n.) கறிவகை; a kind of curry or side dish.

*[வறு + உப்பேரி. உப்பு + கறி = உப்புக்கறி →உப்பேறி. உப்பேறி = உப்புடன் உசிலையிட்டுப் பொரித்த கிழங்கு அல்லது பழ உணங்கல் கறி.]*

**வறுத்துறுப்பு** *varutturuppu,* பெ.(n.) வருத்துறுப்பு (யாழ்.அக.) பார்க்க; see *varutturuppu.*

**வறுநகை** *varu-nagai,* பெ.(n.) புன்சிரிப்பு (வின்.); smile.

மறுவ. இளமுறுவல்

*[வள்→வர்→வரு→வறு+ நகு→நகை.]*

**வறுநிலம்** *varu-nilam,* பெ.(n.) பாழ்நிலம்; waste land. *"கடிமலரி னன்னறு வாசம்..... வறுநிலத்து வாளாங் குகுத்தது போல்" (திவ். இயற். பெரிய. 6, 89).*

*[வெறு→வறு + நிலம்]*

**வறுநுகர்வு** *varu-nugarvu,* பெ.(n.) நுகர்ச்சி யின்மை; inexperience. *"பிராரத்த வறுநுகர் வுண்டாம்" (வேதா. சூ. 159).*

*[வெறு→வறு + நுகர்→நுகர்வு]*

**வறுபடு–தல்** *varu-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) தீயாற் பொரிதல்; to be fried, parched or grilled.

*[வெறு→வறு + படு–.]*

**வறுபயறு** *varu-payaru,* பெ.(n.) வறுத்தபயறு வகைகள்; chow-chow of various fried pulses.

*[வறு + பயறு]*

**வறும்புனம்** *varum-puṉam,* பெ.(n.) 1. அறுவடையானபின் வெற்றெனக் கிடக்கும் புன்செய் நிலம்; dry land lying fallow after harvest. *"வறும்புனங் கண்டு வருந்தல்" (திருக்கோ. 146).* 2. பாலைநிலம் (சங்.அக.); desert.

*[வெறுமை→வறுமை + புலம்→புனம்]*

வறுமை *varumai*, பெ.(n.) 1. நல்குரவு ஏழைமை; poverty, indigence. *"நல்லார்கட் பட்ட வறுமையின்" (குறள், 408).* 2. துன்பம் (சூடா.); difficulty, trouble, agony. 3. வெறுமை (வின்.); emptiness, vacuum. 4. திக்கற்ற தனிமை; helpless, loneliness. *"பாரிற் செல்கின்ற வறுமையை நோக்கி" (கம்பரா. முதற்போர். 216).*

மறுவ. நல்குரவு.

*[வெறு → வறு → வறுமை = பொருளில்லா வெறுமை, பொருளின்மை.]*

வறுமொழி *varu-moli*, பெ.(n.) பயனிற் சொல்; useless or idle word. *"வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு" (சிலப். 16, 63).*

மறுவ. சப்பைவாக்கு, வெறும்பேச்சு.

*[வறுமை + மொழி. வறுமை = பொருளின்மை.]*

வறுவல் *varuval*, பெ.(n.) எண்ணெய் அல்லது நெய்யிற் பொரித்த கறி (நாமதீப. 403); curry fried in ghee or oil.

*[வறு → வறுவல்.]*

வறுவிது *varuvidu*, பெ.(n.) குறையாக இருப்பது; that which is deficient or absent. *"அடக்கமு நாணொடு வறுவிதாக" (கலித். 138, 4).*

*[வறு + விது]*

வறுவிதை *varu-vidai*, பெ.(n.) வறுத்த வித்து; fried seed. *"வறுவிதை நுகர்ச்சிக் கன்றியே முளைக்கு மற்றதுதான் காரணமன்று" (வேதா.சூ. 163).*

*[வறு¹ + விதை]*

வறுவியோர் *varuviyōr*, பெ.(n.) வறியர்; the poor. *"வந்த நாவலர் சுற்றத்தார் வறுவி யோர் வாழ" (திருவாலவா. 55, 33).*

*[வறியர் → வறுவியர் → வறுவியோர்]*

வறை *varai*, பெ.(n.) பொரிக்கறி; fried curry or meat. *"நெய் கனிந்து வறையார்ப்ப" (மதுரைக். 756).*

*[வறு → வறை]*

வறைக்காய்ச்சல் *varai-k-kāyccal*, பெ.(n.) வறட்காய்ச்சல் பார்க்க; see *varat-kāyccal*.

*[வறன் → வறை + காய்ச்சல்]*

உடலனல்; அளவிற்கதிகமான வெப்பத்தினா லேற்படும், உடற்காய்வு.

வறைநாற்றம் *varai-nārram*, பெ.(n.) தீய நாற்றம்; bad odour, stink. *"வறை நாற்றத்தைக் காட்டிப் பிடிக்குமா போல" (ஈடு, 2, 8, 4).*

மறுவ. முடைநாற்றம்.

*[வறை + நாற்றம்]*

வறைமாதளர்ச்சி *varaimā-talarcci*, பெ.(n.) நல்ல மாதுளை; a kind of pomegranate.

வறைமுறுகல் *varai-murugal*, பெ.(n.) 1. கருகிப் போனது (ஈடு. 6, 5, 10, ஜீ); dried excessively. 2. பயனற்றது; useless thing. *"அது வறைமுறுகலாகையிறே பின்பு தவிர்ந்தது" (ஈடு. 6, 5, 10ஜீ.).* 3. கரடு முரடானது; that which is difficult to understand, rugged, rough thing. *"ஸ்ரீகீதையோபாதி வறைமுறுகலாய்ப் போமிறே" (ஈடு. 7, 9, 2).*

*[வறு → வறை + முறுகல்]*

**வறையல்** *vaṟaiyal,* பெ.(n.) 1. வறை (பிங்.) பார்க்க; see *vaṟai.* *"மூரல்பால் வறையல்" (திருவிளை.குண்டோ. 14).* 2. பிண்ணாக்கு (வின்.); cake of crushed or pressed oil seed.

*[வறு→வறை→வறையல்]*

**வறையாடு** *vaṟai-y-āḍu,* பெ.(n.) 1. குறும்பாடு, மலையாடு; mountain sheep. 2. வரையாடு பார்க்க; see *varai-y-āḍu.*

மறுவ. வற்காலி.

*[வரை→வறை + ஆடு.]*

காட்டு மூலிகைகளை உண்ணும். இவைகளின் இறைச்சி, நோய்களைப் போக்கும். மாந்தர்தம் ஆற்றலை அதிகரிக்கச் செய்யுந் தன்மைத்து.

மலைச்சாரலில், இயற்கையாக முளைத்துள்ள மூலிகைகளை உண்டு வளர்வதால், வறையாட்டின் இறைச்சி, மருத்துவக்குணம் மிக்கதாய்த் திகழ்கின்றதெனலாம்.



**வறையோடு** *vaṟai-y-ōḍu,* பெ.(n.) 1. பொரிக்குஞ் சட்டியோடு; earth-pan used for parching. 2. பயனற்ற(வள்) (வன்) (து); good for nothing person or thing.

*[வறு→வறை + ஓடு]*

**வறோதிநங்கை** *vaṟōdi-naṅgai,* பெ.(n.) மாதர்தம் நால்வகைப் பிரிவினுள் ஒரு வகையினள்; one of the four classes of woman.

*[வறோதி + நங்கை]*

**வன்கட்பிணாக்கள்** *vaṉkaṭ-piṇākkaḷ,* பெ.(n.) பாலை நிலமகளிர் (திவா.); women of desert tracts.

*[வன்கண் + பிணா→பிணாக்கள்]*

**வன்கண்** *vaṉ-kaṇ,* பெ.(n.) 1. மனக் கொடுமை; cruelty, hardness of heart, iron-heartedness, pitilessness, torture. *"தாமுடைமை வைத்திழக்கும் வன்கணவர்" (குறள், 228).* 2. வீரத்தன்மை; bravery, fortitude, resoluteness, cool determination. *"வழிவந்த வன்கணதுவே படை" (குறள், 764).* 3. பகைமை (வின்.); enmity. *"உலைவிடத் தூறஞ்சா வன்கண்" (குறள், 762).* 4. பொறாமை (வின்.); jealousy, envy. 5. கொடும் பார்வை (வின்.); evil or cruel look.

மறுவ. உளவலிமை.

*[வல்→வன் + கண்]*

**வன்கண்ணன்** *vaṉkaṇṇaṉ,* பெ.(n.) 1. கொடுமை யுள்ளவன்; heartless person. *"தார்விடலை வன்கண்ண னல்கான்" (பு.வெ.11, பெண்பாற். 7.).* 2. வீரமுள்ளவன்; man of fortitude, brave and resolute man.

மறுவ. அருளற்றவன்.

*[வன்கண்→வன்கண்ணன்]*

**வன்கண்மை** *vaṉkaṇmai,* பெ.(n.) 1. கொடுமை; hardship, stone-heartedness, cruelty. *"வன் கண்மை புரிந்தனமென் றொல்கிய சிந்தையராகி" (உபதேசகா. உருத்திராக். 3).*

2. வீரம்; bravery, valour, fortitude. *"வன்கணாடவர்" (புறநா. 3.).*

*[வன்கண்→வண்கண்மை]*

வன்கணம் *van-kaṇam*, பெ.(n.) வல்லினம்; the group of hard consonants.

*[வன் + கணம். கள்→களம்→கணம். த. கணம் > **Skt.** gaṇa.]*

வன்கணாளன் *vaṉkaṇ-āḷaṉ*, பெ.(n.) வன்கண்ணன் பார்க்க; see *vaṉ-kaṇṇaṉ*. *"வன்கணாளனேன்" (பெருங். மகத. 9, 159).*

*[வன்கண் + ஆள் + அன்]*

வன்கணை *vaṉkaṇai*, பெ.(n.) மரவகை; a tree. *"இவ்வெல்லையில் நின்ற வன்கணை யென்னு மரமேயுற்று" (S.I.I. iii, 408).*

*[வல் → வன் + கணை. கண் →கணை = திரண்டு பருத்த பகுதி, = திரண்ட மரம்.]*

வன்கனத்தம் *vaṉkaṉattam*, பெ.(n.) தவசு முருங்கை (சங்.அக.); a kind of drum-stick-*Tranquebar gendarussa*.

*[வன் + கனத்தம்]*

வன்கனி *vaṉ-kaṉi*, பெ.(n.) செங்காய்; hard, unripefruit. *"வாயா வன்கனிக் குலமருவோரே" (புறநா. 207).*

மறுவ. பழக்காய்.

*[வன் + கனி. குல்→கல்→கன்→கன்னி→கனி = முதிர்ந்தது, பழுத்தது.]*

வன்காய் *vaṉ-kāy*, பெ.(n.) 1. முற்றிய காய் (வின்.); hard, woody fruit. 2. கடுக்காய் (சங்.அக.); chebulic myrobalan.

*[வல் வன் + காய்.]*

நன்கு முற்றிய விதைக்குப் பயன்படும் காய்.

வன்காந்தம் *vaṉ-kāndam*, பெ.(n.) நிலைக் காந்தம்; hard magnetic.

*[வன்மை + காந்தம்.]*

வன்காரம்[1] *vaṉ-kāram*, பெ.(n.) வெண்காரம் (வின்.); borax.

*[வன் + காரம்]*

வன்காரம்[2] *vaṉ-kāram*, பெ.(n.) வலுக்கட்டாயம் (யாழ்.அக.); force, compulsion.

*[வல் → வன் + காரம்]*

வன்காற்று *vaṉ-kāṟṟu*, பெ.(n.) மேற்கினின்று வீசும் வெப்பமான காற்று; gust.

மறுவ. அனற்காற்று

*[வல் →வன் + காற்று]*

வலிமையாக வீசும் வெப்பக் காற்று.

வன்கிடை *vaṉ-kiḍai*, பெ.(n.) 1. நோயாற் படுக்கையில் நீண்டகாலம் கிடக்கை (சங்.அக.); laid down for a long time, being bed-ridden. 2. பதுங்கி இருத்தல் (இ.வ.); lying-in-wait.

*[வன் + கிடை. கிடை = கிடக்கை.]*

வன்கிழம் *vaṉ-kiḻam*, பெ.(n.) 1. வலு கிழமான -வன், வள்-து; etremely or kery old person or animal. 2. தொண்டு படு கிழம்; extreme old age. 3. இளந்தைப் பருவத்தில் உண்டாம் அறிவு முதிர்ச்சி (வின்.); extreme precocity.

*[வன் + கீழ்→கிழம். கிழம் = முதுமை.]*

வன்குருசு *vaṉ-kurušu*, பெ.(n.) கொடிய குறுக்கு (கிருத்.); the cruel cross.

*[வன் + குருசு]*

E. Cross > த. குருசு.

**வன்கை** *van-kai,* பெ.(n.) 1. வலியகை; strong, sturdy hand, as of a labourer. *"வன்கை வினைநர்" (பதிற்றுப். 62, 16).* 2. தோற்கருவி வகை; a kind of drum. *"மத்தளங் கரடிகை வன்கை" (பதினொ. திருவாலங். மூத்த. 1, 9).*

*[வல்→வன்+ கை. குல்→குய்→கய்→கெய்→கை.]*

**வன்கைவாரம்** *van-kaivāram,* பெ.(n.) கொடும் பழி (யாழ்.அக.); cruel crime.

*[வன்கை + வாரம்]*

**வன்கொடியன்** *van-kodiyan,* பெ.(n.) 1. மிக்க கண்டிப்புள்ளவன்; very strict and harsh man. 2. கொடியவன்; wicked and cruel man.

*[வன் + கொடியன். கொடுமை→கொடியன்.]*

**வன்கொடுமை** *van-kodumai,* பெ.(n.) கொடுங்கோன்மைச் செயல்; tyranny.

*[வன் + கொடுமை. கொடு→கொடுமை.]*

**வன்கொலை** *van-kolai,* பெ.(n.) கடுங் கொலை (வின்.); cruel murder.

*[வன் + கொலை. குல்→கொல்→கொலை.]*

**வன்சா[1]** *van-šā,* பெ.(n.) வன்சாவு (வின்.) பார்க்க; see *van-šāvu.*

**வன்சா[2]** *van-šā,* பெ.(n.) வன்சாவி (வின்.) பார்க்க; see *van-šāvi.*

*[வல்→வன் + சாவி→சா]*

**வன்சாவி** *van-šāvi,* பெ.(n.) மழையின்மை யாலாவது, பூச்சி வெட்டாலாவாது உண்டாம் பயிர்க்கேடு; crop failure due to dought or pest-sticken reasons.

மறுவ. பதர்

*[வன் + சாவி. சாவி = மணி பிடியாமற் பதராய்ப் போனது]*

**வன்சாவு** *van-sāvu,* பெ.(n.) 1. கடுஞ்சாவு; cruel death. 2. காலமல்லா காலத்துண்டாம் சாக்காடு; premature or untimely death.

*[வல்→வன் + சாவு]*

**வன்சிரம்** *vanciram,* பெ.(n.) வஞ்சிரம் பார்க்க; see *vañjiram.*

*[வல்சிரம்→வன்சிரம்.]*

**வன்சிரமுள்ளி** *van-šira-mulli,* பெ.(n.) தூண்டில் வகை (இ.வ.); a kind of fish-hook.

*[வன் + சிரம் + முள்→முள்ளி]*

**வன்சிறை** *van-širai,* பெ.(n.) 1. கடுங் காவல்; strict-confinement, rigorous imprisonment. *"வன்சிறையி லவன் வைக்கில்" (திவ். திருவாய். 1, 4, 1).* 2. மதில் (திவா.); fortress. 3. கொடுமைக்கு உள்ளாக்கும் அடிமைத்தனம் (வின்.); cruel slavery.

*[வல்→வன் + சிறை. இறு→சிறு→சிறை.]*

**வன்சுரம்** *van-šuram,* பெ.(n.) கடுமையான சுரம்; severe fever.

*[வன் + சுள்→சுர→சுரம்]*

**வன்செலல்** *van-šelal,* பெ.(n.) விரைந்து செல்லுகை; rapid movement, forced march. *"வன்செல லத்திரி" (சீவக. 1773).*

*[வன் + செலல்]*

**வன்சொல்** *van-šol,* பெ.(n.) 1. கடுஞ்சொல்; rude or harsh, word, opp. to *in-šol.* 2. அறிவில்லாதவனின் மொழி; barbarious tongue. *"வன்சொல் யவனர்" (சிலப். 28,*

*141). "எவன்கொலோ வன்சொல் வழங்குவது" (குறள், 99).*

மறுவ. வன்மொழி

*[வன் + சொல்]*

பேராசிரியர், தமது தொல்காப்பியப் பொருளதிகார வுரையில், கண்ணோட்டமின்றிச் சொல்லும் சொல் (தொல்.பொருள்.273, பேரா.). வன்சொல் என்று, குறித்துள்ளார்.

**வன்சொல்விலக்கு-தல்** *van-šol-vilakku-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பேசுங்கால் கொடிய சொற்களை நீக்கிப் பேசுதல்; to abstain harsh words, while talking. 2. பிறருக்குத் தீமை பயக்கும் சொற்களைப் பேசாதிருத்தல்; to abstrain hurting words.

*[வன்சொல் + விலக்கு-.]*

தண்டியலங்காரப் பழையவுரைகாரர் வன்சொல் விலக்கு பற்றிக் கூறுவது :-

"வன்சொல் சொல்லி, விலக்குவது" (பழை.தண்டி.பொரு.12). முதற்கண் கொடிய சொற்களைக் கூறி, அது தீமை பயத்தலால், பின்பு கூறாதொழிதலே வன்சொல் விலக்குதலாகும்.

**வன்துருக்கி** *vanturukki,* பெ.(n.) கடுக்காய்; Indian or black myrobalana.

*[வன் + துருக்கி]*

**வன்நெஞ்சம்** *van-neñjam,* பெ.(n.) கல் போல் இறுகிய நெஞ்சம்; hard-heart.

*[வல்→ வன் + நெஞ்சம்.]*

**வன்பகை** *van-pagai,* பெ.(n.) கடுமையான பகை (வின்.); deep enmity, implacable hatred.

*[வன் + பகை]*

**வன்பரணர்** *van-paranar,* பெ.(n.) கழகக் காலப்புலவர்; an ancient saṅgampoet.

*[வன் + பரணர்]*

பரணர், நெடுங்கழுத்துப் பரணர் என்று இரு புலவர்கள் உள்ளமையால், 'வன்' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளது. கண்டீரக் கோப்பெருநள்ளி, வல்வில் ஓரி போன்றோரைக் குறித்துப் பாடியுள்ளார். புறநானூற்றில் 148, 149, 150, 152 மற்றும் 153 ஆகிய பாடல்களை இயற்றியுள்ளார். இவர் இயற்றியதாக நற்றிணையில் 374-ஆம் பாடலை கூறுவர்.

வன்பரணர் பாடிய புறநானூற்றிலுள்ள 149ஆம் பாடல் வருமாறு :-

*"நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்*
*மாலை மருதம் பண்ணிக் காலைக்*
*கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி*
*வரவெமர் மறந்தனர் அதுநீ*
*புரவுக்கடன் பூண்ட வண்மை யானே"*
*(புறநா.149).*

நள்ளியைப் பாடும்போது, "நீ வேண்டியவற்றை யெல்லாம் எனக் களித்துவிட்டதனால், இனி என்னுடைய நா, பிற அரசர்களைப் போற்றிப் பாடாது" (புறம்.148) என்கிறார். 'பெருஞ் செல்வம் நீ யளிக்கப் பெற்றனராதலால், எம்மவராகிய பாணர் மாலை மருதம் பண்ணியும், காலைச் செவ்வழி பண்ணியும் பாடும் முறையையும் மறந்தனர்' (புறம்.149, 153) என்கின்றார்.

நள்ளி தன்னை யாரென்று புலப்படுத்தாமலே, உணவும் அணிகலனும் அளித்துச் சென்ற சிறப்பை, இவர் கூறும் அழகு, தனிச் சிறப்புடையது (புறம்.150). வல்வில் ஓரியின் வில்லாண்மையை இவர் பாராட்டியிருப்பது, இராமன் மராமரம் ஏழினையும் ஓரம்பினால் துளைத்ததை நினைவூட்டுகிறது (புறம்.152). இவர் பாடிய வேறு செய்யுள் : புறம். 255.

பரணர் பாடியனவோ, இவர் பாடியனவோ என ஐயுறும்படி வேறுபாடுடைய செய்யுட்கள் புறம்.144, 145, நற்.374.

**வன்பா-தல்** *vanbā-,* 6 செ.கு.வி.(v.i.) கடினமாதல்; to become hard. *"வன்பாயிருப்பது பிறிதில்லை" (குறள், 1063, மணக்.).*

*[வல்→வன்→ வன்பு + ஆ-. வல் = கடினத் தன்மை குறித்த முதனிலை.]*

**வன்பாட்டம்** *vaṉ-pāṭṭam,* பெ.(n.) தீய்வு, கரிவு காலத்திலும் குறையாமல் அளக்க வேண்டிய குத்தகை நெல்; fixed rent in kind of paddy due under a lease-deed which does not provide for any relief or remission against unforeseen loss due to drought. *"பதினறு கலனே தூணியாக வன்பாட்டம் அளக்கவும்" (S.I.I.V.90).*

*[வன் + பாட்டம்]*

**வன்பாடு** *vaṉ-pāḍu,* பெ.(n.) 1. வலிய தன்மை; strength, hardness. 2. முருட்டுத் தன்மை; rudeness, effrontery. *"இரந்துதீர் வாமென்னும் வன்மையின் வன்பாட்ட தில்" (குறள், 1063).*

*[வன் + பாடு]*

வன்பாடு குறித்துப் பரிமேலழகர் வரையறுத்துள்ளது வருமாறு :-

"முருட்டுத்தன்மை; அஃதாவது ஓராது செய்து நிற்றல்" (குறள், 1063).

**வன்பார்** *vaṉ-pār,* பெ.(n.) இறுகிய பாறை நிலம் (குறள், 78, உரை); hard, rocky soil.

*[வல்→வன் + பார்]*

**வன்பால்** *vaṉ-pāl,* பெ.(n.) 1. வன்பார் பார்க்க; see *vaṉ-pār. "வன்பாற் றெள்ளறல்" (குறுந். 65).* 2. பாலை நிலம் (பிங்.); desert tract, barren and sterile ground. 3. குறிஞ்சி நிலம் (பிங்.); hilly tract. 4. மேடு (வின்.); rising ground.

மறுவ. வன்புலம்

*[வன் + பால்]*

**வன்பிணியுறல்** *vaṉ-piṇiyuṟal,* பெ.(n.) நச்சுத் தன்மை வாய்ந்த கடுமையான நோயில் அழுந்துகை; suffering from drastic or virulent disease.

*[வன் + பிணியுறல்]*

கொடிய பிணியால் பெருந்துயருழத்தல், வன்பிணியுறலாகும்.

**வன்பிழை** *vaṉ-piḻai,* பெ.(n.) கடுங்குற்றம் (வின்.); heinous crime.

*[வன் + பிழை = மிகக்கொடிய குற்றம். புள் →பிள்→பிழ்→பிழை.]*

மன்னிக்கவியலாத, மாபெருங் குற்றம் வன்பிழையாகும்.

**வன்பு** *vaṉbu,* பெ.(n.) 1. வலிமை; strength, firmness. *"த'டுத்தேன் வன்பால்" (ஞானவா. புசுண். 99).* 2. கடினத் தன்மை; hardness, as of heart. *"வன்பியர் முன்பாற் கண்டோம்" (அரிச். பு. சூழ்வி. 36).* 3. கருத்து (வின்.); thought, opinion. 4. தோல் முதலியவற்றின் வார் (சங்.அக.); strap, as of leather.

மறுவ. வள்பு.

க. பல்பு (balpu)

*[வல்→வன்→வன்பு]*

ஒ.நோ. அல் + பு → அன்பு.

**வன்புல்** *van-pul*, பெ.(n.) புறக்காழுள்ள மரம், செடி முதலியன (திவா.); endogenous plant. *"புறக்கா ழனவே புல்லென மொழிப" (தொல்.1585).*

*[வன் + புல்]*

புல்லுதல் = துளைத்தல். வழக்கிறந்த இவ் வினைச் சொல்லினின்றே, உட்டுளைத் தன்மையினை, இயற்கையிலேயே வாய்க்கப்பெற்ற 'புல்' என்னுஞ்சொல் தோன்றியது.

ஈங்கு, வன்புல்லென்பது, கூடியமேற் பகுதி யினையுடையதும், மூங்கிற் குடும்பத்தைச் சேர்ந்ததுமான, பனை தென்னை முதலான உட்டுளையுள்ள நிலைத்திணை வகையைக் குறிப்பதாகும். ஊனுண்ணா விலங்குணவான தாளுள்ள, நிலைத்திணை வகையைச் சார்ந்ததும், உட்டுளையினத்தைச் சேர்ந்ததுமான, தென்னை, பனை போன்றவையே வன்புல்லென்றறிக.

**வன்புலம்** *van-pulam*, பெ.(n.) 1. மண் திணிந்த இறுக்கமான நிலம்; hard soil. *"வன்புலந் தழீஇ" (பதிற்றுப்.75, 8).* 2. குறிஞ்சி நிலம்; hilly tract. *"வன்புலக்கேளிர்க்கு" (புறநா. 42).* 3. முல்லை நிலம்; jungle tract. *"வன்புல மிறந்த பின்றை" (பெரும்பாண். 260).*

*[வல்→வன் + புலம்]*

புல்→புலம் = நிலம், தோண்டப்பட்ட வயல், இடம் (சு.வி.36–37). புள்→புல் = துளை. புல்லுதல் = தோண்டுதல். இறுகிய மண் செறிந்த இடம், அல்லது நிலம், வன்புலம் எனப்படும்.

புறநானூற்றுக்கு உரைவரைந்த பழைய வுரைகாரர், "குறிஞ்சியும் முல்லையும் வன்புலம்" என்று குறித்துள்ளது காண்க (பழை.புறம்.2).

**வன்புற்று** *van-purru*, பெ.(n.) அரைநெறி வீங்கி, அரையாப்புக் கட்டியைபோற் காணப்படும் ஓர் வகைப் பிளவை; a hard tumour usually proceeding from the induration of a gland often terminating in a cancer - *scirrhous*.

*[வள் + புற்று]*

புல்→புற்று (வே.க.107).

வன்புற்று = உட்டுளையுள்ள புண்.

(ஒ.நோ.) சுல்→சுற்று.

**வன்புறு–த்தல்** *van-puru-*, 4 செ.குன்றாவி. (v.t.) தலைவியைத் தலைவன் ஆற்றுவித்தல்; to assure, comfort, as the lover to his beloved. *"கிழவன், வன்புறுத் தல்லது சேற லில்லை" (தொல். பொருள். 184).*

*[வன்பு + உறு–, உல்→உறு–.]*

**வன்புறை** *vanpurai*, பெ.(n.) 1. தலைவன், தலைவியை ஆற்றி வற்புறுத்துகை; assurance, comfort, given by a lover to his beloved. *"வன்புறை குறித்தல்" (தொல். பொருள். 185).* 2. தலைவன் பிரிவின் கண், வாயில்கள் தலைவியை ஆற்றுவித்தலைக் கூறும் அகத்துறை (இறை. 53); theme in which the heroine is comforted by her companions and friends, during her separation from the hero. 3. வற்புறுத்திச் சொல்பவன்; assures, comforter. *"வன்புறையாகிய வயந்தகற் குணர்த்த" (பெருங். வத்தவ. 6, 10).*

*[வன்புறு→வன்புறை]*

"வன்புறையென்பது வற்புறுத்துவது" (இறை.2) என்று, இறையனார் களவியலுரை இயம்பும்.

**வன்புறையெதிரழிதல்** *vaṉpuṟai-y-edir aḻidal,* பெ.(n.) தலைவன் ஆற்றுவித்துப் பிரிந்தபின், தனிமையால் தலைவி வருந்துதலைக் கூறும் அகத்துறை; theme describing the woes of a heroine in her loneliness after her loves has consoled and left her. *"வன்புறை யெதிரழிந்தாட்குத் தோழி......... கூறியது" (கலித். 28, துறை).*

*[வன்புறை + எதிரழிதல்]*

**வன்பொறை** *vaṉ-poṟai,* பெ.(n.) பெரும்பாரம் (வின்.); heavy burden, ponderous weight.

*[வல்→வன் + பொறை]*

**வன்மத்தானம்** *vaṉma-t-tāṉam,* பெ.(n.) வன்மம்[2] (வின்) பார்க்க; see *vaṉmam.*

*[வன்மம்[2] + **Skt.** sthāna > த. தானம்]*

**வன்மம்[1]** *vaṉmam,* பெ.(n.) 1. தீராப்பகை; malice, grudge, spite. *"வன்மக்களி யானை மன்" (நள, கலிநீங்கு. 58).* 2. வலி; force. *"மார்பின்..... கரஞ் சென்றுற்ற வன்-மத்தைக் கண்டு" (கம்பரா. அதிகா. 228).* 3. உறுதிமொழி; vow, assurance.

*[வல்→வன்→வன்–மை→வன்மம்]*

**வன்மம்[2]** *vaṉmam,* பெ.(n.) 1. மறைவான உறுப்பு (வின்.); vital part of the body. 2. பலரறியச் சொல்லக்கூடாத, கமுக்கமான சொல்; confidential words that should not be ultered in the presence of all, words that must be spoken in secret atmosphere. *"வன்மமே சொல்லி யெம்மை நீ விளையாடுதி" (திவ்.திருவாய். 6,2,7).*

*[மருமம்→ வருமம்→வன்மம்]*

**வன்மரம்** *vaṉ-maram,* பெ.(n.) 1. அகக் காழுள்ள மரம் (திவா.); exogenous plant. 2. புரசு மரம் (வின்.); East Indian satin-wood.

*[வல் → வன் + மரம்]*

**வன்மரை** *vaṉ-marai,* பெ.(n.) புரசு மரம் (வின்.); East Indian satin-wood. *"வன்மரை யென்னு மரமேயுற்று" (S.I.I.iii, 408).*

*[வன்மரம் → வன்மரை]*

**வன்மலைத்தங்கம்** *vaṉ-malai-t-taṅgam,* பெ.(n.) ஒரு வகைக் கல்; திருமால் உருவமாகக் கொண்டு வழிபடுதற்குரியதும் கண்டகியாற்றில் எடுக்கப்படுவதுமான கல்; a species of ammonite yellow in colour commonly found in the Gandagi river.

*[வன்மலை + தங்கம்.]*

**வன்மனம்** *vaṉ-maṉam,* பெ.(n.) கன்னெஞ்சு (வின்.); hard heart, iron-hearted conscience.

*[வல் → வன் + முன்னம்→முனம்→மனம்]*

**வன்மா** *vaṉ-mā,* பெ.(n.) 1. வன்மான் பார்க்க; see *vaṉ-māṉ.* 2. பரி (குதிரை) ; horse. *"தாமரையை வன்மா வெனக் கொண்ட" (திருநூற். 35).*

*[வல் → வன் + மா.]*

**வன்மான்** *vaṉ-māṉ,* பெ.(n.) அரிமா (சிங்கம்); lion. *"வன் மானுகைத்த கொடி" (தக்கயாகப். 75).*

*[வல் → வன் + மான்.]*

**வன்மி[1]–த்தல்** *vaṉmi-*, 11 செ.கு.வி.(v.i.) 1. கன்னெஞ்சு படைத்தல்; to be hard-hearted. 2. தீராப்பகை காட்டுதல்; to bear malice. 3. ஆணைசெய்தல்; to make a vow or promise. 4. மரம் காழ் கொள்ளுதல்; to be indurated, as trees.

*[வன்மம் → வன்மி]*

**வன்மி[2]** *vaṉmi*, பெ.(n.) தீய எண்ணம் கொண்டவன்; spiteful person, evil-minded man. *"காயிபாசெனுமோர் வன்மி" (இரக்ஷணிய.பக்.51).*

**வன்மீகரோகம்** *vaṉmīga-rōgam*, பெ.(n.) ஒருவகை உடல் வீக்க நோய் (இ.வ.); swelling in the neck, chest or other part of the body; elephantiasis or filariasis.

*[வன்மீகம் + ரோகம்]*

**Skt.** rōga> த. ரோகம்.

**வன்மீன்** *vaṉ-mīṉ*, பெ.(n.) முதலை (பிங்.); crocodile. *"மிடைந்து வன்மீனுயிர் கவர" (பிரமோத். 6, 35).*

*[வல் → வன் + மீன்]*



**வன்மீனம்** *vaṉ-mīṉam*, பெ.(n.) வன்மீன் பார்க்க; see *vaṉ-mīṉ*. *"ஒரு வன்மீன நீரிடை நின்று" (காஞ்சிப்பு. புண்ணிய. 11).*

*[வல் → வன் + மீனம்]*

**வன்முறை** *vaṉ-muṟai*, பெ.(n.) உயிருக்கும் உடைமைக்கும் கேடு விளைவிக்கும் வகையில் செயல்படும் முறை; violence. *'மாணவர்களை வன்முறைக்குத் தூண்டுபவர்களை தண்டிக்க வேண்டும்'.*

மறுவ. வலாற்காரம்

*[வல் → வன் + முறை]*

**வன்மை** *vaṉmai*, பெ.(n.) 1. வலிமை; strength. *"வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை" (குறள், 153).* 2. கடினம் (வின்.); hardness. 3. வன்சொல் பார்க்க; see vaṉ-šol. *"மற்று நீ வன்மை பேசி" (பெரியபு. தடுத்தாட். 70).* 4. ஆற்றல் (வின்.); adopt, skill, ability. 5. வலாற்காரம் (வின்.); force, violence. 6. சொல்லழுத்தம் (வின்.); accent, emphasis, stress. 7. சினம்; anger, fury. *"வாங்கினன் சீதையை யென்னும் வன்மையால்" (கம்பரா. முதற்போ. 108).* 8. கருத்து (திவா.); opinion, thought, attention. 9. வல்லெழுத்து; hard consonant. *"உரம் பெறும் வன்மை" (நன். 75).*

*[வல் → வன் → வன்–மை]*

**வன்மொழி** *vaṉ-moḻi*, பெ.(n.) வன்சொல்[1] (வின்.) பார்க்க; see *vaṉ-šol[1]*.

மறுவ. கடுஞ்சொல்

*[வன்–மை + மொழி]*

**வன்றி** *vaṉṟi*, பெ.(n.) பன்றி; swine, hog, pig. *“வன்றி படர்ந்த வழி” (தொல். பொருள். 102. உரை).*

க. கன்டி

*[வல்→வன்→ வன்றி.]*

**வன்றிசை** *vaṉṟišai*, பெ.(n.) வடதிசை; north, direction. *“வன்றிசைக் காளிதாசன் வடமொழி” (இரகு.பாயிர.8).*

*[வன் + திசை]*

**வன்றொடர்க்குற்றியலுகரம்** *vaṉṟoḍar-k-kuṟṟiyal-ugaram*, பெ.(n.) வல்லெழுத் தடுத்துத் தொடரப்பெற்ற குற்றியலுகரம் (நன். 94); the shortened vowel u of a vowel consonant following a hard consonant.

*[வன்தொடர் + குற்றியலுகரம்]*

**வன்றொண்டன்** *vaṉṟoṇḍaṉ*, பெ.(n.) எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படுபவரும், தேவார ஆசிரியர் மூவருள் ஒருவரும், நாயன்மார் அறுபத்து மூவருள் சிவப்பிராமணருமான சிவனடியார்; a canonized *ādi-šaiva* saint, probably of the 8th C. one of three *Tēvāram* hymnists, one of 63. *“நாவலூராளி நம்பி வன்றொண்டன்” (தேவா. 942, 10).*

மறுவ. சடையன், தம்பிரான்தோழர், நாவலர் கோன்.

*[வன் + தொண்டன்]*

இறைவனுடன் பூண்ட தோழமை நெறியைத் தமது வாழ்விலும் இணைத்து ஒழுகிய கரணியத்தால் நம்பியாரூர் வன்தொண்டர் என்று வழங்கப் பெற்றார்.

**வன்னக்கல்** *vaṉṉa-k-kal*, பெ.(n.) மருத்துவத்துக்குப் பயன்படும் ஒரு வகைக் கல் (சங்.அக.); a medicinal stone.

*[வன்னம் + கல்]*

**வன்னக்கூர்மை** *vaṉṉa-k-kūrmai*, பெ.(n.) கல்லுப்பு; rock salt.

*[வன்னம் + கூர்மை]*

**வன்னசரம்** *vaṉṉa-šaram*, பெ.(n.) பலவகை மணிகளால் செய்யப்பட்ட கழுத்தணி வகை; a neck ornament or a neclace, studded with various precious stones. *“மண்மகடன் மார்பினணி வன்னசர மென்ன” (கம்பரா. வரைக்காட்சி. 13.).*

*[வன்னம் + சரம்]*

**வன்னசை** *vaṉṉašai*, பெ.(n.) தசை நாரின் தலைப்பிலே தொடுத்திருக்கும் வயிரமுள்ள நார் போன்ற வெண்பொருள்; a hard insensible bundle of fibres by which a muscle is attached to a bone.

*[வல்→வன்→ வன்னசை.]*

**வன்னசைநார்** *vaṉṉašai-nār*, பெ.(n.) ஒருவகைத் தசைநார்; கபாடங்களின் அடிப்பாகங்கள் (சடர) தசைச் சுவர்களோடு இணைத்துக் கட்டுமோர் நட்பமான தசை நார்; the tender strings which connect the colomane carnae of the heart - Ventricles with the ventricular valves.

*[வன்னசை + நார்]*

**வன்னத்துடரி** *vaṉṉa-t-tuḍari*, பெ.(n.) ஓர் செடி; a prickly shrub as opposed to பின்தொடரி (சா.அக.).

*[வன்னம் + துடரி]*

**வன்னதூலிகை** *vaṉṉa-tūligai,* பெ.(n.) வண்ணக்கோல்; painter's brush.

மறுவ. வட்டிகை

*[வண்ணம்→வன்னம் + தூரிகை→தூலிகை]*

**வன்னப்புறா** *vaṉṉa-p-puṟā,* பெ.(n.) புறா வகை (பதார்த்த. 909); a kind of dove.

*[வண்ணம்→வன்னம் + புறா]*

புறவின் தசை ஈளை நோயைக் களையவல்லது என சா.அக. எடுத்தியம்பும்.



**வன்னம்[1]** *vaṉṉam,* பெ.(n.) 1. வண்ணம்; colour, pigment. *"அவைதாம் பளிங்கிலிட்ட வன்னம் போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்" (சி.போ. பா. 8, 3).* 2. எழுத்து; letter, character. *"மொழிகளும் வன்னமும்" (திருக்காளத். பு. 28, 9).*

*[வண்ணம்→வன்னம்.]*

**வன்னம்[2]** *vaṉṉam,* பெ.(n.) தங்கம் (சங்.அக.); gold.

*[வண்ணம்→வன்னம்.]*

**வன்னமதை** *vaṉṉamadai,* பெ.(n.) கோரோசனை; bezoar found in cattle.

**வன்னரூபி** *vaṉṉa-rūbi,* பெ.(n.) 1. உமை; Parvadi. *"தேசுறும் வன்ன ரூபியாய் நிறைந்த தேவியை" (காஞ்சிப்பு. சனற்குமா. 18).* 2. கலைமகள் (சங்.அக.); Kalaimagal.

*[வண்ணம்→வன்னம் +* ***Skt.*** *rūpin >த. ரூபி.]*

**வன்னவட்டி** *vaṉṉa-vaṭṭi,* பெ.(n.) கதவு நிலைக்கு மேலுள்ள மண்தாங்கிப் பலகை (C.E.M.); lintel, beam over window or door frames.

*[வன்னம்[1] + வட்டி[2]]*

**வன்னவத்தி** *vaṉṉa-vatti,* பெ.(n.) வன்ன தூலிகை பார்க்க; see *vaṉṉa-tūligai.*

*[வன்னம் + வத்தி]*

**வன்னனை** *vaṉṉaṉai,* பெ.(n.) வண்ணனை; description. *"மாமாயை வன்னனைக்கு..... முன்னிலையாம்" (ஞானவா. தாசு. 54).*

மறுவ.வரணனை.

*[வண்ணனை→வன்னனை]*

**வன்னாடி** *vaṉṉāḍi,* பெ.(n.) கடினநாடி; hard pulse.

*[வன்(மை) + நாடி]*

**வன்னி[1]** *vaṉṉi,* பெ.(n.) 1. தீ (பிங்.); fire. *"பாவவிறகுக் கெரியும் வன்னி" (திருக்காளத். பு. 21, 33).* 2. குதிரை; horse. *"மாராட்டமிவ் வன்னி" (திருவிளை. நரிபரி. 106).* 3. மரவகை; Indian mesquit. *"வன்னி மரமு மடைப்பளியுஞ் சான்றாக" (சிலப். 21, 5).* 4. கொடுவேலி (மலை.); ceylon lead wort. 5. தணக்கு (மலை.); whirling nut. 6. வன்னியன்; person of the *vaṉṉiya* caste.

**வன்னி**[2] *vanni,* பெ.(n.) 1. மாணி (பிரமசாரி) (பிங்.); bachelor-student. *"வன்னி நிலை முயலாதான்" (சேதுபு. பலதீ. 3).* 2. கிளி (பிங்.); parrot. *"வன்னியுங் காற்றுங் கலந்தேறிய வெம்மதனை" (வெங்கைக் கோ. 41).*

*[வண்ணம்→வண்ணி→வன்னி]*

**வன்னி–த்தல்** *vanni-,*4 செ.குன்றாவி. (v.t.) 1. வண்ணம் வைத்தல்; to paint. 2. வருணித்தல்; to describe.

*[வண்ணி→வன்னி]*

**வன்னிக்காசிகம்** *vanni-k-kāsigam,* பெ.(n.) முள்ளுக்கத்தரி; a thorny brinjal.

**வன்னிக்காய்** *vanni-k-kāi,* பெ.(n.) கடுக்காய்; chebulic myrobalan.

*[வன்னி + காய். கா→காய்]*

**வன்னிக்காரம்** *vanni-k-kāram,* பெ.(n.) அக்கிரா காரம்; a flowering tree of North Africa-*Anacyclus Pyrethrum.*

*[வன்னி + காரம்]*

குல் = முளைத்தல், தோன்றுதல்.

குல்→கில்→கீல்→கீர்→கீரை.

48 வகைக் கீரை வகைகளுள் ஒன்று.

**வன்னிக்கீரை** *vanni-k-kīrai,* பெ.(n.) முள்ளிக் கீரை; a vegetable greens.

*[வன்னி + கீரை]*

**வன்னிக்குத்தி** *vanni-k-kutti,* பெ.(n.) வன்னிக்குத்திமறவன் பார்க்க; see *vanni-k-kutti-maravan.*

*[வன்னி + குத்தி]*

**வன்னிக்குத்திமறவன்** *vanni-k-kutti-maravan,* பெ.(n.) மறவருள் ஒரு பிரிவு (E.T.V.32); a sub-sect of *Maravas.*

*[வன்னிக்குத்தி + மறவன்]*

**வன்னிகர்** *vannikar,* பெ.(n.) வன்னிகா (சங்.அக.) பார்க்க; see *vannigā.*

**வன்னிகர்ப்பன்** *vannikarppan,* பெ.(n.) முருகக்கடவுள் (வின்.); Lord Murugan.

*[வன்னி + கர்ப்பன்]*

**வன்னிகருப்பம்** *vanni-karuppam,* பெ.(n.) 1. மூங்கில் (மலை.); spiny bamboo. 2. நஞ்சு (சங்.அக.); a mineral poison.

*[வன்னி + கருப்பம்]*

**வன்னிகற்பம்** *vanni-karpam,* பெ.(n.) 1. ஒரு வகை நஞ்சு; a kind of arsenic. 2. இதளியக்கட்டு (இலிங்கக் கட்டு); consolidated cinna bar. 3. உலாந்த இதளியம் (லிங்கம்); cinnabar of Holland. 4. சடைக்கஞ்சா; Kanja.

*[வன்னி + கற்பம்]*

**வன்னிகா** *vannigā,* பெ.(n.) 1. பூடு வகை; wild long pepper. 2. பொடுதலை (மூ.அ.); a prostate plant - *Lippia nodiflora.*

*[வன்னி → வன்னிகா.]*

**வன்னிகுருத்துவேலன்** *vanni-kuruttu vēlan,* பெ.(n.) சீமை முள்வேல்; a tree- *Acacia ferruginca.*

*[வன்னி + குருத்துவேலன். குருத்துவேலன் = முள்வேல்]*

**வன்னிகுன்மம்** *vaṉṉi-kuṉmam,* பெ.(n.) வயிற்று நோய்; a variety of gunma disease - *Dyspepsia.*

*[வன்னி + குன்மம். குன்மம் = செரிமான மின்மை, வயிற்றுவலி முதலியன காணும் வயிற்று நோய்.]*

**வன்னிகெற்பம்** *vaṉṉi-keṟpam,* பெ.(n.) இலிங்கக்கட்டு; consolidated cinnabar.

*[வன்னிகற்பம்→வன்னிகெற்பம்]*

**வன்னிகை**[1] *vaṉṉigai,* பெ.(n.) பொடுதலை; a prostate plant-*Lippia Nodiflora.*

**வன்னிகை**[2] *vaṉṉigai,* பெ.(n.) எழுதுகோல்; pen, pencil. *"புத்தகமு ஞானத்து முத்திரையும்........ வன்னிகையும்" (பாரத வெண்.துதி).*

**வன்னிசகாயன்** *vaṉṉi-šagāyaṉ,* பெ.(n.) காற்று கடவுள்; wind-god. *"வன்னி சகாய நின்மைந்தன்" (உத்தரரா. அனுமப். 40).*

*[வன்னி + **Skt.**சகாயன்]*

**வன்னிசிகரம்** *vaṉṉi-šigaram,* பெ.(n.) சேவற்சூடு; cock's comb.

*[வன்னி + **Skt.** சிகரம்]*

**வன்னிசுரம்** *vaṉṉi-šuram,* பெ.(n.) நெருப்பன்ன சுரம், கொடிய சுரம்; virulent or severe fever.

*[வன்னி + சுரம்]*

**வன்னித்தீ** *vaṉṉi-t-tī,* பெ.(n.) நவச்சாரம் (சங்.அக.); sal ammoniac.

**வன்னித்தீயோன்** *vaṉṉi-t-tīyōṉ,* பெ.(n.) வன்னித்தீ பார்க்க; see *vaṉṉi-t-tī.*

*[வன்னி + தீயோன்]*

**வன்னித்தும்பை**[1] *vaṉṉi-t-tumbai,* பெ.(n.) அறிவுத் தெளிவை உண்டாக்கும் ஒரு வகை பெருந்தும்பை; a species of dead nettle that causes clarity.

*[வன்னி + தும்பை]*

**வன்னித்தும்பை**[2] *vaṉṉi-t-tumbai,* பெ.(n.) தும்பை வகை (சங்.அக.); a kind of white dead nettle.

மறுவ. பெருந்தும்பை

*[வன்னி + தும்பை]*

**வன்னிதீபனம்** *vaṉṉi-tīpaṉam,* பெ.(n.) நச்சுயிரிகொல்லி; germicide; antiseptic.

*[வன்னி + **Skt.** தீபனம்]*

**வன்னிதூமநியாயம்** *vaṉṉi-dūma-niyāyam,* பெ.(n.) "புகையுள்ள விடத்துத் தீயுண்டு" என்பது போலப் பொருள்களின் பிரிவின்மையைக் குறிக்கும் வழக்கு (அபி.சிந்.); a *niyāya* in illustration of inseparable association or concomittance, as of fire and smoke.

*[வன்னி + தூமம் + நியாயம்]*

**Skt.** Niyāya > த. நியாயம்.

**வன்னிநாளி** *vaṉṉi-nāḷi,* பெ.(n.) பவள வறுகு; a kind of grass.

*[வன்னி + நாளி]*

**வன்னிநிமிளை** *vaṉṉi-nimiḷai,* பெ.(n.) செம்பின் களிம்பு; sulphurate of antimony.

*[வன்னி + நிமிளை]*

**வன்னிப்பட்டை** *vaṉṉi-p-paṭṭai,* பெ.(n.) மரப்பட்டையினுள் ஒன்று; bark of Indian mesqrut tree.

*[வன்னி + பட்டை]*

**வன்னிப்பிரியம்** *vaṉṉi-p-piriyam,* பெ.(n.) கொடுவேலி (மலை.); ceylon leadwort.

*[வன்னி + **Skt.** priya > த. பிரியம்]*

**வன்னிபலியம்** *vaṉṉi-paliyam,* பெ.(n.) வன்னிப்பிரியம் (மலை) பார்க்க; see *vaṉṉi-p-piriyam.*

*[வன்னி + பலியம்]*

**வன்னிபூ** *vaṉṉi-pū,* பெ.(n.) வன்னி கர்ப்பன் (பிங்.) பார்க்க; see *vaṉṉi-karppaṉ.*

*[வன்னி + பூ]*

**வன்னிபேடு** *vaṉṉi-pēḍu,* பெ.(n.) காஞ்சிபுரம் மாவட்டம், வாலாசா பாத்திற்குத் தெற்கே ஒருகல் தொலைவிலுள்ளதோ ரூர்; a village in the Kancheepuram district one mile away from south of Walajabad.

*[வன்னி + பேடு]*

**வன்னிபோக்கியம்** *vaṉṉi-pōkkiyam,* பெ.(n.) நெய் (வின்.); ghee.

*[வன்னி + **Skt.** போக்கியம்]*

**வன்னிமண்டலசித்தன்** *vaṉṉi-maṇḍala-šittāṉ,* பெ.(n.) சித்தர்களுளொருவர்; a siddhar versed in alchemy.

*[வன்னி + மண்டலம் + சித்தன்]*

**வன்னிமரம்** *vaṉṉi-maram,* பெ.(n.) கோயில் கட்டட நிலைக்கால் செய்ய பயன்படும் உறுதி வாய்ந்த மரம்; this hard tree has been used to temple beam.

*[வன்னி + மரம்]*

**வன்னிமன்றம்** *vaṉṉi-maṉṟam,* பெ.(n.) வன்னிமரமுள்ள பொதுவிடம்; public meeting place under a *vaṉṉi* tree. *"சுடலை நோன்பிகள்.......... மடைதீ யுறுக்கும் வன்னிமன்றமும்" (மணிமே. 6, 87).*

*[வன்னி + மன்று→மன்றம்]*

**வன்னிமாரகம்** *vaṉṉi-māragam,* பெ.(n.) நீர் (வின்.); water.

*[வன்னி + **Skt.** māraka > த. மாரகம்]*

**வன்னிமித்திரன்** *vaṉṉi-mittiraṉ,* பெ.(n.) வன்னிசகாயன் (வின்.) பார்க்க; *vaṉṉi-šagāyaṉ.*

*[வன்னி + மித்திரன்]*

**வன்னிமுருங்கை** *vaṉṉi-muruṅgai,* பெ.(n.) முள்முருங்கை; rootchy wood tree; Red bean - *Erythrina indica.*

*[வன்னி + முருங்கை]*

**வன்னிமேமுறி** *vaṉṉi-mē-muṟi,* பெ.(n.) வடமேற்குத் திசையிலிருந்து. தென்கிழக்குத் திசை நோக்கிய கடல் நீரோட்டம்; the oceanie stream running from north-west to south-east direction.

*[வன்னி + மேல்முறி→மேமுறி]*

வன்னிமை *vaṉṉimai*, பெ.(n.) குறும் பரசாட்சி (வின்.); petty chieftainship, as of one belonging to the *vaṉṉiya* caste.

*[வல் → வன் → வன்னி → வன்னிமை]*

வன்னியடுப்பேற்றல் *vaṉṉi-y-aḍup pēṟṟal*, தொ.பெ.(vbl.n.) தீ மூட்டல்; setting fire.

*[வன்னி + அடுப்பேற்றல்]*

வன்னியம்[1] *vaṉṉiyam*, பெ.(n.) வரணிக்கப்பட்டது (சங்.அக.); that which is described.

*[வண்ணியம் → வன்னியம்.]*

வன்னியம்[2] *vaṉṉiyam*, பெ.(n.) 1. குறும்பரசரின் தன்மை; nature or characteristics of a petty chieftain. 2. உரிமை; liberty, freedom. *"இரண்டுக்குஞ் சேர வன்னிய மில்லை யிறே" (ஈடு, 7, 7, 3).* 3. பகைமை (ஈடு. 7. 7. 3. ஜு); enmity.

*[வல் → வன் → வன்னி + இயம்.]*

வன்னியமறு-த்தல் *vaṉṉiyam-aṟu-*, 4 செ.குன்றாவி.(v.t.) சிற்றரசரை அழித்தல்; to destroy or subdue petty chieftains, *"வன்னிய மறுத்திருப்பதொரு குடி" (ஈடு, 5, 10. பிர).*

*[வன்னியம் + அறு-. அறுதல் (த.வி.) → அறுத்தல் (பி.வி.)]*

வன்னியராயன் *vaṉṉiyarāyaṉ*, பெ.(n.) ஊரகத் தெய்வம்; a village deity. *"வன்னியராயா......... வரும் பன்றிமாடா" (ஈடு, 5, 10. பிர.).*

*[வன்னியம் + அரையன் → ராயன்.]*

ஒ.நோ. அரைசன் → ராசன்

வன்னியவலையன் *vaṉṉiya-valaiyaṉ*, பெ.(n.) வலையர் இனத்துள் ஒரு பிரிவு (G.Tp. D.I.114); a sub-sect of the valaiya caste.

*[வன்னியம் + வலையன்]*

வன்னியன் *vaṉṉiyaṉ*, பெ.(n.) 1. ஓர் இனம் (G.Tp.D.I.110); a caste. 2. சாமந்தன்; feudtory prince, commander. 3. கள்ளர், வலையர் முதலிய சில இனத்தாரின் பட்டப் பெயர் (E.T.vii, 321); caste title among certain castes, as the *kaḷḷar, valaiyar*, etc.

*[வல் → வன் → வன்னி → வன்னியன்]*

சோழர் காலப் படையில், வலங்கைப் படைப் பிரிவிலிருந்து இடங்கைப் படையினருக்கு இன்னல் தந்தவரென்று (கல்வெட்டறிக்கை எண்.1913--34வது அறிக்கை) கல்வெட்டறிக்கை கூறுகிறது.

வன்னியா *vaṉṉiyā*, பெ.(n.) இரும்பிலி; a small tree-*Maba buxifolia.*

வன்னியிடல் *vaṉṉi-y-iḍal*, பெ.(n.) தீயிடல்; to set fire.

*[வன்னி + இடல்]*

வன்னியின்கெற்பம் *vaṉṉiyiṉ-keṟpam*, பெ.(n.) ஒருவகை நஞ்சு; a kind of aresenic.

*[வன்னியின் + கெற்பம்]*

வன்னிரேதா *vaṉṉirēdā*, பெ.(n.) சிவ பெருமான்; Siva. *"ஈசானன் வன்னிரேதா நற்சத்தியன்" (காஞ்சிப்பு. சனற். 22).*

வன்னிலம் *vaṉṉilam*, பெ.(n.) முல்லை, முல்லையடுத்த குறிஞ்சி நிலம்; hard, rocky soil.

மறுவ. கல்லாங்குத்து, கன்னிலம், வன்பார்.

*[வல் → வன் + நிலம்]*

**வன்னிலோகம்** *vaṉṉi-lōgam,* பெ.(n.) செம்பு (யாழ்.அக.); copper.

*[வன்னி + Skt lōha>த. உலோகம்]*

**வன்னிவகன்** *vaṉṉi-vagaṉ,* பெ.(n.) காற்று; wind, as the vehicle of fire. *"தென்றலே....... வன்னி வகனாயினை" (சரபேந்தி ரகுறவஞ்சி, 21, 7).*

**வன்னிவண்ணம்** *vaṉṉi-vaṇṇam,* பெ.(n.) 1. செந்தாமரை (மலை.); red lotus. 2. செவ்வாம்பல் (யாழ்.அக.); red Indian water-lily.

*[வன்னி + வண்ணம்]*

**வன்னிவாகை** *vaṉṉi-vāgai,* பெ.(n.) கருவாகை; fragrant acacia tree-*Abizzia odoratissium.*

*[வன்னி + வாகை]*

**வன்னிவீசம்** *vaṉṉi-višam,* பெ.(n.) பொன் (யாழ்.அக.); gold.

*[வன்னி + வீசம்]*

**வன்னிவெள்ளம்** *vaṉṉi-veḷḷam,* பெ.(n.) வடதிசையிலிருந்து, தென் கிழக்குத் திசைநோக்கிய கடல் நீரோட்டம்; the oceanic stream running from north to south east direction under the sea.

*[வன்னி + வெள்ளம்]*

**வன்னீர்** *vaṉṉīr,* பெ.(n.) உவர் நீர்; breach water.

*[உவர்நீர் → உவநீர் → வந்நீர் → வன்னீர்]*

**வன்னெஞ்சு** *vaṉṉeñju,* பெ.(n.) கடுமையான மனம் (வின்.); hard heart, iron-hearted man.

*[வல் → வன் + நெஞ்சு]*

**வன்னெத்து** *vaṉṉettu,* பெ.(n.) நத்தைச் சுண்டி; bristly button weed; shaggy button weed - *Spermacoce hispida* (சா.அக.).

**வன்னெல்** *vaṉṉel,* பெ.(n.) நென்மணி (யாழ். அக.); fully grown or ripe paddy.

மறுவ. காய்நெல்

*[வன் + நெல்]*

**வன்னெற்று** *vaṉṉeṟṟu,* பெ.(n.) நத்தைச்சூரி (மலை.); bristly button weed.

*[வல் → வன் + நெற்று – வன்னெற்று.]*

**வனசிருங்காடம்** *vaṉa-širuṅgāḍam,* பெ. (n.) பெருநெருஞ்சி (மூ.அ.); a stout-stemmed herb with spiny fruits and slimy leaves.

மறுவ. யானை நெருஞ்சில்

**வனத்தவசி** *vaṉattavaši,* பெ.(n.) முருங்கை, குருகத்திப்பூடு; a plant.

*[வனம் + தவசி]*

**வனத்தி** *vaṉatti,* பெ.(n.) தூதுவளை; a thorny creeper (shrub) - *Solanum Trilobatum.*

**வனத்துக்குடோரி** *vaṉattu-k-kuḍōri,* பெ. (n.) வனதுர்க்கி பார்க்க; see *vaṉa-turkki.*

*[வனத்து + குடோரி]*

**வனத்தேரி** *vaṉa-t-tēri,* பெ.(n.) ஆவரஞ் செடி; a shrub-*Cassia auriculata.*

*[வனம் + தேரி]*



**வனதாரி** *vaṉa-tāri,* பெ.(n.) மூக்கத்தாரி என்னும் மூலிகை செடி வகை; a medicinal plant.

*[வனம் + தாரி]*

**வனதித்தம்**[1] *vaṉa-tittam,* பெ.(n.) குடச பாலை; a tree-*Hollarrhera Antidysenterica.*

*[வனம் + தித்தம்]*

**வனதித்தம்**[2] *vaṉa-tittam,* பெ.(n.) கொடிப் பாலை (மலை.); green wax - flower.

*[வனம் + தித்தம்]*

**வனதித்தா** *vaṉa-tittā,* பெ.(n.) வட்டத்திருப்பி; a twiner-*Cissampelos pareira.*

*[வனம் + தித்தா]*

**வனதீபம்** *vaṉa-tīpam,* பெ.(n.) சண்பகம்; a flower, champaca.

*[வனம் + தீபம்]*

**வனதுர்க்கம்** *vaṉa-turkkam,* பெ.(n.) காட்டரண்; forest, as a defence. *"வனதுர்க்கம், கிரிதுர்க்கம், சலதுர்க்கம் என்னப்பட்ட மூன்று அரண்களையும்" (தக்கயாகப்.54, உரை).*

**வனதுர்க்கி** *vaṉa-turkki,* பெ.(n.) கடுக்காய்; chembulic myrobalan.

*[வனம் + துர்க்கி]*

**வனதுர்க்கிசேய்** *vaṉa-turkki-šēy,* பெ.(n.) கடுக்காய் பிஞ்சு; tender Indian gall nut.

*[வனம் + துர்க்கி + சேய்]*

**வனதுர்க்கை** *vaṉa-turkkai,* பெ.(n.) கொற்றவை; koṟṟavai (Durgai). *"வன துர்கையினுடைய புதல்வ" (திருமுரு.258, உரை).*

*[வனம் +* **Skt.** *durgā > துர்க்கை.]*

**வனதேவிச்செடி** *vaṉa-tēvi-c-ceḍi,* பெ.(n.) குத்துப்பிடாரி; an unknown plant (சா.அக.).

*[வனதேவி + செடி]*

**வனப்பகையப்பன்** *vaṉappagai-y-appaṉ,* பெ.(n.) 1. நம்பியாரூரர்; *šundara-mūrtti-nāyanar,* one of four saiva saints. 2. வனப்பகை என்ற பெண்ணைப் புதல்வியாகக் கொண்டவர்; one who was the father of the girl *vaṉappagai.* *"வனப்பகையப்பன் வன்றொண்டன்" (தேவா. 924. 10).*

*[வனப்பகை + அப்பன்]*

**வனப்பகையார்** *vaṉappagaiyār,* பெ.(n.) கோட்புலி நாயனாரின் மகள்; daughter of *kōṭ-puli-nāyaṉār.* *நம்பியாரூரர் பதிகத்தில் வைத்துப் பாடப்பெறும் பெருமைப் பெற்றவள்.*

**வனப்பருத்தி** *vaṉapparutti,* பெ.(n.) கோங்கிலவு; false tragacanth.

*[வனம் + பருத்தி]*

**வனப்பியல்** *vaṉappiyal*, பெ.(n.) வனப்பு பார்க்க; see *vaṉappu*. *"வனப்பியல் தானே வகுக்குங் காலை" (தொல்.செய்யுள்.149).*

*[வனப்பு + இயல்]*

எண்வகை வனப்புகளையும் உள்ளடக்கிக் கூறுவதே வனப்பியல். அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்னும் எண்வகைச் செய்யுளுறுப்புகள், திரண்டவழிப் பெறுவதோர் அழகே, வனப்பியல் எனப்படும்.

1. அம்மை என்பது சில எழுத்துகளால் ஆகிய மெல்லிய சொல்லோடும் அறம், பொருள், இன்பம் இம்மூன்றையும் கூறுந் தொடர்நிலைச் செய்யுட்கள். இவை சில இடங்களில் இவற்றை விட்டு விலகியுஞ் செல்லும் என்றும், அம்மைக்கு இலக்கியமாவன பதினெண் கீழ்க்கணக்குச் செய்யுட்களென்றும் பேராசிரியர் கூறுவர். அம்மை வனப்புறு தொடர்நிலைச் செய்யுட்கள் ஐந்தடியின் மிகாமல் வரும். அம்மை என்பது அமைதிப்பட்டு நிற்பது.

*"சின்மென் மொழியாற் சீரிது நுவலின்*
*அம்மை தானே அடிநிமிர் வின்றே"*

என்று, யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் பாடங்கொள்வர்.

காரிகையுரையாசிரியரும், இளம்பூரணரும் நூற்பா முதலடியின் இறுதி இரு சீர்களில், சீர் புனைந்தி யாப்பின் எனப் பாட வேறுபாடு கொள்வர். இதனால் சீர் புனைதல் அம்மையின் புனைவு முறையாக அமைகின்றது.

விருத்தியுரையாசிரியரும், காரிகையாசிரியரும் "ஒள்ளிய வாய பொருள்" என்ற உரை விகற்பம் கொள்வர். பேராசிரியரும், நச்சினார்க்கினியரும், "தாயபனுபவல்" என்று நூற்பா இறுதியடி இருசீர்களில் பாட விகற்பமும், "இடையிட்டு வந்த பனுவலிலக்கணத்தோடும்" என்று உரை விகற்பமும், கொள்வர். இதனால் ஒள்ளியவாய பொருள், அறம் பொருளின்பமென்னும் மூன்றும், இடையிட்டு இலக்கணமாகவும், இலக்கியமாகவும், வரும் என்பதும், அம்மையின் பொருண்மை வளர்ச்சியாக அமைகின்றன.

"அடிநிமிர் வின்மை" என்பதற்கு ஐந்தடியின் ஏறாமை என்று பேராசிரியரும், ஆறடியின் ஏறாமை என்று நச்சினார்க்கினியரும் கூறுவர். இவை அம்மையின் அடிவளர்ச்சியாகும்.

இவ் வனப்பிற்கு காட்டாக அனைவரும் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களைக் கூறுவர்.

இதனால், சீர்புனைதல் ஒள்ளியவாய பொருள், அறம், பொருளின்ப மென்னும் மூன்றும் இடையிட்டு இலக்கணமாகவும், இலக்கியமாகவும் வரல், ஆறடியின் ஏறாமை என்ற அடி வளர்ச்சி ஆகியன அம்மையின் இயல்புகளாக அமைந்து, அறநூல்களை குறிப்பதாயிற்று.

அவ்வாறு அம்மையின் வளர்ச்சி, உரையாசிரியர்கள் அளவில் அமைகின்றது.

2. அழகு என்பது செய்யுளுக்குரிய சொற்களால் சீர்பெறப் புனைந்து யாக்கப்படுவது. அழகெனப்படும் நூல்கள் வேறு வேறு வந்து தொகுக்கப்பட்டன என்றும், எட்டுத் தொகை நூல்கள் அழகு என்னும் வனப்பின் பாற்படுவன என்றும் பேராசிரியர் கூறுவர்.

*"செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்*
*அவ்வகை தானே அழகெனப் படுமே"*

என்பது செய்யுளியல் நூற்பா. இந் நூற்பாவிற்கு பாட வேறுபாடில்லை.

யாப்பருங்கல, காரிகை உரையாசிரியர்கள் செய்யுள் மொழி என்பதற்குச் "செய்யுட் சொல்லாகிய திரிசொல்" என விளக்குவர். இளம்பூரணர் "செய்யுட்குரிய சொல்" என்று,

அவ்வாறே குறிப்பிடுவர். பேராசிரியரும், இராகவையங்காரும் "திரிசொல் பயிலாது" என்பர். இது செய்யுள் மொழி பற்றிய உரை விகற்பமாகும்.

தொல்காப்பியர் செய்யுள் ஈட்டச் சொல்லாக இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகியவற்றைக் குறிப்பிடுவர். ஆதலின் செய்யுள் மொழியில், திரிசொல் இடம் பெறும்.

அழகின் இரண்டாவது இயல்பு "சீர் புனைந்து யாத்தல்" ஓசை இனிதாக, பொலிவு பெறப் பாடல் என்று பொதுவாகவே விளக்கப்படுகின்றது.

யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும், காரிகையாசிரியரும், இளம்பூரணரும், "துணியிரும் பரப்பகம்" என்ற தனிப் பாடலைக் காட்டாகக் கூறுவர். இலக்கண விளக்கத்தில் வைத்தியநாத தேசிகர், "துணியிரும் பரப்பகம்" என்ற தனிப் பாடலில் அடுக்கல், எழிலி, கார், ஓங்கல், கலுழி, வல்லியம் முதலிய திரிசொல் பயின்றுள்ளமை காண்க என்பர். இதனால், திரிசொல் அழகு வனப்பில் வரும் என்பதும் விளக்கப்படுகின்றது. பேராசிரியரும், நச்சினார்க்கினியரும், எட்டுத் தொகை நூற்களையும், மறைந்து போன நூலாகக் கருதப்படும் மூவடி முப்பது என்ற நூலையும், காட்டாகக் குறிப்பிடுவர்.

இதனால் அழகின் இயல்புகள், திரிசொல் முதலிய செய்யுட்சொற்களும், சீர்புனைந்து யாத்தலுமாகும்.

3. தொன்மை என்பது உரைநடை கலந்த பழையவாகிய கதைப் பொருளவாகச் செய்யப்படுவது. தொன்மைக்குச் சான்றாகப் பெருந்தேவனார் பாரதமும், தகடூர் யாத்திரையும் பொருந்தும் என்பர் பேராசிரியர். சிலப்பதிகாரமும் இதன் பாற்படுமென்பர் நச்சினார்க்கினியர்.

*"தொன்மை தானே*
*உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே"*

என்பது பலரும் கொண்ட செய்யுளியல் நூற்பாவாகும். இளம்பூரணர் மட்டும், முதலடியின் இரண்டாம் சீராகச் சொல்லுங்காலை என்பதைச் சேர்த்துப் பாடங் கூறுவர். இவ்வாறு பாடங் கூறினும், இளம்பூரணர் பொருள் மாறுபாடாய் ஏதும் கூறிற்றிலர்.

தொன்மையின் முதல் இயல்பாகிய உரையொடு புணர்தல் என்பதற்கு, 'உரைக்கப்படுவனவற்றின் மேற்று' என்று விருத்தியுரையாசிரியரும், 'உரையொடு பொருந்திப் போந்த' என்று இளம்பூரணரும், 'உரைவிராய்' என்று பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் கூறுவர். க. வெள்ளைவாரணர் "நெடுங்காலமாகப் பலராலும் சொல்லப்பட்டு வழங்கி வருதல்" என்பர். இலக்குவனார், "உரைநடையால் இயற்றப்பட்டன" என்பர். இராம. பெரியகருப்பன் "நெடுங்காலம் உரைக்கப்பட்டு வந்தன" என்பர். காசிராசன் "உரைத்தலோடு பொருந்திய கூற்றுவகை" என்பர். வை.கா.சிவப்பிரகாசம் "பாட்டிடை வைத்த குறிப்பு தொன்மைக்குரியது", என்று கூறுவர். இவ்வாறு 'உரையொடு புணர்தல்' என்பதற்கு உரைவிகற்பம் கொள்வர். இவற்றிலிருந்து உரைெ யாடு புணர்தல் என்பது உரையிடையிட்டு வரல், உரைநடையால் வரல், கூற்றுவகையாக வரல் என மூன்று நிலைகள் கொண்டுள்ளதை அறியலாம்.

தொன்மையின் இரண்டாவது இயல்பான, 'பழைமை மேற்று' என்பதற்குப் 'பழைமைத்தாய் நிகழ்ந்த பெற்றி' என்று விருத்தியுரையாசிரியரும், 'பழைமையவாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவது' என்று பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் கூறுவர். பழைமையான வரலாறுகள் என்று இலக்குவனாரும், 'புராணம்' என்று, இராம. பெரியகருப்பனும் கூறுவர். இவ்வாறு 'பழைமை மேற்றே' என்பதற்கு உரை விகற்பம் கொள்வர். இதனால் பழங்கதைகள் வரலாறுகள், புராணங்கள், இவ் வகை இலக்கியங்களாகின்றன.

இவ்வனப்பிற்குக் காட்டாக விருத்தியுரை யாசிரியர்,

*"செறிதொடி உவகை கேளாய் செஞ்சுடர்த்*
*தெறு கதிர்ச் செல்வன்"*

என்பது போல்வனவும், பாரதமும், இராமாயணமும் என்பர்.

'காந்தம்' என்ற நூலைக் காரிகையுரை யாசிரியரும், தகடூர் யாத்திரையை பேராசிரியரும், சிலப்பதிகாரத்தை நச்சினார்க்கினியரும், எடுத்துக் காட்டாகக் கூறுவர், கி.வா.சகந்நாதன் 'பாரத வெண்பா' இவ் வகைப்படும் என்பர். சங்கச் செய்யுட்களில் உவமையாக, உத்தியாக இடம் பெற்றுள்ள இராமாயண பாரதக் கதைகள், அகலிகை கதை, இரதிகாமன் கதை, கசரர் கதை, இந்திரன், சிபி, சிவன், திருமால் பலராமன் கதைகள், வடமொழிக்கே உரியன என்றும், முருகன் கதை, நிலவழித் தெய்வங்களின் செயல்கள், திருமாவுண்ணிக் கதை, கொல்லிப்பாவை, கண்ணகி கதை, தமிழுக்குரியன என்றும், இராம.பெரிய கருப்பன் பிரித்து வரிசைப்படுத்திக் காட்டுவர்.

இதனால் உரையிடையிட்டும், உரை நடையிலும், கூற்று வகையாகவும், அமையும் பழங்கதைகள், வரலாறுகள், புராணங்கள் ஆகியன தொன்மை வனப்பாகின்றன.

**4.** தோல் என்பது கொச்சகக் கலி போன்ற இழுமெனும் ஓசையையுடைய மெல்லிய சொற்களால், அறம் பொருளின்பம் வீடென்னும் விழுமிய பொருள்களைச் சொல்வதும், ஆசிரியப் பாப்போன்ற (பரந்த மொழியின் அமையப் பெறும்) பாட்டினால் ஒரு பழங்கதை மேல் தொடுக்கப்படுவதும் என இருவகைப்படும். முதல் வகைக்குப் பேராசிரியர், "சான்று கண்டிலம்" என்றார். நச்சினார்க்கினியர் சீவக சிந்தாமணியைக் காட்டுகின்றார்.

*"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்*
*பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழுகினும்*
*தோலென மொழிப தொன்மொழிப் புலவர்"*

என யாப்பருங்கல விருத்தியுரையாசிரியரும், பேராசிரியரும் பாடங்கொள்வர். காரிகை யுரையாசிரியரும், இளம்பூரணரும், நச்சினார்க் கினியரும், ஈற்றடியின் இறுதி இரு சீர்களில் மட்டும் 'தொன்னெறிப் புலவர்' என்று பாட வேறுபாடு கொள்வர்.

'தொன்மொழிப் புலவர்' என்பதற்குப் பேராசிரியர், "பழைய கதையைச் செய்தல் பற்றி, இது முன்வரும் சூத்திரத்தாலும் பெறுதும்" என்பர். யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர், எவ்விதப் பொருளும் கூறிலர். தொன்னெறி என்பதற்குப் பழநெறியையறிந்த புலவர் என நச்சினார்க்கினியர் பொருள் கூறுவர். காரிகையுரையாசிரியரும், இளம்பூரணரும், எவ்விதப் பொருளும் கூறிலர்.

'இழுமென்மொழியால் விழுமியது நுவல்தல்' என்பது தோலின் முதல் வகையாகக் கூறப்படுகின்றது. இம் முதல்வகை இழுமென்மொழி, விழுமியது நுவல்தல் என இரண்டு இயல்புகளைக் கொண்டுள்ளது.

'இழுமென்மொழி'யை இழுமென்னும் மெல்லியவாய சொற்கள் என விருத்தியுரை யாசிரியரும், காரிகையாசிரியரும், இளம்பூரணரும், 'இனிய ஓசையுடைய சொற்கள்' என மு.வரதராசனாரும், 'மென்மை மிக்க இனிய சொற்கள்' என சி. இலக்குவனாரும், விளக்குவர்.

'விழுமியது நுவலல்' என்பதை, விழுமிய வாய்க் கிடப்பன என விருத்தியுரையாசிரியரும், காரிகையாசிரியரும், இளம்பூரணரும், விளக்குவர், பேராசிரியர் அறம் பொருளின்பம் வீடென்னும் விழுப்பொருள் பயப்பச் செய்வன என்றும், மு.வரதராசன் சிறந்த பொருள்பற்றி அமைவன என்றும், சி.இலக்குவனார் வாழ்வுக்குச் சிறப்புத்

தரும் பொருள்கள் பற்றி இயற்றப்படுவன என்றும் விளக்குவர்.

இவ்வாறு இழுமென் மொழியும், விழுமியது நுவல்தலும் உரை விகற்பமின்றிப் பொது நிலையிலேயே, விளக்கப்படுகின்றன.

இந்த வகைக்குக் காட்டாக விருத்தியுரை யாசிரியரும், காரிகையுரையாசிரியரும், இளம் பூரணரும், 'பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்' என்று தொடங்கும் மார்க்கண்டேயனார் காஞ்சிப் பாட்டைக் கூறுவர். பேராசிரியர் "அவை செய்த காலத்துள்ளன கண்டிலம், பிற்காலத்து வந்தன கண்டு கொள்க" என்பர். இரா.இளங்குமரன் "காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி" என்று தொடங்கும் தனிப்பாடல் திரட்டுப் பாடலொன்றைக் காட்டுவர்.

இதனால், தோலின் முதல்வகை இழுமென்னும் இனிய ஓசையுடைய மெல்லியவாய சொற்களால், அறம் பொருளின்பம் வீடென்றும் வாழ்வுக்குச் சிறப்புத் தரும் பொருள்கள் பற்றி இயற்றப்படுவதாகும்.

'பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகல்' என்பது தோலின் இரண்டாவது வகையாகும். பரந்த மொழியும், அடிநிமிர்வும் இதன் இயல்புகளாகும்.

'பரந்தமொழி' என்பதை எல்லாச் சொற்களும் என விருத்தியுரையாசிரியரும், காரிகையுரை யாசிரியரும் விளக்குவர். மு.வரதராசனாரும், இரா.இளங்குமரனும், பரந்தசொற்கள் என்றும் கூறுவர். 'அடிநிமிர்வு' என்பதைப் "பல அடியை உடையவாய்க் கிடப்பன" என விருத்தியுரை யாசிரியரும், காரிகையுரையாசிரியரும், இளம்பூரணரும், விளக்குவர்.

இவ்வாறு பரந்த மொழியும், அடிநிமிர்வும், உரை விகற்பமின்றிப் பொதுநிலையதிலேயே விளக்கப்படுகின்றன.

இதற்குக் காட்டாக விருத்தியுரையாசியரும், காரிகையுரையாசிரியரும், இளம்பூரணரும் பத்துப்பாட்டைக் கூறுவர். 'பொருட்டொடர் நிலை' எனப் பேராசிரியரும், சிந்தாமணி, தேசிகப்பா என நச்சினார்க்கினியரும், காட்டாகக் கூறுவர்.

பேராசிரியரும், நச்சினார்க்கினியரும், "ஒரு கதைமேல் தொடுக்கப்பட்டன" என்பர். சி.இலக்குவனார் கதைதான் கூற வேண்டுமென்ற குறிப்பு, நூற்பாவில் இல்லை என்பர்.

இதனால் தோலின் இரண்டாவது வகையின் எல்லாச் சொற்களோடும் கூடிய கதைப் பொருளன்றியும், கதைப்பொருளாகவும், பல அடிகளால் இயற்றப்படுவனவாகும்.

5. விருந்து என்பது புதியதாகத் தொகுக்கப்படுந் தொடர்நிலை மேலது. பழைய கதையைப் புதியதாகச் சொல்வது தோல் ஆகும் என்றும், விருந்து புதியதாகத் தான் வேண்டியவற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்து வரச் செய்வதென்றும், பேராசிரியர் கூறுவர்.

விருந்துக்குச் சான்றாக முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலியோர் செய்த அந்தாதிச் செய்யுளும் அமையும் என்றும், கலம்பகம் முதலாயினவற்றையும் சான்றாகச் சொல்வர் என்றும் பேராசிரியர் கூறுவர்.

*"விருந்தே தானும்*
*புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"*

என்று விருத்தியுரையாசிரியரும், இளம்பூரணரும் பாடல் கொள்வர், இரண்டாவது அடியின் முதல் இரு சீர்களில் மட்டும் 'புதுவது கிளந்த' என்று காரிகையுரையாசிரியரும், பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் பாட வேறுபாடு கொள்வர், இவ்வாறு பாடல் வேறுபட்டுக் கூறினும், 'புதுவது கிளந்த' என்பதற்கு விளக்கம் கூறிற்றிலர், புதுவது புனைந்த என்பதால், வடிவச் சிறப்புப்

புலப்படுத்தப்படுகிறது. ஆதலின் புதுவது புனைந்த என்று பாடங்கொள்வதே, ஏற்புடையதாகும்.

விருத்தியுரையாசிரியரும், காரிகையுரை யாசிரியரும், "விருந்து என்பது புதியவாயினவற்றின் மேற்று, அவை இப்பொழுது உள்ளாரைப் பாடும் பாட்டு" என்பர். இளம்பூரணர் 'விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிப் போய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது. புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல் வழியின்றித் தானே தோற்றுவித்தல் என்பார், பாவாணர், 'விருந்து என்பது அவ்வப்போது, புதிது புதிதாகத் தோன்றும் பலவகைப் பனுவல்கட்கும் பொதுப்பெயர் என்பர்'. கி.வா.சகந்நாதன் 'அவ்வக் காப்பியத் தலைவர்கள் காலத்தே பாடப் பெற்றமையாதலின், அவை விருந்தாகும்' என்பர். இரா.இளங்குமரன் 'இப்பொழுதுள்ளாரைப் பாடுவதும், இப்பொழுது காணப்பெறும் விந்தையினையும் நிகழ்ச்சியினையும் பாடுவதுமாம்', என்பர். இரா.காசிராசன் 'காப்பிய ஆசிரியர்கள் தாமே கதையைப் புனைந்து கொள்வது விருந்துவகை இலக்கியமெனலாம்' என்பர். கை.கா.சிவப்பிரகாசம் 'பொருள், உருவ அமைப்பு, நுவல்திறன், இவற்றின் புதுமையழகு சான்ற இலக்கியங்கள்' என்பர். இவ்வாறு உரை விகற்பம் கொள்வர்.

இதற்குக் காட்டாக விருத்தியுரையாசிரியரும், காரிகையுரையாசிரியரும், 'அவை வழிப்பட்டு அறிந்து கொள்க' என்பர், பேராசிரியர். 'முத்தொள்ளாயிரம், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளுமென உணர்க. கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப' என்பர், தேவநேயப் பாவாணர், 'குழவி மருங்கினும் கிழவ தாகும்' (தொல்.புறத்.26) என்பது பிள்ளைத்தமிழ் என்னும் பனுவலையும், 'ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப' (தொல்.புறத்.30) என்பது உலா அல்லது ஊரின்னிசையையும் குறிக்கலாம் என்பர். கி.வா. சகந்நாதன் 'இராசராச விசயம், வீரணுக்க விசயம், குலோத்துங்க சோழ சரிதை' ஆகியவற்றைக் கூறுவர். வை.கா.சிவப்பிரகாசம் 'தொண்ணூற்றாறு வகைச் சிறு பிரபந்தங்கள், இக் காலச் சிறுகதை, நெடுங்கதை, தன்வரலாறு' ஆகியவற்றையும் கூறுவர்.

இதனால் விருந்து வனப்பு இயல்புகள் முன்புள்ளார் சொன்ன நெறிப்போய்ப் புதிதாகச் சொன்ன யாப்பு, இருவன் சொன்ன நிழல் வழியன்றித் தானே தோற்றுவித்ததில், இப்பொழுது உள்ளாரையும், இப்பொழுது காணப்பெறும் விந்தையினையும், நிகழ்ச்சியினையும் பாடுவது, பொருளாலும், வடிவத்தாலும் புதுமையாய் அமைவன. செய்யுளாலும், உரைநடையாலும் இயற்றப்பட்டன.

6. இயைபு என்பது ஞணநமன யரலவழள என்னும் பதினொரு மெய்யெழுத்துகளில், ஒன்றனையீறாகக் கொண்டு, செய்யுஞ் செய்யுளைப் பொருள் தொடராகவும், சொல் தொடராகவும் செய்வது. பொருளுஞ் சொல்லும் இயைந்து வரும். மணிமேகலையும், பெருங்கதையும் இதற்குச் சான்றென்பர் பேராசிரியர்.

*"ஞகார முதலா னகார ஈற்றுப்*
*புள்ளி யிறுதி இயைபெனப்படுமே" (தொல். செய்யுள்.1496).*

7. புலன் என்பது சேரி மொழிகளால் (பேச்சு வழக்குச் சொல்) எளிதிற் பொருள் உணரும்படி கூறும் கதைகள். இதற்குச் சான்றாக பேராசிரியர் கூறும் 'விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன' என்று கூறும் நூல்கள் இக் காலத்தில்லை.

*"தெரிந்த மொழியாற் செவ்விதின் கிளந்து*
*தேர்தல் வேண்டாது குறித்தது தோற்றின்*
*புலன்என மொழிப புலன் உணர்ந் தோரே"*
*(தொல்.1497).*

8. இழைபு என்பது வல்லின மெய் கலந்த வல்லெழுத்துப் பயிலாமல், இருசீரடி முதலாக, எழுசீரடி அளவுள்ள கட்டளையடி ஐந்தினையும் கொண்டு, நெட்டெழுத்தும், அந் நெட்டெழுத்துப் போல் ஒலி தரும் மெல்லெழுத்தும், லகரளகரங்களும் உடைய சேரிச் சொற்களான் இயைந்து நடப்பது.

*"ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது*
*குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து*
*ஓங்கிய மொழியான் ஆங்ஙனம் ஒழுகின்*
*இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்"*
*(தொல்.1498)*

கலியும் பரிபாடலும் போல்வன சான்றென்பார் பேராசிரியர்.

வனப்பிரமை *vana-p-piramai,* பெ.(n.) ஓர் கற்பக மூலிகை; a rejuvenating plant.

*[வனம் + பிரமை]*

வனப்பிரமி *vana-p-pirami,* பெ.(n.) சதுர கிரியில் விளையும் ஓர் மூலிகைச் செடி. கொடியாய் படர்ந்து நெல்லி இலையைப் போல் தடிமனாக இருக்கும். ஓர் மருந்தாகவும் பயன்படுத்துவர்; a herb growing in saturagiri hills. it is a creeper. it must be collected on auspicious day. if taken for 30 days the body becomes rejuvenated.

*[வனம் + பிரமி]*

வனப்பு[1] *vanappu,* பெ.(n.) இசை வகை; a tune. *"பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும் வண்ண விசை" (பெரியபு. ஆனாய. 28). "மம்மர் செய்த வனப்பியாங் கொளிந்தன" (மணிமே.22, 128).*

*[வள்→ வன் + அம்–வனம்→ வனப்பு.]*

வனப்பு[2] *vanappu,* பெ.(n.) 1. அழகு; beauty, grace, charm, loveliness, pultiness. *"செவ்வானத்து வனப்பு" (புறநா. 4).* 2. இளமைநிறம் (திருமுரு. 17, வேறுரை); fresh colour of youth. 3. பல உறுப்புந் திரண்டவழிப் பெறுவதோர் செய்யுளழகு (தொல். பொருள். 548); elegance of a literary work resulting from the perfection of its parts. 4. பெருந் தோற்றம்; largeness of size, gigantic appearance. *"வனப் பஞ்சான்" (ஏலா. 22).*

தெ. கொள் →கொன் →கொனு →கொனி = கொண்டு.

*[வள்→ வன் +அம் – வனம்→ வனப்பு. வனப்பு = அழகு.]*

'ள'கரமெய் தமிழிலும் திரவிடத்திலும், 'ன'கர மெய்யாகத் திரியும்.

எ.டு.:– தெள் →தென் →தேன். தெளிவு, தேறல் என்னும் சொற்களை நோக்குக.

"பெரும்பான்மையும் பல உறுப்புந் திரண்ட வழிப் பெறுவதோர் அழகு" (அடி.சிலம்பு. உரைப்பாயிரம். பேரா.தொல்.பொருள்.547).

தொல்காப்பியர் காலத்தில், செய்யுள் எழுவதற்குரிய நிலைக் களங்கள் பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என எழு வகையாய் வகுக்கப்பெற்றிருந்தன.

*"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்*
*வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்*
*நாற்பேர் எல்லை யகத்தவர் வழங்கும்*
*யாப்பின் வழிய தென்மனார் புலவர்"*
*(தொல்.1336)* என்பது தொல்காப்பிய நூற்பா.

அவ் வெழுவகை நிலைக்களத்துள், பாட்டு என்பது அம்மை (1491, அழகு (1492), தொன்மை (1493), தோல் (1494), விருந்து (1495), இயைபு

(1496), புலன் (1497), இழைபு (1498) என எண்வகை வனப்பாக வகுக்கப் பெற்றிருந்தது.

வனப்பு என்னும் தூய தீந்தமிழ்ச் சொல் இருக்கவும், அதற்குப் பகரமாகக் காவியம் என்னும் வடசொல்லைக் காப்பியம் என்று திரித்து,

*"நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்" (மணிமே.19:80)* என்று, முதன்முதலாக காப்பியச்சொல் ஆண்டவன், சீத்தலைச் சாத்தன்.

தொல்காப்பியத்தில் இலக்கணம் கூறப்பெற்ற எண்வகை வனப்பிற்கும், இலக்கியமாயிருந்த பனுவல்களெல்லாம், அறவே இறந்துவிட்டன. ஆதலால், கி.பி.3ஆம் நூற்றாண்டிற்கும் 10ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட பத்து வனப்புகளும், ஐம்பெருங் காப்பியமென்றும், ஐஞ்சிறு காப்பியமென்றும், அக் காலத்திறுதியில் இரு கூறாக வகுக்கப்பட்டன.

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்தும் பெருவனப்பு: நீலகேசி, சூளாமணி, யசோதரகாவியம், பெருங்கதை, நாககுமார காவியம் என்னும் ஐந்தும் சிறுவனப்பு ஆகும். பெருவனப்புள் இறுதியிற் குறிக்கப்பட்ட இரண்டும், சிறுவனப்புள் இறுதியிற் குறிக்கப்பட்ட ஒன்றும், இன்றில்லை.

வனப்பைப் பிற்காலத்திலக்கணியர், தொடர் நிலைச் செய்யுள், தனிநிலைச் செய்யுள் என்று இருவகையாகவுங் குறிப்பாராயினர்.

ஒப்புயர்வற்ற ஒருவனைத் தலைவனாகக் கொண்ட நீண்ட கதை தழுவி, காண்டம், படலம் முதலிய பெரும் பகுப்புகளைக் கொண்டு, பல்வேறு வகைப்பட்ட காலம், இடம், நிகழ்ச்சி, மக்கள் வாழ்க்கைமுறை, தொழில், பழக்கவழக்கம், அரசியல், ஊணுடையுறையுள், நிலைத்திணையும் இயங்குதிணையுமாகிய மற்ற வுயிரினங்கள் முதலிய பொருள்களைப் பற்றிய வண்ணனைகளை யுடையதாய், விரிவாய் வரும் வனப்பிலன்றி, வேறெவ் வகைப் பனுவலிலும், சொல்வளத்தைப் பேரளவாகக் காண முடியாது. அவ் வனப்புச் சொல்வளமும், வனப்பாசிரியனின் புலமைத் திறத்தைப் பெரிதும் பொறுத்ததாகும். ஐம்பெரு வனப்புகளுள் சிலப்பதிகாரமும், சிந்தாமணியும், ஐஞ்சிறு வனப்புகளுள் பெருங்கதையுமே, சொல் வளமுடையன. இம் மூன்றும் முறையே தலையிடை கடையாம்.

**வனப்புவண்ணம்** *vaṉappu-vaṇṇam,* பெ.(n.) இசைவகை (பெரியபு. ஆனாய. 28); a variety of melody.

*[வனப்பு + வண்ணம்]*

**வனப்புள்** *vaṉappuḷ,* பெ.(n.) பயிற்சி கொடுக்கப்பட்ட பறவை (வள்ளசத்திய ஞான.25); shepherd koel.

*[வனம் + புள்]*



**வனபலம்** *vaṉa-palam,* பெ.(n.) ஆனைத் திப்பிலி (சங்.அக.); elephant pepper.

*[வனம் + பலம்]*

வனபிப்பிலி *vana-pippili,* பெ.(n.) காட்டுத் திப்பிலி (சங்.அக.); long pepper.

மறுவ. பெருந்திப்பிலி

*[வனம் + பிப்பிலி]*

வனமாலைப்பூடு *vana-mālai-p-pūḍu,* பெ. (n.) மருளூமத்தை; a variety of dhatura.

*[வனமாலை + பூடு]*

வனமிகுத்திரி *vana-migu-t-tiri,* பெ.(n.) காயாங்குலை; a plant.

*[வனம் + மிகு + திரி]*

வனமிரட்டி *vana-miraṭṭi,* பெ.(n.) ஓர் கொடி; a climber (சா.அக.).

*[வனம் + மிரட்டி]*

வனமீகம் *vana-mīgam,* பெ.(n.) புற்றுமண்; the earth or mud of the white ant-hill.

*[வனம் + மீகம்]*

வனமீன் *vana-mīn,* பெ.(n.) முதலை; crocodile.

*[வனம் + மீன்]*



வனமுதம் *vana-mudam,* பெ.(n.) கார்முகில் (யாழ்.அக.); cloud.

*[வானமுதம் → வனமுதம்]*

வனமுரை *vana-murai,* பெ.(n.) முதிரை (சங்.அக.); pigeon-pea, dholl.

*[வனம் + முதிரை → முரை]*

வனமுள்ளாலி *vana-muḷḷāli,* பெ.(n.) நறுங்குறிஞ்சா; swallow wort - *Ascleepias vormitoria* (சா.அக.).

*[வனம் + முள்ளாலி]*

வனமைத்தாங்கி *vanamai-t-tāṅgi,* பெ.(n.) கருடன்; skyroot; a creeper - *Bryonia chigaea.*

வனயீட்டி *vana-y-īṭṭi,* பெ.(n.) கிடைத்தற்கரிய மூலிகை; a rare drug capable of consolidating salammoniace and used for transmuting and metal into gold.

இது சாரத்தை கட்டி, பொன்னாக்கும்.

வனராசபூண்டு *vana-rāša-pūṇḍu,* பெ.(n.) சிறுதும்பை; a small variety of dead nettle or leucas.

வனவாசனம்[1] *vana-vāšanam,* பெ.(n.) நாவி; a poisonous root-*Aconite.*

வனவாசனம்[2] *vana-vāšanam,* பெ.(n.) புனுகுப்பூனை (யாழ்.அக.); civet cat.

*[வனம் + வாசனம்]*

வனி[1] *vani,* பெ.(n.) செஞ்சித்திரமூலம்; a plant-plumbago rosea.

வனி² *vaṉi*,பெ.(n.) சுரம் (இராசவைத். 149); fever.

ம. பனி

*[வல்→வன்→வனி.]*

ஒ.நோ. கல் →கன் →கன்னி.

வனிக்கொடி *vaṉi-k-koḍi*, பெ.(n.) ஒரு வகைக்கொடி; (L.) mexican vanilla.

*[வனி + கொடி]*

வனீரம் *vaṉīram*,பெ.(n.) பெரிய திப்பிலி (மூ.அ.); long pepper.

மறுவ. காட்டுத்திப்பிலி

வனுக்கு *vaṉukku*,பெ.(n.) துருசு; blue vitriol-copper sulphate.

வனை-தல் *vaṉai-*, 2 செ.கு.வி.(v.i.) 1. உருவமையச் செய்தல்(பிங்.); to form, fashion, shape. *"வனை கலத்திகிரியும்" (சீவக. 1839).* 2. அழகுபடுத்துதல் (சூடா.); to adorn. 3. சித்திரமெழுதுதல்; to draw, paint, engrave. *"வனையலாம் படித்தலா வடிவிற்கு" (சீவக. 709).*

*[வல் → வள் → வள → வளை → வனை-. சக்கரத்தைச் சுற்றி மட்கலம் அமைத்தல் (வே.க.4, பக்.96).]*

வனைகோல் *vaṉai-kōl*,பெ.(n.)படந்தீட்டுந் தூரிகை; painter's brush. *"செம்பொற் படாமும் வனைகோலும் வாங்கினாள் நம்பி வடி வெழுத" (அழகிய நம்பியுலா. 147).*

மறுவ. வட்டிகை

*[வள்→வன்→வனை + கோல். ள →ன - திரிபு.]*

(ஒ.நோ.) தெள் →தென் →தேன்.





